உ

# श्री ललितासहस्रनामस्तोत्रम्

(तमिल्व्याख्यायुतम्)



श्रीमात्रे नमः

# ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரம்

( தமிழ் விரிவுரையுடன் )

உ

# श्री ललितासहस्रनामस्तोत्रम्

# ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம்

(தமிழ் உரையுடன்)

(நான்காம் பதிப்பு)

(விரிவாக்கப்பெற்றது)

உரையாசிரியர்

**சி.வெ. ராதாகிருஷ்ண சாஸ்திரி**

வெளியிடுபவர் :

**பத்மபூஷணம்**

**N.ராமசாமி அய்யர் சாரிடீஸ் ஸொஸைட்டி**

**திருச்சிராப்பள்ளி - 620 002 (தமிழ்நாடு)**

முதற்பதிப்பு 1979
இரண்டாம் பதிப்பு 1987
மூன்றாம் பதிப்பு 1999
நான்காம் பதிப்பு 2009



விலை : ரூ. 200

லேசர் வடிவமைப்பு :
மொபைல் பிரிண்ட்,
திருச்சி.

வெளியீடு :
திருச்சி ஈஸ்வரி பிரிண்டர்ஸ் நிறுவனத்தால் அச்சிடப்பட்டு
திருச்சி பத்மபூஷணம் N. ராமசாமி அய்யர் சாரிடீஸ் ஸொஸைட்டி சார்பில்
R. பஞ்சாபகேசன் அவர்களால் வெளியிடப்பெற்றது.

# ஸ்ரீ அகிலாண்டேச்வரீ, திருவானைக்காவல்.



अनघाद्भुतचारित्रा वाञ्छितार्थप्रदायिनी ।
अभ्यासातिशयज्ञाता षडध्वातीतरूपिणी ॥

अव्याजकरुणामूर्तिरज्ञानध्वान्तदीपिका ।
आबालगोपविदिता सर्वानुल्लङ्घ्यशासना ॥

(நா.987 - 995)



ஸ்ரீ காஞ்சி ஜகத்குரு ஸ்ரீ மஹாஸ்வாமிகள்



ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்ய
ஸ்ரீ சங்கரசேகரேந்திர ஸரஸ்வதீ ஸ்வாமிகள்
1960ல் கல்வி ஸ்தாபனங்களுக்கு விஜயம் செய்தபோது
பத்மபூஷண் ஸ்ரீராமஸ்வாமி அய்யர் தம்பதிகளின்
பாதபூஜையை ஏற்கிறார்கள்.



# ஸமர்ப்பணம்

ஸாவித்ரீ வித்யாசாலா, ஸீதாலக்ஷ்மீ ராமஸ்வாமி கல்லூரி

காமகோடி வித்யாலயா முதலிய கல்விக்கூடங்களின்

ஸ்தாபகர்கள்

**ஸ்ரீமதி அலமேலு ஸீதாலக்ஷ்மீ அம்மாள்**

**பத்மபூஷண் ஸ்ரீ. N. ராமஸ்வாமி அய்யர்**

இவர்களின் புனித நினைவில்

# ஸ்ரீ ஆசாரியர்களின் ஸ்ரீமுகம்

ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்யவர்ய ஸ்ரீமத் சங்கர பகவத்பாத ப்ரதிஷ்ட்டித ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீமத்சந்த்ரசேகரேந்த்ர ஸரஸ்வதீ ஸ்ரீபாதாதேசானுஸாரேண ஸ்ரீமத் ஜயேந்த்ரஸரஸ்வதீ ஸ்ரீபாதை: சேமுஷீ (சிமிழி) கிராமாபிஜந வேங்கடராம சாஸ்திரி குமாராய த்ரிசிர:புரவாஸ்தவ்யாய வைத்யச்ரேஷ்ட்டாய ப்ரும்ஹஸ்ரீ ராதாக்ருஷ்ண சாஸ்த்ரிணே க்ரியதே நாராயணஸ்ம்ருதி:

நாம் ஐஹிக ஆமுஷ்மிக மேன்மைகளை அடைவதற்குப் பரமாத்மாவின் அருள் அடிப்படையான காரணமாகும். பரமாத்மா அனேக வடிவங்களில் விளங்கியபோதிலும் அவரைத் தாய் உருவத்துடன் வழிபடுவது சீக்கிரம் நற்பயன்களைக் கொடுக்கக்கூடியதாகும். இக்காரணத்தாலேயே பண்டைய காலத்திலிருந்து துர்வாஸர் முதலிய முனிவர்கள் தேவியான ஸ்ரீ ராஜராஜேச்வரியை வழிபட்டு முக்திபர்யந்தமான பலன்களை அடைந்திருக்கிறார்கள்.

இத்தகைய மஹிமை வாய்ந்த ஸ்ரீ ராஜராஜேஸ்வரியை இத்தேவியின் ஆஜ்ஞையைப் பெற்று வசினீ முதலிய வாக்தேவிகள் கோடிக்கணக்கான நாமாக்களிலிருந்து மதுர மதுரமான ஆயிரம் நாமாக்களைத் தேர்ந்தெடுத்து இவைகளின் மூலம் துதித்திருக்கிறார்கள். இந்த நாமாக்கள்தான் லலிதா ஸஹஸ்ரநாமம் என்று பெயர் பெற்றிருக்கிறது.

வாக்தேவிகள் இந்த நாமாக்களைத் தொகுத்த முறையே அபூர்வமாய் அமைந்திருக்கிறது. தேவியின் ஸ்வரூபம், அவதார காரணங்கள், தேவி தோன்றிய அழகைக் கேசாதி பாதாந்தமாக வர்ணித்திருத்தல், தேவி வசிக்கும் இடங்கள், அவதாரகார்யமான பண்டாஸுரவதம், தேவியின் ஸூக்ஷ்ம ஸ்வரூபங்களான மந்த்ரம், குண்டலினீ இவைகளின் வர்ணனை, நிர்குண ஸ்வரூபம், படைப்பு முதலிய ஐந்தொழில்களைப் புரிதல், ஜீவனாயும் ஈச்வரனாயுமிருத்தல், தேவியின் மற்ற தோற்றங்கள் முதலியவைகள் இந்த நாமாக்களில் மிக அழகாக விளக்கப்படுகின்றன.

இந்த ஸஹஸ்ரநாம ஸ்தோதிரத்திற்குச் சிறந்த தேவி பக்தரான ஸ்ரீ பாஸ்கரராயர் ஸம்ஸ்கிருதத்தில் சிறந்த பாஷ்யத்தை இயற்றியிருக்கிறார். இந்த பாஷ்யமானது வேதங்கள் ஸ்ம்ருதிகள் புராணங்கள் மந்த்ர சாஸ்த்ரங்கள் முதலிய பிரமாண நூல்களை ஆதாரமாய்க் கொண்டு தேவி நாமாக்களின் பொருள்களைத் தெளிவாக விளக்குகிறது.

இப்போது இந்நூலிற்குத் தமிழில் இயற்றப்பட்டுள்ள உரையானது ஸ்ரீ பாஸ்கரராயருடைய பாஷ்யத்தை அநுஸரித்து இந்நாமாக்களின் பொருள்களை நன்கு தெளிவாக்குகிறது. மற்றும் ஏ ஈ ஹ என்னும் அக்ஷரங்கள் யோநி - காமகலா - பகஸ்வரூபங்களாயிருப்பது பண்டைய லிபிரேகைகளை ஆராய்ச்சி செய்து விளக்கப்பட்டிருக்கிறது.

மேலும் கௌல ஸமயாசாரஸ்வரூபங்கள், தேவியானவள் பரா முதலிய ஒலி வடிவமாயிருத்தல், ஞானயோகத்தினால் தேவியை ஆராதித்தல், ஷோடா நியாஸங்களின் விவரங்கள், தேவி லோகராஜ்யத்தை நிர்வஹித்தல், பக்தர்களை அனுக்ரஹிக்கும் கிரமம், தேவியின் அனுக்ரஹத்தை அடைவதற்கான உபாயங்கள் முதலியவைகள் எல்லோருக்கும் தெளிவாக விளங்கும்படி ப்ரமாணங்களுடன் செந்தமிழில் விளக்கப்பட்டிருக்கின்றன.

பஞ்சாசத் பீடரூபிணீ எனும் நாமாவின் விளக்கத்தின்போது புராணங்களிலும் தந்த்ரங்களிலும் குறிப்பிட்டிருக்கும தேவீ பீடங்கள் இருக்கும ஸ்தலங்கள், போகும் மார்க்கங்களின் விவரங்கள் உள்படத் தெளிவாக விளக்கப்பட்டிருக்கின்றன. தத்வமர்தஸ்வரூபிணீ முதலிய நாமாக்களின் விவரணங்களினபோது அத்வைத தத்துவம் நன்கு தெளிவாக்கப்பட்டிருக்கின்றது.

மேலும் இத்துடன் இணைக்கப்பட்டிருக்கும் ஸஹஸ்ராக்ஷர ஸ்தவத்தில் ஆவரண தேவதைகளின் ஸ்வரூபங்களும் ஸ்தானங்களும் சக்ர ரேகைகளின் படங்களுடன் நன்கு நிரூபிக்கப்பட்டிருக்கின்றன.

இவ்வரி நூலை திருச்சிராப்பள்ள காமகோடி வித்யாலம், ஸாவித்ரீவித்யாசாலை, ஸீதாலக்ஷ்மீ ராமஸ்வாமி கலாசாலை இவைகளின் ஸ்தாபகராத் திகழ்ந்த பத்மபூஷண என்.ராமஸ்வாமி அய்யரின் ஞாபகார்த்த டிரஸ்டின் சார்பாக இந்த தர்மிஷ்டரின் குமாரர் ஸ்ரீ பஞ்சாபகேச அய்யர் வெளியிடுவதை அறிந்து ஸந்தோஷிக்கிறோம்.

ஆஸ்திகர்கள் இவ்வுயர்ந்த நூலைப் படித்துப் பொருளுணர்ந்து தேவியை வழிபட்டுக்கொண்டு எல்லா மங்களங்களையும் அடைவார்களாக.

இவ்வாசிரியரும் பிரசுரதாரரும் மேன்மேலும் இத்தகைய உயர்ந்த தெய்வீக நூல்களை இயற்றிக்கொண்டும் பிரசுரித்துக்கொண்டும் தாயுமானவரின் அனுக்ரஹத்தினால் எல்லா மேன்மைகளையும் அடைவார்களாக.

யாத்ராஸ்தானம் வஸுமத்நகரம்
(மஹாராஷ்டிரம்)
ஸித்தார்த்த கார்த்திக சுத்த சதுர்த்தி

**நாராயணஸ்வாமிருதிஃ**

# இரண்டொரு வார்த்தைகள்

தேவியின் திருவருளால் ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரத்தின் தமிழ் விரிவுரை நான்காவது பதிப்பாக வெளியாகிறது. முதல் பதிப்பிற்கான ஸ்ரீமுகம் – ஆசிபெற 1979ல் மஹாராஷ்டிர – வஸுமத் நகரில் ஸ்ரீ விஜயயாத்திரையில் தங்கியிருந்த காஞ்சி காமகோடிபீடம் ஸ்ரீ சங்கராசார்ய ஸ்ரீ புதுப்பெரியவாளைத் தரிசிக்கச் சென்றிருந்தேன்.

புத்தகம் முழுவதையும் பார்வையிட்ட ஸ்ரீ சரணர்கள் மிகவும் நன்றாக அமைந்துள்ளது. ஸ்ரீமுகம் தருகிறேன். ஸ்ரீமஹாபெரியவர்கள் உகார் அருகே தங்கியுள்ளார்கள். அவர்களிடம் சென்று அனுக்கிரகம் வாங்கிச்செல் என்று அனுக்கிரஹித்தார்கள். உகார் அருகே அன்று சிறு கிராமத்தில் தங்கியிருந்த பூஜ்ய ஸ்ரீ மஹாபெரியவர்கள் புத்தகத்தை பார்வையிட்டதும் இதை விளம்பரம் செய்து வியாபாரப் பொருளாக்காதே. மிகவும் அரிய பொருள் கொண்ட நூல். முழுவதையும் பக்திசிரத்தையுடன் படிப்பேன் என்று உறுதி கூறுபவர்களுக்கு மட்டும் அடக்க விலையில் லாபநோக்கின்றி இந்த ஆயிரம் புத்தகங்களையும் கொடுக்க வேண்டும். என்று கட்டளையிட்டார்கள்.

அதே நோக்கில் பதிப்பாளர் ஸ்ரீ பஞ்சாபகேசன் அவர்கள் ஸ்ரீமஹா பெரியவாளின் ஆஜ்ஞையைச் சிரமேற்கொண்டு அடக்கவிலையிலேயே (முதற்பதிப்பு ரூ.25, இரண்டாம் பதிப்பு ரூ.36)முதல் இரு பதிப்புகளையும் வெளியிட்டார். விளம்பரமின்றி, வியாபார நோக்கின்றி வெளியிட்ட அன்னாருக்கு எனது நன்றி.

புத்த விற்பனையாளர் மூலம் வழங்கத் தேவையான அளவில் மிகக் குறைந்த விலையில் இப்பதிப்பும் வெளியாகிறது.

ஸ்ரீ பாஸ்கரராயர் இந்த ஸஹஸ்ரநாமத்திற்கு எழுதியுள்ள விரிவுரை ஸௌபாக்ய பாஸ்கரம் என்ற அரியநூல். அதனை ஒட்டிய எனது சொற்பொழிவு 1977–78 ஆண்டுகளில் பொன்மலையில் ஸ்ரீராமகிருஷ்ண சாரதா ஸமிதியில் நிகழ்ந்தது. அதை அன்பர்கள் ஆர்வத்துடன் நாடாவில் பதிவு செய்தனர். அதனை நூல்வடிவாக்க அவர்கள் தூண்டினர்.

அன்பர் ஸ்ரீ ஆர். பஞ்சாபகேசன் அவர்கள் தன் தந்தையார் பத்மபூஷண ஸ்ரீ என். ராமஸ்வாமி அய்யர் அவர்களின் புனித நினைவில் அவர்கள் பெயரிலமைந்த அறக்கட்டளை மூலம் வெளியிட முன்வந்தார். இப்படி எதெதையோ கூட்டி வைத்த தேவி தன் அருளால் வாசக அன்பர் பலரின் நன்மதிப்பைப் பெற்றுத்தந்துள்ளாள்.

தேவியின் அருளால் எல்லாமே நிகழ்ந்துள்ளது. இனியும் நிகழும் எனற நம்பிக்கை மேலும் சிறப்புடன் வலிவு பெற்றுள்ளது. தேவி நற்பணிகளுக்குத் தூண்டுதல் தரக் குருவராகத் தோன்றுவாள். என்னை இப்படி வழிப்படுத்துகிற ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடத்ததிபர்களான பூஜ்ய ஸ்ரீ பெரியவர்களின் வழியே இதனைத் தேவியிடம் ஸமர்ப்பிக்கிறேன்.

अंब त्वत्पदयोः समर्पितमिदं भाष्यं त्वया कारितं
त्वन्नामार्थविकासकं तव मुदे भूयादिदं स्वीकुरु ॥

**அம்ப த்வத்பதயோஸ் ஸமர்ப்பிதமிதம் பாஷ்யம் த்வயாகாரிதம்**
**த்வந்நாமார்த்தவிகாஸகம் தவமுதே பூயாதிதம் ஸ்வீகுரு.**

உன் திருநாமங்களை விளக்குவதாக அமைந்த இந்த விரிவுரையை எழுதியது நீயே! இதனை உன் திருவடிகளில் அர்ப்பணம் செய்கிறேன். இது உன்னை மகிழ்விக்கட்டும். இதனை ஏற்றுக் கொள்வாய்.


**S.V. ராதாகிருஷ்ண சாஸ்திரி**
உரையாசிரியர்

வீரேச்வரம் அப்ரோச் ரோடு
ஸ்ரீரங்கம் - 620 006.
21.6.1999


* * *



ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு
ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதீ ஸ்வாமிகள்
ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம ஸ்தோத்திர புத்தகத்தின்
4ம் பதிப்பினை வெளியிடுகிறார்.

நாள் : 3 ஜுன் 2009
இடம் : இராமர் கோவில், S.R.C. வளாகம்.



# ஸமர்ப்பணம்

தெய்வஸங்கல்டம் முன்னதாக அறியமுடியாதது. நான் இவ்வரிய வாய்ப்பில் பங்குகொண்டதைவிட இதற்கு வேறு சான்று இருக்க முடியாது. என்னளவில் இது முன்னதாகத் திட்டமிடப்பெற்ற பணியல்ல. ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமத்திற்கான இந்த அரிய விளக்க நூலை ஒரு பிரசுரகர்த்தர் என்ற அளவில் நான் வெளியிட நேர்ந்ததற்கு தெய்வஸங்கல்பத்தைத் தவிர வேறு ஒன்றும் காரணமாகாது.

நமது சமுதாயத்தின் ஆத்மிக சமய பாரம்பரியத்தை ஆதாரமாகக் கொள்ளாத எந்தக் கல்வித்திட்டமும் பயனற்றதாக நிரூபிக்கப்பட்டுவிடும் என்று எப்போதும் கருதிவந்த என் தந்தை திருவெய்திய பத்மபூஷண ஸ்ரீ என். ராமஸ்வாமி அய்யர் அவர்களின் புனித நினைவிற்கு இந்நூல் அர்ப்பணமாகிறது. இந்நூலுடன் வெளிடுபவன் என்ற முறையில் நான் தொடர்பு கொண்டதைவிட, அன்னாரது ஆத்மாவிற்கு அதிக திருப்தி தருவது ஒன்று இருக்க முடியாது.

இந்த விரிந்த கருத்துச் செறிவுள்ள ஸஹஸ்ரநாமவிளக்கத்தின் முழுப்பெருமையும் திரு.எஸ்.வி. ராதாகிருஷ்ண சாஸ்திரி அவர்களையே சாரும். அவர் தமது பரந்த அறிவாலும் கடும் உழைப்பாலும் இவ்வரிய நூலை உருவாக்கி இந்து சமுதாயத்திற்கு அளித்திருக்கிறார். நம் சமுதாயத்தின் ஆத்மீக அடிப்படையை இந்நூல் நன்கு வலுப்படுத்தும் என நான் திடமாக நம்புகிறேன்.

இந்த நூல் நல்லமுறையில் வெளிவரத் தக்க ஆலோசனைகளை அவ்வப்போது அளித்த பெரியவர், பல அரிய நூல்களை எழுதி வெளியிடுவதில் அனுபவம் வாய்ந்த மூதறிஞர், திரு.கோ.வன்மீகநாதன் பிள்ளை அவர்களை நான் இங்கு நன்றியுடன் நினைவு கூறுகிறேன்.

தேவி ஸ்ரீ அகிலாண்டேச்வரியின் கருணையாலும் அருள்மிக்க காஞ்சீ காமகோடி பீடத்து ஸ்ரீ சங்கராச்சாரியர்கள் அவர்களது அருள் நோக்காலும், இன்றைய சமுதாயத்திற்கு மிக அவசியமாகத் தேவைப்படும் இந்த நூலின் நான்காவது பதிப்பினைக் கொண்டு வருவதில் பெருமகிழ்ச்சி அடைகிறேன்.

திருச்சி
30-9-2009

**ஆர். பஞ்சாபகேசன்**
பத்மபூஷண் என். ராமஸ்வாமி அய்யர்
சாரிடீஸ் ஸொஸைட்டி



ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதீ ஸ்வாமிகளும்,
ஜகத்குரு ஸ்ரீ சங்கர விஜயேந்த்ர ஸரஸ்வதி ஸ்வாமிகளும் 2-7-1995ம் தேதி
கல்வி வளாகத்திற்கு விஜயம் செய்தபோது எடுத்த படங்கள்



ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு
ஸ்ரீ சங்கர விஜயேந்த்ர ஸரஸ்வதி ஸ்வாமிகள் 6-3-1992ம் தேதி
கல்வி வளாகத்திற்கு விஜயம் செய்தபோது எடுத்த படங்கள்



ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு
ஸ்ரீ சங்கராசார்ய ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதீ ஸ்வாமிகள்

ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ சங்கர விஜயேந்திர ஸரஸ்வதீ
ஸ்வாமிகளுடன் கல்வி வளாகத்திற்கு விஜயம்



## ஸ்ரீ சக்ர ராஜம்



श्रीचक्रराजनिलया श्रीमत्त्रिपुरसुन्दरी ।
श्रीशिवा शिवशक्त्यैक्यरूपिणी ललितांबिका ॥

(நா.996 - 1000)

# பொருளடக்கம்


| அதிகாரம் | விஷயம் | பக்க எண். |
|---|---|---|
| 1. | முன்னுரை | 1 |
| 2. | ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரம் – பூர்வபாகம் | 11 |
| 3. | ஜபவிதானம் – நியாஸம் | 28 |
| 4. | ஜபவிதானம் – தியானம் | 33 |
| 5. | ஆயிரம் நாமங்கள் | 39 |
| 6. | தேவியின் ஸ்வரூபம் | 43 |
| 7. | தேவியின் தோற்றம் | 47 |
| 8. | தேவியின் கேசாதிபாதாந்த வர்ணனை | 57 |
| 9. | தேவியின் இருப்பிடம் | 79 |
| 10. | பண்டாஸுரவதம் | 99 |
| 11. | தேவியின் ஸூக்ஷ்மரூபம் – மந்திரம் | 117 |
| 12. | தேவியின் ஸூக்ஷ்மரூபம் – குண்டலினீ | 124 |
| 13. | பக்திக்கு வசப்படும் தேவி | 140 |
| 14. | தேவியின் நிர்குணஸ்வரூபம் | 149 |
| 15. | தேவியின் ஸகுணநிலை | 173 |
| 16. | தேவியின் எல்லையற்ற பெருமை | 176 |
| 17. | தேவியின் ஐந்தொழிலும் ஜீவ ஈசுவர வடிவமும் | 205 |
| 18. | தேவியின் பலவிதத் தோற்றங்கள் – விபூதிகள் | 232 |
| 19. | தேவியின் ஒலி வடிவங்கள் | 283 |
| 20. | தேவி அமர்ந்துள்ள பீடங்கள் | 290 |
| 21. | ஞானயோகத்தால் தேவியின் வழிபாடு | 295 |
| 22. | தேவியின் யோகினீ வடிவங்கள் | 332 |
| 23. | தேவியின் சில விபூதிகள் | 356 |
| 24. | தேவியின் பாவனாவடிவங்கள் | 382 |
| 25. | அருள்புரியும் தேவியின் வடிவங்கள் | 385 |
| 26. | தேவியின் பேராளுமை | 422 |
| 27. | தேவி அருளும வகை | 445 |

| அதிகாரம் | விஷயம் | பக்க எண். |
|---|---|---|
| 28. | தேவியின் திவ்விய லீலைகள் | 451 |
| 29. | தேவியின் உலக ராஜ்ய நிர்வாஹம் | 476 |
| 30. | தேவியின் அருளைப்பெற வழிகள் | 507 |
| 31. | ஜபவிதானம் – முடிவில் நியாஸங்கள் | 550 |
| 32. | பலச்ருதி | 552 |
| 33. | இணைப்பு – | |
| | 1. ஸ்ரீ ஸஹஸ்ராக்ஷர வித்யா ஸ்தோத்திரம் | 568 |
| | 2. தேவியின் பீடங்கள் | 584 |
| | ஆயிரம் நாமங்களின் அகராதி | 603 |
| | அருஞ்சொற்சுட்டு | 619 |

※ ※ ※

## விரிவுரைக்கு உதவிய நூல்கள்

1. ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம பாஷ்யம் – பாஸ்கரராயர்.
2. ஸ்ரீ லலிதாஸஹஸ்ரநாம பாஷ்யம் –
ஸ்ரீ G.V. கணேசய்யர். தமிழ் மொழிபெயர்ப்பு
3. ஸ்ரீ லலிதாஸஹஸ்ரநாம பாஷ்யம் –
ஸ்ரீ அண்ணாவின் உரை
4. ஸௌந்தர்யலஹரீ 9 உரைகளுடன்
5. நித்யாஷோடசிகார்ணவம் – பாஸ்கரராயர் உரை
6. வரிவஸ்யாரஹஸ்யம் – பாஸ்கரராயர் அவரது உரையுடன்
7. தேவீ மாஹாத்ம்யம்
8. ஆர்யாதுவிசதீ ஸ்தோத்திரம் – துர்வாஸர்
9. மூகபஞ்சசதீ – மூககவி
10. நித்யோத்ஸவம் – உமாநந்தநாதர்
11. ஸ்ரீவித்யாஸபர்யாவாஸநா, ஸ்ரீவித்யாஸபர்யாபத்ததி,
ஸ்ரீ வித்யா நித்யாந்ஹிகம், வரிவஸ்யாரஹஸ்யம் –
தமிழுரை – குஹாநந்தநாதர்.
12. கல்யாண – தீர்த்த அங்கம், சக்தி அங்கம்.

உ

# ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரம்

## அதிகாரம் - I

## முன்னுரை

### ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமத்தின் வரலாறு

श्रीगुरुभ्यो नमः ।
श्रीमात्रे नमः ।
सर्वमङ्गलायै नमः ।
श्रीललितांबिकायै नमः ।

शुक्लांबरधरं विष्णुं शशिवर्णं चतुर्भुजम् ।
प्रसन्नवदनं वन्दे सर्वविघ्नोपशान्तये ॥

वन्दे गुरुपदद्वन्द्वमवाङ्मनसगोचरम् ।
रक्तशुक्लप्रभामिश्रमतर्क्यं त्रैपुरं महः ॥

दयमानदीर्घनयनां देशिकरूपेण दर्शिताभ्युदयाम् ।
वामकुचनिहितवीणां वरदां सङ्गीतमातरं वन्दे ॥

दयिन्या श्रीमात्रा दहरकुहरे सूत्रधरया
समादिष्टा वाचामधिपतिषु काप्यन्यतमिका ।
मदाराध्यश्रीमद्गुरुचरणनिर्णेजनजलैः
पवित्रे जिह्वाग्रे नटति मम देवी करुणया ॥

श्रुतिस्मृतिपुराणानामालयं करुणालयम् ।
नमामि भगवत्पादशङ्करं लोकशङ्करम् ॥

सिन्दूरारुणविग्रहां त्रिनयनां माणिक्यमौलिस्फुरत् -
तारानायकशेखरां स्मितमुखीमापीनवक्षोरुहाम् ।
पाणिभ्यामलिपूर्णरत्नचषकं रक्तोत्पलं बिभ्रतीं
सौम्यां रत्नघटस्थरक्तचरणां वन्दे परामम्बिकाम् ॥

श्री गुरुचरणारविन्दाभ्यां नमः

1. ஸ்ரீ குரு சரணங்கள், மூலத்திலும் முடியிலும் அமர்ந்து விக்னங்களை நீக்கும் விநாயக் பெருமான், கருணையால் தாயான தாயுமானவர், அகில உலகையும் ஈன்று ஆளும் தாயான அகிலாண்டேச்வரி, மனமெனும் அரங்கம் தூய்மை பெற்று இறை நிறையுமிடமாக அமைய அருளும் ஹ்ருஷீகேசர் - ஸ்ரீரங்நாதர், இவர்களது அருள் துணை கொண்டு ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமத்தை மனனம்[1] செய்கிறோம்.

---

1. மனனம் : குரு உபதேசித்த தத்துவத்தை மறுபடி ஆழ்ந்து சிந்தித்தலும், சிந்தனையின் போது ஏற்படும் ஐயங்களையும் விபரீதக் கருத்துக்களையும் யுக்திகளால் நீக்கித் தத்துவத்தை உணர்ந்து அதே சிந்தனையில் நீடித்திருத்தலும் மனனமாகும். தேவியின் அருளால் வாக்தேவிகள் உபதேசித்த இந்த ஸஹஸ்ரநாமத்தை ஸ்ரீ பாஸ்கரராயர் தமது உரையின்மூலம் மனனம் செய்துள்ளார். அதை ஒட்டிய, இந்த விரிவுரையின் மூலம் நாமும் அதை மனனம் செய்கிறோம்.

2. ஸ்ரீ தேவி தனிப் பெருங்கருணையால் தனக்குள்ள கோடிக்கணக்கான நாமங்களிலிருந்தும் மதுரமதுரமான ஆயிரம் நாமங்களை வசினீ முதலிய வாக்தேவிகளைக்கொண்டு தேர்ந்தெடுத்துத் தாமே அரங்கேற்றி உலக நன்மைக்காக அருளிய திவ்யஸஹஸ்ரநாமம் இது.

3. வேதங்களும் தந்திர சாஸ்திரங்களும் கடும் நியமங்களுடன் தெய்வ வழிபாட்டிற்கான முறைகளைக் கூறியுள்ளன. அதே வழிபாட்டு முறைகளைப் புராணங்கள் பலதரப்பட்ட அதிகாரிகளும் எளிதில் பின்பற்றுமாறு லகுவாக அமைத்துக்கொடுத்திருக்கின்றன. சாஸ்திரங்களில் கூறப்பட்ட வழிமுறைகளையே புராணங்கள் கதை வடிவில் அவற்றிற்கு முன்உரைகளை அமைத்து நாம் அம்முறைகளை ஆவலுடன் பின்பற்றுமாறு அக்கதைகளின் நடுவே அந்த அந்த தெய்வத்தின் வழிபாட்டை அமைத்துக் கொடுத்திருக்கின்றன. வியாஸர் 18 புராணங்களை எழுதியிருக்கிறார்[1]. ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு தெய்வத்தைப் பற்றிய விளக்கங்களைத் தந்திருக்கிறார். அவைகளில் பிரும்மாண்ட புராணமும் ஒன்று. ப்ரக்ரியா பாதம், அனுஷங்க பாதம், உபோத்காத பாதம், உபஸம்ஹார பாதம் என்று அதற்கு நான்கு பகுதிகள் உண்டு. நான்காவது

---

1. பதினெட்டு புராணங்கள் : இறைவன் தன்னுள் அடக்கிக்கொண்ட உலகை மீண்டும் படைக்க ஸங்கல்பம் கொண்டு பிரமனைத் தோற்றுவித்துப் படைப்பிற்கு உதவுதல், படைப்பு பல்முகமாகப் பெருகுதல், ஒவ்வொரு காலவரைக்கும் அதிபரான மனு, அவரது வம்சவழி வந்தவர்கள், அவ்வப்போது உலகைக் காக்க இறைவனது திருவவதாரங்கள், இறைவனது அடியார்கள், இறைவனுடன் தொடர்புகொள்ள ஞானம், பக்தி, வைராக்கியம் என்பனவான சாதனங்கள், ஸ்ருஷ்டி காலம் தொட்டு இறைவனிடம் ஒடுங்கும் வரை ஒரே சீராக இயங்கும் உலக இயக்கம் இவைகளைக் கதையாகச் சித்தரித்து வேத தத்துவங்களுக்கு விளக்கம் தரத்தோன்றியவை புராணங்கள், மத்ஸ்யம், கூர்மம், வராஹம், லிங்கம், சைவம், பிராம்மம், ஸ்காந்தம், பிரும்மாண்டம், நாரதம், பாகவதம், பத்துமம், அக்னி, பிரும்மவைவர்தம், பவிஷ்யம், மார்க்கண்டேயம், விஷ்ணு, வாமனம், காருடம் என அவை பதினெட்டு நைமிசாரண்யத்தில் பல ஆண்டுகள் தொடர்ந்து நடந்த ஸத்ர யாகத்தில் ஸூதர் சொல்ல சௌநகர் முதலான மகரிஷிகள் கேட்டவை. இங்கு குறிப்பிட்ட பாகவதம் விஷ்ணு பாகவதம் தான் எனச் சிலரும், தேவி பாகவதம் எனச்சிலரும் கூறுவதுண்டு.

உபஸம்ஹார பாதத்தின் கடைசியில் லலிதோபாக்கியானம் உள்ளது. அதில் மந்த்ரகண்டம், ந்யாஸ கண்டம், பூஜா கண்டம், புரச்சரண கண்டம், ஹோம கண்டம், ரஹஸ்ய கண்டம், ஸ்தோத்ர கண்டம், என்று ஏழு கண்டங்கள் உண்டு. ஏழாவது ஸ்தோத்ர கண்டத்தின் கடைசிப் பகுதியாக ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம் அமைகிறது.

4. ஸர்வ மங்களா என்று தேவிக்குப் பெயர். மங்களப் பொருள்கள் அனைத்திலும் உள்ள மங்களத்தன்மை, தேவியின் அருளால் ஏற்படுகின்ற மன அமைதி, ஆனந்தம், இதற்கு மேல் வேறொன்றும் வேண்டாம் என்ற நிறைவு உணர்வு முதலியவை மங்களத்தன்மையைக் குறிக்கும். மனிதனின் ஆசைகளின் எல்லை இந்த மங்களம்தான். அதை அருள்பவள் தேவி ஸர்வ மங்களா.

5. மனிதன் விரும்ப வேண்டியவையாக தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் (அறம், பொருள், இன்பம், வீடு) என நான்கு புருஷார்த்தங்களைக் குறிப்பிடுவர். இவைகளில் முக்கியமானவை காமமும் மோக்ஷமும் பரவாழ்வில் பெறவேண்டிய மேன்மை, தர்மத்தையும் அர்த்தத்தையும் உறுதுணையாகக் கொண்டு பெற்ற காமம் இகவாழ்வின் நோக்கத்தைப் பூர்த்தி செய்யும். ஆத்மானுபவத்தில் பிறந்த ஆனந்தத்தால் காமமே அற்று வாஸனை அழிந்து மனமிழந்த நிலையில் திரும்பத்திரும்பச் சரீரத்துடன் பந்தம் ஏற்படுவதிலிருந்தும் பெறும் விடுதலை மோக்ஷமாகும். இகவாழ்வின் முடிவிற்குப் பின் இப்பிறவியிலும் முன் பிறவிகளிலும் செய்துள்ள வினைகளில் பக்குவமடைந்து அடுத்த பிறவியை அளிக்கத் தகுதி பெற்றுள்ள வினை, எத்தகைய சரீர பந்தத்தை ஏற்படுத்தும் என்பதை நாம் அறிய முடியாது. தர்மத்தை அனுசரித்த காமத்தையே புருஷார்த்தம் என நோக்கமாகக் கொண்டால் அடுத்த பிறவி இப்பொழுது உள்ளதைவிடத் தாழாது. தர்மவிருத்த: பூதேஷு காமோஸ்மி என பகவான் கீதையில் கூறுகிறார். தர்மத்திற்கு விரோதமில்லாத காமம் இறைவனது ஸ்வரூபமே. இந்த வாழ்வில் எதிர்பார்க்கின்ற சுகானுபவம் தர்மத்தை அனுஸரித்த வாழ்க்கை முறைகளால் அமையப் பெறுமானால் இம்மையிலும் மறுமையிலும் மேன்மை உண்டு. இப்படி மேன்மை தரக்கூடிய காமத்தையும் மோக்ஷத்தையும் தரவல்லது தெய்வ வழிபாடு. தெய்வ வழிபாட்டுடன் அமைந்த வாழ்க்கை முறை இம்மையிலும் மறுமையிலும் ஆத்மீயத் துறையில் ஏற்றத்தைத் தரும். இப்படி தெய்வீக வாழ்க்கை

வாழ்ந்த பெரியோர்களின் சரித்திர வாயிலாகப் புராணங்கள் எளிதில் புரியும்படி தத்துவத்தை உணர்த்துகின்றன. ஸ்ரீலலிதா தேவியின்வழிபாடும் இப்படித்தான் பிரும்மாண்ட புராணத்தில் இடம் பெறுகின்றது.

6. ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம் 320 சுலோகங்கள் கொண்டது. முன்னுரையாக இந்த ஸ்தோத்திரத்தின் தோற்றுவாயைக் கூறும் பூர்வ பாகம் 51 சுலோகங்கள் கொண்டது. தேவியின் தியானம் ஒரு சுலோகம். ஆயிரம் நாமங்கள் 182 சுலோகங்களில் அடங்குகின்றன. பின்னுரையான 85 சுலோகங்களில் பலச்ருதி அமைகின்றது.

7. மற்ற தேவதைகளுக்கான ஸஹஸ்ர நாமங்களைவிட அதிகமாகப் பழக்கத்திலிலுள்ள ஸஹஸ்ரநாமங்கள் மூன்று. முதலாவது ஸ்ரீ கணபதியின் ஸஹஸ்ரநாமம். இது கணேச புராணத்திலுள்ளது. இரண்டாவது ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ர நாமம். இது மஹாபாரதத்திலிலுள்ளது. மூன்றாவது இந்த ஸஹஸ்ர நாமம். பிரும்மாண்ட புராணத்திலிருள்ளது. இம்மூன்றிற்கும் தனிப்பெருமை ஒன்று உண்டு. ஸ்ரீ கணெச ஸஹஸ்ரநாமத்திற்கும் ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமத்திற்கும் ஸ்ரீபாஸ்கர ராயர் என்ற மஹான் உரை எழுதியிருக்கிறார். ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமத்திற்கு ஸ்ரீசங்கர பகவத் பாதர் பாஷ்யம் இயற்றியிருக்கிறார். ஸ்ரீ பராசர பட்டரும் உரை எழுதியிருக்கிறார். இப்படி உரை எழுதப் பெற்றுள்ளஸஹஸ்ர நாமங்கள் மூன்றே.

8. ஸ்ரீ லலிதா ஸஹஸ்ர நாமத்திற்கு உரை எழுதிய பாஸ்கர ராயர் மஹாராஷ்டிர பிரதேசத்தில் பாகா என்னும் ஊரில் பிறந்தவர். கௌசிக கோத்திரத்தில் பிறந்த ஸ்ரீகம்பீர ராயர் இவரது தந்தை. தாய் கோநாம்பிகை. காசியில் உபநயனம் செய்விக்கப்பெற்று ஸ்ரீ ந்ருஸிம்ஹாத்வரி என்பவரிடம் பதினெட்டு வித்யா ஸ்தானங்களையும்[1] கற்றார். பால்யத்தில் தந்தையிடமிருந்து பெற்ற ஸரஸ்வதீ மந்திரத்தின் உபாஸனையால்

---

1. வித்யாஸ்தானங்கள் பதினெட்டு : ருக், யஜுஸ், ஸாம, அதர்வ என்ற நான்கு வேதங்கள், ஆயுர்வேதம், தனுர்வேதம், காந்தர்வம், அர்த்தசாஸ்திரம் என்ற நான்கு உபவேதங்கள், சிக்ஷா, வ்யாகரணம், சந்தஸ், நிருக்தம், ஜ்யோதிஷம், கல்பம் என்ற ஆறு வேதாங்கங்கள், மீமாம்ஸா, நியாயம், தர்ம சாஸ்திரம், புராணம் என்ற நான்கு வேத உபாங்கங்கள் என்பன.

வித்யைகளில் தேர்ச்சியை எளிதில் அடைந்தார். ஸ்ரீ கங்காதர வாஜபேயயாஜி என்ற சோழ தேசத்திய வித்வானிடம் தர்க்க சாஸ்திரம் கற்றார். குர்ஜரத்திலுள்ள ஸூரத்தில் ஸ்ரீ சிவதத்த சுகலர் என்பவரிடம் ஸ்ரீ வித்யை உபதேசிக்கப் பெற்றுப் பூர்ணாபிஷேகம் பெற்றார். ஸ்ரீ பாஸுராநந்தர் என்பது இவரது தீக்ஷாநாமம். ஆனந்தி, பார்வதி என்று இவருக்கு இரு மனைவிகள். இவர்களுடன் பாரத தேசத்தைச் சுற்றி வரும்போது மந்திர சக்தியின் துணைகொண்டு காசியில் சக்ரேச்வரருக்கும், ஸந்நதியில் சந்திரலாம்பாவிற்கும, சோழ நாட்டில் கஹோளேசருக்கும் கோவில் கட்டினார். தஞ்சை அரசன் இரவது உபாஸனையின் மேம்பாடு, பாண்டித்தியம் முதலியவைகளைக் கண்டு மகிழ்ந்து, பக்தியுடன் மானியமாக அளித்த கிராமமே தஞ்சை மாவட்டத்திலுள்ள பாஸ்கரராஜபுரம். தனது கடைசி நாட்களை இவர் திருவிடைமருதூரில் கழித்தார் என்று இவரது வாழ்க்கை வரலாறு கூறும். இவர் பெயரைக் கொண்டு பாஸ்கரராஜபுரத்தில் பாஸ்கரேசுவரர் என்ற பெயருடன் விளங்கும் பரமேசுவரனுக்கு இவரது மனைவி ஆனந்தி அம்மையார் கோயில் கட்டியுள்ளார்.

9. மற்ற ஸஹஸ்ரநாமங்களைக் காட்டிலும் இதற்கு ஒரு ஏற்றம் உண்டு. ஆயிரம் நாமங்களை ஓரிடத்தில் தொகுக்கையில் நாமங்கள் சரியே கிடைக்காமல், ஒரே நாமமே இரு முறையோ, பல முறையோ திரும்பத் திரும்ப வரும். அவைகளை உரையாசிரியர்கள் வேறு வேறாகப் பொருள் கூறிச் சமாதானம் கூறுவர். சுலோகமாக அமைக்கும் போது,நடுவே வரும் இடைவெளிகளை ச, வை, து, ஹி, ஏவ என்பது போன்ற விசேஷப் பொருளற்ற அவ்யயங்களைப் போட்டு நிரப்புவதும் வழக்கம். (பூதாத்மா பரமாத்மா ச – க்ஷேத்ரஜ்ஞோ அக்ஷர ஏவ ச என்று விஷ்ணு ஸஹஸ்ரநாமம்.) இந்த இரு குறைகளும் ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமத்தில் கிடையாது. ஒரே சொல் திரும்ப வராது. ச, வை, து, ஹி, ஏவ போன்றவைகளால் இடம் நிரப்பப்படுவதையும் பார்க்க முடியாது.

10. மற்றொன்றும் கூட, மற்ற ஸஹஸ்ரநாமங்களைக் கொண்ட அந்தந்த தேவதையின் ஸ்வரூபம், உபாஸனை முறை முதலியவற்றில் முழு விளக்கம் பெற முடியாது. அதற்கெனத் தனி நூலை நாட வேண்டியிருக்கும். இங்கே தேவியின் ஸ்வரூபம், அவள் தோன்றிய வரலாறு, அவளை வழிபட யந்திரம், மந்திரம், தத்துவம், பரிவார தேவதைகளின் நிலை, வழிபாட்டு முறை, வழிபடுபவருக்கான தகுதி,

அவளது அருளால் பெறக்கூடிய மேன்மைகள் முதலியன போன்றனவும், தேவியைப்பற்றி அறிய விரும்புபவவுமான பல விஷயங்கள் இந்த நாமங்களிலேயே அடங்கி விடுகின்றன. இதன் உரையாசிரியர் ஸ்ரீ பாஸ்கர ராயர் தக்கபடி இவைகளுக்கு விளக்கம் தந்திருப்பது பெரும் சிறப்பாகும்.

11. இந்த ஸஹஸ்ர நாமத்தை மந்திரமாக அல்லாமல் ஸ்தோத்திரமாகப் பாடிவரும்போது கூட அதில் உள்ள இனிமையும், இன்பமும் சொல்லுக்கடங்காது. சொல்லச்சொல்ல நமது மனம் தானே சாந்தி பெறும். தெய்வீக அருள் தானே நம்மைச் சூழ்ந்து நிற்பதை உணரலாம்.

12. ஸம்பிரதாயத்தில் இந்த ஸஹஸ்ர நாமத்தை யார் பாராயணம் செய்யலாம். யார் செய்யக்கூடாது என்ற விஷயத்தில் சில நியமங்கள் உண்டு. இங்கு நாம் கவனிக்க வேண்டிய விஷயம் ஒன்று உண்டு. இது தனிப்பெரும் மந்திரம் என்றே நூல்கள் கூறும். மந்திரம் என்று இதைக் கூறும்போது அதற்கான நியமங்களுக்கு நாம் கட்டுப்படத்தான் வேண்டும். ஸ்ரீவித்யா மந்திரங்களில் ஏதேனும் ஒன்றில் தீக்ஷை பெற்றிருத்தலும் ஸ்ரீ சக்கிர பூஜை செய்து வருவதும் இதைச் சொல்ல முன் தகுதிகளாகும். இவைகளை முறைப்படிப் பெற எல்லோருக்கும் தகுதி இருப்பதில்லை. ஸ்தோத்திரம் என்ற முறையில் அணுகக்கூட நமக்குச் சிறிதளவு தகுதிதான் உண்டு. நமது ஈடுபாட்டின் பலத்தில்தான் இந்தத் தகுதியையும் பெற முடியும். மன நிம்மதி பெறத் தேவியின் அருள் பெற இதை ஸ்தோத்திரமாக் பாராயணம் செய்யலாம்.

13. அவள் அருளால்தான் அவள் தாளை வணங்க முடியும் என்று பெரியவர்கள் கூறுவர். அவள் அருளிருந்தால் அவள் தாளை வணங்கலாம். அவள் தாளை வணங்கினால் அவள் அருள் பெறலாம். இதில் எது காரணம், எது காரியம் என்றே புரிந்து கொள்ள முடியாது. அவளை வணங்க, அவள் யார்? அவளை வணங்கும் நான் யார்? வணக்கம் என்பது என்ன? என்பது போன்ற பலவற்றின் அறிவு தேவைப்படுகிறது. இந்த அறிவையும் அவள் அருளால்தான் பெறலாம். அதனால் அவளையோ, வணங்குபவனையோ, வணக்கத்தையோ பற்றி அறியாமல் கூடப்பெரியோர்கள் சென்ற வழி என்ற ஒரே விளக்கத்தை நம்பி முதலில் வெளிப்படையாக வணங்க முற்பட, இவ்வினையே சிறிது

சிறிதாகத் தேவியின் அருளைக் கூட்டுவிக்கிறது. இந்த அருளின் பலத்தைக்கொண்டு என்றோ ஒருநாள் அவளை அறிந்து வணங்க முடியக்கூடும். ஆகவே ஸாத்தியத்தையே முழு அறிவின்றி ஸாதனமாகக் கொண்டு முதலில் இறங்குகிறோம். ஒன்றையும் இரண்டையும் முழுவதும் அறியாத சிறுவன் 1 + 1 = 2 என்று நெட்டுருப் பண்ணுகிறான். வாழ்க்கையில் என்றொ ஒரு நாள் 1 + 1 = 2 என்பது என்ன என்பதைப் புரிந்து கொள்வான். அப்போது அது பயன்படப்போகிறது. அதற்கு அவன் ஒன்றுமறியாப் பருவத்தில் வாய்பாடு நெட்டுருப் பண்ணுவது போல் அவளை முழுதும் அறியாமலேயே அவளை வணங்கும் ஆரம்பப் பயிற்சி அவள் அருளைச் சிறுகச்சிறுகப் பெற உதவி புரிந்து அவளை அறிந்து வணங்கும் பேரின்பத்தை நமக்குத் தரும். இதைத்தவிர அருளைப் பெற வேறு உபாயம் கிடையாது. தாயே! நீ எனக்கு புரிபடாதவள். உன்னை எப்படி வணங்குவது என்பதும் எனக்குத் தெரியாது. அதனால் எனது இந்தச்செயலை வணங்குவதாக நீ பாவித்து உன்னை அறிந்து கொள்ள எனக்கு அருள்புரிவாயாக. என்று மனத்தில் பிரார்த்தனை செய்து அவளுடன் ஏற்படுத்திக்கொள்ளும் தொடர்பே அவளை அறியும் உபாயமாகும். ஸ்ரீவித்யா மந்திர தீக்ஷையும், ஸ்ரீ சக்ர பூஜை தீக்ஷையும் பெற்று, ஜபமும், வழிபாடும் முறைப்படி செய்பவனால் மட்டும் சொல்லப்பட வேண்டிய இந்த ஸஹஸ்ரநாமத்தைச் சொல்லும் தகுதியை, ஜபமோ, வழிபாடோ செய்யத் தகுதி பெற்றிராதவனும்கூட, திரும்பத் திரும்ப ஸ்தோத்திரமாகச் சொல்வதாலேயே பெற்றுவிடலாம். அவளை அடைவதற்கு அவளை வழி. அதுபோல ஸஹஸ்ர நாமத்தைச் சொல்ல தகுதி பெற ஸஹஸ்ர நாமமேதான் உபாயம்.

14. மந்திரங்களைக் குருமுகமாகத்தான் பெறவேண்டும். இந்த ஸஹஸ்ரநாம மந்திரமும் அப்படி குருமுகமாகத்தான் பெறத்தக்கது. ஆதியில் அப்படி ஸ்ரீ ஹயக்ரீவர் என்ற குருவிடம் இருந்து அகஸ்தியர் இதை உபதேசமாகப் பெற்றார். இந்த ஆதி குருவையும் ஆதி சீடரையும் பற்றியும் நாம் அறிய வேண்டும்.

15. ஹயக்கிரீவர் : தேவீபாகவதத்தின் முதல் ஸ்கந்தத்தில் 5–வது அத்யாயத்தில் இவரது வரலாறு காணப்பெறுகிறது. ஸ்ரீ மகாவிஷ்ணு பத்தாயிரம் ஆண்டுகள் அசுரர்களுடன் போர் புரிந்ததால் ஏற்பட்ட அயர்வைப் போக்கிக்கொள்ள நாணேற்றிய சார்ங்கம் என்ற தமது வில்லின்

நுனியைத் தமது தாடையின் கீழ்த் தாங்கலாகக் கொண்டு உட்கார்ந்தபடியே பல ஆண்டுகள் தூங்கினார். தேவர்கள் வேள்விக்காக ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் உதவியை நாடி வந்தனர். தூங்குபவரை எழுப்புவது பாவம். ஒருவரும் இந்தப் பாவச் செயலைச் செய்ய முன்வரவில்லை. பகவானை எழுப்பும்படி, பிரமன்தான் படைத்த கரையானைத் தூண்டினார். (இந்திரனே கரையானாக மாறினான் என வேதம் கூறும்) பாவச் செயலால் விளையவிருக்கும் துன்பத்திற்கு ஈடாகச் சில வரங்களைப் பெற்ற கரையான் சார்ங்கத்தின் நாணை அறுத்துவிட்டது. வில் நிமிறுவதை உணர்ந்து பகவான் எழுந்திருப்பார் என்று தேவர்கள் எதிர்பார்த்தார்கள். அதற்கு மாறாகத் திடீரென நிமிர்ந்த வில்லின் வேகம் பகவானின் சிரத்தையே துண்டித்து எங்கேயோ எறிந்து விட்டது. இந்தச்சங்கடத்திலிருந்து விடுபடத் தேவர்கள் தேவியைப் பிரார்த்திக்க அவள் அருளால் யாகத்தில் அவிசாக அளிக்கப்பட்ட குதிரையின் தலையைப் பகவானின் கழுத்தில் பொருத்த, ஹயக்ரீவராக (குதிரை தலை உடையவராக) பகவான் தோன்றினார். தேவியிடமிருந்தே நேரில் உபதேசம் பெற்ற ஹயக்ரீவர் தேவி உபாஸகர்களில் மிகச் சிறந்தவரானார். இவரே ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமத்தை உபதேசித்த குரு. ஸரஸ்வதியைப் போல் ஞானத்தை அருளுபவராக இன்றும் இவர் உபாசிக்கப் பெறுகிறார்.

16. அகஸ்தியர் : மித்ரன், வருணன் என்ற இரு தேவர்களின் அம்சமாகக் குடத்திலிருந்து தோன்றிய இந்த முனிவர் தன் முன்னோர்களின் ஆத்ம திருப்திக்காக நல்ல புத்திரனைப் பெறவிரும்பி, அதற்கேற்ற சிறந்த பெண்ணுக்குத் தேவையான நற்குணங்களைத் தவ வலிமையால் கூட்டிப் பெண்ணாக்கி விதர்ப்ப தேசத்தரசனிடம் அளித்து வளர்க்கச் செய்தார். லோபா முத்திரை என்ற அவளைப் பின்னர் மணந்து இல்லறம் நடத்தினார். இல்லறம் செவ்வனே நடக்கப் பொருள் நாடி அரசர்களை அடைந்தார். மக்களுக்கு நன்மை புரிவதற்கென்றே வரி போட்டுச் செல்வம் சேர்த்து மக்களின் நன்மைக்கு உத்தேசித்த திட்டங்களுக்கு மட்டும் அதைச் செலவழித்த பின் மீதமிருப்பதிலிருந்து மட்டுமே தாம் யாசிக்கும் பொருளைத் தரவேண்டுமென்று அரசர்களைக் கட்டுப்படுத்தினார். ஒரு அரசனிடம்கூட அப்படி மீதமில்லை. இல்வலன், வாதாபி என்ற இரு அசுரர்கள் செல்வம் நிறையப் படைத்தவர்கள். பல அஸுர குணங்களுக்கிடையே அவைகளுக்கு ஒவ்வாத ஈகையும் அவர்களிடமிருந்தது. தனக்கு வேண்டியவைகளை அவர்களிடம் இருந்து

பெற்று இல்லறம் நடத்தினார் அகஸ்தியம் என மகாபாரதம் வனபர்வம் (96–99) கூறும்.

17. இந்தத் தம்பதியர்க்கு தேவி வழிபாட்டில் மிகுந்த ஈடுபாடு உண்டு. அகஸ்தியர் ஹயக்ரீவரைக் குருவாக அணுகி உபதேசமாகப் பெற்றது இந்த ஸஹஸ்ரநாமம். அதுவே தேவியின் வழிபாட்டில் இன்று நமக்கு உத்தம வழிகாட்டியாக அமைந்து உள்ளது.

18. பாஸ்கரராயரின் உரை ஒன்றே இன்று இந்த ரஹஸ்ய ஸஹஸ்ரநாமத்தின் ரஹஸ்யங்களுக்கு விளக்கம் தருகிறது. அதனை ஒட்டியே இந்த உரையும் அமைகிறது. பாஸ்கரராயர் தனது உரைக்கு ஸௌபாக்ய பாஸ்கரம் என்று பெயரிட்டுள்ளார். ஸௌபாக்ய தேவியைப்பற்றி மங்களம் நல்கும் விஷயங்களை பாஸ்கரம் சூரியனைப்போல் விளக்குவது எனப்பொருள். தேவி வழிபாட்டில் துவக்கத்தில் வந்ஹி கலை, சூர்ய கலை, சந்திர கலை முதலிய கலைகளை வழிபடுவர். அவைகளில் சூரிய கலை பன்னிரண்டு. அவை தபிநீ, தாபிநீ, தூம்ரா, மரீசி, ஜ்வாலிநீ, ருசி, ஸுஷும்நா, போகதா, விச்வா, போதிநீ, தாரிணீ, க்ஷமா என்பன. ஸௌபாக்யபாஸ்கரம் என்ற உரையாகிய சூரியனுக்கும் பன்னிரண்டு கலைகள் (பகுதிகள்) அமைந்துள்ளன. உபோத்காதம் (முன்னுரை) எனும் பூர்வபாகம் முதற்பகுதி. ஆயிரம் நாமங்களை நூறு நூறாகப் பிரித்துப் பத்துப் பகுதிகள், கடைசியிலுள்ள பலசுருதி பன்னிரண்டாவது பகுதி. அவை பன்னிரண்டிற்கும் இப்படி சூரிய கலைகளின் பெயரையே வைத்துள்ளார். அதன்படி உபோத்காதம் தபிநீகலை. பிரும்மாண்ட புராணத்தில் லலிதோபாக்கியானத்தை ஹயக்ரீவரிடம் முழுதும் கேட்ட அகஸ்தியர் இப்போது ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமத்தை அறிய ஆவலுடன் கேட்கிறார் என்று கதை தொடங்குகிறது.

* * *

॥ श्रीः ॥

श्रीगुरुचरणाभ्यां नमः

# श्री ललितासहस्रनामस्तोत्रम्

## पूर्वभागः

ஸ்ரீ குரு சரணாப்யாம் நம:

# ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம்

## பூர்வ பாகம்

शुक्लांबरधरं विष्णुं शशिवर्णं चतुर्भुजम् ।

प्रसन्नवदनं ध्यायेत् सर्वविघ्नोपशान्तये ॥

**சுக்லாம் பரதரம் விஷ்ணும் சசிவர்ணம் சதுர்ப்புஜம்**

**ப்ரஸந்நவதநம் த்யாயேத் ஸர்வவிக்நோபசாந்தயே.**

ஸ்ரீ குருவின் திருவடிகளுக்கு நமஸ்காரம்.

1. வெண்ணிற ஆடை தரித்தவரும், எங்கும் நிரம்பியவரும், சந்திரனுக்கொப்பான நிறமுள்ளவரும், நான்கு கைகளுள்ளவரும், மலர்ந்த முகம் உடையவரும் (மதம் பிடித்த யானை முகத்தோனும்) ஆன இறைவனை எல்லா இடையூறுகளும் நீங்க நினைக்க வேண்டும்.

1 – 1. **த்யாயேத்** – தியானம் செய்ய வேண்டும் என இதற்குப் பொருள். மந்திர சாஸ்திரத்தில் தெய்வத்தை இப்படித் தியானம் செய்க என்று கூறியிருக்கிறது. நாம் தியானம் செய்யும்போது தியானம் செய்கிறேன் அல்லது வணங்குகிறேன் என்று பொருள்படும்படி அமைத்துக்கூறுவது முறை. அதன்படி இங்கே அதை, வந்தே (வணங்குகிறேன்) என மாற்றிச் சிலர் கூறுவதுண்டு.

अगस्त्य उवाच -

अश्वानन महाबुद्धे सर्वशास्त्रविशारद ।

कथितं ललितादेव्याः चरितं परमाद्भुतम् ॥ 1 ॥

पूर्वं प्रादुर्भवो मातुः ततः पट्टाभिषेचनम् ।

भण्डासुरवधश्चैव विस्तरेण त्वयोदितः ॥ 2 ॥

वर्णितं श्रीपुरं चापि महाविभवविस्तरम् ।
श्रीमत्पञ्चदशाक्षर्याः महिमा वर्णितस्तथा ॥ 3 ॥

அகஸ்த்ய உவாச

**அச்வாநந மஹாபுத்தே ஸர்வசாஸ்த்ரவிசாரத.**
**கதிதம் லலிதாதேவ்யா: சரிதம் பரமாத்புதம். 1**

**பூர்வம் ப்ராதுர்பவோ மாது: தத: பட்டாபிஷேசநம்.**
**பண்டாஸுர வதச்சைவ விஸ்தரேண த்வயோதித: 2**

**வர்ணிதம் ஸ்ரீபுரம் சாபி மஹாவிபவ விஸ்தரம்.**
**ஸ்ரீமத் பஞ்சதசாக்ஷர்யா: மஹிமா வர்ணிதஸ் ததா. 3**

2. அகஸ்தியர் கூறினார் : எல்லா சாஸ்திரங்களிலும் தேர்ந்த விசால புத்தியுள்ள ஹயக்ரீவரே! லலிதாதேவியின் மிக அற்புதமான சரித்திரம் இதற்கு முன் கூறப்பட்டது. முதலில் (மந்த்ரகண்டத்தில்) அன்னையின் தோற்றம், பிறகு பட்டாபிஷேகம், பண்டாஸுரனின் வதம், இவை விரிவாக உம்மால் கூறப்பட்டன. மாபெரும் வைபவத்தால் விரிந்து காணும் ஸ்ரீபுரமும், ஸ்ரீபஞ்சசாக்ஷரீ மந்திரத்தின் பெருமையும் வர்ணிக்கப்பட்டது. (1 - 3)

2 - 1. அன்னையின் வரலாறு - பிரும்மாண்ட புராணத்தின் உபஸம்ஹார கண்டத்தின் கடைசியில் லலிதோபாக்யானம் உள்ளது. அதில் ஸ்ரீலலிதாதேவியின் சரித்திரம் மிக விரிவாக உள்ளது. அதன் சுருக்கம் பின்வருமாறு :-

தக்ஷனின் பெண் ஸதி தேவியாகப் பிறந்த தேவி சிவனை மணந்த பின் சிவனை தக்ஷன் அவமதித்ததால் தக்ஷன் பெண்ணாக இருக்க விரும்பாமல் தக்ஷனின் யாகசாலையில் யோக முறையில் தன் உடலை விட்டு ஹிமவானிடம் பெண்ணாகத்தோன்றி வளர்ந்தாள். அவள் சிவனை மணப்பதற்காகத் தவமியற்ற, சிவனும் அவளை மணக்கத் தவத்தில் ஈடுபட்டார். தாரகன் முதலிய அசுரர்களால் வாட்டப்பெற்ற தேவர்கள், சிவனுக்கும் பார்வதிக்கும் மணம் நடைபெறும் நேரத்தைப் பேராவலுடன் எதிர்பார்த்தனர். சிவ பார்வதிகளுடைய தவத்தால் ஏற்படும் தாமதத்தைத் தவிர்க்க எண்ணி, சிவபெருமானின் மனத்தில் காமத்தைத்தூண்ட மன்மதனைத் தேவர்கள் அவனிடம் அனுப்பினர். மன்மதனின் பாணங்களால் தவம் கலைந்த சிவபெருமான் தன் நெற்றிக் கண்ணால் மன்மதனைப் பொசுக்கிவிட்டார். மன்மதனின் சாம்பலைச் சித்திரகர்மா என்ற கணநாதர் உருட்டிப்பிசைந்து மனித வடிவமாக்கினார். அதில் சிவனது

பார்வைவிழ, அந்தச் சம்பால் உருண்டை உயிர்பெற்றது. மன்மதனைப் போல் அழகும், அஸுர பலமும் பெற்றெழுந்தது. சிவனருள் பெற ருத்திரத்தால் வழிபடும்படி சித்திரகர்மா அவனைத்தூண்டினார். அந்தக் குழந்தை அப்படியே வழிபட்டது. சிவபெருமான் வரம் தர இசைந்தார். தன்னோடு போரிடும் எதிரியின் பலத்தில் பாதியைப் பெற வேண்டும். எதிரியின் ஆயுதங்கள் வலிவிழந்து போகவேண்டும் என்று அவன் வரம் கேட்டான். அப்படியே ஆகட்டும்; ஆனால் அறுபதினாயிரம் ஆண்டுகள் வரைதான் இந்த வரம் பலிக்கும் என சிவன் வரம் தந்தார். பிரமன் அவனைப் பண்டாஸுரன் எனப்ப பெயரிட்டழைத்தார். (பண்டன் - அஹங்காரத்தால் தன்நிலை மறந்த ஜீவன்). அவன் அறுபதினாயிரம் ஆண்டுகள் தேவர்களை அடக்கி ஆண்டான். அவனது குரு சுக்கிரர், அறுபதாயிரம் ஆண்டுகளுக்குப் பிறகும் இந்த சக்தி வளர்வதற்கான வழிபாடுகளை அவனுக்குப் போதித்தார். அவன் அதன்படி நடந்ததால் அவனை அடக்க முடியாமல் போவதை உணர்ந்த மஹாவிஷ்ணு தம் மாயா சக்தியால் அழகிய பெண்ணை உருவாக்கி அவளைச் சேடியர்களுடன் பண்டாஸுரனிடம் அனுப்பி, அவனை மயக்கினார். அதனால் அவன் தொடர்ந்து தெய்வ சக்தி வளரச்செய்த வேள்வி முதலானவற்றில் ஈடுபாடற்றவனானான்.

தேவர்கள் இந்த வாய்ப்பை பயன்படுத்திக்கொண்டு தேவியை வழிபட்டுப் பண்டனிடமிருந்து மீட்சியை எதிர்பார்த்து நின்றார்கள். மேலும் நேர்ந்த தாமதத்தைப் பொறுக்காமல் ஒரு வேள்விக் குண்டத்தை அமைத்து அதில் தமது சரீரத்தைக் கூறாக்கி ஹோமம் செய்தார்கள். பிறகு தம்மையே ஹோமகுண்டத்தில் போடவிழைந்த போது, தேவி அந்த ஹோம குண்டத்திலிருந்தும் லலிதா மகா திரிபுர சுந்தரியாகத் தோன்றி காமேசுவரரை மணந்து தனக்காக அமைக்கப்பெற்ற ஸ்ரீபுரத்தில் மஹாராணியாகப் பட்டாபிஷேகம் செய்துகொண்டாள். பிறகு மந்த்ரிணீ, தண்டிநீ, ஜ்வாலாமாலிநீ, பாலா, அச்வாரூடா, ஸம்பத்கரீ முதலிய முக்கிய சக்திகளுடன் கிளம்பி பண்டனுடன் போரிட்டு அவனது சேனையையும், அவனது தலைநகரான சோணித (சூன்யக) நகரத்தையும், முடிவில் அவனையும் அழித்து தேவர்களுக்கு வாழ்வளித்தாள்.

2 - 2, ஸ்ரீபுரம் - மற்ற நகரங்களுக்கெல்லாம் தனிப்பெயர் உண்டு. தேவியின் நகரை புரம் நகரம் என்றும், அவளது மந்திரத்தை வித்யை என்றும், சக்கிரத்தத்தை சக்கிரம் என்றும் யாதொரு அடைமொழியு மில்லாமல் தனித்து நிற்கும் பெயர்களால் அழைப்பார்கள் பெரியோர்கள். மாட்சிமை மிக்க தேவியைச்சார்ந்தவை ஆனதால், புரம், நகரம், வித்யை, சக்கிரம் இவைகளை ஸ்ரீ என்ற சிறப்புமிக்க என்ற பொருள் கொண்ட

அடைமொழி சேர்த்து ஸ்ரீபுரம், ஸ்ரீநகரம், ஸ்ரீவித்யை, ஸ்ரீசக்கிரம் என்று அழைக்கும் வழக்கேற்பட்டது.

2 - 3. ஸ்ரீமத் பஞ்சதசாக்ஷரீ - சிறப்புமிக்க 15 அட்சரங்கள் கொண்ட அவளது மந்திரம் என்று பொருள். ஸ்ரீ என்ற பீஜாக்ஷரத்துடன் கூடிய அந்த மந்திரம் என்றும் பொருள் கூறுவர்.

षोढान्यासादयो न्यासाः न्यासखण्डे समीरिताः ।
अन्तर्यागक्रमश्चैव बहिर्यागक्रमस्तथा ॥ 4 ॥
महायागक्रमश्चापि पूजाखण्डे प्रकीर्तितः ।
पुरश्चरणखण्डे तु जपलक्षणमीरितम् ॥ 5 ॥
होमखण्डे त्वया प्रोक्तो होमद्रव्यविधिक्रमः ।
चक्रराजस्य विद्यायाः श्रीदेव्या देशिकात्मनोः ॥ 6 ॥
रहस्यखण्डे तादात्म्यं परस्परमुदीरितम् ।
स्तोत्रखण्डे बहुविधाः स्तुतयः परिकीर्तिताः ॥ 7 ॥
मन्त्रिणीदण्डिनीदेव्योः प्रोक्ते नामसहस्रके ।
न तु श्रीललितादेव्याः प्रोक्तं नामसहस्रकम् ॥ 8 ॥

**ஷோடா ந்யாஸாதயோ ந்யாஸா: ந்யாஸகண்டே ஸமீரிதா:**
**அந்தர்யாக க்ரமச்சைவ பஹிர்யாக க்ரமஸ் ததா. 4**
**மஹாயாக க்ரமச்சாபி பூஜாகண்டே ப்ரகீர்த்தித:**
**புரச்சரணகண்டே து ஜபலக்ஷணமீரிதம். 5**
**ஹோமகண்டே த்வயா ப்ரோக்தோ ஹோமத்ரவ்ய விதிக்ரம:**
**சக்ரராஜஸ்ய வித்யாயயா: ஸ்ரீ தேவ்யா தேசிகாத்மநோ: 6**
**ரஹஸ்யகண்டே தாதாத்ம்யம் பரஸ்பர முதீரிதம்.**
**ஸ்தோத்ரகண்டே பஹுவிதா: ஸ்துதய: பரகீர்த்திதா: 7**
**மந்த்ரிணீ தண்டிநீ தேவ்யோ: ப்ரோக்தே நாமஸஹஸ்ரகே.**
**ந து ஸ்ரீ லலிதா தேவ்யா: ப்ரோக்தம் நாமஸஹஸ்ரம் 8**

3. ந்யாஸ கண்டத்தில் ஷோடாந்யாஸம் முதலியவை சொல்லப்பட்டன. பூஜா கண்டத்தில் அந்தர்யாக முறை, பஹிர்யாக முறை, மஹா யாக முறை விளக்கப்பட்டன. புரச்சரண கண்டத்தில் ஜபம் செய்யும் முறை விளக்கப்பெற்றது. ஹோம கண்டத்தில் ஹோம முறை, அதற்கான பொருள்களைத் தயாரிப்பது விளக்கப்பெற்றது. ரஹஸ்ய கண்டத்தில் தேவி, ஸ்ரீ சக்ரம், ஸ்ரீ வித்யை, குரு, சிஷ்யன் இந்த ஐவருக்குள்ளும் பேதம் காணாமல் அவர்கள் எல்லோரிலும் முழு ஒற்றுமை காணும் வகை கூறப்பட்டது. ஸ்தோத்ர கண்டத்தில் பல ஸ்தோத்திரங்கள், மந்திரிணீதேவி, தண்டினீ தேவி இருவர்களின் ஸஹஸ்ரநாமம் விளக்கப்பெற்றன. ஆனால் ஸ்ரீலலிதாதேவியின் ஸஹஸ்ரநாமம் மாத்திரம் கூறப்படவில்லை. (4 - 8)

3 – 1. ந்யாஸங்கள் - வழிபடவிருக்கும் தேவதை நம் இதயத்தினுள் தங்கி நம் உடலிலும், மனத்திலும், ஒவ்வொரு அணுவிலும் பரவி நிற்கவேண்டும். அதற்கேற்ப, உடலிலும், மனத்திலும் தாய்மைக்கும் தெய்வ சக்திக்கும் எதிரான அசுர சக்திகள் அகலுதல் அவசியம். அதற்காக, மந்திர ஜபமோ, பூஜையோ செய்யத் தொடங்குமுன் அந்தந்த தேவதைகள் சம்பந்தப்பட்ட சக்திமிக்க பீஜாக்ஷரங்களைச் சொல்லி உடலின் ஒவ்வொரு பகுதியையும் தொட வேண்டும். தேவியைப்பற்றிய ஜபமோ, பூஜையோ செய்யும்போது தேவியினது சக்திமிக்க பீஜாக்ஷரங்களை சொல்லி அந்தந்த அங்கத்தைத்தொட உடல் முழுவதிலும் தேவியின் சக்தி பரவி நின்று வழிபடுபவனே தேவியாக மாறிவிடுகிறான். அந்நிலையில் அவன் இதயத்தினுள் தேவி நின்று வழிபாட்டை ஏற்கிறாள். இப்படி அந்த அந்த அவயவங்களில் இருப்பதாக பாவனை செய்வதே ந்யாஸம். (பாவனை - அது ஆகச் செய்வது). வேறு விதமாக இருப்பதொன்றை இவ்விதமாக ஆக்குவது) ஷோடா ந்யாஸம் - அறுவகை ந்யாஸங்கள். இவை கணெசந்யாஸம் (51 கணேசர்களின் பாவனை) க்ரஹந்யாஸம் (சூர்யன் முதலிய 9 கிரஹங்களின் பாவனை) நக்ஷத்திர ந்யாஸம் (27 நக்ஷத்திரங்களின் பாவனை) யோகிநீ ந்யாஸம் (ஏழு யோகினிகளின் பாவனை) பீட ந்யாஸம் (ஒட்டியாணம் ஜாலந்தரம் முதலிய தேவி வசிக்கும் 50 பீடங்களின் பாவனை) என்பனை, மஹா ஷோடாந்யாஸம் என மற்றும் ஆறு ந்யாஸங்கள் உண்டு. இவை ப்ரபஞ்ச ந்யாஸம், புவநந்யாஸம், மூர்த்தி ந்யாஸம், மந்திர ந்யாஸம், தேவதா ந்யாஸம், மாத்ருகா ந்யாஸம் என்பன. (நா. 475-534, 833)

3-2. அந்தர்யாகம் - பஹிர்யாகம் - மஹாயாகம் - வழிபடும் தேவதைக்காகத் தனது பொருளைத் தனதல்ல - தேவதையினுடையதே (தேவதாயை இதம் - நமம) என்று தியாகம் செய்வது யாகமாகும். அது இருவகை - அந்தர்யாகம், பஹிர்யாகம் என, நம் உடலில் குண்டலிநீ சக்தியாக விளங்கும் தேவியை அவள் தங்கும் சக்கிரங்களான மூலாதாரம் முதல் ஸஹஸ்ராரம் ஈறாக உள்ள இடங்களில் சக்திமிக்க ஒளி வடிவினளாகப் பாவனை செய்வதே அந்தர்யாகம். புறச் சாதனங்களின்றி மனத்தாலேயே பூஜை செய்யும் அம்முறையை அந்தர்யாகம் என்பர். வெளிப்படையாக தேவிக்கென தனித்துப் பூஜை உபகரணங்களை அமைத்துத் தேவியை ஸ்தூல உருவில் ஸாமான்ய அர்க்ய பாத்திரங்கள் அமைப்பதிலிருந்து சாந்திஸ்தவம் வரையுள்ள ஸவர்யாக்ரம (வழிபாட்டு முறை)த்தால் வழிபடுவது பஹிர்யாகம். பஹிர்யாகத்தையே விரிவாகப் பல உபசாரங்கள் கொண்டதாக விரிவுபடுத்துவது மஹாயாகம். (நா. 113, 230, 381, 475, 534)

3 - 3. புரச்சரணம் - புர: - முன்னதாக; சரணம் - செய்ய வேண்டியவை. குருவிடமிருந்து மந்திரத்தின் உபதேசம் பெற்று தீக்ஷை ஆனதும் தான் தனித்து வழிபாடுகள் தொடங்குமுன் மந்திரசக்தி பெறச்செய்யும் சடங்குகள். மந்திர அக்ஷரங்கள் எத்தனையோ அத்தனை லக்ஷம் மந்திரத்தன் ஜபம். அதில் பத்தில் ஒரு பங்கு மந்திரத்தைக் கொண்டு ஹோமம், அதில் பத்தில் ஒரு பங்கு பிராமண போஜனம், அதில் பத்தில் ஒரு பங்கு தர்ப்பணம். அதில் பத்தில் ஒரு பங்கு மார்ஜனம் என இந்த ஐந்து அங்கங்கள் கொண்டது புரச்சரணமாகும். இது நிறைவேறினால்தான் மந்திரம் சித்தியாகும். குருவின் அருளாலோ தேவதையின் அருளாலோ புரச்சரணமின்றியே மந்திரசித்தி ஏற்படுவது அதிருஷ்டவசமே.

तत्र मे सम्शयो जातो हयग्रीव दयानिधे ।
किं वा त्वया विस्मृतं तज्ज्ञात्वा वा समुपेक्षितम् ॥ 9 ॥
मम वा योग्यता नास्ति श्रोतुं नामसहस्रकम् ।
किमर्थं भवता नोक्तं तत्र मे कारणं वद ॥ 10 ॥

**தத்ர மே ஸம்சயோ ஜாதோ ஹயக்ரீவ தயாநிதே**
**கிம் வா த்வயா விஸ்ம்ருதம் தத் ஜ்ஞாத்வா ஸமுபேக்ஷிதம் 9**
**மம வா யோக்யதா நாஸ்தி ச்ரோதும் நாமஸஹஸ்ரகம்**
**கிமர்த்தம் பவதா நோக்தம் தத்ர மே காரணம் வத. 10**

4. எனக்கொரு சந்தேகம் - தயாநிதியான ஹயக்ரீவரே! தாங்கள் கூற மறந்துவிட்டீர்களா? அல்லது நினைவிருந்தும் சொல்வானேன் என வாளாவிருந்துவிட்டீர்களா? அல்லது ஸஹஸ்ர நாமத்தைக் கேட்கும் தகுதிதான் என்னிடம் இல்லையா? அல்லது வேறு எந்த காரணத்துக்காகத் தாங்கள் கூறவில்லையா? அதைக் கூறுவீர்களாக. (9 - 10)

4 - 1. எல்லாமறிந்த குருவிற்கு மறதி ஏற்பட இடமில்லை. பக்தன் விஷயத்தில் உபேக்ஷைக்கு இடமில்லை. உபேக்ஷித்தால் குருவினிடம் இயற்கையாக அமைய வேண்டிய கருணை அவரிடம் அமையவில்லை என்று பொருள்படும். சீடனாக ஏற்றபின் தகுதியற்றவன் எனக்கருத இடமில்லை. குருவின் கருணையால் தகுதியற்றவனும் தகுந்தவனாகி விடுவான் - என்று இந்தக் கேள்விகளின் உட்கருத்து.

सूत नवाच -

इति पृष्टो हयग्रीवो मुनिना कुम्भजन्मना ।
प्रहृष्टो वचनं प्राह तापसं कुम्भसम्भवम् ॥ 11 ॥

**ஸூத உவாச -**

**இதி ப்ருஷ்டோ ஹயக்ரீவோ முநிநா கும்பஜந்மநா**
**ப்ரஹ்ருஷ்டோ வசநம் ப்ராஹ தாபஸம் கும்பஸம்பவம். 11**

5. ஸுதர் சொல்கிறார் - (சௌநகரே) இப்படி அகஸ்திய முனிவரால் கேட்கப்பட்ட ஹயக்ரீவர் மன மகிழ்ந்து அகஸ்தியரிடம் கூறினார். (11)

श्रीहयग्रीव उवाच -

लोपामुद्रापतेऽगस्त्य सावधानमनाः श्रुणु ।
नाम्नां सहस्रं यन्नोक्तं कारणं तद्वदामि ते ॥12 ॥
रहस्यमिति मत्वाहं नोक्तवांस्ते न चान्यथा ।
पुनश्च पृच्छते भक्त्या तस्मात्तत्ते वदाम्यहम् ॥13 ॥

**ஸ்ரீ ஹயக்ரீவ உவாச -**

**லோபாமுத்ராபதே(அ)கஸ்த்ய ஸாவதாநமநா: ச்ருணு**
**நாம்நாம் ஸஹஸ்ரம் யந்நோக்தம் காரணம் தத் வதாமி தே.**
**ரஹஸ்யமிதி மத்வாஹம் நோக்தவாம்ஸ்தே ந சாந்யதா**
**புநச்ச ப்ருச்சதே பக்த்யா தஸ்மாத் தத்தே வதாம்யஹம்.**

6. ஸ்ரீ ஹயக்ரீவர் கூறினார் : - லோபா முத்ரையின் கணவரே! அகஸ்தியரே! சற்றுக் கவனத்துடன் கேட்பீராக! ஸஹஸ்ரநாமம் கூறாததன் காரணம் கூறுகிறேன். ரஹஸ்யமென நினைத்து முன்பு நான் சொல்லவில்லை. வேறு நோக்கமல்ல. மறுபடியும் பக்தியுடன் கேட்கிறீர். அதனால் அதைக் கூறுகிறேன். (12 - 13)

6 - 1. உனக்குள்ள பக்திக்கு உன் மனைவி லோபாமுத்ரைக்குத் தேவி வழிபாட்டிலுள்ள பெருத்த ஈடுபாடு உறுதுணையாக நிற்கும் என்ற கருத்தில் லோபாமுத்ராபதி என அகஸ்தியரை அழைக்கிறார். லோபாமுத்ரை, அகஸ்தியர் இருவரும் தேவி மந்த்ர முறைகளைக் கண்டுபிடித்த பன்னிருவர்களில் சேர்கிறார்கள். மனு, சந்திரன், குபேரன், மன்மதன், லோபாமுத்ரை, அகஸ்தியர், அக்கினி, ஸூரியன், இந்திரன், ஸ்கந்தன், சிவன், துர்வாஸர் என இந்தப் பன்னிருவரும் பன்னிரண்டு ஸ்ரீவித்யைகளைக் கொடுத்த ஆதி குருக்கள். (நா. 647)

ब्रूयाच्छिष्याय भक्ताय रहस्यमपि देशिकः ।
भवता न प्रदेयं स्यादभक्ताय कदाचन ॥14 ॥
न शठाय न दुष्टाय नाविश्वासाय कर्हिचित् ।
श्रीमातृभक्तियुक्ताय श्रीविद्याराजवेदिने ॥15 ॥
उपासकाय शुद्धाय देयं नामसहस्रकम् ।

**ப்ரூயாச்சிஷ்யாய பக்தாய ரஹஸ்யமபி தேசிக:**
**பவதா ந ப்ரதேயம் ஸ்யாத் அபக்தாய கதாசந 14**

**ந சடாய ந துஷ்டாய நாவிச்வாஸாய கர்ஹிசித்**
**ஸ்ரீ மாத்ருபக்தியுக்தாய ஸ்ரீவித்யாராஜ வேதிநே 15**
**உபாஸகாய சுத்தாய தேயம் நாமஸஹஸ்ரகம்**

7. பக்தனான சிஷ்யனுக்குக் குரு ரஹஸ்யத்தையும் கூற வேண்டும். பக்தனல்லாதவனுக்கு நீர் இதை உபதேசிக்கக் கூடாது. சடனுக்கும்,கெட்ட எண்ணம் உள்ளவனுக்கும், நம்பிக்கை அற்றவனுக்கும் எந்நிலையிலும் உபதேசிக்கக்கூடாது. அன்னை தேவியிடம் பக்தியுள்ளவனும், ஸ்ரீவித்யையை அறிந்தவனும், அதன்படி உபாஸனை செய்பவனும் தூய மனமுள்ளவனுமான பக்தனுக்கே இதை உபதேசிக்க வேண்டும். (14 - 15½)

7 - 1. சடன் - குரு போதித்த பின்னரே அது பற்றிய அறிவு ஏற்பட்டிருந்தும் தற்பெருமையைக் காட்டுவதற்காக, இவ்வளவுதானா! இதை நான் முன்னமேயே அறிவேன் என்றோ, இதைத் தாங்களைவிட என்னால் இன்னும் லகுவாக போதிக்கமுடியும். சொல்லட்டுமா என்றோ, ஒன்றும் புரியவில்லையே என்றோ கூறி குருவைக் கிண்டல் செய்பவன், அவமதிப்பவன்.

यानि नामसहस्राणि सद्यः सिद्धिप्रदानि वै ॥ 16 ॥
तन्त्रेषु ललितादेव्यास्तेषु मुख्यमिदं मुने ।
श्रीविद्यैव तु मन्त्राणां तत्र कादिर्यथा परा ॥ 17 ॥
पुराणां श्रीपुरमिव शक्तीनां ललिता यथा ।
श्रीविद्योपासकानां च यथा देवो वरः शिवः ॥ 18 ॥

**யாநி நாமஸஹஸ்ராணி ஸத்ய: ஸித்திப்ரதாநி வை. 16**
**தந்த்ரேஷு லலிதாதேவ்யா: தேஷு முக்யமிதம் முநே**
**ஸ்ரீ வித்யைவ து மந்த்ராணாம் தத்ர காதிர் யதா பரா. 17**
**புராணாம் ஸ்ரீ புரமிவ சக்தீநாம் லலிதா யதா.**
**ஸ்ரீவித்யோபாஸகாநாஞ்ச யதா தேவோ வர: சிவ: 18**

8. முனிவரே! தந்திர நூல்களில் உடன் சித்தி தருபவைகளாகக் கூறப்பட்டுள்ள ஸஹஸ்ரநாமங்களில் இது முக்கியமானது. மந்திரங்களுக்குள் ககாரத்தல் தொடங்கும் மேன்மையுள்ள ஸ்ரீ வித்யையைப்போல், நகரங்களுக்குள் ஸ்ரீபுரம் போல், சக்திகளுக்குள் ஸ்ரீலலிதையைப்போல் ஸ்ரீவித்யை உபாஸகர்களில் சிவபெருமானைப் போல், ஸஹஸ்ரநாமங்களில் இது சிறந்தது. (15½ - 18)

तथा नामसहस्रेषु परमेतत्प्रकीर्तितम् ।
यथास्य पठनाद्देवी प्रीयते ललिताम्बिका ॥ 19 ॥

अन्यनामसहस्रस्य पाठान्न प्रीयते तथा ।
श्रीमातुः प्रीयये तस्मादनिशं कीर्तयेदिदम् ॥ 20 ॥
बिल्वपत्रैश्चक्रराजे योऽर्चयेल्ललिताम्बिकाम् ।
पद्मैर्वा तुलसीपुष्पैरेभिर्नामसहस्रकैः ॥ 21 ॥
सद्यः प्रसादं कुरुते तत्र सिंहासनेश्वरी ।
चक्राधिराजमभ्यर्च्य जप्त्वा पञ्चदशाक्षरीम् ॥ 22 ॥
जपान्ते कीर्तयेन्नित्यमिदं नामसहस्रकम् ।
जपपूजाद्यशक्तोऽपि पठेन्नामसहस्रकम् ॥ 23 ॥
साङ्गार्चने साङ्गजपे यत्फलं तदवाप्नुयात् ।
उपासने स्तुतीरन्याः पठेदभ्युदयो हि सः ॥ 24 ॥
इदं नामसहस्रं तु कीर्तयेन्नित्यकर्मवत् ।
चक्रराजार्चनं देव्या जपो नाम्नाञ्च कीर्तनम् ॥ 25 ॥
भक्तस्य कृत्यमेतावदन्यदभ्युदयं विदुः ।
भक्तस्यावश्यकमिदं नामसाहस्रकीर्तनम् ॥ 26 ॥

ததா நாமஸஹஸ்ரேஷு பரமேதத் ப்ரகீர்த்திததம்.
யதாஸ்ய படநாத் தேவீ ப்ரீயதே லலிதாம்பிகா. 19
அந்ய நாமஸஹஸ்ரஸ்ய பாடாந் ந ப்ரீயதே ததா.
ஸ்ரீமாதுः ப்ரீயதே தஸ்மாத் அநிசம் கீர்த்தயேதிதம். 20
பில்வபத்ரைச் சக்ரராஜே யோர்ச்சயேல் லலிதாம்பிகாம்.
பத்மைர் வா துளஸீபுஷ்பை: ஏபிர் நாம ஸஹஸ்ரகை: 21
ஸத்ய: ப்ரஸாதம் குருதே தத்ர ஸிம்ஹாஸநேச்வரீ.
சக்ராதிராஜ மப்யர்ச்ய ஜப்த்வா பஞ்சதாக்ஷரீம். 22
ஜபாந்தே கீர்த்தயேந் நித்யமிதம் நாமஸஹஸ்ரகம்.
ஜபபூஜாத்யசக்தோ(அ)பி படேந் நாமஸஹஸ்ரகம். 23
ஸாங்கார்ச்சநே ஸாங்கஜபே யத்பலம் ததவாப்நுயாத்.
உபாஸநே ஸ்துதீரந்யா: படேதப்யுதயோ ஹி ஸ: 24
இதம் நாமஸஹஸ்ரம் து கீர்த்தயேத் நித்யகர்மவத்.
சக்ரராஜார்ச்சநம் தேவ்யா ஜபோ நாம்நாஞ்ச கீர்த்தநம்.25
பக்தஸ்ய க்ருத்யமேதாவத் அந்யதப்யுதயம் விது:
பக்தஸ்யாவச்யகமிதம் நாமஸஹஸ்ர கீர்த்தநம் 26

9. இதைப் பாராயணம் செய்வதால் தேவி எப்படி மகிழ்கிறாளோ அப்படி மற்ற ஸஹஸ்ரநாமங்களின் பாராயணத்தால் மகிழ்வதில்லை. அதனால் தேவி ஸ்ரீமாதாவின் பிரியத்தைப்பெறத் தினமும் இதைப் பாட வேண்டும். ஸ்ரீ சக்ரத்தில் வில்வ இலைகளாலோ, தாமரைப் பூவாலோ,

துளசியாலோ இந்த ஸஹஸ்ரநாமத்தைக் கொண்டு ஸ்ரீலலிதையை அர்ச்சனை செய்து வழிபட்டால் பேரரசியான அவள் உடனே அருள்புரிகிறாள். ஸ்ரீசக்ர பூஜை செய்து பஞ்சதசாக்ஷரீ மந்திரத்தை ஜபித்து, ஜப முடிவில் தினமும் இதைப் பாராயணம் செய்யலாம். ஜபமும், பூஜையும் செய்ய இயலாதவனும் ஸஹஸ்ரநாமத்தைப் பாராயணம் செய்வதால் முறைப்படி ஜபம், அர்ச்சனை, பூஜை செய்வதால் ஏற்படக்கூடிய பயனைப் பெறுவான். நன்மை கிட்டும் என்பதற்காக மற்ற ஸ்தோத்திரங்களைப் படிக்கலாம். ஆனால் இந்த ஸ்தோத்ர பாராயணத்தை நித்ய கர்மாவைப் போல் அவசியம் செய்ய வேண்டும். பக்தனம் தினமும் ஸ்ரீ சக்ர பூஜை, மந்த்ர ஜபம், நாமபாராயணம் இவைகளை நித்யக் கடனாகச்செய்வது அவசியம். மற்றவைகளைச் செய்வதும் மேன்மைதரவல்லதே. (20 - 26)

9 - 1. பாராயணம் - பார அயனம் = பாராயணம். கரை சேர்க்கின்ற சிறந்த வழி, ஒரே வழி. அப்படிச் சிறந்த வழியென நம்பி அந்த வழியையே கடைபிடித்தால் பாராயணம். தேவியின் நாமமே தன்னைக்க டையேற்ற ஒரே வழி, சிறந்த வழி என்ற நம்பிக்கையுடன் அதையே திரும்பத் திரும்பச் சொல்லுதல் நாம பாராயணம். சொல்வது சிறிதாயின் ஜபம்; நீண்டதாயின் பாராயணம்.

9 - 2. நித்யகர்மா - பிராமணன் முதலிய அவரவர்களது ஜாதி குல வழக்கிற்கேற்ப தினந்தோறும் செய்ய வேண்டிய சந்தியாவந்தனம் முதலிய கடன்கள். பயனைக் கருதாது கடமையுணர்ச்சியுடன் செய்யத் தக்கவை இவை. செய்யாவிடில் கடமை தவறிய குற்றம் உண்டு. முறைப்படி வழிவாமல் செய்தால் கடமையைச் செய்த நிறைவு உண்டு.

तत्र हेतुं प्रवक्ष्यामि श्रृणु त्वं कुम्भसम्भव
पुरा श्रीललितादेवी भक्तानां हितकाम्यया ॥ 27 ॥
वाग्देवीर्वशिनीमुख्याः समाहूयेदमब्रवीत् ।
वाग्देवता वशिन्याद्याः शृणुध्वं वचनं मम ॥ 28 ॥
भवत्यो मत्प्रसादेन प्रोल्लसद्वाग्विभूतयः ।
मद्भक्तानां वाग्विभूतिप्रदाने विनियोजिताः ॥ 29 ॥
मच्चक्रस्य रहस्यज्ञा मम नामपरायणाः ।
मम स्तोत्रविधानाय तस्मादाज्ञापयामि वः ॥ 30 ॥
कुरुध्वमङ्कितं स्तोत्रं मम नामसहस्रकैः ।
येन भक्तैः स्तुताया मे सद्यः प्रीतिः परा भवेत् ॥ 31 ॥

**தத்ர ஹேதும் ப்ரவக்ஷ்யாமி ச்ருணு த்வம் கும்பஸம்பவ.**
**புரா ஸ்ரீ லலிதாதேவீ பக்தாநாம் ஹிதகாம்யயா. 27**

**வாக்தேவீர் வசிநீமுக்யா: ஸமாஹூயேத மப்ரவீத்.**
**வாக்தேவதா வசிந்யாத்யா: ச்ருணுத்வம் வசநம் மம 28**
**பவத்யோ மத்ப்ரஸாதேந ப்ரோல்லஸத் வாக்விபூதய:**
**மத்பக்தாநாம் வாக்விபூதி ப்ரதாநே விநியோஜிதா: 29**
**மச்சக்ரஸ்ய ரஹஸ்யஜ்ஞா மம நாமபராயணா:**
**மம ஸ்தோத்ர விதாநாய தஸ்மாதாஜ்ஞாபயாமி வ: 30**
**குருத்வ மங்கிதம் ஸ்தோத்ரம் மம நாமஸஹஸ்ரகை:**
**யேந பக்தை: ஸ்துதாயா மம ஸத்ய: ப்ரீதி: பரா பவேத் 31**

10. இதன் தனி சிறப்பிற்கான காரணத்தைக் கூறுகிறேன். முன்னர் ஸ்ரீ லலிதாதேவி பக்தர்களின் நலனைக் கருதி வசிநீ முதலிய வாக் தேவதைகளைக் கூப்பிட்டு உத்தரவிட்டாள் - வாக்தேவதைகளே! எனது சொல்லைக் கேளுங்கள்! என் அருளால் வாக்குவன்மை பெற்ற நீங்கள் என் பக்தர்களுக்கு வாக்கு வன்மையை வழங்குவதற்காக நியமிக்கப் பட்டுள்ளீர்கள். நீங்கள் என் சக்ர ரஹஸ்யம் அறிந்து என் நாம பாராயணத்தில் ஈடுபட்டவர்கள். ஆனதால் எனது ஸ்தோத்திரத்தைத் தொகுக்க உங்களுக்கு உத்திரவிடுகிறேன். என் பெயரை முத்திரையாகப் பெற்ற ஆயிரம் நாமங்களைக் கொண்டு ஸ்தோத்திரம் ஒன்றை இயற்றுங்கள். அதைக் கூறக்கேட்டு நான் மிகவும் மகிழ்வேன். (26 - 31)

10 - 1. வாக்தேவதைகள் - வசிநீ, காமேச்வரி, மோதிநீ, விமலா, அருணா, ஜயிநீ, ஸர்வேச்வரீ, கௌலிநீ என இவர்கள் எட்டு வாக்தேவிகள். தேவியின் ஸ்ரீ சக்ரத்தில் ஒன்பது ஆவரணங்கள் (சுற்றுகள்). அவை வெளியிலிருந்து நடுவரை கணக்கிடப்பெறுகின்றன. அவையாவன - திரைலோக்ய மோஹன சக்கிரம், ஸர்வாசா பரிபூரக சக்கிரம், ஸர்வ ஸங்க்ஷோபண சக்கிரம், ஸர்வ ஸௌபாக்யதாயக் சக்கிரம், ஸர்வார்த்தஸாதக சக்கிரம், ஸர்வ ரக்ஷாகர சக்கிரம், ஸர்வரோகஹர சக்கிரம், ஸர்வஸித்திகர சக்கிரம், ஸர்வாநந்தமய சக்கிரம் என்பன. நடுவில் உள்ள ஸர்வநந்தமய சக்கிரமாகிற பிந்து ஸ்தானத்தில் தேவி வீற்றிருக்கிறாள். பிந்துவைச் சுற்றியுள்ள ஸர்வஸித்திகர சக்கிரம் எனும் திரிகோணத்தில் தேவியின் ஆயுதசக்திகளும் மந்திர சக்திகளும் உள்ளனர். அதைச் சுற்றியுள்ள ஏழாவது சுற்றாகிய எட்டுகோணமுள்ள ஸர்வரோகஹர சக்கிரத்தில் வசிநீ முதலிய எட்டு வாக்தேவதைகள் உள்ளனர். சந்திரகாந்தமணி போல் குளிர்ச்சியான வெண்ணிறமுள்ள தோற்றத்துடன் விளங்கும் இவர்கள் தேவியின் வாக்குசக்தி உருவமெடுத்து வந்தவர்கள். தேவியுடன் மிக நெருக்கமான தொடர்புள்ளவர்களானதால் ரஹஸ்ய யோகினிகள் என்று அழைப்பர். தேவி, அடியார்களுக்கு வாக்கு சக்தி அளிக்க இவர்களையே பணிப்பாள். ஸஹஸ்ரநாமம் என்ற வாக்கால்

புரியும் பணியில் அடியார்களை ஈடுபடுத்தக் கருணையுடன் தேவி இவர்களைப் பணிக்கிறாள். இவர்கள் வாக்கு வன்மையை அளிக்கும் வாக்தேவதைகள். தேவியின் அடியார்களிடம் விரோதம் கொண்டு விவாதத்தில் இறங்கி தெய்வ நிந்தை செய்பவர்களின் வாக்கைத் தட்டுத்தடுமாறி நின்றுவிடச் (ஸ்தம்பனம்) செய்வதற்காக உள்ள நாகுவீ முதலிய வாக் தேவதைகள் சிலரும் உண்டு.

10 - 2. ரஹஸ்யம் - ஸ்தூலமான விருத்தம் கோணம் முதலியவைகளுடன் தோன்றும் ஸ்ரீசக்ரத்தில் ஸூக்ஷ்ம தத்துவத்தையும் வாஸநாமய ரஹஸ் சரீரத்தையும் ரஹஸ்யம் என்பர். ஸ்தூலம் ஸூக்ஷ்மம் வாஸநாமயம் என தேவிக்கும் அவளது சக்ரத்திற்கும் மூன்று உருவங்கள் உண்டு. ஸ்தூலம் கண்களுக்குப் புலப்படுவது. ஸூக்ஷ்மம் மந்த்ரமயமானது. அதி ஸூக்ஷ்மமான மற்றொன்று சக்தியாக உள்ளது. எங்கும் நிரம்பிய நிர்குணமான ப்ரகாசரூபமான பரம்பொருளான தேவி உலகத்தைப் படைத்தல், காத்தல், தன்னுள் ஒடுக்கம், திரோதானம், அனுக்கிரஹம் என்று ஐந்து க்ருத்யங்களைச் செய்வதற்காக லீலையால் தன்னுள் ஒரு சலனத்தை ஏற்படுத்திக் கொள்கிறாள். சலனத்தின் விளைவாக ஸத்-சித்-ஆனந்த ஸ்வரூபத்தின் சிற்சில அம்சங்கள் மட்டும் தன்னிடம் வெளித்தோன்றும்படியாகச் செய்கிறாள். மனத்தையும் புற இந்திரியத் தொடர்பையும் தாண்டி தன்னுள் துலங்கும் அந்த ஸத் சித் ஆனந்த ஸ்வரூபத்தை அனுபவிக்க முற்படும் பக்தன், தேவி இச்சா சக்தி, ஞான சக்தி, க்ரியா சக்தி வடிவில் உலகத்தில் ஐவகை கிருத்யங்களைச் செய்வதை உணர்கிறான். புற அறிவு அனைத்தையும் ஒதுக்கி தன்னுள்துலங்கும் ஸம்வித் - சித் என்று பேசப்படும் பேரறிவை உணர்பவன் மட்டும் அறியக்கூடியது இந்த வாஸநாமயமான உருவம் எனப்பெறும் தேவியின் ரஹஸ்ய சரீரம்.

10 - 3. நாமம் - தேவதையின் பெயரையும் மந்திரத்தையும் குறிக்கும் சொல். நாமத்தை அறிந்ததாலேயே ஸ்ரீசக்ர ரஹஸ்யம், மந்த்ர ரஹஸ்யம், தேவீ ரஹஸ்யம் மூன்றையும் அறிந்ததாக ஆகும்.

हयग्रीव उवाच -

इत्याज्ञप्ता वचोदेव्यः श्रीदेव्या ललिताम्बया ।
रहस्यैर्नामभिर्दिव्यैश्चक्रुः स्तोत्रमनुत्तमम् ॥ 32 ॥
रहस्यनामसाहस्रमिति तद्विश्रुतं परम् ।
ततः कदाचित्सदसि स्थित्वा सिंहासनेऽम्बिका ॥ 33 ॥
स्वसेवावसरं प्रादात् सर्वेषां कुम्भसम्भव ।

सेवार्थमागतास्तत्र ब्रह्माणीब्रह्मकोटयः ॥ 34 ॥
लक्ष्मीनारायणानां च कोटयः समुपागताः ।
गौरीकोटिसमेतानां रुद्राणामपि कोटयः ॥ 35 ॥
मन्त्रिणीदण्डिनीमुख्याः सेवार्थं यास्समागताः ।
शक्तयो विविधाकारास्तासां संख्या न विद्यते ॥ 36 ॥
दिव्यौघा मानवौघाश्च सिद्धौघाश्च समागताः ।
तत्र श्रीललितादेवी सर्वेषां दर्शनं ददौ ॥ 37 ॥

ஹயக்ரீவ உவாச

**இத்யாஜ்ஞப்தா வசோதேவ்ய: ஸ்ரீ தேவ்யா லலிதாம்பயா**
**ரஹஸ்யைர் நாமபிர் திவ்யை: சத்ரு: ஸ்தோத்ர மநுத்தமம்.**
**ரஹஸ்யநாம ஸாஹஸ்ரம் இதி தத் விச்ருதம் பரம்**
**தத: கதாசித் ஸதஸி ஸ்தித்வா ஸிம்ஹாஸநேம்பிகா.**
**ஸ்வ ஸேவாவஸரம் ப்ராதாத் ஸர்வேஷாம் கும்பஸம்பவ**
**ஸேவார்த்த மாகதாஸ் தத்ர ப்ரஹ்மாணீ ப்ரஹ்மகோடய:**
**லக்ஷ்மீ நாராயணாநாஞ்சகோடய: ஸமுபாகதா:**
**கௌரீகோடி ஸமேதாநாம் ருத்ராணாமபி கோடய:**
**மந்த்ரிணீ தண்டிநீ முக்க்யா: ஸேவார்த்தம் யா: ஸமாகதா:**
**சக்தயோ விவிதாகாரா: தாஸாம் ஸங்க்யா ந வித்யதே.**
**திவ்யௌகா மாநவௌகாச்ச ஸித்தௌகாச்ச ஸமாகதா:**
**தத்ர ஸ்ரீலலிதாதேவி ஸர்வேஷாம் தர்சநம் ததௌ.**

11. இப்படித் தேவி லலிதாம்பிகையால் ஆணையிடப்பெற்ற வாக்தேவிகள் பக்தரல்லாதார் அறியாவண்ணம் இதுகாறும் ரஹஸ்யமாயிருந்த திவ்விய நாமங்களைக் கொண்டு உயர்ந்த ஸ்தோத்திரத்தை இயற்றினார்கள். அதற்கு ரஹஸ்ய ஸஹஸ்ரநாமம் என்று புகழ் ஏற்பட்டது. அகஸ்தியரே! ஒரு சமயம் தேவி ஸபையில் ஸிம்ஹாஸனத்தில் அமர்ந்து தன்னை வழிபட எல்லோருக்கும் வாய்ப்பளித்தாள். அவளை வழிபடக் கோடிக்கணக்கான பிரும்ம தேவர்களும், பிரும்ம சக்திகளும், தேவர்களும், பிரும்ம சக்திகளும், லக்ஷ்மீகளுடன் கூடிய நாராயணர்களும், கௌரீகளுடன் கூடிய ருத்திரர்களும், மந்திரிணீ, தண்டினீ முதலிய சக்திகளும் பற்பல தோற்றங்களுள்ளவர்களாய் தேவி வழிபாட்டிற்காகக் கூடினர். அவர்கள் எண்ணில் அடங்காதவர்கள். திவ்யௌகர்கள், மானவௌகர்கள், ஸித்தௌகர்கள் என்ற குரு கணங்களும் கூடியிருந்தனர். அங்கு அனைவருக்கும் ஸ்ரீலலிதா தேவி தரிசனம் தந்தனள். (32 - 37)

11 - 1. திவ்விய நாமங்கள் - தெய்வீகம் நிரம்பிய நாமங்கள். திவ் என்ற வினைச்சொல்லிலிருந்து தேவ: தேவீ தேவதா தெய்வம் திவ்யம் என்ற சொற்கள் உண்டாயிருக்கின்றன. திவ் என்ற வினைச்சொல்லிற்கு எல்லையில்லா விளையாட்டு, வெல்லும் எண்ணம், ஒளிமிக்கதாக விளங்குதல், ஆனந்தப்படுதல், பெருமிதத்துடனிருத்தல், அழகுடன் துலங்குதல், விரும்பியவாறு எங்கும் செல்லுதல் என்ற பொருள்கள் உண்டு. திவ் என்ற சொல்லிலிருந்துதோன்றிய தேவன், தேவீ, திவ்யம், தேவதை, தெய்வம் என்ற சொற்களும் இத்தனை பொருள்கள் உள்ளவை.

11 - 2. தேவி அநேக கோடி ப்ரும்ஹாண்ட ஜநநீ. பல கோடி பிரும்மாண்டங்களை ஈன்றவள். ஒவ்வொரு பிரும்மாண்டமும் அண்டம் (முட்டை) போன்ற வடிவில் படைக்கப்பெறுகிறது. அதனுள் முதலில் தோன்றும் பிரம்மன் அதில் உலகை விதவிதமாய் தோன்றும்படி விஸ்தாரமாகப் படைக்கிறான். ஒவ்வொரு பிரமனுக்கும் ஒவ்வொரு அண்டம். இப்படி பல கோடி பிரும்மாக்கள். அவர்களது பல கோடி பிரும்மாண்டங்கள். ஒவ்வொரு பிரம்மாண்டத்திற்கும் ஒரு விஷ்ணு ரக்ஷிப்பதற்கும், ஒரு ருத்திரன் ஒடுக்குவதற்குமாகப் பலகோடி விஷ்ணுக்களும் ருத்திரர்களும் அவரவர் சக்திகளும்.

11 - 3. சக்திகள் - கோடிக்கணக்கான தேவியின் சக்திகள்; ஒவ்வொன்றின் வடிவாக அமைந்த தேவைகள். இச்சா சக்தி, ஞான சக்தி, கிரியாசக்தி, பலா, அதிபலா, பாலா, அந்நபூர்ணா, பகலா, தாரா, வாக்வாதிநீ, பரா, காயத்ரீ, ஸாவித்ரீ, ஸரஸ்வதி, லக்ஷ்மி, ஸ்வயம்வரா, நகுலீ, அச்வாரூடா, குருகுல்லா, ரேணுகா, ஸம்பத்கரீ, ஸாம்ராஜ்ய லக்ஷ்மீ, பத்மாவதீ, சிவா, துர்க்கா, பத்ரா, காளீ, காலராத்திரீ, ஸுபத்ரா, சின்னமஸ்தா, காலகண்டீ முதலியவர்கள்.

11 - 4. மந்திர தீக்ஷைதரும் குருவைத் திவ்வியர், மாநவர், ஸித்தர் என்று மூன்றாகப் பிரித்துள்ளார்கள். திவ்யர் - வானவர் - அக்நி, இந்திரன், குபேரன் முதலானோர் தேவ இனத்தைச் சார்ந்தவர். மாநவர் - மனித இனத்தைச் சார்ந்தவர்; அகஸ்தியர் லோபாமுத்திரை முதலானோர் ஸித்தர் - இவர்களும் மனித இனத்தைச் சார்ந்தவர்களே. எனினும் முன்வினைப் பயனாகப்பிறவியிலேயே மந்திர சித்தி பெற்றவர்கள். தீக்ஷை முதலிய முறைகளுக்கு உட்படாமலே சித்தி பெற்றவர். அதனால் இவர்களை ஸித்தர் என்பர். ஓகம் என்றால் கூட்டம். 48 ஸ்தானங்களில் குறிப்பிடப்படுகிற எண் ஓகம் என்று வால்மீகி ராமாயணம் (யுத்த - 28) கூறுகிறது. அத்தனை எண்ணிக்கையுள்ள திவ்ய - மாநவ - ஸித்த குருக்களின் கூட்டம் என்று பொருள். தேவியின் நவாவரண பூஜையில் பிந்து ஸ்தானத்திற்குப்

பின்னுள்ள நான்கு கோணமுள்ள மண்டலத்தில் இந்த மூன்று கூட்டத்தைச் சேர்ந்தவர்களும் பூஜிக்கப்படுகிறார்கள். இந்த திவ்யர்களைப் பரம குருக்கள் என்றும், மாநவர்களைப் பராபர குருக்கள் எனவும், ஸித்தர்களை அபர குருக்கள் என்றும் சொல்வதுண்டு. இப்படி வழிபட வேண்டியவர்களின் பெயர் முதலானவற்றை ஸம்பிரதாய குருவிடமிருந்து தெரிந்துகொள்ள வேண்டும்.

तेषु दृष्ट्वोपविष्टेषु स्वे स्वे स्थाने यथाक्रमम् ।
तत्र श्रीललितादेवीकटाक्षाक्षेपनोदिताः ॥ 38 ॥
उत्थाय वशिनीमुख्या बद्धाञ्जलिपुटास्तदा ।
अस्तुवन्नामसाहस्रैः स्वकृतैर्ललिताम्बिकाम् ॥ 39 ॥
श्रुत्वा स्तवं प्रसन्नाभूल्ललिता परमेश्वरी ।
सर्वे ते विस्मयं जग्मुर्ये तत्र सदसि स्थिताः ॥ 40 ॥

**தேஷு த்ருஷ்ட்வோபவிஷ்டேஷு ஸ்வே ஸ்வே ஸ்தாநே யதாக்ரமம்**
**தத்ர ஸ்ரீ லலிதாதேவீ கடாக்ஷாக்ஷேபநோதிதா: 38**
**உத்தாய வசிநீமுக்யா பத்தாஞ்ஜலிபுடாஸ் ததா**
**அஸ்துவந் நாமஸாஹஸ்ரை: ஸ்வக்ருதைர் லலிதாம்பிகாம். 39**
**ச்ருத்வா ஸ்தவம் ப்ரஸந்நாபூத் லலிதா பரமேச்வரீ**
**ஸர்வே தே விஸ்மயம் ஜக்முர் யே தத்ர ஸதஸி ஸ்த்திதா:40**

12. அவர்கள் தரிசனம் செய்துவிட்டுத் தன்னிருக்கையில் அமர்ந்ததும் ஸ்ரீலலிதா தேவியின் கடைக்கண் பார்வையால் தூண்டப்பெற்ற வசிநீ முதலிய வாக்தேவிகள் எழுந்திருந்து கைக்கூப்பியவர்களாகத் தாம் இயற்றிய ஸஹஸ்ர நாமத்தில் ஸ்ரீலலிதாம்பிகையை வாழ்த்தினர். அதைக் கேட்ட ஸ்ரீலலிதாபரமேசுவரி மிகவும் மகிழ்ச்சிடைந்தாள். ஸபையிலிருந்த அனைவரும் அதைக்கேட்டு வியப்புற்றனர். (38 - 40)

ततः प्रोवाच ललिता सदस्यान् देवतागणान् ।
ममाज्ञयैव वाग्देव्यश्चक्रुः स्तोत्रमनुत्तमम् ॥ 41 ॥
अङ्कितं नामभिर्दिव्यैर्मम प्रीतिविधायकैः ॥ 42 ॥
तत्पठध्वं सदा यूयं स्तोत्रं मत्प्रीतिवृद्धये ।
प्रवर्तयध्वं भक्तेषु मम नामसहस्रकम् ॥ 43 ॥
इदं नामसहस्रं मे यो भक्तः पठते सकृत् ।

मम प्रियतमो ज्ञेयस्तस्मै कामान् ददाम्यहम् ॥ 44 ॥
श्रीचक्रे मां समभ्यर्च्य जप्त्वा पञ्चदशाक्षरीम् ।
पश्चान्नामसहस्रं मे कीर्तयेन्मम तुष्टये ॥ 45 ॥
मामर्चयतु वा मा वा विद्यां जपतु वा न वा ।
कीर्तयेन्नामसाहस्रमिदं मत्प्रीतये सदा ॥ 46 ॥
मत्प्रीत्या सकलान् कामान्लभते नात्र संशयः ।
तस्मान्नामसहस्रं मे कीर्तयध्वं सदादरात् ॥ 47 ॥

**ததः ப்ரோவாச லலிதா ஸதஸ்யாத் தேவதாகணாந்**
**மமாஜ்ஞயைவ வாக்தேவ்ய: சக்ரு: ஸ்தோத்ர மநுத்தமம்.41**
**அங்கிதம் நாமபிர் திவ்யை: மம ப்ரீதி விதாயகை: 42**
**தத் படத்வம் ஸதா யூயம் ஸ்தோத்ரம் மத்ப்ரீதிவ்ருத்தயே**
**ப்ரவர்தயத்த்வம் பக்தேஷு மம நாமஸஹஸ்கரம். 43**
**இதம் நாமஸஹஸ்ரம் மே யோ பக்த: படதே ஸக்ருத்**
**மம ப்ரியதமோ ஜ்ஞேய: தஸ்மா காமாந் ததாம்யஹம் 44**
**ஸ்ரீ சக்ர மாம் ஸமப்ப்யர்ச்ச ஜப்த்வா பஞ்சதசாக்ஷரீம்**
**பச்சாந் நாமஸஹஸ்ரம் மே கீர்த்தயேந் மம துஷ்டயே. 45**
**மாமர்ச்சயதுவா மா வா வித்யாம் ஜபது வா ந வா**
**கீர்த்தயேத் நாமஸாஹஸ்ரம் இதம் மத்ப்ரீதயே ஸதா. 46**
**மத்ப்ரீத்யா ஸகலாந் காமாந் லபதே நாத்ர ஸம்சய:**
**தஸ்மாத் நாமஸஹஸ்ரம் மே கீர்தயத்த்வம் ஸதாதராத்47**

13. அதன்பின் ஸ்ரீலலிதாதேவி ஸபையிலுள்ளவர்களையும், தேவதைகளையும் பார்த்துக் கூறினாள்:- என் ஆணையால் வாக்தேவிகள் இந்தச் சிறந்த ஸ்தோத்திரத்தை என்னை மகிழ்விக்கும் எனது திவ்ய நாமங்களைக் கொண்டு இயற்றினர். என் அருள் பெற நீங்கள் இதனை எப்போதும் பாராயணம் செய்யுங்கள். பக்தர்களிடையே இதனைப் பரப்புங்கள். இந்த ஸஹஸ்ர நாமத்தை ஒரு தடவை படித்தவனும் என் பக்தனே. அவனது எல்லா இஷ்டங்களையும் நிறைவேற்றுவேன். ஸ்ரீசக்ரத்தில் என்னை வழிபட்டு, பஞ்சதசாக்ஷரியை ஜபித்துப் பிறகு என் அருளைப் பெற ஸஹஸ்ரநாமத்தை எப்போதும் பாராயணம் செய்யுங்கள். என் அருளால் எல்லா ஆசைகளும் நிறைவேறும். ஐயமில்லை. அதனால் மிக்க ஈடுபாட்டுடன் இதனைப் பாடி வாருங்கள். (41 - 47)

श्रीहयग्रीव उवाच -

इति श्रीललितेशानि शास्ति देवान्सहानुगान् ॥ 48 ॥
तदाज्ञया तदारभ्य ब्रह्मविष्णुमहेश्वराः ।

शक्तयो मन्त्रिणी मुख्या इदं नामसहस्त्रकम् ॥ 49 ॥
पठन्ति भक्त्या सततं ललितापरितुष्टये ।
तस्मादवश्यं भक्तेन कीर्तनीयमिदं मुने ॥ 50 ॥
आवश्यकत्वे हितुस्ते मया प्रोक्तो मुनीश्वर ।
इदानीं नामसाहस्त्रं वक्ष्यामि श्रद्धया शृणु ॥ 51 ॥

इति ब्रह्माण्डपुराणे श्रीहयग्रीवागस्त्यसंवादे
श्रीललितासहस्त्रनामपूर्वभागः ।

**ஸ்ரீ ஹயக்ரீவ உவாச**

**இதி ஸ்ரீ லலிதாசாநீ சாஸ்தி தேவாந் ஸஹாநுகாத்**
**ததாஜ்ஞயா ததாரப்ய ப்ரஹ்ம விஷ்ணு மஹேச்வரா:**
**சசக்தயோ மந்த்ரிணீ முக்யா இதம் நாமஸஹஸ்ரகம்**
**படந்தி பக்த்யா ஸததம் லலிதாபரிதுஷ்டயே**
**தஸ்மாதவச்யம் பக்தேந கீர்த்தநீயமிதம் முநே**
**ஆவச்யகத்வே ஹேதுஸ்தே மயா ப்ரோக்தோ முநீச்வர**
**இதாநீம் நாமஸாஹஸ்ரம் வக்ஷ்யாமி ச்ரத்தயா ச்ருணு**

**இதி ஸ்ரீ ப்ரஹ்மாண்ட புராணே**
**ஸ்ரீ ஹயக்ரீவாகஸ்த்யஸம்வாதே**
**ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம பூர்வபாக:**

14. ஹயக்ரீவர் கூறினார் : இப்படி லலிதா பரமேசுவரி பரிவாரங்களுடன் கூடிய தேவதைகளுக்கு உத்தரவிட்டாள். அதிலிருந்து அவள் ஆணை காரணமாக பிரம்மா, விஷ்ணு, மகேச்வரர், மந்திரிணீ முதலிய சக்தி தேவதைகள் இந்த ஸஹஸ்ர நாமத்தை லலிதாதேவியின் அருளைப்பெற எப்போதும் பக்தியுடன் பாராயணம் செய்கின்றனர். அதனால் பக்தன் அவசியம் இதைப் படிக்க வேண்டும். இதன் அவசியத்தைப் பற்றிய காரணத்தை உனக்கு விளக்கினேன். இப்போது இந்த ஸஹஸ்ர நாமத்தைக் கூறுகிறேன். ஈடுபாட்டுடன் கேட்பாயாக!
(48 - 51)

பிரும்மாண்ட புராணத்தில் ஸ்ரீ ஹயக்ரீவரும் அகஸ்தியரும் செய்த ஸம்வாதத்தில் ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாம முன்னுரை முற்றிற்று.

* * *

அதிகாரம் - 3

# ஜபவிதானம் – நியாஸம்

1. நியாஸம் என்பது மந்திரத்தின் தேவதையையும், அதன் அங்க தேவதைகளையும் மந்திர ஜபம் செய்பவன் தன் உடலின் ஒவ்வொரு பகுதியிலும் இருப்பதாக பாவித்து இந்தப் பூதவுடலும் ஸூக்ஷ்ம சரீரமும், அந்த தேவதையாகவே மாறிவிட்டதாகக் கருதித்தெய்வ சக்தியைத் தன்னுள் ஏற்படுத்திக் கொள்ளும் முறையாகும். ருஷிந்யாஸம், சந்தஸ்ந்யாஸம், தேவதாந்யாஸம், பீஜந்யாஸம், சக்திந்யாஸம், கீலகந்யாஸம், விநியோக ந்யாஸம், கரந்யாஸம் ஆறு, அங்கந்யாஸம் ஆறு, திக்பந்தம், தியானம், பஞ்சபூஜை ஐந்து, (ஜப முடிவில் அங்கநியாஸ கர நியாஸங்களுக்குப் பிறகு) திக்விமோகம், ஸமர்ப்பணம் என அவை 28.

न्यास:

अस्य श्रीललितासहस्रनामस्तोत्रमालामन्त्रस्य, वशिन्यादि वाग्देवता ऋषयः। अनुष्टुप् छन्दः ।श्रीललितामहात्रिपुरसुन्दरी देवता ।ओं ऐं बीजम् ।ओं सौः शक्तिः । ओं क्लीं कीलकम् । श्रीललिता महात्रिपुरसुन्दरी प्रसादसिद्ध्यर्थे नामपारयणे विनियोगः ।

**ந்யாஸம்**

**அஸ்ய ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம ஸ்தோத்ர மாலா மந்த்ரஸ்ய, வசிந்யாதி வாக்தேவதா ருஷய:, அநுஷ்டுப் சந்த: ஸ்ரீலலிதா மஹாத்ரிபுரஸுந்தரீ தேவதா. ஓம் ஐம் பீஜம், ஓம் ஸௌ:சக்தி:, ஓம் க்லீம் கீலகம். ஸ்ரீலலிதா மஹாத்ரிபுரஸுந்தரீப்ரஸாத ஸித்த்யர்த்தே நாம பாராயணே விநியோக:**

2. முதலில் அஸ்ய (இந்த) மந்த்ரஸ்ய (மந்திரத்தினுடைய) என்ற தொடரில் மந்திரத்தின் பெயரைக் குறிப்பிடுகிறோம். மனனத்தால் ஸாதகனைக் காப்பவை (மாநநாத் த்ராயதே) மந்திரங்கள். மந்திரங்கள் பலவகை. ஓர் அக்ஷரம் உள்ளவை பிண்டம்; இரண்டு அக்ஷரம் உள்ளவை கர்தரீ (கத்தரி போன்ற இருமுனை உள்ளவை; மூன்று முதல் ஒன்பது வரை அக்ஷரங்கள் கொண்டவை பீஜம்; 10 - 20 அக்ஷரங்கள் கொண்டவை மந்திரங்கள். ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரம் மாலாமந்திரம். ரத்தின மாலையிலுள்ள ஒவ்வொரு மணியும் ரத்தினம். அதுபோல் இந்தமாலா மந்திரத்திலுள்ள ஒவ்வோர் அக்ஷரமும் மந்திரம். பொதுவாக மந்திரத்தின் தேவதை பெண்ணானால் அதை வித்யை என்ற பெயரால் குறிப்பிடுவர்.

சிவனும், சக்தியும் ஐக்கியமடைந்த உருவமாக ஸ்ரீ லலிதையை இங்கு வழிபடுகிறோம். (சிவசக்த்யைக்ய ரூபிணீ, லலிதாம்பிகா என்பன 999-1000ஆவது நாமங்கள்), ஆகவே இங்கு தேவதையிடம் பெண் என்று பாவனை இல்லை என்பதால் மந்திரம் என்ற பொதுப் பெயரைக் கொண்டே குறிப்பிடுவர்.

3. ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரம் என்ற மாலா மஹா மந்திரத்திற்கு வசிந்யாதி வாக்தேவதா: - வசிநீ முதலிய வாக்தேவதைகள், ருஷய: – ருஷிகள்.

4. ருஷிகள் : என்பவர் மந்திரங்களை முதலில் கண்டுபிடித்தவர்கள். மந்திரங்கள் அனாதி. அவைகளைக் கண்டறிந்து அவைகளின் சக்தியை உணர்ந்து உலக நன்மைக்காக வெளியிட்டவர் ருஷி. அவர்தான் இந்த மந்திரம் சம்பந்தப்பட்ட ஆதிகுரு. அந்த குருவை நினைக்கும்போது அவர் தொடங்கி நமக்கு உபதேசித்த குருவரை உள்ள அனைவரையும் அந்த ஆதி குருவாகவே பாவித்து எல்லோரையும் வணங்குகிறோம். வசிந்யாதி வாக்தேவதா ருஷய: என்று சொல்லி வலது கையால் சிரசைத் தொட்டு அவர்களை வணங்குவதாக பாவனை செய்ய வேண்டும். பாவனை என்பது உடலால் செய்யும் செயலை மனத்தால் செய்வதாகும். இது குரு ந்யாஸம், நமக்குச் சமமாநவரை வணங்கும்போது நமது கூப்பிய கைகளின் விரல்களை அவர்களுக்கெதிரே நீட்டி வணக்கத்தைத் தெரிவிக்க வேண்டும். தேவதையை வணங்கும் போது இதயத்தில் வசிப்பவராக பாவனையோடு மார்புடன் ஒட்டி நிமிர்ந்த கைகளைக் கூப்பியும், குருவை சிரசில் இருப்பவராக பாவனையுடன் சிரமேல் கைகூப்பியும் வணங்குவது முறை.

5. அதன்பின் மந்திரம் அமைந்துள்ள சந்தஸ்ஸிற்கு வணக்கம் தெரிவிக்கின்ற பாவனையில் உதட்டின் வெளியே வலது கையால் தொடுவது சந்தஸ் ந்யாஸம். சந்தஸ் – சொற்கட்டு. இது சொல்லமைப்பைத் தெரிவிப்பதால் அதன் தெய்வீகத்தன்மை வாயில் உணரப்படுகிறது. இந்த மந்திரத்திற்கு அனுஷ்டுப் சந்தஸ், சுலோகத்தில் நான்கு பாதங்களில் ஒவ்வொன்றிலும் எட்டு அக்ஷரங்கள் அமைந்தது அனுஷ்டுப் சந்தஸ். மூன்றாவதாக தேவதையை இதயத்தில் அமர்ந்திருப்பதாக பாவனையுடன் இதய ஸ்தானத்தைத் தொடுவது தேவதாந்யாஸம். இந்த மந்திரத்திற்கு தேவதை ஸ்ரீ லலிதா மஹாத்ரிபுரசுந்தரி.

6. மந்திரம் என்பது மரம் போன்று பலன்தரும் விரிந்த சக்தி வடிவம். இதன் விதையாக, இதன் ஸுக்ஷ்ம சக்தி அனைத்தையும் தன்னுள் அடக்கிவைத்துள்ளசொல் வடிவத்தை பீஜம் என்பர். அந்த விதையில் அடங்கியுள்ள வீர்யம் சக்தி. சக்தி தேவையின்றி வேறிடத்தில் செல்லாமல்

கட்ட முளைபோல் உதவுவது கீலகம். ஒவ்வொரு மந்திரத்திற்கும் இவை வேறுபடும். இந்த மந்திரத்திற்கு ஸ்ரீபாலா மந்திரத்தின் மூன்று அக்ஷரங்களும் பீஜம் சக்தி கீலகம் என்பனவாக அமைகின்றன. ஐம் என்பது பீஜம். ஸௌ: என்பது சக்தி. க்லீம் என்பது கீலகம். இந்த அக்ஷரங்களைச் சொல்லி அங்கங்களைத்தொட்டு அங்கு அவை நிலைத்திருப்பதாக பாவனை செய்வது பீஜந்யாஸம், சக்தி ந்யாஸம், கீலகந்யாஸம் எனப்படும்.

7. ஸ்ரீ வித்யையின் 15 அக்ஷரங்களில் முதலாவதான க வை பீஜமாகவும், சக்திகூடம் எனப்பெறும் கடைசி நான்கெழுத்துக்களில் முதலாவதான ஸவை சக்தியாகவும், காமகூடம் எனப்பெறும் நடு ஆறெழுத்துக்களில் முதலாவதான ஹ வை கீலகமாகவும் பாவிக்குமாறு பாஸ்கரராயர் கூறுகிறார். பீஜத்தைத் தொப்புளிலும், சக்தியை குஹ்யத்திலும், கீலகத்தைக் கால்களிலும் தொட்டு அவர் ந்யாஸம் செய்யச் சொல்கிறார். இம்மூன்றையும் முறையே மார்பின் வலதுபுறத்திலும், இடதுபுறத்திலும், நடுவிலும் ந்யாஸம் செய்வதுண்டு. வலது புஜத்திலும், இடது புஜத்திலும், தொப்புளிலும் சிலர் தொடுவர். அவரவர் குருவின் ஸம்பிரதாயத்தை அனுசரித்தல் உசிதம்.

8. இந்த ஜபம் அல்லது பாராயணத்தை எதன் பொருட்டுச் செய்கிறோம் என்பதைக் குறிப்பிடுவது விநியோக நியாஸம். வலது கையால் எல்லா அங்கங்களையும் வலமாகத் தொடுவது இதன் முறை. தேவி இந்த வழிபாட்டை ஏற்றுக்கொள்வாள். அவள் அருளால் எல்லாம் கிடைத்துவிடும் என்ற நம்பிக்கையுடன் ஸ்ரீ லலிதா மஹாத்ரிபுர சுந்தரியின் பிரீதிக்காக ஜபம் செய்வதற்காக விநியோகம். குறிப்பிட்ட பலனை வேண்டி மட்டும் இதனைச் செய்வதானால் அந்த அந்த பலன்களை இங்கு குறிப்பிடலாம்.

करन्यास:-

ओं ऐं अङ्गुष्ठाभ्यां नमः।ओं क्लीं तर्जनीभ्यां नमः ।ओं सौः मध्यमाभ्यां नमः। औं ऐं अनीमिकाभ्यां नमः। ओमं क्लीं कनिष्ठिकाभ्यां नमः। ओं सौः करतलकरपृष्ठाभ्यां नमः ।

கரந்யாஸம்

**ஓம் ஐம் அங்குஷ்ட்டாப்பாயம் நம:. ஓம் க்லீம் தர்ஜநீப்ப்யாம் நம:. ஓம் ஸௌ:. மத்யமாப்ப்யாம் நம:. ஓம் ஐம் அநாமிகாப்ப்யாம் நம:. ஓம் க்லீம் கநிஷ்ட்டிகாப்ப்யாம் நம:. ஓம் ஸௌ: கரதல கரப்ருஷ்டாப்ப்யாம் நம:.**

9. கரந்யாஸம் : – ஜபம் செய்யும் கைகளிலுள்ள விரல்களும்,

உள்ளங்கையும், புறங்கையும் தூய்மை பெறவும், அவைகளில் தெய்வத் தன்மை விளங்கும் செய்யப்படும் நியாஸம் இது. பாலா மந்திரத்தின் மூன்று அக்ஷரங்களைக் கொண்டு இதைச் செய்கிறோம். அங்குஷ்ட்டம் - கட்டை விரல், தர்ஜநீ - சுட்டுவிரல், மத்யமா - நடுவிரல், அநாமிகா - மோதிரவிரல், கநிஷ்ட்டிகா - சுண்டுவிரல், கரதலம் - உள்ளங்கை, கரப்ருஷ்ட்டம் - புறங்கை, அங்குஷ்ட்டாப்யாம் நம: என்று இருகைகளின் கட்டை விரல்களையும் சுட்டு விரல்களின் நுனியால் கீழிருந்து மேல் (அடியிலிருந்து நுனிவரை) தடவ வேண்டும். தர்ஜநீப்ப்யாம் நம: என்று சுட்டுவிரல்களையும், மத்ய மாப்ப்யாம் நம: என்று நடு விரல்களையும், அநாமிகாப்ப்யாம் நம: என்று மோதிர விரல்களையும், கநிஷ்ட்டிகாப்யாம் நம: என்று சுண்டு விரல்களையும், கட்டை விரல்களின் நுனியால் அடியிருந்து நுனி வரை தடவவேண்டும். கரதல கரப்ருஷ்டாப்பாயம் நம: என்ற இரு கைகளின் உள் - வெளிப்புறங்களை ஒன்றால் ஒன்றைத் தடவி விடவேண்டும்.

अङ्गन्यासः-

ओं ऐं हृदयाय नमः। ओं क्लीं शिरसे स्वाहा । ओं सौः शिखायै वषट् । ओं ऐं कवचाय हुं । ओं क्लीं नेत्रत्रयाय वौषट् । ओं सौः अस्त्राय फट् । ओं भूर्भुवस्सुवरोमिति दिग्बन्धः ।

**அங்கந்யாஸம்**

**ஓம் ஐம் ஹ்ருதயாய நம: ஓம் க்லீம் சிரஸே ஸ்வாஹா. ஓம் ஸௌ: சிகாயை வஷட். ஓம் ஐம் கவசாய ஹும். ஓம் க்லீம் நேத்ரத்ரயாய வௌஷட். ஓம் ஸௌ: அஸ்த்ராய பட். ஓம் பூர்ப்புவஸ்ஸுவரோம் இதி திக்பந்த:**

10. ஹ்ருதயாதிந்யாஸம் - பாலாவின் மூன்று அக்ஷரங்களைக் கொண்டே இந்த நியாஸங்களைச் செய்ய வேண்டும். அங்கங்களைத் தொட எந்த விரல் அல்லது விரல்களை உபயோகிக்க வேண்டுமென்ற நியமமுண்டு. அது பின்வருமாறு:

| **உடலில் தொட வேண்டிய இடம்** | **தொடும் கை** | **விரல்கள்** | **செய்கையுடன் சொல்ல வேண்டிய மந்திரச்சொற்கள்** |
|---|---|---|---|
| 1. இதயம் | வலது | மோதிர-நடு-சுட்டுவிரல்கள் | ஹ்ருதயாய நம: |
| 2. சிரஸ் (தலை) | வதலு | நடு-மோதிர விரல்கள் | சிரஸே ஸ்வாஹா |

| உடலில் தொட வேண்டிய இடம் | தொடும் கை | விரல்கள் | செய்கையுடன் சொல்ல வேண்டிய மந்திரச்சொற்கள் |
|---|---|---|---|
| 3. சிகை (அல்லது இருக்க வேண்டிய இடம்) | வலது | கட்டைவிரல் | சிகாயை வஷட் |
| 4. தோள்கள் | வலது இடது<br>இடது வலது | ஐந்து விரல்கள்<br>ஐந்து விரல்கள் | கவசாய ஹும் |
| | (ஒரே சமயத்தில் தொடவேண்டும்) | | |
| 5. புருவநடுவே இரு கண்கள் | வலது | நடுவிரல் மோதிரச் சுட்டுவிரல்கள் | நேத்ராய வௌஷட் |
| | (ஒரே சமயத்தில் தொடவேண்டும்) | | |
| 6. தலையைச்சுற்றி வலமிருந்து இடமாக வலது கட்டை விரலையும், சுட்டுவிரலையும் சேர்த்துச் சொடுக்கிக்கொண்டே சுழற்றிப் பின் இடது உள்ளங்கையை வலது ஆட்காட்டி விரலாலும், நடு விரலாலும தட்ட வேண்டும். | | | அஸ்திராய பட் |

11. **ஹ்ருதயாதி நியாஸங்கள்** – அங்கநியாஸம் என இதற்குப் பெயர். ஹ்ருதயம் முதலிய அங்கங்களில் தேவதா சக்தியைப் பாவனை செய்து தொடுவது இதன்முறை. ஹ்ருதயம் – உள்ளுணர்வின் இருப்பிடம். சிரஸ் (தலை) அறிவின் இருப்பிடம். சிகை – குண்டலிநீ சக்தி மூலாதாரத்திலிருந்து கிளம்பி ஆறு சக்கிரங்களையும் அடைந்து ஸஹஸ்ராரபத்மம் சென்று திரும்பும் இடம். இம்மூன்று அங்கங்களில் நியாஸம் செய்துகொண்டபின் கவசம்–தெய்வீக சக்திக்கெதிராக வெளியிலுள்ள தீய சக்திகள் நம்மைத்தாக்காதவாறு மந்திர சக்தியால் பூத உடலுக்குப் பாதுகாப்புச் செய்கிறோம். மந்திர சக்தியால் இரு கண்களும் ஆஜ்ஞாசக்ரத்தில் அமைந்துள்ள ஞான சக்தியும் (நெற்றியில்) துலங்கி தேவதா சக்தியை உணர்வதற்காக அந்த மூன்று இடங்களிலும் விரல்கள் படும்படி தொடுவது நேத்திர நியாஸம். பிறகு மந்திர சக்திக்கு எதிராக வெளியிலுள்ள கெட்ட எண்ண அலைகள் முதலியவை நம்மை விட்டகலும்படி தெய்வீகமான அஸ்திர சக்தியைக்கொண்டு நம்மை ரக்ஷித்துக்கொள்வது அஸ்த்ரந்யாஸம். நாம் ஜபம் செய்யும்வரை மந்திர தேவதாசக்தி நம்மை விட்டகலாதிருக்கும்படி திக்பந்தம் – திக்கைக் கட்டுவதற்காக வ்யாஹ்ருதிகளும் பிரணவமும் சேர்ந்த பூர்புவஸ் ஸுவரோம்

என்ற மந்திரத்தால் நியாஸம்; நம் உடலைச்சுற்றி வலமாக வலைக்கையால் சுற்றுகிறோம். இதன்பின் ஸிந்தூராருண - அம்பிகாம், அருணாம் - பவானீம், வந்தா பத்மாஸநஸ்த்தாம் - ப்ரதாத்ரீம், ஸகுங்கும - அம்பிகாம் என்ற நான்கு சுலோகங்களால் மனத்தில் தேவியின் திருவுருவத்தைப் பதித்து வணங்குகிறோம்.

* * *

### அதிகாரம் - 4

## ஜபவிதானம் – தியானம்

ध्यानम् -

सिन्दूरारुणाविग्रहां त्रिनयनां माणिक्यमौलिस्फुरत् -
तारानायकशेखरां स्मितमुखीपापीनवक्षोरुहाम् ।
पाणिभ्यामलिपूर्णरत्नचषकं रक्तोत्पलं बिभ्रतीम्
सौम्यां रत्नघटस्थरक्तचरणां ध्यायेत् (वन्दे) परामम्बिकाम् ॥

**த்யாநம் :**

**ஸிந்தூராருண விக்ரஹாம் த்ரிநயநாம் மாணிக்யமௌலிஸ்ப்புரத்**
**தாராநாயக சேகராம் ஸ்மிதமுகீம் ஆபிந வக்ஷோருஹாம்.**
**பாணிப்ப்யாம் அளிபூர்ண ரத்நசஷகம் ரக்தோத்பலம் பிப்ரதீம்**
**ஸௌம்யாம் ரத்ந கடஸ்த்த ரக்த சரணாம் த்த்யாயேத் (வந்தே)**
**பராமம்பிகாம்**

1. ஸிந்தூரம் போன்ற சிவந்த உடல் உடையவளும், முக்கண்ணுடையவளும், மாணிக்கக் கற்களாலான கிரீடத்தில் துலங்குகின்ற சந்திரனைத் தலை முன்னணியாகக் கொண்டவளும், புன்சிரிப்புடனுள்ள முகமுள்ளவளும், புஷ்டியான ஸ்தனங்களுள்ளவளும், வண்டு மொய்க்கின்ற தேன் நிறைந்த ரத்னக்கோப்பையையும் செங்குவளைப்பூவையும் இருகைகளில் ஏந்தியவளும், ரத்ன கலசத்தில் வைத்துள்ள செவ்விய திருவடிகளுள்ளவளும் அன்பார்ந்த தோற்றமுள்ளவளுமான பராஅம்பிகையைத் தியானிக்கிறேன்.

अरुणां करुणातरङ्गिताक्षीं धृतपाशांकुशपुष्पबाणचापाम् ।
अमिमादिभिरावृतां मयूखैरहमित्येव विभावये भवनीम् ॥

**அருணாம் கருணாதரங்கிதாக்ஷீம்**
**த்த்ருதபாசாங்குச புஷ்பபாணசாபாம்.**
**அணிமாதிபிராவ்ருதாம் மயூகை:**
**அஹமித்யேவ விபாவயே பவாநீம்.**

2. சிவந்த நிறமுள்ளவளும், கருணை அலைபாயும் கண்களுள்ளவளும், பாசமும் அங்குசமும் பூக்களாகிற அம்புகளும் வில்லும் ஏந்தியவளும், அணிமா முதலிய சக்திகள் கிரணங்களாகச் சூழ விளங்குபவளுமாக பவானியை நான் மனத்தில் பாவிக்கிறேன். (அஹம் எனும் தத்துவமாக – பராஹந்தை வடிவினளாக பாவிக்கிறேன்.

ध्यायेत (वन्दे) पद्मासनस्थां विकसितवदनां पद्मपत्रायताक्षीं
हेमाभां पीतवस्त्रां करकलितलसद्धेमपद्मां वराङ्गीम् ।
सर्वालङ्कारयुक्तां सततमभयदां भक्तनम्रां भवानीं
श्रीविद्यां शान्तमूर्तिं सकलसुरनुतां सर्वसम्पत्प्रदात्रीम् ॥

**த்யாயேத் (வந்தே) பத்மாஸநஸ்த்தாம்**
**விகஸிதவதநாம் பத்மபத்ராதாக்ஷீம்**
**ஹேமாபாம் பீதவஸ்த்ராம்**
**கரகலித லஸத்தேமபத்மாம் வராங்கீம்.**
**ஸர்வாலங்காரயுக்தாம் ஸததமபயதாம்**
**பக்தநம்ராம் பவாநீம்**
**ஶ்ரீவித்யாம் சாந்த மூர்த்திம்**
**ஸகலஸுரநுதாம் ஸர்வஸம்பத்ப்ரதாத்ரீம்.**

3. தாமரையாகிய ஆஸனத்தில் அமர்ந்திருப்பவளும், மலர்ந்த முகம் உள்ளவளும், தாமரை இதழ் போன்ற நீண்ட கண்களையுடையவளும், பொன்போன்ற மேனி நிறமுள்ளவளும், மஞ்சளாடை அணிந்தவளும், இரு கைகளிலும் அலங்கரிக்கின்ற தங்கத்தாமரைப் பூவுள்ளவளும், அழகிய உருவமைப்புள்ளவளும், எல்லா ஆபரணங்களுடன் கூடியவளும், எப்போதும் பயமின்மையை அருள்பவளும், பக்தர்களுக்காச் சிரம் தாழ்த்திக் குறை கேட்டு அருள்பவளும், சிவபெருமானது நாயகியும், ஶ்ரீவித்யாரூபிணியும், சாந்தமான தோற்றமுள்ளவளும், எல்லா தேவர்களாலும் வணங்கப்பெற்றவளும், எல்லாச் சொல்வங்களையும் அளிப்பவளுமான தேவியை தியானிக்கிறேன்.

सकुङ्कुमविलेपनामलिकचुम्बिकस्तूरिकां
समन्दहसितेक्षणां सशरचापपाशांकुशाम् ।
अशेषजनमोहिनीमरुणमाल्यभूषाम्बरां
जपाकुसुमभासुरां जपविधौ स्मरेद (राम्य) म्बिकाम् ॥

**ஸகுங்குமவிலேபநாம் அளிகசும்பிகஸ்தூரிகாம்**
**ஸமந்தஹஸிதேக்ஷணாம் ஸசரசாபபாசாங்குசாம்.**

**அசேஷ ஜநமோஹிநீம் அருணமால்யபூஷாம்பராம்**
**ஜபாகுஸுமபாஸுராம் ஜபவிதௌ ஸ்மரேத (ராம்ய)ம்பிகாம்.**

4. குங்குமப்பூவின் விழுதைப்பூசிக்கொண்டிருப்பவளும், நெற்றியை அலங்கரிக்கும் கஸ்தூரி திலகம் உள்ளவளும், புன்னகைக்கின்ற கண்களுள்ளவளும், வில்லும் அம்பும் பாசமும் அங்குசமும் ஏந்தியவளும், எல்லா மக்களையும் தன்பால் ஈர்ப்பவளும், செந்நிறமுள்ள மாலை அணிகள் ஆடைகள் பூண்டவளும், செம்பருத்திப்பூவின் நிறத்தில் ஒளிமிக்கவளுமான அம்பிகையை ஜபகாலத்தில் நினைவிற் கொள்ளுகிறேன்.

5. மூன்று தியான சுலோகங்களில் த்யாயேத் என்னுமிடத்தில் வந்தே என்றும், ஸ்மரேத் என்றவிடத்தில் ஸ்மராமி என்றும் () குறிக்குள் பாடபேதம் கொடுக்கப்பட்டுள்ளது. மந்திர சாஸ்திர நூல்களில், தேவியை இப்படி தியானிக்க வேண்டுமென்று முறை காட்டுவதற்காக த்யாயேத், ஸ்மரேத் - நினைவிற் கொள்ள வேண்டும் என்று கட்டளையாகச்சொல் அமைந்துள்ளது. நாம் நேரிடையாக தியானம் செய்யும்போது அதை வந்தே (வணங்குகிறேன்) என்றும் ஸ்மராமி (நினைவிற்கொள்கிறேன்) என்றும் மாற்றி அமைத்துக் கொள்வது பெரியோர்களின் சம்பிரதாயம்.

6. முதலில் உள்ள ஸிந்தூராருண என்று தொடங்கும் சுலோகம் பிருமாண்ட புராணத்திலுள்ளது. இரண்டு கைகள் உள்ள மூர்த்தி அதில் தியானிக்கப்படுகிறது. இரண்டாவதும் நான்காவதுமான சுலோகங்கள் சதுர்பாஹுஸமந்விதா - ராகஸ்வரூப பாசாட்ட்யா, க்ரோதாகாராங்கு சோஜ்வலா, மனோருபேக்ஷு கோதண்டா, பஞ்சதன்மாத்ரஸாயகா என்ற நாமங்களின்படி நான்கு கைகள் அமைந்த தேவியைக் குறிப்பிடுகின்றன. மூன்றாவது சுலோகம் ஸ்ரீ தேவியைச்செல்வம் தருபவளாக - ஸம்பத் ப்ரதாயினியாக தியானிக்க வழி செய்கிறது. மனம் நிலைத்து ஓர் உருவில் பதியாமல் ஓடிக்கொண்டிருக்கும். சிறு குழந்தையைப்போல் அது போகும் வழியில் சென்று அதைத்திருப்புவதுதான் எளிது. ஆனதால் வெவ்வேறு தியானத்திற்கான அழகான மூர்த்தியைக் காட்டி அதில் மனத்தை ஈடுபடுத்துகிறோம். இப்படித் தேவியின் பல்வேறு மூர்த்திகளில் ஏதேனும் ஒன்றில் மனம் லயித்துவிட்டால் வேறு வடிவத்தைத் தியானம் செய்யத் தேவையில்லை.

7. ஸிந்தூராருண விக்ரஹாம் - சுத்தமான பிரகாசமாக, தடையில்லாமையால் அசைவே இன்றி விளங்கிய பரப்ரும்ம சைதன்யத்தில் உலகைப் படைக்கும் ஸங்கல்பம் தோன்றியதும் பிரகாசத்தில் - பேரொளியில் சலனம் ஏற்படுகிறது. நிறம், அலையலையாக

அசைவு, உருவத்தோற்றம் முதலியவை வரிசையாக ஏற்படுகின்றன. அவ்யக்தமாக ( வெளிப்படையாக புலனாகத் தேவையான நிறம் முதலியவற்றின் வேறுபாடுகளின்றி) சுத்தமாயிருந்த பேரொளியில் சலனம் - அசைவு ஏற்பட்டதும் வியக்தநிலை - (பொறிகளால் ஏற்றத்தக்க நிலை) ஏற்படுகிறது. அப்போது முதலில் தோன்றும் நிறம் சிகப்பு. இதையே பிரகாச: ஸ்வரூபம், லௌஹித்யம் விமர்ச: என்று சாக்த நூல்கள் கூறும். நிற பேதமற்ற சூரியனின் ஒளி தடைபட்டு வானவில்லாத் தோன்றும்போது முதலில் காணும் நிறம் சிகப்பு. கடைநிறம் கருமைமிக்க செந்நிறமாகும். அப்படி அந்த சுத்த பிரம்மஸ்வரூபம் தோற்ற நிலைக்கு வருவதை விக்ரஹம் என்பார்கள். பொறிகளுக்கு அகப்படாதிருந்து ஒன்று பொறிகளால் நன்கு அறியப்படுவதால் (விசேஷண க்ருஹ்யதே - விக்ரஹ:) மாறுகிறது. மன-வாக்-காயங்களுக்கு அப்பாற்பட்டிருந்த கடவுள், சிலையின் உள்வசிப்பதற்குச் சம்மதித்து அருளியதனால் நம்மால் உணரமுடிந்ததாயிற்று. அதனால் அதை விக்ரஹம் என்போம். புரியாத கூட்டாக இருந்தது புரியும் நிலைக்கு வந்ததெனப் பொருள். தேவியின் உருவம் இதுகாறும் புரியாதிருந்தது. செம்மை என்ற நிறத்தை ஏற்றவுடனேயே எளிதில் மனத்திற் பதித்துக்கொள்ள முடிந்தது. இது அவள் கருணையால் ஏற்ற விக்ரஹம்.

8. அலிபூர்ண-ரத்நசஷகம் - வண்டு நிரம்பிய ரத்னக் கோப்பை. வண்டு தேனிருக்குமிடத்தில் மொய்க்கும். ரத்னக் கோப்பையில் தேன் நிரம்பியுள்ளது. ரஹஸ்ய வழிபாடுகளில் மது சேர்ப்பதுண்டு. அலி - மது. அம்மதுவே தேவியின் கையில் உள்ள கோப்பையில் நிரம்பியிருப்பதாக பாவனை செய்து ரஹஸ்ய வழிபாட்டினர் முறை.

9. ரக்தகடஸ்த்த - ரக்த - சரணாம் ரத்னகடம் - ரத்னங்களாலான குடம். நவநிதிகளும் ரத்னக்குடத்தில் இருந்துகொண்டு தேவியின் சரணங்களைத் தாங்குகின்றன. சிவந்த திருவடிகள் ரத்னக்குடத்தில் தம் செம்மையைப் பரவவிடுகின்றன. தேவியின் இரு சரணங்களில் இடது சரணம் சிகப்பாகவும், வலது சரணம் வெள்ளையாகவும் இருப்பதாகத் தியானிப்பதுண்டு. அந்நிலையில் தேவியின் இடது சிவந்த சரணம் கலசத்தின்மேல் அமைந்திருப்பதாகவும் வலது வெண்மையான சரணம் மடித்து இடது தொடையின்கீழ் அமைந்திருப்பதாகவும் தியானம் செய்வர். ரஹஸ்ய வழிபாடுள்ளவர், ரத்த சரணம் - மது எனக்கொண்டு, அடியார்களுக்கு வழங்க மது நிரம்பிய ரத்நகலசம் முன் வைத்துள்ளதாகத் தியானிப்பர்.

10. அணிமாதிபி: மயூகை: - பிந்துஸ்தானத்தில் வீற்றிருக்கும் தேவியிடமிருந்து கிளம்பிய ஒளிக்கதிர்கள் சக்கிரங்களில் தேங்கி அணிமா

முதலிய ஆவரண தேவதைகளாக உருவெடுக்கின்றன. அதனால் அணிமா முதலியவற்றின் உருவை, தேவியின் சரீரத்திலிருந்து கிளம்பிய ஒளிக்கதிர்கள் என்ற பாவனையுடன் தியானிக்கவேண்டும்.

लमित्यादिपञ्चपूजा -
'लं ' पृथिव्यात्मिकायै देव्यै गन्धं समर्पयामि
'हं ' आकाशात्मिकायै देव्यै पुष्पं समर्पयामि
'यं ' वाय्वात्मिकायै देव्यै धूपं आघ्रापयामि
'रं ' अग्न्यात्मिकायै देव्यै दीपं दर्शयामि
'वं ' अमृतात्मिकायै देव्यै अमृतोपहारं (अमृतं महानैवेद्यं) निवेदयामि
'सं ' सर्वात्मिकायै देव्यै सर्वोपचारपूजाः समर्पयामि

**ஸமித்யாதி பஞ்சபூஜா**

**லம் ப்ருதிவ்யாத்மிகாயை தேவ்யை கந்தம் ஸமர்ப்பயாமி**
**ஹம் ஆகாசாத்மிகாயை தேவ்யை புஷ்பம் ஸமர்ப்பயாமி**
**யம் வாய்வாத்மிகாயை தேவ்யை தூபமாக்ராபயாமி**
**ரம் அக்ந்யாத்மிகாயை தேவ்யை தீபம் தர்சயாமி**
**வம் அம்ருதாத்மிகையா தேவ்யை அம்ருதோபஹாரம் (அம்ருதம்மஹாநைவேத்யம்) நிவேதயாமி**
**ஸம் ஸர்வாத்மிகாயை தேவ்யை ஸர்வோபசாரபூஜாஸ் ஸமர்ப்பயாமி**

11. ஸமித்யாதி பஞ்சபூஜா - தியானம் செய்ததும் நம் முன் தோன்றும் தேவிக்கு வழிபாடுகள் செய்ய வேண்டும். ஜபம், பாராயணம் என்பன மானஸயாகம் - அந்தர்யாகம். அதனால் அதற்கான வழிபாடுகளும் மானஸமாகவே பாவனை வடிவில் அமைய வேண்டும். 64 உபசாரங்களைக் கொண்டோ, 16 உபசாரங்களைக்கொண்டோ வெளியே செய்யும் வழிபாட்டை எளிதாக்கி ஐந்து உபசாரமாகச் சுருக்கிக் கொள்கிறோம். அதற்குக்காரணம் உபசாரமாக தேவிக்கு அளிக்கப்பெறும் பொருள் அனைத்தும் ப்ருதிவீ, ஜலம், தேஜஸ், வாயு, ஆகாசம் என்ற ஐந்து பூதங்களாலானது. மணம் தரும் சந்தனப்பூச்சு பிருதிவீ தத்துவத்தால் தரும் உபசாரம். பூ மலர இடைவெளி தேவைப்படுகிறது. இடைவெளி இன்றி மலர்ச்சி இல்லை. மொட்டு பூவாக ஆகாசம் தேவைப்படுவதால் அவை அளிப்பது ஆகாச தத்துவத்தால் தரும் உபசாரம். தூபம் போடுவதால், அளவில் போட்ட புகைப்பொருளிலிருந்து பரவும் மணம் காற்றால் கொண்டு செல்லப்படுவதால் தூபம் வாயு தத்துவத்தால் தும் உபசாரம். தீபம் என்பது அக்நி தத்துவத்தால் தரும் உபசாரம். ருசி உணரப் பெறுவது வாயில் வாய் நீருடன் கலப்பதால்தான். ருசியை முக்கியமாகக் கொண்ட உணவு வாழ

வைக்கும் தன்மை படைத்தது. அதனால் அதை அமிருதம் என்பர். ஜலமும் அமிருதமே. ஆகவே அமிருதமாகிய ஜல தத்துவத்தாலான உபசாரம் அமிருத மயமான நைவேத்யம்.

12. தேவிதான் இந்த ஐந்து தத்துவங்களாக மாறி நிற்பவள். நாம் காணும் ஜலம் மண் போன்ற ஐந்து பூதங்களும் கலப்புள்ளவை. கலப்பற்றவையாக முதலில் தோன்றியவை ஆகாசதந்மாத்திரம், வாயுதந்மாத்திரம், அக்நிதந்மாத்திரம், ஜல தந்மாத்திரம், பிருதிவீதந்மாத்திரம் என்ற ஆதி பூதங்கள். இவை இறைவியின் ஜடஸ்வரூபம். நாம் மனத்தால் அளிக்கும் இந்த பஞ்சபூதோபசாரம் பஞ்சபூதஸ்வரூபிணியான தேவியிடம் எளிதில் சேரும் என்பதே இந்த பஞ்சபூஜைகளின் லக்ஷ்யம். இந்த பஞ்சபூதங்களும் முதலில் ஐந்து அக்ஷரங்களில் அடங்கியவை. முதலில் தோன்றியது மஹாகாசம். ஆகாசத்தின் சக்தி சப்தம். ஒவ்வொரு பூதசக்தியும் ஒவ்வொரு அக்ஷரத்தில் அடங்கியுள்ளது. அதனால் லம் பிருதிவீ பீஜாக்ஷரம், ஹம் – ஆகாச பீஜாக்ஷரம், யம் – வாயு பீஜாக்ஷரம், ரம் – அக்நிபாஜாக்ஷரம், வம் – அமிருத பீஜாக்ஷரம் (அம்ருதம் – ஜலம்) இந்த நியாஸம் – கரநியாஸத்தில் செய்ததுபோல் விரல்களைக் கீழிருந்து மேல் வரை தடவிவிடுவது. லம் ... எனக்கட்டை விரலை ஆட்காட்டி விரலால் தடவிவிடுவது. ஹம் .... எனக் கட்டை விரலால் ஆட்காட்சி விரலையும், யம் ... எனக் கட்டை விரலால் நடு விரலையும், ரம் ... எனக் கட்டை விரலால் மோதிர விரலையும், வம் .... எனக்கட்டை விரலால் சுண்டு விரலையும் தடவிவிடுவது இந்த நியாஸமாகும். கட்டை விரல், சுண்டுவிரல், ஆட்காட்டி விரல், நடுவிரல், மோதிர விரல் என்ற வரிசையில் இதனைச் சிலர் செய்வர். இத்துடன் பஞ்சபூஜை முடிகிறது. எனினும் மற்ற உபசாரங்களைச் செய்யவில்லையே என்ற குறை நீங்க எல்லாவற்ஜயும் குறிக்கும் ஸம் பீஜாக்ஷரத்தைச்சொல்லி எல்லாமாமான அவளை எல்லா உபசாரங்களாலும் வழிபடுவதாக பாவனை செய்கிறோம். இரண்டு உள்ளங்கைகளையும் தடவிவிடுவதே இதற்கான நியாஸம். இனி நாம் பாராயணத்தைத் தொடங்குவோம்.

***

### அதிகாரம் - 5

# ஆயிரம் நாமங்கள்

1. தேவிக்கு ஆயிரம் நாமங்கள், அவைகளை வசிநீ முதலிய வாக்தேவிகள் வெளியிட்டனர். வியாஸர் அவைகளை பிரும்மாண்ட புராணத்தில் ஸ்ரீ லலிதோபாக்யானத்தின் இறுதியில் தொகுத்தார். காலப்போக்கும் அறிவுக் குறைவும் உபதேசத்திலும் கிரஹிப்பதிலும் உள்ள குறைகளும் காரணமாகச்சொற்கள் மாறிவிடவும் சிதைந்திடவும்கூடும். வேத்தில் அத்தகைய குறைகள் ஏற்படாதிருக்கப் பல முறைகளையும் முனிவர்கள் ஏற்படுத்தியுள்ளனர். அவ்விதமே இந்த ஆயிரம் நாமங்களையும் சிதைவுறாமலும் மாறுபடாமலும் பற்பல சூத்திரங்கள் முதலிய முறைகளைக் கொண்டு பெரியோர்கள் காப்பாற்றியுள்ளனர்.

2. அ முதல் க்ஷ வரை 51 எழுத்துக்கள், அவைகளில் ऊ, ऋ, ॠ, लृ,लॄ, ऐ, औ, अः, घ, ङ, झ, ञ, ट, ठ, ढ, ण, थ, फ, ळ என்ற 19 எழுத்துக்களை முதல் எழுத்தாகக் கொண்ட நாமங்கள் கிடையாது. மற்ற 32 எழுத்துக்களில் ஒவ்வொன்றையும் முதல் எழுத்தாகக் கொண்ட நாமங்களின் எண்ணிக்கை பின்வருமாறு :

| अ | 40 | ए | 1 | ग | 24 | त | 46 | ब | 24 | ल | 14 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| आ | 11 | ओ | 2 | च | 29 | द | 37 | भ | 37 | व | 79 |
| इ | 3 | अं | 4 | छ | 1 | ध | 14 | म | 112 | श | 59 |
| ई | 2 | क | 81 | ज | 18 | न | 75 | य | 13 | ष | 5 |
| उ | 5 | ख | 1 | ङ | 2 | प | 81 | र | 38 | स | 122 |
| | | ह | 11 | क्ष | 9 | ஆக 1000 நாமங்கள். | | | | | |

3. பரப்பிரும்மம் என்றும் பிரும்மம் என்றும் எல்லாத் தோற்றங்கலுக்கும் மூலகாரணமான பரம்பொருளைக் குறிப்பிடுகிறோம். பரமான பிரும்மம் பரப்பிரும்மம். எல்லாவற்றிற்கும் மூலமானது. பரப்பிரும்மம் உலகப்படைப்பிற்கான காலம் வந்ததும் பஹுஸ்யாம், பலவாக ஆவேன் என ஸங்கல்பம் கொண்டது. அதனால் அது அபரப்பிரும்ம மாகவும் ஆனது. அபரமும் இரண்டாகியது. ஒன்று உலகை ஆளும் ஈச்வரத் தன்மை படைத்ததாகவும் மற்றொன்று உலகமாகவும்

ஆனது. ஜகந் நியந்தா ஜகதாத்மகச் ச. உலகமாக மாறிய பிரும்மம் சரம் அசரம் எனப் பிரிந்து ஜீவராசிகள், தாவரம், மண், ஜலம், முதலியதாக ஆகியது. உலகை ஆளும் பிரும்மமும் படைப்பு, காத்தல், அழித்தல், திரோதானம், அனுக்கிரகம் என்ற தனது ஐந்து தொழில்களுக்கேற்ற பிரமன், விஷ்ணு, ருத்திரன், ஈச்வரன், ஸதாசிவன் என ஐந்து உருவங்களைக்கொண்டது. அந்த ஐந்தும் தனித்தனியே தத்தம் தொழில் விரிவிற்கேற்ப எடுத்த உருவங்கள் அனந்தம். இந்த இரு வகைப்பட்ட தோற்றங்களும் பரம்பொருளின் இச்சா சக்தியான ஸங்கல்பத்தால் விளைந்தவை. இச்சா சக்தி பரம்பொருளிடமுள்ள பல சக்திகளுள் ஒன்று. பரப்பிரும்மத்தின் சக்திகள் அனைத்தும் இணைந்த வடிவமே, இந்த ஆயிரம் நாமாக்களால் போற்றப்படும் ஸ்ரீலலிதாதேவி. சக்திக்கும் சக்தியுள்ளவளுக்கும் வேற்றுமை இருப்பதற்கில்லை. அவளே பரம்பொருள். அவளே அபரப்பிரும்மமாகி இத்தனை தோற்றங்களையும் கொண்டவள். அனைத்துமான அவளை அவளது அனைத்து உருவங்களிலும் தியானித்து வழிபடுவதற்காக, வாக்தேவிகள் தேவியின் தோற்றங்கள் அனைத்தையும் இந்த ஆயிரம் நாமங்களில் காட்டியுள்ளார்கள்.

4. இந்த ஸ்தோத்திரம் ஒரு மாலா மந்திரம். இதிலுள்ள ஒவ்வொரு நாமமும் மந்திரம். அடியார்கள் விரும்பும் பலன் அனைத்தையும் அளிக்கக்கூடியது. அந்நதா (உணவளிப்பவள்) என்ற நாமத்தைத் திரும்பத் திரும்ப மனனம் செய்ய உணவு பெருகும். வஸுதா செல்வமளிப்பவள் என மனனம் செய்யச்செல்வம் பெருகும். பயந்தவள் பயாபஹா (பயத்தைப் போக்குபவள்) என்றும், சிறையில் அல்லது வேறு வகையில் கட்டுண்டவன் பந்தமோசநீ (கட்டிலிருந்து விடுவிப்பவள்) என்றும் மனனம் செய்யக் கஷ்டம் விலகும். இப்படி நன்மையை அருளவும், தமைகளை விலக்கவும் எளிதில் பலன் தருகின்ற நாமங்கள் பல. ஒவ்வொன்றும் மந்திரமே.

5. தேவியைக் குறிப்பிடுவதால் நாமங்களில் பெரும்பாலானவை ஸ்திரீலிங்க (பெண்பால்)ச் சொற்களே. மஹா லாவண்ய சேவதி; ஆத்மா போன்ற சில நாமங்கள் இலக்கண விதிப்படி புல்லிங்கம் (ஆண்பால்) ஆகவும், தத், பிரும்ஹ போன்ற நாமங்கள் நபும்ஸகலிங்கம் (அஃறிணை) ஆகவும் அமைந்திருக்கும். ஸம்ஸ்கிருதத்தில் சொற்களை ஒட்டியும் லிங்க அமைப்பு ஏற்படும். மனைவி பெண்பாலாயினும் அவளைக் குறிப்பிட

தாரா:, பத்நீ, கலத்ரம் என மூன்று லிங்கங்களிலும் சொற்கள் உண்டு. தேவியும் பொதுவான ஆண் பெண் என்ற குறிப்பிற்கப்பாற்பட்டவள்.

6. மாந்திரமாக இதனைப் பாராயணம் செய்ய முதலில் ஓம் எனும் பிரணவத்தை உச்சரித்துப் பின் நாமங்களைப் படிப்பது வழக்கம். பூரணமான பிரும்மத்தைக் குறிப்பிடும் பிரணவம், சொற்பிழை, பொருள் பிழை முதலிய குறைகளை நீக்கி நிறைவு தரும்.

7. பரப்பிரும்மத்தை விளக்கிக்கூற முன்வந்த வேதம் நேரிடையாக விளக்கத் தனது இயலாமையைத் தெரிவித்தது. உருவமும், அவயவங்களும் மற்றும் சொல்லுக்கும் மனத்திற்கும் எட்டக்கூடிய தொன்றும் பரப்பிரும்மத்தில் காணாதபடியால் வேதம் அதனை விளக்க முடியவில்லை. நேரிடையாகச் சுட்டி விளக்க முடியாத இடத்தில் விளக்கம் தரக்கூடிய வேறொன்றைக் காட்டி அதன் மூலம் லக்ஷணையால் சுட்டிக்காட்டுவது மரபு. ராமனின் வீட்டின் அடையாளத்தைச் சரியே கூற முடியாத நிலையில் காக்கை அதோ உட்கார்ந்திருக்கிறதல்லவா, அந்த வீடு என்று காட்டுகிறோம். காக்கை அங்கிருந்து பறந்துவிடக்கூடும். வீட்டிற்குக் காக்கை உட்கார்ந்திருப்பது லக்ஷணமாகாது. ஆனாலும் வேறு வழியில் விளக்கமுடியாதபோது இப்படி அதனைச் சார்ந்ததொன்றைக் குறிப்பிட்டு விளக்குவது தடஸ்த லக்ஷணமாகும். இவ்வகையில்தான் வேதம் பிரும்மத்தின் லக்ஷணத்தை விளக்குகிறது.

**யதோ வா இமாநி பூதாநி ஜாயந்தே**
**யேந ஜாதாநி ஜீவந்தி**
**யத் ப்ரயந்த்யபிஸம்விசந்தி**
**தத் விஜிஜ்ஞாஸஸ்வ**
**தத் ப்ரம்ஹேதி** **(தைத்திரீய உபநிஷத்து 3 - 10)**

காணப்படும் உலகம் எதனிடத்தில் தோன்றுகிறதோ, எதனால் வாழ்கிறதோ, எதனை அடைந்து மறைகிறதோ அதாக பிரும்மத்தை அறிந்துகொள். ஒருவனால் படைக்கப்பெறாமல் ஒன்று தோன்றுவதில்லை. மறைவதும் ஒன்றை அடைந்து அடங்க வேண்டும். இவ்விரு நிலைகளிலும் தொடர்ந்திருப்பதே நடுவில் உள்ள நிலையில் தொடரக்கூடும். இப்படி உண்டாதல், இருத்தல் அழிதல் என்ற நிலைகளை அடையாததொன்றே படைத்தல், காத்தல், ஒடுக்கல் என்ற தொழில்களைச் செய்யும். அது பிரும்மம்.

8. இந்த ஸஹஸ்ரநாமமும் அதே வழியில் சென்று பரப்பிரகாசமாக நிற்கும். பரதேவதையை உணர்த்த முடியாமல் விமர்ச நிலையில் அவள் புரியும் ஐந்தொழில்களைக் கொண்டு அவளை விளக்க முன்வந்தது. படைப்பவள் என்ற அறிமுகத்தை ஸ்ரீமாதா என்பதனாலும், காப்பவள், ஒடுங்குபவள் என்ற அறிமுகத்தைப் பின்வருகின்ற ஸ்ரீமஹாராஜ்ஜீ, ஸ்ரீ மத்ஸிம்ஹாஸநேச்வரீ என்ற இரு நாமங்களாலும் விளக்கிப் பின் திரோதானம் அநுக்கிரஹம் என்ற மற்ற இரு நிலைகளில் அவளவு தோற்றத்தை சிதக் நிகுண்ட ஸம்பூதா என்ற நாமம் தொடங்கி ஸ்ரீ லலிதாம்பிகா என்ற கடைசி நாமம் வரை விளக்குகிறது.

* * *

### அதிகாரம் - 6

# தேவியின் ஸ்வரூபம்

(தாபிநீகலை 1 - 100 நாமங்கள்)

ओं श्रीमाता श्रीमहाराज्ञी श्रीमत्सिंहासनेश्वरी ।

**ஓம் ஸ்ரீமாதா ஸ்ரீமஹாராஜ்ஞ .மத்ஸிம்ஹாஸநேச்வரீ.**

### 1. ஸ்ரீமாதா - சிறப்புமிக்க அன்னை.

1 - 1. கோடிக்கணக்கான சக்திமிக்க நாமங்களிலிருந்து வாக்தேவதைகள் தேவியின் பெருமையை எளிதில் விளக்கவல்ல நாமங்களைத் தொகுத்துச்சொல்ல முற்பட்டார்கள். முதலில் கூறச் சிறந்த நாமத்தை அவைகளிலிருந்தும் தேர்ந்தெடுத்தார்கள். அனைத்து உலகத்திற்கும் தாயான தேவி தன் வாக்குசக்தியின் அம்சமாகத் தங்களை ஈன்றாள். உலகிற்கு வாக்குசக்தி அளிக்கும் பெருமையைத் தங்களுக்குத் தந்தாள். தற்போது தனது நாமங்களைத் தொகுத்தளிக்கும் பெரும்பேற்றினையும் தந்துள்ளாள். அத்தகைய தாயின் கருணை எல்லாவற்றிலும் சிறந்ததாக முதலில் வாக்தேவிகளின் நினைவில் மிதந்தது. கஷ்டம் வரும்போது நம்மை அறியாமல் முதலில் வாயிலிருந்து தானே கிளம்புவது அம்மா என்ற சொல். தாயை முதலில் நினைப்பதும் வணங்குவதும் புண்ணியம். உலகனைத்தையும் ஈன்ற அவளைத் தாயாகக் கொள்வது மறுபடி மற்றொரு தாயின் வயிற்றினுள்செல்வதைத் தடுக்கும். நாம் உதவி வேண்டாத நிலையிலும், உதவி தேவை என நினைக்கவோ கூறவோ இயலாத நேரத்திலும், நமக்கு உதவி தேவை என்பதைத் தானே உணர்ந்து வலியவந்து உதவியவர்கள் நாம் பல பிறப்புகளில் தாயாகக் கொண்டவர்கள். வயிற்றில் கருவாகத் தங்கிய நிலையிலிருந்து வெளியேறும்வரை, மரணம் ஈறாகத் தரவல்ல சல்லியம் (கூர்மையான ஆயுத முனை) போன்று அந்த சிசு பல வாதனைகளை விளைவித்தபோதும் அதனைக் காப்பாற்றி அதன் நன்மைக்காகத்தன் சுகமனைத்தையும் துறந்து, கருணையெனும் மாபெரும் தெய்வீக உணர்ச்சியை இயற்கையாகப் பெற்றுச்சிசுவிற்குப் பலவகையிலும் உதவியவர்கள். அந்தக் கருணையாக, தாய் உணர்ச்சியாக நின்று உதவுபவளான்தாலே சிறப்புமிக்க தாயாகிறாள் தேவி. உலகில் உள்ள தாய்கள் தன்னிஷ்ப்படி மகனையோ, மகளையோ பெறுவதற்கோ, தான் பெறப்போவது இப்படித்தான் இருக்க வேண்டும் என்று தீர்மானிப்பதற்கோ, வேறு வகையிலோ சுதந்திரம் இல்லாதவர்கள். உலகின் அன்னையான

இவளோ தன்னிஷ்டப்படி படைக்கவோ வாழவைக்கவோ சுதந்திரம் பெற்றவளானதால் சிறப்புமிக்கதாய்.

1 - 2. சீரிய சிங்காதனத்தில் அமர்ந்து நாமங்களைக் கூறத் தம்மைப் பணித்த தாயை தாய் என முதலில் அறிமுகம் செய்ய நினைத்த வாக்தேவிகள் ஸ்ரீமாதா என்று கூறுகிறார்கள். சிறப்பு மிக்கவர்களை ஸ்ரீ என்ற சிறப்புச் சொல் சேர்த்துக்குறிப்பிடுவது வழக்கம். ஸ்ரீ என்பது முதலில் குறிப்பிடத்தக்க மங்களச் சொல்லும் கூட.

1 - 3. தேவியின் மந்திரத்தை வித்யை எனவும் அவள் வசிக்கும் நகரத்தை நகரம் புரம் எனவும் அவளது சக்கிரத்தை சக்கிரம் எனவும் குறிப்பிடுவர். மற்றவர்களுடையதைப் பற்றிக் குறிப்பிடும்பொழுது இன்னாருடையது என்ற விசேஷணக் குறிப்பு அவசியம் தேவை. இங்கோ ஸ்ரீ வித்யை, ஸ்ரீ நகரம், ஸ்ரீ புரம், ஸ்ரீ சக்கிரம் என்ற சிறப்புமிக்க என்பதைக் குறிப்பிடும் ஸ்ரீ என்ற சொல் சேர்த்துக் குறிப்பிடுவது வழக்கம். அவ்வாறே மற்ற மாதாக்களைக் குறிப்பிடும்போது இன்னாருடைய என்ற விசேஷணம் தேவை. உலகனைத்தையும் ஈன்று காத்து ஒடுக்கும் சக்திகளான ஸரஸ்வதி முதலான தாய்களுக்கும் தாயானபடியால் ஸ்ரீமாதா என்றே குறிப்பிடுகின்றனர்.

1 - 4. தேவி உலகைப் படைக்க எண்ணியதும் தனது சிவாம்சத்திலிருந்து வாமா, ஜெயேஷ்டா, ரௌத்ரீ என்ற மூவரைப் படைத்து அவர்களைப் படைப்பு காப்பு ஒடுக்குதல் என்ற முத்தொழிலும் புரியும் பிரம்மா விஷ்ணு ருத்திரர் என்ற ஆதி தேவர்களாக ஆக்கினாள். பின் ஸரஸ்வதீ லக்ஷ்மீ ருத்ராணீ என்ற மூவரைத் தனது சக்தியம்சத்திலிருந்தும் படைத்து பிரும்மா முதலியவர்களது சக்திகளாக்கினாள். ஸரஸ்வதீ முதலிய மூன்று சக்திகளுக்கும் அவள் தாய். ஸ்ரீ: என்ற சொல் லக்ஷ்மீ, ஸரஸ்வதீ, சக்தி என்ற மூன்றையும் குறிக்கும்.

1 - 5. மா என்ற வினைச்சொல் அடக்கிக்கொள்வது, அளவிடுவது, பிரித்துக்கொடுப்பது எனப்பொருள் கொண்டது. சிசுவைக் கருவாகத் தன்னுள் அடக்கிக் கொண்டவள் ஸ்ரீமாதா. மாதா அளப்பவள். (இந்தச்சொல் ஆண்பால்). அளவிடும் கருவி அளக்கப்பெறும் பொருளின் முன்னும் பின்னும் நின்று, அளக்கப்பெறுவது முழுவதையும் அளக்கும். அதனால் அது அளக்கப்பெறுவதைவிடப் பெரிது. தேவி உலகைப் படைக்கு முன்னரும் பின்னரும் உலகமிருக்கும் நிலையிலும் தொடர்ந்து நிற்பவள். அதனால் ஸ்ரீ மாதா, மாதா பிரித்துத் தருபவள். ஸ்ரீ: என்பது வேதங்களைக் குறிக்கும். ருசோ யஜூம்ஷி ஸாமாநி. ஸா ஹி ஸ்ரீ: அம்ருதா ஸதாம். ருக் வேதம், யஜுர் வேதம், ஸாம வேதம் மூன்றும் நல்லோர்களின் அழியாச்

செல்வம் என வேதம் கூறும். பிரமனைப் படைத்து அவரிடம் வேதங்களைப் பகுத்தளித்து உலகிற்கு அளிக்கப் பணிக்கிறாள். அதனால் ஸ்ரீ மாதா வேதங்களைப் பகுத்து அளித்தவள்.

1 – 6. ஸ்ரீ: – விஷம். விஷத்தைக் கழுத்தில் கொண்டதால் ஸ்ரீகண்டன் சிவபெருமான். விஷத்தை அதன் அழிப்புத்தன்மையை வெளிக்காட்ட முடியாதபடி கழுத்தினுள் அடக்கிய உலகின் தந்தை அவர். சிவனின் கழுத்தில் ஸ்ரீ: – விஷம், அழகுப் பொருளாகிறது. காமியில் கழுத்தில் ஸ்ரீ: – செல்வம், விஷமாகிறது. தன் அடியார்களைத் துன்புறுத்தும் கஷ்டங்களாகிற விஷத்தைத் தன்னுள் அடக்கித் தன் அடியார்களிடம் அவைகளின் சக்தி பயன்படாமல் செய்பவள் இந்தத் தாய்.

1 – 7. ஸ்ரீ: என்ற சொல் மேலும் புத்திசக்தி, அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கு புருஷார்த்தங்கள், செல்வம், பெருமை, அழகு, அலங்காரம், கல்வி என்ற பொருள்களையும் தரும். இதனைத்தையும் அருள்பவள் ஸ்ரீ மாதா. (1)

2. ஸ்ரீமஹாராஜ்ஞீ – சிறப்பு மிக்க பேரரசி.

2 – 1. தானே அரசாள்பவள் ராஜ்ஞீ. அவர்களுக்குள் பெரியவள் பேரரசி மஹாராஜ்ஞீ. (அரசனின் மனைவியும் தானே ஆளும் அரசியும் ராஜ்ஞீ தான். ஆனால் பேரரசனின் மனைவி மஹாராஞீ. தானெ ஆள்பவளானால் மஹாராஜ்ஞீ என்று இலக்கணம் பிரித்துக்கூறும்). அவள் அனைத்து உலகத்தையும் ஆள்பவள் என்பதால் சிறப்பு மிக்க மஹாராஜ்ஞீ – ஸ்ரீமஹாராஜ்ஞீ. பரப்ரும்மம் ஸகுண நிலையில் ஏற்கும் இரண்டாவது பணி ஸ்திதி (காத்தல்) ஆகும். அரசன் அல்லது அரசி மக்கள்வாழும் பகுதிகளுக்குச் சென்று நேரிடைத் தொடர்பு கொண்டு அவர்களது துக்கங்களைக் களைந்து ராஜ்யம் முழுவதும் சுற்றி வருவர். அப்போது தாய் தகப்பனைக் கண்டதுபோல் மகிழ்ந்து மஹாராஜா – மஹாராஜ்ஞீ என்று மக்கள் அவர்களை அன்புடன் அழைப்பர். காத்தல் என்ற இரண்டாம் பணியில் தேவி ஒவ்வொருவரது வாழ்வையும் சீரமைத்து நன்மைகளை அளிப்பதால் ஸ்ரீ மஹாராஜ்ஞீ என்று அன்புடன் அழைக்கப்பெறுகிறாள். (2)

3. ஸ்ரீமத் – ஸிம்ஹ – ஆஸன – ஈச்வரீ – சிறந்த சிம்மாசனத்தில் அமர்ந்து உலகை அடக்கி ஆள்பவள்.

3 – 1. நாட்டை அடக்கி ஆள்பவளாகக் கம்பீரமும், நெருங்கமுடியாத தேஜஸும் கொண்டவனாகப் பயம் தரும் ஸிம்ஹாஸனத்தில் அரசன்

வீற்றிருப்பான். அரசன் அமரும் ஆஸனம் ஸிம்ஹாஸனம். ஆஸநேஷு ஸிம்ஹ: - ஆஸனங்களுக்குள்ளே சிங்கம் - பய உணர்ச்சி ஊட்டுவதும் சிறப்புமிக்கதுமான ஸிம்ஹாஸனம். நாட்டைச் சுற்றிவரும் அரசனிடம் கண்ட பரிவும் நெருக்கமும் சிங்காதனத்தில் அமர்ந்திருப்பவனிடம் காண முடியாது. அங்கு மக்களின் விருப்பம் நிறைவேறும். இங்கு அரசனின் விருப்பம்தான் நிறைவேறும். அடக்கி ஒடுக்கும் சக்தி இங்கே ஒளிவிடும். உலகாகிற ஸாம்ராஜ்யத்தையே அடக்கி ஒடுக்குமிடமானதால் ஸ்ரீமத்ஸிம்ஹாஸனம். அரசர்களுடைய அடக்குகின்ற சக்தி கட்டுக்குட்பட்டது. தேவியின் சக்தி கட்டுக்கடங்காதது. ஈசுவரி இவள். இவளது சக்தியில் கோடியில் ஓரம்சம் பெற்றமையாலேயே அரசர்கள் நாட்டை அடக்கி ஆள்கிறார்கள். உலகமாகிற ஸாம்ராஜ்யத்தைத் தன் இஷ்டப்படி அடக்கி ஆளும் சக்திமிக்க ஈசுவரி இவள்.

3 - 2. அரசர்கள் தம்மிடம் பயம் தோன்றுவதற்காகச் சிங்கம் போன்ற அமைப்பை ஆஸனத்தில் கொண்டுள்ளார்கள். இவளுக்கோ துர்க்கை முதலிய தோற்றங்களில் சிங்கமே ஆஸனமும் வாஹனமும் கூட. ஹிம்ஸா (கொடுமை) என்ற சொல் புரண்டு ஸிம்ஹ என்று அமைந்தது. அதனால் உலகைத் தன்னுள் ஒடுக்கிக்கொள்ளும்போது ஹிம்ஸயா - அஸனம் - கொடுமையுடன் தன்னுள் போட்டுக்கொள்வது போன்று தோன்றும். இரவு இருளால் உலகை விழுங்குவது போல் இது தோன்றும். அப்படி ஒடுக்குவதும் கருணையால்தான் என்று இறையனுபவம் பெற்றவர் கூறுவர்.

3 - 3. தேவியின் வழிபாட்டில் நவாவரண பூஜையில் பிந்து ஸ்தானத்தின் மேல் ஐந்து படிகள் உள்ளதான ஸிம்ஹாஸனம் ஒன்றைப் பாவனை செய்து அதன் படிகலில் ஸ்ரீ வித்யாலக்ஷ்மீ, ஸ்ரீலக்ஷ்மீலக்ஷ்மீ, ஸ்ரீமஹாலக்ஷ்மீலக்ஷ்மீ, ஸ்ரீத்ரிசக்திலக்ஷ்மீ, ஸ்ரீஸர்வஸாம்ராஜ்யலக்ஷ்மீ என்ற ஐந்து லக்ஷ்மீ தேவதைகளை வணங்கிப்பின்னர் தேவியை வழிபடுவது முறை. தேவி அமரும் ஸிம்ஹாஸனம் இந்த ஐந்து லக்ஷ்மி (ஸ்ரீ) களுடன் கூடினதால் ஸ்ரீமத் ஸிம்ஹாஸனம் ஆகிறது. அதன்மேல் அமர்ந்த ஈசுவரி ஸ்ரீமத் ஸிம்ஹாஸனேச்வரீ. (9-11-25)

3 - 4. ஸிம்ஹாஸனம் என்ற பெயர் கொண்ட மந்திரங்கள் உண்டு. அவை பிந்துஸ்தானத்தின் நான்கு புறங்களிலும் நடுவிலும் பாவனை செய்ய வேண்டியவை. கிழக்கில் பாலா, சைதன்ய பைரவீ, ஸம்பத்ப்ரதா பைரவீ; தெற்கில் லலிதா, காமேச்வரீ, ரக்தநேத்ரா, ஷட்கூடபைரவீ, அகோர பைரவீ, ஸம்பத்ப்ரதா பைரவீ; மேற்கில் ஸஞ்ஜீவநீ, ம்ருத்யுஞ்ஜயா, அம்ருதஸஞ்ஜீவநீபைரவீ, வஜ்ரேச்வரீ, த்ரிபுர பைரவீ, பயஹாரிணி,

ஸம்பத்ப்ரதா பைரவீ; வடக்கில் டாமரேச்வரீ, பயத்வம்ஸிநீ பைரவீ, அகோர பைரவீ, ஸம்பத்ப்ரதா பைரவீ; நடுவில் மேல், ப்ரதம ஸுந்தரீ, த்விதீய ஸுந்தரீ, த்ருதீய ஸுந்தரீ, சதுர்த்த ஸுந்தரீ, பஞ்சம சுந்தரீ என்ற தேவதைகளின் மந்திரங்களே ஸிம்ஹாஸனங்கள். இவர்களுக்கும் ஈச்வரி தேவி. (3)

* * *

### அதிகாரம் - 7

## தேவியின் தோற்றம்

### (நா. 4 - 11)

चिदग्निकुण्डसंभूता देवकार्यसमुद्यता ॥ 1 ॥
उद्यद्भानुसहस्राभा चतुर्बाहुसमन्विता ।
रागस्वरूपपाशाढ्या क्रोधाकारांकुशोज्ज्वला ॥ 2 ॥
मनोरूपेक्षुकोदण्डा पञ्चतन्मात्रसायका ।

**சிதக்நிகுண்ட ஸம்ப்பூதா தேவகார்ய ஸமுத்யதா. 1**
**உத்யத்ப்பாநு ஸஹஸ்ராபா சதுர்பாஹு ஸமந்விதா**
**ராகஸ்வரூப பாசாட்ட்யா க்ரோதாகாராங்குசோஜ்ஜ்வலா. 2**
**மநோருபேக்ஷு கோதண்டா பஞ்சதந்மாத்ர ஸாயகா.**

**1. சித் - அக்நி - குண்ட - ஸம்ப்பூதா - ஞானமாகிற யாக குண்டத்திலிருந்து தோன்றியவள்.**

1 - 1. விஷ்ணுவின் மாயையில் தோன்றிய பெண்ணிடம் மதிமயங்கித் தனக்கு இதுகாறும் வெற்றியளித்துவந்த தெய்வ வழிபாட்டைப் பண்டன் மறந்துவிட்டான் (2 - 1). அவனிடம் தோல்வியுற்ற தேவர்கள் அதையே நல்லதருணம் எனக் கருதித் தேவியை வழிபட்டனர். தேவியைக் குறித்து நடத்திய யாகத்தில் தமது உடல் பகுதிகளை அறுத்து முதலில் ஹோமம் செய்தனர். பின்னர் தங்களையே ஹோமம் செய்யத் தொடங்கியதும் தேவி அக்கினி குண்டத்திலிருந்தும் வெளிப்பட்டாள். அகந்தையையும் மமதையையும் இழந்து தான் என்ற உணர்வையே தேவிக்கு அர்ப்பணம் செய்த அக்னி குண்டம் சிதக்னி குண்டம். அந்த அக்கினி ஞானாக்கினி. கஷ்டத்தைத் தரவல்ல வினைகளை அந்த ஞானாக்கினி பொசுக்கிவிடுகிறது. ஞானாக்நி: ஸர்வகர்மாணி பஸ்மஸாத் குருதே அர்ஜுன

(ஓ அர்ஜுனா! ஞானமெனும் தீ எல்லா வினைகளையும் சாம்பலாக்கி விடுகிறது) என்று கீதையில் (4 - 37) கண்ணன் உபதேசித்தார். இடையூறுகளாக நின்ற வினைகளின் தொடர்பு அகன்றதும் கர்ம பாசம் நீங்கி இறையனுபவம் உடன் கிடைக்கிறது. மமதைக்கும் அகந்தைக்கும் காரணமாக நிற்கின்ற ஸ்தூல - ஸூக்ஷ்ம - காரண சரீரத்தொடர்பு கொண்ட பொய்யான நான் என்ற உணர்வையே தேவர்கள் ஹோமம் செய்திட, உண்மையான நான் ஆகிய தேவி தோன்றினாள்.

1 - 2. தேவி வழிபாட்டில் ரஹோயாகம் என்ற முறை உண்டு. தானே விறகுகளின்றி எரியும் ஞானமெனும் தீயை வாஸனைகளாகிற விறகு கொண்டு பெருக்கி அது கனிந்து நிற்கின்ற போது புண்யம், பாபம், செயல்கள், எண்ணங்கள், தர்மங்கள், அனைத்தையும் அதில் ஆஹூதி செய்து ஆத்மாவைப் புடமிட்ட ஒளிவடிவினனாக ஆக்குவது ரஹோயாகமாகும். (பா-21-1-2) அப்படிப் புடமிட்ட தூய ஆத்ம சக்தியாக வெளிப்படுபவள் தேவி. (4)

**2. தேவ - கார்ய - ஸமுத்யதா - தேவர்களின் பணிக்காக முனைந்தவள்.**

2 - 1. பண்டாஸுரன் விளைவித்த துன்பங்கலிலிருந்தும் தேவர்கள் விடுவிப்பதே இந்த தோற்றத்தில் தேவி ஏற்றுக்கொண்ட பணி. அஜ்ஞானத்தால் கட்டுண்ட ஜீவன் பண்டன். அறியாமையானது தன்னலம் பேணுவதில் முனைகின்றபோது அஸுரவடிவம் எடுக்கிறது. புலன்களின் தெய்விகத் தன்மையை இது மறைத்துவிடுகிறது. ஒவ்வொரு பொறிக்கும் ஒரு தேவதை அதிபதி. கண்களுக்கு ஸூர்யன், வாக்கிற்கு அக்னி, நாக்கிற்கு வருணன், மூக்கிற்கு அச்விநீ தேவதைகள், காதுகளுக்குத் திக்குதேவதைகள், தோலுக்கு வாயு, கைகளுக்கு இந்திரன், கால்களுக்கு விஷ்ணு, மனத்திற்குச் சந்திரன் என. இவ்வாறு ஒவ்வொரு பொறிக்கும், மனத்திற்கும் அதிபதியான தேவர்கள் அறியாமைக்கு ஆட்பட்ட ஜீவனது தவறான போக்கால் தத்தம் தெய்விகத்தன்மையை காட்ட முடியாதபடி துன்புறுத்தப்படுகின்றனர். அஜ்ஞானத்தை அவித்து தேவர்களை விடுவித்து அவர்கள் தத்தம் தெய்விகப் பணிகளைச் செய்ய வாழ்ப்பளிப்பதற்காகவே தேவி தோன்றுகின்றாள். (5)

**3. உத்யத் - பானு - ஸஹஸ்ர - ஆபா - உதிக்கும் கதிரவனுக்கு ஒப்பானவள்.**

3 - 1. பிரகாசமாக - பிரும்மமாக - பரம்பொருளாகத் தநித்திருந்த தேவி லீலையாகத் தன்னிடம் சலனத்தை ஏற்படுத்திக் கொள்கிறாள்.

எவராலும் கண்டுகொள்ளத் தகாதவாறு விரிந்திருந்த தனது சக்திகளைச் சுருக்கி அடியார்கள் கண்டு கொள்ளத்தக்க உருவத்தைப் பெறுகிறாள். அவள் எடுத்த தோற்றத்தை உதிக்கும் கதிரவனோடு ஒப்பிடுகிறார்கள் வாக்தேவிகள். கதிரவனுக்கு எப்போதும் ஒரே தரத்திலுள்ள பேரொலிதான் இயற்கை நிலை. அந்நிலையில் அவனைப் பார்க்க இயலாது. அதே கதிரவன் காலையில் உதிக்கும்போது மனத்தை ஈர்க்கின்ற செம்மையுடன் ஒளி அடங்கித்தோன்றுகிறான். நமக்கு அப்படி ஒளி அடங்கிப் பார்க்கத்தக்கவனாகக் காட்சிதரும் அதே நேரத்தில் மற்றோரிடத்தில் நடுப்பகல் சூரியனாக - பார்க்க முடியாதவனாகத் தோன்றிக் கொண்டிருப்பான். அப்படித் தன் ஒளிகளில் பலவற்றை மறைத்துக்கொண்டு கண்களுக்கு இதமான செவ்வொளியுடன் சூரியன் தோன்றுவதற்குக் காரணம் நம்மிடம் காட்டுகின்ற கருணைதான். கதிரவன் அவனது இயற்கையான (நடுப்பகலில் நாம் காணும்) ஒளியுடன் அந்த விடிகின்ற வேளையிலும் தோன்றினால் நம் கண்கள் கூசும். அவன் ஒளி நமக்கு இதம் தருவதாக அமையாது. அவன் உதிக்குமுன் இருந்த வேளை இரவு; அயர்வும் ஓய்வும் தரக்கூடியது. அந்தத் தமோகுணம் நிறைந்த இயற்கை இயக்கத்தில் மூழ்கியிருந்தவனுக்கு எண்ணங்கள் முதலில் விழித்தெழுந்தபின் கண்கள் திறக்கின்றன. மனவெழுச்சிக்கேற்பப் புலன் விழிப்பு இன்னமும் ஏற்படாத நேரம் அது. ஆனதால் கதிரவன் தன் ஒளிக்கற்றைகளில் கடுமை நிறைந்தவைகளை மறைத்து இதமான செவ்வொளியைப் பரப்பியவாறே உதிக்கிறான். கோடி சூர்யர்களுக் கொப்பான தன் ஜோதி உருவத்தை நாம் காண இயலாதென்று கருணையால் அடக்கிக் கொண்டு காலையில் உதிக்கும் கதிரவனைப்போல் செவ்வொளி மட்டும் தோன்றத் தேவி வெளிவருகிறாள்.

3 - 2. குணங்கள் ஒவ்வொன்றிற்கும் ஒரு தனி நிறமுண்டு. கருணையின் நிறம் சிகப்பு. ஸௌந்தர்யலஹரியில் கருணா காசித் அருணா (சுலோ. 93) என்று இதைச் சங்கரர் குறிப்பிடுகிறார். சூரியன் கிளம்புமுன் அவனது சாரதியான அருணன் கிளம்புவான். (விடியற் காலையை அருணோதயப் பொழுதாகக் குறிப்பிடுவர்) அருணன் சிகப்பானவன். தேவியாகிற சூரியனுக்கு அவளது கருணைதான் அருணன். கருணையுடன் தோன்றுவதால் மனத்தை ஈர்க்கும் செந்நிறம் கொள்கிறாள்.

3 - 3. சூரியனது (பானு) கிரணங்கள் (ஸஹஸ்ரம்) ஆயிரம். அவனது ஆயிரம் (எண்ணற்ற) கிரணங்களும் சிவந்தவை. தேவியின் செயல் அனைத்திலுமே கருணை மிளிர்கிறது.

3 – 4. பானு என சூரியனுக்கே பெயர். தேவி ஆயிரம் சூரியர்கள் ஒரே சமயத்தில் உதித்தாற்போன்ற பிரகாசம் உள்ளவள். இறைவனது பேரொளியை ஒரே சமயத்தி உதித்த ஆயிரம் சூரியர்களுக்கு ஒப்பானதாகக் கீதை கூறும். திவிஸூர்ய ஸஹஸ்ரஸ்ய பவேத் யுகபத் உத்திதா. (அத்-11, சு-12) (6)

**4. சதுர் - பாஹு - ஸமந்விதா - நான்கு கைகளுடன் கூடியவள்.**

4 – 1. தேவி மூன்று உருவங்களில் தோன்றுகின்றாள். ஒன்று ஸ்தூலம் - பொறிகளாலும் மனத்தாலும் அறியக்கூடியது. கைகள், கால்கள், முகம் முதலியவைகளுடன் கூடியது. வழிபடுபவன் மனிதன். ஆகையால் அவனுக்குப் பிடிப்பு ஏற்படுமாறு மனித உருவத்தில் அமைந்தது. மற்றொன்று ஸூக்ஷ்மம் - மந்திரம், சக்தி வடிவான குண்டலிநீ முதலிய வடிவங்கள் - உள்ளுணர்வால் அறியக்கூடியது. மனத்தால் ஊகிக்கக்கூடியது. மூன்றாவது வாஸனாமய சரீரம் - உள்ளுணர்வால் மட்டும் அறியக்கூடியது. இவைகள் எவை எவை என்பது பின்னர் விளக்கப்பெறும். ஜீவனுக்கும் ஸ்தூலம், ஸூக்ஷ்மம் வாஸனாமயம் என மூன்று சரீரங்கள் உண்டு. ஸ்தூலமும் ஸூக்ஷ்மமும் ஐந்து பூதங்களாலும் ஏற்படக்கூடியன. வாஸனமய சரீரம் முன் வினையால் ஏற்படக்கூடியது. தேவி ஐந்து பூதங்களுக்கும் வினைக்கும் அப்பாற்பட்டவள். அவளது தோற்றத்தை அப்ராகிருத திவ்ய சரீரம் என்பர். ப்ரக்ருதி - இயற்கை. அது பஞ்ச பூதங்களாக அமைந்தது. தேவியின் சரீரம் இயற்கைக்கு அப்பாற்பட்டது. இயற்கைக்கு அப்பாற்பட்ட (அப்ராக்ருத) தேவியின் வடிவம் உற்பத்தி யாவதுமில்லை. அழிவதுமில்லை. அது தோன்றும், நமக்குப்புலப்படும், மறையும், நம் புலனுக்கு அப்பாற்படும்.

4 - 2. அவளது தோற்றத்தின் பொது உருவமைப்பை நான்கு நாமங்களால் (நா. 4 - 7) குறிப்பிட்டுவிட்டுப் பின்னர் நிஜாருணப்ரபாபூர மஜ்ஜத் ப்ரும்ஹாண்ட மண்டலா (நா.12) என்ற நாமத்தைத் தொடர்ந்து ஒவ்வொரு அங்க அமைப்பையும் வர்ணிக்கிறார்கள் வாக்தேவிகள்.

4 - 3. தேவி சதுர்பாஹுஸமந்விதா - நான்கு கைகளுடன் கூடியவள். இரு தோள்களிலிருந்தும் முன்னும் பின்னுமாக பக்கத்திற்கு இரு கைகள் தோன்றுகின்றன. தியானத்திற்காகக்கூறப்பட்ட இரண்டாவதும் நாலாவதுமான சுலோகங்களில் தியானத்திற்காக உருவகப்படுத்தப்பெற்ற உருவம் இது. (4, 2 - 4) இந்த உருவத்தை மனம் தன்னுள் பதித்துக் கொள்ளும் போது கைகளே முதலிலும் முக்கியமாகவும் தோன்றுகின்றன. (7)

**5. ராக - ஸ்வ - ரூப - பாசாட்ட்யா - ஆசை உருவான பாசம் எனும் ஆயுதத்துடன் கூடியவள்.**

5 - 1. தேவியின் கைகளுடன் அவை ஏந்தியுள்ளாயுதங்களும் புலப்படுகின்றன. இடது பின் கையில் பாசம் எனும் ஆயுதத்தைத் தேவி ஏந்தியுள்ளாள். பாசம் - கயிறு. அதன் இரு முனைகளும் தேவியின் கையில் அடங்கியுள்ளன. கயிறு என்பது ஸ்தூல உருவம். அதன் வாஸனாமய சரீரம் ராகம்.

5 - 2. கண், காது முதலிய பொறிகளின் வழியே அவைகளின் மீதமர்ந்து மனம் வெளிச்சென்று பார்க்கப்புடபவையும் கேட்கப்படுபவயையும் மற்றதுமான பல பொருள்களை உணர்ந்து அவற்றின் வடிவமாகி நிற்கிறது. முன் ஏற்பட்ட வாஸனையால் (வாஸனை - இதற்கு முன் இப்படி உணர்ந்த பொருளால் மனத்தில் ஏற்பட்ட பதிவு) அவற்றின் மீது விருப்பும் வெறுப்பும் ஏற்படுகிறது. முன் பல பிறவிகளில் இம்மாதிரி வெளிச்சென்று மனம் பல பொருள்களை நாடியிருக்கிறது. தான் அமைந்திருந்த உடலுக்கேற்ப நாடிய பொருளிலிருந்து சுகத்தையோ துக்கத்தையோ அனுபவித்திருக்கிறது. அப்போது இதனைப் பெற்றால் சுகம் தருபவைகளில் நாட்டமும் (ராகம் - இச்சா), துக்கம் தருபவைகளில் வெறுப்பும் (க்ரோதம் - துவேஷம்) அடி மனத்தில் ஆழ்ந்து வாஸனையாகப்பதிந்திருக்கின்றன. இந்த வாஸனைகளுடன் தோன்றியுள்ளதால் இந்தப் பிறவியிலும் மனமும் புத்தியும் இந்த வாஸனைத் தடங்களில் பந்திந்துதான் இயங்கும். மற்றொன்றிலும் கட்டுப்படாத மனம் இந்த வாஸனைத் தடங்களில் பதிந்து அடங்கி நடக்கிறது. இந்த வாஸனையே ஜீவர்களின் பிறப்பிற்குக் காரணமாக அமைந்துள்ளபடியால் இது காரண சரீரம், வாஸனாமய சரீரம் என இதனைக் கூறுவர். பிறப்பிற்கும், இறப்பிற்கும் காரணமான அவித்யை அஜ்ஞானம் என்பதே இதற்குக் காரணம். இந்த வாஸனாமயமான சரீரம் விருப்பு - வெறுப்பு (ராகம் - த்வேஷம்) என்ற துவந்துவங்களாலானது. ஜீவர்களிடத்தில் அது முன்வினையின் பயனாக அமைகிறது. தேவியிடத்திலோ இச்சா சக்தியும் ஞான சக்தியுமாக அமைகிறது. இதனை வாக்தேவதைகள் இரு நாமங்களால் விளக்குகிறார்கள்.

5 - 3. தேவியின் ராகம் (விருப்பம்) பாச உருவில் வெளியாகிறது. தூரத்திலிருப்பதும் தன் வசப்படாததுமான பொருளைப் பாசமாகிற கயிற்றை எறிந்து வளைத்துத் தன் அருகே இழுத்துக் கொள்வாள் தேவி. ஆசை எனும் கயிற்றின் இரு முனைகலும் நம் கையில் அடங்காதிருந்தால், ஆசைப்படும் பொருளை நாம் வசப்படுத்த முடியாது. ஆசையும்

நிறைவேறாது. அதனால் அது அடங்காது. கயிற்றின் ஒரு முனை பொருளில் உண்டான நாட்டத்தின் விளைவான மனத்தூண்டுதலையும், மற்றொரு முனை அதனை அடைவதற்கான நன்முயற்சியையும் குறிக்கும். தூண்டுதலும் முயற்சியும் பணி வெற்றி பெற உதவும். தூண்டுதல் மட்டும் இருந்தால் ஆசை வளரும். அதற்கு எல்லை இருக்காது. செயலாகப் பரிணமிக்காது. செயலின் விளைவாகப்பெற வேண்டிய இன்பம் கிட்டாது. தேவியின் இச்சாசக்தி இரு முனைகளுமடங்கிய பாசமானதால் ஆசை செயலாகி வெற்றிபெறும். வேறு வகையில் நாட முடியாத தூரத்திலிருப்பதையும் கட்டிக்கொணர்ந்து சேர்க்கும்.

5 - 4. தேவியின் ஆயுதங்கள் நான்கும் அழிப்பனவல்ல; அடக்கி ஆள்பவை. நமது ஆசைகள் அவள் அருளால் நல்வழிக்கானவைகளாக உருவாகி நிறைவேறி, அதனால் மனநிறைவைத் தருகின்றன. வேறு சூழ்நிலையில் தோன்றுகின்ற ஆசை மற்றோர் ஆசைக்கு வித்தாகித் தான்ய விதை போல் பல ஆசைகளைத் தோற்றுவிக்கும். தேவியின் அருளால் நிறைவேறும் ஆசை வறுபட்ட தான்ய விதைபோல் ஆகும். நமது ஆசை அவள் அருளால்தான் நிறைவேறும் என்ற நம்பிக்கை ஏற்பட, மீண்டும் ஆசைப்படக் காரணமாயிருந்த ஸங்கல்பமே தோன்ற இடமில்லை. ஆசைப்படத் தேவையில்லை என்ற உணர்வு வலிவு பெற்று மனத்தை அடக்கிவிடுகிறது.

5 - 5. தானியம் விதையாகி உணவாகக்கூடிய பல தானியங்களைத் தன்னிடமிருந்தே பிறப்பிக்கும். அதனையே வறுத்துவிட்டால் ருசிமிக்க உணவாகும். மறுபடி மற்றும் பல தானியங்களைப் பெருக்கும் விதைத்தன்மையை அது இழந்துவிடும். இறைவனிடம் வைத்த பற்றும், இறைவன் அருளால் நிறைவேறுகின்ற காமமும் கிளைகிளையாக ஆசை வெடிப்பதற்கு இடமளிக்காது. (ந மய்யாவேசித தியாம் காம: - காமாய கல்பதே பர்ஜிதா க்வதிதா தாநா ப்ராயோ பீஜாய நேஷ்யதே - இறைவனிடம் மனம் பதித்துள்ளவர்களுக்கு ஏற்படும் ஆசை மற்றொரு ஆசையைத் தூண்டுவதாக அமையாது. தானியம் வறுக்கப்பட்டாலும் வேக வைக்கப்பட்டாலும் தனது பீஜத்தன்மையை - தன்னைப்போல் மற்றும் பலவற்றைத் தன்னிடமிருந்தே தோற்றுவிக்கும் தன்மையை இழந்துவிடுகிறதல்லவா, (பாகவதம் 10 - 22 - 27) (8)

**6. க்ரோத - ஆகார - அங்குச - உஜ்ஜவலா - குரோதம் உருவெடுத்த அங்குசத்தால் ஒளியுடன் விளங்குபவள்.**

6 - 1 . அங்குசம் - யானையை அடக்க அதன் பாகன் கையில் கொண்டுள்ள துறட்டி, கூரிய முனை கொண்டது. மதம் பிடித்த யானையையும் அடக்கவல்லது. யானை பலமுள்ள மிகப்பெரிய விலங்கு. மதம் பிடித்தால் அதனை அடக்கமுடியாது. அந்த யானையும் இந்த சிறு துறட்டிக்கு அடங்கும். இந்த அங்குசத்தைத் தேவி வலது பின் கையில் தாங்கி நிற்கிறாள்.

6 - 2. அங்குசம் ஆயுதத்தின் ஸ்தூல உருவம். அதன் வாஸனாமய உருவம் குரோதம். தான் நாடிச் சென்றடைந்த பொருள் சுகம் தராமல் துக்கம் தரும்போது மனம் அதனை வெறுக்கும். அந்த வெறுப்பு உணர்ச்சியே குரோதம் ஆகிறது. ஆசை மென்மையைக் காட்டும். அதன் எதிரான வெறுப்புணர்ச்சி கொடுமையைக்காட்டும். வெறுப்புணர்ச்சி வெளியில் அடங்கி உள்ளத்தில் கொந்தளித்தால் குரோதம். அது வாஸனையாக மனத்தில் ஆழ்ந்த தடம் அமைத்துவிடும். (அதுவே பேச்சாலும் செயலாலும் வெளிப்பட்டுவிட்டால் கோபமாகிவிடும். அப்படி வெளியான கோபம் வாஸனையாக ஆழப்பதியாது) குரோதம் - துவேஷம் எனப்படும் வெறுப்பு உணர்ச்சியே, அங்குசம் எனும் ஸ்தூல உருவம் பெற்றுள்ளது. அந்தக் குரோதம் எனும் அங்குசத்தால் நம் ஆணவத்தை அடககுகிறாள். க்ரோதாகார - குரோதமே உருவெடுத்த, அங்குச உஜ்ஜ்வலா - அங்குசத்தால் ஒளியிட்டு விளங்குபவள்.

6 - 3. இந்த அங்குசம் தேவியின் ஞானசக்தியுமாகும். மனம் பொறிகள் வழியே சென்று ஒரு பொருளை அடைந்ததும், அதுவாகிச் சித்தத்துள் அந்தப் பொருளின் அறிவை ஊட்டுகிறது. குடத்தைப்பார்த்ததும் மனம் அனுப்பும் செய்தி நான் குடத்தை அறிகிறேன் என்றறிந்த உணர்ச்சி. இந்தக் குட உருவில் அமைந்த அறிவு ஆகாரஜ்ஞானம் - உருவத்துடன் கூடிய ஞானம். உருவின்றி ஏற்படும் அறிவு - உள்ளறிவு நிராகாரஜ்ஞானமாகும். அந்த அறிவில் இதை அறிகிறேன் என்ற விஷயஜ்ஞானம் இல்லை. விருப்போ வெறுப்போ வாஸனையாக அமையாதிருப்பதற்கு விருப்பு - வெறுப்புக்குட்பட்ட பொருளைப் பற்றிய முழு அறிவு உதவுகிறது. மேலெழுந்தவாரியாக ஒன்றை அறிந்து மனம் அதனை வெறுக்கும்போது அதனைப் பற்றிய விசேஷ ஞானம் மனத்தெளிவைத் தந்து வெறுப்பின் கொடுமையை அடக்கிவிடுகிறது.

6 - 4. எழுந்த கோபத்தை அடக்கச்சிறந்த உபாயமாகப் பொறுமையைக் கடைப்பிடிக்கச்சொல்கிறார் சங்கர பகவத் பாதர். க்ரோதம் து க்ஷமயா த்யஜ கோபத்தைப் பொறுமையால் கைவிடு

(துர்வாஸநாப்ரதீகாரதசகம்) கோபத்தைச் செயலாலும் சொல்லாலும் வெளிக்காட்டும் முன் சற்றுப் பொறுமையுடன் சிந்திக்க அவசாகம் தேவை. பொறுமை இந்த இடைவெளியைத் தரும்போது மனம் கோபத்திற்கான காரணத்தை அசைபோடுகிறது. கோபம் மனத்தின் பிரதிபலிப்பு உணர்ச்சியாகும். அறிவால் அந்தப் பொருள் அத்துணை வெறுக்கத்தக்கதல்ல என்ற உணர்வு ஏற்பட, கோபம் தானே அடங்கி மறைகிறது. அதனால் விரும்பப்படுகின்ற அல்லது வெறுக்கப்படுகின்ற பொருள் பற்றிய ஆகாரஞானம் அங்குசம் போல் விருப்பையும் வெறுப்பையும் அடக்கிச் சரியான வழியில் அழைத்துச்செல்கிறது. குரோதம், ஆகாரஞானம் என்ற இரண்டும், அங்குசமாகி அதனால் ஒளியுடன் விளங்குபவள்.

6 - 5. காமம், குரோதம், லோபம், மோஹம், மதம், மாத்ஸர்யம் என்ற ஆறும் அரிஷட்வர்க்கங்கள் - ஆறு சத்ருக்களின் கூட்டம் என்பர். இவைகளில் காமமும் குரோதமுமே முக்கியமானவை. மற்றவை இவைகளின் பிரதிபலிப்பும் பின் விளைவுகளுமே. காமமும் குரோதமும் எப்பொழுதும் எதிரிகள் அல்ல. நல்ல வழியில் நல்லெண்ணத்தால் ஏற்படும் காமமும் குரோதமும் நமக்கு உதவுகின்ற நண்பர்களே. நல்வழிகளில் காமம் ஈடுபடுத்துகிறது. கெட்ட வழிகளில் செல்வதற்கான எண்ணம் ஏற்படாமல் அவைகளிடத்தில் வெறுப்பை ஏற்படுத்திக் குரோதம் தடுத்தாட்கொள்கிறது. நல்ல வழிகளில் நாட்டத்தையும் கெட்ட வழிகளில் வெறுப்பையும தருகின்ற இச்சை, துவேஷம் என்ற குணங்கள் வாஸனைத் தடங்களாக அமைந்து மனம் அவ்வழி சென்றால் தெய்வீக வாழ்க்கை அமையும். இந்த இரு குணங்களையே தேவி தன் இருகைகளில் பாசமாகவும், அங்குசமாகவும் தாங்கி விளங்குகிறாள்.

6 - 6. எய்பவனின் கருத்துக்கேற்ப ஆயுதம் பணிபுரியும். தேவியின் ஆயுதங்களான இச்சையும் துவேஷமும் தேவிக்கு அடங்கியவை. அவள் கருத்துக்கேற்பப் பணிபுரிபவை. அவளை வழிபடுபவர்களுக்குத் தன்னிலை அளித்து அவர்களுக்குப்பணிபுரியும் ஏவலாளிகளாக இச்சையையும், துவேஷத்தையும் அமைத்துத்தருகிறாள் தேவி. (9)

**7. மநः - ரூப - இக்ஷு - கோதண்டா - மனமாகிற கரும்பு வில்லுடையவள்.**

7 - 1. தேவியின் இடது முன் கையில் கரும்பாகிற வில் உள்ளது. இதன் ஸூக்ஷ்ம உருவம் மனம். பொறிகள் மூலம் வெளிச்சென்ற மனம் தான்கண்ட பொருளைத் தன்னுள் பதித்துக்கொண்டு விரும்பத்தக்கதாயின் அதனை அடையவோ, வெறுக்கத்தக்கதாயின் அதனைத் தவிர்க்கவோ

விழைகிறது. இப்படி விழைதலை ஸங்கல்பம் என்பர். இது மனத்தின் செயல். இது எனக்கு உவந்தது. இதை நான் பெறுவேன் என்ற ஸங்கல்பம் தோன்றும்போதே இது நான் நினைத்தபடி உவந்ததுதானா? உவந்ததாக இல்லாதிருந்தாலோ? இதை நான் பெற வேண்டாமே என்று முன் கொண்ட ஸங்கல்பத்திற்கு எதிரான மாற்றுச் சிந்தனையிலும சிறிது மனம் சுற்றி வரும். இது விகல்பம். இதுவும் மனத்தின் செயலே. இந்த மனம் தேவியின் கையில் வில்லாக அமைந்துள்ளது.

7 - 2. வில் வளைந்து நிமிரக் கூடியது. அப்படி வளைந்து நிமிரும்போது எளிதில் ஒடியாதிருக்க ஈரமற்ற மூங்கில் பட்டையால் அதனை அமைப்பர். தேவியோ இனியதும் ஈரமுள்ளதுமான கரும்பை வில்லாக்கியுள்ளாள். அது எல்லாம் வல்ல அவள் மனத்தின் உருவமாகையில் ஈரமிருந்தும் திடமாக உள்ளது. ஆயுதமாயினும் இனியதாக, இனியதாயினும் ஆயுதமாக உள்ளது. அவள் மனம் கருணை நிரம்பியது. அதனால் ஈரமும் இனிப்பும் அதனை விட்டு அகலாதவை.

7 - 3. உடலை சரீரம் என்பர். ஒவ்வொரு நொடியிலும் தளர்ந்து கலகலத்து மாயக்கூடியது. (சீர்யதே) என்பதுஅதன் இயற்கை. வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம். அவ்வண்ணம் தானே மாய்கின்ற உடலைத் தன் இலட்சிய வாழ்விற்கு உற்ற சாதனமாகப்பயன்படுத்துவது அவனவன் திறத்தைப் பொறுத்தது. வில்லாளி அம்பைத் தனது இலக்கில் செலுத்தித் தன் விருப்பத்தை நிறைவேற்றிக்கொள்வான். இலட்சியம் நிறைவேறுவது அம்பின் மதிப்பால் அல்ல; அதனை இலக்கை நோக்கி எய்தவனின் மனத்திடத்தாலும் செயலாற்றும் வகையாலும் அது நிறைவேறுகிறது. மாய்கின்ற உடலை மாயாத வாழ்விற்குப் பயன்படுமாறு உபயோகப்படுத்தும்போது (சரவத் ஈர்யதே) அம்புபோல் எய்யப்படுகிறது. அந்த அம்பு மனமெனும் வில்லின் திடத்தையும் வளைந்து நிமிரும் வேகத்தையும் எதிர்பார்க்கும். ஆயுதம் கொடும் செயலைத்தான் நிறைவேற்றும் என்ற நியதி இல்லை. இனிய ஈரமுள்ள வில்லில் இருந்துகிளம்புவதால் அம்பின் இலக்கில் விளையும் மாறுதலும் அத்தன்மைகளைப்பிரதிபலிப்பதாக அமையும். (10)

### 8. பஞ்ச - தந்மாத்ர - ஸாயகா - ஐந்து ஸூக்ஷ்ம பூதங்களையே அம்பாகக் கொண்டவள்.

8 - 1. உலகின் ஜடத்தோற்றத்திற்கு மூலமாக அமைந்துள்ள பூதங்கள் ஐந்தும் தன் தனக்கெனத்தனித்த குணங்களைப் பெற்றவை.

ஆகாசம் - சப்தம் (ஒலி); வாயு - ஸ்பர்சம் (தொடும் உணர்ச்சி); அக்நி - ரூபம் (நிறம்); ஜலம் - ரஸம் (சுவை); ப்ருத்வீ - கந்தம் (மணம்) இவை பூதங்களின் ஸ்தூல நிலையில் தனித்து உணரப்பெறுபவை. ஸ்தூல நிலையில் பூதங்கள் ஐந்தும் ஒன்றோடு ஒன்று கலந்துதான் காணப்பெறுகின்றன. மிக ஸூக்ஷ்ம நிலையில் மட்டுமே அவை தனித்திருக்கக்கூடும். அந்நிலை உலகமாகத் தோன்றுவதற்கு முன் மூல ப்ரகிருதியிலிருந்து வெளிப்படும் போதுள்ளது. அந்நிலையில் ஜடமென்றோ சக்தி என்றோ பிரித்தறிய இயலாது. சப்தம் என்ற ஒலியைக் கொண்டே ஆகாசமிருப்பதை உணரக்கூடிய நிலை. மணத்தைக்கொண்டே பிருதிவியை அறியும் நிலை. ஐந்தும் கலந்த பிறகே ஸ்தூலத்தன்மை பெற்றுத் தோற்ற நிலைக்கு வரும். இந்த ஸ்தூலத் தோற்ற நிலைக்கு வராத - பஞ்சீகரணம் (ஐந்து பூதங்களும் ஒன்றோடொன்று கலப்பது) ஆகாத நிலையில் சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம் என்ற ஐந்த பூத குணங்களைக்கொண்டே ஐந்து பூதங்களினிருக்கையை உணர முடிவதால் இந்த பூத குணங்களையே பூத உருவமாகக் கொள்வர். அந்நிலையில், அந்த குணங்களைத் **தந் மாத்ரம்** என்பர்.

8 - 2. இந்த அதிஸூக்ஷ்ம நிலையிலுள்ள குணங்களால் மட்டும் ஊகிக்கக்கூடிய ஐந்து பூதங்களையும் தன் அம்புகளைக வலது முன் கையில் வைத்திருக்கிறாள். இவைகளின் ஸ்தூல உருவம் ஐந்து பூக்கள். அவை தாமரை, செங்கழுநீர், செவ்வல்லி, செவ்வாம்பல், மாம்பூ என்பன. அவைகள் இலக்கை நோக்கிப் பாய்ந்ததும் இலக்கில் விளைகின்ற மாறுதல்களை ஒட்டி ஹர்ஷணம் (மகிழ்விப்பது) ரோசநம் (சுவையூட்டுவது) மோஹனம் (மயக்குவது) சோஷணம் (வற்ற வைப்பது) மாரணம் (மாய்ப்பது) என்ற பெயர்களைத் தாங்கும்.

8 - 3. எய்பவனது கருத்தின்படி, மனம் இயங்கி, அம்புகள் கிளம்பி இலக்கில் உள்ள மாற்றங்களை விளைவிக்கின்றன. ஜீவன்பக்தனானால் தேவியின் அம்புகளுக்கு நல்ல இலக்காகிறான். அதனால் விரும்பத்தக்கசப்த - ஸ்பர்ச - ரூப - ரஸ - கந்தங்கள் என்ற குணங்களின் ஸுகமயமான அனுபவத்தைப் பெறுகிறான். பக்தனின் கருத்தில் தோஷம் இருந்தால் அம்பின் பணிகளும் க்ஷோபணமாகவும் உன்னதனமாகவும் மற்ற வகையிலும் மாறும். (11)

* * *

### அதிகாரம் - 8

# தேவியின் கேசாதி பாதாந்த வர்ணனை

### (நா. 12 - 14)

निजारुणप्रभापूरमज्जद्ब्रह्माण्डमण्डला ॥ 3 ॥
चम्पकाशोकपुन्नागसौगन्धिकलसत्कचा ।
कुरुविन्दमणिश्रेणिकनत्कोटीरमण्डिता ॥ 4 ॥

**நிஜாருணா-ப்ரபா-பூர-மஜ்ஜத்-ப்ரும்ஹாண்டமண்டலா. 3**
**சம்பகாசோக-புந்நாக-ஸௌகந்த்திக-லஸத்கசா**
**குருவிந்த-மணிச்ரேணீ-கநத்-கோடீர-மண்டிதா. 4**

**1. நிஜ-அருண-ப்ரபா-பூர-மஜ்ஜத்-ப்ரும்ஹாண்ட மண்டலா. தனது சிவந்த மேனியில் ஒளி வெள்ளத்தில் உலகை மூழ்க்கிக் கொண்டிருக்கச் செய்பவள்.**

1 - 1. நமது பூ மண்டலம், ஆகாச மண்டலம், நக்ஷத்திர மண்டலம் முதலியன சேர்ந்தது ஒரு பிம்மாண்டம். இந்த பிரும்மாண்டம் போன்ற பலகோடி மண்டலங்கள் கொண்டது பிரும்மாண்ட மண்டலம். இவை அனைத்தும் தேவியால் படைக்கப்பெற்றவை. தேவியின் திருமேனி, செங்கதிர் கொண்ட உதித்த சூர்யன்போல் யாக குண்டத்திலிருந்து தோன்றும்போது, அதன் செவ்வொளி சூர்யனுக்கு முன் படர்கின்ற அருணனது செவ்வொளி போல் எங்கும் படர்கிறது. அனைத்துப் பிரும்மாண்டங்களும் அந்த செவ்வொளியில் மூழ்கிப் பேதமற்ற நிலையில் செம்மையுடன் விளங்குகின்றன. சூரியன் தன் ஒளிமிக்க கிரணங்களை அடக்கிக் கொண்டு விடியற்காலையில் விழித்தெழுந்தவனது கண்கள் கிரகிக்கும் அளவில் இதமான செங்கதிர்களைப் பரப்பி உலகைச்செம்மையில் மூழ்கச் செய்கிறான். தேவியும் அப்படியே தன்னை தியானிப்பவர் அனுபவிப்பதற்கேற்றவாறு தனது எல்லையற்ற கல்யாண குணங்களை எல்லாம் அடக்கித் தனது சுந்தர ரூபத்தின் செம்மையை அனுபவிக்கச் செய்கிறாள். அந்த செம்மை அவளுக்கே உரித்தானது. மற்ற எவரிடமும் காண முடியாது. அதனால் நிஜ - அருண - ப்ரபா பூர்ணமற்றத் (நிஜ -தன்னுடைய, நிஜ என்ற சொல் உண்மை என்ற பொருளில் வழங்கப்பெறுகிறது. எது தன்னுடையதோ அது நிஜம். தன்னுடையதுதான் உண்மையானது. மற்றொன்றின் சேர்க்கையில் பெற்றது பின் மாறுபடக்கூடும். ஆகையால் பொய்யானது. இந்தக் கருத்தை ஒட்டியே நிஜ என்ற சொல் உண்மை என்ற பொருளில் வழங்குகிறது. மஜ்ஜத் - மூழ்கி

நிற்கின்ற. இதுவரை தனித்துப் பிருமாண்டமாகத் தெரிந்தது. தேவியின் செவ்வொளியில் மூழ்கியதும் அந்த ஒளியைத் தவிர வேறொன்றும் தெரியவில்லை. பிரும்மாண்டம் செவ்வொளியில் மூழ்கிவிட்டது.

1 - 2. இப்படிச் செவ்வொளியாகத் தோன்றிய தேவி சிறிது சிறிதாகத்தன் ஸ்தூல உருவைப் புலப்படுத்துகிறாள். தேவதையைப் பாதத்திலிருந்து கேசம் வரை (பாதாதிகேசாந்தம்) வர்ணிப்பதும் மனிதர்களைக் கேசத்திலிருந்து பாதம் வரை (கேசாதி பாதாந்தம்) வர்ணிப்பதும் மரபு. முழுத் தோற்றத்துடன் வெளிப்படுகின்றபோது நம் கண்கள் முதலில் திருவடிகளில் பதியும். அப்போது பாதங்கள் முதல் கேசங்கள் வரை வர்ணிக்க இயலும். அடிமுடி தெரிவிடத்தில் கேசாதி பாதாந்தமாகவோ, பாதாதி கேசாந்தமாகவோ வர்ணிப்பது மரபு. (ஸ்ரீ சங்கரபகவத்பாதர் விஷ்ணுவிற்குப் பாதாதிகேசாந்த ஸ்தோத்திரம் மட்டும் எழுதியவர் சிவனுக்குப் பாதாதிகேசாந்த ஸ்தோத்திரமும் கேசாதி பாதாந்த ஸ்தோத்திரமும் இயற்றியுள்ளார்). இங்கு தேவி யாககுண்டத்தீயிலிருந்து தோன்றுகின்ற காட்சியை வாக்தேவிகள் வர்ணிப்பதால் கேசாதி பாதாந்தமாக ஸ்தோத்திரம் அமைகிறது. (12)

**2. சம்பக - அசோக - புந்நாக - ஸௌகந்த்திக - லஸத் - கசா. சம்பகம், அசோகம், புன்னை, செங்கழுநீர் இவைகளின் பூக்களால் அழகு பெற்ற கூந்தலுள்ளவள்.**

2 - 1. அக்நி குண்டத்திலிருந்து கிளம்புகின்ற தேவியின் திருமேனியில் முதலில் கண்கள் படுவது பூக்கள் சூடிய கூந்தலின் அழகு. பூக்களால் கூந்தல் அழகு பெறுகிறது. கூந்தலழகுடன் கூடிய பூக்கள் தாமும் அழகாக விளங்குகின்றன. (லஸத் - விளங்குகிற, விளங்கச் செய்கிற) சிதக்னியானதால் பூக்களில் வாட்டமில்லை. (13)

**3. குருவிந்த - மணி - ச்ரேணி - கநத் - கோடீர - மண்டிதா - சிவப்பு ரத்தினங்களின் வரிசைகளால் ஒளி வீசுகின்ற கிரீடத்தை அணிந்தவள்.**

3 - 1. குருவிந்தம் என்பது தாமரை நிறம் கொண்ட சிவப்பு ரத்தினம். இதைத்தரிப்பதால் ஆசைகள் நிறைவேறும்; நல்ல விஷயங்களில் பற்று ஏற்படும். வாழ்க்கை முன்னேறும்; மங்களம் பெருகும்; இறைவனிடம் பக்தியும் திடப்படும். இதனை நினைப்பதாலும் இந்த சிறப்புகள் உண்டாகும். தேவியின் சிரசில் அமைந்திருக்கும் கிரீடம் கோடீரம் என்ற வகையைச் சேர்ந்தது. (கூந்தல் அழகும் அதன் புஷ்பாலங்காரமும் மறையாதபடி இது

அமைந்து இருக்கும். பெண் தரிப்பதற்காக இந்த அமைப்பு. இதனை மகுடம், முகுடம், கிரீடம் என்பர்) இந்தத் தலையணி குரிவந்தச் சிவப்புக் கற்களால் ஆனது. தேவியின் மேனிச்செம்மைக் கேற்றவாறு தாமரைபோல் சிவந்த ரத்தினங்கள் இதனை அலங்கரிக்கின்றன. (14)

**(நா. 15 16)**

अष्टमीचन्द्र [1] विभ्राजदलिकस्थलशोभिता ।
मुखचन्द्रकलङ्काभमृगनाभिविशेषका ॥ 5 ॥

**அஷ்டமீ சந்த்ர[1] விப்ப்ராஜதளிகஸ்த்ல சோபிதா.**
**முகசந்த்ர களங்காப ம்ருகநாபி விசேஷகா. 5**

**4. அஷ்டமீ - சந்த்ர - விப்ப்ராஜத் - அலிக - ஸ்த்தல - சோபிதா. அஷ்டமியில் தோன்றும் சந்திரனைப்போல் விளங்குகின்ற நெற்றியிடத்தால் அழகானவள்.**

4 - 1. கிரீடத்தின் கீழுள்ள நெற்றி, யாககுண்டத்திலிருந்தும் வெளியாகிறது. 15 கலைகளுள்ள சந்திரன் சுக்லபக்ஷத்து அஷ்டமியன்று எட்டாவது கலை நிரம்பப் பெறுவான்; கிருஷ்ணபக்ஷத்து அஷ்டமியன்று எட்டாவது கலை குறையப்பெறுவான். அப்போது அவன் அரை வட்ட வடிவத்துடன் தோற்றமளிப்பான். சந்திரனது அரை வட்ட வடிவம் கவிழ்ந்து அமைந்தது போல் மாசற்ற குளிர்ந்த ஒளியுடன் நெற்றி விளங்குகிறது. பிப்ப்ராஜத் அலிக என்றும் பாடம் உண்டும். பொருள் அதே. (15)

**5. முக - சந்த்ர - கலங்க - ஆப - ம்ருக - நாபி - விசேஷகா. முகமாகிற சந்திரனின் களங்கம் போலத் தோன்றுகின்ற கஸ்தூரிப் பொட்டுடையவள்.**

5 - 1. சந்திரனது மண்டலத்தில் நடுவே அதற்கு அழகு தருகின்ற கறுத்த பகுதியைச் சந்திரன் எனும் தேவனின் வாழ்க்கையில் ஏற்பட்ட களங்கமெனக் கூறுவது மரபு. களங்கம் பாபத்தால் ஏற்படும் மாசு. மான்போல் அது தோன்றுவதால் சந்திரனை ம்ருகாங்கன் என்பர். முயல்போலத் தோன்றுவதாக்கொண்டு சசீ, சசாங்கன் என்பர். தேவியின் நெற்றி அரைவட்ட வடிவமான சந்திரமண்டலம். சந்திரனானால் அதன் நடுவே களங்கம் இருக்குமே! ஆம். அதுதான் தேவியின் நெற்றியில் உள்ள

---

1 विभ्राजदलिक பிப்ப்ராஜதலிக என்று பாடம்

கஸ்தூரிப்பொட்டு. சந்திரனிடத்தில் களங்கம் போல் - தேவியின் செம்மையில் கறுத்த கஸ்தூரி அழகு தருவதாக அமைந்துள்ளது. (16)

(நா 17 - 18)

वदनस्मरमाङ्गल्यगृहतोरणचिल्लिका ।
वक्त्रलक्ष्मीपरीवाहचलन्मीनाभलोचना ॥ 6 ॥

**வதந ஸ்மரமாங்கல்ய க்ருஹ தோரண சில்லிகா.**
**வக்த்ரலக்ஷ்மீ பரீவாஹ சலந்மீநாப லோசநா. 6**

**6. வதந - ஸமர - மாங்கல்ய - க்ருஹ - தோரண - சில்லிகா.**
**முகமாகிற மன்மதனது மங்கள் வீட்டிற்கு முன் தோரணம் போன்று அமைந்த புருவத்துடன் கூடியவள்.**

6 - 1. வீட்டு வாயிலின் மேல் மழை, வெயில் படாதிருக்க எடுத்துக் கட்டியிருப்பார்கள். அதற்குக் தோரணம் என்று பெயர். தேவியின் முகம் காமேசுவரரது மனத்தை ஈர்க்கின்ற அழகு பெற்றது. அதனால் மன்மதன் தனது மங்களச் செயல்களின் அலுவலமாக அதனை அமைத்துக் கொண்டான். நெற்றியின் கீழ் அமைந்து புருவங்கள் முகமாகிய மங்கள கிருஹத்தின் வாசற்புறத்தில் அமைந்து தோரணம் போல் அழகாக விளங்குகின்றன. (17)

**7. வக்த்ர - லக்ஷ்மீ - பரீவாஹ - சலந் - மீந - ஆப- லோசநா.**
**முகத்தின் அழகு வெள்ளத்தில் செல்கின்ற மீன்களையொத்த கண்களுள்ளவள்.**

7 - 1. முகத்தின் அழகு நொடிக்கு நொடி மாறிக்கொண்டே இருக்கிறது. இடையறாது அப்படி மாறுவதால் மெதுவாகச் செல்கின்ற வெள்ளம் போல் அது மனத்தை ஈர்க்கிறது. அந்தஅழகு வெள்ளத்தின் இடையே இரு கண்கள் இங்கும் அங்கும் பாய்ந்தோடுகின்ற இரு மீன்களைப்போல் தோன்றுகின்றன. மீன்கள் தாம் பெற்ற மீன் குட்டிகளைக் கனிவுடன் பார்த்தே அவைகளை வளர்க்கின்றன. ஊட்டி வளர்ப்பதால் ஏற்படும் வளர்ச்சியைவிட இந்தக் கனிந்த பார்வையால் ஏற்படும் வளர்ச்சி அதிகம். அதனால்தான் மதுரை மாநகர்த் தேவியை மீனாக்ஷி என்று அழைப்பர். அழகு வெள்ளத்தில் நீந்துகின்ற தேவியின் கண்களில் மீன்களுக்கு இயல்பான கனிவுப் பார்வையும் கூடி உள்ளது. அந்தப்

பார்வை ஒன்றாலேயே அடியாருடைய அனைத்து விருப்பங்களும் அவர்கள் எதிர்பாராமலேயே நிறைவேறுகின்றன. (18)

(நா. 19 - 20)

नवचम्पकपुष्पाभनासादण्डविराजिता ।
ताराकान्तितिरस्कारिनासाभरणभासुरा ॥ 7 ॥

**நவசம்பக புஷ்பாப நாஸாதண்ட விராஜிதா.**
**தாராகாந்தி திரஸ்காரி நாஸாபரண பாஸுரா. 7**

**8. நவ - சம்பக - புஷ்ப - ஆப - நாஸா - தண்ட - விராஜிதா.**
**அன்றலர்ந்த சம்பகப்பூ போன்ற மூக்குத்தண்டால் அழகுடன் விளங்குபவள்.**

8 - 1. சம்பகப்பூ மென்மையும் அழகும் காந்தியும் உள்ளது. அதன் மென்மையும் அழகும் காந்தியும் கொண்ட மூக்கு மூங்கில் குழல் போன்று நீண்டு மிக அழகாக உள்ளது. (19)

**9. தாரா - காந்தி - திரஸ்காரி - நாஸா - ஆபரண - பாஸுரா.**
**தாரைகளின் ஒளியை மதிப்பற்றதாக்கும் மூக்குத்தியால் ஒளியுடன் விளங்குபவள்.**

9 - 1. ஆகாயத்தில் பளிச்செனத்தோன்றும் ஒளிமிக்க ஜோதி மண்டலங்கள் - தாரைகள். அவைகள் இரண்டு; ஒன்று சுக்கிரன், மற்றொன்று செவ்வாய். தேவியின் மூக்குத்திகள் இரண்டும் தாரைகளின் ஒளியைவிடப் பன்மடங்கு பிரகாசிக்கின்றன. (20)

(நா. 21 - 22)

कदम्बमञ्जरीक्लृप्तकर्णपूरमनोहरा ।
ताटङ्कयुगलीभूततपनोडुपमण्डला ॥ 8 ॥

**கதம்ப - மஞ்சரீ - க்லுப்த - கர்ண - பூர - மனோ - ஹரா.**
**தாடங்க யுகலீபூத தபநோடுப மண்டலா. 8**

**10. கதம்ப - மஞ்ஜரீ - க்லுப்த - கர்ண - பூர - மனோ - ஹரா,**
**கடம்பின் பூங்கொத்தால் அமைந்த செவிப்பூவால் மனத்தை ஈர்ப்பவள்.**

10 - 1. காது மடல்களின் மேல் பூங்கொத்தைச் செருகிக் கொள்வது அழகை அதிகமாக்கும். கடம்பின் பூ இதற்கேற்றது. தேவியின் ஸ்ரீபுரத்தில் சிந்தாமணி கிரஹத்தின் வெளியே கடம்பவனம் உள்ளது. அது கல்பக விருக்ஷ இனத்தைச் சேர்ந்தது. அதிலிருந்தும் கொய்த பூங்கொத்தைத்த ஏவி தன் காது மடல்களின் மேல் அழகாகச் செருகிக்கொணடிருக்கிறாள். (21)

**11. தாடங்க - யுகளி - பூத - தபந - உடுப - மண்டலா.**
**தாமே இரு தடங்கங்களாக அமைந்த ஸுர்ய சந்திர மண்டலங்களுடன் கூடியவள்.**

11 - 1. ஸுர்யனும், சந்திரனும் தேவியின் இரு கண்களாகவும், தாடங்கங்களாகவும், ஸ்தனங்களாகவும் அமையும் பேறு பெற்றவர்கள். தேவிக்கு அணிகள் பூட்டும்போது ஸுர்யனும், சந்திரனும் தாமே இரு காதணிகளாக மாறித் தம்மைத் தேவிக்கு அர்ப்பணம் செய்துகொண்டார்கள். (22)

(நா. 23 - 24)

पद्मरागशिलादर्शपरिभाविकपोलभूः ।
नवविद्रुमबिम्बश्रीन्यक्कारिरदन[1] च्छदा ॥ 9 ॥

**பத்மராக சிலாதர்ச பரிபாவி கபோலபூ:**
**நவவித்ரும பிம்பஸ்ரீ ந்யக்காரி ரதந[1]ச்சதா. 9**

**12. பத்மராக-சிலா-ஆதர்ச-பரிபாவி-கபோல பூ: - பத்மராக ரத்தினக் கண்ணாடியை அவமதிப்பு உள்ளாக்குகின்ற கன்னங்களை உடையவள்.**

12 - 1. தேவியின் கன்னங்கள் மழமழவென மென்மையுடன் மாசற்றுப் பிரதிபிம்பம் தெரியுமாப்போல இருக்கின்றன. ரோம கூபங்கள் கூட புலப்படாதபடி அவளது தனி உரிமையான செம்மையும் படர்ந்து மழமழவென்றிருப்பதால் சிவப்பு ரத்தினக் கண்ணாடி போலுள்ளன. காமேசுவரர் தன் முக அழகை அங்கு காணும் ஆசையில் தன் முகத்தை அவற்றுடன் நெருக்கமாகக் கொள்வர். (பத்மராகம் - சிவப்பு ரத்தினம்). (23)

**13. நவ - வித்ரும - பிம்ப - ஸ்ரீ - ந்யக்காரி - ரதநச் - ச்சதா.**
**புதியதான பவழம், கோவைப்பழம் இவைகளின் ஒளியைப் பழிக்கின்ற உதடுகளையுடையவள்.**

---

1 தசநச்சதா என்று பாடம்.

13 - 1. தேவியின் உதடுகளில் செம்மை இயற்கையாக அமைந்தது. இயற்கையாக் சிவந்த பொருள்களில் நற்பவழமும், கோவைப்பவமும் நிகரற்றவை. அவை தேவியின் உதட்டுச்செம்மையின் முன் மதிப்பிழந்து தலைகுனிகின்றன. தசநச்சதா என்றும் பாடமுண்டு. பொருள் அதே. (24)

(நா. 25 - 26)

शुद्धविद्याङ्कुराकारद्विजपङ्क्तिद्वयोज्ज्वला ।
कर्पूरवीटिकामोदसमाकर्षद्दिगन्तरा[1] ॥ 10 ॥

**சுத்த வித்யாங்குராகார த்விஜபங்க்தி த்வயோஜ்ஜ்வலா.**
**கர்பூர விடிகாமோத ஸமாகர்ஷத் திகந்தரா. 10**

**14. சுத்த - வித்யா - அங்குர - ஆகார - த்விஜ - பங்க்தி - த்வய - உஜ்ஜ்வலா. சுத்த வித்யையின் முளைபோல் அமைந்த இரு பற்களின் வரிசைகளால் ஒளிமிக்க தோற்றமுள்ளவள்.**

14 - 1. தேவியின் பற்களின் வரிசைகள் ஒளிமிக்கதாய் காணப்படுகின்றன. பற்கள் ஒரு தடவை விழுந்து முளைப்பனவாதலால் த்விஜர்கள் - இருபிறப்புள்ளவை. தேவியின் சிறப்பு மிக்க மந்திரம் சுத்த வித்யை. அது ஐம் ஈம் ஔ என்று மூன்று அக்ஷரங்கள் கொண்டது. மெய்யெழுத்துக் கலப்பில்லாததால் சுத்த வித்யை. அந்த அக்ஷரங்கள் மந்திரத்தின் பீஜ (விதை) அக்ஷரங்கள். விதை முளைவிட்டு இரு கூறாகப் பிளந்து மேலும் கீழுமாகப் பிரிந்து காணப்படுவதுபோல் தேவியின் பற்கள் வரிசை காணப்பெறுகிறது.

14 - 2. தேவியின் மற்றொரு சிறந்த மந்திரமான ஷோடசாக்ஷரியும் சுத்த வித்யை எனப்படும். அதற்கு 16 அக்ஷரங்கள். அந்த 16 பீஜாக்ஷரங்களும் முளைத்து இரு கூறாகப் பிளந்து மேலும் கீழுமாகப் பிரிந்து நிற்பது போல்தேவியின் பற்களின் வரிசை காணப்படுகின்றது. நான், அது, இது என்றவாறு பேத புத்தி அற்ற அறிவே சுத்த வித்யை ஆகும். அதுவே முளைத்துப் பிரிந்து பற்களாக விளங்குகிறது.

14 - 3. மரமாக விரியக்கூடியதனைத்தையும் விதை தன்னுள் அடக்கிக்கொண்டிருக்கும். அதுபோல் மந்திரத்தின் பீஜ அக்ஷரங்களும் பல சக்திகளைத் தன்னுள் அடக்கிக் கொண்டிருக்கின்றன. அவை விதை போல்

---

1 समाकर्षि दिगन्तरा ஸமாகர்ஷி திகந்தரா என்ற பாடம்

ஊறி உப்பி முளையாகப் பிளந்து இரு கூறாகப் பிரிந்து காண்பதற்கு நான்கு நிலைகளை அடையவேண்டி இருக்கிறது. மரமாக வேண்டியதனைத்தையும் பிறர் அறியமுடியாதபடி தன்னுள் அடக்கிவைத்திருக்கும் விதைபோல் அக்ஷரங்கள் தொண்டையில் இரந்து வெளிவரும் ஒலியாக மாறத்தக்க ஒலி அலைகளைத் தன்னுள் பிறர் அறியமுடியாத ஸூக்ஷ்ம உருவில் அடக்கிக்கொண்டிருக்கின்றன. குண்டலிநியில் மூலாதாரத்தில் அக்ஷர ஒலி விதை நிலையில் உள்ளது. இது பரா என்ற முதல் நிலை. விதை நீர் கொண்டு உப்பி மலர்வதற்கு ஏற்ற மாறுதல்களை உள்ளடக்கிவெடிப்பதுபோல் அக்ஷர ஒலி நாபியை அடைந்து வெடித்து வெளியேறத் தயாராக இருக்கிறது. இதுவே பச்யந்தீ என்ற இரண்டாம் நிலை. பின்னர் இதயத்தை அடைந்ததும், வெடித்த விதையினுள் முளை பிளந்து வெளியேறக் காத்திருப்பதுபோல் (முளை பிரிந்து உள்ளடங்கியிருப்பது போல்) ஒலியின் முளை பிரிந்து வெளியாகக் காத்திருக்கிறது. இது மத்த்யமா என்ற மூன்றாம் நிலை. இந்த நிலையத் தாண்டித் தொண்டை, அண்ணம் முதலான இடங்களில் மோதிக் கடினமாகப் பிறர் உணரும் வகையில் நன்கு வெளிப்பட்ட ஒலியாக - விதையின் முளை நன்கு வெளிப்பட்டு மரமாக விரிவடையும் வெளித்தோற்றத்தில் வந்திருப்பதுபோல் ஒலி வைகரியாக வெளியாகிறது. இப்படி மந்திரங்களின் அக்ஷர ஒலி விதைகள் முளையாகப் பிரிந்து நிற்பது போல் இரு வரிசைகளில் தேவியின் பற்கள் விளங்குகின்றன. (நா.366 - 377)

14 - 4. நிதி போன்று மிகுந்த கவனத்துடன் மந்திரங்களைக் காப்பாற்ற வேண்டும். அப்படிக் காப்பதற்காகவே மந்திரத்தாலான இரண்டாவது பிறப்பு பெற்றவர்கள் த்விஜர்கள். முதல் பிறப்பு தாயிடமிருந்து. இரண்டாவது பிறப்பு மந்திரங்களை ஏற்பதற்காக உபநயனம், தீக்ஷை முதலானவைகளால் ஏற்பட்டது. அப்படி சுத்த வித்யை முளைவிடத் தகுதி பெற்றமையால் சுத்த வித்யையின் முளைபோல் தூய்மைமிக்கவர்களான துவிஜர்கள் இரு வரிசைகளில் அமர்ந்திருப்பதுபோல் தேவியின் பற்களின் இரு வரிசைகளும் காணப்படுகின்றன.

14 - 5. வித்யை - அறிவு, அது இரண்டு வகை. சுத்த வித்யை, அசுத்த வித்யை என. சுத்தம் தூயது, கலப்பற்றது. அசுத்தம் கலப்புள்ளது. வித்யையில் ஏற்படுகிற கலப்பு என்பது அறிபவன், அறியப்படும் பொருள், அறிவு என்று மூன்றும் சேர்ந்தே துலங்குவது. இது திரிபுடீ என்ற மூன்று

கூறுகள் கொண்டதானதால் அசுத்த வித்யை. இந்த மூன்று பிரிவும் தோன்றாத சுத்தமான உள்ளறிவு சுத்த வித்யை எனப்படும். அறிபவன், அறியப்படும் பொருள், அறிவு என்ற மூன்றின் கலப்பும் தெரியாததால் மிகத் தூய்மையானது. ஸத்வ குணம் மிக்கதாயிருப்பதால், வெண்மையானது. தேவியின் பற்களும் அந்த சுத்த வித்யையின் முளைபோல் தூய்மையுடன் வெள்ளையாகத் தெரிகின்றன.

14 – 6. பற்களின் வேர்ப்பகுதி வெளியே தெரியாதபடி உதடுகளும் எயிறுகளும் மறைந்திருக்கும். வெண்ணிறத்துடன் பளபளத்துக் கொண்டிருக்கின்ற மேற்பகுதி மட்டும் வெளியில் தெரியும். சுத்த வித்யையும் தனது வேராக அமைந்த திரிபுடியை உள்ளே மறைத்துக்கொண்டு கலப்பற்றதும் சார்பற்றதுமான உள்ளறிவு வடிவமான தன்னை மட்டும் வெளிக்காட்டுகின்றது. சுத்த வித்யையின் தூய்மை பிரதிபலிக்கும் பற்களோடு கூடியவள் தேவி. (25)

**15. கர்பூர-வீடிகா-ஆமோத-ஸமாகர்ஷத்-திக்-அந்தரா.**
**கர்ப்பூர வீடிகையின் நறுமணத்தைத் தன் பக்கம் இழுத்துக் கொள்கின்ற திக்குகளின் இடைவெளியுடன் கூடியவள்.**

15 – 1. தாம்பூலத்திற்கு மணமூட்ட பச்சைக் கர்ப்பூரம், ஏலரிசி, கிராம்பு, கஸ்தூரி, குங்குமப்பூ, ஜாதிக்காய், ஜாதிபத்திரி, பாக்கு, வால்மிளகு, சுக்கு, சுண்ணாம்பு, கத்தக்காம்பு இவைகலைத் தக்க அளவில் வெற்றிலைகளில் வைத்து வீடிகா (சிறு சிறு பீடா) ஆகத் தயாரித்தது கர்பூர வீடிகா. அதனைத் தேவி சுவைக்க அதன் நறுமணம் வெளியாகிறது. மணத்தைத் தன் பக்கத்தில் இழுத்துக் கொள்வதற்காக எட்டு திக்குகள் போட்டி போடுகின்றன. ஒருவர் பின் ஒருவராக வருவதனால் கடைசியில் வருபவர்களுக்கு அளவு குறைந்துவிடும் என்ற பயம். அதனால் சற்று இடைவெளி விட்டுத் தேவியை சுற்றி வரிசையாக, கிழக்கு, அதற்கு பக்கத்தில் தென்கிழக்கு என்று மோதாமல் நின்று, நறுமணத்தைத் தன் பக்கத்தில் இழுத்துக் கொள்கின்றன. தேவியைச்சுற்றி திக்பாலர்கள் நின்று வழிபடுகின்றனர் என்பதும் இதன் பொருள். ஸமாகர்ஷி திகந்தரா என்றும் பாடமுண்டு. பொருள் அதுவே. (26)

(நா. 27 - 28)

निजसल्लापमाधुर्यविनिर्भर्त्सितकच्छपी ।
मन्दस्मितप्रभापूरमज्जत्कामेशमानसा ॥ 22 ॥

**நிஜஸல்லாப மாதுர்ய விநிர்ப்பர்த்ஸித கச்சபீ.**
**மந்தஸ்மித ப்ரபாபூர மஜ்ஜத் காமேச மாநஸா.**

**16. நிஜ - ஸல்லாப - மாதுர்ய - விநிப்பர்த்ஸித - கச்சபீ.**
**தனது பேச்சின் இனிமையால் ஸரஸ்வதியின் வீணையை மதிப்பிழக்கச் செய்தவள்.**

16 - 1. ஸரஸ்வதியின் வீணைக்குக் கச்சபீ என்றும் நாரதரின் வீணைக்கு மஹதீ என்றும் விச்வாஸுவின் வீணைக்கு ப்ருஹதீ என்றும் தும்புருவின் வீணைக்கு கலாவதீ என்றும் சிறந்த பெயர்கள் உண்டு. வீணையில் அக்ஷர ஒலி கேட்காது. அந்த அக்ஷரம் பாடப்பெறும் ஸ்வர ஒலி மட்டுமே கேட்கும்.ஸரஸ்வதி நாதசப்தரூபிணியாதலால் அவள் வீணையில் அக்ஷர ஒலியுடன் கூடிய ஸ்வரநாதம் கேட்கும். அந்த அக்ஷரங்களும் கிளி, சிசு இவர்களது மழலை போல், கேட்க மிக மிக இனிதாயிருக்கும். அக்ஷர ஒலி கேட்பதால் ஸரஸ்வதி பாடுவாள். (வீணை வாசிப்பாள் என்றல்ல) என்ற பெருமை உலகில் ஏற்பட்டுவிட்டது. விபஞ்ச்யா காயந்தீ என்ற ஸௌந்தர்யலஹரீ சுலோகத்தின் கருத்துக்குக் கரு இந்த நாமத்தில் உள்ளது. ஸரஸ்வதி வீணையில் பசுபதியின் பெருமையைப்பாடுகிறாள். தேவி அதனால் மகிழ்ந்து அவளைப் பாராட்டுகிறாள். இந்த தேவியின் பாராட்டு வீணையைவிட இனிமையான நாதத்துடன் ஸ்பஷ்டமாக மைந்திருந்ததால், ஸ்பஷ்டமற்ற ஸரஸ்வதியின் வீணை ஒலி மங்கியது. வீணைகானம் மதிப்பை இழந்தது. அதனால் ஸரஸ்வதி வெட்கி வீணையை உறையிட்டு மூடி வைத்துவிட்டாள். (ஸௌந்தர்யலஹரீ சு.66) (27)

**17. மந்த - ஸ்மித - ப்ரபா - பூர - மஜ்ஜத் - காமேச - மாநஸா.**
**புன்சிரிப்பின் ஒளிப்பிரவாஹத்தில் காமேசுவரரின் மனம் மூழ்கிக்கொண்டிருக்கச்செய்தவள்.**

17 - 1. யாக குண்டத்திலிருந்து வெளியாகக் கொண்டிருக்கின்ற தேவியின் புன்சிரிப்புடன் கூடிய முக மண்டலம் தேவர்களுக்குப் புலப்படுகிறது. என்றோ நடந்த இந்தக்காட்சியை மனக்கண்முன் நிறுத்தித் தியானிக்கும் வாக்தேவிகளுக்கு இந்நிகழ்ச்சிக்குப் பின்னர் நிகழ்ந்த மற்றோர் சம்பவமும் தோன்றுகிறது. ஸ்ரீதேவி வெளிவந்ததும் தேவர்கள்

அவளைப் பேரரசியாகப் பட்டம் சூட்ட விழைந்தனர். ஆளப்படுபவர் ஆண் பெண் என்ற இரு பாலருமானதால் ஆண்கள் பட்டம் ஏற்று அரசரானால் அவருக்கு அரசி தேவை. அதனால் பட்டாபிஷேகத்திற்கு முன் அவருக்கு மணம் முடிப்பது வழக்கம். இங்கு தேவி அரசியாகிறாள். அதற்கு முன் அவள் யாரையாவது மணக்க வேண்டும் என பிரும்மா கூறினார். தேவியை மணக்கும் தகுதி பரமேசுவரருக்கே உள்ளது. அவர் திக்கோ யானைத்தோலோ ஆடையாக, பாம்பு அணியாக, சுடலைப்பொடி பூச்சாக, தலை சடையாக நிற்கிறார். மூவுலகிலும் சுந்தரியாக நிற்கும் இவளுக்கு ஏற்றவராக அவர் தம்மை மாற்றிக்கொள்ளவில்லையே எனத் தேவர்கள் ஏங்கும்போது பரமேச்வரர் அவகராக - காமேசுவரராக மாறினார். தேவி தன் கையிலுள்ள மணமாலையைக்க ஆட்டி இந்த மாலை யார் கழுத்தில் விழுகிறதோ, அவரை மணப்பேன் என்று கூறி மாலையை எறிந்ததும், மாலை காமேசுவரரின் கழுத்தில் விழுந்தது. தேவியின் உதட்டில் புன்சிரிப்பு விளையாடியது. அதன் வெள்ளத்தில் காமேசுவரர் மூழ்கினார். அதிலேயே அமிழ்ந்திருக்கும் ஆசை ஒருபுறமும், மற்ற அவயவங்களின் அழகைக் கண்டு களிக்கும் ஆசையில் அதிலிருந்து விடுபடும் ஆசை ஒரு புறமும் இழுக்க, மூழ்குவதும் வெளி வருவதுமாகக் காமேசுவரரின் மனம் ஊசலாடி நின்றது. இந்த நிகழ்ச்சியும் மனக்கண்களில் தோன்றியதால் வாக்தேவிகள் புன்சிரிப்புடன் கூடிய முக மண்டலத்தை வர்ணிக்கப் புகுந்தவர்கள், அதன் பிரவாஹத்தில் தத்தளிக்கும் காமேசுவரரின் மனத்தையும் கண்டு அதனையும சேர்த்தே வர்ணிக்கின்றனர். (28)

(நா. 29 - 30)

अनाकलितसादृश्यचिबुकश्रीविराजिता ।
कामेशबद्धमाङ्गल्यसूत्रशोभितकन्धरा ॥ 12 ॥

**அநாகலித ஸாத்ருச்ய சிபுகஶ்ரீ விராஜிதா.**
**காமேச பத்தத மாங்கல்ய ஸூத்ரசோபித கந்த்தரா.**

**18. அநாகலித - ஸாத்ருச்ய - சிபுக - ஶ்ரீ - விராஜிதா.**
**உவமை கல்பனையளவில் கூடக் காணப்பெறாத**
**முகவாய்க் கட்டையின் அழகால் விளங்குபவள்.**

18 - 1. புரிந்துகொள்ளமுடியாததை உருவகப்படுத்த இது போல் அது இருக்கும் என்று தெரிந்த பொருளைத் தெரியாத பொருளுக்கு உவமையாக்கிக் கொள்வர். உவமையாகக்காட்டும் பொருளை நன்கு

அறிந்திருந்தால்தான் அதனால் உணர்த்தப் பெறுகின்ற பொருளை மனம் உணரமுடியும். சில இடங்களில் உவமையையும் ஊகித்தறிய வேண்டிவரும். அழகான முகம், தங்கநிறம், தாமரையின் மென்மை, நறுமணம், பார்ப்பதில் குளிர்ச்சி இத்தனையும காட்ட, நல்ல உவமைப்பொருள் கிட்டவில்லை. தங்கத்தை மூலப்பொருளாகக்கொண்டு ஒரு தாமரை தோன்றி மணத்துடன் மலர்ந்திருந்தால் எப்படி இருக்குமோ அப்படி முக அழகு என்று தங்கத் தாமரை போல் முகம் என வர்ணிப்பது உண்டு. தங்கத்தாமரை மணக்காது, மலராது. உயிரும், அழகும், மென்மையும் அதில் தெரியாது. ஆனால் கல்பனையால் அப்படி இருந்தால் சேராத மணம் சேர்ந்தால் என்று ஊகிக்கலாம். இப்படிக் கல்பனையில் கூட தேவியின் முகவாய்க்கட்டையின் அழகை மற்றொன்றுடன் உவமையிட்டு வாக்தேவிகலான தம்மாலேயே பேசமுடியவில்லையே என்ற ஏக்கத்தை வாக்தேவிகள் இங்கு காட்டுகின்றனர். (29)

18 - 2. தேவியின் கழுத்திற்கு மேற்பட்ட பகுதி, தேவியின் பஞ்சதசாக்ஷரியின் முதல் கூறாகிய வாக்பவ கூடத்தால் அமைந்தது என ஸ்ரீமத்வாக்பவகூடைகஸ்வரூப முகபங்கஜா என்ற 85ம் நாமம் கூறும். அந்த வாக்பவ கூடமாக அமையப்பெற்ற அங்கங்களின் வர்ணனை சம்பகாசோக புந்நாக ஸௌகந்திகலஸத்கசா என்ற 13ஆவது நாமத்தில் தொடங்கி இத்துடன் முடிவடைகிறது.

**19. காமேச - பத்தத - மாங்கல்ய - ஸூத்ர - சோபித - கந்த்தரா. காமேசுவரர் கட்டிய மங்கள ஸூத்திரத்தால் அழகு ததும்பும் கழுத்துடன் கூடியவள்.**

19 - 1. தேவி என்றும் சுமங்கலி, பரமேசுவரரின் பத்தினி. தேவி தோன்றும்போதெல்லாம் பரமேசுவரர் கட்டியுள்ள மங்கல நாணுடன்தான் தோன்றுவாள். யாககுண்டத்திலிருந்தும் அப்படித்தான் தோன்றினாள். இந்த சம்பவத்தை மனத்திரையில் காணும் வாக்தேவிகளுக்கு மற்றொரு சம்பவமும்கூடத் தோன்றுகிறது. தேவி கணவனாக ஒருவரை வரிக்க மணமாலையை வீசினாள். அது காமேசுவரரின் கழுத்தில் விழுந்தது. தேவர்கள் மிகக் குதூகலத்துடன் அந்த ஆதிதம்பதியருக்கு இங்கொரு திருமணம் நடத்தினர். அதில் காமேசுவரர் மறுபடி மங்கள சூத்திரம் கட்டினார். காலத்தால் வேறுபட்ட இந்த இரு நிகழ்ச்சிகளையும் பிணைத்து வாக்தேவிகள் வர்ணிக்கின்றனர்.

19 - 2. காமனை எரித்தவர் சிவபிரான். அதனால் காமாரியாக இருந்தார். தேவியைக் கண்டவுடன் தனக்குக் காமம் ஏற்பட வேண்டுமென்ற ஆசையால் காமனைப் பிழைக்கவைத்துத் தன்னையே ஆட்டிவைக்க மன்மதனுக்கு அனுமதி தந்தார். காமன் இவருக்கு ஈசனானன் போலும் அல்லது தேவியை மணக்கும் ஆசையில் காமன் நெருங்கிய நண்பனாகி, நீங்கள் எனக்கு ஈசன் எனக் காமனால் வணங்கப்பெற்றமையாலும் காமேசர் ஆகியிருப்பார். இப்படிப் பல கருத்துக்கள் தோன்றுமாப்போல் ஆசையே வடிவாகிய ஈசுவரன் தேவியின் கழுத்தில் மங்கல நாணைப் பூட்டினார்.

19 - 3. காமேசுவரரால் கட்டப்பெற்ற இந்த மங்கள ஸூத்திரம் உலகில் உள்ள அனைவருக்கும் மங்களம் தருவதாக அமைந்தது. அதனால் முதலில் மங்களம் பெற்றவள் மன்மதனின் மனைவி ரதி தேவி. அவள் கழுத்தில் மங்கல நாண் துலங்குவதற்காகவும் தேவி இறைவனுடன் திருமணம் செய்துகொண்டாள். திருமணமானதும் அவள் செய்த முதற்பணி மன்மதனைப் பிழைக்கவைத்ததே. காமனுக்குச் சத்துருவாக - காமாரியாக இருந்த தன் நாதனை அவரது ஈசராகக் காமேசராக மாற்றியவள் அவள். (30)

(நா. 31 - 32)

कनकाङ्गदकेयूरकमनीयभुजान्विता ।
रत्नग्रैवेयचिन्ताकलोलमुक्ताफलान्विता ॥ 13 ॥

**கநகாங்கதகேயூரமநீயபுஜாந்விதா**
**ரத்நக்ரைவேயசிந்தாகலோலமுக்தாயலாந்விதா. 13**

**20. கநக - அங்கத - கேயூர - கமநீய - புஜாந்விதா.**
**தோளிலும், புஜத்திலும் அணிகின்ற அங்கதம் கேயூரம் என்ற தங்கத்தாலான அணிகளால் அழகு நிறைந்து காணப்படும் புஜங்களோடு கூடியவள்.**

20 - 1. தேவியின் நான்கு புஜங்களையும், இரு தோள்களையும் தங்கத்தாலான அணிகள் அலங்கரிக்கின்றன. கேயூரம் - அழகிற்காக அணிவது. அங்கதம் - வீரனாக போர்புரிபவன் தோள்களையும், புஜங்களையும் பாதுகாக்க அணிவது. தேவி அரசியாகத் தோன்றுவதால் இருவகை ஆபரணங்களும் காணப்பெறுகின்றன. (31)

**21. ரத்ந க்ரைவேய சிந்தாக லோல முக்தா பல அந்விதா. ரத்தினத்தால் அமைந்த அட்டிகை, பதக்கம் இவைகளில் தொங்கும் முத்துச்சரங்களுடன் கூடியவள்.**

21 - 1. ரத்தினங்கள் பதித்த அட்டிகை: அதன் நடுவே பதக்கம். அதனை ஒட்டித் தொங்கும் முத்துச்சரங்கள், இந்த ஆபரணங்கள் தேவியின் கழுத்திற்கு அழகு ஊட்டுகின்றன. இந்த மூன்று விதமான ஆபரணங்களும் தேவியைச் சுற்றி நிற்கும் மூன்று வகை அடியார்களைச் சுட்டிக்காட்டுவதுபோல் அமைந்துள்ளன. க்ரைவேயசிந்தாக - கழுத்தளவில் அமைந்த அட்டிகையிலுள்ள பதக்கம். சிலருடைய வாய் தேவியைப் பாடிக்கொண்டிருக்கும். அவர்களது மனம் எங்கோ சென்றிருக்கும். தேவி அவர்களது நினைவில் கழுத்தளவில் நிற்கிறாள். அதனால் அவர்கள் க்ரைவேய சிந்தாகர்கள் - கழுத்தளவில் தேவியைப் பற்றிய நினைவுள்ளவர்கள். லோல - அட்டிகையில் தொங்கி ஆடிக்கொண்டு இருப்பவை. சிலருடைய மனமும் செயலும் வழிபாட்டில் சிறிது நேரமும் வேறெங்கோ சிறிது நேரமும் ஆடிக்கொண்டிருக்கும். அவர்கள் லோலர்கள். முக்தா - முத்து. முக்த - விடுபட்டவர்கள். வெளிச் சிந்தையும் அதன் விளைவான பணிகளும் நீங்கி மனத்தாலும் செயலாலும் வாக்காலும் தேவியிடம் ஈடுபட்டவர்கள்.

21 - 2. இவர்களுள் மூவருக்கும் கிடைக்கும் பலன் ஒரே விதமாய் இருக்காது. க்ரைவேய சிந்தாகனுக்கும், லோலனுக்கும் ஆ- பல சிறிதளவு பலன். முக்தனுக்கு ஆ - பல முழுப்பலன். சிறிது - முழுவதும் என்ற இரு பொருள் தரும் ஆ என்ற சொல் இங்கு இப்படி உதவுகிறது. மனம் பதியாமல் நாமம் கூறி நிற்பவர்கலுக்குப் பலன் சிறிதளவில்; அதிலும் நிலைத்திராமல் சஞ்சலப்படுபவர்களுக்கு அதில் குறைந்த பலன். மனம், வாக்கு, செயல் மூன்றும் ஒன்றி வழிபடுவோர்க்கு முழுப் பலன் என்ற தத்துவத்தையும் இந்த நாமம் உணர்த்துகிறது. ரத்ன க்ரைவேய - சிந்தாக - லோல - முக்த - ஆ- பல - அந்விதா க்ரைவேய சிந்தாகன், லோலன், முக்தன், இவர்களுக்கு ரத்னம் போன்ற பலன் தகுதிக்கேற்ப சிறிதளவும் முழுவதும் கூடச் செய்பவள். (32)

कमेवरप्रेमरत्नमणिप्रतिपणस्तनी ।
नाभ्यालवालरोमालिलताफलकुचद्वयी ॥ 14 ॥

**காமேச்வரப்ரேமரத் நமணிப்ரதிபணஸ்தநீ.**
**நாப்ப்யாலவாலரோமாலிலதாபலகுசத்வயீ. 14**

**22. காமேச்வர - ப்ரேம - ரத்த - மணி - ப்ரதிபண - ஸ்தநீ. காமேச்வரரது அன்பெனும் சிறந்த ரத்தினமணிக்கு ஈட்டுப்பொருளாக்கிய ஸ்தனங்களோடு கூடியவள்.**

22 - 1. காமேச்வரர் தேவிபால் கொண்ட அன்பு அவரது இதயத்தினுள் உயர்ந்த ரத்னமணிபோல் காப்பாற்றப்பட்டு ரஹஸ்யமாக இருந்து வந்தது. இதனைத் தேவி அறிந்தனள். அதைப் பெற விரும்பினள். விலை உயர்ந்த பொருளாயின் அதைப் பெறும் ஆசை மேலிட்டால் அதன் உடைமையாளருக்கு இரட்டிப்பு மதிப்புள்ள பொருள் தந்து பெறுவது உண்டு. தேவிக்குக் காமேசுவரரிடம் உள்ள அன்பு காமேசுவரரது அன்பைவிடச் சற்றும் தாழ்ந்ததல்ல. எனினும் கமேசுவரரது அன்பைப்பெற விரும்பிய தேவி அதனைவிட இரண்டு மடங்கு மதிப்புள்ள தனது அன்பை ஸ்தனங்களாக்கி அதனை ஈட்டுப்பொருளாகத் தந்து அவருக்கு உடைமையாக்கிக் காமேசுவரரது அன்பைப்பெற்றாள். (33)

**23. நாபி - ஆலவால - ரோம - அலி - லதா - பல - குச - த்வயீ. தொப்புள் எனும் பாத்தியிலிருந்து கிளம்பிய உரோம வரிசையாகிற செடியில் கிளைத்த இரு பழங்கள் போன்ற ஸ்தனங்களுள்ளவர்.**

23 - 1. ஆழ்ந்த தொப்புள். அதன்மேல் மெல்லிய உரோம வரிசை, மார்பில் துலங்கும் ஸ்தனங்கள் இம்மூன்றிற்கும் ஆழ்ந்த பாத்தி, கொடி, அதில் பழுத்த இரு கனிகள் இம்மூன்றையும் உவமையாக்கி வர்ணித்திருக்கிறார்கள். (34)

(நா. 35 - 36)

लक्ष्यरोमलताधारतासमुन्नेयमध्यमा ।
स्तनभारदलन्मध्यपट्टबन्धवलित्रया ॥ 15 ॥

**லக்ஷ்யரோமலதாதாரதாஸமுந்நேயமத்த்யமா.**
**ஸ்தநபாரதலன்மத்த்யபட்ட பந்த்தவலித்ரயா. 15**

**24. லக்ஷ்ய - ரோம - லதா - ஆதாரதா - ஸமுந்நேய - மத்த்யமா. உரோம வரிசையாகிற கொடுக்கு ஆதாரமாயிருப்பதை நேரிடையாகப் பார்க்க முடியாததால் ஊகிக்கப் பெறுவதான இடையுள்ளவள்.**

24 - 1. உரோம வரிசை எனும் கொடி புலப்படுகிறது. அது தோன்றிய இடம், வெட்ட வெளியாக இருப்பதால், வேர் பதிந்து உள்ள இடம் இன்னதென்று அறிய முடியவில்லை. ஆதாரமில்லாமல் கொடி தோன்றாது. வளராது. இடை என்றோர் அவயவம் இருக்க வேண்டுமே! அதுவும் புலப்படவில்லை. இடை இங்குதான் இருக்க வேண்டும். ரோம வரிசையின் வேர்ப் பகுதியும் இந்த இடை இருக்குமிடத்தில்தான் மறைந்திருக்க வேண்டும். இவ்வாறு உரோம வரிசை தொடங்குமிடமாக இடையே ஊகித்தறிய வேண்டி வருகிறது. மிகவும் நுண்ணிய இடை உள்ளவள. (35)

**25. ஸ்தன-பார-தலத் - மத்ய - பட்ட- பந்த்த - வலி - த்ரயா. சுமையால் ஒடிந்து கொண்டிருக்கிற இடைக்குப் பட்டை கட்டியது போன்றமைந்துள்ள மூன்று மடிப்புகள் உள்ளவள்.**

25 - 1. தேவியின் வயிற்றில் மூன்று மடிப்புகள் காணப்படுகின்றன. ஒடியும் நிலையில் உள்ளதொன்றைக் காக்க அணவிக்கப்பெறும் தகடுகளாலான பட்டை போன்று அவை உள்ளன. இடை ஒடியக் காரணம் மார்பில் ஸ்தனங்களால் ஏற்பட்ட சுமை மிகுதியும், இடை அதைத்தாங்கும் சக்தியற்று இளைத்திருப்பதும், வயிற்றின் மடிப்புகள் தகட்டுப்பட்டைபோல் அமைந்து இடை ஒடியாமல் காக்கின்றனபோலும். (36)

(நா. 37 - 38)

अरुणारुणकौसुम्भवस्त्रभास्वत्कटीतटी ।
रत्नकिङ्किणिकारम्यरशनादामभूषिता ॥ 16 ॥

**அருணாருணகௌஸும்பவஸ்த்ரபாஸ்வத்கடீதடீ.**
**ரத்நகிங்கிணீகாரம்யரசநாதாமபூஷிதா. 16**

**26. அருண - அருண - கௌஸும்ப - வஸ்த்ர - பாஸ்வத் - கடீ - கடீ. மிகச் சிவந்த பட்டையால் பிரகாசிக்கின்ற அகன்ற இடுப்புள்ளவள்.**

26 - 1. அருண அருண என இரட்டித்த சொல். அதற்கு மிக மிகச் சிவந்த என்றும் பொருள். சூரியனின் தேர்ப்பாகன் அருணன். சூரியன் உதிக்கு முன்னர் இவன் தன் செவ்வொளி பரப்பி சூரியனின் வருகையை உலகிற்கு அறிவிக்கிறான். அந்த அருணனைப்போன்று சிவந்த என்றும் பொருள். பட்டாடைக்குச் செந்நிறமேற்றக் குசும்பாச் செடியின் சாற்றைச் சேர்ப்பர். இப்படிச் செஞ்சாயமேற்றிய ஆடை கௌஸும்ப வஸ்திரம்

எனப்படும். தேவி தனது மிக விரிந்த இடுப்பில் கௌஸும்ப வஸ்திரத்தை உடுத்தியுள்ளாள். (37)

**27. ரத்ந - கிங்கிணிகா - ரம்ய - ரசநா - தாம - பூஷிதா. ரத்னங்களாலான சதங்கைகளால் அழகாயுள்ள அரைஞாணை அணிந்தவள்.**

27 - 1. தங்கத்தாலான அரைஞாணில் சதங்கைகள் தொங்குகின்றன. அவைகளில் ரத்னக்கற்கள் பரல்களாகிக் கிணி கிணி என்று மணி ஒலி பரப்புகின்றன. அதனை இடுப்பில் தேவி அணிந்து உள்ளாள்.

27 - 2. தேவியின் கவுத்துக்குக்கீழ் தொடைக்கு மேற்பட்ட பகுதி தேவியின் பஞ்சதசாக்ஷரி மந்திரத்தின் நடுக்கூறாகிய காமராஜ கூடத்தால் அமைந்ததென கண்டாத : கடிபர்யந்த மத்த்ய கூடஸ்வரூபிணீ எனும் 86ம் நாமம் கூறும். அந்த காமராஜ கூடமாக அமைந்த அவயவங்களின் வர்ணனை காமேச பத்தத்த மாங்கல்ய ஸூத்ர சோபித கந்த்தரா என்ற 30ம் நாமம் தொடங்கி இத்துடன் முடிவடைகிறது. (38)

(நா. 39 - 40)

कामेशज्ञातसौभाग्यमार्दवोरुद्वयान्विता ।
माणिक्यमकुटाकारजानुद्वयविराजिता ॥ 17 ॥

**காமேச ஜ்ஞாத ஸௌபாக்ய மார்தவோருத்வயாந்விதா.**
**மாணிக்ய மகுடாகர ஜாநுத்வய விராஜிதா. 17**

**28. காமேச - ஜ்ஞாத - ஸௌபாக்ய - மார்தவ - ஊரு - த்வய - அந்விதா. காமேச்வரரால் மட்டும் அறியப் பெற்ற அழகும் மென்மையும் உள்ள இரு தொடைகள் உள்ளவள்.**

28 - 1. மென்மையாலும் மழமழப்பாலும் அழகாக இருப்பவை தொடைகள். அவைகளின் அழகையும் மென்மையும் காமேச்வரர் ஒருவர்தான் உணர்வார். அவராலும் சொல்லால் அதனை விவரித்துக் கூற முடியாது. (39)

**29. மாணிக்ய - மகுட - ஆகார - ஜானு - த்வய - விராஜிதா. மாணிக்கத்தொப்பி போன்ற உருவமைப்பு உள்ள இரு முழந்தாள் சில்லுகளுடன் விளங்குபவள்.**

29 - 1. மகுடம் - தொப்பி போன்று தலையின் நடுப்பகுதியை மட்டும் மறைக்கும் தலையணி. தேவியின் முழந்தாள் சில்லுகள் மிகச் சிவந்து கடினமான தொப்பி போன்று காணப்பெறுகின்றன. மாணிக்கக் கல்லைக்கொண்டு ஒரு தொப்பி தயாரித்து அதனை முழங்கால் பகுதியில் அமைத்துள்ளதுபோல் அந்த சில்லுகள் காணப்படுகின்றன. (40)

(நா. 41 - 43)

इन्द्रगोपपरिक्षिप्तस्मरतूणाभजङ्घिका ।
गूढगुल्फा कूर्मपृष्ठजयिष्णुप्रपदान्विता ॥ 18 ॥

**இந்த்ரகோப பரிக்ஷிப்த ஸ்மரதூணாப ஜங்க்கிகா.**
**ஊடகுல்ப்பா கூர்மப்ருஷ்ட்ட ஜயிஷ்ணுப்ரபதாந்விதா. 18**

**30. இந்த்ரகோப - பரிக்ஷிப்த - ஸ்மர - தூண - ஆப - ஜங்க்கிகா. இந்திர கோபமெனும் தம்பலப்பூச்சி மொய்த்துக்கொண்டிருக்கின்ற மன்மதனின் அம்புறாத் தூணிகளை ஒத்த கணைக்கால்களுள்ளவள்.**

30 - 1. கார்காலத்தில் மழை நின்றதும் பூமியிலிருந்து சொந்நிறமுள்ள இந்திரகோப (தம்பல)ப்பூச்சிகள் கிளம்பும். மன்மதனின் அம்புறாத்துணியை இவை மொய்த்துக் கொண்டிருப்பதால் அது மிகச் சிவந்து காணும். தேவியின் இரு முன்னங்கால்களும் செம்மை படர்ந்து இறுகிக் காணப்படுகின்றன. அம்புறாத்துணி போன்று கீழ் சிறுத்து மேல் சிறிது பருத்து இறுக்கத்துடன் தோன்றுவதால் உடலியக்கம் அனைத்தையும் தாங்கிச் சுறுசுறுப்புடன் நடக்க உதவுகின்றன. மன்மதன் தன்னை எரித்த சிவனிடம் வஞ்சம் தீர்க்கத் தருணம் பார்த்து நின்றான். தேவியின் அங்க அமைப்பில் ஈடுபட்டுச்சிவன் தன்னை இழக்கும் நிலையில் இருப்பதைக் கண்டான். அவர் மனத்தை ஈர்க்கும் தேவியின் கணைக்கால்களைத் தன் அம்புறாத் துணியாக்கி விரல்களை அம்புகளாக்கிப் பதுங்கி நிற்கிறான் என்று ஸௌந்தர்யலஹரீ (சு. 83) இந்தக் காட்சியை விவரிக்கிறது. (41)

**31. கூடகுல்ப்பா - (தசைகளால்) மறைந்திருக்கின்ற கணுக்கால்களுள்ளவள்.**

31 - 1. கணுக்கால் எலும்பின் முண்டமைப்பு வெளியே தெரியாவண்ணம் இறுகிய தசைகள் அதனை மூடி நிற்கின்றன. இது வலிவுள்ள அழகிய கணுக்கால்கள் என்பதனைக்குறிக்கின்றது. (42)

**32. கூர்மப்ருஷ்ட - ஜயிஷ்ணு - ப்ரபத - அந்விதா.**

ஆமை முதுகை வெல்லும் புறங்கால்களுடையவள்.

32 - 1. ஆமையின் முதுகு எத்தகைய சுமையையும் தாங்கும். ஆனால் தேவியின் புறங்கால்களுக்கு ஏற்ற சிறந்த உவமைப்பொருளாக இது ஆகாது. இது ஹீநமான (மதிப்பில் தாழ்ந்த) உவமை எனினும், வேறு தக்க உவமை இல்லாதபோது இதனைக் கையாளவேண்டி நேர்ந்துள்ளது. (43)

(நா. 44 - 45)

नखदीधितिसञ्छन्ननमज्जनतमोगुणा ।
पदद्वयप्रभाजालपराकृतसरोरुहा ॥19 ॥

**நகதீதிதி ஸஞ்ச்சந்த நமஜ்ஜந தமோகுணா.**
**பதத்வய ப்ரபாஜால பராக்ருத ஸரோருஹா. 19**

**33. நக - தீதிதி - ஸஞ்ச்சந்த - நமத் - ஜந - தமோகுணா.**
**தன்னை வணங்கும் மக்களின் அறியாமையை மறைக்க வல்ல நககாந்தி உள்ளவள்.**

33 - 1. தேவியின் பாத நகரங்களின் ஒளி அலைகளுக்கு முன் உள்ள தரையில் பரவி நிற்கின்றது. மக்கள் அவளது திருவடிகளில் விழுந்து வழிபடுகின்றனர். வணங்கும்போது தரையைத் தொடும் அவர்களது தலைகளில் குடியிருந்த அறியாமையென்ற இருட்டும் அகன்று மறைகிறது. நமது அறியாமையை அகற்றத் தேவிக்குத் தனி முயற்சி தேவையில்லை. அவளது பாத நக ஒளி பட்டதும் தானே அறியாமை அகன்றுவிடுகிறது. ஒளியிருக்கும் இடத்தில் அதனை எதிர்த்து நிற்க இருட்டால் இயலாது. அது அதன் பலவீனம்.

34. ஒளிமென்மை, அழகிய அமைப்பு, இனிய தோற்றம் முதலிய தனது தனிச்சிறப்புகளால் பெருமதிப்புற்றிருந்த தாமரைகளை தேவியின் திருவடிகள் வென்றுவிட்டன. அன்றலர்ந்து அன்றே வாடும் தாமரை, நித்தியமாக ஒளிக்கற்றைகளை வீசிக்கொண்டு இருக்கும் திருவடிகளைக் கண்டதும், தனது தோல்வியை ஒப்புக்கொண்டு ஓடிவிட்டது. (பராக்ருத - வெல்லப்பட்ட அவமதிக்கப்பட்ட - ஓடிவிடும்படி செய்யப்பட்ட). (45)

(நா. 46 - 48)

**सिञ्जानमणिमञ्जीरमण्डितश्रीपदाम्बुजा ।**
**मरालीमन्दगमना महालावण्यशेवधिः ॥ 20 ॥**

**ஸிஞ்ஜாநமணிமஞ்ஜீரமண்டிதஸ்ரீபதாம்புஜா.**
**மராளீமந்தகமநா மஹாலாவண்யசேவதி: 20**

**35. ஸிஞ்ஜாந - மணி - மஞ்ஜீர - மண்டித - ஸ்ரீ - பத - அம்புஜா. ஒலிக்கின்ற ரத்தினப் பரல்களுள்ள சிலம்புகளால் விளக்கமுறும் திருவடித் தாமரைகளுள்ளவள்.**

35 - 1. தேவி தன் திருவடிகளில் பூட்டிக்கொண்டுள்ள சிலம்புகள் ரத்னப் பரல்கள் கொண்டவை. அவைகள் ஆடும்போது காதிற்கினிய ஒலி கேட்கிறது. தேவி யாககுண்டத்திலிருந்தும் வெளியேறித் தேவர்கள் முன் நடந்து வருகிறாள். அந்தச் சிலம்பொலி கூடிய தேவியின் திருவடிகள் அன்றலர்ந்த தாமரைபோல் தேவர்கள் மனத்தில் நம்பிக்கையையும் இன்பத்தையும் ஏற்படுத்துகின்றன. (46)

**36. மராளீ - மந்த - கமநா. அன்னப்பேடு போல் மிருதுவாக நடப்பவள்.**

36 - 1. அன்னத்தின் நடை மிக மிருதுவானது. அழகானது. ஆண் அன்னத்தின் நடையில் சிறிது கம்பீரமும், ஆண்மையும் தொனிக்கக் கூடுமோ? தேவியின் நடையில் அவைகளைக் காண முடியாதே! அதனால் ஆண் அன்னத்தின் நடையுடன் தேவியின் நடையை ஒப்பிடக்கூடாது. எந்த இனமாயினும் அதில் ஆணின் நடையைவிடப் பெண்ணின் நடை மிருதுவாயிருக்கும். ஆண் அன்னத்தைவிட அன்னப்பேடு இயற்கையாகவே மிக மிக மிருதுவான நடை கொண்டது. ஒப்புநோக்க வேண்டுமாயின் ஓரளவு அன்னப்பேட்டின் நடையுடன் மட்டுமே தேவியின் நடையை ஒப்பிடலாம். யாககுண்டத்திலிருந்து வெளியாகித் தேவர்களை நோக்கி வரும் தேவியின் நடையழகில் தேவர்கள் மனமகிழ்ந்து நிற்கின்றனர். (47)

36 - 2. இடுப்புக்குக்கீழ் உள்ள பகுதி தேவியின் மந்திரத்தின் சக்தி கூடத்தால் அமைந்தது. (நா. 87) 39ம் நாமத்தில் தொடங்கிய சக்தி கூடத்தின் வர்ணனை இத்துடன் முடிவடைகிறது.

**37. மஹா லாவண்ய சேவதி: பேரழகின் பெட்டகமாய் இருப்பவள்.**

37 - 1. நீரோட்டமுள்ள விலை மதிப்பற்ற ரத்தினங்களின் ஒளி அங்கும் இங்கும் மேலும் கீழும் தனித்துப் பாயும். மென்மையும் அழகும் நிரம்பிய மங்கை உடலின் ஒளியும் இப்படித் தனித்து வீசும். இதனை லாவண்யம் என்பர். ஒளிமிக்கப் பேரழகு எனப்பொருள். இத்தகைய சிறப்பும், ஒளியும் மிக்கப் பேரழகைத் தன்னுள் அடக்கிக் காக்கும் பெட்டகம் போன்று மஹா த்ரிபுர சுந்தரி விளங்குகிறாள். (48)

(நா. 49 - 54)

सर्वारुणाऽनवद्याङ्गी सर्वाभरणभूषिता ।
शिवकामेश्वराङ्कस्था शिवा स्वाधीनवल्लभा ॥ 21 ॥

**ஸர்வாருணா(அ) நவத்யாங்கீ ஸர்வாபரண பூஷிதா.**
**சிவகாமேச்வராங்கஸ்த்தா சிவா ஸ்வாதீநவல்லபா. 21**

**38. ஸர்வ - அருணா. எங்கும் சிவப்பானவள்.**

38- 1. அவளது மேனியின் நிறம் சிவப்பு. அவள் தரித்துள்ள மாலை, ஆபரங்கள், மேனியிலிருந்து வெளியாகும் ஒளி இவை அனைத்தும் சிவப்பானவை. பிரும்மாண்ட வரிசைகள் அனைத்திலும் செம்மை பரவச் செய்யும் கனத்த செந்நிறமுள்ளவள். யாக குண்டத்திலிருந்து வெளிவந்த பின்பும் தேவியின மேனி சிவந்தே காண்கிறது. அக்கினியின் நடுவே தோன்றியதால் மட்டும் ஏற்பட்டதல்ல அந்தச் செவ்வொளி. அவளுக்கே உரித்தானதும் என்றும் நிலைத்திருப்பதுமான செவ்வொளி. (49)

**39. அநவத்ய - அங்கீ. குறைகூற முடியாத உருவமைப்புள்ளவள்.**

39 - 1. உடலின் ஏதேனும் ஒரு சிறு பகுதியில் கூடக் குறை காண முடியாதவாறு நிறைவு பொலிந்து விளங்குகின்ற உருவமைப்புள்ளவள். தேவர்களது கண்கள் பாதாதி கேசாந்தமாகவும், கேசாதிபாதாந்தமாகவும் தேவியை மீண்டும் மீண்டும் கண்டுகளிக்கின்றன. ஓரிடத்திலும் குறைகாண முடியாதபடி அந்த திவ்விய அழகு ஆனந்தத்தைத் தருகிறது. (50)

**40. ஸர்வ - ஆபரண - பூஷிதா. எல்லா ஆபரணங்களாலும் அலங்கரிக்கப் பெற்றவள்.**

40 - 1. பொதுவாக உடலில் அழகின்மையோ குறையோ இருந்தாலும் அதனை மறைக்க ஆபரணங்கள் உதவும். குறைகாண முடியாத அழகியிடத்தில் ஆபரணங்கள் மேலும் அழகு ஊட்ட உதவும். ஸர்வாங்ஸுந்தரியான தேவியிடம் மேலும் அழகு பெருக்க இவைகளால் முடியவில்லை. அவளால் அணியப்பெற்றமையால் தாம் அழகு பெற்று அவை விளங்குகின்றன. சூடாமணி முதல் பாதாங்குலீயம் வரை பல ஆபரணங்கள் தேவிக்கு அணிவிக்கப் பெறுவதாக கல்பஸூத்ரம் முதலியவை கூறுகின்றன. (ஆபரணாதி பூஷிதாநி யயா). (51)

* * *

அதிகாரம் - 9

# தேவியின் இருப்பிடம்

**1. சிவ - காமேச்வர - அங்க - ஸ்த்தா. காமேச்வரரான சிவனது மடியில் அமர்ந்திருப்பவள்.**

1 - 1. தேவியை மணப்பதற்காகப் பரமேசுவரன் தோன்றிய போது அவருக்குப் பெயர் காமேச்வரர். காம - மிக அழகாயிருப்பவர்; அத்துடன் ஈச்வரர், எல்லாவற்றையும் தன்னிஷ்டப்படி ஆள்பவர் ஆனதால் காமேச்வரர். உலகைப் படைக்க விரும்பியதால் காமர் - பரப்பிரும்மத்தின் இச்சாசக்தி வடிவினர். சிவன் மங்களமானவர். உலகெல்லாம் தன்பால் ஈர்க்கும் மங்கள வடிவினர். வச் என்ற வினைச்சொல் விரும்புதல், விருப்பப்படி செயலாற்றுதல் என்ற பொருளில் அமைந்தது. அந்தச்சொல் புரண்டு சிவ ஆகியது. அந்தச் சிவனாகிய, காமேச்வரரின் மடியில் வசிப்பவள். (52)

**2. சிவா - சிவமாயிருப்பவள்.**

2 - 1. சிவனது மனைவி சிவா. சிவனைச் சேர்ந்தவள் என்ற பொருளிலும் சிவா, சிவனே இவள் எனும்போதும் சிவா. சிவனுக்கும் இவளுக்கும் வேறுபாடில்லை. மங்கள வடிவினள், மங்களத்தைத் தருபவள், பரப்பிரும்மத்தின் இச்சாசக்தி வடிவினள். மங்களமான மோக்ஷ வடிவினள்.

2 - 2. பரமேச்வரனுக்கு எட்டு வடிவங்கள் உண்டு. அவையாவன - பிருதிவீ, ஜலம், தேஜஸ், வாயு, ஆகாசம், சூரியன், சந்திரன், ஜீவன் என்பன. பூரம்பாம்ஸ்யநலோ அநில: அம்பரம் அஹர்நாதோ ஹிமாம்சு: புமான் இதி ஆபாதி சராசராத்மகம் இதம் யஸ்யைவ மூர்த்யஷ்டகம் பூமி, ஜலம் நெருப்பு, காற்று, ஆகாசம், சூரியன், சந்திரன், புருஷன் என்பனவாகத் தோன்றுவதும் அசைவுள்ளதும் அசைவற்றதுமான இந்த உலகம் எவரது எட்டு வடிவங்களோ - தக்ஷிணாமூர்த்தி அஷ்டகம்) அதில் வாயுவாகிய சிவனுக்கு ஈசானன் எனப்பெயர். அவருக்கு சிவா என்பவள் பத்தினி. அந்த வாயுவின் பத்தினியாக விளங்கிய சிவா. (53)

**3. ஸ்வ - அதீந - வல்லபா. தன்வயப்பட்ட அன்புமிக்க நாயகனையுடையவள்.**

3 - 1. சிவனது சக்தி தேவி. நெருப்பின் சூடு. நெருப்பின்றி அது தோன்றாது. சக்தியால் தனித்திருக்க முடியாது. அது திரவியத்தை (பொருளைச்) சார்ந்துதானிருக்கும். அவ்வாறே தேவியும் சிவனைச் சார்ந்தும் சிவனுக்கு அடங்கியுமிருப்பாள் என நினைக்கத்தோன்றும். ஆனால் அன்புமிக்க நாயகனான சிவன் இவளுக்கு வசப்பட்டவர். தனது இயக்கங்களுக்கு தேவியின் உதவியை எப்போதும் நாடுபவர். சிவ: சக்த்யா யுக்தோ யதி பவதி சக்த: ப்ரவிதும் ந சேத் ஏவம் தேவோ ந கலு குசல: ஸ்பந்திதுமபி (சக்தியுடன் கூடியிருந்தால்தான் சிவனால் செயலாற்ற முடியும். அவ்வாறு இல்லையாயின் அவர் அசைவதற்குக்கூட முடியாதவரல்லவா? ஸௌந்தர்யலஹரீ - சுலோ - 1) அதனால் இவளது வல்லபர் - அன்பு மிக்க கணவர், ஸ்வாதீநர் - இவளது வசப்பட்டவர்.

3 - 2. சிவனைச் சார்ந்து சிவனுக்கு அடங்கித் தேவி நடப்பதும் உண்டு. ஸ்வ - தன்னுடையவர்க்கு, அதீநா - அடங்கி நடப்பவளும், வல்லவா - அன்பு மிகுந்த நாயகியாகவும் உள்ளவள்.

3 - 3. அவருக்கு அடங்கியவளாக இல்லாமல் சுதந்திரமாய் இருப்பவளாயினும் பரமேசுவரரது அன்பு மனைவியாயுமிருக்கலாமே! ஸ்வாதீநா - சுதந்திரமுள்ளவளும், வல்லபா - அன்புக்குகந்தவளாயு மாவாள் தேவி.

3 - 4. மன நிம்மதியின்றி விலகி நிற்கின்ற தம்பதிகள் இவளது நினைவாலும் வழிபாட்டாலும் மீண்டும் கூடுவர். தனது கணவன் இனி தனக்கில் என்ற நிலை ஏற்படினும் தேவியின் வழிபாடு கணவனை மனைவியுடன் சேர்ந்துவிடும். சர்யாதி என்ற அரசனின் பெண் சுகன்யை சியவனர் என்ற முதிய முனிவரை மணக்க நேரிட்டது. சியவனர் தமது முதுமை நீங்க அசுவிநீ தேவர்களை வழிபட்டார். அசுவிநீ தேவர்கள் சியவனரைத் தம்மோடு காயசித்தி தரும் குளத்தில் ஸ்னானம் செய்ய அழைத்துச் சென்றார்கள். ஸ்னானம் செய்து திரும்பிய மூவரும் ஒரே தோற்றத்தினராக வந்தார்கள். எங்களில் ஒருவர் உனது கணவர், நீயே தேர்ந்து எடுத்துக்கொள் என அசுவிநீ தேவர்கள் கூறியதும் மயங்கி நின்ற ஸுகன்யை, தேவியை மனத்தால் வழிபட்டுத் தன் கணவரைத் தனக்கு மீண்டும் அளிக்க வேண்டி, தேவியின் அருளால் சியவனரின் உண்மை உருவம் அறிந்து சியவனரை அழைத்து வந்தாள். (தேவீபாகவதம் 7, 3 - 7). தன் கணவர் யாரென நிச்சயமாக அறியாமல் யாரேனும் ஒருவரை

அவள் அழைத்தால் அசுவினி தேவர்களில் ஒருவரையே கூட அழைக்க நேரிட்டு இருக்கும். அப்போது அவளது பதிவிரதைத் தன்மைக்கு ஊறு நேர்ந்திருக்கும். தேவியின் வழிபாடு இக்குறை நேராமல் பாதுகாத்து அவளுக்குக் கணவனைத் தந்தது. ருக்மிணி கிருஷ்ணனை அடையவும், இந்திராணி இந்திரனை அடையவும் தேவி அருள் புரிந்தாள் என்று புராண வரலாறு.

3 - 5. தேவியின் இருப்பிடத்தைக் குறிப்பிட வந்த வாக்தேவிகள் காமேச்வரரான சிவனின் மடியில் தேவி இருப்பதாகக் கூறி தேவியைத் தாங்குகின்ற சிவனுக்கும் மடியில் அமர்ந்திருக்கின்ற தேவிக்கும் யாதொரு பேதமும் கிடையாது; இருவரும் சிவர்களே என சிவா என்ற நாமத்தால் குறிப்பிட்டு, கணவன் மனைவி நிலையில் தியானித்தாலும் ஒருவருக்கொருவர் அன்பால் கட்டுப்பட்டவர்கள் என்பதை ஸ்வாதீந வல்லபா என்ற நாமத்தால் குறிப்பிட்டனர். சிவனின் மடி தேவியின் முக்கிய இருப்பிடம். அதனால் முதலில் குறிப்பிடப்பெற்றது. (54)

(நா. 55 - 63)

सुमेरुमध्यशृङ्गस्था श्रीमन्नगरनायिका ।
चिन्तामणिगृहान्तस्स्था पञ्चब्रह्मासनस्थिता ॥ 22 ॥
महापद्माटवीसंस्था कदम्बवनवासिनी ।
सुधासागरमध्यस्था कामाक्षी कामदायिनी ॥ 23 ॥

**ஸுமேரு மத்த்ய ச்ருகஸ்த்தா ஸ்ரீமந்நகரநாயிகா.**
**சிந்தாமணி க்ருஹாந்தஸ்ஸ்த்தா பஞ்சப்ரும்ஹாஸநஸ்த்திதா.**
**மஹாபத்மாடவீ ஸம்ஸ்த்தா கதம்பவநவாஸிநீ.**
**ஸுதாஸாகரமத்தயஸ்த்தா காமாக்ஷீ காமதாயிநீ. 23**

**4. ஸுமேரு - மத்த்ய - ச்ருங்கஸ்த்தா**
**ஸுமேரு மலையின் நடு சிகரத்தில் வசிப்பவள்**

4 - 1. ஸுமேரு எனும் தங்கமலை உலகைத் தாங்கும் ஆதாரமாயுள்ளது. ஸ்ரீ சக்க்ரத்தின் நடுவே உள்ள முக்கோணம் போல் மூன்று கொடுமுடிகள் இதற்கு உண்டு. பிரும்மா, விஷ்ணு, ருத்ரர் என்ற மூவரும் அவைகளைத் தமது இருப்பிடங்களாகக் கொண்டுள்ளனர். இந்த மூன்று கொடுமுடிகளுக்கும் நடுவே இவைகளைவிட மிக உயர்ந்ததான நடுக்கொடுமுடியே ஸ்ரீ வித்யா நகரம் எனும் தேவியின் ஸ்ரீ நகரம் அமைந்துள்ள இடம். அங்கு தேவி வசிக்கிறாள். (55)

**5. ஸ்ரீமத் - நகர - நாயிகா. ஸ்ரீ நகரத்தின் நாயகி.**

5- 1. மற்றொரு ஸ்ரீ நகரமும் உண்டு. தேவி தான் படைத்த அனந்தகோடி பிரும்மாண்டங்களுக்கும் வெளியே தனது இருப்பிடம் ஒன்றை அமைத்துள்ளாள். அங்கு பிரும்மாண்டங்கள் அனைத்திற்கும் சக்திதரும் ஸுதா ஸமுத்திரம் - அமிருதக்கடல். அதன் நடுவே ரத்னத்தீவு. அதன் நடுவில் அமைந்த ஸ்ரீ நகரம் ஒன்று உண்டு. அங்கும் வசிப்பவள். ஸ்ரீ நகர அமைப்பு பற்றிய முழு விபரத்தை எளிதில் அறிய ஸ்ரீ துர்வாஸமுனி இயற்றிய ஆர்யாத்விசதீ ஸ்தோத்திரம் உதவும். அதன் சுருக்கம் ஸுதா ஸாகர மத்யஸ்தா என்ற (61) நாமத்தின் குறிப்பில் காணலாம்.

5 - 3. ஸ்ரீ சக்கிரமும் குண்டலினியும் கூட தேவி அமர்ந்திருக்கும் ஸ்ரீ நகரம் ஆகும். ஸ்ரீ சக்கிரத்தின் நாயகியாகவும் குண்டலினியாகவும் விளங்குபவள். (56)

**6. சிந்தா - மணி - க்ருஹ - அந்த: - ஸ்த்தா.**
**சிந்தாமணி கிருஹத்தின் நடுவில் இருப்பவள்.**

6 - 1. மனம் நினைப்பதைத் தந்து அருள்கின்ற சிந்தாமணி எனும் ரத்தினம் ஒன்று தேவர்களிடம் உள்ளது. அத்தகைய கோடிக்கணக்கான சிந்தாமணி ரத்தினங்களைக்கொண்டு அமைந்த மாளிகை சிந்தாமணி கிருஹம். அதனுள் வசிப்பவள்.

6 - 2. மனம் நினைப்பதைத் தந்தருள்கின்ற சக்திமிக்கவையானதால் தேவியினது மந்திராக்ஷரங்கள் சிந்தாமணியைப் போன்றவை. அவைகளையே தன் இருப்பிடமாகக் கொண்டவள் தேவி. சிந்தாமணிபோல் நாடியதை அருளும் தேவியின் மந்திர சக்திகளின் உறைவிடமான மாளிகையில் வசிப்பவள். (57)

**7. பஞ்ச - ப்ரும்ஹ - ஆஸன - ஸ்த்திதா.**
**ஐந்து பிரும்மங்களாலான ஆசனத்தில் இருப்பவள்.**

7 - 1. சிந்தாமணி கிருஹத்தின் நடுவே தேவி அமரும் ஆஸனம் பஞ்சப்ரும்மாஸனம் எனப்படும். ஐந்து பிரும்மங்கள் அந்த ஆஸனமாக அமைந்துள்ளனர். உலகாக மாறுவதற்கான பிரும்மத்தின் இச்சை ஐந்து பிரும்மங்களாக உருவெடுக்கின்றது. பிரும்மத்திலிருந்து தோன்றியவர் களானாலும் அவர்களும் பிரும்மமே. அந்த ஐவர் - பிரும்மா, விஷ்ணு,

ருத்திரர், ஈசுவரர், ஸதாசிவர் எனப்படுவர். முறையே ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம், திரோதானம், அநுக்கிரஹம் என்ற ஐந்து தொழில் புரிபவர்கள். அதில் முதல் நால்வர் தேவி அமர்கின்ற பலகையானார். இதன்மேல் காமேசுவரரின் மடியில் தேவி வீற்றிருக்கிறாள். தென் கிழக்கில் அமைந்த கால் பிரும்மா எனும் பிரும்மம். தென்மேற்கில் விஷ்ணுவும், வடமேற்கில் ருத்திரரும், வடகிழக்கில் ஈசுவரரும் கால்களாக அமைந்துள்ளனர். மேலும் கீழும் காலின் அடிப்பகுதியும் மேற்பகுதியும் போலும் நடுவில் அந்தந்த தேவரின் புருஷ வடிவமும் அவைகளில் காணப்படும்.

7 - 2. ஐவரும் தேவியைத் தியானத்தில் வழிபடுபவர்களாகக் கண்மூடிப் புலன்களை அடக்கி உள்ளத்தில் தேவி வடிவைப் பதித்தவர்களாகத் தேவியின் ஆஸனத்திற்குக் காலாகிப் பலகையாகி அசையாதிருப்பார்கள். இந்த நிலையில் இவர்களைப் பஞ்சப் பிரும்மங்கள் என்பர். பிரும்மத்திலிருந்து தோன்றியதும் மீண்டும் பிரும்மத்துள் ஒன்றியதும் பிரும்மமே. சில சமயங்களில் தேவி இவர்களிடமுள்ள தனது சக்தியைப் பிரித்துத் தன்னுள் அடக்கிக் கொள்வாள். அப்போது அவர்கள் பஞ்சப்ரேதர்கள் எனப்படுவர். அந்தச் சமயத்தில் இந்த ஆஸனம் பஞ்சப்ரேதாஸனம் எனப்படும். பஞ்சப்ரேதாஸநாஸீநா என்ற நாமமும் (நா. 249) பஞ்சப்ரேதமஞ்சாதிசாயிநீ என்ற நாமமும் (நா. 947) இதனை விளக்கும். (58)

**8. மஹா - பத்ம - அடவீ - ஸம்ஸ்த்தா.**
**மஹாபத்மாடவியில் வசிப்பவள்.**

8 - 1. தேவியின் சிந்தாமணி கிருஹத்திற்கும் ஸ்ரீ நகரத்தின் 25 கோட்டைகளுக்கும் இடையே உள்ளது இந்த பெருந்தாமரைக்காடு - மஹாபத்மாடவீ. (9-10-10) தேவி அங்குதங்குவாள். உடலிலுள்ள குண்டலினி சக்திக்கு ஆதாரமான மூலாதாரம் முதல் ஆஜ்ஞை வரை உள்ள ஆறு சக்கிரங்களுக்கு மேல் ஆயிரம் (கணக்கற்ற) இதழ்கள் கொண்ட அகண்ட சக்தி வடிவமான தாமரை பிரும்மரந்திரம் எனும் உச்சிக் குழிக்குக் கீழ் அமைந்து உள்ளது. அங்கும் தங்குபவள்.

8 - 2. மஹாபத்மம் என்று ஒரு சிறந்த யானை இனம் உண்டு. அத்தகைய யானைகள் நிறைந்த காடு கஜாரண்யம் எனப்படும் திருவானைக்கா. அங்கு உறைபவள் அகிலாண்டேச்வரி எனும் திருநாமம் பூண்டவள். (59)

**9. கதம்ப - வர - வாஸிநீ. கடம்புக் காட்டில் வசிப்பவள்.**

9 - 1. தேவி வசிக்கும் சிந்தாமணி கிருஹத்தின் வெளியே ஒரு பெரிய மணி மண்டபம். அதனைச்சுற்றிக் கல்பக விருக்ஷ இனத்தைச் சார்ந்த மரங்களின் காடு. அங்கு வசிப்பவள்.

9 - 2. மதுரையம்பதி கடம்புக் காட்டின் நடுவே அமைந்து இருந்தமையால் கதம்ப வனம் எனப்படும். அதன் நடுவே உறைபவள் ஶ்ரீ மீனாக்ஷி தேவி. (60)

**10. ஸுதா - ஸாகர - மத்யஸ்த்தா.**
**அமிருதக் கடலின் நடுவில் உறைபவள்.**

10 - 1. பல கோடி பிரும்மாண்டங்கள் அமைந்த பெருவெளியைச் சுற்றி பல கோடி யோஜனங்கள் (யோஜனம் என்பது சுமார் 12 கிலோ மீட்டர் தூரமுள்ளது) விஸ்தீர்ணமான இந்த ஸுதாஸாகரம் எனும் அமிருதக் கடல் அமைந்துள்ளது. அதன் நடுவே தேவி வசிக்கும் சிந்தாமணி க்ருஹம் கொண்ட ரத்தினத் தீவு. அந்த ஸுதாஸாகரத்தில் வசிப்பவள்.

10 - 2. தேவியை ஸகுணமாக வழிபடுபவர்கள் முடிவில் அடையுடமிடம் அபாராஜிதா என்பது (இது சிவனை வழிபடுபவர் அடையும் கைலாஸம் போலும், விஷ்ணுவை வழிபடுபவர் அடையும் வைகுண்டம் போலும் ஆகும்.) அங்கு சென்றடைந்தவர் மீண்டும் ஜனன மரணமுள்ள இவ்வுலக வாழ்க்கைக்குத்திரும்புவதில்லை. அங்கு அரம், ண்யம் என்ற இரு குளங்கள் உள்ளன. அவைகளை ஸுதா ஹ்ரதம் ஸுதா ஸமுத்ரம் என்பர். அங்கும் தேவி தங்குவாள்.

10 - 3. நம் சரீரத்தில் மஹாபத்மாடவி இருக்குமிடம் தலை. தலையினுள் ஆஜ்ஞா சக்கிரத்திற்கு மேலுள்ள பகுதிக்கு ஸுதா ஸாகரம் என்று பெயர். அங்கும் தேவி வசிப்பவாள். (61)

10 - 4. தேவியின் இருப்பிடம் - ஶ்ரீ நகரம், ஶ்ரீபுரம், ஶ்ரீ சக்கிரம் என்று புகழ் பெற்ற நகரத்தில் தேவி வசிப்பதாகப் புராணங்கள் கூறும். அநேக கோடிப் பிரும்ஹாண்ட ஜநநீ (நா.620) என்று ஸஹஸ்ர நாமமும், ஈக்ஷண ஸ்ருஷ்டாண்ட கோடிகா (நா. 49) என்று லலிதா த்ரிசதியும் தேவி பல கோடி பிரும்மாண்டங்களைப் படைத்தவள் என்று கூறும். தேவியின் விராட்ஸ்வரூபத்தில் கால் பங்கு இந்த பிரும்மாண்டங்கள். முக்கால் பங்கு

இவைகளுக்கு வெளியே உள்ளது. பாதோஸ்ய விச்வாபூதாநி. த்ரிபாதஸ்ய அம்ருதம் திவி – (புருஷ ஸூக்தம்).

10 – 5. ஸூதா ஸமுத்திரம் என்ற அமிருதக் கடல் பிரும்மாண்டங்களுக்கு வெளியே உள்ளது. அதன் நீர் பிரும்மாண்டங்கள் அனைத்திற்கும் ஜீவசக்தி பரப்பும் அமிருதமாகும். அதன் நடுவே உள்ளதீவு ரத்தினத்துவீபம் – மணித்துவீபம் என்ற பெயருள்ளது. இத்தீவு மிகச் சிறந்த ரத்தினங்களாலான தரை அமைந்தது. தீவின் கரையை அடைந்ததும் காணப்பெறுவது ஸ்வர்க்கத்தில் மட்டுமே காணப்பெறும் தெய்வ மரங்கள் வரிசையாக அமைந்த காடு. தேவ விருக்ஷங்கள் (தெய்வ மரங்கள்) ஐந்து. அவை : மந்தாரம், பாரிஜாதம், ஸந்தானம், ஹரி சந்தானம், கல்பகம் என்பன. இந்த ஐந்தும் வரிசையாக அமைந்த காடு தீவினுள் சென்றதும் காணப்பெறுகிறது. இதன் நடுவே கதம்பவனம் என்ற கடம்பு மரங்களாலான உபவனம் (நகருக்கு வெளியே காடுபோல் அமைந்த தோட்டத்திற்கு உபவனம் எனப்பெயர். செயற்கையாக அமைந்தது உத்யானம் (தோட்டம்) இயற்கையாக அமைந்தது உபவனம் – சமீபத்திலுள்ள சிறு காடு). அதன் நடுவே அமைந்தது சிந்தாமணி கிருஹம் எனப்பெறும் தேவியின் திருமாளிகை. தேவர்களது ரத்தினம் சிந்தாமணி. உடலால் அனுபவிக்கக்கூடிய போகங்கள் அனைத்தையும் தருவது தெய்வமரங்கள். மனத்திற்குப் போகமளிப்பது இந்த சிந்தாமணி ரத்தினம். அவைகளையே கற்களாக்கி அமைத்தது சிந்தாமணி கிருஹம். அதன் நடுவே ஒரு மஹா மண்டபம்; சுற்றிலும் ஒன்பது வரிசைகளாக அமைந்த படிகள் உள்ளன. நடுவே வட்ட வடிவமான மேடை. அதில் சிவம் என்ற பெயருள்ள மஞ்சம் (உயரமான கால்களுள்ள ஆஸனம்). நான்கு கால்களுள்ளது. பிரும்மா, விஷ்ணு, ருத்திரர், ஈசுவரர் என்று ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம், திரோதானம் என்ற பிரும்மத் தொழிலை நடத்தும் தேவர்கள் தியானத்தில் ஆழ்ந்து கண் மூடிய பிரும்ம யோக நிலையில் கால்களாக அமைந்து அந்த மஞ்சத்தைத் தாங்குகின்றனர். நான்கு கால்களுக்கு மேல் அமைந்துள்ள மஞ்சப் பலகையாக அனுக்கிரஹம் என்ற பிரும்மத் தொழிலைப் புரியும் ஸதாசிவர் பிரும்ம யோக நிலையில் விரிந்து படுத்திருக்கிறார். இவ்வைந்து தொழில்களையும் இவர்களைக் கொண்டு நடத்தி வைக்கும் பிரும்மத்தின் இச்சாசக்தி காமேசுவரர் வடிவில் இந்த மஞ்சத்தின் மேல் அமர்ந்துள்ளான். காமேசுவரரின் மடியில் தேவி அமர்ந்துள்ளாள். இப்படி இயற்கைச் சூழலில் இயற்கையாக அமைந்த ஸ்ரீ நகரத்தை ஸ்ரீ சங்கரபகவத்பாதர் ஸௌந்தர்யலஹரியில் (சுலோ. 8) வர்ணிக்கிறார்.

**ஸுதாஸிந்தோர் மத்த்யே ஸுர - விடபி - வாடீ பரிவ்ருதே**
**மணித்வீபே நீபோபவனவதி சிந்தாமணி க்ருஹே.**
**சிவாகாரே மஞ்சே பரமசிவ - பர்யங்க - நிலயாம்**
**பஜந்தி த்வாம் தந்யா: கதிசந சிதாநந்தலஹரீம்.**

அமுதக்கடலின் நடுவிலிருக்கும் தெய்வமரங்கள் வரிசையாக அமைந்த காட்டின் நடுவிலுள்ள கதம்பவனத்தின் நடுவில் சிந்தாமணி கிருஹத்தில் சிவ வடிவான மஞ்சத்தில் பரமசிவனது மடியில் அமர்ந்து அலைகளாகத் தனது சித் - ஆனந்த வடிவைப் பரப்பிவரும் உன்னைச் சிலரே வழிபடுகின்றனர். அவர்களே பாக்கியசாலிகள்.

10 - 6. தேவியின் மற்றொரு இருப்பிடமான ஸ்ரீ நகரம் மேரு மலையிலுள்ளது. பண்டாஸுரனை அழிப்பதற்காகத் தேவர்களது யாககுண்டத்தில் தோன்றிய தேவி மஹாராஜ்ஞியாகப் பட்டாபிஷேகம் செய்துகொண்டவுடன் அவளுக்காத் தேவர் சிற்பியான விசுவகர்மா கட்டிய நகரம் ஸ்ரீநகரம். இப்பூமண்டலத்தின் ஆணிவேராகவும், ஆதாரத் தூணாகவும் நின்று தாங்குவது ஸுமேரு, ரத்னமலை, ரத்னாசலம், ரத்நஸானு, கனகாசலம், ஹேமாத்ரி என்ற பல பெயர்களில் வழங்கும் மேரு மலையாகும். அதன் சிகரங்கள் நான்கு. நடுவில் மிக உயர்ந்தது தேவியின் ஸ்ரீநகரம் அமைந்துள்ள சிகரம். அதன் முப்புறத்திலும் மூன்று சிகரங்களில் பிரும்மா, விஷ்ணு, ருத்திரன் என்ற மூவரது நகரங்கள் அமைந்துள்ளன. ஸ்ரீநகரம் ஒரு பேரரசியின் வாசஸ்தலமாக அமைந்தமையால் அதற்குள்ள பாதுகாப்புகள் இங்கு காணப்பெறுகின்றன. நகரத்தின் வெளியே அரணாக இருபத்தைந்து ஸாலங்கள் - மதில்கள் அமைந்துள்ளன. மலைச்சரிவில் நகரம் அமைந்துள்ளமையால், வெளிப்புறத்தில் உள்ளதைவிட உட்புறத்திலுள்ள மதிற்சுவர்கள் உயர்ந்ததாகக் காணும். இரு மதிற்சுவர்களுக்கிடையே ஏழு யோசனை (சுமார் 85 கிலோ மீட்டர்) தூரம் இடைவெளி உண்டு. இந்த இடைவெளிக்குப் பிரகாரம் என்று பெயர். இந்த பிரகாரத்தில் தேவியில் பரிவாரங்களான சக்திகள் வசிக்கின்றனர். உத்யான வனங்கள் (தோட்டங்கள்) பரிகைகள் (அகழ்கள்) வாபிகைகள் (ஓடைகள்) போன்றவையும் இங்கு அமைந்திருக்கும்.

10 - 7. மதில்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு மூலப்பொருளைக் கொண்டு அமைக்கப்பட்டவை. இருபத்தையுந்து மதில்களில் வெளியிலிருந்து முதல் எட்டும் உலோஹ மதில்கள்.

| மதிலின் பெயர் | மூலப்பொருள் | இடைவெளி |
|---|---|---|
| அயஸ்ஸாலம் | இரும்பு | அய:ப்ராகாரம் |
| காம்ஸ்யஸாலம் | வெண்கலம் | காம்ஸ்யப்ராகாரம் |
| தாம்ரஸாலம் | தாமிரம் | தாம்ரப்ராகாரம் |
| ஸீஸஸாலம் | ஈயம் | ஸீஸப்ராகாரம் |
| ஆரகூடஸாலம் | பித்தளை | ஆரகூடப்ராகாரம் |
| பஞ்சலோஹஸாலம் | ஐந்து லோஹங்கள் | பஞ்சலோஹப்ராகாரம் |
| ரஜதஸாலம் | வெள்ளி | ரஜதப்ராகாரம் |
| ஸ்ரவர்ணஸாலம் | தங்கம் | ஸ்வர்ணப்ராகாரம் |

இவைகளை அடுத்து அமைந்த பதினோறு மதில்கள் ரத்தினத்தாலானவை.

| | | |
|---|---|---|
| புஷ்பராகஸாலம் | புஷ்பராகம் | புஷ்பராகப்ராகாரம் |
| பத்மராகஸாலம் | சிகப்பு | பத்மராகப்ராகாரம் |
| கோமேதகஸாலம் | கோமேதகம் | கோமதகப்ராகாரம் |
| வஜ்ரஸாலம் | வைரம் | வைரப்ராகாரம் |
| வைடூர்யஸாலம் | வைடூர்யம் | வைடூர்யப்பிராகாரம் |
| இந்திர நீலஸாலம் | நீலக்கல் | இந்திரநீலப்பிராகாரம் |
| முக்தாஸாலம் | முத்து | முக்தாப்பிராகாரம் |
| மரகதஸாலம் | பச்சைக்கல் | மரகதப்பிராகாரம் |
| பிரவாளஸாலம் | பவழம் | பிரவாளப்பிராகாரம் |
| நவரத்னஸாலம் | நவரத்தினங்கள் | நவரத்னப்பிராகாரம் |
| நாநாரத்னஸாலம் | நவரத்தினங்களில் அடங்காத மற்ற ரத்தினங்கள் | நாநாரத்னப்பிராகாரம் |

10 - 8. இவற்றை அடுத்து அமைந்த ஆறு மதில்கள் மஹா பத்மாடவீஸாலங்கள் எனப்பெறும். இவைகளில் வெளியிலிருந்து முதல் மூன்றும் மனம், புத்தி, அஹங்காரம் என்ற அந்தக்கரணங்களால் அமைந்தவை. அடுத்த இரண்டும் ஒளிமயமானவை. இறுதியாக 25ஆவதாக உள்ளது உணர்வுமயமானது.

| | | |
|---|---|---|
| மனஸ்ஸாலம் | மனம் | மனப்பிராகாரம் |
| புத்திஸாலம் | புத்தி | புத்திப்பிராகாரம் |
| அஹங்காரஸாலம் | அஹங்காரம் | அஹங்காரப்பிராகாரம் |

| | | |
|---|---|---|
| ஸுர்யஸாலம் | இளஞ்சூரியனின் ஒளி | ஸுர்யப்பிராகாரம் |
| சந்திரஸாலம் | சந்திரனின் ஒளி | சந்திரப்பிராகாரம் |
| சிருங்காரஸாலம் | சிருங்காரபாவம் | சிருங்காரப்பிராகாரம் |

10 - 9. இந்தப் பிராகாரங்களில் தேவியின் பிரதான சக்திகளின் ஆளுகைக்குட்பட்டு யோகினிகள், சக்திகள் முதலானோர் வசிக்கின்றனர். ஆறு ருதுக்களும் உருவெடுத்துத் தேவியை வழிபடக்காத்திருக்கின்றனர். சில இடங்களில் தெய்வ மரத்தோட்டங்கள் (வாடிகைகள்) ஓடைகள் (வாபிகை) அமைந்துள்ளன. பிரும்மா, விஷ்ணு, ருத்திரன் முதலிய தேவர்கள் தங்கியிருக்கின்றனர். இதைப்பற்றிய விளக்கம் பெற ஆர்யாத்துவிசதீ ஸ்தோத்திரமும் லலிதோபாக்யானமும் பெரிதும் உதவும்.

10 - 10. குறிப்பிட்ட சிலவற்றை மற்றும் இங்கு குறிப்போம்.

2. காம்ஸ்யப் பிராகாரம் - மஹாகாளர், மஹாகாளீ, பல மரங்கள் உள்ள தோட்டம்.
3. தாம்பரம் பிராகாரம் - வஸந்தருது, கல்பக வாடிகை.
4. ஸீஸப் பிரகாரம் - கிரீஷ்மருது, ஸந்தானவாடிகை.
5. ஆரகூடப் பிராகாரம் - வர்ஷருது, ஹரி சந்தன வாடிகை.
6. பஞ்சலோகஹப் பிராகாரம் - சரத்ருது, மந்தார வாடிகை.
7. ரஜதப்பிராகாரம் - ஹேமந்தருது, பாரிஜாத வாடிகை.
8. ஸ்வர்ணப் பிராகாரம் - சிசிரருது - கதம்ப வனம், மந்திரிணீ தேவி.
15. முக்தா பிராகாரம் - எட்டுதிக் பாலர்கள்.
16. மரகதப் பிராகாரம் - எட்டு பைரவர்கள்.
17. பிரவாளப் பிராகாரம் - யோகினிகள்.
18. நவரத்தினப் பிராகாரம் - மஹாவிஷ்ணு.
19. நாநாரத்தினப் பிராகாரம் - சிவன்.
20. மனப் பிராகாரம் - அம்ருதவாபீ - தாரா முதலிய சக்திகள்.
21. புத்திப் பிராகாரம் - ஆனந்தவாபீ - வாருணீ சக்தி.
22. அஹங்காரப் பிராகாரம் - விமர்சவாபீ - குருகுல்லா தேவி.
23. சூர்யப் பிராகாரம் - சக்ஷுஷ்மதீ, சாயா தேவி, மார்த்தண்ட பைரவன்.
24. சந்திரப் பிராகாரம் - சந்திரன்.
25. சிருங்காரப் பிராகாரம் - சிருங்காரபரிகை, மன்மதன்

இந்த இருபத்தைந்தாம் மதிலுக்குள்ளே மஹாபத்ம வனம். அதன் நடுவே சிந்தாமணி கிரஹம். அதனைச்சுற்றி வரும்போது சிதக்னிகுண்டம், பரதேவதையின் ரதம், மந்திரிணியின் ரதம், தண்டநாதையின் ரதம், மந்திரிணியின் மாளிகை, தண்டநாதையின் மாளிகை முதலியவைகளைக் காணலாம். சிந்தாமணி கிருஹத்தின் நடுவில் ஸ்ரீ சக்கிர உருவில் அமைந்த மஞ்சத்தில் பஞ்சப்பிரும்மாஸனத்தில் தேவி வீற்றிருக்கிறாள்.

10 - 11. ஸ்ரீ சக்ரமாகிய ஸ்ரீ நகரம் - தேவியை வழிபட உதவுபவை மூன்று: **யந்திரம், மந்திரம், தந்திரம்** என, தேவியின் யந்திரம் ஸ்ரீ சக்கிரம். அவளது மந்திரம் ஸ்ரீ வித்யை. அவளது தந்திரம் கௌலம், ஸமயம் என இரு வகைப்படும். மந்திரமும் தந்திரமும் பின்னர் விளக்கப்படுகின்றன. (11.1 - 5, 16.8, 16.38)

10 - 12. ஆராதனைக்குரிய தேவதையின் சக்தியைக்கோடு வடிவத்தில் தன்னுள் அடக்கிக்கொண்டிருப்பது யந்திரம்.அது தேவியை வழிபடுபவளைக் காப்பாற்றுகிறது. (யமயதி - த்ராயதே கட்டுப்படுத்தித் தன்னுள் அடக்கி வைத்திருக்கிறது. காப்பாற்றுகிறது). ஓர் தகட்டிலோ, விபூதி, குங்குமம், தரை, பலகை முதலியவைகளிலோ, தாமரை இதழ் போன்ற இதழ்கள் வடிவிலும் கோணமாகவும் அதற்கான முறைப்படி கோடிட்டு, அதில் பூஜிக்கும் வேளைக்கு மட்டுமோ, நிரந்தரமாகவோ, தெய்வத்தைச் சக்தியுடன் நிலைத்திருக்கச் செய்து (பிரதிஷ்டை செய்து) வழிபடுவார்கள். அலை வரிசைபோல் வெளியாகும் தெய்வசக்தி, தொடர்புள்ள கோணங்களாகவோ இதழ் வடிவாகவோ விரிந்துதோன்றுகிறது. இதனை யந்திர ரேகைகள் உருவகப்படுத்துகின்றன.

10 - 13. ஸ்ரீ சக்கிரம் இரண்டு விதமாக அமைக்கப்பட்டு இருக்கும். தகட்டில் கோடுகள் வரைந்து அமைந்தது ஒரு வகை. இதனைப் **பௌமப்ரஸ்தாரம்** என்பர். மற்றொன்று **மேருப்ரஸ்தாரம்**. யந்திரத்தின் கோணங்களும் தளங்களும் ஒன்றன்மீது ஒன்றாக, நடுவில் உயர்ந்து பக்கவாட்டில் சரிந்து மலையின் சிகரம்போல் இது அமைந்திருக்கும். ஸ்ரீநகரம் அமைந்த மேரு மலையின் நடு சிகரமாக இதனைப் பாவிப்பதால் மேரு என்று அழைப்பர். ஸ்ரீ சக்கிரத்தில் ஐந்து விதமாகக்கோடுகள் வரையப்பட்டிருக்கும். வெளியில் சதுர வடிவிலும், அதனை அடுத்து மண்டலமாகவும், அதனை அடுத்துத் தாமரை இதழ் வடிவிலும் அதனை அடுத்து முக்கோண வடிவிலும் நடுவில் பிந்து

வடிவிலும் கோடுகள் உள்ளன. இவைகளை மேரு வடிவில் அமைக்கும்போது ஒன்றன்மீதொன்று நன்கு கோபுரம்போல் எடுத்துக்காட்டியிருப்பது பூர்ணமேரு. சதுரச்சரம், ஷோடசதனம், அஷ்டதளம் என்ற மூன்றையும் சமதளத்தில் அமைத்து, அதன்மேல் சதுர்தசாரம், பஹிர்தசாரம், அந்தர்தசாரம் என்ற மூன்றையும் சமமான உயரமுள்ளதாக எழுப்பி, அதன்மேல் அஷ்டகோணம், திரிகோணம், பிந்து என்ற மூன்றையும் உயர்த்திக் காட்டுவது ஒருவகை அமைப்பு. சதுரச்சரம் அடிவாரமாகவும், இரு தளங்களும் அதற்கு மேலும், மற்ற ஆறும் இவைகளைவிட உயர்ந்ததாகவும் காட்டுவது மற்றொரு வகை. இவை இரண்டையும் **அர்த்தமேரு ப்ரஸ்தாரம்** என்பர்.

10 - 14. மேருவில் அமைந்த ஸ்ரீநகரம் போல் இதற்கும் மதில்கள் உண்டு. மதில்களை இங்கு **ஆவரணம்** (மறைப்பு - திரை) என்று குறிப்பிடுவர். உள்ளே உள்ளதை வெளியே இருப்பது மறைக்கிறது. அதனால் ஆவரணம் ஆகிறது. உள்ளே உள்ள தெய்வத்தின் நிஜ உருவைக் காண அதனை மறைத்திருப்பவைகளைத் தாண்டி உள்ளே செல்ல வேண்டும். அதற்கு மறைத்திருப்வர்களின் உதவியும் தேவைப்படும். பேரொளிமிக்க தேவியை நாம் நேராகப் பார்க்க முடியாது. ஆதனால் நம்மால் பார்க்க இயலும் அளவில் மறைப்புகள் அவளது பேரொளியை மறைத்துக் காட்டுகின்றன. மறைப்பின்றி நேரிடையாகக் காணும் தகுதி பெறும்வரை யோகிநிகள் ஆவரண தேவதைகளாக இருந்து நமக்கு உதவுகின்றனர். அதனால் இவர்களை வழிபட்டு உள்ளே செல்கிறோம். இந்த வழிபாடு ஆவரண பூஜை எனப்படும்.

10 - 15. **யோகினிகள்** - ஒன்பது பிரிவினர். அவர்கள் பின் வருமாறு:

10-15-1. **பிரகட யோகினிகள்** - வெளிப்படையாக உள்ளவர்கள். முதல் ஆவரணத்தில் வசிப்பவர்கள். ஸ்தூலம் ஸூக்ஷ்மம் காரணம் என்று நமக்கு மூன்று தேகங்கள் உண்டு. இம்மூன்றிலும் பரவியுள்ள சக்தியானது நாம் விழித்திருக்கும் போது ஸ்தூல உடலில் அதிக அளவில் வெளிப்படுகின்றது. இந்த சக்தி பொறிகள் வழியே வெளியே சென்று, பல அனுபவங்களைப் பெறுகின்றது. ஸ்தூல சரீரம் அதனுள் அமைந்த பொறிகள், மனம், இவைகளால் உணரப்படும் விஷயங்கள், உணர்வதால்

ஏற்படும் சுக - துக்க அனுபவம் இவை அனைத்தையும் விழிப்பு நிலையில் வெளிப்படையாக உணர்கிறோம். இப்படிச் சக்தி வெளிப்படையாக உணரப்படுவதால் அந்தச் சக்தி வடிவிலுள்ள இவர்கள் பிரகட யோகினிகள், (பிரகட - வெளிப்படையானவர்).

10-15-2. **குப்த யோகினிகள்** - மறைந்து உள்ளவர்கள். இரண்டாவது ஆவரணத்தில் வசிப்பவர்கள். ஸ்தூல சரீரத்தின் வழியே வெளிப்படாமல் சூட்சுமமாக சக்தி வெளிப்படுவது உண்டு. இதை ஸ்வப்ன நிலை என்ற தூக்கத்திற்கும் விழிப்பிற்கும் இடையே உள்ள கனவு நிலையில் உணர்கிறோம். மனம் தனக்கெனச் சில பொறிகளை அமைத்துக்கொண்டு கனவில் உணர்வுகளைப் பெறுகிறது. இந்தச் சக்தி குப்தமாக - வெளிப்படையாக உணரப்படாததாக உள்ளதால் இந்தச் சக்தி வடிவிலுள்ளவர்கள் குப்த யோகினிகள்.

10-15-3. **குப்ததர யோகினிகள்** - மிகவும் மறைந்து உள்ளவர்கள். மூன்றாவது ஆவரணத்தில் வசிப்பவர்கள். ஸ்தூலம் சூட்சுமம் என்ற இரு சரீரத் தொடர்புமின்றி ஆத்ம சக்தி சில சமயம் உணர்வுகளைப் பெறுகிறது. இதனை ஆழ்ந்த தூக்க நிலையில் உணரலாம். ஜீவன் காரண சரீரத்தில் மட்டும் இப்போது உலாவுகிறான். அதனால் அவன் பெறும் உணர்வானது, மனம், பொறி, உடல் இம்மூன்றிலும் பிரதிபலிக்கவில்லை. அதனால் அது மிக சூட்டுமமாக மறைந்திருக்கின்ற சக்தி அனுபவம். நல்ல தூக்கத்தால் பெறுகிற ஆனந்தம் அந்த ஆனந்தத்தைப் பெறும் தருணத்திலேயே உணரப்படுவதில்லை. உணர்வை வெளிப்படுத்தும் ஸ்தூல ஸூக்ஷ்ம தேகங்களுடன் அப்போது தொடர்பின்மை இதற்குக் காரணம். இந்த உணர்வு மிகவும் சூட்டுமமாக இருப்பதால் இந்தச் சக்தி வடிவமானவர்கள் குப்ததர யோகினிகள்.

10-15-4. **ஸம்பிரதாய யோகினிகள்** - நான்காவது ஆவரணத்தில் வசிப்பவர்கள். குருவடிவினர். வழிபடுவோர்க்கு வழிகாட்டத் தேவி தானே நேரில் தோன்றுவது உண்டு. வழி காட்டுவதற்கென்றே கருணையுடன் தேவி எடுக்கும் உருவம் குரு. அந்த வடிவில் வெளியாகும் சக்தியை ஸம்பிரதாய யோகினிகல் என்பர்.

10 - 15 - 5. **குலோத்தீர்ண யோகினிகள்** - குரு பரம்பரையாக நின்று வழிபடுவனைக் கரையேற்றுபவர்கள். ஐந்தாவது ஆவரணத்தில் வசிப்பவர்கள். ஆசாரியன், சீடன், ஆசாரியன் தருகிற உபதேசத்தால் சீடன்

பெறும் அறிவு எந்த இந்த முக்கோமத்தைக் குலம் என்பர். ஆசாரியனுக்கும் சீடனுக்கும் உள்ள தொடர்பு விரிந்து குரு பரம்பரை – சிஷ்ய பரம்பரை – ஞான பரம்பரையாக வடிவெடுக்கிறது. இந்த விரிந்துகொண்டே போகும் சக்தி வடிவில் இருப்பவர்களை குலோத்தீர்ண யோகினிகள் என்பர்.

10 – 15 – 6. **நிகர்ப்ப யோகினிகள்** – உள்ளே உள்ளசித் சக்தியின் உணர்வு வடிவானவர்கள். ஆறாவது ஆவர்த்தில் வசிப்பவர்கள். குருவின் உபதேசத்தால் சித்சக்தி இதயக் குகையில் இரகசியமாக உள்ளதைச் சீடன் உணர்கிறான். (நிதராம் கர்ப்பே அதிரஹஸ்ய ஸ்தலே கூடதயாஸ்த்திதா சக்தி: மிகவும் ரகசியமான இடத்தில் மறைந்துள்ள சக்தி அந்த உணர்வின் வடிவானவர்கள் நிகர்ப்ப யோகினிகள்.

10 – 15 – 9. **பராபர** – அதிரஹஸ்ய யோகினி – ஒன்பதாவது ஆவரணத்தில் உள்ளவன். வாக்குக்கும், மனத்துக்கும் எட்டாத ஸ்வரூபம் என்ற நிலையில் அந்தச்சித்சக்தியை ஆத்மாவாக, அறிவாக, ஆனந்தமாக நின்று தானே அதுவாகி அனுபவிப்பது. இந்தச் சக்தி பராபர அதிரஹஸ்ய யோகினி.

10 – 16. இந்த யோகினிகள் சூழ்ந்து நிற்கும் நகரம் ஸ்ரீநகரம். ஸ்ரீ வித்யை எனும் சிறப்புமிக்கப் பேரறிவைக் கூட்டி வைப்பவர்கள் யோகினிகள்.

10 – 17. வெளியேயிருந்து உள்நோக்கி இந்த ஸ்ரீ சக்கிரமாகிய நகரத்தில் நுழையவேண்டும். இந்த நகரத்தின் திசைபற்றி அறிய ஒரு வழி உண்டு. மற்ற யந்திரங்களில் வழிபடும் தெய்வமாகிய யந்திரத்திற்கும், வழிபடுபவனுக்கும் நடுவே உள்ள திசை கிழக்காகும். வழிபடுபவன் எந்த திசையை நோக்கி உட்கார்ந்திருக்கிறாள். அவளது பார்வை படும் திசை கிழக்கு. அவளது பின்புறம் மேற்கு. அதனால் வழிபடுபவன் தனக்கும், தெவதைக்கும் நடுவே உள்ள திசையை கிழக்காக்கி யந்திரத்தைச் சுற்றி, வலமாகத் தென்கிழக்கு தெற்கு என்று தொடங்கித் தனது வலது கைப்புறம் உள்ள வடகிழக்கில் வந்து முடிப்பான். **ஸ்ரீ சக்கிரத்தில் வழிபடும்போது இந்த திசை அமைப்பு மாறும்.** இங்கு வழிபடும் சக்கிரத்திற்கும் (தேவிக்கும்) வழிபடுபவனுக்கும் நடுவே உள்ள திசை மேற்கு. தேவிக்குப் பின்புறமுள்ள திக்கு கிழக்கு. அதனால் அங்கிருந்து வலமாக தென்கிழக்கு முதல் தொடங்கி வழிபடுபவனின் இடது கைப்பக்கத்தில் எதிர்புறத்தில் – தேவியின் வலதுபுறத்தில் – வடகிழக்கில் வந்து முடியும்.

10 - 18. இந்த திசையமைப்பை ஒட்டி, யந்திரத்தின் நடுவே அமைந்துள்ள முக்கோணம் மேற்கு நோக்கி நிற்கும். இப்படி மேற்கு நோக்கியமைந்த முக்கோணங்கள் நான்கு. இவை சிவ சக்கிரங்கள். இந்த சிவ சக்கிரங்களும் சக்தி சக்கிரங்களும் ஒன்றன்பின் மீதொன்றாகப் பதிந்து இணையும்போது இந்த இணைப்பின் விளைவாக 43 முக்கோணங்கள் தோன்றுகின்றன.

10 - 19. ஒன்பது ஆவணங்களில் வெளியிலிருந்து முதலாவதாக உள்ள ஆவரணம் சதுரமாக அமைந்தது. இரண்டாவது 16 இதழ் தாமரை வடிவில் உள்ளது. மூன்றாவது 8 இதழ் தாமரை வடிவில் அமைந்தது. 4 - 5 - 6 - 7 - 8வது ஆவரணங்கள் முக்கோணங்களாலானவை. ஒன்பதாவது ஆவரணம் சிறிய பிந்து வடிவில் உள்ளது.

10 - 20. இப்போது வெளியிலிருந்து உள்நோக்கி ஸ்ரீசக்கிரமாகிய ஸ்ரீநகரத்தில் நுழைந்து ஒவ்வொரு ஆவரணத்திலுமுள்ள சிறப்புக்களைக் காண்போம். ஸ்ரீ சக்கிரத்தின் வெளிப்புறம் அமைந்த முதல் ஆவரணம் **த்ரைலோக்ய மோஹன சக்கிரமாகும்**. நான்கு புறங்களிலும் சுற்றிச் சதுரமாய் அமைந்த மூன்று கோடுகள் வடிவில் இந்தச் சக்கிரம் அமைந்துள்ளது. நாற்புறத்திலும் ஒவ்வொரு சுற்றிலும் நடுவில் துவாரங்கள் - வாயில்கள் உண்டு. இச்சக்கிரத்தை **பூபுரம்** என்றும் **சதுரச்சம்** என்றும் சொல்வர். மூன்று கோடுகளில் வெளியேயுள்ள கோடு வெண்ணிறமுள்ளது. நடுவே உள்ளது செந்நிறமுள்ளது. இது மற்ற எல்லா ஆவரணங்களுக்கும் ஆதாரமான வெளி ஆவரணம். உலகைத் தாங்கும் சக்தி படைத்த பிருதிவீ தத்துவத்தால் ஆனது. குண்டலினீ சக்தி அமைந்த மூலாதாரம் பிருதிவீ தத்துவத்தாலானது. மூலாதார சக்கிரத்திற்கு நான்கு இதழ்கள். இதுபோல் இந்த ஆவரணமும் சதுர வடிவில் அமைந்துள்ளது.

11 - 21. இதன் வெளிக்கோட்டில் அணிமா, லகிமா, மஹிமா, ஈசித்துவம், வசித்துவம், ப்ராகாம்யம், புக்தி, இச்சா, பிராப்தி, ஸர்வகாமா என்ற பத்து ஸித்தி சக்திகளும், நடுக்கோட்டில் பிராம்ஹீ, மாஹேச்வரீ, கௌமாரி, வைஷ்ணவீ, வாராஹீ, மஹாந்திரீ, சாமுண்டா, மஹாலக்ஷ்மீ என்று எட்டு மாதாக்களும் உட்கோட்டில் ஸர்வ ஸங்க்ஷோபிணீ, ஸர்வ வித்ராவிணீ, ஸர்வாகர்ஷிணீ, ஸர்வவசங்கரீ, ஸர்வோந்மாதினீ, ஸர்வமஹாங்குசா, ஸர்வகேசரீ, ஸர்வபீஜா, ஸர்வயோநி, ஸர்வத்திரிகண்டா என்ற பத்தி முத்ரா சக்திகளும் விளங்குகின்றனர். இவர்களைப்

பிரகடயோகிநிகள் என்பர். இவர்களது கலைவி திரிபுரா சக்ரேச்வரீ என்பவள். (33.9 - 11, 28)

10 - 22. திரைலோக்ய மோஹன சக்கிரத்தை அடுத்து உள்ளே மூன்று வட்டங்கள் செந்நிறத்துடன் காணப்படும். அவைகளுக்கு உட்புறத்தில் இரண்டாவது **ஆவரணம் - ஸர்வாசாபரிபூரகம்** எனும் சக்கிரமாகும். தாமரையின் 16 இதழ்கள் (ஷோடசதளம்) சுற்றி அமைந்த இந்த சக்கிரம் சந்திரனது நிறம் கொண்டது. சந்திர தத்துவத்தால் ஆனது. சந்திரனுக்கு 16 கலைகள். நாம் பார்ப்பவை வளர்ந்தும் தேய்ந்தும் காணும் 15 கலைகள் மட்டுமே. பதினாறாவது கலை அழியாத கலை, அவனது சிறப்புக்கலை. நித்தியமான கலையானதால் அதனை ஸாதா கலை என்பர். அந்தப்பதினாறு கலைகளை இங்கு இதழ்களாக அமைந்துள்ளன. இங்கு **நித்யகலா தேவிகள்** எனப்படும் 16 சக்திகள் உள்ளனர். காமாகர்ஷினீ, புத்தயாகர்ஷினீ, அஹங்காராகர்ஷினீ, சப்தாகர்ஷினீ, ஸ்பர்சாகர்ஷினீ, ரூபாகர்ஷினீ, ரஸாகர்ஷினீ, கந்த்ததாகர்ஷினீ, சித்தாகர்ஷினீ, தைர்யாகர்ஷினீ, ஸ்ம்ருத்யாகர்ஷினீ, நாமாகர்ஷினீ, பீஜாகர்ஷினீ, ஆத்மாகர்ஷினீ, அம்ருதாகர்ஷினீ, சரீராகர்ஷினி என்று அவர்களை அழைப்பர். இந்த சக்திகளைக் **குப்த யோகினிகள்** என்பர். இவர்களின் தலைவி **திரிபுரேசீ**. பிராணன், அபானன், வியானன், உதானன், ஸமானன் என்ற ஐந்து பிராணங்கள், ஐந்து ஞானேந்திரியங்கள், ஐந்து கர்மேந்திரியங்கள், மனம் என்ற இந்தப் பதினாறு பிராண இந்திரிய தத்துவங்களும் 16 தளங்களாக இருக்கின்றன. (33, 13 - 14, 28)

10 - 23. இதனுள், எட்டு தாமரை இதழ்கள் (அஷ்டதளம்) உருவில் அமைந்த மூன்றாவது ஆவரணமான **ஸர்வஸங்க்ஷோபணம்** எனும் சக்கிரம். செம்பரத்தைப்பூவின் நிறம் கொண்டது. மஹத், அஹங்காரம், ஐந்து பூததன்மாத்ரங்கள், ஐந்து பூதங்கள், ஐந்து ஞானேந்திரியங்கள், ஐந்து கர்மேந்திரியங்கள், அந்தக்கரணம், ஜீவன் என்ற எட்டும் சிவனது சரீரங்கள். அவையே இதழ்களாக அமைந்துள்ள. அநங்ககுஸுமா, அநங்க மேகலா, அநங்கமதநா, அநங்கமதநாதுரா, அநங்கரேகா, அநங்க லேகினீ, அநங்காங்குசா, அநங்கமாலினீ என்ற எட்டு சக்திகள் இந்த தளங்களில் அமர்ந்து உள்ளனர். **குப்ததரயோகிநிகள்** என இவர்களை அழைப்பர். இந்தச் சக்கிரத்தின் தலைவி **திரிபுரசுந்தரி**. பூபுரம், ஷோடசதளம், அஷ்டதளம் என்ற இந்த மூன்று சக்கிரங்களை **ஸ்ருஷ்டி சக்கிரம்** என்று அழைப்பர். (33, 15, 28)

10 - 24. இதனையடுத்து உள்ளே உள்ளது 14 திரிகோணங்கலாக (சதுர்தசாரம்) அமைந்த நான்காவது ஆவரணமான **ஸர்வஸௌபாக்ய தாயகம்** எனும் சக்கிரம். சிகப்பு மாதுளம்பூ நிறம் கொண்டது. இவைகளில் வசிக்கும் சக்திகள் **ஸம்ப்ரதாய யோகிநி**களான ஸர்வஸங்க்ஷோபிணீ, ஸர்வவித்ராவிணீ, ஸர்வாகர்ஷிணீ, ஸர்வாஹ்லாதிநீ, ஸர்வஸம்மோஹிநீ, ஸர்வஸ்தம்ப்பிநீ, ஸர்வஜ்ரும்ப்பிணீ, ஸர்வவசங்கரீ, ஸர்வவரஞ்ஜிநீ, ஸர்வோந்மாதிநீ, ஸர்வார்த்தஸாதிநீ, ஸர்வஸம்பத்திபூரணீ, ஸர்வமந்த்ர மயீ, ஸர்வத்துவந்துவ க்ஷயங்கரீ என்று 14 சக்திகள். இந்தப் பதினான்கு திரிகோணங்களும், 14 உலகங்களாகக் காணப்படுவதான பரமேசுவரரது மாயா தத்துவத்திலிருந்து தோன்றியவை. அதலம், விதலம்,ஸுதலம், தலாதலம், ரஸாதலம், மஹாதலம், பாதாளம் என்ற பூமியின் கீழுள்ள ஏழு உலகங்கள், பூமி, பூமிக்கு மேலுள்ள புவர்லோகம், ஸுவர்லோகம், மஹர்லோகம், ஜநோலோகம், தபோலோகம், ஸத்யலோகம் என்ற ஆறு உலகங்கள் - இவை 14 உலகங்கள். இந்தச் சக்கிரத்தின் தலைவி **திரிபுரவாஸிநீ** என்பவள் (33, 17, 28)

10-25. ஐந்தாவது ஆவரணம் வெளியில் உள்ள பத்துத் திரிகோணங்களால் அமைந்தது. (பிர்தசாரம்), **ஸர்வாத்த ஸாதகம்** எனப் பெயர் உள்ளது. சிந்தூர நிறம் உள்ளது. பத்து அவதாரங்கள் எடுத்த மஹாவிஷ்ணு வடிவானது. ஸர்வ ஸித்திப்பிரதா, ஸர்வஸம்பத்ப்ரதா, ஸர்வப்ரியங்கரீ, ஸர்வமங்களகாரிணீ, ஸர்வகாமப்ரதா, ஸர்வதுக்க விமோசநீ, ஸர்வம்ருத்யுப்ரசமனீ, ஸர்வவிக்னநிவாரிணீ, ஸர்வாங்க ஸுந்தரீ, ஸர்வஸௌபாக்யதாயிநீ என்ற 10 **குலோத்தீர்ணயோகிநிகள்** இங்கிருந்து தேவியை வழிபடுகின்றனர். இந்த சக்கிரத்தின் தலைவி **திரிபுராஶ்ரீ** எனும் யோகினீ சக்தியாவாள். (33, 19, 28)

10-26. ஆறாவது ஆவரணம், உள்ளே உள்ள பத்து திரிகோணங்களாலானது (அந்தர்தசாரம்). செம்பரத்தம்பூ நிறமுள்ளது. **ஸர்வரக்ஷாகரசக்கிரம்** என்ற பெயர் கொண்டது. ஸர்வஜ்ஞா, ஸர்வசக்தி, ஸர்வைச்வர்யப்ரதா, ஸர்வஜ்ஞானமயீ, ஸர்வவ்யாதிவிநாசிநீ, ஸர்வாதார ஸ்வரூபா, ஸரர்வபாபஹரா, ஸர்வாநந்தமயீ, ஸர்வரக்ஷாஸ்வ ரூபிணி, ஸர்வேப்ஸிதபலப்ரதா என்ற 10 **நிகர்ப்ப யோகினிகள்** இங்குள்ளனர். இந்தச் சுக்கிரத்தின் தலைவி **த்ருபிரமாலினீ**. தூம்ரார்சி, ஊஷ்மா,ஜ்வலிநீ, ஜ்வாலிநீ, விஸ்புலிங்கனீ, ஸுஶ்ரீ, ஸுரூபா, கபிலா,

ஹவ்யவாஹிநீ, கவ்ய வாஹிநீ என்ற 10 அக்னி கலைகளின் வடிவாக இந்தக் கோணங்கள் அமைந்துள்ளன. (சதுர்தசாரம், பஹிர்தசாரம், அந்தர்தசாரம் என்ற மூன்றையும் ஸ்திதிசக்கிரம் என்பர்) (33 - 28, 28)

10 - 27. ஏழாவது ஆவணமான **ஸர்வரோகஹரசக்கிரம்** பத்மராகம் என்ற சிவப்பு ரத்தினத்தின் நிறத்தில் 8 திரிகோணங்கள் கொண்டது. பஞ்சபூதங்கள், சந்திரன், ஸுர்யன், யாகம் செய்பவன் என்ற எட்டு வடிவங்கள் கொண்ட காமேசுவர சீவ தத்துவத்தாலானது. வசிநீ, காமேச்வரி, மோதிநீ, விமலா, அருணா, ஜயிநீ, ஸர்வேச்வரீ, கௌலிநீ என்ற எட்டு **வாக்தேவதைகள்** இங்கு வசிக்கின்றனர். **ரஹஸ்ய யோகிநிகளாக** இவர்கள் இங்கு வழிபடப்பெறுகிறார்கள். இந்தச் சக்கிரத்தின் தலைவி **திரிபுராஸித்தா.** (33 - 23, 28)

10 - 28. எட்டாவது ஆவரணம் நடுவில் உள்ளதிரிகோணம். **ஸர்வஸித்திப்பிரதசக்கிரம்** எனப்பெயர் பெற்றது. சிவந்த நிறமுள்ளது. நாததத்துவத்திலிருந்து உண்டானது. இதனைச்சுற்றி ஸ்ரீ காமேசுவரர் தேவி ஆகிய இருவரது ஆயுதங்களான பாசமும் அங்குசமும் வில்லும் அம்புகளும் சக்திவடிவில் விளங்குகின்றன. காமேசுவரீ, பகமாலிநீ, நித்யக்லிந்நா, பேருண்டா, வஹ்நி வாஸிநீ, மஹாவஜ்ரேசுவரீ, (மஹாவித்யேச்வரீ எனச்சிலர்) சிவதூதி, த்வரிதா, குலஸுந்தரீ, நித்யா, நீலபதாகா, விஜயா, ஸர்வமங்களா ஜ்வாலாமாலிநீ, சித்ரா என்ற 15 **திதிநித்யா** தேவிகள் திரிகோணத்தின் வெளியே வரிசையாக, ஒரு கோட்டில் ஐவராக, வழிபடப்பெறுகிறார்கள். திரிகோணத்தின் உள்ளே வாக்பவகூட மந்திர சக்தியாகிய மஹா காமேச்வரியும், காமராஜ்கூட சக்தியாகிய மஹாவஜ்ரேசுவரியும், சக்திகூட சக்தியாகிய மஹாபகமாலிநியும், மூன்று கூடங்களின் ஸமஷ்டி சக்தியாகிய ஸ்ரீ மஹாத்ரிபுரசுந்தரியும் வழிபடப் பெறுகிறார்கள். இவர்கள் **அதிரஹஸ்ய யோகினிகள்**. இந்தச் சக்கிரத்தின் தலைவி **திரிபுராம்பா**. (33 - 25, 28)

10 - 29. நடுவில் உள்ள பிந்து ஒன்பதாவது ஆவரணமாகும். **ஸர்வாநந்தமயசக்கிரம்** எனப்படும். ஸ்படிகம் போன்று நிறமற்றது. **ஸ்ரீமஹாத்ரிபுரசுந்தரி** இந்தச் சக்கிரத்தின் தலைவி. வாக்குக்கும் மனத்திற்கும் எட்டாத பரப்பிரும்மத்தின் இச்சாசக்தி வடிவானது இந்தச் சக்கிரம். இதன் யோகினிக்குப் **பராபராதி ரஹஸ்யயோகினி** என்று பெயர். இங்கு ஸ்ரீலலிதாத்ரிபுரசுந்தரி அருள் வடிவில் விளங்குகிறாள்.

அவள் அமர்ந்திருக்கும் சிங்காதனத்தின் நான்கு புறங்களிலும் மேல் பலகையிலும்,ஸ்ரீ வித்யாலக்ஷ்மீ, ஸர்வஸாம்ராஜ்ய லக்ஷ்மீ என்ற ஐந்து லக்ஷ்மிகளும், ஸ்ரீ வித்யா, பரஞ்ஜோதி, பராநிஷ்கலா, பஜபா, மாத்ருகா என்ற ஐந்து **கோசாம்பிகை**களும், ஸ்ரீவித்யா, துவரிதா, பாரிஜாதேச்வரீ, குமாரீ திரிபுடா, பஞ்சபாணேசுவரீ என்ற ஐந்து **கல்பதாம்பிகை**களும், ஸ்ரீ வித்யா, ஸித்தலக்ஷ்மீ, ராஜமாதங்கீஉ வரி, புனேசுவரீ, வாராஹி என்ற ஐந்து ரத்னாம்பா தேவிகளும், பௌத்தம், வைதிகம், சைவம், கௌரம், வைஷ்ணவம், சாக்தம் என்ற ஆறு தர்சன சக்திகளும், கணேசர், பிரும்மா, விஷ்ணு, ஸதாசிவர், ஜீவேசடுவரர், பரமாத்மா என்ற ஆறு **சக்கிர சக்தி**களும், உன்மோதிநீ, போகிநீ, குஞ்சிகா, காளிகா, வித்யேச்வரீ, அநுத்தர சாங்கரீ என்ற **ஆம்நாய சக்தி**களும் விளங்குகின்றனர். இப்படிச் சக்தி வடிவில் அமைந்த ஆவரண தேவதைகளை வழிபட்டு அவர்களது அருளால் நடுவே துலங்கும் தேவியைக் காண்பதற்கான பெரும் பாக்கியத்தைப் பெறுகிறோம். (அஷ்டகோணம், திரிகோணம், பிந்து என்ற இம்மூன்றை **ஸம்ஹார சக்கிரம்** என்று வழங்குவர்.) (35-27, 28)

10 - 30. பாவனையால் அமைக்கப்பெற்ற இந்நகரைக் கோடு வடிவில் தாங்கி நிற்கும் ஸ்ரீ சக்கிரம் தேவி வசிக்கும் மற்றொரு ஸ்ரீநகரமாகும்.

10 - 31. இதில் அமைந்த ஒன்பது சக்கிரங்களுக்கும தலைவிகளான திரிபுரா, திரிபுரேசீ, திருபுரஸுந்தரீ, திரிபுராவாஸினீ, திரிபுராஸ்ரீ, திருபுரமாலினீ, திரிபுராஸித்தா, திரிபுராம்பா, மஹாத்ரிபுரஸுந்தரீ என்ற ஒன்பது சக்திகளும் யமம், நியமம், ஆஸனம், பிராணாயாமம், பிரத்யாஹாரம், தியாம், தாரணை, ஸமாதி, ஸஹஜாவஸ்தை என்ற ஒன்பது யோக நிலைகளை அருள்பவர்கள். இந்த யோக நிலைகள் வழிபடுபவனுக்கு பாவனாயோக பலத்தால் தேவியின் அருளால் சித்திக்கின்றன. இந்த யோகினிகள் அனைவரும் ஸ்தூல - ஸூக்ஷ்ம - காரண தேகங்களில் உள் உறைந்துள்ள பல சக்திகளின் வடிவமே. இதை உணர்ந்து அந்தச் சக்திகளை அந்தந்தத் தேவதை வடிவில் பாவனை செய்வதால் அந்தச் சக்திகளுக்குத் திவ்யத்தன்மை ஏற்படுகிறது. அதனால் தேவியின் பூர்ண வடிவத்தின் அனுஸந்தானம் என்ற அனுபவம் நிறைவேறுகிறது. இதன் விளக்கம் பாவனோபநிஷத்து முதலிய நூல்களில் காணப்படுகின்றன. (33 - 28)

**குண்டலிநீ மற்றொரு ஸ்ரீநகரம். அதனை 90 - 111 நாம விளக்கத்தில் காணலாம். (61)**

**11. காமாக்ஷீ. அழகான கண்களுள்ளவள்.**

11 - 1. மிகவும் அழகான, மனத்தை ஈர்க்கவல்லவையான கண்களுள்ளவள். காமேச்வர் ஒருவரையே தன் பார்வைக்கிலக்காகக் கொண்டவள். விரும்பியதைத்தந்தருளும் பார்வையுள்ளவள். அம்மையிலும் மறுமையிலும் பெறவேண்டிய மேன்மை அனைத்தையும் அருளும் பார்வை உள்ளவள்.

11 - 2. தேவி தக்ஷனின் பெண்ணாகப் பிறந்தபோது சிவபெருமானைத் தக்ஷன் நிந்தித்ததைப் பொறுக்காமல் தன் உயிரை யோக சக்தியால் பிரித்துச் சிவனோடு சேர்த்துக்கொண்டாள். சிவன் அந்த உடலைத் தன் தோளில் சுமந்து பித்தனாகச் சுற்றிவரும் போது நாராயணன் சக்கிரத்தால் அந்த உடலைத் துண்டாக்கி வீழ்த்தினார். 51 துண்டங்களாக இந்த உடல் வீழ்ந்த இடங்கள் 51 சக்திபீடங்களாயின. காஞ்சீ என்ற ஒட்டியாணம் அணியும் உடற்பகுதி விழுந்த இடம் காஞ்சி எனும் சக்தி பீடஸ்தானம். அங்கு உறைந்திருப்பவள் காமாக்ஷீ. அந்த க்ஷேத்திரத்தில் ஸ்ருஷ்டி சக்திபெற பிரும்மா வேள்வி நடத்தினார். அவரது விருப்பங்களை நிறைவேற்றியதால் காமாக்ஷீ என்று அவர் தேவிக்குப் பெயரிட்டார். சிவனின் கோபக்கண்ணால் சுட்டெரிக்கப்பட்ட மன்மதன் எனும காமன் மீண்டும் உயிர்தெழ அவனிடத்தில் தன் பார்வையைச் செலுத்தியவள் காமாக்ஷீ. (நா. 833. இணைப்பு - 2) (62)

**12. காம - தாயிநீ. விரும்பியதை வழங்குபவள்.**

12 - 1. அழகான பார்வையுள்ள தேவி காமாக்ஷீ. விரும்பியதை வழங்குவதால் அவள் பார்வை அழகுபெறுகிறது. விருப்பம் பலவகைப்படும். புற உலகப் பற்றற்றுத் தன்னையே அடையவிரும்பி வழிபடுபவர்களுக்குக் காமனெனும் காமேசுவரரையே அளிப்பவள். காமேசுவரருக்கும் பக்தனுக்கும் அபேதத்தை உண்டாக்கி ஜீவனைச் சிவனாக்குபவள், தாயும் - உடைமைப்பொருள், காமேசுவரரைத் தன் உடைமைப் பொருளாகக் கொண்டவள். (63)

### அதிகாரம் - 10

# பண்டாஸுரவதம்

### (நா. 64 - 65)

देवर्षिगणसङ्घातस्तूयमानात्मवैभवा ।
भण्डासुरवधोद्युक्तिसेनासमन्विता ॥ 24 ॥

**தேவர்ஷி கணஸங்க்காத ஸ்தூயமாநாத்ம வைபவா.**
**பண்டாஸுர வதோத்யுக்த சக்திஸேநா ஸமந்விதா. 24**

**1. தேவ - ருஷி - கண - ஸங்க்காத - ஸ்தூயமாந - ஆத்ம - வைபவா. தேவர்கள் ருஷிகள் இவர்களது கூட்டங்களுக்கு ஏற்பட்ட நெருக்கடியின்போது துதிக்கப்பெற்ற தனக்கே உரித்தான சிறப்புகளோடு கூடியவள்.**

1 - 1. பண்டாசுரன் தேவர்களையும் ருஷிகளையும் துன்புறுத்தினான். பண்டாசுரன் விஷ்ணு மாயையால் தன்னிலை மறந்திருந்தபோது மேருமலைச் சாரலில் தேவர்களும் ருஷிகளும் கூட்டமாகக் கூடிச் சிதக்னி குண்டத்தில் தேவியை வழிபட்டனர். தேவி அவர்களது முன்பாகத் தோன்றினாள். இதுபோல் இதற்கு முன் தமக்கு நேர்ந்த பல நெருக்கடிகளில் தேவி பலவகைகளில் உதவியதை அவர்கள் கூறித் தற்போது பண்டாஸுரனால் ஏற்பட்ட நெருக்கடியிலும் உதவக்கோரி வழிபட்டார்கள். எங்கும் எல்லாமாக நிற்பது விபு. அதன் சிறப்பு வைபவம். எங்கும் நிரம்பியிருப்பதால் சட்டென உதவமுடியும். எல்லாமாக இருப்பதால் கோரியதை வழங்கத் தாமதமிருக்காது. விபுவான தேவியே இந்த நெருக்கடியில் உதவவேண்டும் என்று அவர்கள் கோரினர்.

1 - 2. **தேவ கணங்கள்** - தேவர்களில் ஒன்பது பிரிவினர் கணங்கள் எனக்குறிப்பிடப் பெறுவர். அவர்கள் பின்வருமாறு - ஆதித்யர்கள் 12, விச்வதேவர்கள் 13, வஸுக்கள் 8, துஷிதர்கள் 36, ஆபாஸ்வரர்கள் 64, மருத்துக்கள் 49, மஹாராஜர்கள் 36, ஸாத்யர்கள் 12, ருத்திரர்கள் 11 என. இவர்களைக் கண தேவர்கள் எனப் பிரித்துக்கூறுவர். தேவர்கள், ருஷிகள், கண தேவர்கள் இவர்களது ஸங்காதத்தால் - கூட்டத்தால், துதிக்கப் பெற்றவள் தேவி. (64)

**2. பண்ட - அஸுர - வத - உத்யுக்த - சக்தி - ஸேநா - ஸமந்விதா. பண்டனெனும் அஸுரனை அழிக்க முனைந்துள்ள சக்தி சேனையுடன் கூடியவள்.**

2 - 1. பண்டனை வதம் செய்யத் தனது எண்ணற்ற சக்திகளைப் படை வீரர்களாக்கித் தன்னுடன் பண்டனது நகரம் நோக்கி தேவி அழைத்துச் செல்கிறாள்.

2 - 2. ஜீவனாக அறியாமையால் தன்னை கட்டுப்படுத்திக் கொண்ட ஆத்மா பண்டன். ஸ்தூலம் ஸூக்ஷ்மம் காரணம் எனப் பெறும் மூன்று தேகங்கள்தான் தன்னுடைய சுயநிலை; தான் தேகி என அவன் மயங்கி நிற்கிறான். அந்நிலையில் இந்த மூன்று தேகங்களின் சுகங்களையே பெரிதென மதித்து வாழ்வதால் (அஸுஷுரமதே) அசுரனாகிறான். தனது தநிப்பட்ட ஆத்ம சுகத்தை அவன் அறிந்தானில்லை. அவனது அழிவு அவநிடமுள்ள அசுரத்தன்மை அழிவதால் ஏற்படும். அதற்குத் தேவை, உத்யுக்தம் - உத்யமம் எனும் முயற்சி - தன்னை இந்தக் கட்டிலிருந்து விடுவித்துக் கொள்வதில் அடங்காத ஈடுபாடு. முயற்சி ஏற்பட்டவுடன் சக்தி, ஸேனையாகப் பெருகி அவனுக்கு உதவும். அஞ்ஞான நிலையில் மறைந்து இருந்த ஆத்ம சக்தி, த்மாவை அறிந்து, அதுவாகத் தன்னை ஆக்கிக்கொள்ள முயன்றதும் வெளிப்பட்டுப் படையாகப் பலவாகப் பெருகி உதவுகிறது. பால்யத்தில் உடலில் மறைந்திருந்த ஆண்மை யௌவனத்தில் வெளிப்பட்டுப் பெருகிப் பலம் தருவதுபோல், ஜீவனிடத்தில் அறியாமையால் இதுகாறும் மறைந்திருத ஆத்ம சக்தி ஆத்ம ஸாதன முயற்சி ஏற்பட்டதும் ஆற்றல் மிக்க சக்திகளாக வெளிப்படுகிறது. (65)

**(நா. 66 - 67)**

सम्पत्करीसमारूढसिन्धुरव्रजसेविता ।
अश्वारूढाधिष्ठिताश्वकोटिभिरावृता ॥ 25 ॥

**ஸம்பத்கரீஸமாரூடஸிந்த்துரவ்ரஜஸேவிதா.**
**அச்வாரூடாதிஷ்ட்டிதாச்வகோடி கோடிபிராவ்ருதா. 25**

**3. ஸம்பத் - கரீ - ஸமாரூட - ஸிந்த்துர - வ்ரஜ - ஸேவிதா. ஸம்பத்கரீ தேவியால் கட்டுப்படுத்தப்பட்ட யானைப் படையினால் சூழப்பட்டவள்.**

3 - 1. தேவி தன் சக்திகளைச் சேனையாக்கினாள். குரோதம் ஞானம் என்ற இரண்டின் வடிவமான அங்குசத்திலிருந்தும் தேவி ஒரு சக்தி

தேவியைத்தோற்றுவித்து அவளை யானைப்படைத் தலைவி ஆக்கினாள். அவள் ஸம்பத்கரீ, செல்வத்தைத் தருபவள். யானை செல்வத்தின் சின்னம். லக்ஷ்மீ தேவியுடன் யானையையும் அவளுக்கு வாகனமாகவோ அவளுக்கு அபிஷேகம் செய்வதாகவோ சேர்த்துத் தியானிப்பது செல்வத்தைப் பெருக்கும். ஸம்பத்கரீ என்ற யானைப் படைத்தலைவி முன் செல்ல அவளது கட்டுப்பாட்டில் அவள் பின் யானைப்படை இயங்குகிறது. அவள் ரணகோலாஹலம் என்ற யானை மீது அமர்ந்திருப்பாள். தேவியின் அங்குசமே ஸம்பத்கரீ தேவியாகத் தோன்றியதால், யானைப்படை அவளுக்குக் கட்டுப்படுவதில் வியப்பில்லை.

3 - 2. ஸம்பத் என்ற சொல் நன்கமைந்த சுகானுபவத்தால் ஏற்பட்ட மன நிறைவைக் குறிப்பிடும். **ஸுகஸம்பந்மயீ சித்த வ்ருத்தி:**, நல்ல உருவையோ மணத்தையோ சப்தத்தையோ நாடிச்சுகம் பெறுவது, பொறிகளைக் கட்டிலடக்கும் திறமை வாய்ந்த மனநிலையைப் பொறுத்தது. நிறைவுற்ற மனநிலையே உருவான ஸம்பத்கரீ தேவி, நிறைவுதரக்கூடிய ரூபம் – ரஸம் – முதலிய புலன்களை நாடித் தன் படைகளை நடத்துகிறாள்.

3 - 3. புலன்கள் நிறைவுதரக்கூடியவையாக அமைவதற்கு இரு வகையில் உதவி தேவை. நல்வழியில் செல்வதும் கெட்ட வழியில் செல்லாதிருப்பதும் மன நிறைவு தருவதற்கு முதற் சாதனம். கெட்ட வழியில் செல்லாதிருக்க குரோதம் எனும் குணத்தின் உருவான அங்குசம் – துறட்டி பொறிகளை அடக்கி உதவுகிறது. கெட்ட வழி எது, நல்ல வழி எது என்பதைப் பகுத்தறிய ஞான வடிவமான அதே அங்குசம் உதவுகிறது. அங்குச சக்தியின் மற்றொரு தோற்றமான ஸம்பத்கரீ தேவியும் இவ்விருவகையிலும் உதவிப் புலன்களாகிற யானைப் படையைத் திறம்பட இயங்கச் செய்கின்றாள். (பரா 7.6, 3.6)

3 - 4. யானை தானே சுறுசுறுப்புடன் இயங்கும் பலமுள்ள மிருகம். துறட்டி அதன் வேகத்தைக் கெட்ட வழியில் செல்லாமல் தடை செய்யவே உதவும். வேகத்தைத் தூண்டுவதற்கல்ல. மன நிறைவு பெறவேண்டும் என்ற லக்ஷ்யம் கெட்ட வழியில் பொறிகள் சுகம் பெறுவதைத் தடுக்கும். சுகம் பெறப் பொறிகளை ஊக்குவிப்பது அதன் செயல் அல்ல. அது ராகத்தால் கிடைப்பது அதனை அடுத்த நாமம் விளக்கும். (66)

**4. அச்வாரூடா-அதிஷ்டித -அச்வ- கோடி கோடிபி - ஆவ்ருதா. அசுவாரூடாவின் தலைமையில் இயங்கும் கோடிக்கணக்கான குதிரைகளால் சூழப்பெற்றவள்.**

4-1 தேவி தன் பாசமெனும் ஆயுதத்திலிருந்து அசுவாரூடாவைப் படைத்தாள் எப்போதும் குதிரையில் ஏறிய நிலையிலேயே காணப்பட்டதால் அவள் அசுவாரூடா எனப் பெயர் பெற்றாள். அவளது தலையில் குதிரைப்படை இயங்குகிறது அவள் ஏறியிருந்த குதிரைக்கு அபராஜிதம் (பிறரால் வெல்லப்படாதது) எனப் பெயர்.

4-2. கண் முதலிய பொறிகளே குதிரை அதன் மீதேறியவள் மனமாகிற அச்வாரூடாதேவி தற்சமயம் ஏறியிருக்கும் குதிரைபோல் கோடிக்கணக்கான குதிரைகள் அவளது ஆளுகைக்கு உட்பட்டிருக்கின்றன ஒரே மனத்திற்குக் கோடிக்கணக்கான பொறிகள் கட்டுப்பாடும் புலன்கள் கணக்கற்றதாயிருபப்தால் அதனை நாயிம் பொறிகளும் கணக்கில் அடங்கா.

4 - 3. மனம் எனும் அசுவாருடா தேவி பாசவடிவினள் பாசம் ராகத்தின் மாற்றுருவம் (7.5, 2-5) தேவியின் அருள் பெற்ற மனம் இச்சா சக்தியாகிறது பொருளை நாயிமம் ஆசையும் நாடிய பொருளை அடையும் நன் முயற்சியுமே உருவான பாசம் பலமுள்ள மனமாகிறது கோடிக்கணக்கானபொறிகளைச் செலுத்தும் குதிரைப்படைத் தலைமையை அந்த ஒரே மனம் ஏற்கிறது இப்படிச் சிறந்த குதிரைப்படைம் தலைமைப்படைத் தலைமையை ஏற்ற மனமெனும் அசுவாருமா தேவி தலைமை தாங்கிச் செலுத்துகிற கோடிக்கணக்கான பொறிகளாகிற குதிரைப்படையோடு கூடியவள் தேவி.

(நா. 68-69)

चक्रराजरथारूढसर्वायुधपरिष्कृता ।
गेयचक्रथारूढमन्त्रिणीपरिसेविता ॥ 26 ॥

**சக்ரராஜரதாருடஸர்வாயுதபரிஷ்க்ருதா.**
**கேயசக்ரரதாருடமந்தரிணீபரிஸேவிதா. 26**

**5. சக்ர - ராஜ - ரத - ஆருட ஸர்வ - ஆயுத - பரிஷ்க்ருதா, ஸ்ரீ சக்கிரமாகிய தேரில் ஏறிய எல்லா ஆயுதங்களும் புடை சூழ விளங்குபவள்.**

5 - 1. **ஸ்ரீ சக்கிரராஜம்** - சக்கிரம் என்படும் தேவதா யந்தங்களுக்கு அரசனாக விளங்குவது ஸ்ரீ சக்கிரம் எனும் தேவியின் யந்திரம். தேவியின் ஆஸனமாக (இருப்பிடமாக) அமைந்த அதனையே சில்பிகள் போர்த்தேர் ஆகவும் அமைத்துத தந்தார்கள். ஸ்ரீ சக்கிரத்தில்

விளங்கும் சக்திகள் அனைத்தும் தேர்ப்பகுதிகளாக அமைந்தன. ஸ்ரீ சக்கிரத்தின் ஒன்பது ஆவரணங்களே தேரின் ஒன்பது தட்டுகளாக அமைந்தன. ஸர்வாநந்தமய சக்கிரத்தின் ஸ்வருபமான ஆனந்தமே கொடியாகவும் தேரின்மேல் தோன்றியது. ஒன்பது தட்டிலும் யோகினீ பரிவாரங்கள் சூழ்ந்து நின்றனர். தேவி அமரும் இடத்தைச் சுற்றிப் பாசம், அங்குசம், கரும்புவில், புஷ்ப பாணங்கள் என்ற தேவியின் ஆயுதங்கள் நான்கும் தேவதா சக்தி வடிவில் தாமே தேவிக்கு முன்னாதாக ஏறி அமர்ந்தன. மற்ற ஆயுதங்களும் அவர்களோடு சேர்ந்து அமர்ந்தன. இப்படி எல்லா ஆயுதங்களும் சக்தி உருவெடுத்துப் புடைசூழத் தேவி ஸ்ரீசக்கிரராஜ ரதத்தில் விளங்குகிறாள். ஆயுதங்களைத் தாங்கி வீரன் தேரில் ஏறுவது வழக்கம். இங்கு சக்தி வடிவில் ஆயுதங்கள் தாமே ரதத்தில் ஏறி அமர்கின்றன (ஆரூட). தேவியின் எண்ணத்திற்கேற்பத் தானே செயல்படும் திவ்ய ஆயுதங்கள் இவை.

5-2. அஞ்ஞானத்தால் தன் நிலை மறந்து பேத பாவனையால் எதிரி மனப்பான்மையுடனும் எதிரில் நிற்பவன் பண்டனெனும் ஜீவன். அவனது அஞ்ஞானமெனும் ஆவரணத்தைப் போக்கவல்ல திவ்ய சக்திகள் அமைந்த ஆவரண தேவதைகளுடன் கூடிய சக்ர ராஜ ரதத்தில் மனச் சக்தியும், மனத்தின் வாஸனைகளான காமமும், குரோதமும், ஞானமும், பாசம் அங்குசம், வில், பாணம் என்ற ஆயுதங்களாக உருவெடுத்துக்கொண்டு முன்னதாக ஏறி நிற்க ஞானஸ்வருபிணியான தேவி அதன்மேல் தோன்றுகிறாள்.

**6. கேய-சக்ர-ரத-ஆரூட-மந்த்ரிணீ-பரிஸேவிதா. கேய சக்கிரம் எனும்தேரில் ஏறி அமர்ந்த மந்திரியால் வழிபடப் பெற்றவள்.**

6-1. தேவி தனது கரும்பு வில்லிலிருந்தும் தனது மனச்சக்தி வடிவினளான சியாமளா தேவியைத் தோற்றுவித்தாள். கார்மேகம் போன்ற மேனி வண்ணம் படைத்தவளானதால் சியாமளா, ராஜசியாமளா; ஸங்கீதத்தில் சிறந்த ஞானமுள்ளவள்; வீணையை ஒரு கையிலும், கிளியை ஒரு கையிலும் தாங்கியிருப்பாள். மனம் லயிக்கும் சக்தி வீணை; வேதங்களே கிளி. மதங்கரின் பெண்ணாக ஒரு சமயம் இவளே தோள்றியதால் மாதங்கி என்றும் பெயர். இனிமையான வாக்கு சக்தி, மனோவசீகரம் இவைகளை இனிமையான வாக்கு சக்தி, மனோவசீகரம் இவைகளை அருள்வாள். தேவியின் ராஜ்யத்தின் நிர்வாஹப் பொறுப்பில்

அமர்த்தப்பட்டவள் (நா.786). தேவி எங்கிருக்கிறாளோ அங்கு இவளும் இருப்பாள். தேவியின் பாவாரத்தில் தேவிக்கு அடுத்த ஸ்தானம் இவளுக்கு உண்டு. அரசியலில் பிறர் அறியாதவண்ணம் அரசருக்கும் மிக மிக முக்கிய ஆலோசகர்களுக்குமிடையே நடக்கும் ஆலோசனை மந்த்ரம். செயலாக வெளிபட்ட பின்னரே இதை அறிய முடியும். ஆலோசனை நிலையில் இது வெளிப்படாது. செயலாக வெளிப்படும் முன் ஆலோசனை பகிரங்கமாகிவிட்டால், காரியம் கேடுறும். செயலாகத் தானே வெளிப்படும் வரை ஆலோசனையை ரகசியமாக வைத்துக் கொள்ள வேண்டும். அது மந்த்ரம்.

மந்த்ரத்தை அளிப்பவர் மந்திரீ (ஆண்), மந்திரிணீ (பெண்). ஆதலால் சியாமளா தேவியை மந்த்ரிணீ என்றே அழைப்பர். இவளுக்கெனத் தனிப்பட்டப் போர்த்தேர் கேய சக்கிர ரதம்; ஏழு தட்டுகள் உடையது. இது அசையும்போது ஏற்படுகிற ஒலி ஸங்கீதமாயிருக்கும். அதனால் இது கேய சக்கிர ரதம் (கேய - பாட்டு). இதன் ஏழு தட்டுதளிலும் மந்திர சக்திக்கு உதவும் யோகினிகள் சூழ்ந்திருப்பர்.

6-2. காட்டில் வசிப்பவள்போல் காதில் பனை ஓலைத்தாடங்கமும், காட்டுப்பூக்காளாலான தலையலங்காரமும் கொண்ட இவள் கேய சக்கிர ரதத்தில் அமர்ந்து போரிடச் சென்றாள். இவளது கையிலுள்ள வீணையின் ஒலியே சத்துருக்களின் இதயத்தைப் பிளந்தது. கிளி வடிவத்திலிருந்த வேதம் தனது ஒரு பகுதியான தனுர் வேதத்தை சித்திர ஜீவமென்ற வில்லும் அம்புகளுமாக்கிச் சியாமளா தேவியிடம் கொடுத்தது. சியாமளையின் கைகளிலிருந்த வீணையையும், கிளியையும் யந்த்ரியீணா, தந்த்ரிணீ என்ற இரு சக்திகள் வாங்கிக் கொண்டனர். சியாமளை வில்லும் அம்புகளும் ஏந்திப் போருக்குப் புறப்பட்டுத் தேவிக்குப் பக்கத்திலிருந்து அவளுக்கு எல்லாப் பணிவிடைகளையும் செய்தாள்.

6-3. மனம் அடங்கிப் புத்தி தெளிந்திருக்கும்போது மனனம் செய்யப்பட்ட மந்திரங்கள் தேவியின் உருவை மனத்தில் பதித்து மனத்தைத் தேவி வடிவாக்கிவியிகின்றன. மந்திரங்கள் சித்தி பெற்றதன் அடையாளம் இது. அத்தகைய மனம் கொண்டவள் மந்திரியாகிறான் - மந்த்ர சித்தி பெறுகிறான். அந்நிலையில் ஆனந்தப் பெருக்கை அனுபவிக்கும் மனம் கீதத்தால் வயப்பட்டது போலாகித் தேவியின் பணிவிடையில் மிகுந்த ஈடுபாட்டைக்கொள்கிறது.

(நா. 70 - 71)

**किरिचक्रथारूढदण्डनाथापुरस्कृता ।**
**ज्वालामलिनिकाक्षिप्तवह्निप्राकारमध्यगा ॥ 27 ॥**

**கிரிசக்ரரதாரூட தண்டநாதபுரஸ்க்ருதா**
**ஜ்வாலாமாலினிகாக்ஷிப்தவஹ்நிப்ராகாரமத்த்யகா. 27**

**7. கிரி - சக்ர - ரத - ஆரூட - தண்டநாதா - புரஸ்க்ருதா.**
**கிரிசக்ர ரதமெனும் தேரில் ஏறி அமர்ந்துள்ள தண்ட நாதையால் வழிகாட்டப்பட்டவள்.**

7 - 1. தேவி தன் ஐந்து பாணங்களிலிருந்தும் **தண்டநாதா** எனும் தேவியைத் தோற்றுவித்தாள். இவள் ஸேநாநாயிகை. சேனையை நடத்திச் செல்கின்ற பொறுப்பை ஏற்றவளானதால் தண்டநாதா (தண்டிநீ) சேனைகளுக்குத் தலைவி ஆனால். கையில் தண்டாயுதம் ஏந்தியவள். காட்டுப் பன்றி போன்ற வலிவு பெற்ற உடல் அமைப்பு கொண்டவளானதால் **வாராஹீ**. காட்டுப் பன்றிகளால் இழுக்கப் பெற்ற போர்த் தேரில் இவள் அமர்ந்திருப்பாள். கிரி - காட்டுப்பன்றி. இது உக்கிரமான எதிர்ப்பு சக்தியுடன் மலைபோல் சிறிது கூட அசையாத நெஞ்சமுத்தமும் போர்த்திறமும் கொண்டது. பன்றிகளால் இழுக்கபெற்று நகருகிற தேரானதால் **கிரி சக்ர ரதம்** என இவளது தேருக்குப் பெயர். தேவியின் குறிப்பு அறிந்து செல்பவளானதால் ஸங்கேதா என்ற பெயருண்டு. **ஆஜ்ஞாசக்ரேச்வரீ** தேவியின் ஆணைகளை நிறைவேற்றும் பொறுப்புள்ளவள். அதில் மிகவும் திறமையுள்ளவள். இவளது தேர் ஐந்து தட்டுகளுடன் கூடியது. அதில் அமர்ந்த யோகினிகள் வாராஹியின் மேற்பார்வையில் தேவியின் ஆணைகளை நிறைவேற்றுகிறார்கள். கிரா சக்கிர ரதத்தில் ஏறி அமர்ந்த வாராஹி தேவியால் தேவி! இப்படி வருக! இப்படி வருக! என வழிகாட்டப்பெற்று தேவி போருக்குச் செல்கிறாள்.

7 - 2. (கிரி) ஸ்ருஷ்டி, ஸ்திதி, லயம் என்ற (சக்கிர ரத) எப்போதும் நகர்ந்துகொண்டிருக்கும் சுழலில், (ஆரூட) ஏறி அமர்ந்தபோதிலும், (தண்டநாத) முடிவைக் கட்டாயமாகக் கொணரும் யமனது ஆளுகைக்கு (அபுரஸ்க்ருதா) வசப்படாத யோக சக்தியை உடைய ஸாதகர்களோடு கூடியவள். தேவியின் அருளால் சித்தத்தில் தேவியை நிறுத்திக் கொண்டவளின் அருகே கூட யமன் செல்வதில்லை. அத்தனை மன வலிவும் ஆத்ம வலிவும் பெற்ற யோகிகள் மனத்தில் வசிப்பவள் தேவி. (70)

**8. ஜ்வாலாமாலிநிகா - ஆக்ஷிப்த - வஹ்நி - ப்ராகார - மத்த்ய - கா. ஜ்வாலாமாலிநீ தேவியால் சுற்றிலும் அமைக்கப்பெற்ற நெருப்புக் கோட்டையின் நடுவில் இருப்பவள்.**

8 - 1. தேவியின் இருப்பிடமான பிந்துஸ்தானத்தைச் சுற்றியுள்ள திரிகோணத்தில் கோணத்திற்கு ஐவராகப் பதினைந்து நித்யா தேவிகள் அமர்ந்துள்ளனர். தேவியைப் போல் இவர்களும் நித்யா - அழிவற்றவர்கள். தேவி 15வது நித்யை (10.28, 21.11) காமேச்வரீ, பகமாலினீ, நித்யக்லிந்தா, பேருண்டா, வந்ஹிவாஸிநீ, மஹாவஜ்ரேசுவரி (மஹா வித்யேச்வரீ), சிவதூதீ, த்வரிதா, குலஸுந்தரி, நித்யா, நீலபதாகா, விஜயா, ஸர்வ மங்களா, ஜ்வாலா மாலினீ, சித்ரா எனப் பதினைந்து நித்யைகள், பதினைந்து திதிகளில் ஒவ்வொன்றிற்கும் இவர்கள் தேவதைகள், பிரதமை முதல் பௌர்ணமி வரையுள்ள சுக்ல பக்ஷத்தில் காமேசுவரீ முதல் சித்திரா வரை திதிக்கு ஒருவராக வரிசையாக வழிபடுவார்கள். காமேச்வரீ சுக்ல பக்ஷத்துப் பிரதமையின் தேவை. பகமாலினீ துவிதீயையின் தேவதை. கிருஷ்ண பக்ஷதுப் பிரதமை முதல் அமாவாஸ்யை வரை இந்த வரிசையைத் தலைகீழாக மாற்றி சித்ரா என்ற நித்யா கிருஷ்ண பக்ஷத்துப் பிரதமை திதியன்றும் ஜ்வாலாமாலினீ துவிதியை அன்றும் இப்படி வரிசையாக வழிபடுவார்கள். அந்தந்தத் திதிக்கு அவள் அவள் தேவதை (25 - 13). இவர்களில் ஜ்வாலாமாலினீ சுக்கில சதுர்தசியன்றும் கிருஷ்ண துவீதையன்றும் வழிபடுகிற நித்யையானவள். அவ்விரு திதிகளுக்கும் அவள் தேவதை.

8 - 2. இவள் நெருப்பு ஜ்வாலையை மாலைபோலத் தரித்துக் கொண்டவள். தேவியின் படைகளுக்கு எதிரிகளிடமிருந்து எதிர்ப்பு ஏற்படாதவண்ணம் பிறர் நுழைய முடியாதபடி நாற்புறமும் நெருப்பாலான கோட்டைச் சுவற்றை அமைத்து அதன் நடுவே தேவியின் படைகளை இருக்கச் செய்தாள். அப்படைகளின் நடுவே தேவி துலங்குகிறாள்.

8 - 3. ஜ்வாலையை மாலையாகக் கொண்டவர், அக்னி மூர்த்தியான சிவபெருமான். அவரது சக்கிரங்கள் ஸ்ரீ சக்கிரத்தில் கிழக்கு நோக்கி அமைந்த நான்கு திரிகோணங்கள். அந்த திரிகோணங்களின் நடுவே பிந்துஸ்தானத்தில் இருப்பவள்.

8 - 4. உலகத்தின் படைப்பு, காத்தல், அழித்தல் என்ற நெருப்புக் கோட்டை போன்ற முத்தொழில்களுக்கிடையே ஸாக்ஷியாக அவைகளைக்

கண்காணிப்பவளாகவும், அவைகளால் பாதிக்கப்படாதவளாகவும் இருப்பவள் தேவி. (71)

(நா. 72 - 73)

भण्डसैन्यवधोद्युक्तशक्तिविक्रमहर्षिता ।
नित्यापराक्रमाटोपनिरीक्षणसमुत्सुका ॥ 28 ॥

**பண்டஸைந்யவதோத்யுக்தசக்திவிக்ரமஹர்ஷிதா.**
**நித்யபராக்ரமாடோபநிரீக்ஷணஸமுத்ஸுகா. 28.**

**9. பண்ட ஸைத்ய வத உத்யுக்த சக்தி விக்ரம ஹர்ஷிதா. பண்டனின் படையை அழிப்பதில் ஈடுபட்ட சக்திகளின் வீரத்தைக் கண்டு மகிழ்ச்சிடையந்தவள்.**

9 - 1. தேவி பண்டனது படை பலத்தை அழிக்கத் தன்னிடம் இருந்து பல சக்திகளைத் தோற்றுவித்தாள். அவர்கள் திரஸ்கரிணீ, நகுலீ, அச்வாருடா, ஸம்பத்கரீ முதலிய ஸேனைத் தலைவர்களின் மேற்பார்வையில் போரிட்டுப் பண்டனது பலத்தை அழித்தனர். அதைக்கண்டு தேவி மகிழ்ந்தாள். அறியாமையால் தன்னிலை மறந்த பண்டன் எனும் ஜீவன் அவனுக்கேற்ற பேத பாவனையால் ஏற்பட்ட மனோ விருத்தியையே படையாகப் பெருக்கி வைத்திருந்தான். தேவி தானே பலவாறாகச் சக்தி வடிவத்தில் தோன்றும் லீலையால் அந்த பேத பாவனையை அகற்றினாள். அறியாமை வலுவிழந்தது. ஞானம் தோன்றுவதைக் கண்டு தேவி மகிழ்ந்தாள். (72)

**10. நித்யா - பர - ஆக்ரம - ஆடோப - நிரீக்ஷண - ஸமுத்ஸுகா, எதிரிகளைத்தாக்கி நித்யாதேவிகள் புரிந்த கோலாகலத்தை உற்றுப் பார்ப்பதில் உற்சாகத்தை அடைந்தவள்.**

10 - 1. பண்டன் தனது 15 படைத் தலைவர்களைப் போருக்கு அனுப்பினான். அவர்களின் அட்டஹாஸத்தை அடக்குவதற்காகத் தேவியின் அனுமதி பெற்ற 15 நித்யா தேவிகள் அந்தப் படைத் தலைவர்களுடன் நேரிடையாகப் போரிட்டு அவர்களை அழித்தனர்.

10 - 2. என்றும் நிலைத்திருப்பதால் ஆத்ம சக்திகள் நித்யா என்று வழங்கப்படுகின்றன. ஆத்ம சக்தி என்று தனித்துக் கிடையாது என்று

சொல்லக்கூடிய அளவிற்கு வலிமை பெற்றவர்கள் அசுரர்கள். ஆத்ம சக்திக்கெதிராகத் தோன்றிய அசுர சக்திகளை நித்யமான ஆத்ம சக்திகள் அழித்துவிட ஆத்மானந்தம் அனுபவிக்கப்பெறுகிறது. (73)

**(நா. 74 - 75)**

भण्डपुत्रवधोद्युक्तबालाविक्रमनन्दिता ।
मन्त्रिण्यम्बाविरचितविषङ्गवधतोषिता ॥ 29 ॥

**பண்டபுத்ரவதோத்யுக்தபாலாவிக்ரமநந்திதா.**
**மந்த்ரிண்யம்பாவிரசிதவிஷங்கவததோஷிதா. 29**

**11. பண்ட - புத்ர - வத - உத்யுக்த - பாலா - விக்ரம - நந்திதா.**
**பண்டனது புத்திரர்களை அழிப்பதில் முனைந்த பாலாதேவியின் வீரத்தால் மகிழ்ச்சியுற்றவள்.**

11 - 1. படைவீரர்கள் அழிந்ததைக்கண்ட பண்டன் தனது முப்பது புதல்வர்களைப் போரிட அனுப்புகிறான். தேவியிடமிருந்து அவளது திவ்ய சக்திகள் அனைத்தும் பெற்றுத் தோன்றிய பாலாதேவி, தேவியைப்போன்ற உருவமைப்பு கொண்டவள். எப்போதும் ஒன்பது வயதுள்ள சிறுமியின் தோற்றம் கொண்டவள். தேவிக்கு அருகிலேயே எப்போதும் வசிப்பவள். பண்டனது புதல்வர்கள் போருக்கு வந்ததும் தேவியின் கசவத்திலிருந்து தோன்றிய கவசத்தைப் பூண்டு கர்ணீ ரதம் எனப்படும் சிறிய போர்த் தேரில் அமர்ந்து பண்ட குமாரர்களுடன் போரிட்டாள். நொடிக்கு நொடி வியப்பிலாழ்த்துகிற பாலா தேவியின் போர் முறையைப் பார்த்துத் தேவி ஆனந்தம் கொண்டாள்.

11 - 2. தேவியின் மந்திரம் - பஞ்சதசாக்ஷரி என்பது. மூன்று கூடங்களாக அமையப் பெற்றது (நா.85 - 86). வாக்பவம், காம ராஜம், சக்தி என அமைந்த அந்த மூன்று கூடங்கள் முறையே 5 - 6 - 4 எழுத்துக்கள் கொண்டவை. பாலா மந்திரம் ஐம், க்லீம், ஸௌ: என மூன்று எழுத்துக்கள் கொண்டது. இதன் ஒவ்வொரு எழுத்தும் ஒரு கூடமாகும். முதல் ஐம் வாக்பவ கூடம்; இரண்டாம் எழுத்து க்லீம் காமராஜ கூடம்; மூன்றாம் எழுத்து ஸௌ: சக்தி கூடம். பஞ்சதசாக்ஷரியின் கூடங்களுக்கும் பாலாவின் கூடங்களுக்கும் பெருமையில் ஏற்றத்தாழ்வு கிடையாது. அதனால் பாலா மந்திரத்தை லகுஸ்ரீவித்தியை என்பர். ஸ்ரீவித்யை தீக்ஷை பெற விரும்புபவர் பாலா மந்திர தீக்ஷையை முதலில் பெற்றுப் பின் பஞ்சதாக்ஷரீ தீக்ஷையைப் பெறுவர். பாலா திரிபுர சுந்தரி என்றே இந்த தேவியை அழைப்பர். (நா. 965)

11 - 3. ஆணவம், மாயிகம், கார்மணம் என மூன்று மலங்கள், (நா.133 - 135) ஜீவனைப் பிறவிப் பிணியில் ஆழ்த்துபவை. அவை ஒவ்வொன்றும் பத்துப் பொறிகள் வழியே புலப்படுவதை 30 பண்ட குமாரர்கள் என்பர். தேவியின் பாலா சக்தி அவைகளை அழித்து விடுகிறது.

11 - 4. தேவி, சியாமளா, வாராஹீ என்ற மூவர்க்கும் அங்க தேவதை, உபாங்க தேவதை, பிரத்யங்க தேவதை என்ற மூன்று உதவியாளர்கள் உண்டு. தேவதைக்கடங்கி அவளுக்குப் பிரதிநிதியாகப் பூர்ணமான தகுதியுடன் உள்ள உதவியாளர் அங்க தேவதையாவார். அங்க தேவதையின் உதவியாளர் உபாங்க தேவதையாவார். அவளுக்கு உதவியாளர் பிரத்யங்க தேவதையாவார். தேவிக்கு பாலா, அன்னபூர்ணா, அச்வாரூடா என்ற மூவரும், சியாமளா தேவிக்கு லகுச்யாமா, வாக்வாதிநீ, நகுலீ என்ற மூவரும், வாராஹிக்கு லகுவாராஹீ, ஸ்வப்னவார்த்தாளி, திரஸ்கரிணீ என்ற மூவரும் அங்க - உபாங்க - பிரத்யங்க தேவதைகளாவர். (74)

**12. மந்த்ரிணீ - அம்பா - விரசித - விஷங்க - வத - தோஷிதா. மந்த்ரிணீ விஷங்கனை அழித்ததைக்கண்டு மகிழ்ந்தவள்.**

12 - 1. பண்டன் ருத்திரனை வழிபட்டு அசுரர்களைத் தன் விருப்பப்படி படைக்கின்ற சக்தி பெற்றான். தனது வலது தோளில் இருந்து விசுக்கிரன் என்பவனையும், இடது தோளிலிருந்து விஷங்கன் என்பவனையும் படைத்தான். இருவரையும் சகோதரர்களாக மதித்தான். விஷங்கனை மந்திரியாகவும், விசுக்கிரனைப் படைத்தலைவனாகவும் ஆக்கினான். மந்திரியான விஷங்கன் போரிட வந்தபோது திவியின் மந்திரிணியான சியாமளா அவனை எதிர்த்து அழித்தாள். அதனைக் கண்டு தேவி மகிழ்ந்தாள்.

12 - 2. வி என்பது முறைக்கு எதிரான என்ற பொருளைத் தரும். ஸங்கம் - பொருள்களில் நாட்டம். சப்தம் ஸர்பர்சம் முதலிய புலன்களை ஜீவன் முறை தவறி அடைந்து கெட்ட வழிகளில் செல்வதற்கு இந்த விஷங்கம் - விஷயங்களில் முறை தவறிய நாட்டம் உதவுகிறது. தேவியின் மந்த்ர சக்தி வடிவினளான மந்திரிணீ (சியாமளை) அந்த நாட்டத்தை அழித்துவிடுகின்றாள். (75)

**(நா. 76 - 77)**

**विशुक्रप्राणहरणवाराहीवीर्यनन्दिता ।**
**कामेवरमुखालोककल्पितश्रीगणेवरा ॥ 30 ॥**

**விசுக்ரப்ராணஹரணவாராஹீவீர்யநந்திதா.**
**காமேச்வரமுகாலோககல்பிதஸ்ரீகணேச்வரா. 30**

**13. விசுக்ர - ப்ராண - ஹரண - வாராஹீ - வீர்ய - நந்திதா. விசுக்கிரனது உயிரை மாய்ப்பதில் செயல்படும் வாராஹி தேவியின் வீரியத்தைக் கண்டு மகிழ்ந்தவள்.**

13 - 1. விசுக்கிரன் பண்டனது வலது தோளிலிருந்து வெளியான அஸுரன், ஸேனைத் தலைவன். அவனைத் தேவியின் ஸேனைத் தலைவியாகிய வாராஹீ அழித்தாள்.

13 - 2. ஆத்ம சக்திக்கெதிராகத் தன் சக்தியைப் பயன்படுத்தும் நோக்கமே விசுக்கிரன். (வி - விரோதமான, சுக்கிரம் - ஒளிவலிமை, அதனுடன் கூடியவன்) அதன் விளைவாக ஜீவனைப் பல இன்னல்களுக்கு உட்படுத்துகிறான். (வி - மிகுந்து, சுக் - சோகத்தை, ர - கொணர்பவன்) அவனுக்கு எதிரே தேவியின் கிரியா சக்தியாகிய வாராஹீ செயல்படுகிறாள்.

13 - 3. சுக்ரம் - ஒளி, விசுக்கிரன் - ஒளிக்கெதிரான தமோகுணம், நல்லவை பல அறிந்தும் அவ்விஷயத்தில் உற்சாகமின்மை, செயலில் ஈடுபடாமை முதலியவை தமோகுணத்தின் விளைவு. கிரியா சக்தி இதனை வெல்கிறது.

13 - 4. பாலா தேவியாகத் தோன்றி மும்மலங்களைப் போக்கி தூய ஆத்ம தத்துவம் பிரகாசிக்கச் செய்கிறாள். மந்திரிணியாகத் துணை நின்று மனத்தையும், புத்தியையும் சஞ்சலப்படாமல் திடப்படுத்தி மனனத்தில் ஈடுபடுத்துவதன்மூலம் அறிவை நிலைக்கச் செய்கிறாள். தண்டநாதையாக விளங்கி ஈச்வரார்பண புத்தியுடன் முறையாக நற்பணிகளை ஆற்றுகின்ற வலிவு தந்து வைராக்யத்தைத் தருகிறாள். (76)

**14. காமேச்வர - முக - ஆலோக - கல்பித - ஸ்ரீ - கண - ஈச்வரா. காமேசுவரரது முகத்தைப் பார்ப்பதன் மூலம் ஸ்ரீ கணேசரைத் தோன்றச் செய்தவள்.**

14 - 1. தனது சேனை, சேனைத் தலைவர்கள், புத்திரர்கள், மந்திரி என்று பக்கபலமாயிருந்தவர்கள் அனைவரும் அழிபடுவதைக் கண்ட பண்டன், விசுக்கிரனை விக்நயந்திரம் அமைக்க உத்தரவிட்டான். அஸுர மாயையால் உண்டாக்கிய இந்த யந்திரம் தேவியின் படைகளின் நடுவே வைக்கப்பட்டது. தேவியின் படைகள் செயல் இழந்தன. சோம்பல், நமக்கு

எதற்கு இந்த யுத்தம் என்ற ஒதுங்கும் எண்ணம், நம்மால் முடியாது என்ற தாழ்மையுணர்ச்சி, அயர்வு, தூக்கம், மயக்கம், பேடிகளைப்போன்ற ஊக்கமின்மை, தன்மானமிழத்தல் என்ற எட்டு வகை உணர்ச்சிகள் தேவியின் படையில் ஒவ்வொருவரையும் தாக்கின. எல்லா யுத்தப் பணிகளும் தடைபட்டன. பெருஞ்சேனைத் தலைவிகளும் படைகளை உற்சாகப்படுத்த முடியாத நிலை ஏற்பட்டது. மந்திரிணீ இதை அறிந்தது தேவியிடம் முறையிட்டதும், தேவி தன்னருகே அமர்ந்திருக்கும் காமேசுவரனை நோக்கினாள். புன்னகையால் அழகுற்ற இருவரது பார்வைகளும் ஒன்று சேர யானை முகத்துடன் ஸ்ரீ கணபதி வல்லபையெனும் ஸித்திலக்ஷ்மியை ஆலிங்கனம் செய்தவராகத் தோன்றினார். தனது 10 கைகளிலும் – துதிக்கையிலும், மாதுளை, கதை, கரும்பிவில், சூலம், சக்கிரம், சங்கம், (தாமரை என வல்லபோபநிஷத் கூறும்) பாசம், அல்லிப்பூ, நெற்பயிர் கொத்து, தனது ஒரு தந்தம், ரத்னகலசம் என்ற பதினோரு பொருள்களையும் ஸ்ரீகணபதி தாங்கி நின்றார்.

14 – 2. அறிவுக்கெதிராகச் சோம்பல் முதலியவை எழுந்துத் தடை ஏற்படும்போது தீவிரமான ஈடுபாட்டைக் கொடுக்கக்கூடியது யோக சக்தி ஒன்றுதான். யோக சக்தியை அளிப்பதன் மூலம் தடைகளாக வந்தவைகளை எதிர்த்து நின்று மனம் நிலைக்க உதவுவதால், விக்கினங்களைப் போக்குபவராகவும், அறிவுத் தடைகளை நீக்கி அறிவு தெளிவு பெற உதவும் ஞான தாயகராகவும் ஸ்ரீ மஹா கணபதி துணை நிற்கிறார். காமேச்வரர் என்ற இச்சாசக்தி வடிவினரான பரமேச்வரரின் அருளை அதிகமாகப்பெறுவதற்காக தேவியின் பார்வை காமேசுவரரிடம் நிலைக்க, ஸ்ரீ கணேசர் அழகாக அமைகிறார் (கல்பிது) – ஒரு செயலை அழகுறத் திறம்படப் பலன் அளிக்கும் வகையில் செய்வதைக் கல்பனை என்பர். (கல்பனை மனத்தளவில் ஏற்பட்ட திட்டம் மட்டுமல்ல. சிறந்த முறையில் திட்டமிட்டு செவ்வனே செயலாற்றி நல்ல பலன் காண்பதே கல்பனை. கல்ப ஸூத்திரம் முதலியவை இதற்கான முறைகளைக் கூறும்). அப்படிக் கல்பனை செய்யப்பட்டவர் ஸ்ரீ கணேசர். அவரிடத்தில் தேவியின் திட்டச்சிறப்பும், செயல் சிறப்பும், நிறைவும் உருப்பெற்றுள்ளதைக் காணலாம். (77)

**(நா. 78 - 79)**

महागणेशनिर्भिन्नविघ्नयन्त्रप्रहर्षिता ।
भण्डासुरेन्द्रनिर्मुक्तशस्त्रप्रत्यस्त्रवर्षिणी ॥ 31 ॥

**மஹாகணேசநிர்ப்பிந்நவிக்நயந்த்ரப்ரஹர்ஷிதா.**
**பண்டாஸுரேந்த்ரநிர்முக்தசஸ்த்ரப்ரத்யஸ்த்ரவர்ஷிணீ. 31**

**15. மஹாகணேச - நிர்ப்பித்த - விக்நயந்த்ர - ப்ரஹர்ஷிதா. மஹா கணேசரால் விக்ன யந்திரம் தூளாக்கப்பட்டதைக் கண்டு மகிழ்ச்சிடைந்தவள்.**

15 - 1. காமேசுவரர், காமேசுவரி இவ்விருவருடைய பார்வைகள் கலந்ததில் தோன்றிய மஹா கணபதி தடையுண்டாக்கிய விக்ந யந்திரத்தைத் தூளாக்கினார். தேவியின்படைகள் மீண்டும் உற்சாகத்துடன் போரிட்டன. இந்த நிகழ்ச்சியைப் பார்த்த தேவி மிகவும் சந்தோஷித்தாள்.

15 - 2. ஜீவனிடத்திலிருந்த தெய்வ சக்திகள் அனைத்தும் சோம்பல், ஒதுங்கும் எண்ணம், தாழ்மை உணர்ச்சி முதலியவற்றால் செயலிழக்கும்போது, அசுர சக்தி வலிவு பெறுகின்றது. கருணையால் நற்குணனான ஆத்மாவிடம் சலனத்தை ஏற்படுத்தி ஜீவனை தேவி கணேசனாக்குகிறாள். கணங்கள் - ஜீவனது ஆளுகைக்குட்பட்ட எட்டு புரங்கள் – உடல், பொறிகள், புலன்கள், மனம், புத்தி, சித்தம், அஹங்காரம், வாஸனை என்பன. இவை ஒவ்வொன்றும் தனிக் கூட்டமாக அமைந்தவையானதால் கணம் எனப்பெறும். இவைகளுக்குச் சிறப்புமிக்கத் தலைவனாக, ஸ்ரீகணேசனாக ஜீவனைத் தேவி தன் கருணைமிளிரும் பார்வையால் ஆக்குகிறாள். (78)

**16. பண்ட அஸுர இந்த்ர நிர்முக்த சஸ்த்ர ப்ரத்யஸ்த்ர வர்ஷிணீ. பண்டன் எனும் அஸுரர் தலைவன் விடுத்த ஆயுதங்களுக்கெதிராகப் பாணங்களைப் பொழிபவள்.**

16 - 1. பண்டனது படைவீரர்கள் அனைவரும் அழிந்தார்கள். பண்டன் தேவியுடன் சண்டை புரிந்தான். மாயா பலம் கொண்ட தனது பல ஆயுதங்களைக் கொண்டு தேவியைத் தாக்கினான். தேவி அவ்வாயுதங்களின் தாக்குதலிலிருந்து விலகி நின்று, அவன்மீது அம்பு மழை பொழிந்தாள். கிட்டே நெருங்கி வரும் எதிரியைத் தாக்கக் கதை, கத்தி முதலியவைகளைப் பயன்படுத்துவர். இவைகளை சஸ்திரங்கள் என்பர். இவை கைப்பிடியினுள்ளிருந்தே பயன்படுபவை. கைக்கு எட்டாத தூரத்தில் நின்று போர் புரிபவர்களை சூலம், குத்துவாள், அம்பு போன்றவற்றை எறிந்து தாக்குவார்கள். இப்படித் தாக்கும் ஆயுதங்களை அஸ்திரம் என்பர் இவை கையில் இருந்தும் விடுபட்டுப் பயன்படுபவை. பண்டன், தேவி மிக அருகே இருப்பதை உணர்ந்து கதையால் தாக்குவான். தேவி அதே நேரத்தில் வெகு தூரத்தில் இருப்பவளாகி அஸ்திரங்களை - அம்பு முதலியவைகளை ஏவுவாள்.

16 – 2. தெய்வம் நம் வசப்பட்டுவிட்டதென்று நினைத்தவனுக்கு அது வெகுதூரத்தில் இருக்கும். தெய்வம் வெகு தூரத்தில் இருப்பதாக நினைத்து ஏங்குபவனுக்கு அவனது காதினருகே நிற்கும். இந்த லீலை பண்டனுக்குக் காட்டப்படுகின்றது. பண்டனது சஸ்திரத்துக்குப் பதிலாக அஸ்திரங்களைப் பொழியும் தேவியின் லீலையை வாக்தேவிகள் இப்படி வர்ணிக்கின்றனர்.

16 – 3. அஞ்ஞானத்தால் தெய்வத் தன்மைக்கு எதிராகப் பயன் படுத்தப்பட்ட அஸுர எண்ணங்களைத் தூரத்திலிருந்தே தெய்வக் கருத்துக்கள் தாக்கும். (79)

(நா. 80 - 81)

कराङ्गुलिनखोत्पन्ननारायणदशाकृतिः
महापाशुपतास्त्राग्निर्दग्धासुरसैनिका ॥ 32 ॥

**கராங்குலி நகோத்பந்த நாராயண தசாக்ருதிঃ**
**மஹாபாசுபதாஸ்த்ராக்நி நிர்தக்த்தாஸுரஸைநிகா. 32**

**17. கர - அங்குலி - நக - உத்பந்ந - நாராயண - தச - ஆக்ருதிঃ இரு கை விரல் நகங்களிலிருந்தும் தோன்றிய நாராயணனின் பத்து உருவங்களோடு கூடியவள்.**

17 – 1. பண்டன் போரில் தனது மாயையால் பல ஜாலங்களைச் செய்தான். எல்லா அறிவுகளுக்கும் இருப்பிடமான வேதங்களைப் பறித்தான். தேவி தன் வலதுகையின் கட்டைவிரலிலிருந்தும் மத்ஸ்யமூர்த்தியை வெளிப்படுத்தி வேதங்களைக் கொணர்ந்தாள். கடலைப் பெருக்கி அதில் தேவியின் படைகளைப் பண்டன் மூழ்கடித்தான். தேவியின் வலதுகை ஆட்காட்டி விரலிலிருந்து தோன்றிய கூர்மமூர்த்தி மூழ்கும் படைகளைத் தாங்கினார். பண்டன் மாயையால் ஹிரண்யாக்ஷனைத் தோற்றுவித்துப் போரிட, தேவியின் வலதுகை நடுவிரலிலிருந்து தோன்றிய வராஹமூர்த்தி ஹிரண்யாக்ஷனை அழித்தார். அப்படியே அவன் தோற்றுவித்த ஹிரண்யகசிபு, பலி, கார்த்தவீர்யன், ராவணன், சிசுபாலன், பிரலம்பன், கெட்ட வழியில் செல்லும் நாடாள்பவர்கள் இவர்களை முறையே நரசிம்மர், வாமனர், பரசுராமர், ராமன், கண்ணன், பலராமன், கல்கி ஆகிய நாராயணனன் அவதார உருவங்களைத் தனது கை விரல்களிலிருந்து தோற்றுவித்து அவ்வவர்களை அழித்தால். தன்னால் மாயையால் ஹிரண்யகசிபுவையோ பல ஹிரண்யகசிபுக்களையோ தோற்றுவிக்க முடியும். நரஸிம்ம உருவம், மாலை நேரம், வாயிற்படி, தான்

தோன்றத்தூண், பிரஹ்லாதன் முதலிய ஹிரண்யகசிபுவின் அழிவிற்கான சூழ்நிலையை அமைத்துகொண்டாலன்றித் தேவியால் ஹிரண்யகசிபுவை அழித்துவிடமுடியாது. இது எளிதானதல்ல. தேவி தனது மாயையால் கட்டுப்பட்டுவிட்டாள் எனப் பண்டன் எதிர்பார்த்தான். அஸுரன் அவைகளைப் படைக்க எடுத்துக்கொண்ட நேரமோ உழைப்போ மிக அதிகம். தேவிக்கு அத்தனை நேரமும் உழைப்பும் தேவை இல்லை. நொடிப்பொழுதில் விரல்களின் நுனியிலுள்ள நகங்களைச் சுண்டினாள். நாராயணனின் 10 அவதாரங்கள் தோன்றின. அஸுரர்கள் மாய்ந்தார்கள். பிரும்மத்திற்கு உலகைப் படைக்கவும், அழிக்கவும் க்ஷண நேரம்தான் தேவை. கண் இமைப்பதற்கு எப்படி உழைப்பு தேவையில்லையோ, தானே இயற்கையாக அது நடந்துவிடுமோ அப்படியே பிரும்மத்தின் கிருத்யங்கள் நடைபெறுகின்றன. (18 - 7) (80)

**18. மஹா - பாசுபத - அஸ்த்ர - அக்நி - நர்தக்த்த - அஸுர - ஸைநிகா. மஹாபாசுபதம் எனும் அஸ்த்ரத்திலிருந்து உண்டான நெருப்பால் அசுரப் படையினரை எரித்தவள்.**

18 - 1. பாசுபதம் எனும் அஸ்திரமே உலகை எரித்துவிடும். இதனை வேடன் வேஷம் பூண்டு தன்னோடு போராடிய பரமசிவனிடமிருந்து அர்ஜுனன் பெற்றான். இதனைவிடப் பல மடங்கு சக்திவாய்ந்தது மஹாபாசுபதம் எனும் அஸ்திரம். பாசுபதத்திற்கு ஈசுவரர் என்ற முக்குணஸ்வரூபி தேவதை. மஹாபாசுபதத்திற்கு முக்குணத்திற்கும் அப்பாற்பட்ட ஸதாசிவர் தேவதை. (ஈசுவரர் ஸதாசிவர் பேத விளக்கம் 17-24-3). மஹாபாசுபதம் எனும் ஸதாசிவாஸ்திரத்தைக் கொண்டு பண்டனது மமதையாகிற சேனைகளைத் தேவி சுட்டுச் சாம்பலாக்கிவிட்டாள். அஞ்ஞானத்தால் எழுந்த மமகாரம் அழிந்ததும் அஹங்காரம் வலிவிழந்துவிடுகிறது. (81)

**(நா. 82 - 84)**

कामेश्वरास्त्रनिर्दग्धसभण्डासुरशून्यका ।
ब्रह्मोपेन्द्रमहेन्द्रादिदेवसंस्तुतवैभवा ॥ 33 ॥

**காமேச்வராஸ்த்ர நிர்தக்த ஸபண்டாஸுர சூன்யகா**
**ப்ரம்ஹோபேந்த்ர மஹேந்த்ராதி தேவஸம்ஸ்துதவைபவா 33**
**ஹரநேத்ராக்நி ஸந்தக்த்த காமஸஞ்ஜீவநௌஷதி :**

**19. காமேச்வர - அஸ்த்ர - நிர்க்த்த - ஸ - பண்டாஸுர -**

**சூன்யகா, காமேச்வராஸ்திரத்தால் பண்டனையும் அவனோடு சூன்யகம் எனும் அவனது நகரத்தையும் எரித்தவள்.**

19 - 1. சோணிதம், சூன்யகம் என்பது பண்டன் தனக்கென அமைத்துக்கொண்ட அஸுர ராஜ்யத் தலைநகரம். சோணிதம் - இரத்தம். மனிதனின் ஆணவத்திற்குப் பலமளிப்பது இரத்தம். இரத்தத்திமிர் பிடித்தவன் இரத்தம் செத்தால் மடிவான். இரத்தம் போல் செந்நிறமுள்ளதால் சோணிதபுரம், சூன்யகம் - ஒன்றுமில்லாதது. இருப்பதுபோல் தோற்றமளித்து வந்தது. தேவியின் நகரமும் செந்நிறமுள்ளதே. ஆனால் நிறைவுள்ளது - ஶ்ரீநகரம். இதுகாறும் பண்டனிடம் அழியாதிருந்தது அவனும் அவன் உறையும் நகரமும், நகரத்தையும் தான் என்றே நினைத்து தன்னைப்போல் அதுவும் அழியாதென்று இறுமாப்புடன் இருந்தான். காமேசுவர அஸ்திரம் இச்சாசக்தி வடிவானது. நினைத்ததைச் செயலாற்றும் பிரும்மத்தின் சக்தி செயலாற்றியது. சூன்யக நகரம் சூன்ய நிலையை அடைந்தது. பண்டன் என்ற ஜீவனின் தனித்தன்மையாகிற பகட்டும் அழிந்தது. நிர்தக்த்த - மீதமின்றி எரிக்கப்பட்டது. சாம்பல்கூட மீதமில்லை. அப்படி எல்லாம் சூன்யமாயிற்று. தான் என்ற ஜீவபாவனை அழிந்ததும் பரம்பொருள் ஒன்றே மீதமானது. (82)

**20. ப்ரம்ஹ - உபேந்த்ர - மஹேந்த்ர - ஆதி - தேவ ஸம்ஸ்துத - வைபவா, பிரும்மா, நாராயணன், இந்திரன் முதலான தேவர்களால் துதிக்கப்பட்ட பெருமையுள்ளவள்.**

20 - 1. நாராயணர் இந்திரனுக்குத்த தம்பியாக, இந்திரனின் தாயான அதிதி தேவியிடத்தில் வாமனராகத் தோன்றி, பலியை ஜயித்து இந்திரனுக்குத் துணை நின்றதால் உப இந்திரர் ஆனார். தேவர்கள் அனைவரும் பண்டன் விளைவித்தக் கொடுமையால் தத்தம் தெய்விகப் பணிகளைப் புரிய முடியாதவாறு ஆயிற்று. தேவி பண்டனது கொடுமைகளிலிருந்தும் தேவர்களை விடுவித்தாள். அப்போது தேவர்கள் தேவியின் பெருமையை உணர்ந்து போற்றினார்கள். அவளது அருளால் அவளது சக்தியின் அம்சத்தைப் பெற்றதால் தேவர்கள் தெய்விகப் பணிகளை நிறைவேற்ற முடிந்தது. இது அவளது வைபவம் - விபுத்தன்மை - ஸர்வாத்துமத்துவம். அவளது ஸர்வாத்துமத்துவத்தை - எல்லாமா யிருக்கும் தன்மையை எல்லாப் பொருள்களிலும் ஆத்மாவாக அந்தர்யாமி யாக இருந்து ஆட்டுவிக்கும தன்மையைத் தேவர்கள் உணர்ந்து போற்றினர். (83)

**21. ஹர - நேத்ர - அக்நி - ஸந்தக்த் - காம - ஸஞ்ஜீவந - ஓஷதி: ஹரனின் கண்களிலிருந்து தோன்றிய அக்னியால் எரிக்கப்பட்ட காமன் மீண்டும் உயிர்த்துப் பூரண நிலையில் எழ உதவிய ஸஞ்சீவினிப் பச்சிலையாக இருந்தவள்.**

21 - 1. உலகை அழிக்கப்புறப்பட்டவர் ஹரன். அவர் மிகவும் விரக்தர் - பற்றற்றவர். அவர் பற்றை - காமனை எரித்தார். தேவி அதே ஹரனைத் தன்பால் ஈர்த்துக் காமனுக்கும் ஈசுவரனாக்கினாள். தகப்பன் அதட்டி மிரட்டும்போது தாய் அணைத்து ஆறுதல் கூறுவாள். ஹரனின் கண்களில் கோபம் குடியிருந்தது. காமக் கண்ணியான காமாக்ஷியின் பார்வை பட்டதும் கோபம் மறைந்து காமம் கண்களில் மிளிர்ந்தது. காமனான ஈசுவரன் காமேசுவரர். காமேசுவரியின் நோக்கோடு கலந்த காமேசுவரரின் நோக்கு சூன்யமாகிவிட்ட மன்மதன் மேல் விழுந்தது. மன்மதன் மீண்டும் உயிர்த்தெழுந்தான். சிவனையும் தன் சக்திக்கு உட்படுத்த முடியும் என்ற ஆணவம் அழிந்து தெய்வத் தன்மையை உணர்ந்த காமன் தோன்றினான். ரதி தன் கழுத்தில் துலங்கும் மங்களநாணைப் பார்த்து மகிழ்ந்தாள். தேவியும் இந்தத் தோற்றத்தில் புதிதாகக்காமேசுவரனால் தனக்குக் கட்டப்பட்ட மங்களநாண் தோற்றுவித்த மங்களச் சூழ்நிலையைக் கண்டு அகமகிழ்ந்தாள். தேவி ஸ்ரீலலிதையாகத் தோன்றியதன் பணி மங்களமாக நிறைவேறிற்று.

21 - 2. ப்ரும்ஹ தத் மங்களம் பரம் அந்தப் பிரும்மமே மேலான மங்களமாகும். ஜீவன் தான், தனது என்ற இரு பந்தங்களிலிருந்தும் விடுபட்டுத் தனது சுயநிலையான அது வாகி நிற்கும் மங்களமானான்.

21 - 3. ஸம்ஹார சக்தி படைத்த ஹரன் என்ற பிரும்மத்தால் ஒடுக்கப்பட்ட உலகம் ஈசுவரனால் மூலப் பொருளாக்கப்பட்டு பிரும்மத்திடமே சேர்க்கப்பெறுகிறது. (9-7-1) மறுபடியும் தேவி காமேசுவரரது நோக்கினால் ஸ்ருஷ்டிக்கான ஸங்கல்பம் கொண்டு ஸதாசிவர் எனும் பிரும்மமாகி உலகைப்படைக்க அருள்கிறாள். மறுபடி உலகப் பணி தொடர்கிறது. உலகு மறுபடி தோன்ற அருள்பவளும் அவளே. (நா. 264, 274)

21 - 4. காமேசுவரி தன் சக்தியின் அம்சத்தை மற்ற தேவதைகளுக்கு அளித்ததுபோல் மன்மதனுக்கும் அளித்து அவனையும் காமனாக்கினாள். இதுவே காமஸஞ்ஜீவனம். (84)

* * *

### அதிகாரம் - 11

## தேவியின் ஸூக்ஷ்மரூபம் – மந்திரம்

(நா. 85 - 89)

श्रीमद्वाग्भवकूटैकस्वरूपमुखपङ्कजा ॥ 34 ॥
कण्ठाधः कटिपर्यन्तमध्यकूटस्वरूपिणी ।
शक्तिकूटैकतापन्नकट्यधोभागधारिणी ॥ 35 ॥
मूलमन्त्रात्मिका मूलकूटत्रयकलेबरा ।

**ஸ்ரீமத்வாக்ப்பவகூடைகஸ்வரூபமுகபங்கஜா 34**
**கண்டாத: கடிபர்யந்த மத்த்ய கூடஸ்வரூபிணீ.**

**சக்திகூடைகதாபந்த கட்யதோபாகதாரிணீ. 35**
**மூலமந்த்ராத்மிகா மூலகூடத்ரயகலேபரா.**

**1. ஸ்ரீமத் வாக்ப்பவ கூட ஏக ஸ்வரூப முக பங்கஜா.**
**சிறப்பு மிக்க வாக்ப்பவ கூடம் தனிச்சிறப்புள்ள தனது உருவத்தில் தாமரை போன்ற முகமாக அமையப்பெற்றவள்.**

1 – 1. தேவியின் ஸ்தூல உருவத்தையும், அதன் தோற்றத்திற்கான காரணத்தையும் அந்தத் தோற்றத்தின் மூலம் துஷ்டர்களைச் சிக்ஷித்து சிஷ்டர்களைக் காப்பாற்றுதல் என்ற காத்தல் பணியை நிறைவேற்றிய விதத்தையும் வாக்தேவதைகள் 4 - 84 நாமங்களால் விளக்கினர். இனி தேவியின் ஸூக்ஷ்ம உருவை விளக்கிக் கூறுகின்றனர். ஸூக்ஷ்ம உரு இருவகையில் அமைகிறது. ஒன்று மந்திரமயமானது. மற்றொன்று குண்டலினீ சக்திவடிவானது. அவளது மந்திரம் ஸ்ரீவித்யை. மந்திரமயமான உருவிலும் தியானத்திற்கு ஏற்றதாக முகம், கை, கால் முதலிய அவயவகல்பனை உண்டு.

1 – 2. ஸ்ரீவித்யை - பஞ்சதசாக்ஷரீ 15 அக்ஷரங்கள் கொண்டது. அவை கேலஹ்ரீம், ஹஸகஹலஹ்ரீம், ஸகலஹ்ரீம். முதல் ஐந்து அக்ஷரங்களை வாக்ப்பவ கூடம் என்றும் நடுவில் உள்ள ஆறு அக்ஷரங்களைக் காமராஜ கூடம் என்றும் கடை நான்கு அக்ஷரங்களைச்

சக்திகூடம் என்றும் கூறுவர். (கூடம் – கூறு) ஸ்ரீவித்யா மந்திரங்கள் பல உண்டு. ஒவ்வொன்றிலும் இந்த மூன்று கூடங்கள் உண்டு.

1 – 3. தேவி யாககுண்டத்திலிருந்துதோன்றியபோது முதலில் முக மண்டலம் வெளியானது. மனம் வெளியே செல்லப் பயன்படுத்தும் பொறிகளில் பெரும்பாலானவை அமைந்த இடம் முகம். வாக்கை முக்கியமாகக் கொண்ட தேவியின் முகத்திலிருந்தும் தோன்றியது வாக்பவம் என்னும் கூடம். அந்தவாக்பவ கூடம் க ஏ ஈ ல ஹ்ரீம் என்ற ஐந்து அக்ஷரங்களால் அமைந்த கூறு. அது தேவியின் மந்திரத்தாலான வடிவில் முகமாகத் தோன்றுகிறது. வாக்பவகூடம் ஞானம் வெளிப்படுமிடமானதால் ஸ்ரீமத் – சிறப்புமிக்கதாகிறது. இதுதேவியின் ஞான சக்தி. (85)

**2. கண்ட - அத: - கடி - பர்யந்த - மத்ய - கூட - ஸ்வரூபிணீ. கழுத்திலிருந்து இடுப்பவரையுள்ள பாகமாக அமைந்த மத்திகூடமெனும் காமராஜ கூடத்தோடு கூடியவள்.**

2 – 1. பஞ்சதசாக்ஷரியின் நடுவில் அமைவதால் இது மத்திய கூடம். உலகில் கழுத்திற்குக்கீழ் இடுப்பவரை உள்ள பகுதி நடு உடல், ஹ ஸ க ஹ ல ஹ்ரீம் என்ற ஆறு அக்ஷரங்கள் அமைந்த மத்திய கூடம். மந்திரமயமான தேவியின் சரீரத்தில் நடு உடலாக அமைந்துள்ளது. ஆசை – விருப்பம் வெளிப்படுமிடமாகையால் இது இச்சாசக்தி வடிவம். (86)

3. சக்தி கூட ஏகதா ஆபந்ந கடி அதோ பாக தாரிணீ. சக்தி கூடத்துடன் ஒன்றிய இடுப்பின் அடிப்பகுதியைத் தாங்கியவள்.

3 – 1. படைக்கும் சக்தியான கிரியா சக்தி வெளிப்படுமிடம் இடுப்பின் கீழ்பகுதி. மந்திரத்தின் கடைப்பகுதி படைக்கும் சக்தி அமைந்தது. ஸ க ல ஹ்ரீம் என்ற நான்கு அக்ஷரங்கள் பஞ்ச தசாக்ஷரியின் கடைப்பகுதியான சக்தி கூடம். தேவியின் மந்திர மயமான வடிவில் இடுப்பின் கீழ்பகுதியாக இது அமைந்துள்ளது. இக்கூடம் கிரியா சக்தி வடிவம். (87)

**4. மூல - மந்த்ர - ஆத்மிகா. மூலமந்த்ரமே தானாகி நிற்பவள்.**

4 – 1. தேவியின் பஞ்சதசாக்ஷரி அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கு புருஷார்த்தங்களுக்கும் காரணம். ஆதலால் மூலம், மந்திராக்ஷரங்கள், அவைகளில் வெளிப்படும் தேவதாசக்தி, அந்த தேவதையின் ஸ்வரூபம் இவைகளை இணைத்து இடைவிடாது வேறு

நோக்கில்லாமல் சிந்தனை செய்வது மனனம். இதனால் தேவியின் பூர்ண ஸ்வரூபமாகத்தான் ஆகம் உணர்வு ஏற்படும். தேவியாகும் உணர்வைத் தருவதால் ஜபிப்பவனை பிறப்பெனும் சுழலிலிருந்து மந்திரம் காப்பாற்றுகிறது. மனனம் - சிந்தனையால் தேவியுடன் ஒன்றிப்போதலாகும். திராணம் - ஸம்ஸாரச் சுழலிலிருந்தும் பெறுகின்ற பாதுகாப்பாகும். இரு குணங்கள் பெற்றமையால் மந்த்ரம் ஆகிறது (பூர்ண - அஹந்தா - அனுஸந்த்யாத்மா ஸ்பூர்ஜந் மநந - தர்மத:; ஸம்ஸார - க்ஷயக்ருத் த்ராணதர்மதோ மந்த்ர: உச்யதே) புருஷார்த்தங்களுக்கு மூலமாயும், மனனத்தால் பிறவித் தளையிலிருந்தும் விடுவிப்பதுமான பஞ்சதசாக்ஷரி எனும் மூலமந்திரமாக இருப்பவள் தேவி.

4 - 2. பஞ்சதசாக்ஷரியின் எழுத்துக்களில் சில சிவாம்சம் பெற்றவை. சில சக்தியம்சம் பெற்றவை. சில சிவசக்தியம்சங்கள் பெற்றவை.

அதன் விளக்கம் பின்வருமாறு :

| | வாக்ப்பவகூடம் | காமராஜ கூடம் | சக்தி கூடம் |
|---|---|---|---|
| **மந்திரம்** | க ஏ ஈ ல ஹ்ரீம் | ஹ ஸ க ஹ ல ஹ்ரீம் | ஸ க ல ஹ்ரீம் |
| **சிவன்** | க | ஹ க ஹ | க |
| **சக்தி** | ஏ ஈ ல | ஸ ல | ஸ ல |
| **சிவசக்தி** | ஹ்ரீம் | ஹ்ரீம் | ஹ்ரீம் |

மற்றொரு வகையிலும சிவசக்தி அம்சங்களைப் பிரிக்கலாம். சிவன் மெய்யெழுத்து, சக்தி உயிர் எழுத்து.

அதன் விளக்கம் பின்வருமாறு:

| | | | |
|---|---|---|---|
| **சிவன்** | க் ல் ஹ்ர், | ஹ் ஸ் க் ஹ் ல் ஹ்ர் | ஸ் க் ல் ஹ்ர் |
| **சக்தி** | அ ஏ ஈ அ ஈ | அ அ அ அ அ ஈ | அ அ அ ஈ |
| **சிவசக்தி** | ம் | ம் | ம் |

4 - 3. பஞ்சதசாக்ஷரியின் மொத்த சக்தி ஹ்ரம் லுள்ள ஈம் ல் அடங்கியுள்ளது. ஈம் ஐக்காமகலா என்பர். அதுவே மந்திரத்தின் மூலம், வேர். அதனால் மூலமந்திரம். தற்போது நாம் எழுதும் ஈ என்ற எழுத்துக்கு ஆதிலிபியில் மூல வடிவம் ஒரு செங்குத்துக்கோட்டின் மேல் அர்த்த சந்திர வடிவமும், கோட்டின் இருபுறமும் இரு பிந்துக்களும், அடியில் ஒரு முக்கோணமும் கொண்டது ம் என்ற பிந்துவை அதன் தலையிலிட வேண்டும் (பிந்து - சிறு சுழி) ஒரு பெண்ணின் உருவம் போல் அது

அமையும். தலையில் உள்ள பிந்து முகம் போலவும், செங்குத்துக்கோடு உடல் போலவும், அதன் இருபிறமும் உள்ள இரு பிந்துக்கள் இரு ஸ்தனங்கள் போலவும், அடியிலுள்ள முக்கோணம் இடுப்பின் கீழ்பகுதி போலவும தியானிக்கத்தக்கதாக உள்ளதை உணரலாம். அந்த ஆதிலிபி வடிவத்தை ஒட்டி அதிலிரிருந்து தோன்றிய பல லிபிகளில் ஈயின் வடிவங்களை இன்று கல்வெட்டுகளில் காணமுடிகிறது.

4 – 4. ஹ்ரீம் க்லீம் ஶ்ரீம் முதலிய பீஜாக்ஷரங்களில் உள்ள ஈம் ஒரு பெண்ணுருவம் கொண்டுள்ளதையொட்டி இதனைக் காமகலையாகத் தியானம் செய்யும் முறை ஒன்று உண்டு. கலாப்ப்யாம் சூடாலங்க்ருத சிகலாப்ப்யாம், என்ற சிவானந்த லஹரியின் முதல் சுலோகத்தின் முகப்பில் இந்த ரஹஸ்யத்தை ஶ்ரீ சங்கர பகவத் பாதர் வெளியிட்டுள்ளார். ஸௌந்தர்யலஹரியின் 19வது சுலோகம் இதனை விளக்குகிறது.

---

1 2 3 4 5 6 7 8 9

123456789

முதல் எட்டும் கல்வெட்டுகளில் காணப்படும் ஈ என்ற எழுத்தின் வடிவங்கள். 9வது ஈம் என்ற காமகலாக்ஷரத்தின் வடிவம். மந்திர நூல்களிலும் ஸௌந்தர்யலஹரீ 19வது சுலோகத்திலும் குறிப்பிட்டுள்ளதை ஒட்டிக் கற்பனையால் வரையப்பெற்ற வடிவம். 1 – 8வரை குறிப்பிட்டுள்ள லிபி வடிவிற்கு மூலமான ஆதி லிபியில் இந்த அமைப்பு இருந்திருக்கக்கூடும். மந்திர நூல்களிலும் மற்ற நூல்களிலும் காமகலாவின் வடிவம் ஒரே விதமாகக் குறிப்பிடப்பட்டுள்ளதே இந்த ஊகத்திற்குக்காரணம். 1 – 8 வடிவங்களில் 3வது தான் மிகப்பழையது. குகைகளிலுள்ள தமிழ் கல்வெட்டுகளில் காணப்பெறுவது. கி.மு மூன்றாம் நூற்றாண்டில் செதுக்கப்பெற்றது. 1. க்ஷத்ரபர்கல்வெட்டு (கி.பி. 2ம் நூற்றாண்டு) 2. ஸாதவாஹனர் (கி.பி. 2ம் நூற்றாண்டு) 4. குப்தர் (கி.பி. 4ம் நூற்றாண்டு) 5. பல்லவர் (5ம் நூற்றாண்டு) 6. பிரதிஹாரர் (9ம் நூற்றாண்டு). 7. ராஷ்டிரகூடர் (9ம் நூற்றாண்டு) 8. சோழர் (13ம் நூற்றாண்டு) ஆதாரம் : திரு. சிவராம மூர்த்தியின் கல்வெட்டுகளும் எழுத்துக்களும், கலைக்களஞ்சியம், பகுதி 2, பக்கம் 180, பத்தி 1.

**முகம் பிந்தும் க்ருத்வா குசயுகம் அதஸ் தஸ்ய தததः**
**ஹரார்த்தம் த்யாயேத்தயோ ஹரமஹிஷி தே மந்மதகலாம்.**
**ஸ ஸத்ய: ஸம்க்ஷோபம் நயதி வநிதா இத்யதிலகு**
**த்ரிலோககீமப்யாக ப்ப்ரமயதி ரவீந்துஸ்தநயுகாம்.**

காமேசனின் பட்டமஹிஷியே! (ஈம் என்றஅக்ஷரத்தில் உள்ள) பிந்துவை முகமாகவும் அதன் கீழ் (இரு பிந்துக்களை) இரு ஸ்தனங்களாகவும், அதன் கீழ் (முக்கோண வடிவை) பெண் வடிவிலுள்ள யோனியாகவும் காமகலாவாகத் தியானம் செய்பவன் பெண்களை மயக்குவது மிக எளிது; மூன்று உலகங்களையும் மயக்குவான்.

காமகலாக்ஷரத்தைப் பெண் வடிவிலும் பெண் வடிவைத் தேவியின் மூல மந்திரமான காமகலாக்ஷரமாகவும் தியானம் செய்பவன் வசீகரண சக்தி பெறுகிறான் என்பதும் இதன் உட்பொருள். ஸௌந்தரியலஹரிக்கு உரை எழுதியவர்களுள் ஆநந்தகிரி என்பவர் மந்திர ரஹஸ்யங்கள் நன்கறிந்தவர். ஆனந்தவாரக்ருத்ஸ்னர் என்று சங்கராசாரியரின் (சங்கரர் அமைத்த பீடங்களில் ஆசாரியராக இருந்தவர்) சீடராகத் தம்மை அறிமுகப்படுத்திக் கொள்கிறார். இவரது உரை நேபாள அரசரின கோசாலயத்தில் இருந்த சுவடியிலிருந்து பெறப்பட்டது. இவர் இங்கு எழுதியுள்ள உரைப்பகுதி நல்ல விளக்கம் தருகிறது.

ஹே ஹர மஹிஷி, யஸ்தவ மந்மதகலாம், மந்மதசப்தேந காமராஜபீஜம் க்லீம் இத்யாகாரம், தஸ்ய கலாம் ஏகதேசம் ஈமிதி: தத்ர ஈங்காரஸ்ய லேகநே பிந்துத்ரயாத்மகமேவரூபம் ஜாயதே; தத்ர ஏகோ பிந்து: உபரி, பிந்துத்வயம் அத:, தத்ர உபரிதநோ பிந்து: பரமேச்வர்யா முகத்வேந த்யேய:, அதஸ்தநம் பிந்துத்வயம் குசயுகத்வேநத்யேயம்; தஸ்ய அத: த்ரிகோணாகாரம் மோஹந மந்திரம் த்யேயமிதி; ததேவ ஸகாரார்த்தம், ஹகாரஸ்ய உபரிதநே பாகே அர்த்தலுப்தே ஸதி அதோ அர்த்தபாக: த்ரி கோணோ யோந்யாகாரஸ் திஷ்டதி.

மந்மத கலாம் – காமராஜ பீஜமான க்லீம் என்பதன் பகுதி ஈம் என்பது. அதில் ஈம் என்பதை எழுதும்போது மூன்ற பிந்துக்களுள்ள வடிவம் ஏற்படும். ஒரு பிந்து மேல், இரு பிந்துக்கள் கீழ். மேலுள்ள பிந்து தேவியின் முகமாகத் தியானம் செய்யத்தக்கது. கீழுள்ள இரு பிந்துக்கள் இரு ஸ்தனங்களாகத் தியானம செய்யத்தக்கவை. அதன்கீழ் முக்கோண வடிவுள்ளது மறைவிடமாகத் தியானிக்கத்தக்கது. மறைவிடம் ஹ என்ற எழுத்தின் பாதி (ஹகாரார்த்தம்) என சுலோகத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. ஹ என்ற எழுத்தின் மேல்பகுதியை அழித்துவிக் கீழ்பாதி முக்கோண வடிவில்

யோநிபோல் இருக்கிறது. இந்த காமகலாக்ஷரமே மூல மந்திரம். அதன் வடிவில் இருப்பவள் தேவி. காஞ்சியிலுள்ள ஸ்ரீ காமாக்ஷி அன்னையின் கோயிலில் ஸ்ரீ காமாக்ஷியின் இடதுபுறத்தில் உள்ள அரூப காமாக்ஷியை இந்தக் காமகலா வடிவில் காணலாம்.

4 - 5. ஸ்தூலம் ஸூக்ஷ்மம் என்று இரு பிரிவில், ஸ்தூலம், உடல், ஸூக்ஷ்மம் ஆத்மா, மந்திரத்தின் எழுத்து உடல், அதனை மனனம் செய்கையில் அதன் உட்பொருளாக மனத்தில் படியும் அதன் விரிவு ஆத்மா. மூலமந்திரத்தின் உட்பொருளாக உணரப்படுபவள் தேவி.

4 - 6. மூலம் என்றால் முதற்காரணம். உலகின் தோற்றத்தில் முதலாக வெளியானது சப்தம் எனும் தன்மாத்திரம் - ஒலி எனும் சக்திமிக்க ஸூக்ஷ்ம பூதமான ஆகாய்ம. அது கிரமமாக ஸ்தூல நிலை பெறும்போது வரும் முதல் வடிவம் அக்ஷரம் - எழுத்து. அக்ஷரம் - அழியாதது. அக்ஷரங்கள் சேர்ந்து சொல் வடிவமாகிறது. அப்போது அது க்ஷரம் - அழியக்கூடியது. இந்த சொல் என்று நன்கு வெளிப்பட்ட ஒலி வடிவத்திற்கு மூலமாக உள்ளஅக்ஷரத்தை மாத்ருகா என்பர். மாதா - தாய்; மாத்ருகா - சக்திமிக்க - அழகான - ஸூக்ஷ்மமான தாய்; விஸ்தரிக்கவிருக்கும் சப்தப் பிரபஞ்சத்தைத்தன்னுள் அடக்கிக்கொண்டவள். சொல்லின் சக்தி அனைத்தும் ஸூக்ஷ்மமாய் அதன் மூலமான அக்ஷரத்தில் அடங்கியுள்ளது. ஸ்ரீமாதாவி மற்றோர் உருவம் மாத்ருகா.

4 - 7. மந்திரங்கள் இந்த சக்திமிக்க மாத்ருகைகளாலானது. உலகியலில் குடம், மனிதன் முதலிய சொல் வடிவங்களில் அக்ஷரங்கள் தொகுப்பிற்குத்தான் பொருள் உண்டு. தனி எழுத்தின் பொருள் வெளிப்படுவதில்லை. மந்திரங்களில் முழுச் சொல் வடிவத்திற்கு மட்டும் முக்கியத்துவமில்லை. ஒவ்வொரு அக்ஷரத்திற்கும் அக்ஷரத்தின் பகுதிகளுக்கும் கூடத் தனிப்பொருளும், சக்தியும் உண்டு. அதனால் இந்த அக்ஷரங்களை பீஜ - அக்ஷரங்கள் என்பர். பீஜம் - விதை. விதை போல் ஒவ்வொரு அக்ஷரமும் இனிப் பெறவிருக்கும் மிக விரிவான தோற்றத்தைத்தன்னுள் அடக்கிக்கொண்டுள்ளது.

---

இவை மௌர்யர்கள் (கி.மு. மூன்றாம் நூற்றாண்டு) பட்டப்பரோலு (கி.மு. மூன்றாம் நூற்றாண்டு) கல்வெட்டிலுள்ள ஹ எழுத்து வடிவங்கள். இவைகளின் மூல லிபியில் மந்திர நூல்கள் காணும் ஹ லிபியின் கீழ்கபகுதி முக்கோணம் கொண்டதாக அமைந்திருக்கக்கூடும்.

விதைக் குவியலிலுள்ள ஒவ்வொரு விதையும் மரமாகக் கூடியது. ஒவ்வொன்றும் தனித்த முக்கியத்துவம் கொண்டது.

4 - 8. இத்தகைய சக்திமிக்கதும், உலகின் காரணமும் மனன - த்ராண சக்தி கொண்டதுமான அக்ஷரங்களாக வெளிவந்த முதல் சொல் தொடர் வேதம். இதுவே எல்லா மந்திரங்களுக்கும் மூலம். அதன் சக்திமிக்க அக்ஷரங்களிலிருந்து தொகுக்கப்பட்டவையே மந்திரங்கள். அதன் வடிவானவள் தேவி.

4 - 9. மந்த்ரம் என்பது ரகசியமாகக் காப்பாற்றக்கூடியது. அரசாங்கத்தின் திட்ட நிலையிலுள்ள யோசனைகளை - செயல் வடிவில் வரவிருப்பவைகளை மந்த்ரம் என்பர். அதைப் பிறர் அறியாது காப்பாற்றுபவன் மந்த்ரீ - மந்திரி. திட்ட நிலையிலிலேயே அவை வெளிப்பட்டால் பயனற்றுப் போய்விடும். அதுபோல் ரகிசியமாகக் காப்பாற்றகூடியது மந்த்ரம். அதனால்தான் அதை மனனம் செய்கிறோம். மனத்தினுள் அதன் ஸ்தூல - ஸூக்ஷ்ம வடிவங்களைக் காண்கிறோம். சொல் கேட்கப்படுவதாக ஆக வாய் வழியே வெளியாக வேண்டும். வாய்வழியே வெளியிடப்படும் அக்ஷரத்தின் சக்தி குறையும். அதனால் மனன நிலையில் காப்பாற்றக்கூடியது மந்திரம். மந்திரங்களுக்கும் மூலமான இந்த பஞ்சதசாக்ஷரீ மிகமிக ரகசியமாகக் காப்பாற்றத்தக்கது. அத்தகைய மூல மந்திரவடிவினள். (88)

**5. மூல - கூட - த்ரய - கலேபரா. மூல மந்திரத்தின் மூன்று கூடங்களையே தனது உடலாகக் கொண்டவள்.**

5 - 1. மூல மந்திரத்தின் வாக்பவம், காமராஜம், சக்தி என்ற மூன்று கூறுகளையும் தன் உடலாகக் கொண்டவள். மூன்று கூடங்களாக அமைந்த அக்ஷரங்களையே தன் ஸ்தூல உருவாகக் கொண்டவள். காமகலையில் மேலுள்ள பிந்து, நடுவில் உல்ள இரு பிந்துக்கள், கீழ் அமைந்த திரிகோணம் ஆக மூன்று கூறுகளாகப் பிரிந்த உடலமைப்பு கொண்டவள். (முன் நாமத்தில் கூறியுள்ள விளக்கங்கள் அனைத்தையும் இங்கு பொருத்திப் பார்க்கலாம்). (11.4.3-4). (89)

❋ ❋ ❋

அதிகாரம் - 12

# தேவியின் ஸூக்ஷ்மரூபம் – குண்டலிநீ

(நா. 49 - 54)

कुलामृतैकरसिका कुलसंकेतपालिनी ॥ 36 ॥
कुलाङ्गना कुलान्तस्था कौलिनी कुलयोगिनी ।
अकुला समयान्तस्था समयाचारतत्परा ॥ 37 ॥

**குலாம்ருதைகரஸிகா குலஸங்கேதபாலிநீ. 36**
**குலாங்கநா குலாந்தஸ்த்தா கௌலிநீ குலயோகிநீ.**
**அகுலா ஸமயாந்தஸ்த்தா ஸமயாசாரதத்பரா. 37**

**1. குல - அம்ருத - ஏக - ரஸிகா. குலாம்ருதத்தில் மட்டும் ஈடுபாடுள்ளவள்.**

1 - 1. எங்கும் நிறைந்துள்ள ஸூக்ஷ்மமான சக்தி மந்திரத்தின் அக்ஷரங்களில் குவிந்துள்ளது. அதனை ஒலி வடிவில் உருவகப் படுத்த முடிகிறது. அதே சக்தி ஒவ்வொரு ஜீவனிடத்திலும் குண்டலிநீயாக உள்ளது. மனிதனிடத்தில் அது சக்தியாக வெளிப்படுகிறது. யோகினியிடத்தில் மிகச் சிறப்பாக வெளிப்படுகிறது.

1 - 2. மனித உடலின் நடுப்பகுதியின் கீழ்பகுதியில் உள்ள ஆஸனத் துவாரத்திலிருந்து தலையிலுள்ள பிரும்மரந்திரம் வரை குண்டலினீ செல்லும் ஸூஷும்நாநாடி உள்ளது. தலையில் உள்ளுச்சிக்குழி பிரும்மரந்திரமாகும். கருவில் உள்ள உடலில் ஜீவன் பிரவேசித்த இடம் இது. பிரும்மத்தை உணர்ந்த யோகியின் பிராணசக்தி பிரும்மத்துடன் கலக்க இவ்வழியாக வெளியில் செல்லும். அதனால் இது பிரும்மரந்திரம். ஸூஷும்நாநாடி முதுகில் உள்ள முள்லந்தண்டில் அமைந்துள்ளது.

1 - 3. வெளி உலகில் குவிந்துள்ள பிராண சக்தியை சுவாசத்தின் மூலம் உட்செலுத்துகிறோம். உள்ளே செலுத்துவதற்கு நாசியில் இரு துவாரங்கள் உள்ளன. ஒவ்வொன்றும் தனித்தன்மை பெற்றவை. இடது நாசித்துவாரத்தின் வழியே அந்த பிராண சக்தி கொண்ட காற்று செல்லும்போது சந்திரனது தன்மையை - குளிர்ச்சியைப் பெறுகின்றது. வலது நாசித்துவாரத்தின் வழியே செல்லும்போது சூரியனது தன்மையை -

வெப்பத்தைப் பெறுகிறது. காற்றிலுள்ள சக்தியை இப்படிப் பிரித்து உட்செலுத்தும் நாடிகள் இடை பிங்கலை என்பவை. அந்த சக்தியைப்போல் அதனைக் கொண்டுசெல்லும் இந்த நாடிகளும் புலப்படாதவை. இவை இரண்டின் வழியே உட்புகுந்த சக்தி மூலாதாரத்தில் அமைந்த குண்டத்தினுள் சேமிக்கப்பெறுகிறது.

1 – 4. குண்டம் – சேமிக்கபெறும் பொருளைத் தாங்கி எளிதில் அது வெளியேறாமல் பாதுகாக்க உதவுமிடம், குடம் போன்றது. அந்த இடத்தில் தங்கி மறைந்திருப்பதால் குண்டத்தில்லயம் பெறுவதால் குண்டலிநீ. பாம்பு ஓய்வு எடுக்கும்போது மனிதனைப்போல் உடலை நீட்டி விரித்துப் படுப்பதில்லை. அது தன் உடலைக் குண்டலம்போல் வளையமாகச் சுருட்டிப் படுத்தக்கொள்ளும். அதனால் பாம்பைக்குண்டலிநீ (பெண் பாம்பு குண்டலினி) என்பர். இப்படிச்சுருட்டிப் படுத்திருக்கின்ற பெண் பாம்பைப்போன்று, சக்தி விரிவு பெறாமல் – வெளியாகாமல்,சுருட்டி அடங்கியிருப்பதால் குண்டலினீ எனப்படுகிறது. (21 – 60) நாகினீ, போகினீ என்ற பெண் பாம்பின் மற்ற பெயர்களைக் கொண்டும் தந்திர சாஸ்திரம் இதனைக் குறிப்பிடும். சக்தியானதால் பெண்பாலாகக் குறிப்பிடுவர். இப்படி அடங்கிக்கிடக்கும் சக்தி கீழ் வழியே வெளிப்படாமலிருக்கத் தடைபோல் கணக்கற்ற இதழ்கள் கொண்ட தாமரைபோல் மூலாதாரத்தின் கீழ் அமைந்துள்ள அகுல சக்கிரம் காப்பாற்றுகிறது. அதேபோல் மெய் வழியே வெளிப்படாமல் இருக்கத்தடையாக, மற்றொரு அகுல சக்கிரம் (ஸஹஸ்ராரம்) பிரும்மரந்திரத்தில் அமைந்துள்ளது. உடலில் குவிந்துள்ள சக்தி இங்ஙனம் வீணாகாமல் பாதுகாக்கப்பபெறுகிறது. இவ்விரு அகுல சக்கிரங்களும் சிவாம்சம் பெற்றவை. இதன் நடுவே சக்தி கீழும் மேலுமாகக் குலசக்கிரங்கள் வழியே பாய்ந்து கொண்டே இருக்கிறது.

1 – 5. இந்த சக்தியின் பெருமை குறிப்பிடவொண்ணாதது. உலகெங்கும் வியாபித்து நின்று படைத்தும், காத்தும், ஒடுக்கியும் மற்றும் பல வகைகளிலும் அரும்பெரும் செயல்கள் புரியும் பராசக்தியே இது. நெருப்பில் சிறிதும் பெரிதும் கிடையாது. அதனைத் தாங்கும் பொருளில்தான் ஏற்றத்தாழ்வு. அதுபோல் மனித உடலில் குவிந்து நிற்கும் குண்டலினிக்கும் உலகெங்கும் பரவியுள்ள பராசக்திக்கும் செயலாற்றலில் எவ்வித வேறுபாடும் கிடையாது. ஆனால் அதன் முழு சக்தியில் கோடியின் ஓரம்சத்தைக்கூட மனிதன் பயன்படுத்துவதில்லை. அவனால் பயன்படுத்த இயலுவதும் இல்லை.

1 – 6. மனிதனிடம் பெரும்பாலும் அது தூங்கிக் கொண்டிருக்கிறது. ஸ்வபிஷி குலகுண்டே குஹரிணி, குண்டலிநீ சக்தியே! துவாரமுள்ள குலம்

எனும் குண்டத்தில் நீ தூங்குகிறாய் (ஸௌந்தர்ய லஹரீ – 10ஆம் ச்லோகம்) தூங்கிக் கொண்டிருக்கும் நிலையில் கூட அது சிறிதளவு வெளிப்படுகிறது. நாம் பொறிகளாலும், மனத்தாலும் உணரும் அறிவு அதன்விளைவே. மனமெனும் குதிரையில் ஏறிப் பொறிகள் எனும் அரண்மனை வாயில் வழியே வெளிப்பட்டுப் புலன்களாகிற ராஜ்ய சுகத்தைச் சக்தி அனுபவித்துத் திரும்புகிறது. அந்த அனுபவமே ஞானம்.

1 – 7. குலம் என்பது அறியப்படும் பொருள், அறிபவன், அறிவு என்ற ஞான குலம் மூன்றைக்குறிப்பிடும், தாய், தந்தை, தநயன் என்ற மூன்றும் சேர்ந்ததை உலகில் பிரஜாகுலம் என்பர். ஆசாரன், சீடன், வித்தை என்ற மூன்றும் சேர்ந்தது குருகுலம். ஒரு வழியைச் சார்ந்தவைகளைக் குலம் என்பர். (குலம் – ஸஜாதீயஸமூஹ:) நான் புத்தகத்தைப்பார்க்கிறேன் எனும்போது பார்க்கின்ற நானும், பார்க்கப்பெறுகின்ற பொருளும், பார்வையுமாக ஒரு இனத்தைச் சேர்ந்த மூன்று அதில் அடங்குகிறது. இந்த மூன்றையும் குலம் என்பர். அறிகிறேன் என்றதும் யார்? எதனை அறிகிறேன்? எப்படி அறிகிறேன் என்ற விளக்கம் பார்வையென்ற அறிவிற்குத் தேவைப்படுகின்றது. இந்த அறிவு ஸாகர ஞானம் – வடிவமுள்ளது. இந்த அறிவைப் பெற உள்ளொளி ஒன்று தேவை. அது குண்டலினீ. அந்த உள்ளொளி இந்த மூன்றின் வழியே வெளிப்படுகிறது. அப்படி வெளிப்படும்போது அறியப்படும் பொருளையும் அறியும் நம்மையும் அந்த உணர்வையும் விளக்குகிறது.

1 – 8. இந்த குலஞானத்திற்கு ஆதாரமாக – மூலமாக உள்ள குண்டலினீ உறையுமிடம் குலகுண்டம் எனக்கூறப்பெறும் மூலாதாரம். மூலசக்தியின் உறைவிடம். விரிவை முழு அளவில் பெறும் இடம் – ஸஹஸ்ரார கமலம் என்ற மூளை அமைந்துள்ல இடம். இவ்விரு இடங்களின் இடையே மேலும் கீழுமாகச்செல்லும் இந்த சக்தி நடுநடுவே ஸுஷும்நாநாடியில் தங்குகிறது. அப்படித் தங்கும் இடங்கலில் முக்கியமானவை ஆறு சக்கிரங்கள். மூலாதாரம் (எப்போதும் தங்கியிருக்கும் மூலஸ்தானம்), ஸ்வாதிஷ்டானம் (ஆஸனத்துவாரத்திற்குச் சற்றுமேல் அமைந்தது), மணிபூரகம் (தொப்புள் அமைந்துள்ள இடத்திற்குப் பின்பாகம்), அநாஹதம் (இதயத்தின் பின்புறம்), விசுத்தி (தொண்டையின் பின்புறம்), ஆஜ்ஞா (நெற்றிப் பொட்டின் பின்புறம்) என்பவை அவை.

1 – 9. தூங்கிக் கொண்டிருக்கும் சக்தி இந்தச் சக்கிரங்கள் வழியே வெளிப்பட்டு ரஸம், ரக்தம், தசை, எலும்பு முதலிய தாதுக்களில் பிரதிபலிப்பதால் உடல் வளர்கிறது. பல பரிமாணங்களை ஒவ்வொரு நொடியிலும் பெறுகிறது. உலக அறிவு அனைத்தையும் தருகிறது.

குலசக்கிரங்கள் என்று இந்த சக்கிரங்களுக்குப் பெயர். யோகிகள் பிராண சக்தியை அதிக அளவில் பிராணாயாம பலத்தால் உட்செலுத்தித் தூங்கிக்கொண்டிருக்கும் குண்டலினியை எழுப்பி, இந்த ஆறு சக்கிரங்களிலும் முழு பலத்துடன் பரவச்செய்து, தலையிலுள்ள அகுலசக்கிரம்வரை செலுத்துகிறார்கள். சக்தியை இப்படி முழு பலத்துடன்பரவச் செய்வதால், மற்றவரால் அடையமுடியாத பல சித்திகலை யோகிகள் பெறுகின்றனர். சக்தி சிரசில் உள்ள ஸஹஸ்ரார பத்மம் என்ற அகுல சக்கிரத்தை முட்டும்போது, அங்குள்ள சக்தித் தேக்கம் வெண்ணெய்போல் உருகி, அமிருதமாகக் கசிந்து, கீழே நழுவி, உடல் முழுவதும் ஊடுறுவிப் பாய்கிறது. (ஸுதாதாரா ஸாரை: ... ப்ரபஞ்சம் ஸிஞ்சந்தீ – அமிருதத்தை மழைபோல் பொழிந்து பலதரப்பட்டதாக விரிந்த அறிவுலகை நனைக்கிறாய் – ஸௌந்தர்யலஹரீ சுலோகம் 10). இப்படி அமிருதமாகக் கசிவதே குலாம்ருதம். இந்த அமிருதத்தின் ஒரு சிறு திவலையைத்தான் பொதுவாக நாம் பெறுகிறோம். அது எப்போதும் கசிந்துகொண்டிருக்கிறது. யோகி இதனை மழையாக அனுபவிக்கிறான். இந்த சக்தியைக்கொண்டுதான் குலஞானம் நமக்கு ஏற்படுகிறது. நமக்கு அந்த ஒளியின் உதவி கொண்டு சிற்றறிவு பெறமட்டும் இயலும்.

1 – 10. மூலாதாரம் பிரதிவீதத்துவத்தின் இருப்பிடம், கு – பூமி, கு பூமிதத்துவஸ்தானத்தில் ல தங்கியிருப்பது குலம் – குண்டலினீ. அது சுற்றி வருமிடம் குல சக்கிரங்களான ஆறும். அதன் முழு சக்தி வெளிப்படும்போது பெருகுவது குலாம்ருதம். அதைப்பெருக்கி யோகியைப் பேரானந்தத்தில் அமிழ்த்துவத்தில் மிகவும் சுவையுடன் ஈடுபடுவளானதால் லாம்ருதைக ரஸிகா. (90)

**௨. குல - ஸங்கேத - பாலிநீ. குலத்தின் ரகசியங்களைக் காப்பவள்.**

2 – 1. குலம் என்ற சக்தி மிகவும் ரகசியமான இடத்தில் அடங்கியுள்ளது. அது உடல் முழுதும் பரவிப் பல செயல்களை விளைவிக்கும் முறை நமது அறிவிற்கு அப்பாற்பட்டது. செயலின் விளைவை உணரலாம். அதனைப்பற்றி பல விவரங்கள் தெளிவற்ற முறையில் ஸங்கேத மொழியில் உபதேசிக்கப் பெற்றுள்ளன. யாருக்குப் பிரியவேண்டுமோ அவர்களுக்கு மட்டும் புரியுமாறு அமைந்ததும் கூறுபவனும் கேட்பவனும் முன்னர் அறிந்ததுமான மொழி ஸங்கேதம் – ரகசிய மொழி. குலத்தை – குண்டலினி சக்தியைப் பற்றிய ரகசிய மொழி குல சங்கேதம். அதனைத் தகுதியற்றவர்கள் புரிந்துகொள்ளாதபடி காப்பாற்றுபவள் தேவி குலஸங்கேதபாலிநீ.

2 - 2. குண்டலிநீயைப் பற்றி விளக்கம் மனதில் பதியவும் அதனை அடையும் வழிகளைப்பின்பற்றவும், சித்தி பெறவும் தேவியின் அருள் தேவை. (யமேவைஷ வ்ருணுதே தேந லப்ய: யாரை இறைவன் தகுந்தவன் எனத் தேர்ந்தெடுக்கிறானோ அவனே ஆசிரியன் உபதேசித்ததை அறிய முடியும்) ஏனெனில் அவள் அதை ரகசியமாகக் காப்பாற்றுகிறாள். அதனை விளக்க அவள் ஒருவளால்தான் முடியும். அந்த சங்கேத மொவியைத் தனக்கும் தன்னருள் பெற்ற சாதகனுக்கும் மட்டுமே புரிக்கூடியதாத் தேவி அமைத்துக் கொண்டுள்ளாள். குலஸங்கேத பாலினீ. (91)

**3. குல - அங்கநா. குல ஸ்திரீயாக இருப்பவள்.**

3 - 1. குலத்தின் பெருமையையும் ரகசியங்களையும் அதன் அடிப்படையயும் அழியாமல் காப்பாற்றுபவள் குல - அங்கநா - குல ஸ்திரீ, நற்குலத்தின் பெருமையும் சக்தியும் அவளைச் சார்ந்திருக்கும். அதுபோல் குலம் எனும்குண்டலினீ சக்தியையும் அதனைக் கூறும் சாஸ்திரங்களையும் அவைகளால் பெறப்பட்ட குலஞானத்தையும் குலாங்கனை போன்று காப்பவளானதால் தேவி குலாங்கநா. பதிவிரதை பிறர் கண்களில் படமாட்டாள். பிறர் கண்களில் படும்படியான சூழ்நிலையை அவளது குடும்பமும் ஏற்படுத்தக்கூடாது. அவளும் தன்னை அப்படிக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும். குடும்பமும் அவளை அப்படிக் காப்பாற்றவேண்டும். அதுபோல்தான் இந்த குல சக்தியும் குல வித்யையும் குல ஞானமும். ஸ்ரீவித்யை குல வித்யையாகும். குல ஸ்திரீபோல் தன்னைக் காத்துக்கொண்டு ஸாதகனையும் காப்பாற்றி நன்மை தருபவள். (92)

**4. குல - அந்தஸ் - ஸ்த்தா. குலத்தின் உள்ளே உறைபவள்.**

4 - 1. குலமெனும் குண்டலினியின் உள்ளே உறைபவள். குலஞானத்தினுள் பேரறிவாகத் திகழுபவள். குல தந்திரங்களாகிற வழிபாட்டுமுறை, யோகமுறை, அவைகளின் ரகசியங்கள் இவைகளைப் பற்றிய நூல்களில் ரகசியப் பொருளாயிருப்பவள். எல்லா நற்குணங்களும் துலங்க அவைகளின் சக்தியாக உள்ளிருப்பவள். அப்படி ஒவ்வொரு வீட்டிலும் ஊரிலும் தேசத்திலும் உள் உறைபவள்.

**5. கௌலிநீ. சிவனும் சக்தியும் சேர்ந்த வடிவினள்.**

5 - 1. குலம் - சக்தி. அதற்கு ஆதாரமாயிருப்பது அதற்கு வேறுபட்டிருக்குமானதால் அகுலம் - சிவன். காமேசுவரனிந் மடியில் காமேசுவரனை ஆதாரமாகக் கொண்டு விளங்குபவளல்லவா? இப்படிக்

குலமாயும் அகுலமாயும் உள்ளசக்தியும் சிவனும் ஒரே பொருள். ஒரே பொருள் இரம்டாகப் பிரிந்து தோன்றுவதையும், இரண்டிற்கும் இடையேயுள்ள தொடர்பையும் சிந்தித்து உணர்வது, கௌலமான ஞானம். அதனை உடையவள் கௌலிநீ.

5 - 2. சிவ சக்கிரங்களையும் சக்தி சக்கிரங்களையும் (9 - 10 - 18) தனித்து உருவகப்படுத்தி அவைகளில் சிவனையும் சக்தியையும் பிரித்தும் இணைந்தும் வழிபடுவது கௌல சரியை; அதனை உடையவள் கௌலிநீ.

5 - 3. குல சக்கிரங்களிலும் அகுல சக்கிரங்களிலும் இருக்கும் சிவசக்தி ரூபிணானகுண்டலிநீயாக யோக முறையில் உணர்வது கௌலயோகம். அதனை உடையவள் கௌலிநீ.

5 - 4. குலமெனும் சக்தி எப்போதும் சலனமுள்ளவள், அகுலம் எனும் சிவன் குலத்திற்கப்பாற்பட்டவர். குலத்தன்மை அற்றவர் - அசைவற்றவர். சிவனும் சக்தியும் சேரவேண்டுமானால் அசையாத சிவனை அசையும் சக்தி சென்றடைந்து அணைக்க வேண்டும். அதனால் சிவசக்தி ஸம்பந்தமெம்பது சக்தி சிவனோடு இணைவதாக முடிவதால் அந்தத் தொடர்பை சக்தி செம்பந்தப்பட்டதென்று கௌலம் என்பர். அத்தகையத்தொடர்புள்ளவள் கௌலிநீ. வாக்தேவிகலில் ஒருவன் கௌலிநீ. (2 - 10 - 1)

5 - 5. ஶ்ரீசக்கிரத்தில் தேவியை வெளிப்படையாக வழிபடும் முறையில் வழிபடுபவன், வழிபடப்படுபவள், வழிபாடு என்ற குலம் தோன்றுவதால் இந்த வழிபாடு முறையை கௌலம் என்பர். அந்த கௌலவழிபாடுடையவள் கௌலிநீ. (94)

### 6. குலயோகிநீ. குலத்துடன் தொடர்புடையவள்.

6 - 1. குண்டிலிநீ உறையும் மூலாதாரம் முதலான ஆறு சக்கிரங்களுக்கும் சக்திக்கும் உள்ள தொடர்பாய் இருப்பவள். அறிபவன், அறியப்படும் பொருள், அறிவு என்ற மூன்றில் தொடர்பைத்தரும் உள்ளறிவாக இருப்பவள். ஶ்ரீசக்கிரவடிவிலுள்ள தேவியை வழிபடுவதாகிற குலாசாரத்தை அமைத்துக்கொஉப்பவள்.

6 - 2. யோக முறையில் அலுத்துடன் குலத்தை இணைய விடுவது குலயோகம். அதனால் அடையப்பெறுபவள் குலயோகிநீ.

6 - 3. நற்குலத்தில் பிறப்பெனும் யோகத்தைத்தந்து அருள்பவள். (95)

### 7. அகுலா. குலத்திற்கப்பாற்பட்டவள்.

7 - 1. குலமெனும் ஆறு சக்கிரங்கள் குண்டலினீ சக்தியின் வடிவம். காமேசுவரரின் மடியில் தேவி அமர்ந்துள்ளதுபோல், குலமெனும் குண்டலினீ சக்திக்கு மேலும் கீழும் இரு ஸஹஸ்ரார (ஆயிரம் இதழுள்ள)த்தாமரைகள் ஆதாரமாக உள்ளன. (12-1-4) அவைகளை அகுலம் என்பர். இவை சிவனின் வடிவம். அந்த குலமாக இருப்பவளும் தேவியே. குலாசாரத்திற்கப்பாற்பட்டது அகுலாசாரம்.அதுவே ஸமயாசாரம். ஸமயாசாரமாக இருப்பவளும் அவளே. (12-9-1)

7 - 2. தோன்றுமிடம் (பெற்றோர், வம்சம் முதலியவை) குலம் எனப்படும். அவள் பிறப்பற்றவளானதால் குலமற்றவள் அகுலா. (12-1-7). (96)

### 8. ஸமய - அந்தஸ் - ஸ்த்தா. மையத்தினுள் விளங்குபவள்.

8 - 1. இதய வெளியில் சக்தியையும் சிவனையும் இணைத்துப் பாவனயால் வழிபடுவது ஸமயமாகும். வஸிஷ்டர், சுகர்,ஸநகர், ஸநந்தநர், ஸநத்குமாரர் என்ற ஐவர் எழுதிய தந்திர நூல்களில் கூறியபடி அமைந்த வழிபாட்டு முறை ஸமயம் எனப்படும். ஸம - ய - நிலையை அடைந்தவர். சக்தியும் சிவனும் ஸமநிலையை ஐந்து வழிகளில் அடைந்துள்ளார்கள். அப்படி ஸமநிலை அடைந்த சக்தியையும் சிவனையும் இதய வெளியில் பாவனை செய்துவழிபடுவது ஸமயம் ஆகும். ஆஜ்ஞா, விசுத்தி, அநாஹதம், மணிபூரகம், ஸ்வாதிஷ்டானம், மூலாதாரம் என்ற ஆறு சக்கிரங்கலில் இவர்கள் ஸமநிலையை அடைகிறார்கள். இருக்குமிடம், பெயர், செயல், தொழில், நிறம் என்ற ஐந்து வகையிலும் ஒற்றுமையைக் காட்டுகிறார்கள்.

8 - 2. ஆஜ்ஞா சக்கிரத்தில் இருவரும் ஒரே இடத்தில் அமர்ந்திருக்கிறார்கள். இருவருக்கும் பரன் பரா என ஒரே விதமான பெயர். இருவருக்கும் ஒளிமயமான வடிவம். இருவருக்கும் மோக்ஷத்தை அளிப்பது தொழில். இருவருக்கும் ஞானத்தால் நிறைவு பெற்று ஆனந்தமாய் அமர்ந்திருப்பது செயல். இப்படித் தேவியும் சிவனும் ஐந்து வகையில் ஒற்றுமையைக்காட்டுகிறார்கள். இருப்பிடத்தில் ஒற்றுமை (அதிஷ்டான ஸாம்யம்) பெயர் ஒற்றுமை (நாமஸாம்யம்) நிற ஒற்றுமை (ரூபஸாம்யம்) தொழில் ஒற்றுமை (அனுஷ்டான ஸாம்யம்) செயல் ஒற்றுமை (அவஸ்தானஸாம்யம்) என ஐவகை ஒற்றுமை.

8 - 3. விசுத்தி சக்கிரத்தில் ஒரே இடத்தில் அமர்ந்துள்ள அவர்கலுக்குச் சிவன் சிவா எனப்பெயர். ஸ்படிக நிறம், உலகைப் படைக்க முற்பட்டு ஆகாசத்தைத் தோற்றுவித்தது தொழில், இருட்டை விலக்குவது செயல் என்று ஒற்றுமை உண்டு.

8 - 4. அநாஹதத்தில் ஹம்ஸன், ஸம்ஸீ என்ற பெயர். வெண்ணிறம், வாயுவைத் தோற்றுவித்தல் தொழில், வித்யைகளைப் பரப்புதல் செயல் என்ற ஒற்றுமை உண்டு.

8 – 5. மணிபூரகத்தின் தடித்வான், தடித்வநீ என்ற பெயர். மின்னல் நிறம். ஜலத்தைப் படைத்தல்தொழில். தாபத்தை குறைப்பது. செயல் என்ற ஒற்றுமை உண்டு.

8 – 6. ஸ்வாதிஷ்டானத்தில் மஹான். மஹதீ என்ற பெயர். நெருப்பு நிறம். இந்தப் பரந்த உலகிற்குத்தாயும் தந்தையுமாய் இருப்பது தொழில். நடனம் செயல் என்று ஐந்து வகையிலும் ஒற்றுமை உண்டு.

8 – 8. இப்படி இவர்களிடையே உள்ள ஒற்றுமையைப் பாவனையால் உணர்வது மைய முறையின் நோக்கமாகும். சிவனுக்கும் சக்திக்கும் இடையே எவ்வகையிலும் பேதத்தை உணராமல் இருவரையும் தியானத்தின் மூலம் வழிபடும் முறை ஸமயம். அதனுள் அதன் லட்சியமாக விளங்குபவள் தேவி. (97)

**9. ஸமய - ஆசார - தத் - பரா. ஸமயாசாரத்தில் ஈடுபாடு உள்ளவள்.**

9 – 1. மைய முறையில் வழிபடும் முறை பின்வருமாறு : குருவருளால் மந்திர தீக்ஷை பெற்றவள், ரஸவாதத்தால் செம்பு தங்கமாவதுபோல், பாவனயால் தேவியாக ஆகிறான். தனது மூலாதாரம் முதல் ஸஹஸ்ராரம் வரை தேவி பரவி நிற்பதை உணர்கிறான். அந்த பாவனையிலேயே அவளை வழிபடுகிறாள். தன் தனித்த இருப்பிடமான ஸ்வாதிஷ்டானத்தில் தன்னைச் சீர்படுத்திக்கொண்டு அழகியாக மணிபூரகத்தில் பிறர் அறிய வெளிப்படுகிறாள். அங்கு ஸாதகன் அளிக்கும் பாத்யம் முதல் பூஷணதாரணம்வரை உள்ள 47 உபசாரங்களை (16–37–3) ஏற்றுத் தன் பரிவாரங்களுடன் ரத்ன பீடத்தில் அமர்கிறாள். அங்கிருது அநாஹதம் சென்று தாம்பூல தாரணம் வரையிலுள்ள வழிபாடுகளை ஏற்கிறாள். விசுத்தியில் ஆரத்தி வழிபாடுகளை ஏற்று, ஆஜ்ஞையில் நீராஜனம் பெற்று மற்ற உபசாரங்கள் முடிந்ததும்

ஸஹஸ்ரார கமலத்தில் நுழந்து திரையினுள் சிவனுடன் ஆனந்தமாக இருந்தபின், சிவனை விட்டு விட்டுத் திரும்பி மூலாதாரத்தை அடைந்து அங்கு மறைகிறாள். இப்படிச் சித்சக்தியின் லீலையை அனுபவிப்பதே ஸமயாசாரம்.

9 - 2. புற உபகரணங்களின்றி மனத்தில் ஸ்ரீ சக்கிரத்தைப் பாவித்து அதில் தேவியை வழிபடுபவன் கிரமமாக முன்னேறி, சிவ சக்திகளின் ஐக்யத்தை உணர்ந்து அதன் வழியே குரு, மந்திரம், தேவி, ஸ்ரீசக்கிரம், உபாஸகனாகிய தான் என்ற ஐந்தின் ஐக்கியத்தையும் அனுபவிக்கிறான். அப்போது மூலாதாரம் முதல் ஸஹஸ்ராரம் வரை உள்ள சக்கிரங்களே ஸ்ரீசக்கிரத்தின் 9 ஆவரணங்களாக பாவனை செய்யப்படுகின்றன. அங்கு உலவும் குண்டலினீ சக்தியே தேவியாகவும், அவளது தோற்றத்தில் முகம், உடலின் நடுப்பகுதி, கீழ்ப்பகுதியாக மந்திரத்தின் மூன்று கூடங்களும் ஒற்றுமைபெற மற்ற ஒற்றுமைகலும் தானே ஏற்பட்டு ஐக்யானுஸந்தானம் என்ற ஸமயம் சித்திக்கிறது. (ஐக்ய - அனுஸந்தானம் - ஒற்றுமை பற்றிய நெடுஞ்சிந்தனை) இத்தகைய ஸமயாசாரத்தில் மிக்க ஈடுபாடு கொண்டவள் தேவி. (98)

(நா. 99 - 102)

मूलाधरैकनिलया ब्रह्मग्रन्थिविभेदिनी ।
मणिपूरान्तरूदिता विष्णुग्रन्थिविभेदिनी ॥ 38 ॥

**மூலாதாரைகநிலயா ப்ரம்ஹக்க்ரந்த்திவிபேதிநீ.**
**மணிபூராந்தருதிதா விஷ்ணுக்க்ரந்த்திவிபேதிநீ. 38.**

**10. மூலாதார - ஏக - நிலயா. மூலாதாரத்தையே தன் ஒரே இருப்பிடமாகக் கொண்டவள்.**

10 - 1. குண்டலினீ சக்தியின் இருப்பிடம் மூலாதாரம், பல தோற்றங்களில் உணரப்படும் சக்தி அனைத்திற்கும் மூலமானது குண்டலிநீ. அதற்கும் ஆதாரம், ஆஸனத் துவாரத்தின் அருகில் அமைந்த இந்த மூலாதாரம் எனும் சக்கிரம். பூமிதத்துவத்தாலானது. நான்கு தளங்கலுள்ளது. மூலசக்தி உலவும் ஸுஷும்நா நாடிக்கும் இதுதான் ஆதாரம். தேவியின் குண்டலினீ வடிவிற்கு ஏக - முக்கியமான, தனித்த - சிறப்புள்ள, நிலயம் - பிறர் கண்களில் படாமல் ஓய்வுபெறும் இடம். அங்கு ஆதார சக்தியாக விளங்குபவள் தேவி. நாலிதழ் கமலத்தின் நடுவே அமைந்த குலகுண்டத்தினுள் மூன்றரைச் சுற்றுகளாகத் தன் உடலைச்

சுற்றிக்கொண்ட பாம்பின் வடிவில் குண்டலினீ சக்தி உறங்குகிறாள் என்பர். (99)

**11. ப்ரம்ஹ - க்ரந்த்தி - விபேதிநீ. பிரும்மக்கிரந்தியைப் பிளந்து செல்பவள்.**

11 - 1. மூலாதாரம் பூமி தத்துவத்திற்கும், ஸ்வாதிஷ்டானம் ஜலதத்துவத்திற்கும், மணிபூரகம் அக்னிதத்துவத்திற்கும், அநாஹதம் வாயு தத்துவத்திற்கும், விசித்து ஆகாச தத்துவத்திற்கும், ஆஜ்ஞா மனத்தத்துவத்திற்கும் இருப்பிடம்.

11 - 2. சக்கிரங்கள் ஒளிமயமாநவை. மூலாதாரத்தையும் ஸ்வாதிஷ்டானத்தையும் **அக்னிகண்டம்** எனவும், மணிபூரகத்தையும் அநாஹதத்தையும் **ஸூர்யகண்டம்** எனவும். விசுத்தியையும் ஆஜ்ஞையையும் **சந்திரகண்டம்** எனவும் கூறுவர். அக்னிகண்டம் படைப்புத் தொழில் கொண்ட பிரும்மனது ஸ்தானமான **ஸ்ருஷ்டி சக்கிரங்களடங்கிய** தாகும். ஸூர்யகண்டம் காத்தலைத் தொழிலாகக்கொண்ட விஷ்ணுவின் ஸ்தானமான **ஸ்திதி சக்கிரங்களடங்கிய**தாகும். சந்திரகண்டம் ஒடுக்குதலைத் தொழிலாகக் கொண்ட ருத்திரனின் ஸ்தானமான ஸம்ஹார **சக்கிரங்களடங்கிய தாகும்.**

11 - 3. ஸமயாசர முறையில் இந்த ஆறு சக்கிரங்களையே ஸ்ரீ சக்கிரமாய் பாவிப்பது உண்டு. அப்போது ஸ்ருஷ்டி சக்கிரத்தை ஷோடசதளம், அஷ்டதளம் என்ற மூன்று ஆவரணங்களாகவும், ஸ்திதி சக்கிரத்தை சதுர்தசாரம், பரிர்தசாரம், அந்தர் தசாரம் என்ற மூன்று ஆவரணங்களாகவும், ஸம்ஹார சக்கிரத்தை அஷ்டகோணம், திரிகோணம், பிந்து என்ற மூன்று ஆவரணங்களாகவும் பாவனை செய்வர். (9-10-19-30)

---

மணிபூரகம் ஜலத் தத்துவத்திற்கும் ஸ்வாதிஷ்டானம் அக்னி தத்துவத்திற்கும் ஸ்தானம் எனச் சில யோக நூல்கள் கூறும். இதனையொட்டியே ஸௌந்தர்யலஹரியில் 39 - 40 சுலோகங்கள், இந்த இரண்டு சக்கிரங்கலில் தியானம் கூறும் வரிசையில் அமைந்தன எனக் கூறுவர். மணிபூரகத்திற்கு ஸ்வாதிஷ்டானம் என்றும், ஸ்வாதிஷ்டானத்திற்கு மணிபூரகம் என்றும் பெயர் எனச் சிலர் இதற்கு விளக்கம் தருவர்.

11 - 4. குண்டலிநீ மூலாதாரத்திலிருந்து கிளம்பி இந்த ஆறு சக்கிரங்கள் வழியே மேல் ஏறும்போது இரு சக்கிரங்களுக்கிடையே உள்ள முடிச்சு போன்ற மிகக் குறுகிய துவாரங்கள் வழியே செல்ல வேண்டும். அவைகளைக் கிரந்தி என்பர். மூலாதாரத்தைத் தாண்டி குண்டலினீ சக்தியானது ஸ்வாதிஷ்டானத்தினுள் செல்லும்போதும் ஸ்வாதிஷ்டானத் தைத் தாண்டி மணிபூரகத்தினுள் செல்லும் போதும் கிரந்திகளைப் பிளந்து, தான் செல்ல வழி அமைத்து நுழைந்து மேலேற வேண்டும். பிரும்மனின் ஸ்தானத்தில் அமைந்துள்ளவை ஆனதால் இவை பிரும்மக்கிரந்திகள் எனப்படும். (கிரந்த் என்ற வினைச்சொல் விரிவானதாக இருந்ததை இறுக்கி அளவில் குறுக்குவது எனப் பொருளுள்ளது. அதனால் நூல்களைக் குறிப்பிடும் கிரந்தம் என்ற சொல், மிகவும் விரிவான பொருளைச் சிறிய நூல் வடிவில் இறுக்கி முடிச்சு உருவில் அடைந்திருப்பதைக் குறிக்கும்).

11 - 5. மேலேறும் குண்டலினீ சக்தி பிடிப்பில்லாததால் திடீரென நழுவாமல் இருக்கவும், மேலே ஏறுவதற்குள்ள வேகம் ஏற்படாத நிலையில் தானே மேல் ஏறாமல் இருக்கவும் இந்தக் கிரந்திகள் பயன்படுகின்றன. (உஷ்ணமானியில் பாதரஸம் தானே மேல் ஏறாதிருக்கவும், சூட்டால் மேல் ஏறிய பாதரஸம் கீழ் தானே இறங்காமலிருக்கவும் பல்பின் இறுதியில் வாய் குறுகியிருக்கும். இது கிரந்தி. பாதரஸம் சூடேட்டப் பெறாமல் தானே டிகிரி குறித்துள்ள இடங்களுக்குச் செல்வதை இந்தக்கிரந்தி தடுக்கும். ஏறிய பாதரஸம் தானே (உதறினாலன்றி) இறங்காமல் இருக்கவும் இது உதவும். அதுபோல இங்கும் கொள்ளலாம்)

11 - 6. ஸாதகன் பிராணாயாமபலத்தால் வாயு - அக்னி பலத்தைப் பெருக்கித் தூங்கும் குண்டலினியை உசுப்பி எழுப்பி ஸ்வாதிஷ்டான சக்கிரத்தினுள் செல்லும்படி தூண்டும்போது இந்த கிரந்தி அமைப்பைப் பிளந்துத்துவாரம் அமைத்துக் கொண்டு குண்டலினி மேல்செல்லுகின்றது. இப்படி ஸ்வாதிஷ்டானத்தின் இருபுறங்கலிலும் அமைந்த பிரும்ம கிரந்தியைப் பிளப்பவள் குண்டலினி சக்தி வடிவிலுள்ள தேவி. (100)

**12. மணிபூர - அந்தர் - உதிதா. மணிபூரகத்தின் உள்ளே வெளிப்பட்டவள்.**

12 - 1. நாபிக்கு அருகில் ஸுஷும்நா காண்டத்தில் மணிபூரக சக்கிரம் பத்து தளமுள்ள தாமரை வடிவில் உள்ளது. ஸுர்ய கண்டம், விஷ்ணுவின்

ஸ்தானம், ஸ்திதி சக்கிரம் என்று பல பெருமைகள் உள்ளது. ரத்தினங்கள் பதித்த அலங்கார மண்டபமாகிய மணிபூரகத்தினுள் எல்லா ஆபரணங்களும் பண்டு அழகாக வெளிப்படுபவள் தேவி. (12-1-8, 12-9-1) (101)

**13. விஷ்ணுக்க்ரந்த்தி - விபேதிநீ. விஷ்ணுக்கிரந்தியைப் பிளப்பவள்.**

13 - 1. மணிபூரகத்திலிருந்து அநாஹதத்திற்குச் செல்லும் போதும், அநாஹதத்திலிருந்து விசுத்திக்குச்செல்லும்போதும் இடையேயுள்ள மிகக் குறுகிய பாதை விஷ்ணுக்கிரந்தி எனப்படும். அந்த இரு கிரந்திகளையும் பிளந்து வழி ஏற்படுத்திக்கொண்டு குண்டலினியாக மேல் எழும்புகிறாள் தேவி. (102)

(நா. 103 - 106)

आज्ञाचक्रान्तरालस्था रुद्रग्रन्थिविभेदिनी ।

सहस्राराम्बुजारूढा सुधासाराभिवर्षिणी ॥ 39 ॥

**ஆஜ்ஞாசக்ராந்தராளஸ்த்தா ருதரக்க்ரந்த்திவிபேதிநீ.**
**ஸஹஸ்ராராம்புஜாருடா ஸுதாஸாராபிவர்ஷிணீ. 39**

**14. ஆஜ்ஞா - சக்ர - அந்தரால - ஸ்த்தா. ஆஜ்ஞா சக்கிரத்தின் நடுவில் உள்ளவள்.**

14 - 1. புருவ மத்தியின் பின்புறத்தில் ஸுஷும்நா காண்டத்தில் இரு தளங்களுள்ளதாக அமைந்தது ஆஜ்ஞா சக்கிரம். இது சந்திர கண்டம், ஸம்ஹார சக்கிரம், ருத்திர ஸ்தானம். இங்கு குண்டலினீ சக்தியின் சிறு பகுதி மட்டும் சில நொடிகள் மட்டும் மின்னல் கொடிபோல் உணரப்படுவதால் (ஆ - சிறிது, ஜ்ஞா - புலப்படுவது) இந்த சக்கிரம் ஆஜ்ஞா சக்கிரமாகும். அதன் இடையே விளங்குபவள். (12-1-8, 12-9-1) (103)

**15. ருத்ரக்க்ரந்தி - விபேதிநீ. ருத்திரக் கிரந்தியைப் பிளப்பவள்.**

15 - 1. விசுத்தியிலிருந்து ஆஜ்ஞைக்கும், ஆஜ்ஞையிலிருந்து ஸஹஸ்ராரத்திற்கும் செல்லும்போது நடுவே உள்ள குறுகிய துவாரங்கள் ருத்திரக் கிரந்திகள். இவைகளைப் பிளந்துகொண்டு மேல் எழும்பி ஸஹஸ்ராரத்தினுள் செல்பவள். (104)

**16. ஸஹஸ்ர - அர - அம்புஜ - ஆரூடா. ஆயிரம் தளங்களுள்ள தாமரையில் ஏறியிருப்பவள்.**

16 - 1. ஸமயாசாரப்படி வழிபாடுகளை ஏற்ற தேவி சிவனுடன் சேர ஆஜ்ஞா சக்கிரத்திற்கு அடுத்திருந்த ருத்திரக் கிரந்தியைப்பிளந்துகொண்டு ஸஹஸ்ராரத்தில் நுழைகிறாள். ஆயிரம் தளங்களுள்ளது இந்த சக்கிரம். இது ஸதாசிவனுடைய ஸ்தானம். தளங்கள் சக்தி வெளிப்படும் பாதைகளைக் குறிக்கும். ஆயிரம் என்பது ஆயிரக்கணக்கான - எண்ணற்ற - என்ற பொருளைத் தரும். கணக்கிட முடியாத வழிகளில் சக்தி ஸஞ்சரிக்கும் இடம் இது. இங்கு தேவி எண்ணற்ற லீலாவிபூதிகளுடன் காமேசுவரரது மடியில் விளங்கிக் கொண்டிருக்கிறாள். (12.1.9, 12.9.1.)

16 - 2. சந்திரனது 15 கலைகள் நமது நோக்கில் அழிந்து வளரும் தன்மை படைத்தவை. கலை என்பது பதினாறில் ஒரு பங்கு. 15 கலைகளை நாம் காண்கிறோம். பதினாறாவது கலை அழியாத் தன்மை படைத்தது. ஸதா - எப்போதும் இருப்பது. அதனால் அது ஸாதா கலை. அந்த ஸாதா கலை கொண்ட சந்திரனது கண்டம் ஸஹஸ்ராரம். ஸதாசிவனது தொழிலான அனுக்கிரஹம் துலங்கும் ஸ்தானமாதலால் அனுக்கிரஹ கண்டம். அங்கு விளங்குபவள் தேவி. (105)

**17. ஸுதா - ஆஸார - அபிவர்ஷிணீ. அமிருதப் பிரவாஹத்தைப் பொழிபவள்.**

17 – 1. ஸஹஸ்ராரத்தின் கணக்கற்ற இதழ்களில் சிவாமிருதம் நிரம்பி நிற்கிறது. (12.19) பரமசிவனது மடியில் வீற்றிருக்கும் தேவி தன் சரணங்களின் கிரணங்களை அதில் தோய்த்து ஒளி பாய்ச்சுகிறாள். கிரணங்கள் மூலம் வெளியாகும் அம்ருதம் பெரு மழை (ஆஸாரம்) போல் நம்மை உள்ளும் புறமும் நனைத்துக் குளிர்விக்கிறது. சரீரத்திலுள்ள எல்லா நாடிகளிலும் அதன் பிரவாகம் கரைபுரண்டோடுகிறது. ஸ்தூல - ஸூக்ஷ்ம - காரண சரீரங்களில் சிவாமிருதம் பெருகிப் பிரவாகமாக ஓடுமளவில் அமிருதமழை பொழிபவள் தேவி. குண்டலினீ சக்தி மூலாதாரத்திலிருந்து கிளம்பி ஸஹஸ்ராரத்தை அடைந்ததும் இதுகாறும் கோடியில் ஒரு பங்குக்கும் குறைவாகவே உணரப்பட்டிருந்த அதன் சக்தி கோடி மடங்காகப் பெருக்கெடுத்து எல்லா முனைகளிலிலும் பாய்ந்தோடும் உணர்வு எற்படுகிறது. (106)

(நா. 107 - 111)

तटिल्लतासमरुचिः षट्चक्रोपरिसंस्थिता ।
महासक्तिः कुण्डलिनी बिसतन्तुतनीयसी ॥ 40 ॥

**தடில்லதாஸமருசி: ஷட்சக்ரோபரிஸம்ஸ்த்திதா.**
**மஹாஸக்தி: குண்டலிநீ பிஸதந்துதநீயஸீ. 40**

**18. தடித் - லதா - ஸம - ருசி: மின்னல் கொடி போன்ற ஒளியுள்ளவள்.**

18 - 1. குண்டலினீ சக்தியின் பெருக்கை உணர்பவன் அதன் முழு உருவத்தையும் ஒளியையும் எப்போதும் உணர்வதில்லை. வானிலுள்ள அனந்தமான மின் சக்தியில் ஓரம்சத்தை மின்னல் ஒரு நொடிப்பொழுது வெளிப்படுத்துகிறது. மெலிந்த தோற்றத்திலும்கூட அவளை உற்றுப்பார்க்க முடியாது. அந்தப் பேரொளி தன்னை வெளிக்காட்ட அப்படி மின்னலைப் போல் வெளியாகிறது. யோகிகளாலும் கூட சில கணப் பொழுதளவில் மட்டுமே காணப்பட்ட பேரொளி வடிவமுள்ளவள் தேவி. (107)

**19. ஷட் - சக்ர - உபரி - ஸம்ஸ்த்திதா. ஆறு சக்கிரங்களுக்கும் மேல் இருப்பவள்.**

19 - 1. மூலாதாரம் முதல் ஆஜ்ஞை வரையிலுள்ள ஸ்தானங்கள் (குலசக்கிரங்கள்), அவள் மேலே செல்லும்போது கணநேரம் தங்குவதற்கான இடங்களாகும். அவள் எப்போதும் தங்கியிருக்குமிடம் மூலாதாரத்திற்குக் கீழும் ஆஜ்ஞாசக்கிரத்திற்கு மேலும் அமைந்த அகுலமெனும் (இந்த ஆறு சக்கிரங்களின் ஆளுகைக்கு உட்படாத) ஸஹஸ்ரார கமலங்களாகும். அவள் தனித்திருப்பது மூலாதாரத்திற்குக் கீழ் உள்ள அகுல ஸஹஸ்ராரத்தில்; (12.1.4) சிவனுடன் சேர்ந்திருப்பது ஆஜ்ஞைக்கு மேலுள்ள அகுல ஸஹஸ்ராரத்தில் (12-9-1) இவ்விரு இடங்களில் அவள் நிலைத்திருப்பாள். (108)

**20. மஹ - ஆஸக்தி: - உற்சவமாகக் கொண்டாடப்படும் வழிபாட்டில் ஈடுபாடுள்ளவள்.**

20 - 1. மஹ: - உற்சவம், ஆஸக்தி: - ஈடுபாடு, ஸஹஸ்ரார கமலத்தில் சிவனுடன் அமர்ந்துள்ள தேவியை எல்லா தேவதைகளும் பெருங்கொண்டாட்டத்துடன் வழிபடுவார்கள். எல்லையற்ற சக்தி மழை

பொழியும் தேவியின் பார்வையில் நனைந்துதிளைத்து ஆனந்தம் கொண்ட தேவர்கள் உற்சவமாகக் கொண்டாடுகையில் அதில் லயித்துத் தன் வசமிழந்தவள் போல் தேவி தன் ஈடுபாட்டைக் காட்டுவாள். உற்சவத்தில் ஈடுபாடு அவளுக்கு உண்டென்பதையறிந்து, எளிதில் அதனைக் கொண்டு அவளைத் திருப்திப்படுத்தலாம். மஹா - ஆஸக்தி: பெருத்த நாட்டம் உள்ளவள். ஸக்தி: - சேர்க்கை. அவளது சேர்க்கை அணுவிலும் காணப்படுமானதால் எங்கும் பரவிய சேர்க்கையைப் பெருமளவில் கொண்டவள். (109)

### 21. குண்டலிநீ - குண்டலம் போன்று சுற்றி வளைந்திருக்கும் வடிவமுள்ளவள்.

21 - 1. பாம்பு தன் உடலைச் சுருட்டி வளையமிட்டு படுத்து இருப்பது போல் மூலாதாரத்தில் குண்டலினீ சக்தி அடங்கிக் காணப்படுகிறாள். பாம்பு ஓய்வெடுத்துக்கொள்ளும்போதுத் தன் உடலைச் சுருட்டி வலையம்போலாக்கிப் பெருமூச்சு விட்டுக்கொண்டு உறங்கும். பெருமூச்சால் ஏறி இறங்கும் விலாப்புறங்களைக் கொண்டு அது அயர்ந்திருப்பதை உணரலாம். மூன்றரைச் சுற்றுள்ள வளையங்களிட்டு இவள் விடும் மூச்சே பிராண சக்தி. பெண் பாம்பின் (நாகிநீ) உருவில் இவளைத் தியானிப்பர் (12-1-4)

21-2. சிவலிங்கத்திற்கு நாகாபரணம் சாற்றுவது உண்டு. குண்டலினீ யோகத்தால் எழுப்பப் பெற்ற குண்டலினீ என்ற பாம்பு ஸஹஸ்ராரம் சென்று அங்குள்ள சிவனைத் தன் உடலால் சுற்றிக் களிப்பு மேலீட்டால் சிவன்மேலும் படமெடுத்துக் குடைபிடித்து ஆடுகிறது. என்பதை நாகாபரணம் உருவகப்படுத்துகிறது. அதவும் மூன்றரைச் சுற்றுள்ளதாக அமைக்கப்பட்டிருக்கும். (மூன்று சுற்றும் சில இடங்களில் காணப்படும்).

21 - 3. குண்டலினீயின் பெருமூச்சு எப்போதும் உணரப்படும். இரு காதுகளையும் அடைத்து மனத்தை ஸுஷும்னா காண்டத்தில் செலுத்தினால் இந்தப் பிராணசக்தியின் நாதத்தைக் கேட்கலாம். அந்தப் பிராணநாதம் கேட்காவிடில் யோகிகள் தம் முடிவு நெருங்கிவிட்டதென உணர்வர்.

21 - 4. வாக்பவபீஜம் எனப்படும் ஐம் என்ற பீஜாக்ஷரத்திற்குக் குண்டலினீ என்ற பெயர் உண்டு. அந்த வடிவிலும் உள்ளவள் தேவி. (110)

**22. பிஸ - தந்து தநீயஸீ, தாமரோ நூல்போல் மிக மெல்லியவள்.**

22 - 1. மின்னல் கொடிபோன்று பேரொளியாகக் கணப்பொழுது எப்போதோ காணப்படுவாள், (12-18-1) என்ற நிலைமாறி, யோகி தீவிரமாக ஸாதனையில் ஈடுபட்டால், தாமரைத் தண்டின் நடுவில் காணும் வெண்மையானதூய்மைமிக்க நூல்போல் குளிர்ந்த மெல்லிய உருவத்துடன் காணப்படுவாள்.

22-2. மூலாதாரத்தில் உறங்கும் குண்டலினியை எழுப்பியதும், தூங்கிக்கொண்டிருக்கும் சிறுமி, எழுப்பப்பட்டதால் ஏற்பட்ட ஆத்திரத்தில் அழுது புரண்டு நிலை கொள்ளாதிருப்பது போல் காணப்படுகிறாள். அதனால் அந்நிலையிலுள்ள குண்டலினியைக் குமாரீ என்பர். எழுப்பப்பட்ட காரணத்தை அறிந்து சமாதானப்படுத்தப்பெற்றுச் சிவனாகிய பதியை அடைவதன் அவசியத்தை உணர்ந்து சுறுசுறுப்புடன் இயங்கும் யுவதி போல் குண்டலினீ ஆஜ்ஞை சக்கிரம்வரை செல்கிறாள். அதனால் அந்நிலையில் தருணீ, யுவநீ என அழைக்கப்பெறுகிறாள். ஸஹஸ்ராரத்தில் சிவனுடன் இணைந்ததும் பதிவிரதையாக அவரைச் சுற்றிச் சுற்றி வந்து அவரை அடைந்த ஆனந்தத்தில் திளைத்து நிற்கிறாள். அதனால் அந்நிலையில் குண்டலினியைப் பதிவிரதை என அழைப்பர். குமரியாக மின்னல்போல் குதித்த குண்டலினி பதிவிரதையாகித் தாமரைநூல் போல் நெகிழும் வடிவம் பெறுகிறாள். (111)

* * *

அதிகாரம் - 13

# பக்திக்கு வசப்படும் தேவி

(நா. 112 - 117)

भवानी भावनागम्या भवारण्यकुठारिका ।
भद्रप्रिया भद्रमूर्तिर्भक्तसौभाग्यदायिनी ॥ 41 ॥

**பவாநீ பாவநாகம்யா பவாரண்யகுடாரிகா.**
**பத்ரப்ரியா பத்ரமூர்த்தி: பக்தஸௌபாக்யதாயிநீ. 41**

**1. பவாநீ - பவனது பத்தினி.**

1 - 1. பவன் - பரமசிவன். சிவன் உலகைப் படைக்கிறார். அவரிடமிருந்து உலகம் தோன்றுவதால் அவர் பவ: - பவன், (உலகைக் காப்பாற்றும் நிலையில் அவர் ம்ருட: - மிருடன், இதமாக வருடுபவர். உலகைத் தன்னுள் ஒடுக்கும்போது ஹர: - ஹரன்.) பவனது மனைவி - பவாநீ.

1 - 2. சிவனுக்கு எட்டு வடிவங்கள் உண்டு. (9-2-2) அவைகளில் ஜல வடிவில் உள்ளவர் பவன். அவரது மனைவி பவானீ. பவனின் மனைவிக்கு உஷா என்று தனித்துப் பெயர் உண்டு. மனைவி கணவனை வாழவைப்பவள். பவனை வாழவைப்பதால் (பவம் ஆநயதி இதி) பவாநீ என்ற பெயர் அமைகிறது. உலகை வாழ வைப்பது ஜலம். அதன் வடிவிலுள்ள சிவனை வாழவைப்பவள் தேவி.

1 - 3. உலகம் தோன்றி விரிவடையக் காரணமாயிருப்பதால் மன்மதன் பவன் ஆகிறான். அவனை வாழவைத்தவள் தேவி. அதனால் பவாநீ. பவன் என்ற பிறப்புள்ளதனைத்தையும் வாழவைப்பவன் பவாநீ. பவம் என்பது ஸம்ஸாரம். பிறந்து பிறந்து மறையும் பாங்குடையது. அதில் ஜீவசக்தியாக நின்று கடைத்தேற உதவுபவள் பவாநீ. ஸ்தானேசுவர க்ஷேத்திரத்தில் உறைபவள் பவாநீ என்ற திருநாமம் கொண்டவள். (112)

**2. பாவநா - கம்யா. பாவனையால் அடையத்தக்கவள்.**

2 - 1. வழிபடுபவரை மனத்தில் பதித்து அவர் வடிவமாகவே ஆகிவிடுவது பாவனை. நான் அதுவாக ஆகிவிட்டேன் என்று முதலில்

வாயளவில் பேசிப்பின் உணர்வாலும் அதுவாகித் தனக்கும் அதற்கும் பேத உணர்வின்றித் தன்மயமாகிவிடுதல் பாவனை. முதலில் தான் வழிபடுபவனாக இருந்து, வழிபாட்டிற்குரியவளாகத் தேவியைக் கொண்டு, வழிபாடு என்ற கிரியையை அமைத்துக் கொண்ட பக்தன் வழிபாட்டின் இறுதியில் தேவியாகத்தான் ஆகிவிட்டதாக, சப்த – பாவனையாக வாயால் சொல்லிக் கொண்டான். பின்னர் இந்த ஸகுண உபாஸனையின் பலத்தாலேயே, வழிபடும் தான், வழிபாட்டிற்குரிய தேவி, வழிபாடு, என்ற மூன்றும் உணர்விலிருந்து மறைந்ததும் மூன்றும் ஒன்றேயாகிய உணர்வாக மாறினான். இது அர்த்த பாவனை (பொருளாலும் அது ஆகிவிடுவது.) இந்த பாவனையால் மட்டும் அடையத்தக்கவள் தேவி. (113)

### 3. பவ - அரண்ய - கூடாரிகா. ஸம்ஸாரமெனும் காட்டைச் சிதைக்கும் கோடரி.

3 – 1. ஸம்ஸாரம் எனும் வாழ்க்கைச் சுழலில் பிறப்பும் இறப்பும் உண்டு. பிறப்புதான் கண்களில் படுகிறது. இறப்பைவிடப் பிறப்பே முக்கியத்துவம் வாய்ந்தது. பிறப்பதால் தானே அழிகிறான். அதனால் ஸம்ஸாரத்தை பவம், பிறவி என்றே குறிப்பிடுகிறோம். பிறவி ஒரு பெருங்காடு. காட்டினுள் நுழைந்த பிறகே காட்டினுள் நுழைந்துவிட்ட உணர்வேற்படுகிறது. எங்கே நுழைந்தோம், எங்கே இருக்கிறோம். எங்கே செல்வோம் என்பதனை அறியமுடியவில்லை. அதன் முடிவும் தெரியவில்லை. நம்மை வழி தெரியாமல் சுற்றிச் சுற்றிவரச் செய்து காடு களைக்கச் செய்கிறது. பவம் எனும் ஸம்ஸாரமும் அத்தகைய காடுதான்.

3 – 2. காடு என்பது மரங்கள்தான். மரங்களைத் தவிர வேறு அல்ல. ஒவ்வொரு மரத்தையும் அழித்தாலன்றி காடு அழியாது. பிறர் உதவி நாடாமல் தானே மரங்களைச் சிதைக்க முற்படுபவனுக்கு தேவி கோடரியாக நின்று உதவுகிறாள். பிறப்பைத் தரும் விஷய சுகத்தில் நாட்டம் எனும் மரங்களே அறிவெனும் கோடரியாக நின்று அழித்துக் காடாகத் தோன்றி பயமுறுத்திக் கொண்டிருந்த ஸம்ஸாரத்தை மாய்த்துவிடுகிறாள். மரங்கள் அழிந்ததும் ஸம்ஸாரமாகிய காடு தானே மறைந்தது. காட்டின் பயங்கரத்தை வளர்த்த விலங்கினங்களும் பலமிழந்து ஓடிவிட்டன.

எல்லை தெரிகிறது. வழி புலப்படுகிறது. மனம் அமைதி அடைகிறது. (14-44-1, 27-1-1, 29, 22-1) (114)

**4. பத்ர - ப்ரியா. மங்களத்தில் பிரியமுள்ளவள்.**

4 - 1. பத்ரம் - மங்களம். மங்களமானதனைத்திலும் பிரியமுள்ளவள். மங்களமான சொல். மங்களமான எண்ணம், மங்களமான செயல், மாங்களமான பணியில் பயன்படுதல் முதலியவற்றில் பரவிநிற்கும் மங்களமே தேவிக்குப் பிரியமான இருப்பிடம். பத்ரம் என்ற யானை இனத்திடம் பிரியமுள்ளவள். (115)

**5. பத்ர - மூர்த்தி: மங்களமே வடிவானவள்.**

5 - 1. அழகிய, மங்களமான வடிவமுள்ளவள். மங்களமானது பிரும்மம் ஒன்றே. ப்ரம்ஹ தத் மங்களம் விது: அதற்கு வடிவாக அமைந்தவள். மங்களமான சொல், எண்ணம், செயல், பொருள் முதலியவற்றின் உள்ளே மங்களமாக நிற்பவள். மங்களாநாம் ச மங்களம்.

**6. பக்த - ஸௌபாக்ய - தாயிநீ. பக்தர்களுக்கு ஸௌபாக்யத்தை வழங்குபவள்.**

6 - 1. பக்தி எனும் அன்பால் தேவியை அடைந்தவர்கள் பக்தர்கள். பகம் என்ற சொல் ஞானம், வைராக்கியம், செல்வம், ஆசை, பெருமை, வீர்யம் விடாமுயற்சி, ஒளி, புகழ் என்றிவ்வாறு பல பொருள்கள் உள்ளது. அனைத்தும் நல்லதாகப் பயன்படுமானல் ஸுபகம் ஆகிறது. அவைகளைப் பெறுவது அல்லது பெறும் நிலை ஸௌபாக்யம். தேவியிடத்தில் பகம் அனைத்தும் நல்லதாக அமைந்திருப்பதால் அவள் ஸுபகா (28-12-1) அவளாகவே ஆவது ஸௌபாக்யம். பக்தர்களுக்கு இவ்விருவகை ஸௌபாக்யங்களையும் அருள்பவள் தேவி. (117)

(நா. 118 - 125)

भक्तिप्रिया भक्तिगम्या भक्तिवश्या भयापहा ।
शांभवी शारदाराध्या शर्वाणी शर्मदायिनी ॥ 42 ॥

**பக்திப்ரியா பக்திகம்யா பக்திவச்யா பயாபஹா.**
**சாம்ப்பவீ சாரதா (ஆ) ராத்த்யா சர்வாணி சர்மதாயிநீ.**

**42**

**7. பக்தி - ப்ரியா. பக்தியில் பிரியமுள்ளவள்.**

7 - 1. தேவியை அடையும் ஸாதனம் பக்தி. அது இரண்டு விதம். முக்கியம். கௌனம் என, வேறு எதிர்பார்த்தலின்றி அந்த அன்பிற்காகவே

வைத்த அன்பு முக்கிய பக்தியாகும். ஸா பரா அநுரக்தி: ஈச்வரே பக்தி ஈசுவரனிடத்தில் வைத்த மேம்பட்டு இடையறாதிருக்கும் அன்பு எனப் பக்தி ஸூத்ரம் பக்திக்கு இலக்கணம் கூறும். தனது மனத்திற்கும், பொறிகளுக்கும் இதம் தருவதென வைக்கும் நாட்டமாகிய அன்பு, அபரம் – மற்றொன்றை எதிர்பார்த்து நிற்பதால் அளவிற்கு உட்பட்டது. தனக்கு அது சுகம் தருகிறதென்ற எதிர்பார்த்தலின்றி கலப்பற்ற அன்பு பரமானது. பரமான அன்பே முக்கிய பக்தியாகும். கௌண பக்தியானது பரபக்தியை அடைய ஸாதனமாகக்கூடியது.

7 – 2. பக்தி என்ற சொல் பஜ் என்ற வினைச்சொல்லிலிருந்து உண்டானது. பஜ் என்ற வினைச்சொல்லிற்கு சேவை செய்தல், அடைதல் என்ற இரு பொருள்கள் உண்டு. பணியாள் எஜமானனுக்கும், மனைவி கணவனுக்கும் பணிவிடை புரிவதுபோல் பிறரது திருப்தியையோ, சுகத்தையோ கருதிப் பணிவிடை பிரிவது பஜனம் – ஸேவை ஆகும். இது கௌண பக்தி. அன்பால் பேணும்போது பேணப்படுபவரின் மனமே தன் மனமாகி அவர்களது சுக துக்கங்களே தனது சுக துக்கங்களாகி அன்பு உணர்வால் பேணப்படுபவராகத்தான் மாறிவிடுவது பஜனம் – அடைதலாகும். இது முக்கிய பக்தி.

7 – 3. ஸேவையில் உதவுபவை (1) சிரவணம் (பெருமைகளைக் கேட்பது) (2) கீர்த்தனம் (அப்படித் தான் கேட்டறிந்ததைப் பிறரறியப் பாடுவது (3) ஸ்மரணம் (கேட்டும், சொல்லியும் உணர்ந்த பொருளை நினைவில் நிறுத்திக் களிப்பது) (4) பாதஸேவனம் (நேரிடையாக இறைவனுக்கோ அல்லது அடியார்களுக்கோ திருவடிகளைப் பிடித்துவிடுதல் அல்லது அவ்விதமான பாவனை) (5) அர்ச்சனம் (திருவுருவத்தை நாமங்கள் சொல்லி வழிபடுதல்) (6) வந்தனம் (வணங்குதல்) (7) தாஸ்யம் (அடிமைபூண்டு பணிவிடைகளைப் புரிதல்) (8) ஸக்யம் (தோழமை உணர்ச்சியுடன் நெருக்கம் ஏற்படுத்திக்கொள்ளுதல்) (9) ஆத்ம நிவேதனம் (தான், தனது என்ற பேத பாவனைக்கு இடமின்றி அவனுக்கே ஆட்பட்டிருத்தல்) என்பன பக்தி ஸாதன முறைகள். இவை கௌண பக்தியில் அடங்கும்.

7 – 4. அன்பென்பது உணர்வு, உணர்வு நிலையில் அது மிகத்தூயது. அதில் போலித்தன்மை இல்லை. அது எதையும் எதிர் பார்ப்பதில்லை. ஆனால் அந்த அன்பு சொல்லாகவோ செயலாகவோ வெளிப்படும்போது, சூழ்நிலையையொட்டி அதில் தூய்மை குறையக்கூடும். போலித்தன்மை இடம்பெறும். எதிர்பார்த்தலும் ஏற்படக்கூடும். உணர்வு நிலையிலுள்ளது பரபக்தி. அந்த உணர்வே செயலாகவும், சொல்லாகவும்

வெளிப்படுவதுதான் கௌண பக்தி. எனினும் வெளிப்படையாகும் போது அதில் ஏற்படக்கூடிய குறைகள் மிகுந்த கவனத்திற்குரியவை. இத்தகைய குறையின்றி, சூழ்நிலையால் பாதிப்பின்றி, தூய்மையானதாகச் சிரவணம் முதலியவை அமையப்பெறின், அதுவே பரபக்தியாகிவிடும். சிரவணம் முதலியவை ஸாதனமாகி நின்று கொஞ்சம் கொஞ்சமாக பக்தனின் அன்பைத் தூயதாக்கும். அன்பே வடிவான தேவி தூய அன்பான பர பக்தியிடமும் தூய்மை பெற உதவும் கௌண பக்தியிடமும் பிரியமுள்ளவள். (118)

### 8. பக்தி - கம்யா. பக்தியால் அடையத்தக்கவள்.

8 – 1. அன்பெனும் பக்தியாலும் சேவை எனும் பக்தியாலும் அவளை அடைந்துவிடலாம். அன்பெனும் ஒளி கொண்டுதான் தேவி இருப்பதை உணர முடியும். வாக்கிற்கும் மனத்திற்கும் எட்டாத தேவியின் பர ஸ்வரூபத்தை அறிய உள்ளுணர்வாகிய பக்தியே உதவுகிறது. (119)

### 9. பக்தி - வச்யா. பக்திக்குக் கட்டுப்பட்டவள்.

9 – 1. அன்பெனும் தளையில் தேவி எளிதில் சிக்கிவிடுகிறாள். அதனால் கட்டுண்ட தேவிக்குத் தன்னை விடுவித்துக்கொள்ள முடிவதில்லை. தேவி அதிலிருந்தும் விடுபட விரும்புவதுமில்லை. தேவி மிகப்பெரியவள். அன்பு அவளைத் தன்னுள் அடக்கிக்கொண்டு அவலைவிடப் பெரிதாக விசுவரூபம் எடுக்கிறது. தேவி அன்பு வடிவானவள். தான் தன்னிடமிருந்தே விடுபட முடியாது. (120)

### 10. பயாபஹா - பயத்தைப்போக்குபவள்.

10 – 1. நீர், நெருப்பு போன்றவை அழிக்கும் சக்தி படைத்தவை. அவை நம் சக்திக்கு மீறுவதைக் கண்டால் பயம் தோன்றுகிறது. எல்லாவற்றையும்விட அதிகமாகப் பயமுறுத்துவது மரணம். மறு பிறவி இப்படித்தான் வாய்க்கும் என்ற நிச்சயமின்மையும், எதிர்பார்க்க முடியாத எதிர்காலமும் பயத்தை விளைவிக்கின்றன. இத்தனை பயங்களுக்கும் காரணம் ஆன்ம சக்தியின்மை. தேவியை நினைவிற் கொண்டவனுக்கு ஆன்ம பலம் வளர்கிறது. எதனிடமும் எதிரி என்ற எண்ணம் தோன்றுவதில்லை. தேவிக்கு ஆட்பட்டவனுக்கு மறு பிறப்பு தற்போதுள்ளதைவிட மங்களமாகத்தான் அமையும். பயத்தைத் தோற்றுவிப்பவை மறைவதால் பயம் நீங்கிவிடுகிறது. பயத்தை நீக்குபவள் தேவி. (121)

### 11. சாம்ப்பவீ. சம்புவின் பத்தினி.

11 – 1. சம் – மங்களம். மங்களம் உண்டாகுமிடம் சம்ப்பு: – அவரைச் சேர்ந்தவள் சாம்ப்பவீ. மங்கள வடிவினர் சிவன், (சிவம் – மங்களம்) மங்களத்திலிருந்துதான் மங்களம் தோன்றும். அதனால் மங்களத்தின் தோற்றுவாய் சிவன் (சம்ப்பு:) மங்களமாயிருப்பவர்தான் மங்களத்தைச் செய்ய முடியும். மங்களத்தைச் செய்யும் சங்கரனும் சிவன்தான். சிவனாக இருப்பவள், அவரைச் சேர்தவள், அவரது பத்தினியாக இருப்பவள் தேவி, அவரது தன்மைகள் அனைத்தும் இவளிடமும் உள்ளன. சிவனது மங்களத்தைத் தோற்றுவிக்கும் தன்மையாயிருப்பவளே அவள்தான் (9–2–11).

11 – 2. நவராத்திரி முதலிய உற்சவங்களில் முதல் நாளன்று அதாவது பிரதமையில் ஒரு வயதுள்ள பெண் குழந்தையயும் இரண்டாம் நாளன்று அதாவது துவிதீயையில் அத்தனை வயது உள்ள குழந்தையையும், தேவியாகப் பாவித்து வழிபடுவது உண்டு. இப்படி எட்டாவது நாளன்று தேவியாகப் பாவித்து வழிபடப்பெறும் எட்டு வயதுள்ள பெண் சாம்ப்பவீ.

11 – 3. யோக வழிகளில், உள்நோக்கும், இமைக்காத சூன்யமான வெளிப்பார்வையும் கொண்ட ஒரு முத்திரை சாம்ப்பவீ எனப்படும். அந்த முத்திரையாக இருப்பவள்.

11 – 4. மந்திரத்தை உபதேசிக்கும் குரு தன் சிஷ்யனிடத்தில் மந்திர சக்தி சித்திப்பதற்காகத் தீக்ஷை செய்து வைப்பார். அது மூன்று வகை. 1. சாம்ப்பவீ தீக்ஷை – சிஷ்யனது சிரசில் காமேசுவரி, காமேசுவரர் இருவரது இணைந்த உருவின் சிகப்பு – வெள்ளை நிறமுள்ள சரணங்கள் பதிவதாகப் பாவனை செய்து அவ்விரு சரணங்கலிலிருந்து பெருகும் அமிருத தாரையால் சீடனது இதயத்திலும் வெளியிலுமிருக்கும் அனைத்து மலங்களும் அகன்று தூய்மை ஏற்பட்டுவிட்டதாகப் பாவிப்பதாகும். 2. சாக்தீ தீக்ஷை – சீடனது மூலாதாரத்திலிருந்து பிரும்மரந்திரம் வரை பேரொளி வடிவில் பரவி நிற்கும் சக்தி வெள்ளத்தில் சீடனது பாபங்கள் எரிந்து சக்தி உட்புகுந்துவிட்டதாகப் பாவிப்பதாகும். 3. மந்திர தீக்ஷை – மந்திர சக்தியைக் கலசத்திலுள்ளஜலத்தில் ஆவாஹனம் செய்து, வழிபட்டு, மந்திர சக்திமிக்க அந்த ஜலத்தால் சீடனுக்கு ஸ்நானம் செய்வித்து மந்திர சக்தி உட்புகச் செய்வதாகும். இவைகளுள் சாம்ப்பவீ தீக்ஷையாக இருப்பவள்.

11 - 5. சிவனடியார்கள் - சாம்பவர்கள். அவர்களது தாயாயிருப்பவள் சாமப்பவீ. சுத்த ஞானத்தை அருளும் சாம்பவீ என்ற வித்யை ரச்மிமாலா மந்திரங்களில் ஒன்று. அதனைத் தன் வடிவாகக் கொண்டவள். (122)

**12. சார - தா - ஆராத்த்யா. சாரதையால் வழிபடத் தக்கவள்.**

12 - 1. சாரம் - ஞானம், பேரறிவு. அதைத்தருபவள் சாரதா - ஸரஸ்வதி. அவளால் வழிபடப்பட்டவள் தேவி. ஸசாமரரமாவாணீ ஸவ்யதக்ஷிணஸேவிதா என்ற 614ம் நாமம் தேவியின் வலது புறத்தில் ஸரஸ்வதி தேவி சாமரம் ஏந்தித் தேவிக்கு பணிவிடை செய்வதைக் கூறும்.

12 - 2. ஞானத்தைத் தருவதால் வசிநீ முதலிய வாக்தேவிகளுக்கும் சாரதா என்ற பெயர் உண்டு. அவர்களால் ஸேவிக்கப்பெறுபவள். சரத்ருதுவில் வரும் நவராத்திரி விழாவிற்கு சாரத நவராத்திரி எனப்பெயர். அந்த சாரத காலத்தில் வழிபடப்படுபவள்.

12 - 3. ஞானத்தைக் கொடுக்கும் ஆசாரியர்கள், அறிவாளிகள், ஸந்யாஸிகள் முதலானவரை சாரதர் என்பர். அவர்களால் வழிபடப்படுபவள். (123)

13. சர்வாணீ, சர்வனெனும் சிவனது பத்தினி.

13 - 1. சிவனது எட்டு மூர்த்திகளில் ஒன்று பூமி. (9-2-1) அந்த உருவில் உள்ளசிவனை சர்வன் என்பர். சர்வன் என்ற பூமி மூர்த்தி நிலையில் அவரது மனைவியாக ஸுகேசி என்ற பெயருடன் விளங்குபவள். (124)

**14. சர்மதாயிநீ. சுகத்தைக்கொடுக்கும் பழக்கமுள்ளவள்.**

14 - 1. பக்தன் நாடும் சுகமனைத்தையும் கொடுப்பதையே பழக்கமாக்கிக்கொண்டவள். பழக்கத்திற்கு அடிமையான அவளால் சுகம் தராமல் கணப்பொழுதுகூட இருக்க முடியாது. (15-5-1, 30-67-1)

(நா. 126 - 133)

**शाङ्करी श्रीकरी साध्वी शरच्चन्द्रनिभानना ।**
**शातोदरी शान्तिमती निराधार निरञ्जना ॥ 83 ॥**

**சாங்கரீ ஶ்ரீகரீ ஸாத்வீ சரத்சந்த்ரநிபாநநா.**
**சாதோதரீ சாந்திமதி நிராதரா நிரஞ்சநா. 43**

**15. சாங்கரீ. சங்கரரது பத்தினி.**

15 - 1. நல்வினைகளின் பயனாக ஸுகத்தை மட்டும் தருவதாக அமைந்த செல்வம் ஶ்ரீ: எனப்படும். யா ஶ்ரீ: ஸ்வயம் ஸுக்ருதிநாம் பவநேஷு. நற்பணிகளையே செய்பவர்களது வீட்டில் ஶ்ரீயாக - செல்வமாகத் தங்கி நிற்பவள். (துர்க்காஸப்தசதி 4 - 5) அந்த ஶ்ரீயை உண்டாக்குபவள். (ச்ரியம் கரோதி.) அத்தகைய ஶ்ரீயைத் தன் கைகளில் கொண்டவள். (ஶ்ரீ: கரே யஸ்யா:) ஶ்ரீகரர் என விஷ்ணுவின் பெயர். அவரது மனைவியும் சக்தியுமான லக்ஷ்மியாயிருப்பவள். (127)

**17. ஸாத்தவீ. பதிவிரதை.**

17 - 1. பெண்ணின் பெருமை அவள் பதிவிரதையாக இருப்பதால் நிலைக்கும். தேவியின் பதிவிரதைத் தன்மையில் ஒரு தனிச்சிறப்புண்டு. எந்த பதிவிரதைக்கும் முற்பிறவிகளிலும் அடுத்துவரும் பிறவிகளிலும் இப்பிறவியில் அமைந்த கணவனே கணவனாக இருந்திருப்பார் என்றோ, நிச்சயமாகக்கூற இயலாது. இப்பிறவியில் மனைவியாயிருப்பவள் முன் வினைப்பயனாக முன் பிறவிகளிலும் பின் பிறவிகளிலும் ஆணாகவோ வேறு விதமாகவோ கூடப் பிறந்திருக்கவும் பிறக்கவும் கூடும். அதனால் அவர்களது பதிவிரதைத்தன்மை இப்பிறவியில் மட்டும் நிலைக்கக்கூடியது. தேவியோ பற்பல தோற்றங்களிலும் சிவனையே கணவனாகக் கொண்டவள். அதனால் முக்காலத்திலும் பதிவிரதையாக இருக்கும் சிறப்பு தேவிக்கு மட்டுமே உண்டு.

ஸாத்த்வீ எனும்சொற்றொடர் மீண்டும் (நா. 711, 712) வரும். அங்கு ஸாது ஈ என்ற இரு நாமங்களாக அது பிரியும். இங்கு ஸாத்த்வீ என்று ஒரே நாமம். (128)

**18. சரத் - சந்த்ர - நிப - ஆநநா. சரத்ருதுவின் சந்திரனுக்கு ஒப்பான முகமுள்ளவள்.**

18 – 1. வானம் முழுவதும் பரவி நின்று மேகங்கள் மழையாகப் பொழிந்து மறைந்ததும் ஆகாயம் மழையால் அலம்பப்பட்டது போல், தூய்மையும் தெளிவும் பெற்றுச் சரத்ருதுவில் விளங்கும். சரத்ருதுவில் உள்ள பூர்ணிமை இரவில் தெளிந்த வானில் வேறு மறைப்பும் மாசுமின்றி ஒளி நிறைந்து சந்திரன் காணப்படுவான். சூழலும் தானும் தூய்மையுடன் ஒளிவிட்டுப் பிரகாசிக்கும். அந்தப் பூர்ண நிலவைப் போன்ற முகமுள்ளவள். (129)

**19. சாத உதரீ. இளைத்த வயிறு உள்ளவள்.**

19 – 1. தேவியின் வயிறு மிகவும் (சாதம்) இளைத்துள்ளது. அடங்கிய வயிறு உடையவள். (நா. 847). நூற்றுக்கணக்கான குகைகள் கொண்டவன் சாதோதரன் – இமவான். அவனது புதல்வியானதால் சாதோதரீ. (130)

**20. சாந்திமதீ - மன அடக்கமுள்ளவள்.**

20 – 1. மன அடக்கம் சமம் – சாந்தி (பொறியடக்கம் தமம் – தாந்தி) அவளது அடியார்கள் மனவடக்கமுள்ளவர்கள். அவர்கள் தேவியைச் சூழ்ந்து நிற்பதால் எங்கும் சாந்தி நிலவுகிறது. தேவி சாந்தியே வடிவானவள். (நா. 447) ஆதலால் எங்கும் சாந்தியோடு கூடியவள். (131)

❋ ❋ ❋

அதிகாரம் - 14

# தேவியின் நிர்குணஸ்வரூபம்

**1. நிர் - ஆதாரா. தனக்கென ஆதாரமாக எதையும் கொள்ளாதவள்.**

1 – 1. தேவி மனத்திற்கும், வாக்கிற்கும் எட்டாதவள். மனமும், வாக்கும் ஒரு பொருளை எட்டிப்பிடிக்கச் சிற்சில குறிகள் தேவை. வசிக்குமிடம், பெயர், தோற்றம், நிறம், குணங்கள், எண்ணங்கள், வெளிப்படுகிற முறை முதலியவைகளைக் கொண்டுதான் ஒன்றைப் பற்றி மனமும், வாக்கும் குறிப்பறிய முடியும். அறிவதற்கு ஆதாரமானவை இக்குறிகள். தேவியிடத்தில் இத்தகைய குறிகள் எதனையும் காண முடியாது.

1 – 2. ஆதாரம் - தாங்கும் தன்மை உள்ளது. தேவி உலகு அனைத்திற்கும் ஆதாரமானவள். உலகில் ஆதாரமாய் இருப்பவையாக எதெனக் கொள்கிறோமோ, அதனைத்திற்கும் அவளே ஆதாரம். அவள் இன்றி எதுவும் நிலைத்திருக்காது. அத்தகைய தேவிக்கும் ஒரு ஆதாரம் இருக்கும் என்பது பொருந்தாது. ஆதாரமாயிருக்கின்ற பொருளனைத் திலும் ஆதாரதன்மையாக இருப்பவள். நிறம், உருவமைப்பு முதலியவற்றோடு கூடிய விக்கிரஹத்தினுள் உறைபவளாக நமது மனோலயத்திற்காகவே அவளை வழிபடுகிறோம். அவளது உண்மை நிலை அதுவேயல்ல. தான் எல்லாவற்றிற்கும் ஆதாரமாய் நின்று, தனக்கேனத் தனித்த ஆதாரம் வேண்டாதவள் நிராதாரா.

1–3. மனோலயம் ஏற்பட்ட பின் பேரறிவே வடிவான தேவி தோன்றுகிறாள். சிற்றறிவிற்கு அறிபவன், அறியப்படும் பொருள், அறிவு ஆகிய மூன்று ஆதாரங்கள் தேவை. பேரறிவில் இந்த மூன்றும் துலங்காது. பேரறிவிற்கு இந்த மூன்றின் உதவி தேவைப்படுவதில்லை. பேரறிவின் உதவிக்கொண்டே இந்த மூன்றும் துலங்குகின்றன. யஸ்ய பாஸா ஸர்வம் இதம் விபாதி, எதன் ஒளியின் உதவிகொண்டு தனித்தனியாக அறிவிற்குப் பொருளாகத் துலங்கும் இந்த உலகம் தோற்றத்தைப் பெறுகிறதோ அது. அதுவே பேரறிவு, அதற்கு ஆதாரம் தேவையில்லாததால் நிராதாரா- பேரறிவான உள் உணர்வு வடிவானவள்.

1-4. இதிலிருந்து தொடங்கி நிரத்யயா என்ற 187-ம் நாமம் வரை தேவியின் நிர்குண ஸ்வருபமும் அதனைத் தியானிப்பதால் ஏற்படும் நலனும் விளக்கப்படுகின்றன.

**உ. நிர்-அஞ்ஜநா. கருமையாக ஒட்டும் அழுக்கற்றவள்.**

2-1. அஞ்ஜனம் என்பது கண்களுக்கிடும் மை. கண்களில் இல்லாத கருமையைச் செயற்கையாகத் தோற்றுவிப்பது இது. அலங்காரப் பொருளாயினும் இது இயற்கையான தூய்மையைக் கெடுக்கும் அழுக்கே. உலகனைத்தும் வெவ்வேறு பொருளாகப் பேத புத்தியுடன் பார்ப்பது மாயை எனும் மலம். உலகனைத்திலும் ஊடுருவி நிற்கின்ற தேவியைப் பார்க்க முடியாதபடி இந்த பேதபுத்தி ஆவரணமாக (மறைப்பாக) நின்று மறைக்கிறது.தமோ குணத்தால் ஏற்படுவது இந்த ஆவரணம். தமோகுணம் கருநிறம் உள்ளது. அது அஞ்ஜனம்போல் ஜீவனிடம் செயற்கையாகச் சேர்ந்த மலம். நாடியது கிட்டின் ஏற்படும் மகிழ்ச்சியும், கிட்டாவிடில் ஏற்படும் ஆத்திரமும் இதன் விளைவே. அஞ்ஜானம் - அவித்யை எனப்படும் மாயையின் சேர்க்கையால் ஏற்படும் இந்த மாயாமலம் ஞான வடிவான தேவியினிடத்தில் காண முடியாதாகையால் நிரஞ்ஜநா.

2-2. எங்கும் நிறைந்த பரம்பொருளையே பலவாறாகக் கண்டு மகிழ்ச்சிக்கும், தாபத்துக்கும் உள்ளானோம். பலவாறான தோற்றம் மாயை எனும் அறியாமையால் விளைந்தது. தோற்றத்திற்கு ஆதாரம் பரம்பொருள். தோற்றத்தால் விளைந்த சுகதுக்கங்கள் தோற்றத்தின் ஆதாரத்தைப் பாதிக்காது. அவளை நிரஞ்ஜனாவாகத் தியானிப்பது நம்மிடமுள்ள மாயை எனும் மலத்தை அகற்றும். நி - நிரம்ப, ரஞ்ஜனம்-செம்மை, மகிழ்ச்சி. இவ்விரண்டும் நிரம்பக் கொண்டவள் தேவி. (நிதராம் ரஞ்ஜனம் யஸ்யாம்) அவளை அப்படி தியானிப்பது மகிழ்ச்சி தரும்.

(நா. 134-143)

निर्लेपा निर्मला नित्या निराकारा निराकुला ।
निर्गुण निष्कला शान्ता निष्कामा निरुपप्लवा ॥ 44 ॥

**நிர்லேபா நிர்மலா நித்யா நிராகாரா நிராகுலா.**

**நிர்குணா நிஷ்கலா சாந்தா நிஷ்காமா நிருபப்லவா. 44**

**௩. நிர் - லேபா. பூச்சாக ஒட்டும் அழுக்கற்றவள்.**

3-1. லேபம் -பூச்சு. இப்பிறவியில் அனுபவிக்கத்தக்க வினைகளாகச் சிலவற்றைப் பொறுக்கி எடுத்து (பிராரப்தவினைகள்) அவற்றை அனுபவிக்க

ஏற்றதான உடலமைப்பைக் கொடுத்து உண்மைநிலை அறிய முடியாதபடி ஜீவனை மறைந்த மலம் கார்மணம் - கருமமலம். உடலே தான் என்ற எண்ணமே இந்த பூச்சு. இந்த அழுக்கு ஞானத்தால் மட்டும் போகும். அஞ்ஞான நிலையில் இந்தக் கர்ம பந்தம் மேல்பூசிய சேறுபோன்று ஜீவனது சுய உருவை மறைக்கும். (ந மாம் கர்மாணி லிம்பந்தி , என் மேல் வினைகள் சேறுபோல் பற்றா, ....கீதை 4-14) தாமரை இலையில் நீர் ஒட்டாதது போல் ஞான ஸ்வரூபிணியான தேவியிடத்தில் வினைகள் பற்றா. ஞானத்தின் மேல் அஞ்ஞானத்தால் விளைந்த வினை ஒட்டாது. இவளது தத்துவத்தை உணர்ந்தவர்களிடத்தில் அதனை உணர்வதற்கு முன் ஒட்டியிருந்த வினையும் ஞானம் வந்ததும் அகன்றுவிடும். அவளை நிர்லோபாவாகத் தியானிப்பது வினை மலங்களை அகற்றும்.

### 4. நிர் - மலா. அழுக்கற்றவள்.

4-1. மாயை எனும் மலத்தால் ஏற்பட்ட அஞ்ஜனமும் கருமம் எனும் மலத்தால் ஏற்பட்ட லேபமும் அற்ற தேவியிடம் ஆவணம் எனும் மலமும் இல்லை. ரஜோ குணத்தால் ஏற்படும் விளைவு விக்ஷேபம். ஆத்மாவாக அல்லாத பொருளில் ஆத்மா என்ற எண்ணம். அப்பொருளை நீக்கியபின் ஆத்மா என்ற தனித்ததொன்று இல்லை என்ற எண்ணம். ஆத்மா ஒவ்வொரு தேகத்திலும் தனித்தனியாக உள்ளவன், கொசுவிலும் அதைவிட நுண்ணிய வடிவமுள்ள கிருமியிலும் அணு வடிவில் இருப்பவன் என்ற எண்ணம். இவை ஆவணத்தால் ஏற்படும் கலக்கத்தால் ஏற்படுபவை. எங்கும் நிரம்பியதொன்றை அணுவெனவும், வெவ்வேறானதாகவும், உடல் புலன் முதலியதாகவும் மதிப்பது இந்த விக்ஷேபத்தால் விளைகிறது. இருப்பது ஒன்று , காண்பது வேறொன்று என்பது விக்ஷேபம். எதை எப்படி அறியவேண்டுமோ அப்படி அறியாததும், எதை எப்படி அறிவது பொருந்தாதோ அப்படி அறிவதும் விக்ஷேபம். இந்த மலமே மற்ற இரு மலங்களுக்கும் மூலகாரணம் ஆனதால் மலமென்றே குறிப்பிடப்பெறுகின்றது. தூயதான ஆத்மாவைத் தேகத் தொடர்பால் தூய்மையற்றவனாகக் கருதும் விக்ஷேபம் காரணமாக ஆத்மாவிடம் மல சம்பந்தம் காண முடியாது. அதனால் ஆத்ம ஸ்வரூபிணியான தேவி நிர்மலா. அவளை அப்படித் தியானிப்பது ஆவணம் எனும் மலத்தைப் போக்கும்.

### 5. நித்யா. நித்யமானவள்.

5-1. தோன்றுகின்ற உலகம் அழியும், மாறுபடும். உலகத்தின் தோற்றம், இருத்தல், மறைவு மூன்று நிலைகளிலும் அதற்கு ஆதாரமாக

விளங்குகிற தேவி முக்காலத்திலும் அழிவற்றவள், மாறுபாடு அற்றவள். அதனால் என்றும் ஒரேவிதமாய் இருப்பவள் - நித்யா. அழிவற்றவளாகத் தியானிக்க அழிவு நீங்கும்.

5-2. பதினைந்து நித்யா தேவிகளாகத் (9-10-28 , 10-8-1) தோன்றுபவள். அவர்களுள் சுக்லதசமீ - கிருஷ்ணஷஷ்டி திதி தேவதையான நித்யா எனும் நித்யா தேவியாக இருப்பவள்.(136).

**6. நிர்- ஆகாரா. ஆகிருதியற்றவள்.**

6-1. உலகில் காணப்படுகின்ற பொருள் ஒவ்வொன்றிலும் ஒரு தனிச்சிறப்பு உண்டு. அதனைக்கொண்டு, ஒன்றை மற்றவற்றிலிருந்து பிரித்தறிகிறோம். அவ்விதம் அறிவில் தனித்துப் புலப்படுகிற தோற்றச் சிறப்பை ஆகாரம், ஆகிருதி, (வடிவம்) என்று சொல்வர். ஆண், பெண், மனிதன், மிருகம், மரம், கல், மண் என ஆகிருதியைக் கொண்டுதான் பிரித்து அறிகிறோம். தேவிக்குத் தனித்த வடிவம் கிடையாது. பலவாகத் தோன்றும் அவளது வடிவங்கள் மாயையால் எடுத்தவை. அவை அவளது நிஜ வடிவங்களல்ல. வடிவற்ற நிலையே அவளது உண்மை ஸ்வரூபம். வடிவம் பரப்பால் குறுகியது. எங்கும் நீக்கமற நிரம்பியுள்ளதற்கு வடிவம் இருக்க முடியாது. அதனால் நிராகாரா.

**7. நிர் - ஆகுலா. கலக்கமற்றவள்.**

7-1. அவித்யையின் தொடர்பால் உலகத்தின் உண்மை நிலை அறியமுடியாத படி கலக்கமேற்படும். அவித்யைக்கும் அவள் தான் ஆதாரம். அதன் தொடர்பிருந்தும் கூட ஆகாயம்போல் அவள் கலக்கமற்றவள். தெள்ளத் தெளிந்த ஞானவடிவினள். தெளிந்த ஞானமுள்ளவர்களால் மட்டும் அறியத்தக்கவள். அதனால் அவனது அடியார்களும் நிராகுலா வான அவளது அருளால் தெளிந்த ஞானம் பெற்றுக் கலக்கம் நீங்கப் பெறுகிறார்கள்.

7-2. ஆகுலம் - சூன்யநிலை. சூன்யநிலை அற்றவள். முக்காலத்திலும் ஸத்தாக இருப்பவள். அறிவிற்கெட்டாதவள் என்பதால் அவள் இல்லை என்று வாதிக்க முடியாது. மூல காரணத்தை அறிய முடியாதிருப்பதால் சூனியத்திலிருந்தும் உலகம் தோன்றியது என்று சிலர் கூறுவாாகள். அவர்கள் கலக்க முற்றவர்கள். ஒருபொழுதும்

இல்லாததிலிருந்து இருக்கும் பொருள் தோன்றாது. சூன்யத்திலிருந்து உலகம் தோன்ற முடியாது. அதனால் மூலகாரணம் ஸத்- இருக்கும் பொருள் ஆகத்தான் இருக்க வேண்டும்.

### 8. நிர்குணா. குணங்களற்றவள்.

8-1.ரூபம், மணம் முதலிய குணங்கள் பூதங்களது சிறப்பு அம்சமானவை. அதனால் தோற்ற நிலைக்கு வந்த பூதங்களிலும் பூதங்களாலானவைகளிலும் அவை காணப்படும். பூதநிலைக்கு முற்பட்டவளும் அவைகளின் காரணங்களுக்கும் காரணமானவளுமான தேவியிடத்தில் அந்தச் சிறப்பம்சங்கள் கிடையாது. பூதங்கள் ஜடப்பொருளாகும்.ரூபம் முதலிய குணங்கள் அவைகளை அண்டியவை. அவை சுத்தமான சேதனஸ்வரூபமான தேவியிடம் காண முடியாதவை. ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற முக்குணங்கள் உலகைப் படைக்க முற்பட்ட மாயை எனும் பிரகிருதி எடுத்துக் கொண்ட சிறப்புகள். இவைகளும் மாயைக்கப்பாற்பட்ட தேவியிடம் பொருந்தாதவை. ஒன்றைப் பலவாகப் பெருக்குவது குணம். (குண -பெருக்குதல் மூன்றை இரண்டால் பெருக்கி ஆறு என்பது போலப் பெருக்குதல்). அவளை அப்படிப் பெருக்க முடியாது. ஏற்கனவே எங்கும் நிரம்பியவள். இனிப் பெருக இடமில்லை.

### 9. நிஷ்கலா. கூறுபடாதவள்.

9-1. எங்கும் நிரம்பியதொன்றைக் கூறுபோட முடியாது. அகண்டமான தேவியிடமிருந்து தோன்றிய முதல் பூதமான ஆகாசத்தைக்கூட கூறுபோட்டகற்றவோ, அதன் கூறுகளை இடம் மாற்றி அமைக்கவோ முடியாது. ஆகாயத்திற்கும் மூலகாரணமான தேவியைக் கூறுபோடுவதெங்ஙனம்? அகண்டமான அந்தப் பரமபொருள் நம்மிடமுள்ள கருணையால், கண்டமென, திவ்ய மங்கள விக்கிரகமாக நமக்குத் தோன்றுகிறது. உண்மை நிலை அதுவல்ல.

9-2. தேவியைக் குணமற்றவளாக முகம், கைகால்களின்றி வடிவமின்றித் தியானிப்பது நிஷ்கலா சிந்தா எனப்படும். அத்தகைய தியானத்தில் தோன்றுபவள் நிஷ்கலா.

### 10. சாந்தா. சாந்த வடிவினாள்.

10-1. மனம் நிரம்பிச் செயலிழந்துத் தன்னை இழந்த நிலையில், அந்த அமைதியுற்ற மனத்தின் வடிவாக அமைந்தவள்.

10-2. மந்திர சாஸ்திரத்தில் ரகசியமாக ஓர் எழுத்தைக் குறிப்பிட , அக்ஷரமாலையில் உள்ள அதற்கடுத்த எழுத்தைக் குறிப்பிட்டு, அதனைத் தன் முடிவெழுத்தாகக் கொண்டது என்று குறிப்பிடுவர். இங்கு அமிருத பீஜமான வம் என்ற எழுத்தின் வடிவானவள் எனக் குறிப்பிடவேண்டும். அதற்கு ச-அந்தா, ச என்ற எழுத்தைத் தன் முடிவெழுத்தாகக் கொண்டவள் எனக் குறிப்பிடுகிறார்கள். ய ர ல வ ச ஷ ஸ என்ற அக்ஷரத் தொடரில் ல வை ஆதியிலும் ச வை முடிவிலும் கொண்ட எழுத்து வ. அதனால் வ வை லாதி என்றோ சாந்த் என்றோ குறிப்பிடுவர். அமிருத சக்தி பெற்ற வம் என்ற பீஜாக்ஷரவடிவினள்.

**11. நிஷ்காமா. விருப்பமில்லாதவள்.**

11-1. தன்னிடமில்லாததை மனிதன் நாடுவான். எல்லாமான தேவியிடம் இல்லாததொன்றில்லை. அதனால் நாட்டம் ஏற்பட ஏதுவில்லை. தன்னிடம் உள்ள பொருளே பிறரிடமும் இருப்பதைக் கண்ட மனிதன் பிறரிடம் அது இருக்கக்கூடாதென்றே கெட்ட எண்ணத்தால் அதுவும் தன்னிடம் இருக்கவேண்டும் என்று விரும்பலாம். தேவிக்குப் பிறர் என்ற எண்ணத்தக்கவர் எவரும் கிடையாது. ஆசைப்பட இடமில்லாததால் ஆசை தோன்றவில்லை. அதனால் நிஷ்காமா.

**12. நிர்- உபப்லவா. அழிவற்றவள்.**

12-1. பிரளய காலத்தில் எல்லாப் பொருள்களும் உருக்குலைக்கப்பட்டு ஜலத்தில் கரைக்கப்படுகின்றன. ஜலத்தில் கரைந்து உலகம் மிதக்கும் நிலை (உபப்லவம்) அதன் அழிவைக் குறிப்பிடும். எந்த நிலையில் உலகம் தோன்றியதோ அந்நிலை மாற்றப்படுவதே அதற்கு அழிவு. இப்படி உருக்குலைந்து அழியும் நிலை உலகிற்கு உண்டு. தேவிக்குக் கிடையாது. ஜடப் பொருளுக்குத்தான் தோற்ற மாறுதல் ஏற்படலாம். சேதனத்திற்கல்ல. (143).

(நா.144- 151)

नित्यमुक्ता निर्विकारा निष्प्रपञ्चा निराश्रया ।
नित्यशुद्धा नित्यबुद्धा निरवद्या निरन्तरा ॥ 45 ॥

**நித்ய முக்தா நிர்விகாரா நிஷ்ப்ரபஞ்சா நிராச்ரயா.**
**நித்யசுத்தா நித்ய புத்தா நிரவத்யா நிரந்தரா.**

**13. நித்ய - முக்தா. பந்தத்திலிருந்து எப்போதும் விடுபட்டவள்.**

13-1. வினைகள் தேகத் தொடர்பாகிற கட்டை ஏற்படுத்துகின்றன. அவளுக்குத் தேக பந்தம் எப்பொழுதும் கிடையாது. அதனால் இயற்கையாகவே எப்போதும் பந்தத்திலிருந்தும் விடுபட்டவள். அவளது அடியார்களும் எப்போதும் முக்தர்களே. நித்ய முக்தர்களான அடியார்களோடு கூடியவள். விடுதலையாகிய முக்தியே முக்தம். அந்த மோக்ஷ வடிவினள்.

13-2. ஸ்தூலம் ஸூக்ஷ்மம் காரணம் என்ற மூன்று தேகங்களும் ஜீவனைக் கட்டுகின்றன. ஆனால் கட்டுப்படுத்தும் மூன்று தேகங்களும் இருந்தும் விடுபட்டவர்கள் சிலர் உண்டு. அவர்கள் ஜீவன்முக்தர்கள், உடல் பந்தமிருக்கும்போதே விடுபட்டவர்கள். தன்னிஷ்டப்படி சுற்ற முடியாமல் பசுவை நீண்ட கயிற்றால் பிணைத்து முளையில் கட்டிவிடுவர். இந்தப் பசு எப்போதும் அடங்கி நடக்கும். முரட்டுத்தனமில்லாததென அறிந்த மாட்டுக்காரன் முளையில் கட்டுவதற்கேற்பட்ட கயிற்றைப் பசுவின் கழுத்திலேயே சுற்றி அதனை அதன் இஷ்டப்படி சுற்றவிடுவான். முளையில் கட்ட மாட்டான். மாட்டுக்காரன் போட்ட எல்லையைப் பசு மீறாதாகையால் கயிறு மட்டும் அலங்காரமாகிக் கழுத்தில் சுற்றப்பட்டிருக்கும். அந்தக் கயிறு கட்டுவதற்கல்ல. அப்படிக் கயிறு சுற்றியிருப்பதே விடுதலைக்கடையாளம். வினையை அனுபவித்துத் தீர்க்க இறைவன் கொடுத்தது தேகக்கட்டு. அதனை இறைவன் வகுத்த வழியில் பயன்படுத்தும்போது தேகக்கட்டை வினையாகிய முளையில் பிணைக்காமல், கட்டே அலங்காரமாகத் தோன்றுமளவில் அதனை ஜீவனின் கழுத்திலே சுற்றிவிடுகிறான். அந்த தேகமே, உள்ளிருக்கின்ற விடுபட்ட ஆத்மாவின் ஒளி தன்னிடம் துலங்க, வணக்கத்துக்குரிய பொருளாகிறது. அப்படி விடுதலை பெற்றவர்கள் தேவியின் அருளால் நித்திய முக்தர்களே.

### 14. நிர்விகாரா. மாறுதல் அற்றவள்.

14-1. விகாரம் - பரிமாணம் - மாறுதல். புலப்படுகின்ற பொருள் ஒவ்வொன்றும் விகாரம் அடைந்ததே. மூலப்பிரகிருதி என்பது பிரும்மத்திலிருந்து பிரிந்த அதன் மாயா சக்தி. இதுவே உலகின் மூலகாரணம். மாறுபடாததால் இது பிரகிருதி. பிரகிருதி - ஒரே நிலையில் உள்ளது. மாறுபடாதது. அதிலிருந்து வரிசையாகத் தோன்றிய மஹத், அஹங்காரம், ஐந்து தன்மாத்திரங்கள் என்ற ஏழும் பிரகிருதி - விக்ருதி என்ற இரு நிலையிலும் அமைந்தவை.

தன் மாத்திரங்களிலிலுருந்து உண்டான மஹாபூதங்கள் (நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம்) பொறிகள், மனம் முதலியவை விகாரங்கள்.

இவை அனைத்தும் பரிணாமத்துக்குட்பட்டவை. மூலப் பிரகிருதிக்கும் ஆதாரமான தேவி மாறுதலுக்கு உட்படாதவள். (நா.256, 397-401)

14-2. பாலானது தயிர், வெண்ணெய், நெய் முதலிய பல விகாரங்களை - மாறுதல்களை அடைகிறது. மாறுதலடைந்த பொருள் மீண்டும் மனது தற்போதைய நிலைக்குக் காரணமாயிருந்த முன் நிலையை அடைய முடியாது.ஜடப்பொருள் அனைத்தும் இவ்விதம் பரிணாமத்திற்கு உட்படும். தேவி ஜடப்பொருள் அல்ல. அதனால் அவளிடம் மாறுதல்கள் தோன்றுவதில்லை. ஆத்ம ஸ்ரூபமான தேவி மாறுதல் அற்றவள்.

14-3. தோன்றுகின்ற பொருள் அனைத்தும் ஆறு விகாரங்களை அடைகின்றன. உண்டாகிறது- ஜாயதே இருக்கிறது - அஸ்தி வளர்கிறது - வர்த்ததே , மாறுதலடைகிறது - விபரிணமதே, தேய்கிறது - க்ஷீயதே, மறைகிறது நச்யதி என்பன அவை. முன்னர் இல்லாதது பிறக்கும். குறைவுள்ளது வளரும். வளர்ந்தது தேயும். வளர்ந்து தேய்வது மாறுபடும். பிறந்தது இறக்கும். தேவி நித்யா (நா.136)நிர்விகாரா, நித்யையானவள். அதனால் மாறுபாடற்றவள்.

### 15. நிஷ்-ப்ரபஞ்சா. பிரபஞ்சத்திலிருந்து வெளிப்பட்டவள்.

15-1. ஒன்று பலவாக விரிவது பிரபஞ்சம். குவிதலும் விரிவடைதலும் மாறுதலுக்குட்பட்ட பொருளின் தன்மையாகும். மாறுதலுக்குப்படாத தேவியிடம் பிரபஞ்சத்தனைமை காணப்படுவது இல்லை.

### 16. நிர்- ஆச்ரயா. சார்பற்றவள்.

16-1. உலகமனைத்தும் தேவியைச் சார்ந்திருக்கின்றது. அவளுக்கும் ஒருசார்பு உண்டு என்பது அதனால் பொருந்தாது. அவள் எதனையும் சார்ந்தவள் அல்ல. (ஆதாரம் பீடம் போல் (நா.132) ஆசரியம் ஓய்வற்குச் சாயும் சுவர் போல்)

### 17. நித்ய - சுத்த்தா. எப்போதும் தூயவள்.

17-1. இயற்கையாகத் தூய்மை மிக்கவள் தேவி. தூய்மையற்ற பொருளுடன் சேருவதால் தூய்மை கெடக்கூடும். மிகுந்த நெருக்கமிருப்பினும் ஆகாயம் போல் வேறு பொருளுடன் ஒட்டாத தன்மை படைத்த தேவியிடம் எவ்வகையிலும் ஸ்பர்ச தோஷம் ஏற்பட வழியில்லை. எக்காலத்திலும் அவளிடம் அசுத்தம் காணப்படுவதில்லை.

17-2. சுத்தமாயிருப்பது இயற்கை. அழுக்காவது செயற்கை. இயற்கையாகக் கிடைக்கும் ஜலமும், காற்றும் தூய்மையானது. மற்றவற்றுடன் கலப்பதால் அவைகளின் தூய்மை கெடுகிறது. மற்றொன்றின் ஸ்பரிசம் - சேர்க்கை சுத்தியைக் கெடுக்கும். ஸ்பரிசம் - ஊறு, தீண்டுதல். தேவியிடம் எதுவும் ஒட்டாது. அதனால் ஸ்பரிச தோஷமில்லை. அதனால் எப்போதும் தூயவள்.

**18. நித்ய - புத்தத்ா. என்றும் அறிவாயிருப்பவள்.**

18-1. சித் என்ற பேரறிவாயிருப்பவள். அந்நிலையில் இருந்தும் என்றும் மாறுபடாதவள். எல்லாவற்றிற்கும் ஸாக்ஷியாகப் பேரொளியாக விளங்கும் அவளிடத்தில் அறியாமை எனும் இருட்டிற்கு என்றுமே இடமிருந்ததில்லை. அறியப்படும் பொருள் வேறு; அறிபவன் வேறு என்ற நிலையில் சிலவற்றை அறியாதிருக்க வாய்ப்புண்டு. அறிவாகி நின்று அறியப்படுவது அறிபவன் என்ற வேற்றுமையற்ற நிலையில் அறியாமைக்கிடமில்லை. ஆகையால் அவள் நித்ய புத்தா - எப்போதும் அறிவாளி.

18 - 2. ஸர்வாநந்தமய சக்கிரத்தில் ஆறு தர்சனங்களுக்கும் ஈசுவரியாகத் தேவியை வழிபடும்போது, அந்த ஆறு தர்சனங்களில் ஒன்றாக ஜைந தர்சனமும் இடம் பெறுகிறது. ஜைந மூர்த்திகளில் சுத்தரும், புத்தரும், புத்தரும் புகழ் பெற்றது தேவியின் அருளால்தான். ஜைனர்கள் வழிபடும் தாரா என்பவள் தேவியின் அம்சமே. அந்த சுத்தரும், புத்தரும் அவளது அருளால் சிறப்புற்றனர் என்பதையும் நித்ய சுத்தா, நித்ய புத்தா என்ற இரு நாமங்கள் குறிப்பிடும். (149)

**19. நிர் - அவத்யா. குறையற்றவள்.**

19 - 1. புகழ்ந்து பேசக்கூடியது வத்யம். இதற்கு நேர் எதிரிடை அவத்யம். அதனைச் சொல்லவே நா கூசும். அப்படிப் பிறர் சொல்லால் சுட்டிக்காடக்கூடிய குறை ஏதுமற்றவள். அத்தகைய குறைகள் அறியாமையால் ஏற்படுகின்றன. அறிவு வடிவமான தேவியிடம் குறைகளுக்கு இடமில்லை.

19 - 2. அவத்யம் - நரகம். அவளது அருளால் பாபிகளும் நரகத்திலிருந்து தப்பிக்கின்றார்கள். அதனால் நிரவத்யா. (150)

20. நிர் அந்தரா. இடைவெளியற்றவள்.

20 - 1. இடைவெளி, எல்லை, வேறுபாடு, மறைப்பு, ஓட்டை இவை

இனைத்தும் அந்தரம் என்ற சொல்லுக்குப் பொருளாகும். வேறொரு பொருள் அருகேயோ தூரத்திலோ இருக்கும்போதுதான் அந்தரம் ஏற்பட முடியும். எல்லாமாகி நிற்பவளிடம் அந்தரம் ஏற்பட வழியில்லை. இடைவெளிதான் பொருள்களை வேறுபடுத்துகிறது. ஆகாயத்தைப்போல இடைவெளியற்றிருப்பவள் தேவி. அதனால் அவளிடம் வேறுபாடும், மறைப்பும், ஓட்டையும், எல்லையும் கிடையாது. (151)

**(நா. 152 - 159)**

निष्कारणा निष्कलङ्का निरुपाधिर्निरीश्वरा ।

नीरागा रागमथनी निर्मदा मदनाशिनी ॥ 46 ॥

**நிஷ்காரணா நிஷ்கலங்கா நிருபாதிர் நிரீச்வரா.**

**நீராகா ராகமதநீ நிர்மதா மதநாசிநீ. 46.**

**21. நிஷ் காரணா. காரணமில்லாதவள்.**

21 - 1. தானே எல்லாவற்றிற்கும் மூலகாரணமாயிருப்பவள். அவளுக்கும் ஒரு காரணம் இருப்பதற்கில்லை. இந்தப் பொருள் எதனால் விளைந்ததோ, எதிலிருந்தும் தோன்றியதோ அது இதற்குக் காரணமாகிறது. அப்படி அவள் தோன்றவோ, புதிதாக விளையவோ வேறொன்று காரணப் பொருளாக இருக்க முடியாது. அதனால் நிஷ்காரணா. (152)

**22. நிஷ் கலங்கா. களங்கமற்றவள்.**

22 - 1. களங்கம் வினையின் வடு. என்றோ செய்த வினை அதன் பயனைக் கொடுத்து மறைந்திருக்கக்கூடும். ஆனால் அந்த வினைப்பயனை அனுபவித்ததன் வடு என்றும் மறையாது. சந்திரன் வியாழ பகவானின் மனைவியிடம் செய்த அபசாரம் அவனிடம் களங்கமாக, வடுவாக இன்றும் காணப்படுகிறது. இந்திரன் அகலியையிடம் செய்த பாவம் இன்றும் அவன் உடலில் உள்ள ஆயிரம் கண்களால் ஞாபகப்படுத்தப் படுகிறது. இப்படி அடையாளமாக நிலைத்து விடும்படி கொடுமையான பாபம் புரிந்திருப்பவர் இந்தக் களங்கத்தை உடலில் தாங்கி நிற்பர். வினையோ வினையால் விளைந்த பாபமோ ஒட்டாத தேவியிடத்தில் களங்கத்திற்கு இடமில்லை. அதனால் நிஷ்கலங்கா. (153)

**23. நிர் - உபாதி: உபாதியற்றவள்.**

23 - 1. சேர்க்கையால் ஏற்படும் மாறுதல், சேர்க்கை விலகியவுடன் மறைவதால் அது உபாதி. சேர்க்கை விலகிய பின்னரும் தொடர்ந்தால்

மலம். ஸ்படிகலிங்கம் நிறமற்றது. அதன்மேல் சிவந்த மந்தாரைப் பூவைச் சாற்றியவுடன் லிங்கம் சிவந்து காண்கிறது. நீல நிறமுள்ள சங்குப் பூவைச் சாற்றியதும் நீலமாகக் காண்கிறது. இந்தப் பூக்களை அகற்றியதும் அதன் இயற்கையான நிறமின்மை காண்கிறது. சேர்க்கையால் ஏற்பட்ட மாறுதல் நிலைக்கவில்லை. தான் சேர்ந்திருக்கும் வரை தன் சிவப்பு நிறத்தை லிங்கத்திடம் ஏற்றி வைத்த சிவப்பு மந்தாரை உபாதி. லிங்கம் சிவந்ததாக் காண்பது உபாதியால். இயற்கையாக அல்ல. சேதனம் ஜடப்பொருளுடன் கூடியிருப்பதால் ஜடப்பொருளும் சேதனம் போல் தோன்றும். சேதனத்தையும், ஜடப்பொருளாக மதித்து ஜடத்தின் குணங்களை அதன்மேல் ஏற்றிவிடுகிறோம். இவ்விரண்டும் அறியாமை எனும் உபாதியால் ஏற்படும் பிரமை. ஸ்படிகலிங்கத்தில் பூவை அகற்றியதும் செந்நிறம் காண்பதில்லை. சேதனத்தில் ஜடத்தின் சேர்க்கையை அகற்றி அறிவதால் அதன் மேலேற்றி வைத்திருந்த ஜட குணங்கள் அனைத்தும் மறைந்து விடுவதை உணரலாம். சித் - பேரறிவு வடிவிலுள்ள ஆத்மா - இயற்கையான குணங்கள், செயல்கள் அற்றவன். குணங்களும், செயல்களும் ஜடத்தைச் சார்ந்தவை. ஜடத்துடன் சேர்த்தறிவதால் இவன், அவள், இது, அது என்று பேத பாவனை ஏற்பட்டது. இந்த பேத பாவனைக்கு ஆத்மா எது, ஆத்மாவாக இல்லாதது (அனாத்மா) எது என்று பிரித்தறியாதிருப்பது உபாதியாக நின்று உதவுகிறது. இதனை அகற்றியதும் உண்மை நிலை புரிகிறது. தேவி உபாதி நீக்கிய நிலையில் அறியத்தக்கவள்.

23 - 2. மாறுபட்ட தோற்றத்திற்குக் காரணமான உபாதி போலியானது. உபாதி எதையும் மாற்றுவதில்லை. மாற்றும் சக்தி படைத்ததாக வேடம் தாங்கி விளையாடும். போலியான காரணமானதால் ஏமாற்றும். அறிவைத் தராது. தேவியிடம் இந்த உபாதித்தன்மை சிறிது கூடக் கிடையாது. இது உபாதி என்று அறிந்த பக்தனை உபாதி ஏமாற்றாது. (154)

### 24. நிர் - ஈச்வரா. தன்னையடக்கி ஆள்பவரில்லாதவள்.

24 - 1. உலகம் அவளது ஆளுகைக்குட்பட்டது. அவள்தான் ஈசுவரி. அவளுக்கு ஈச்வரனில்லை. அவளது சக்தியின் ஓரம்சமாவது பெற்றவன்தான் பிறரை ஆட்படுத்த முடியும். சிவனே கூட அவளது துணை கொள்வதால் மட்டுமே ஈசுவரனாக விளங்குகிறார். ஈசுவரருக்கும் ஈசுவரியான அவளுக்குமேல் ஒரு ஈசுவரன் கிடையாது.

24 - 2. மீமாம்ஸா சாஸ்திரமும், ஸாங்கிய சாஸ்திரமும் ஈசுவரனைக் காரணப் பொருளாக ஒத்துக்கொள்வது இல்லை. மீமாம்ஸையின்படி

வினையே உலகின் எல்லாச் செயல்களுக்கும் காரணமாகிறது. வினையே எல்லாவற்றையும் நிர்வகிக்கக் கூடுமாதலால் ஈசுவரன் என ஒன்று தேவையில்லை. ஸாங்கியத்தில் இயற்கையே அந்த சக்தி பெற்றது. அங்கும் ஈசுவரன் அவசியம் இல்லை. இந்த இருவரது நிரீசுவரவாதத்தின் உட்பொருளாய் இருப்பவளும் அவளே. வினையும் இயற்கையும் தானேயாகி உலகை இயக்கி நிரீசுவரவாதத்திற்கு இடமளிப்பதால் நிரீசுவரமாக இருப்பவளும் அவளே. (155)

### 25. நீராகா. ஆசையற்றவள்.

25 - 1. மனம், புத்தி, சித்தம், அஹங்காரம் என அந்த: கரணம் நான்கு வகைப்படும். இது இருந்தால் நல்லது. இதைப்பெறலாம். என்ற எண்ணம் ஸங்கல்பம்; அதனைச் செயலாற்றுமுன் பெற்றால் நல்லதா, கெட்டதா என்று சஞ்சலப்படுவது விகல்பம்; இது இரண்டும் மனத்தின் செயல். மனப்போக்கை ஆராய்ந்து இது நல்லதே; ஏற்போம்; இது கெட்டதே; தவிர்ப்போம்; என்று நிச்சயிப்பது புத்தியின் செயல். இதுபற்றி முன்னர் என்ன செய்தோம்? என்ன விளைந்தது என்று முன் அனுவத்தை புத்திக்குப் படம் பிடித்துக் காட்டுவது சித்தம். நான் செய்வேன்; என்னால் முடியும் என்ற ஜீவனின் தன்மானம் அஹங்காரம். இந்த நான்கும் அந்த: கரணம். (மநோ புத்தி: அஹங்கார: சித்தம் கரணம் ஆந்தரம். ஸம்சய: நிச்சய: கர்வ: ஸ்மரணம் விஷயா: அமீ) இந்த நான்கும் ஜடமாயினும், ஆத்மாவின் பேரொளியில் பட்டமையால், தனக்குச் சேதனமென்ற போர்வை போர்த்திக் கொண்டு ஆத்மா என்றே தன்னை அறிமுகப்படுத்திக் கொள்ளும். இவைகளின்போக்கு ஆசை, திமிர், கவலை, மமதை, மோஹம், குரோதம், லோபம், ஸம்சயம், விகல்பம், பேத உணர்வு முதலிய பல உணர்ச்சிகளின் மூலம் வெளிப்படும் இவை இவை ஆத்மாவின் தன்மைகள் அல்ல. ஆத்மாவிடம் சிறிதும் பொருந்தாதவை. இவைகளை ஆத்ம குணங்கள் என நம்பி அவைகள் காட்டும் வழியில் செல்பவன் அழிவிற்கு உட்படுகிறான். இவை ஆத்மாவுடன் பொருந்தாதவை. ஜடமான அந்த: கரணத்தின் கோலங்கள் என அறிந்து இவைகளை அடக்கவோ, இவைகளை விட்டகலவோ, இவைகளுடன் தொடர்பின்றி இருக்கவோ முயல்பவன் மேன்மை பெறுகிறான். ஆத்ம ரூபிணியான தேவியிடம் அந்த குணங்கள் இல்லை. அப்படி அறிந்து தேவியை வழிபடுபவன் இந்த குணபந்தத்திலிருந்து விடுவிக்கப்படுகிறான் என்பதை உணர்த்தும் வகையில் நீராகா என்ற 187-வது நாமம் வரை ஸஹஸ்ரநாமம் விளக்கம் தருகிறது.

25 - 2. ராகம் - ஆசை, காமம், இச்சை - எல்லாம் ஒரே பொருளுடையவை. இது வேண்டும் என்ற விருப்பம் ராகம். அது தேவியிடம் இல்லை. ஆசைப்படுவது மனம். அது சேதனமல்ல. தேவி சேதனம், (சேதனம் - அறிவு, இயங்குவது. ஜடம் - இயக்கமற்றது அசேதனம்) அது நம்மிடம் இல்லை என்ற எண்ணத்தின் விளைவு விருப்பம். அது என்றால் வேறான பொருள். தன்னிலும் வேறுபட்ட பொருளில்லாமையால் தேவிக்கு விருப்பம் ஏற்படுவது இல்லை. எல்லா ஆசைகளும் நிறைவேறிப் பூர்ணமாக (அவாப்த ஸமஸ்தகாமா) இருப்பதாலும் விருப்பமில்லை.

25 - 3. அது இருந்தால் ஆனந்தம் ஏற்படும் என்ற எண்ணமும் விருப்பத்தின் காரணம். இந்த எண்ணம் தவறானது. ஆனந்தம் பொருளில்லை. இது ஆனந்தம் எனக்கொள்ளும் மனப்பாங்கை ஒட்டியது. நேற்று ஆனநந்தத்தைத் தந்த பொருள் இன்று ஆனந்தத்தைத் தரவில்லை. ஆனந்தம் அதனிடம் இருந்திருக்குமானால் இன்றும் அது ஆனந்தத்தைத் தந்திருக்கும். நேற்று அதனைப் பெற்றுக் களிக்கவில்லை. மனத்தின் சார்பு இன்று மாறுபட்டுள்ளதே காரணம். வாஸனை வசப்பட்ட மனமே இத்தகைய இச்சாத்துவேஷங்களுக்கும் காரணம். ஆத்ம ஸ்வரூபிணியான தேவி மனமாற்றத்திற்கு உட்படாதவள். ஆனால் அவள் ராகமில்லாதவள். இது எனக்கு உவக்கும், எனக்கு உவக்காது என்ற முன் வாஸனையால் ஏற்பட்ட பற்று வினைப்பயனாக அமைகிறது. தேவி வினைக்கு அப்பாற்பட்டவள். அதனால் அவளிடம் ராகம் இல்லை. (156)

### 26. ராக மதனீ. ஆசையைக் கடைந்து வெளிப்படுத்துபவள்.

26 - 1. மதனம் - கடைதல். உள்ளே ஒளிந்து எளிதில் வெளிப்படாதிருக்கிற பொருளைக் கடைந்து வெளிப்படுத்திப் பிரிப்பர். ஆசை எதனால் ஏற்படுகிறது? ஆசை நிறைவேறினால் என்ன கிட்டும்? அது நிறைவு தருகிறதா? அப்படிப்பெற்ற நிறைவு நிலைத்திருக்கிறதா? மறுபடி அதுவே மற்றொரு ஆசையைத் தூண்டாதிருக்கிறதா? தூண்டுமாயின் நிறைவு பெறவில்லை என்றுதானே பொருள்? முதலில் ஆசைப்படும்போது அது கிட்டினால் நிறைவு ஏற்படும் என்று நம்பினாயா? நம்பிக்கை பொய்த்ததன் காரணம் என்ன? நிறைவு நாடப்பட்ட பொருளால்

கிடைக்குமா? போதுமென்ற மனமே நிறைவை உணரும் என்பார்களே? அது உண்மையா? என்று ஆசையாகிய எண்ணங்களைக் கடைந்து அதனுள் வெண்ணையாகிற மனநிறைவு இல்லை எனக் கண்டுகொள்ளச் செய்பவன். அதன் விளைவாக வைராக்கியம் எனும் வெண்ணெயை நாடுகின்ற மனத்தைத் தந்து அதனால் ஈசுவரார்ப்பணமாக்கப்பெற்ற பணிகள் மூலம் மனத்தெளிவளித்து அந்த ராகமற்ற மனதில் நீராகா வாகத்தோன்றுபவள்.

26 - 2. ஆசை முழுவதும் அழிய முடியாத இடத்தில் ராகஸ்வரூப மான தன் பாசத்தால் ராகத்தை வெற்றிகொள்ளச் செய்கிறாள். (7-5-4) (157)

**27. நிர்மதா. மதமில்லாதவள்.**

27 - 1. மத: - திமிர்; ஆசை நிறைவேறியதும் ஆணவத்தால் திமிர் ஏற்படுகிறது. மற்றவருக்குக் கிட்டாதது எனக்குக் கிட்டியுள்ளது, என்னால் தான் பெற முடிந்தது என்ற எண்ணம் தேவிக்கு வராது. தனது சாதனையைப் பிறரிடம் காட்டிக்கொண்டால்தான் மதம் பயன்படும். பிறரையே காணாத தேவி மதத்தை எங்கு காட்டுவாள்? அதனால் தேவி நிர்மதா. (158)

**28. மதநாசிநீ. மதத்தை அழிப்பவள்.**

28 - 1. ஆசை நிறைவேறவிருக்கும்போது ஏற்படும் தடையால் மதம் அழியும். ஆசை அவள் அருளால் நிறைவேறுகிறது என்ற உண்மையை உணர்ந்தால் மதம் மறைகிறது. இரண்டு வகையாலும் தேவி மதத்தை அழிப்பவள். மதமற்றவளால்தான் அவள் மதநாசினி ஆவாள். மதமுள்ளவள் மற்றவர் மத்தை அழிக்க முடியாது. (159)

**(நா. 66 - 67)**

निश्चिन्ता निरहङ्कारा निर्मोहा मोहनाशिनी ।
निर्ममा ममताहन्त्री निष्पापा पापनाशिनी ॥ 47 ॥

**நிச்சிந்தா நிரஹங்காரா நிர்மோஹா மோஹநாசிநீ.**
**நிர்மமா மமதாஹந்த்ரீ நிஷ்பாபா பாபநாசிநீ. 47**

**29. நிச் சிந்தா. சிந்தையற்றவள்.**

29 – 1. சிந்தை – எண்ணம், நினைவு என்று பொருள்படும். வேதனை தரும் நினைவையும், பிறரை ஏமாற்றும் எண்ணத்தையும் சிந்தா என்பர். இவ்விரண்டும் அற்றவள்.

29 - 2. இல்லையே, இருப்பது போய்விட்டால்? என்று இரு வகையில் எண்ணம் வேதனை தருகிறது. இவ்விரு எண்ணங்களும் அவளுக்குத் தோன்றாதாகையால் நிச்சிந்தா. அவளே பிரபஞ்சம். அதில் அவளுக்கு எதிரி கிடையாது. அதனால் கெடுக்கும் எண்ணம் யாருக்குமில்லை. அதனாலும் நிச்சிந்தா. (160)

**30. நிர் - அஹங்காரா. அஹங்காரம் அற்றவள்.**

30 – 1. தான் அல்லாத ஜடப்பொருள் செய்ததைத் தன்னில் ஏற்றிப் பார்ப்பது ஆத்மாவிடமுள்ள அஹங்காரம். ஆத்மா என்ற பேரொளி பட்டு ஜடமான புத்தி இயங்குகிறது. அந்த புத்தி இயக்கத்தால் நடந்ததை ஆத்மாவே நடத்தியதுபோல் புத்தி விளம்பரப்படுத்தும். இது புத்தியிடமுள்ள அஹங்காரம். அகர்த்தா கர்த்தாவென்றும், கர்த்தா அகர்த்தாவென்றும் நினைப்பது அஹங்காரமாகிறது. பிரமை காரணமாக ஏற்படும் இந்த அஹங்காரமற்றவள் தேவி.

30 - 2. பலவாக மாறுவேன் (பஹுஸ்யாம்) என்ற ஈச்வர ஸங்கலம் மாயையில் பிரதிபலித்துப் பல பொருள்களாக மாறத் தக்க மூலப்பொருள் தொகையாகிய மஹத் எனும் தத்துவத்தை உண்டாக்கியது. ஈசுவர ஸங்கல்பம் மேலும் வலிவடைந்தபோது, தனித்தனி மூலப்பொருளாகப் பிரியத் தக்கதான அஹங்காரம் எனும் தத்துவம் மஹத்திலிருந்தும் தோன்றியது. இந்த அஹங்காரமே பூததன்மாத்திரங்களாகவும், பொறிகளாகவும், மனமாகவும், பிராணனாகவும் வடிவெடுத்தது. இவைகளிலிருந்து விரிந்த இந்த உலகம் தோன்றக் காரணமாயிருந்த இந்த அஹங்காரம் தேவி அல்ல. அதற்கும் மேம்பட்டவள் அவள் - நிரஹங்காரா. (நா. 256 - 263, 397 - 401) (161)

**31. நிர் - மோஹா. மதிமயக்கமற்றவள்.**

31 – 1. நாடிய பொருள் கிட்டாதபோது பூத்தி மயங்குகிறது. அது எல்லாவற்றையும் இழந்துவிட்டாற்போன்ற கலக்கத்தைத் தருகிறது. ஒன்றை இழக்காதபோது அதனை இழந்துவிட்டது போன்று கலங்குவது மோஹம். இத்தகைய மதிமயக்கம் அற்றவளானதால் நிர் மோஹா. (162)

### 32. மோஹ - நாசிநீ. மதிமயக்கத்தைப் போக்குபவள்.

32 – 1. மயக்கம் மோகத்தால் – பிரமையால் ஏற்படுவது. உண்மை அறிவால் மயக்கம் தெளியும். உண்மை அறிவு பிரமைக்கு எதிரி. பழுதைப் பாம்பெனக் கண்டவன் கொண்டது மோகம். பழுதைப் பழுதெனக் காண்பது ஒன்றுதான் அதனைப் போக்கும். பல பொருள்களை உணர்வதால் ஏற்படுகிற மயக்கம், பொருள்களினூடே துலங்கும் உண்மைப் பொருளை அறிவதால் நீங்கும். அப்படி உண்மை அறிவைத் தந்து மோகத்தை நிக்குபவள். (163)

### 33. நிர் - மமா. மமதை இல்லாதவள்.

33 – 1. உடலாகிய ஜடப்பொருளில் நான் என்ற எண்ணம் – அஹந்தை; அது பிரமையால் ஏற்பட்டது. அது விரிந்து அதனுடன் தொடர்பு கொண்ட நான் அல்லாத பொருள்களில் சொந்தம் கொண்டாடும் மமதைக்கு இடம் தந்தது. மம–தா–என்னுடையது என்ற எண்ணம். முன் உடல் வரை விரிந்திருந்த நான் வீடாக, பணமாக, மற்றும் பல நாடிய பொருளாக விரிந்துவிட்டது. இப்படித் தன்னுடன் சம்பந்தமில்லாத பல பொருள்களில் தான் சம்பந்தப்படுவதே மமதா. பேத உணர்ச்சி அதிகமாக ஆக இது வளரும். (நா. 178–179) தன்னைத்தவிர வேறு பொருள் நோக்கமற்ற தேவி நிர்மமாவாக விளங்குகிறாள். (164)

### 34. மமதா - ஹந்த்ரீ. மமதையைப் போக்குபவள்.

34 – 1. பிரமை நீங்க, அகந்தை முன்னதாக அழியும். பின் அதன் விரிவான மமதையும் நீங்கும். பிரமை நீங்க உண்மை அறிவைத் தருகிறாள் தேவி. (165)

### 35. நிஷ் - பாபா. பாபமற்றவள்.

35 – 1. நற்செயல் புண்ணியத்தையும், கெட்ட செயல் பாபத்தையும் விளைவிக்கிறது. மனம், வாக்கு, காயம் என்ற மூன்று கரணங்களும் கெட்டதான முடிவு கொண்ட செயலைப் புரிய பாபம் விளைகிறது. கெட்ட எண்ணம் கெட்ட சொல்லாகிப் பின் கெட்ட செயலாகிறது. கெட்ட எண்ணம் வாஸனையால் ஏற்பட்டது. முற்பிறவிகளிலும் இப்பிறவியில் இச்செயலுக்கு முன்னரும் செய்த வினைகள் மனத்தில் ஏற்படுத்திய பாதிப்பே வாசனை. இன்று புரியும் செயலும் இத்தகைய வாசனையை ஏற்படுத்தும். அதனால் அன்றும் இன்றும் புரிந்த கெட்ட செயலின் விளைவு இச்செயலுடன்

மாய்வதல்ல. சங்கிலித் தொடராக அது மேன்மேலும் கெட்ட செயலைத் செய்யத் தூண்டிவிடும். இதனையே பாபம் என்கிறோம். கெட்ட எண்ணம் ஆசையால் விளைவது. நீராகா வான அவளிடம் பாபம் ஒட்ட முடியாது.

(166)

**36. பாபநாசிநீ. பாபத்தைப் போக்குபவள்.**

36 - 1. பாப வாஸனை அழிந்தால் பாபம் செய்யும் மனப்பான்மை தொடராது. வாஸனை - மணம். கெட்ட மணத்தைப் போக்க (1) அது உற்பத்தியாகக் காரணமாயிருந்ததை அழிப்பதும், (2) கெட்ட மணம் தரும் பொருளை அகற்றுவதும், (3) கெட்ட மணத்திற்கெதிரான நல்மணத்தைக் கெட்ட மணம் மறையுமளவிற்கு அதிகமாக பரப்புவதும் உபாயங்கள். அதே போல் மனத்தில் உள்ள கெட்ட வாஸனையைப் போக்க (1) வாஸனைக்குக் காரணமாயிருந்த அறியாமை, அதனால் ஏற்பட்ட ராகம் என்ற இரண்டையும் அழிப்பதும் (2) கெட்ட வாஸனை தூண்டிக் கொண்டிருக்கின்ற போதும் கெட்டதைச்செய்வதில் கோபத்தை வளர்த்துக் கெட்டதைச் செய்யமாட்டேன் என்று வீம்பைக் கடைபிடிப்பதும் (3) கெட்டதற்கெதிரான நல்ல வாஸனைகளைத் தரும் நற்பழக்கங்களைப் பலவந்தமாக ஏற்படுத்திக்கொள்வதும் உபாயமாகும். தேவி அஞ்ஞானத்தைப் போக்குகிறாள். அதனால் வாஸனை அழிகிறது. த்ருதி: - உறுதி மனப்பான்மையாக (நா. 446) இருந்து க்ரோதம், ஞானம் என்ற துறட்டியைப் பயன்படுத்திக் (நா. 9) கெட்ட வழிகளில் நாட்டத்தைத் தடை செய்கிறாள். தனது நாமபாராயணம் முதலானதில் ஈடுபடுத்தி அதனால் புண்ணியத்தை வளர்த்து (நா. 544) நல் வாஸனைகளை ஏற்படுத்துகிறாள். இதன் மூலம் பாபத்திற்கு இடமில்லாதபடி செய்கிறாள். (167)

**(நா. 168 - 175)**

निष्क्रोधा क्रोधशमनी निर्लोभा लोभनाशिनी ।
निस्संशया संशयघ्नी निर्भवा भवनाशिनी ॥48 ॥

**நிஷ்க்ரோதா க்ரோதமசமநீ நிர்லோபா லோபநாசிநீ.**
**நிஸ்ஸம்சயா ஸம்சயக்க்நீ நிர்ப்பவா பவநாசிநீ. 48**

**37. நிஷ் க்ரோதா. கோபமில்லாதவள்.**

37 - 1. வெறுப்பிற்குள்ளாகுபவரிடம் கோபம் வரும். ஆசை தடைபடும்போது தடைபடுவதற்குக் காரணமானவரிடம் கோபம் வரும். இந்த

இரண்டிற்கும் ஏதுவில்லாததால் தேவிக்குக் கோபம் இல்லை. அவளது ஆசை எதனாலும் தடைபடாது. அதனால் நிஷ்க்ரோதா. (168)

### 38. க்ரோத - சமநீ. கோபத்தை அடங்கச்செய்பவள்.

38 - 1. காமமும், குரோதமும் ஸாதகனுக்கு முக்கிய சத்ருக்கள். குரோதத்துடன் செய்யும் நற்பணிகள் கூட அழிவிற்குக் காரணமாகக்கூடும். பச்சை மண்ணாலான குடம் ஜலம் நிரப்பப்படின் இளகிக் கரைந்துவிடும். கோபமுள்ளவனிடத்தில் தெய்வீக சக்தியும் உள்ளே தங்காது. செய்த நற்பணிகள் அனைத்தும் வீணாகிவிடும். பக்தனது குரோத உணர்ச்சியை அடக்கத் தேவி உதவுகிறாள். (169)

### 39. நிர்லோபா. பேராசையற்றவள்.

39 - 1. லோபம் - பேராசை பிறரிடமுள்ள பொருள் தனக்கு வேண்டும். தன்னிடம் இந்தப் பொருள் இருக்கிறது. எனினும் அதுவும் கிடைத்தால்தான் நல்லது. தனக்குத் தேவை இல்லை எனினும் விரும்பாவிடினும் பிறரிடம் அது இருக்கக்கூடாது, அவன் அதில்லாமல் வேதனைப்படுவதைப் பார்த்துக் களிக்க வேண்டும் என்று பேராசை சிறுகச் சிறுக விரியும். காமம் குரோதம் என்ற இரு முக்கிய சத்ருக்களுக்கு ஈடான மற்றொரு முக்கிய சத்துரு லோபம். மற்ற நல்ல குணங்களையும் பேராசை வீணாக்கிவிடும். தேவி நிறைவுள்ளவள். எடுக்க எடுக்க வற்றாச் சீருள்ளவள். கருணையால் வாரி வாரிவழங்கும் வள்ளல். அவளிடம் லோப குணம் இல்லை. (170)

### 40. லோபநாசிநீ. பேராசையைப் போக்குபவள்.

40 - 1. லோபமற்ற தேவி பக்தனிடம் லோப குணம் இருப்பதைக் காணச் சகியாள். பொருள் நாட்டத்தைக் குறைத்தும் ஈகை குணத்தை வளர்த்தும் லோபத்தை அழித்துவிடுவாள். (171)

### 41. நிஸ் - ஸம்சயா. சந்தேகமற்றவள்.

41 – 1. தேவி குருவாகிச் சீடனது சந்தேகத்தைப் போக்குவதில் மிகுந்த ஈடுபாடுள்ளவள். பிறரது சந்தேகத்தைப் போக்குவதற்கு முதல் தேவை தனக்குச் சந்தேகமில்லாதிருப்பது. தெளிவுள்ள அறிவு வடிவானவ ளாதலால் சந்தேகமற்றவள்.

41 - 2. மணத்தின் குணங்களில் ஒன்று ஸம்சயப்படுவது. செய்வது நன்மை பயக்குமா என்ற சந்தேகம் அதன் சிறப்புக் குணம். இது புத்தியின் நிச்சய சக்திக்கு இடையூறாகிவிடும். தேவியின் வழிபாட்டால் ஸம்சயமற்ற தன்மை வளரும். (172)

**42. ஸம்சயக்கநீ. ஸந்தேகத்தைப் போக்குபவள்.**

42 - 1. சீடனது சந்தேகங்களைப் போக்குவது குருவின் கடமை. தேவி குரு வடிவில் பேரறிவூட்டிச் சீடனின் சந்தேகங்களைப் போக்குகிறாள். (நா.603, 713) (173)

**43. நிர்ப்பவா, பிறப்பற்றவள்.**

43 - 1. பவம் - பிறப்பு, உற்பத்தி. ஆதியற்ற பரம்பொருளான தேவி பிறப்பற்றவள். பிறப்பு ஒரு தடவை மட்டும் ஏற்படுவதல்ல. ஒரு தடவை பிறந்துவிட்டால் பின்னர் பிறந்து கொண்டுதானிருக்க வேண்டும். மறுபடி பிறப்பதற்காக இறக்க வேண்டும். இப்படிப் பிறப்பதற்காக இறப்பதையும் இறப்பதற்காகப் பிறப்பதையும் பவம் - ஸம்ஸாரம் என்பர். தொடர்ந்து கொண்டே இருக்கும் இந்தப் பவம் - பிறப்பு தேவிக்கு இல்லை. உத்பத்தியற்றதற்கு அழிவுகிடையாது. அழிவுறுவதே தோன்றும். (174)

**44. பவ - நாசிநீ. பிறப்பை நீக்குபவள்.**

44 - 1. தேவியிடம் பக்தி கொண்டவர்கள் தேவியாகி விடுகிறார்கள். விலைமதிப்பற்ற தன் தனித்தன்மையை அவள் பக்தனுக்கு வழங்கிவிடுகிறாள். (நா. 926) அதனால் பக்தன் ஸம்ஸாரத்தைத் தாண்டுகிறான். பிறப்பு, இறப்பு என்ற சங்கிலித்தொடரிலிருந்தும் விடுபடுகிறான். (175)

**(நா. 176 - 183)**

निर्विकल्पा निरावाधा निर्भेदा भेदनाशिनी ।
निर्नाशा मृत्युमथनी निष्क्रिया निष्परिग्रहा ॥ 49 ॥

**நிர்விகல்பா நிராபாதா நிர்ப்பேதா பேதநாசிநீ.**
**நிர்நாசா ம்ருத்யுமதநீ நிஷ்க்ரியா நிஷ்பரிக்ரஹா. 49**

**45. நிர்விகல்பா. விகல்பமற்றவள்.**

45 - 1. கல்பம் - சீரான செய்முறை. அதற்கு எதிரிடை விகல்பம். தேவியின் செயல்கள் முறையுடன் அமைந்தனவாக, பலன் தருவனவாக இருக்கும். விகல்பமான செயல் ஒன்றையும் அவளிடம் காண முடியாது.

45 - 2. விகல்பம் - வகை. உலகம் பல வகை. அதன் செயல்கள் பல வகை. எண்ணங்கள் பல வகை, தேவி ஒரே விதமானவள். ஒன்றேயானவள். அவளிடம் விகல்பம் கிடையாது.

45 - 3. விகல்பம் - சூன்யத்தைப் பற்றிய அறிவு. இல்லாத தொன்றைப்பற்றி எண்ண முடியும்; பேசவும் முடியும். அப்படிப்பேசி அதனால் அந்த சூன்யமான விஷயத்தைப் பற்றிப்பெற்ற அறிவு விகல்பம் எனப்படும். (சப்த மாத்ரானுபாதீ வஸ்து சூன்யோ விகல்ப: சொல்லை மாத்திரம் துணைகொண்டு பெற்ற பொருளற்ற அறிவு - சூன்ய அறிவு விகல்பம். - யோக சூத்திரம்) அவள் சூன்யமல்ல. அவளைப்பற்றிய அறிவும் விகல்பம் அல்ல. அதனால் நிர்விகல்பா.

45 - 4. விகல்பம் - விருப்பத்திற்கு மாறானது. மனம் திடீரென நினைப்பதற்கு மாறாக நேர்ந்தாலோ என்று கோடி காட்டும். அதன் விருப்பத்திற்கு எதிரானதொன்று விளைந்தால் அப்போது என்ன செய்வதென்று வகை அறிய முன்னோட்டம் இந்த விகல்பம். அவள் விருப்பத்திற்கெதிரானது ஒன்றுமே விளைவதற்கில்லை. அதனால் நிர்விகல்பா. (176)

**46. நிர் - ஆ - பாதா. மறுப்பிற்குட்படாதவள்.**

46 - 1. முதலில் ஒருவாறிருந்ததாக் அறிந்த ஒன்று பின்னர் அது அவ்வாறல்ல என்ற அறிவால் மறுப்பிற்குட்படுகிது. கிளிஞ்சல் வெள்ளிபோல் தோன்றிற்று. பிற்பாது அது வெள்ளி அல்ல என்று மறுப்பிற்குட்படுகிறது. இது பாதம். ஆ - பாதம் முழுவதும் மறுப்பு. தேவி அப்படி முற்றிலும் மறுப்பிற்குட்படாதவள். அவளை எப்படி அறிந்திருந்த போதிலும் அது உண்மையே. அவளை பலவிதமாக அறிந்து கொள்கிறோம். ஒன்றையொன்று மறுப்பதில்லை. மஹ - ஆஸக்தி: (நா. 109) ஆகமிக விருப்பங்கொள்பவளே நீராகா (நா.156) வாக பற்றற்றவளாக இருப்பாள். (177)

### 47. நிர்ப்பேதா. பேதமற்றவள்.

47-1. ஒன்றின் தன்மை மற்றொன்றில் முழுவதும் இருப்பதில்லை. அதனால் ஒரு பொருள் மற்றொரு பொருளிலிருந்து வேறுபடுகிறது. இது அது அல்ல என்றறிய உதவுவது பேத உணர்ச்சி. எல்லாவற்றிலும் தேவி பரவி நிற்பவள். இது இதுவாக இருப்பதும் அது அதுவாக இருப்பதும் அவள் அததனள் இருப்பதால். இப்படி அததுவாக அவளே இருப்பதால் அவளிடம் வேற்றுமை காண முடியாது. தானே தன்னிடமிருந்து வேறுபட முடியாது. அதனால் நிர்ப்பேதா.

### 48. பேதநாசினீ. பேத உணர்வை அழிப்பவள்.

48-1. அவளை வழிபடுபவன் எங்கும் எதிலும் அவளைக் காண்கிறான். மாறுபட்ட உலகின் ஊடே மாறுபடாத அவளைப் பார்க்கிற அவன் கண்களுக்கு மாறுபடுகிற உலகம் தனித்துத் தோன்றுவதில்லை. மாறுபடுகிற உலகம் தனித்துத் தோன்றும் போதுதான் பேத உணர்ச்சிக்கு இடமுண்டு.

### 49. நிர்-நாசா. முடிவற்றவள்.

49-1. ஸ்தூலமான ஜடப்பொருளில் ஏற்படுகின்ற ஆறு விகாரங்களில் கடைசியில் அமைவது நாசமாகும். விகாரங்களற்ற தேவியிடம் நாசமும் கிடையாது.

### 50. ம்ருத்யு - மதனீ. மரணத்தைப் போக்குபவள்.

50-1. பகல், சந்தி, இரவு, சந்தி என்று மாறி வருவதில் பகலைக் கண்டால் மகிழ்ச்சியும், இரவில் பயமும் ஏற்படலாம். பகலில் பயமும், இரவில் மகிழ்ச்சியும் அடையலாம். இது மனநிலையைப் பொறுத்தது. மாறிக்கொண்டே வருவதில் ஒரு மாற்றநிலை மரணம். அது பிறப்பிற்கு முன் நிலை. பிறப்பு பின் தொடரவிருப்பதை அது அறிவிக்கிறது. கட்டாயமாக ஏற்படக்கூடிய மாறுதலையும், முடிவற்று அது தொடர்வதையும் கண்டு பயப்படுவதும், சோகப்படுவதும் மதியீனம். சிறுவன் தான் யுவனானதை உணர்ந்து பயமோ சோகமோ உணராததுபோல், மரணத்தையும் அதற்குப் பின் தொடரவிருக்கும் பிறப்பையும் உணர்ந்து வேதனையைத் தவிர்க்க வேண்டும். அழிவற்ற - எவ்வித மாறுதலுக்குமுட்படாத ஆத்மாவாயிருப்பவன் தனது சட்டை போன்ற உடல் அழிவதால் தன்னிடம் ஏதும் மாற்றமேற்படுவதற்கில்லை என்பதை

உணர்ந்து வேதனைப் படமாட்டான். இவ்வாறு மரணத்தைக் கடந்தவனாக இருப்பதை உணர்த்தி மரணத்தை ( ஏற்பட முடியாதது ஏற்படும் என்ற கிலியைப்) போக்கிவிடுகிறாள். (மதனம்- பிரித்து விலக்குவதற்காகக் கடைதல் 14.26.1).

50-2. மார்க்கண்டேயனுக்கு என்றும் பதினாறு வயதினனாக இருக்கும் பாங்கைத் தந்து, அவனை நித்தியனாக்கியதுபோல் அடியார்களை மரணத்திலிருந்து காப்பாற்றிவிடுகிறான்.

50-3. பக்தன் பாவனையால் அவளாகவே மாறிவிடுவதால் அழிவற்றவன் ஆகிவிடுகிறான். தேவி அவனது மரணத்தைக் கடைந்து அதை உருவற்றதாக்கிவிடுகிறாள்.

**51. நிஷ்-க்ரியா. கருமமற்றவள்.**

51-1. முன்வினைக்கேற்ப ஜீவனை ஓர் உடலினுட்புகுத்திய தேவி, அந்த உடல் மூலம் மீண்டும் வினைச்சுமை ஏறாதிருக்க ஒரு கட்டுப்பாட்டை விதிக்கிறாள். 'இதைச் செய்' அதைச் செய்யாதே. இப்படி வாழ்ந்தால் நீ செய்யும் செயலனைத்தும் கடமையின் பாற்படும். கடமையாக அமைந்த பணி வினையாக மாறாது. கடமை என்ற தன்னமற்ற மனப்பான்மையுடன் ஈடுபடாமல், விருப்பால் சுக உணர்வுடனோ, வெறுப்பால் வேதனை உணர்வுடனோ அதே பணிகளைச் செய்தாலும் இதை செய்யாதே எனத் தடை செய்தவைகளைச் செய்தாலும் வினை தொடர்கிறது. இப்படி இதனைச் செய் என்ற விதிக்கும், அதனைச் செய்யாதே என்ற தடைக்கும் உட்பட்டுச் செயல் புரிகிற நிர்ப்பந்தம் அறியாமையால் கட்டுண்ட ஜீவனாகிய ஆத்மாவிற்கு உண்டு. பந்தமற்ற பரமாத்மாவிற்குக் கிடையாது.

51-2. நிஷ்க்ரியா - ஒரு பணியையும் செய்யாதவள் அவள் ஆட்டிவைப்பதாகக் கூறுவது எங்ஙனம்? அவள் ஆட்டிவைக்கவில்லை. அவளது சக்திக்கு முன் நாம் ஆடுகிறோம். மின், விசிறியைச் சுற்றுவதில்லை. மின் தொடர்பு பெற்ற விசிறியால் சுற்றாமல் இருக்க முடியவில்லை. மின் தொடர்பற்ற வேளையில் விசிறியால் சுற்ற முடிவதில்லை. அதனால் விசிறியின் செயலை மின்சக்தியிடம் ஏற்றி விட்டோம். அவள் இருப்பதாலேயே ஆடுகிறோம். ஒளி ஒன்றைத் துலக்குவதில்லை. ஒளியிருப்பதால் பொருள் துலங்குகிறது. தான் அதை துலக்கவேண்டுமென்று ஒளி எந்த முயற்சியையும் எடுக்கவில்லை. நன்மணம் பரவி நிற்கிறது. மனம் கிளர்ந்தெழுகிறது. மணம் கிளர்ச்சியை

எழுப்பவில்லை. அவள் இருக்கிறாள். உலகம் தோன்றி மறைகிறது. அதில் அவளது பணி ஒன்றுமில்லை.

**52. நிஷ்- பரிக்ரஹா. உதவியாளர் இல்லாதவள்.**

52-1. தனக்கெனச் சேர்த்துக்கொள்ளப் பெறுவது (பரிக்ருஹ்யதே) பரிக்கிரஹம். மனைவி, உதவியாளர், வீடு போன்று நமக்குத் தேவை என்று சேர்த்துக்கொண்டது அனைத்தும் இதில் அடங்கும். அவர்களிருந்தால்தான் சுகமான வாழ்வு அமையும் என்ற எண்ணம் அவர்களது உதவியை நாடச் செய்கிறது. தன்னைத் தவிர வேறொன்றில்லாததாலும் அவள் நிஷ்பரிக்ரஹா. பிறர் உதவி பெற்றுச் செயலாற்றும் பரதந்திரத் தன்மையற்றவள்- தானே பிறர் உதவியின்றி செயலாற்றுபவள்- ஸ்வதந்த்ரா. அதனாலும் தேவி பரிக்ரஹமற்றவள்.

(நா. 184-192)

निस्तुला नीलचिकुरा निरपारा निरत्यया ।
दुर्लभा दुर्गमा दुर्गा दुःखहन्त्री सुखप्रदा ॥ 50 ॥

**நிஸ்துலா நீலசிகுரா நிரபாயா நிரத்யயா.**

**துர்லபா துர்க்கமா துர்க்கா துக்கஹந்த்ரீ ஸுகப்ரதா.**

**53. நிஸ்துலா- ஈடற்றவள்.**

53-1. ஒரு பொருளை மற்றொரு பொருளுக்கு ஈடாகக் கூறும் போது, அதற்குச் சமமாகவோ அதைவிடச் சிறந்ததாகவோ இது இருத்தல் தகும் ந தத்ஸமச் ச அப்யதிகச் ச வித்யதே அவளுக்குச் சமமோ அவளைவிடச் சிறந்ததோ கிடையாது. ஸகுண நிலையிலும் நிர்க்குண நிலையிலும் ஈடற்றவள். (184)

**54. நீல - சிகுரா. கரிய கூந்தலுள்ளவள்.**

54-1. கருமை நிறத்தால் அழகாகத் தோன்றும் கூந்தல் உள்ளவள். நிர்க்குண ஸ்வருபத்தை விளக்கும் நாமங்களிடையே இந்த நாமம் இடம் பெற்றிருக்கிறது. நிர்க்குண ஸ்வருபத்தைச் சொல்வதென்ற ஸங்கல்பத்துடன் வாக்தேவிகள் இவைகளை இந்த முறையில் அமைக்கவில்லை. ஒன்றைத் தொடர்ந்து மற்றொன்றாக தேவியின் தத்துவங்களைக் கூறி வந்தவர்களுக்கு நடுவே மின்னல் போல் தேவியின் மேனி அழகும் தோன்றியிருக்கக்கூடும். அதனால் இப்படி அழகான ஒரு நாமம் இடையே சேர்ந்துள்ளது. (185)

## 55. நிர் - அபாயா. அபாயமற்றவள்.

55-1. நம்மை மீறிய சக்தி எதிர்பாராமல் நம்மை எதிர்த்தால் அது அபாயம். "அப ஏதி யஸ்மாத்" எதைக் கண்டு விலகி நிற்க வேண்டுமோ அது அபாயம். அது அழிக்கும் சக்தி படைத்திருப்பதால் அபாயம். தேவிக்கு எதுவுமே அபாயமில்லை. எதிலும் அபாயமில்லை. அவளை அண்டியவர்களுக்கு அவளால் அபாயமில்லை. அவர்களுக்கு வேறு எதனிடமிருந்தும் அபாயமில்லை. அதனால் அவள் நிரபாயா.

## 56. நிர் - அத்யயா. வரம்பை மீறாதவள்.

56-1. பரப்பிரும்ம நிலையில் தேவிக்கு வரம்பே இருப்பதற்கு இல்லை. உலகைப் படைத்துக் காத்து ஒடுக்கும் நிலையில் தேவி முத்தொழில் புரிபவர்களுக்கு உலகிற்கும் பல வரம்புகளை ஏற்படுத்தி நியதி என்ற அந்த வரம்பிற்குள் கட்டுபடுத்துவாள். அதை யாரும் மீற இயலாது. (அத்யயம்- கட்டுக்கடங்காதிருப்பது) தானும் அவற்றை மீறமாட்டாள்.

56-2. இது இத்தகையது. இவ்வண்ணம் அமைந்தது எனப் பூர்ணமாக விளக்கம் தர முடியாத இடத்தில் வேறு வழியின்றி அத்தகையதல்ல, அவ்வண்ணம் அமைந்ததல்ல என்று எதிர்மறையாக விளக்கம் தருவது மரபு. அதனையொட்டி தேவியின் உண்மை நிலையை விளக்க வந்த வாக்தேவிகள் பூர்ண ஸ்வரூபத்தைக் குறிப்பிட முடியாதவர்களாக, நிராதாரா என்ற 132 -ம் நாமத்திலிருந்து 187-ம் நாமம் வரை எதிர்மறையாக விளக்கி உபனிடதங்கள் கூறும் பரப்பிரும்ம நிலையிலுள்ளவள் தேவி என்று ஒருவாறு நிரூபித்து உள்ளனர். தியானிக்கத்தக்க தேவியின் நிர்குண ஸ்வரூபமும், அப்படித் தியானிப்பதால் உள்ளத்தில் ஏற்படக்கூடிய மாறுதல்களும் இதுவரையில் விளக்கப்பட்டன. இனி ஸகுண ஸ்வரூபத்தில் உபாஸனை முறையும் அதனால் ஏற்படும் நற்பயன்களும் விளக்கப் பெறுகின்றன.

* * *

அதிகாரம் - 15

# தேவியின் ஸகுண நிலை

### 1. துர்லபா- எளிதில் அடைய முடியாதவள்.

1-1. யோகிகளும் சுய முயற்சியால் தேவியை அடைவது எளிதல்ல. கருணையால் தேவி தானே எளிதில் வலிய வந்து ஆட்கொண்டாலன்றி நாமே அவளை அடைவது எளிதல்ல.

### 2.துர்க்கமா- எளிதில் நெருங்க முடியாதவள்.

2-1. யோக வழியிலோ, பக்தி வழியிலோ, வேறு வழிகளிலோ தேவியை அடைவதற்கேற்றதாக உள்ள மார்க்கங்களும் முறைகளும் எளிதானவை அல்ல. கத்தி முனையில் நடப்பது போன்று கவனத்துடன் கட்டுப்பாட்டுடனும் செல்லவேண்டியிருப்பதால் அவளை நெருங்குவது எளிதல்ல.(189)

### 3. துர்க்கா-துர்க்காதேவியாய் இருப்பவள்.

3-1, நெருங்க முடியாத பெருமையுடன் விளங்குபவள் துர்க்கை. துர்க்கமன் என்ற அஸீரன் வர பலத்தால் வேதங்களை ஒளித்துத் தேவதைகளை அடக்கித் தெய்வீகத்தை மறைத்துத் 'துர்க்கமன்' நெருங்கமுடியாதவன் ஆனான். அவனை அழிக்கத் தோன்றிய தேவி துர்க்கை எனப்படுவாள். அவள் துர்க்கமனாலும் நெருங்க முடியாதபடி பயங்கரத் தோற்றத்துடன் விளங்கியதால் துர்க்கா.

3-2. பீமா நதிக்கரையில் மஹாராஷ்டிரத்தில் ஸந்ததி என்ற க்ஷேத்திரத்தில் பீட தேவதையாக விளங்குபவள்.

3-3. ஒன்பது வயதுள்ள கன்னிகை நவமீ திதியன்று தேவியாக வழிபடப்படும்போது அவளை துர்க்கா என்றழைப்பர். (13.11.2)

3-4. கஷ்டங்கள் நேரும்போதெல்லாம் வானவர்கள், ரிஷிகள் முதலானோரால் கஷ்டங்களிலிருந்தும் விடுபடுவதற்காக வழிபடப் பெறுபவள் துர்க்கா தேவி.

4. துக்க ஹந்த்ரீ துக்கத்தைப் போக்குபவள்.

4-1. அனுபவிப்பவர்களுக்கேற்ப துக்கம் பல தரப்படும். ஆனால் எல்லோராலும் கொடுமையான துக்கம் எனக் கருதப்படுவது பிறப்பிறப்பிற்கு இடையே அனுபவிக்கும் ஸம்ஸார துக்கம். அதனையும் அதனைச் சார்ந்த எல்லாவகை துக்கங்களையும் போக்கிவிடுபவள் தேவி.

4-2. துக்கம் மூன்று வகைப்படும். நம்முடைய சூழ்நிலையில் உள்ள பிற பொருளால் பிறரால் ஏற்படக்கூடியது ஆதிபௌதிகம். நமது சக்தியை மீறியுள்ள தெய்வீக சக்தி, பேய்க்காற்று, மழை, வெள்ளம், இடி, மின்னல் போன்ற உருவத்தில் தாக்குவது ஆதிதைவிகம். நமது தவறுகளால் நமக்கு நாமே ஏற்படுத்திக்கொள்வது ஆத்யாத்மிகம். இந்த மூன்றுக்கும் மூலகாரணம் வினைப்பயனால் நமக்குக் கிடைத்துள்ள இந்த உடலால் ஏற்பட்ட பந்தம். அதனால் ஏற்படுவது ஸம்ஸார துக்கம் - பிறவிப்பிணி. அதனை போக்குபவள் தேவி. (191)

**5. ஸுக- ப்ரதா. சுகத்தைத் தருபவள்.**

5-1. துக்கம் நீங்கினால் மட்டும் போதாது. துக்கமின்மையே சுகமல்ல. சுகமும் பெறவேண்டுமென்ற எதிர்பார்வை யாவர்க்கும் உண்டு. சுகமும் அதனை அனுபவிப்பவரது தரத்திற்கேற்பப் பல வகைப்படும். இவ்வாழ்வில் பெறும் சுகத்தையே பெரிதாகக் கருதுபவனுக்கு அந்தச் சுகத்தைத் தேவி தருவாள். மறுமையிலும் சுகத்தைத் தரவல்லதை விரும்பினால் அதையும் தருவாள். இந்த இரு வகைச் சுகங்களும் போகப் பொருளை நாடிப் பெறப்படுபவை. பிற பொருளை நாடாமல் தன்னில் சுகம் காண்பது நித்தியமான ஆனந்தத்தைத் தருகிற ஆத்ம சுகம். அதனை விரும்புபவனுக்கு அந்த ஆத்ம சுகத்தையே தருகிறாள். (13.14.1, 30.67.1) (192)

(நா.193-198)

दुष्टदूरा दुराचारशमनी दोषवर्जिता ।
सर्वज्ञा सान्द्रकरुणा समानाधिकवर्जिता ॥ 51 ॥

**துஷ்டதூரா துராசாரசமநீ தோஷவர்ஜிதா.**

**ஸர்வஜ்ஞா ஸாந்த்ரகருணா ஸமாநாதிகவர்ஜிதா. 51**

**6.துஷ்ட-தூரா. கெட்டவர்களுக்கு எட்டாதவள்.**

6-1. மனம், வாக்கு, செயல் என்ற மூன்று காரணங்களையும் கெடுக்கும் விருப்பு, வெறுப்பு, பேராசை முதலியவை தோஷங்கள். தூஷயந்தீதி- தோஷா கெடுக்கின்றனவாதலால் தோஷங்கள். பூதஹிதம் என்பது நம்மைச் சூழ்ந்திருப்பவர்களுக்கு நன்மை விளைவிப்பது. அதற்குப் பயன்படாததனைத்தும், அதற்கு எதிரிடையான விளைவுகளைத் தருவன அனைத்தும் தோஷங்களே. தோஷங்கள் உள்ளவர்கள் துஷ்டர்கள். மனத்தாலும், வாக்காலும், செயலாலும் பிறரைக் கெடுப்பவர்கள் துஷ்டர்கள். அவர்கள் தாமும் கெட்டுப் பிறரையும் கெடுக்கிறார்கள். அந்தச் சூழ்நிலையில் தெய்வீகத்தை உணர முடியாது. கெட்டவர்களுக்கு வெகு தூரத்திலிருப்பதால் எளிதில் அடைய முடியாதவளாகிறாள். (193)

### 7. துர்- ஆசார- சமநீ. கெட்ட நடத்தைகளை அடக்குபவள்.

7-1. கெட்டவன் தான் கெட்டிருப்பதை உணர்ந்து, தானே அந்தச் சூழ்நிலையிலிருந்து விடுபட முயன்றும் விடுபடாதவனாகி வேறு வழியில்லை என்ற உணர்வுடன் தேவியைத் தஞ்சம் புகும்போது அவனது கெட்ட நடத்தைகளுக்கான வாஸனைகளை அழித்து நல்வழியில் அவனை அழைத்துச் செல்கிறாள். அவளது நாமம் சொன்னாலும், கேட்டாலும் புண்யம் தரவல்லது. (நா.544) புண்யம் சேர்வதால் நற்பணிகளில் நாட்டமும், கெட்ட வழியில் வெறுப்பும் ஏற்படுகிறது. (நா.356). (194)

### 8. தோஷ - வர்ஜிதா. தோஷமற்றவள்.

8-1. தோஷங்கள் மனத்தின் விருப்பு, வெறுப்பு என்ற இரண்டு பிரதிபலிப்புகளால் ஏற்படுபவை. (நா. 693) தேவியிடம் அவை இல்லை.

(195)

### 9. ஸர்வ - ஜ்ஞா. எல்லாமறிந்தவள்.

9-1. உலகைப் படைத்துக் காக்கும் தேவி எல்லாமறிந்திருப்பது அதிசயமல்ல. பேரறிவாக நிற்கும் தேவி தன் அறிவு வெள்ளத்தை அடக்கிச் சிற்றாறாகச் செய்துகொண்டே முத்தொழில்களில் ஈடுபடுகிறாள். அவளது முழு அறிவிற்கும் பேராற்றலுக்கும் இலக்காகக் கோடிக்கணக்கான உலகங்களும் போதா.

9-2. தோஷங்களற்றவளானதாலே பக்தர்களின் தோஷங்களைப் போக்குகிறாள் என்றோம். அவளுக்கு நம்மிடம் உள்ள தோஷங்கள் எப்படித் தெரியும்? அவள் ஸர்வஜ்ஞாவானதால் எதனையும் அறிவாள். (196)

**10. ஸாந்த்ர - கருணா. கருணை நெருக்கமுள்ளவள்.**

10-1. கருணை பாறையாக இறுகியிருந்தாலும், அருவியாக நீர்த்திருந்தாலும் பயனில்லை என வெண்ணெய் போன்று இளகியும் (ஸாந்த்ர - இளக்கமும் நெருக்கமுமுள்ள) நெகிழ்ந்தும் நெருங்கியுமுள்ள கருணையுள்ளவள் தேவி.

10-2. எல்லாமறிந்தவளாயினும் காப்பாற்ற வேண்டும் என்ற அக்கறை அவளுக்கு எதற்கு ஏற்படவேண்டும்? கருணையால் வெண்ணெய் போல் நெகிழ்ந்த அவளது இதயம் தானே வலிய வந்து நம் துயரைத் தீர்க்க முற்படும். (197)

**11. ஸமாந-அதிக - வர்ஜிதா. ஒப்பாரும் மிக்காரும் இல்லாதவர்.**

11-1. தேவியைப் போல் கருணை உள்ள வேறொருவர் இருக்கிறாரோ? இல்லை. எவ்வகையினும் தேவிக்கு ஒப்பானவரும் இல்லை. தேவியைவிடச் சிறந்தவரும் இல்லை. (நா. 184)

11-2. தன்னைர் தேவிக்குச் சமமானவன் என்றோ தேவியை விடச் சிறந்தவன் என்றோ ஆவணத்தால், கருதுபவனை ஒதுக்குபவள். அவள் ஒதுக்குவதால் சக்தி இழந்து அவன் தானே திருந்த வழி வகுப்பவள். (198)

* * *

**அதிகாரம் - 16**

# தேவியின் எல்லையற்ற பெருமை

(நா. 199- 204)

सर्वशक्तिमयी सर्वमङ्गला सद्गतिप्रदा ।
सर्वेश्वरी सर्वमयी सर्वमन्त्रस्वरूपिणी ॥ 52 ॥

**ஸர்வசக்திமயீ ஸர்வமங்களா ஸத்கதிப்ரதா.**
**ஸர்வேச்வரீ ஸர்வமயீ ஸர்வமந்த்ரஸ்வரூபிணி 52**

**1. ஸர்வசக்திமயீ. எல்லா சக்தியளும் தானாக இருப்பவள்.**

1-1. இச்சாசக்தி, ஞானசக்தி, கிரியா சக்தி, பலா, பாலா, அன்னபூர்ணா, பகளா, தாரா, வாக்வாதிநீ, காயத்ரீ, ஸாவித்ரீ, ஸித்தலக்ஷ்மீ, ஸ்வயம்வரா, நகுலீ, அச்வாரூடா, குருகுல்லா, ரேணுகா, ஸம்பத்கரீ, ஸாம்ராஜ்யலக்ஷ்மீ, பத்மாவதீ, சிவா, துர்கா, பத்ரகாளீ, காலராத்ரி, ஸுபத்ரா, சின்னமஸ்தா, காலகண்டீ, ஸரஸ்வதி என்று தேவியின் தனித்தனி சக்தி வடிவினர் பலர். அத்தனை சக்திகளாகவுமிருப்பவள் தேவி. திரிமூர்த்திகள், இந்திரன் முதலான திக்பாலர்கள் முதலானோரின் சக்தியாகவும் அவரவர்களது தனித்த ஆயுதங்களின் சக்திகளாகவும் இருப்பவள் தேவி. மனிதனின் மனவலிமை, ஞாபகசக்தி, தூக்கம்,மேதை, புத்தி, சிந்தை, சாந்தி முதலான பல சக்திகளாக இருப்பவளும் தேவியே. நெருப்பின் சூடு, நீரின் தண்மை, பூமியின் திண்மை, வாயுவின் சலனம், ஆகாசத்தின் நிறைவு, சூர்யனின் ஒளி, சந்திரனின் களிப்பித்தல் முதலான தனித்த பதார்த்த சக்தியாக இருப்பவளும் அவளே. (199)

1-2. தேவியை நமது பொறிகளாலும், மனத்தாலும் காண முடியாது. அவற்றிற்கடங்காததும் எங்கும் வியாபித்து நிற்பதுமான அந்த தேவியின் மகத்துவத்தை இந்த நாமத்தில் தொடங்கி 237 வது நாமம் வரை வர்ணிக்கிறார்கள் வாக் தேவிகள்.

### 2. ஸர்வ- மங்களா. எல்லா மங்களங்களின் வடிவானவள்.

2-1. பிரும்மம் மங்களம். ப்ரும்ஹ தந் மங்களம் விது: அதனிடமிருந்து தோன்றிய எல்லாப் பொருள்களிரும் அதன் மங்களத் தனைன்மை பரவி நிற்கிறது. சிலவற்றில் அத்தன்மை எடுப்பாக இருக்கும். அவைகளை மங்களப் பொருள்கள் என்றே குறிப்பிடுவர். தயிர், பொரி, சந்தனம், குங்குமம், மஞ்சள், ஸுமங்கலீ, கன்னிகை, புஷ்பம், கல்விமான் என்பன அவற்றில் சில. இத்தகைய மங்களப் பொருள்கள் அனைத்துமாயிருப்பவள், அவைகளுக்கு மங்களத் தன்மையா யிருப்பவள். எல்லோருக்கும் வேதனை நீக்கி மங்களத்தை தருபவள் அவளே. (200)

(4 மாசிகலை நா. 201-300)

### 3. ஸத்கதிப்ரதா. நற்கதியை வழங்குபவள்.

3-1. நமது நாட்டத்திற்கேற்ப நற்கதிகள் பல. சிற்றின்பத்தில் நாட்டமிருந்தால் ஸ்வர்க்கம் ஈறான நற்கதிகளைத் தருவாள். பேரின்பத்தில் நாட்டமிருந்தால் மோக்ஷத்தைத் தருவாள். கதி:- இலக்கு. ஸ்வர்க்கமும் மோக்ஷமும் இரு வழிகளாலும் சென்று அடையத்தக்க இலக்குகள். இலக்குகளை எளிதில் அடையச் செய்பவள். கதி- அடைய வழி. அதனை அடையும் வழிகளை நமக்கு உணர்த்துபவள். கதி- அறிவு. நல்ல அறிவைத் தருபவள். ஸத்- நிலைத்திருக்கும் தன்மை படைத்த பரம்பொருள். கதி:-அதனை அடையும் வழி - ஞானமார்க்கத்தால் உலகனைத்தையும் தன்மையும் பிரும்மமாக அறிந்து உணர்தல். அதனைத் தருபவள். ஸத்கதி:- நல்லோர்கள் செல்லும் பாதை அவர்களோடு நம்மை இணைத்து நல்ல இடத்தில் கொண்டு சேர்ப்பவள். ஸத் ஆக இருக்கும் அவளே , கதி:- அடையப்பட வேண்டியவள்தன்னையே தந்தருள்பவள். (201)

### 4. ஸர்வேச்வரீ. எல்லாவற்றிற்கும் ஈசுவரி.

4-1. தலைமை தாங்கித் தன்னிஷ்டப்படி அடக்கி ஆள்பவள்,ஈசுவரி. சிலருக்குச் சிலவற்றிடம் மட்டும் அதிகாரம் செல்லும். தேவியின் அதிகாரம் எங்கும் எதனிடமும் எக்காலும் செல்லும். அவளது அதிகாரம் தடைபடும் இடமே கிடையாது. (202)

### 5. ஸர்வமயீ. எல்லாமாயிருப்பவள்.

5-1. பரப்பிரும்மமும் அதன் தோற்றங்களுமான 36 தத்துவங்கள் அடங்கியது உலகம்.

5-2. தத்துவங்கள் மூவகைப்படும். (1) ஆத்ம தத்துவங்கள் (2) வித்யா தத்துவங்கள் (3) சில தத்துவங்கள் என. ஐந்து பூதங்கள், பூத சக்திகளான சப்தம் ஸ்பர்சம் ரூபம் ரஸம் கந்தம் என்ற ஐந்து, (சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்பார் திருவள்ளுவர் - குறள் 27) லிங்கம், மலத்துவாரம், கை, கால், வாக்கு என்ற கர்மேந்திரியங்கள் ஐந்து. கண், காது, மூக்கு, நாக்கு, தோல் என்ற ஞானேந்திரியங்கள் ஐந்து. அஹங்காரம் புத்தி மனம் என்ற அந்தகரணம் மூன்று, ஸத்வம் ரஜஸ் தமஸ் என்ற முக்குணங்களின் ஸமநிலையாகி நின்று உலகை தோற்றுவிக்கும் இயற்கை (பிரகிருதி) ஆக 24 ஜட தத்துவங்கள் - ஆத்ம தத்துவங்கள் எனப்படுபவை.

5-3. ஜீவன், அவனைக்கட்டுப்படுத்தி ஈசுவரனுக்கு அவனை அடங்கியவனாக்குபவையான நியதி (வினை), காலம் (நேரம்), ராகம் (வாஸனை), கலா (அளவுக்குப்பட்ட சக்தி), வித்யா (அளவுக்குப்பட்ட அறிவு) என்ற ஐந்து, பரம்பொருளையும் தன்னையும் ( உலகையும், பிரித்துப் பார்க்கச் செய்யும் அஞ்ஞானம் என 7 வித்யா தத்துவங்கள் - மாயா தத்துவங்கள் எனப்படுபவை.

5-4. பரம்பொருளும் உலகும் ஒன்றே என்ற உணர்வாகிற சுத்த வித்யா என்ற ஞானம், பரம்பொருளிலிருந்து உலகாக மாறவேண்டியவைகளைப் பிரித்து உலகமாக்கிக் காட்டிய ஈசுவரன், இந்த உலகமும் அதன் மூலகாரணமான பரம்பொருளில் அடங்கியதுதான் என்ற ஞானம் பெற்ற ஸதாசிவன், உலகைப்படைக்கும் எண்ண வடிவில் பரம்பொருளிடமிருந்து பிரிந்தது போன்றுள்ள பரம்பொருளின் சக்தி, அந்த சக்தியையும் தன்னுள் அடக்கிக் கொண்டிருக்கும் பரம்பொருளாகிய சிவன் எனும் பிரம்மம், இந்த 5 சிவதத்துவங்கள்.

5-5. இந்த முப்பத்தாறு தத்துவங்களாகிய அனைத்துமாய் இருப்பவள் தேவி. அப்படித் தேவியை உபாசிப்பது 'தத்வாத்வா' என்ற வழியைச் சேர்ந்தது. தேவியை அடையும் மார்க்கங்களாகிய அத்வாக்கள் ஆறில் இதுவும் ஒன்று. (30-90-2) (203)

**6. ஸர்வ - மந்த்ர - ஸ்வரூபிணி. எல்லா மந்திரங்களையும் வடிவமாக்கிக் கொண்டவள்.**

6-1. தெய்வ வழிபாட்டில் ஸாதனமாக அமைந்த மஹா மந்திரங்கள் 7 கோடியாகும். மந்திரங்களே (11-4-1-9-) தேவியின் வடிவமென உபாசிப்பது ஆறு அத்வாக்களுள் ஒன்றாகிய மந்திராத்வா (30-90-2 ). 'மந்திராத்வா ' என்ற முறையில் உபாஸிக்கப் பெறும் மந்திரங்களையே தம் வடிவமாகக் கொண்டவள் தேவி. (204)

(நா. 205- 211)

सर्वयन्त्रात्मिका सर्वतन्त्ररूपा मनोन्मनी ।
माहेश्वरी महादेवी महालक्ष्मीर्मृडप्रिया ॥ 53 ॥

**ஸர்வயந்த்ராத்மிகா ஸர்வதந்த்ரரூபா மனோன்மநீ.**
**மாஹேச்வரீ மஹாதேவீ மஹாலக்ஷ்மீர் ம்ருடப்ரியா.**

**7. ஸத்ரவ - யந்த்ர - ஆத்மிகா. எல்லா யந்திரங்களையும் வடிவமாகக் கொண்டவள்.**

7-1. யந்திரம் வழிபடப்படுகின்ற தேவதையின் சக்தியைத் தன்னுள் அடக்கிக் கொண்டிருக்கும் கோடுகளின் வடிவத்திலுள்ளது. (19-11-2-9-) ஒவ்வொரு தேவதைக்கும் மந்திரத்திற்கும் தனித்தனியாக யந்திரங்கள் உண்டு. அவை எண்ணற்றவை. யந்திரங்கள் தேவியின் வடிவம். அந்த யந்திரங்களுக்குள்ளே உறையும் ஆத்மா தேவி. ஸர்வயந்திரங்களை வடிவமாகக் (ஆத்மா -சரீரம்) கொண்டவள். ஸர்வ யந்திரங்களுக்குள்ளே உறையும் ஆத்மா (ஆத்மா - அந்தர்யாமி) வாக இருப்பவள். (205).

**8. ஸர்வ - தந்த்ர - ரூபா. எல்லா தந்திரங்களையும் உருவமாகக் கொண்டவள்.**

8-1. தந்த்ரம் - நல்ல செய்முறை. வழிபாட்டு முறையே இங்கு தந்த்ரம் எனப்படுவது. அதனைக் கூறும் நூல்களையும் தந்திரங்கள் என்பர். சீரிய முறையில் எளிதில் உபாசனையின் பலன் கிடைக்குமாறு அமைந்த வழிகள் தந்திரங்கள். அவை வழிபாட்டுக் குறைகளால் ஏற்படும் கெடுதல்களிலிருந்தும் சாதகனைக் காப்பாற்றுகின்றன. (தந்யதே - த்ராயதே ச - நன்கு செய்யப்படுகிறது - காப்பாற்றுகிறது). சீரிய முறையில் அமைந்த வழிபாடுகளும் வழிபாட்டு முறைகளைக் கூறும் தந்திரங்களும் எண்ணற்றவை. உபாசகனது ஸாதனையின் தரத்திற்கேற்பப் பல வழிகளை அவை காட்டுகின்றன. வழிகள் வேறுபடினும், அடையும் இடம் ஒன்றே. அது தான் தேவி என்ற பரம்பொருள்.

8-2. தந்திர நூல்களை ஆகமங்கள் என்பர். அவை தேவியின் அங்கங்களாக அமைந்தவை என காமிகாகமம் கூறும். ஆகமங்கள் பெரும்பாலும் தேவி கேட்கச் சிவன் கூறியதாக அமைந்திருக்கும். சிவனது முகத்திலிருந்து (ஆ-கம) வெளியானவை ஆகமங்கள் - காமிகம் முதலானவை.

8-3. ஆகமங்கள் தேவியின் அங்கங்களாகக் கருதப்படுகின்றன. காமிகம் எனும் ஆகமம் - தேவியின் திருவடிகள், யோகஜம் - கணுக்கால்கள், காரணம், பிரஸ்ருதம் - வலது, இடது கால் விரல்கள், அஜிதம் - கணைக்கால், தீப்தம் - தொடை, அம்சுமான் - புட்டம், ஸீப்பிரபேதம் - தொப்புள், விஜயம் - வயிறு, நிச்சவாஸம் - இதயம்,

ஸ்வாயம்புவம் - இரு ஸ்தனங்கள், அநலம் - மூன்று கண்கள், வீரம் - கழுத்து, ருரு- காதுகள், முகுடம் - கிரீடம், விமலம்- கைகள், சந்திரஞானம் - மார்பு, பிம்பம் - முகம், ப்ரோத் கீதம் - நாக்கு, லலிதம் - கன்னம், ஸித்தம் - நெற்றி, ஸந்தானம் - குண்டலம், கிரணம்- அணிகள், வாதூலம் - பிராணன். வேறு பல ஆகமங்களும் உண்டு. அவைகளை உருவமாகக் கொண்டவள் தேவி.

### 9. மநோந்மநீ - மனோன்மனீ.

9-1. புருவ நடுவிலுள்ள ஆஜ்ஞா சக்கிரத்திற்கு மேல் பிரும்மரந்திரத்தின் கீழ் அமைந்துள்ள ஸஹஸ்ராரம் எனும் பிந்துவில் எட்டு அடுக்குகள் உள்ளன. அவை முறையே அர்த்தசந்திரம், ரோதினீ, நாதம், நாதாந்தம், சக்தி, வியாபிகா, ஸமநா, உந்மநீ என்பவை (18.25,1) ஹ்ரீம் முதலிய மூல அக்ஷரங்களில் ம் என்ற பீஜத்தின் கார்வை ஸ்வரங்களாக இவை எட்டும் அமையும். முன்னதைவிடப் பின்னது மிக சூட்சுமமானது. அந்த எட்டினுள் கடைசியாக அமைந்துள்ள மிக சூட்சுமமான உந்மநீ 'மநோந்மநீ ' என்றும் கூறப்படும் அந்த உந்மநீ ஆக இருப்பவள் தேவி.

9-2. வாமதேவர், ஜ்யேஷ்டர், சிரேஷ்டர், ருத்ரர், காலர், கலவிகரணர், பலவிகரணர், பலர், பலப்ரமதனர், ஸர்வபூததமநர், மனோன்மனர் என்ற பதினோரு சிவ மூர்த்திகள் உண்டு. அதில் மனோன்மனரின் சக்தி மனோன்மனீ.

9-3. யோக சாஸ்திரத்தில் யோகத்தால் கட்டுப்பட்ட ஒரு மன நிலையை மனோன்மனி என்பர். விஷயங்களில் பற்றை அறுத்துக் கொண்ட மனமானது கட்டுப்பட்டு ஆத்மாவை நோக்கித் திரும்பி அதை அடைந்து தன்னை லயம் செய்து கொள்ளும் ஏக்கத்துடன் இருப்பது ( மன-மனம், உன்மநா - ஏக்கத்துடன் இருப்பது) மனோன்மனியாகும். இந்த நிலையும் தேவியே.

9-4. இந்த மனோன்மணி நிலையைப் பெற யோகாப்பியாசத்தில் அமைந்த முத்திரையும் மனோன்மனி எனப்படும். கண்கள் இமைகொட்டாது. பிராணவாயு உட்செல்வதோ, வெளியாவதோ (மூச்சிழுப்பதும் விடுவதும்) நின்றுவிடும். மனத்தில் ஸங்கல்பமோ விகல்பமோ தோன்றாது. தியானிப்பவன், தியானிக்கப்படும் பொருள், தியானம் என்ற திரிபுடீ தோன்றாது. இந்த நிலையும் தேவியே.

9-5. மனம், உயர்ந்த மனமாக (உத்க்ருஷ்டம் மந - உந்மந ) மனத்தின் சக்தி நிறைந்ததாக ஆகும்படி செய்பவள் மனோன்மனீ. (207)

### 10. மாஹேச்வரீ. மஹேசுவரரின் பத்தினி.

10-1. படைப்பு, காத்தல், அழித்தல் என்ற மூன்றையும் முறையே ரஜோகுணம் அதிகமுள்ள பிரும்மாவும், ஸத்வகுணம் அதிகமுள்ள விஷ்ணுவும், தமோகுணம் அதிகமுள்ள ருத்திரனும் செய்கின்றனர். முக்குணங்களும் ஸமமாக அமைந்த ஈசுவரன் திரோதானத்தைச் செய்கிறார். (நா.256, 274) இவரே மஹேசுவரர். இவரது சக்தி வடிவாயும், பத்தினியாயுமிருப்பவள்.

### 11. மஹாதேவீ. மாபெருந்தேவி.

11-1. புலன்களுக்கெட்டாத பெருத்த உருவத்தை மஹா(மஹத்) என்று குறிப்பிடுவர். குறிப்பிட்ட அளவில் அடங்கிய ஒன்றைத்தான் மனமோ, பொறிகளோ உணரும். மனமும், பொறிகளும் உணர முடியாத அளவிற்கப்பாற்பட்ட பெருமை கொண்ட தேவி மஹாதேவி.

11-2. சிவனின் எட்டு மூர்த்திகளில் ஒன்று சந்திரன். சந்திரன் வடிவில் உள்ள சிவன் மகாதேவன். அவரது மனைவி மஹாதேவி. ரோஹிணி என நாமம் பூண்டவள். (9.2.1.) நேபாளத்தில் உள்ள கண்டகி நதியின் கரையில் உள்ள சாலக்ராமத்தில் சக்கிர தீர்த்தத்தின் தேவதை மஹாதேவீ. அந்த வடிவில் உள்ளவள். தேவதாசக்தி அனைத்தும் பெற்றவள் தேவி. (2.11.1) தேவிகளுக்குள் பெரியவள் மஹாதேவி.

### 12. மஹாலக்ஷ்மி. மகாலக்ஷ்மி.

12-1. மிகப்பெரிய (மஹதீ) லக்ஷ்மி. மஹா விஷ்ணுவின் பத்னீ. கரவீரத்தில் (கோல்ஹாபூர்) கோயில்கொண்ட சக்தி. சிவனது சக்திகளில் ஒருவள் மகாலக்ஷ்மீ. துர்க்காதேவியானவள் மஹாகாளீ, மஹாலக்ஷ்மீ, மஹாஸரஸ்வதீ என்ற மூன்று உருவில் தோன்றிய சரித்திரம் துர்க்காஸப்தசதியில் காணப்படுகின்றது. மஹாலக்ஷ்மியாக 18 கைகளுடன் மஹிஷன் எனும் அசுரனைக் கொல்வதற்காகத் தோன்றினாள். 13 வயதுள்ள கன்னியை மஹாலக்ஷ்மி என்பர். அப்படி திரயோதசி திதியன்று வழிபடப்பெறுபவள். (13.11.2). (210)

### 13. ம்ருடப்ரியா. ம்ருடன் என்ற சிவனின் மனைவி.

13-1. சிவனே படைத்தல், காத்தல், அழித்தல் என்ற முத்தொழில்களைப் புரிபவராக பவன், ம்ருடன், ஹரன் என்ற மூன்று

உருவங்களில் தோன்றுகிறார். இதமாக வருடிச் சுகம் தருபவராக உலகைக் காப்பவர் ம்ருடன். ஸத்வகுணம் மிக்கவர். (13.1.1) அவரது மனைவியும் சக்தியுமான தேவி ரக்ஷண சக்தியாக உள்ளவள். ம்ருடனுக்குப் பிரியமானவள். ம்ருடன் இவளிடம் பிரியமாயிருப்பார். ம்ருடப்பிரியா. (211)

(நா. 212- 218)

महारूपा महापूज्या महापातकनाशिनी ।
महामाया महासत्वा महाशक्तिर्महारतिः ॥ 54 ॥

**மஹாரூபா மஹாபூஜ்யா மஹாபாதகநாசிநீ.**
**மஹாமாயா மஹாஸத்வா மஹாசக்திர் மஹாரதி.**

**14. மஹா - ரூபா. மாபெரும் வடிவமுள்ளவள்.**

14-1. புருஷன், பிரகிருதி, வ்யக்தம், காலம் என்பவை பரப்பிரும்மத்திடமிருந்து தோன்றிய முதல் தத்துவங்கள். படைப்பு, காப்பு, ஒடுக்கம் என்ற மூன்றிற்கும், மூலதத்துவத் தோற்றத்திற்கும் அந்த நான்கும் காரணமானவை. அவைகளுக்கும் மூலகாரணமான தேவி அவைகளையும் விடப் பெரியவள். உலகப் படைப்பின் தொடக்கத்தில் இயற்கைநிலை முதலில் படைக்கப் பெற்றது எனப்படும். இன்னதென்று அறியமுடியாதபடியிருந்த அவ்யக்தம், உலகமாக இனித்தான் வெளிப்பட இருக்கிறது. ஸம்ஹார காலத்தில் மூலப் பொருள்களாக மாற்றப்பட்டு இன்னதென்று பிரித்தறியமுடியாதபடி ஈச்வரனால் அவ்யக்தமாக உருக்குலைக்கப்பட்டு மாயையினுள் சேர்க்கப்பட்டவை, திரும்பப் படைப்பு தொடங்கியதும் அப்படியே வெளியாகின்றன. அதனால் அவைகளின் முதல்நிலை அவ்யக்தம். அந்த அவ்யக்தம் - உருவகப்படுத்த முடியாத ஒன்று - வியக்தமாயிற்று- உருவகப்படுத்தக்கூடிய மஹத் என்றே பெயர். அது இனிப் பலவாகப் பிரியவிருக்கிறது. அந்த மஹத்தை வடிவமாகக் கொண்டவள் - மஹத்தாகத் தோன்றுபவள் மஹாரூபா. (17-8-1-20)

14-2. உலகின் படைப்பு காத்தல் அழித்தல் முதலிய பல மாபெரும் செயல்களைப் புரியும் பிரமன் விஷ்ணு ருத்திரன் முதலானவர் மஹான்கள். அவர்களது வடிவத்தில் அப்பணிகளைப் புரிபவள் மஹாரூபா.

(நா. 264-274) மற்ற சித்தர் யோகிகள் முதலிய பெரியோர்கள் வடிவிலுள்ளவளும் அவளே. (212)

**15. மஹா - பூஜ்யா. பெருமைமிக்க வழிபாட்டிற்குரியவள்.**

15-1. வழிபாட்டிற்கு உரிய மகான்களான பிரும்மா, விஷ்ணு, சிவன் முதலானவர்களும் தேவியை வழிபடுவதாலும், அந்த மகான்களைவிடப் பெரியவளான்தாலும் மஹா பூஜ்யா.

**16. மஹா- பாதக-நாசிநீ. மஹா பாபங்களை அழிப்பவள்.**

16-1. மிகவும் தீவிரமான பாபவாசனைகளை ஏற்படுத்தும் பாபங்கள் மஹாபாதங்கள் எனப்படும். பாதகங்கள்-வீழ்த்துபவை - அவைகளின் மகத்துவம் கெட்ட வாஸனைகளை அளித்துத் திரும்பத் திரும்ப அதே பாதகங்களைச் செய்யத் தூண்டுவதே. பிரும்மஹத்தி, திருடுவது, கள் குடிப்பது, மூத்தோர் மனையாளை அடைவது, இந்த நான்கு பாதகங்கள் புரிபவருடன் சேர்வது இவை மஹாபாதகங்கள். அந்தப் பாபங்களை எந்த பிராயச்சித்தமும் போக்காது. அவைகளால் விளைந்த கெட்ட வாஸனைகள் அவ்வளவு தீவிரமானவை. அந்தக் கெட்ட வாஸனைகளையும் அழித்துப் பாபத்தைக் குலைப்பவை தேவியின் நாமங்களும், மந்திரங்களும். அவைகளை வாஸனையுடன் அழிப்பவள். இதற்கு எதிரிடையான வாஸனைகளைத் தரும் அஹிம்ஸா, ஸத்யம், அஸ்தேயம் (திருடாமை), பிரும்மசரியம், அபரிக்ரஹம் (தனக்குத் தேவைக்கு மேல் சேர்த்துக் கொள்ளாமை) ஆகிய ஐந்து சீலங்களான நற்பழக்கங்களை ஏற்படுத்தி நம்மைத் திருத்துபவள்.

**17. மஹா - மாயா. மிகவும் மயக்குபவள்.**

17-1. தத்துவமறிந்தவனும் கூட அஜ்ஞானமெனும் மாயா சக்திக்குட்பட்டு ஏமாந்துவிடுகிறான். பிரும்மாவும் அதற்கு உட்பட்டவரே. அப்படி அனைவரையும் மாயாசக்தி மயக்கும். உலகைப் படைக்க முற்பட்ட பிரும்மாவிற்கு முதல் எதிரிகளாகத் தோன்றியவர்கள் மது, கைடபன் என்ற இரு அசுரர்கள். வேதமனைத்தும் அறிந்தவராயினும் அவர்களிடமிருந்து மீள வழி தெரியாமல் பிரும்மா கலங்கினார். மஹாமாயையான தேவியை வழிபட்டார். தேவியின் அருளால் யோக நித்திரையில் ஆழ்ந்த விஷ்ணு

எழுந்து மதுவையும், கைடபனையும் மாயையால் மயக்கி அழித்துவிட்டார். அந்த சமயத்தில் பிரும்மாவிற்கு அருள்புரிந்த தேவி மஹாமாயா. (தேவி மாகாத்மியம் அத்.1)

17-2. உண்மைக்கு மாறுபட்ட தோற்றத்தைத் தருவது மாயை. என்றும் சேராததைச் சேர்த்து வைப்பது மாயை. எது எப்படிப் புரியவேண்டுமோ அதற்கு மாறுபடப் புரியவைப்பது மாயை. மாயை காட்டும் தோற்றத்தில் மயங்கியவனால் அதன் பின்னுள்ள மாயாவியை அறிய முடியாது. இது மாயை என உணர்ந்தவனே அந்த மாயையின்பின் ஒளிந்திருக்கும் மாயாவியைக் காண்பான். இப்படி அறிவது மிக அரிது. பிறந்த சிசு அழுகிறது. அதன் அழுகையால் பெற்றவள் மனம் கனிகிறது. அந்தக் கனிவு தந்த ஊட்டம் குழந்தையை வளர்க்கிறது. வளர்ந்தவர் மற்றொரு துணைகொண்டு மற்றொரு சிசுவிற்குப் பெற்றோர் ஆகிறார். இப்படி மாயைக்குட்பட்டு சுழலில் சிக்குவது தவறு என்று நூலறிவு பெற்றிருந்தும் அதனையும் மீறி ஸம்ஸாரவாஸனை சிறந்த அறிவாளியையும் மயக்கி ஸம்ஸாரத்தில் சிக்க வைக்கிறது. "ஜ்ஞாநிநாமபி சேதாம்ஸி தேவீ பகவதீ ஹி ஸா.பலாத் ஆக்ருஷ்ய மோஹாய மஹாமாயா ப்ரயச்சதி " "ஞானியின் மனத்தையும் வலியுடன் இழுத்து மோகத்திற்கு வசப்படுத்துகிறாள். ஏனெனில் அவள் மாபெரும் சக்திகள் படைத்தவள் " (தேவி மாகாத்மியம். 1-55). அத்தகைய மாபெரும் மாயையாக இருப்பவள் தேவி. அந்த மாயையிடம் பிரும்மாவும், புழுவும் ஒரே விதமாகச் சிக்குவர்.

17-3. சக்திப் பிசணவம் என்றும், மாயா என்றும், சக்தி என்றும், ஹ்ரீம் என்ற சக்தி மிக்க பீஜாக்ஷரத்திற்குப் பெயர். அதற்குள் பிறர் புரிந்துகொள்ள முடியாவண்ணம் தேவியின் சக்தி அனைத்தும் மறைந்திருக்கிறது. ஒரு ஆலமரத்தின் விரிவனைத்தும் அதன் நுண்ணிய விதையில் அடங்கியிருப்பதுபோல். இது பஞ்சதாக்ஷரீ மந்திரத்தின் மூன்று கூடத்திற்கும் கிரந்திகள்போல், மாலையின் நடுவே உள்ள இணைக்கின்ற முடிப்பு - குஞ்சம் போல் அமைந்திருக்கிறது.மூன்று கூடங்களின் முழுச் சக்தியையும், தன்னுள் கொண்டது. அந்த பீஜம் போன்ற அக்ஷரத்தில் அமைந்த மாபெரும் சக்தி தனித்த வழிபாட்டு முறையால் வெளிப்படுகிறது. மாபெரும் சக்திகள் அனைத்தும் எப்படி அந்த விதை போன்ற ஹ்-ர்-ர்-ம் என்ற நான்கே அக்ஷராவயவங்கள் உள்ளதில் அமைந்துள்ளது என்பது மாயை போல் அறியவொணணாதது. அந்த மஹாமாயாவாக ஹ்ரீம் எனும் பீஜாக்ஷரவடிவில் உள்ளவள். (நா. 301). (215)

### 18. மஹா. ஸத்வா. மாபெரும் பொருள்களைத் தோற்றுவித்தவள்.

18-1. ஸத்வம்-பொருள். உருவத்தாலும், செயலாலும் பெருமைமிக்க பிராணிகள் முதலிய ஸத்வங்கள் அவளிடமிருந்து தோன்றின. அதனால் மஹாஸத்வா (மஹாந்தி ஸத்வாநி யஸ்யா.) ஸத்வம் - மனது. பிரும்மா என்றும் புழு என்றும் வேறுபாடு பாராத விரிந்த பெருமைமிக்க மனம் உள்ளவள். (மஹத் ஸத்வம் யஸ்யா).

18-2. ஸத்வம் - இருக்கை - இருப்பதன் தன்மை - ஒரு பொருள் இருப்பதனைக் காட்டவல்ல அதன் தனித்தன்மை. ஒரு பொருள் இருப்பதாகத் தோன்றுவது அதற்கு ஆதாரமாக உள்ள பரம்பொருளின் 'ஸத்' தன்மையைப் பொறுத்தது. நேற்றில்லாமல் நாளை மறைவதாய் உள்ள எந்தப் பொருளும் 'ஸத்' தான். அது அந்த வடிவில் நிலைத்த 'ஸத்' அல்ல. அப்பொருளின் அந்த நிலையாகிற ஸத்வமும் நிலைத்ததல்ல. நேற்று மரமாகியிருந்தது கூழாகித் தாளாகிப் புத்தக வடிவு பெற்றுள்ளது. நாளை எப்படியாகும் என்று தெரியாது. முன்னிருந்த பல நிலைகளிலும் பின் அடையவிருக்கும் பல நிலைகளிலும் தொடர்ந்து அதனிடம் உள்ள பிரும்மத்தின் அம்சமான ஸத்வம் நிலைத்துள்ளது. அது பெருமை மிக்கது, அளவிட முடியாதது. அந்த மஹா- ஸத்வமாக இருப்பவள் தேவி. (18.26.2) ஸத்வம் - ஒரு பொருளைத் தனித்துக் காட்டவல்ல பலமும் குணமும். மாபெரும் பலமாகவும், பெருமைமிக்க குணமாகவும் எல்லாவற்றிலும் உறைந்திருப்பவள் தேவி.

### 19. மஹாசக்தி. மாபெரும் சக்தி படைத்தவள்.

19-1. அநேக கோடிப் பிரும்மாண்டங்களையும் தனித்து ஆளக்கூடியது தேவியின் சக்தி. அதனால் அது மஹாசக்தி. அந்த மஹாசக்தி கொண்டவளும் மஹாசக்தி. (மஹதீ சக்திர் யஸ்யா) சக்தி பலத்தையும், பலத்தை வெளிக்காட்ட உதவுகின்ற ஆயுதங்களையும் பொறுத்தது. வலிவாலும், ஆயுத சக்தியாலும் அவள் மாபெரும் சக்தியாக இருக்கிறாள். அவளைக்காட்டிலும் பெருத்த சக்தி உள்ளவர் வேறு ஒருவரும் இல்லை. (217)

### 20. மஹா. ரதி. மிகச் சிறந்த பிரியத்தின் வடிவானவள்.

20-1. ரதி :- பிரியம். மனத்திற்கு ஒரு பொருளில் ஏற்படுகின்ற பிடிப்பதற்கும், திருப்திக்கும், ஈடுபாட்டிற்கும் ரதி என்று பெயர். மனிதனுக்கு ஒரு பொருளில் பிரியம் ஏற்படுகிறது எனக் கொள்வோம். அந்தப் பிரியம்

பொருளில் உள்ளதா, பிரியப்படும் மனத்தில் உள்ளதா? அந்தப் பொருள் பிரியமானது என்பதால் பிரியம் அல்ல. தனக்குத் திருப்தி தருவதால்தான் அது பிரியம். தற்போது அது தனக்குப் பிரியமாக இல்லாவிடில், முன்பு பிரியமானதாக ஏற்றுக்கொண்டிருப்பினும் தவிர்க்கப்படும். அதனால் தனக்கு என்பதுதான் முக்கியம். அந்தத் தனக்கு ஏதேனும் ஆபத்து வரக்கூடுமானால், இதுகாறும் மிகப் பிரியமாயிருந்த சொத்து, பிள்ளை, மனைவி, தன்உடல், உயிர் இவைகளில் வைத்த பிரியம் கூட மறைந்துவிடும். தன்னை எப்படியாவது காப்பாற்றிக்கொள்ளச் செய்யும். அதனால் தனக்குத் தன்னிடம் உள்ளப் பிரியம்தான் மிகப் பெரியது என விளங்கும். அந்தத் தான் தான் ஆத்மா. அது பிரியமே வடிவெடுத்தது. பிரியமானவைகளுக்குள் அது மிகவும் பிரியமானதாக இருக்கிறது. அதற்குப் பிரியமானவை என்பதால்தான் பொருள், மனைவி, பிள்ளை,வீடு என்பவைகளில் பிரியம் ஏற்படுகிறது. இதை அறிந்து உணரும்போது அந்தப் பிரியம் மஹத் ஆகிவிடும். அந்த விச்வரூபம் எடுத்த பிரியமே ஆத்ம ஸ்வரூபம். ஆத்ம ஸ்வரூபமே தேவி. ஆத்மா தான் பிரியம், அறியாமையால் பிரிய உணர்விற்கு அதுதான் ஆதாரம் என்பதனை உணரவில்லை. அதனால் மற்ற வெளிப் பொருளில் பிரியம் தேடிக் கிடைத்தவற்றில் நாட்டம் கொள்கிறோம். ஆத்மாவைப் பிரியம் என அறிந்துவிட்டால் வேறு பொருளில் நாட்டமிருக்காது. அவன் ஆத்மாராமனாக (தன்னிடத்திலேயே பிரியத்தை உணர்ந்தவனாக - தன்னையே பிரியமாக உணர்ந்தவனாக) விளங்குவான்.

20-2. ரதி- அழகிய பெண். மன்மதனின் மனைவி. மிகச்சிறந்த அழகி. அதனால் ரதி என்ற பெயர் பெற்றாள். அவளைவிட மாபெரும் அழகி தேவி. (218)

(நா.219-225)

महाभागा महैश्वर्या महावीर्या महाबला ।
महाबुद्धिर्महासिद्धिर्महायोगेश्वरेश्वरी ॥ 55 ॥

**மஹாபோகா மஹைச்வர்யா மஹாவீர்யா மஹாபலா.**
**மஹாபுத்திர் மஹாஸித்திர் மஹாயோகச்வரேச்வரீ.**

**55**

**21. மஹாபோகா. சிறந்த சுகமுள்ளவள்.**

21-1. சுகத்தின் அனுபவ உணர்வு போகம். அதனைத் தரும் செல்வம் முதலியவையும் போகமே. அளவற்ற போக சாதனமான செல்வமும்,

தடையற்று அதனை அனுபவிக்கின்ற சுக உணர்வும் உள்ளவள். மஹா- ஆபோகா. ஆபோக :- விரிவு. எல்லை கடந்த இந்த உலகமாக விரிந்து காணப்படுபவளாகையால் மஹாபோகா. (219)

### 22. மஹா. ஐச்வர்யா. பெரும் ஐச்வர்யம் உள்ளவள்.

22-1. ஐச்வர்யம் - ஈசுவரியாயிருக்கும் தன்மை, தன்னிஷ்டப்படி மற்றவற்றை ஆளும் திறமை. அதனைப் பெருமளவில் பெற்றவள்.

22-2. ஈசுவரனது விரிந்து கிடக்கும் சக்தி விபூதி. அதன் சிறு சிறு அம்சத்தைச் சில இடங்களில் தனித்துக் காண முடியும். அரசனின் ஆளுமை, குருவின் போதனைத்திறம்; மலையின் திட்பம், பூமியின் பொறுமை, கர்ணனின் கொடை, ஹரிச்சந்திரனின் ஸத்தியம், மனத்தை ஈர்க்கும் பெண்ணின் அழகு, சிசுவின் பேதமை, பூவின் மணம் இவை ஒவ்வொன்றும் ஈசுவர விபூதிகளே. அரசன், மலை முதலியதன் வெளித்தோற்றம் மறைந்து, அவற்றுள் கிடக்கும் ஈசுவராம்சத்தைப் பார்க்கும்போது ஈசுவரனைக் காணும் பேறு பெறுகிறான். எங்கும் உறைந்துள்ள ஈசனைக் கண்டு எல்லாமான ஈசனை அறிகிறான். இதன் விளக்கம் கீதையின் விபூதி அத்தியாயம். அந்த ஈசுவர விபூதியைப் பெருமளவில் கொண்டவள். (220)

### 23. மஹா- வீர்யா. சிறந்த வீர்யமுள்ளவள்.

23-1. வீர்யம் என்பது, தேக வலிவுக்குக் காரணமான தாதுபலம், பிறர் உணருமளவிற்கு வெளியாகும் எதிர்க்கும் திறமை பிறரால் அடக்க முடியாமை முதலியவற்றை அது குறிப்பிடும். பெரிய அளவில் வீர்யம் கொண்டவள். (221)

### 24. மஹா. பலா. மிகுந்த பலம் உள்ளவள்.

24-1. பலம் என்பது சேனை, வலிவு, அததன் தனித்த சக்தி (பூவில் மணம், ரத்தினங்களில் ஒளி முதலியவை) உடல் பருமன் முதலியதைக் குறிக்கும். பலத்தைப் பெருமளவில் பெற்றிருப்பவள்.

24-2. பலம்- காக்கை. காக்கை வடிவில் 'யோக' சித்தி பெற்ற காகபுசுண்டர் முதலிய யோகிகள் தேவியை வழிபட்டுச் சித்தி பெற்றனர். தேவியை வழிபட்டதால் அவர்களை மகா பலர்களாக ஆக்கியவள்.(222)

## 25. மஹா- புத்தி. பெருமை மிக்க புத்தியுள்ளவள்.

25-1. புத்தி- அறியும் திறன்படைத்த அந்தஃகரணம். புத்தியின் பெருமை - நுண்ணிய பொருளை எளிதில் அறியக்கூடிய திறமையைப் பொறுத்தது. எதையும் எளிதில் தெள்ளென அறியும் புத்தி படைத்தவள். புத்தி - அறிவு. பெற்றுள்ள அறிவைக் கொண்டு இனி அறிய வேண்டியதனைத்தையும் அறிய முடிந்தால் அது பெருமை மிக்க அறிவு. அத்தகைய பெருமை மிக்க அறிவு கொண்டவள் தேவி. தேவியை (பரம்பொருளை) அறிந்தால் உலகில் உள்ளதனைத்தையும் அறிந்ததாக ஆகும். அந்தச் சிறப்பு மிக்க அறிவாயிருப்பவளும் அதனை அருள்பவளும் தேவியே.

## 26. மஹா-ஸித்தி: பெரும் சித்திகள் பெற்றவள்.

26-1. அணிமா முதலியவை எட்டு சித்திகள். தனித்த சிறப்பு மிக்கச் சக்திகளை யோக முறையால் பெறுவது சித்தியாகும். அணிமா- என்பது, உடலை அணுவணுவாகப் பிரிப்பதும் அணுவளவில் குறுக்குவதுமாகும். அதனால் பிறர் கண்களில் படாமலும் மற்றொன்றால் தடையுறாமலும் ஸஞ்சரிக்கலாம். (அணுக்கள் ஒருங்கிணைந்து அமைந்த உடற்கட்டு உருவத்தைப் பெறுகிறது. தனித்தனி அணுக்களாக மாறும்போது உருவம் மறைகிறது). மஹிமா - இயற்கையாக அமைந்துள்ள உருவமைப்பைப் பல மடங்கு பெரிதாக்கிக்கொள்வதாகும். லகிமா- உடலை லேசாக்கிக்கொள்வது. கரிமா- உடலை மிகவும் கனமுள்ளதாக்குவது. ப்ராப்தி :- விரும்பியதைப் பெறுவது. ப்ராகாம்யம் - விருப்பம் தடைபடாமல் எளிதாக நிறைவேறுதல். ஈசித்வம் - ஜடமும் சேதனமும் ஆட்பட்டு ஆணைக்கடங்கி நடத்தல். வசித்தவம் - பிறருக்கு வசப்படாமல் தன் விருப்பப்படி நடத்தல். இவைகளை அஷ்ட (8) மகா சித்திகள் என்பர். மற்றும் சிருங்காரம், வீரம் முதலிய ரஸங்களைத் தன் விருப்பப்படி தோற்றுவித்தல். ஸுகம்- துக்கம், சீதம் - உஷ்ணம், விருப்பு - வெறுப்பெனும் துவந்துவங்களுக்கு அடிமையாகாதிருத்தல், வாழ்க்கைத்தரம் மேலும் கீழுமாக மாறாமல் ஒரே சீராக அமைத்துக் கொள்ளுதல், காந்தி, வலிவு முதலியவை மிகுந்திருத்தல், சோகமின்மை, விருப்பப்படி எவ்விடமும் சென்று வரத் தகுதி, எங்கும் ஓய்வுபெறும் தன்மை இவை முதலான பல சித்திகளும் விரும்பத்தக்கவை. இந்த சித்திகள் அனைத்தையும் பெற்றவள். பக்தர்களுக்கு அவற்றை அருள்பவள். அந்த சித்திகளாகவே இருப்பவள்.

**27. மஹா-யோகேச்வர-ஈச்வரீ. மகா யோகிகளுக்கு ஈசுவரி.**

27-1. யோக முறைகளில் சிறப்பு மிக்கவை மஹா யோகங்கள். அவைகளில் சித்தி பெற்றதால் ஈசுவரர்களாக (தன் விருப்பப்படி நடப்பவர்கள். பிறரைத் தன் விருப்பப்படி ஆட்டுவிப்பவர்கள்) ஆன யோகிகள் அனைவருக்கும் தலைவி தேவி. மஹான்களான யோகிகளுக்கு ஈசுவரி.

27-2. துன்பம் தரவல்லதைத் தவிர்த்து இன்பம் தருவதாக அதனை ஆக்கிக்கொள்வது யோகம். பொருளின் மதிப்பறிந்து - உள்ளதை உள்ளபடி அறிந்து அதனை வாழ்க்கைக்குப் பயன்படுவதாக ஆக்கிக்கொள்வது யோகம். வைரத்தைக் கல் என்றோ, கல்லை வைரம் என்றோ மதிப்பிடாமல் உண்மையான மதிப்பீடு யோகம். பயன்படாதவற்றையும் பயன் தருமாறு அமைப்பது யோகம். வெற்றியும் தோல்வியும் பாதிக்காமல், இன்பத்தால் மதர்த்தும் துன்பத்தால் நலிந்தும் விடாமல், சம நிலையில் நின்று பலனைக்கருதாமல் கருத்தூன்றிக் கர்மமே கண்ணாகிச் செயல்படுவது யோகம். பிரிந்திருப்பதைச் சேர்த்து வைப்பது யோகம். சேராததைச் சேர்க்க இயலாது. ஒன்றாக இருந்தவையை நடுவில் வந்த போலித் தடுப்பு பிரித்திருக்குமாயின், உண்மைநிலை அறிந்து திறத்துடன் செயல்பட்டு அத்தடுப்பை அகற்றினால் அவை இயற்கையாக எளிதில் கூடிவிடும். மனமும், பொறிகளும் அறிவை மயக்கி எல்லாம் அவளே என்ற உண்மை நிலையை மறைத்தன. வெவ்வேறாக சத்ருமித்ரர்களாக விருப்பு-வெறுப்புகளுக்கு ஆட்படுபவையாகப் பார்க்கச் செய்தன. மனத்தையும், பொறிகளையும் முன் விளக்கிய யோகப் பயிற்சிகளால் கட்டுப்படுத்துகிறோம். யமம் முதலிய எட்டங்கங்கள் கொண்ட யோகம் அனுபவித்தில் கூடியது. அதனால் பொறிகளை மனத்தால் அடக்கி, மனத்தைப் புத்தியால் அடக்கியதும் ஆத்மாவைப் பலவாகப் பார்த்த பேத நோக்கு அகன்றது. ஜீவாத்ம - பரமாத்ம ஐக்ய பாவனை நிலைத்தது. இந்த ஐக்ய பாவனையைத் தொடர்ந்துணரும் ஸமாதி நிலையாகிய யோகம் கூடிற்று. அந்த பாவனையால் ஏற்பட்ட அத்விதீயப் பிரும்மானுபவம் கூடிற்று. இப்படி ஸாதனமாகிய யோகப் பயிற்சிகளும் அதனால் கிட்டிய அத்வைதப் பிரும்மானந்தானுபவமுமானதும் யோகமே. அத்தகைய முக்திக்கு வேறொன்றையும் புறச்சாதனமாக எதிர்பாராத அந்தரங்க ஸாதனம் அவனது பேரருளே.

27-3. எந்தப் பணியும் செயலளவில் ஒன்றுதான். அதனை உயர்ந்த நோக்குடன் செய்யும் போது சிறந்த பலனைத் தருகிறது. அதுவே யோகம். (1) கையிலிருந்த அரிசி மாவு தரையில் சிந்தியது. எறும்புகள் அதனைச்

சாப்பிட்டன. (2) எறும்புகளுக்கு உணவளிக்கும் எண்ணத்துடன் எறும்பு வளைகளில் மாவைப் போட்டோம். எறும்புகள் சாப்பிட்டன. (3) எறும்பும் அந்தப் பரம்பொருளான தேவியே என்ற பாவனையுடன் எறும்புகளுக்கு நிவேதனமாக மாவைப் போட்டோம். எறும்புகள் சாப்பிட்டன. இந்த மூன்றிலும் அரிசி மாவு செலவானதும் எறும்புகள் சாப்பிட்டதும் விளைந்தன. விளைவுகள் ஒரே விதம். முதல் முறையில் சிந்தின அரிசி மாவு பற்றிச் சிறிதும் சிந்தனையில்லை. அது வீணானதால் புறக்கணிக்கப்பட்டது. இரண்டாவதில் பூதஸௌஹ்ருதம் என்கிற பரிவு மனத்தை நெகிழ வைத்தது. எறும்பு உண்டதில் ஒரு மகிழ்ச்சி. மூன்றாவது பக்தி கலந்த படைப்பு. மனத்தூய்மையால் எறும்பில் தேவியைக் கண்ட செயல் திறம். இதுதான் யோகம். இச்செயலைப் பெரும் பயன்தரவல்லதாக்கிய செயல் நேர்த்தி. பரிவால் ஏற்பட்ட நெகிழ்ச்சியும் பக்தியால் இறைவியைக் கண்டதும் அவளருளால் பெறப்பட்டவை. இது கூடாததைக் கூட்டி வைத்த யோகம். எறும்புக்கு மட்டும் உணவாகவிருந்ததை ஸர்வ பூதாத்மாவின் உணவாக்கிய யோகம் - மிகச் சிறந்த யோகம்.

27-4. யோகம் என்பது செயல் திறத்திலிருந்து ஜீவாத்ம- பரமாத்ம ஐக்கியம் வரை உள்ள பல பயிற்சி முறைகள். இவைகளில் தேர்ந்து சித்தி பெற்று ஈசுவரர்களாக - புதிதாகப் படைக்கவும், படைத்ததை மாற்றவும், படைப்பை நிறுத்தவும் பேராற்றல் பெற்றவர்கள் மஹா யோகேசுவரர்கள். அவர்களுக்கு அவ்வாற்றலை அளித்த ஈசுவரி. (225)

(நா. 226- 231)

महातन्त्रा महामन्त्रा महायन्त्रा महासना ।
महायागक्रमाराध्या महाभैरवपूजिता ॥ 56 ॥

**மஹாதந்த்ரா மஹாமந்த்ரா மஹாயந்த்ரா மஹாஸநா.**

**மஹாயாகக்ரமாராத்த்யா மஹாபைரவபூஜிதா.**

**28. மஹா - தந்த்ரா. பெருமைமிக்க தந்திரங்கள் உள்ளவள்.**

28-1. வழிபாட்டு முறைகள் தந்திரங்கள். அம்முறைகளைக் கூறும் நூல்களும் தந்திரங்களே. தேவியை அடையும் முறையாகவும் அவைகளைக் கூறுபவையாகவும் இருப்பதால் அவை பெருமை மிக்கவை.

குலார்ணவம், ஞானார்ணவம் முதலிய தந்திர நூல்களும் அவைகளில் காணும் தந்திரங்களும் பெருமைமிக்கவை. அவைகளைக் கொண்டவள் தேவி. (16.8.2, 16.38.4).

28-2. மற்ற தந்திர நூல்களைக் காட்டிலும் தேவி வழிபாட்டைத் தனித்துக் கூறும் ஸ்வதந்த்ரம் எனும் தந்த்ரம் மஹா தந்திரமாகும். அதில் கூறப்பட்டுள்ள வழிபாட்டு முறையும் மஹா தந்திரம். அதனை உடையவள் தேவி. (226)

### 29. மஹாமந்த்ரா. பெருமைமிக்க மந்திரங்கள் உள்ளவள்.

29-1. பாலா, பகலா, காளி, அன்னபூர்ணா முதலான தேவிகளின் மந்திரங்களால் வழிபடப் பெறுபவள். தேவியை வழிபட உதவுவதால் அவை மஹாமந்திரங்கள். அவைகளுக்குள் ஸ்ரீவித்யை எனும் பஞ்சதசாக்ஷரீ, மஹாமந்திரமாகும். அந்த மஹாமந்திரத்தால் வழிபடப்பெறுபவள். (227)

### 30. மஹா - யந்த்ரா. பெருமைமிக்க யந்திரங்கள் உள்ளவள்.

30-1. யந்திரங்களுள் சிறந்த ஸ்ரீசக்கிரம், மேரு முதலியவை மஹாயந்திரங்களாகும். அவைகளுள் ஸித்திவஜ்ரம் என்பது மிகவும் சிறந்தது. இத்தகைய மஹாயந்திரங்களை வழிபடுமிடமாகக் கொண்டவள். (228)

### 31. மஹா - ஆஸநா. பெருமைமிக்க ஆஸனமுடையவள்.

31-1. பஞ்சபூதங்கள் முதலிய 36 தத்துவங்கள் தேவியின் பெருமைமிக்க ஆஸனங்களாகின்றன. (16.5, 1-4) இவைகள் அனைத்திலும் தேவி விளங்குவதால் இவை ஆஸனமாகும் தகுதியைப் பெறுகின்றன. மஹான்களது பெருமைமிக்க இதயத்தைத் தனது இருப்பிடமாகக் கொண்டவள். பஞ்சப்பிரும்ஹாஸனம், சக்ரதாஜரதம், சிங்கம் முதலிய சிறந்த ஆஸனங்களைக் கொண்டவள்.( 6.3.2, 9.7.1, 10.5.1) (229)

### 32. மஹாயாக - க்ரம - ஆராத்த்யா. மகாயாக முறையில் ஆராதிக்கத் தக்கவள்.

32-1. ஆராதனம் - மனத்தைத் திருப்திப்படுத்தும் வகையில் அமைந்த வழிபாடு. அதற்கான விசேஷ வழிபாட்டு முறை மஹாயாகம்

என்பது. 64 யோகினீ கணங்கள் (தேவியின் பலிவாரங்கள் நா. 237) ஒவ்வொருவருக்கும் தனித்தனியே பூஜைகள் நடத்திப் பின்னர் தேவிக்கும் பஹிர்யாக முறையில் வழிபாடு நடத்துவது மஹாயாகமாகும். அம்முறைப்படி வழிபடத்தக்கவள்.

32-2. பாவனோபனிஷத்தில் நமது உள்ளுணர்வுகளையும் நம்மிடம் வெளிப்படும் சக்திகளையும் தேவியின் பரிவாரங்களாக்கி வழிபடும் முறை கூறப்பட்டுள்ளது. அம்முறையும் மஹாயாகம் எனப்படும். சிவயோகி ஒருவனால்தான் அதை நடத்த முடியும் அந்த மஹாயாக முறையாலும் வழிபடத்தக்கவள். (230)

**33. மஹா - பைரவ - பூஜிதா. மகா பைரவரால் பூஜிக்கப்பட்டவள்.**

33-1. சிதக்னி குண்டத்திலிருந்து தேவி தோன்றினாள். சிதக்னி குண்டத்தில் நடந்த வேள்வியை மஹாபைரவரான பரமேசுவரன் முன்னிருந்து நடத்தி வைத்தார். ஸ்ருஷ்டி - ஸ்திதி - ஸம்ஹாரங்களாகிற முத்தொழிலையும் புரியும் பரமசிபன் பயங்கரமான செயலுள்ளவரானதால் மஹா பைரவர். பிரளயத்தில் எல்லவற்றையும் தன்னுள் அடக்கிக் கொண்டபின் கல்பாந்த தாண்டவம் ஆடிப் பரமசிவன் தேவியை வழிபடுகிறார். பைரவர் என்ற சொல்லில் உள்ள ப - என்ற எழுத்து (பரணம்) நிரப்புதலை- ஸ்ருஷ்டியைக் குறிக்கும். 'ர' என்ற எழுத்து ( வமனம்) தன்னுள் அடக்கி உருக்குவைத்து வெளியிடுவதைக் குறிக்கும். இம்மூன்று தொழில்களையும் புரிவதால் அவர் மஹா பைரவர் - மிகப் பயங்கரர். அவரால் தேவி வழிபடப் பெறுகிறாள்.

33-2. பைரவம் - பயந்த சுபாவம் படைத்த பெண்களின் கூட்டம். (பீருணாம் ஸமூஹ : பைரவம்) பெண்களின் பெருத்த கூட்டத்தால் வழிபடப் பெற்றவள்.

(நா.232- 234)

**महेश्वर महाकल्प महाताण्डवसाक्षिणी ।**
**महाकामेशमहिषी महात्रिपुरसुन्दरी ॥ 57 ॥**

**மஹேச்வர மஹாகல்ப மஹாதாண்டவஸாக்ஷிணீ.**
**மஹாகாமேசமஹிஷீ மஹாத்ரிபுரஸுந்தரீ. 57**

**34. மஹேச்வர - மஹாகல்ப - மஹா - தாண்டவ - ஸாக்ஷிணீ. மஹேச்வரனது மகாப் பிரளய காலத்திய மகா தாண்டவத்திற்கு ஸாக்ஷியாக இருப்பவள்.**

34-1. விரிந்து பரந்து மாபெரும் தோற்றத்துடன் காணும் அந்த உலகமும் ஒரு நாள் மறைந்துவிடுகிறது. அப்படி மறையும் நிலை பிரளயம். ப்ர-லயம் - சிறப்பான மறைதல். ஒன்றில் மற்றொன்று மறையும். மறையும் பொருள் சிறியது. மறைக்கும் பொருள் பெரியது. மறைவது, தன் உருவை இழந்து விடும். எதில் மறைகிறதோ அதன் உருவைப் பெற்றுவிடும். சில அம்சங்களால் மறைப்பு என்றில்லாமல் பூர்ண அளவில் ஏற்பட்ட மறைப்பு. பூர்ணமான உருக்குலைவும் பூர்ணமான வேறு உருவம் பெறுவதும் ஏற்படுவதால் இது மஹாப் பிரளயம். இந்தச் செயல் சீரிய முறையில் சிறப்பாக நிறைவேறுவதால், சிறந்த செயல் திறனைக்காட்டிச் செய்யப் பெறுவதால், மஹாகல்பம். ஈசுவரனைத் தவிர வேறு யாரும் இந்தச் செயலைச் செய்திருக்க முடியாது. அந்த மகேசுவரர் தான் நிகழ்த்திய இந்த மஹாப் பிரளயத்தைக் கண்டு மகிழ்ச்சி வெள்ளத்தில் மூழ்கினார். அதன் வினளவாக, உள்ளத்தின் மகிழ்ச்சிப் பெருக்கு தானே உடைத்துக்கொண்டு உடலில் பரவி வெளி வருவதனால் தாண்டவம் ஆடினார். ஆண் ஆடினால் தாண்டவம். பெண் ஆடினால் லாஸ்யம். அந்தத் தாண்டவத்தை ஒருவர் கண்டு களிக்கிறார் என்றறியும் போது தாண்டவம் உச்சநிலையை அடையும். அதனால் அது மகா தாண்டவமாயிற்று. அப்படிப் பார்த்துக் கொண்டிருப்பவள் தேவி. அவள் அந்தப் பிரளயத்தையும் அதன்பின் நிகழ்ந்த ஈச தாண்டவத்தையும் ஸாக்ஷியாக நின்று பார்த்தாள். ஒரு நிகழ்ச்சியைத் தொடங்கியது முதல் இறுதிவரை கூட இருந்து கவனித்து அறிந்தவனும், அதனது விளைவுகளால் பாதிக்கப்பெறாது ஒதுங்கியிருப்பவனும் ஸாக்ஷி. அத்தன்மை கொண்ட ஸாக்ஷியாக இருப்பவள் தேவி. அவர் மஹேச்வரன். அவர் நிகழ்த்திய மஹாப் பிரளயமெனும் மஹா கல்பம். அதன்பின் நிகழ்ந்த மஹா தாண்டவம். இதனின் ஸாக்ஷியான தேவியும் மஹாதேவிதான். மந்த மஹாப்ரளய காலத்திலும் அழிவுறாமல் மிகுந்திருந்து, மறைக்க வேண்டியதனைத் தையும் திரட்டித் தன்னிடத்தில் ஈசுவரன் மறைத்து வைப்பார். இதைத் திரோதானம் என்பர். (17.23.1) அதனைக் கண்காணித்துத் தான் மட்டுமே மீதமாக நிற்பவள் தேவி. (232)

**35. மஹா-காமேச - மஹிஷீ. பெருமைமிக்க காமேசனின் பட்டத்து ராணி.**

35-1. பிரும்மா, விஷ்ணு, ருத்திரன், ஈசுவரன் என்ற தன்னுடைய தோற்றங்கள் அதனதன் செயலைப் புரிந்துவிட்டுத் தன்னுள் அடங்கியதும் அந்த எல்லாமான தனது தனித்த ஸாம்ராஜ்யத்தில் (கைவல்யத்தில்) மஹா காமேசனாக விளங்கும் தன் அதிஷ்டானத்தில் ஒளிவிட்டுப் பிரகாசிக்கும் பட்டத்து ராணிபோல் ஸர்வ சக்தியான தேவி விளங்குகிறாள். (233)

**36. மஹாத்ரிபுரஸுந்தரீ. மகாத்திரிபுரத்தின் அழகி.**

36-1. அறிபவன், அறியப்படும் பொருள், அறிவு என்று முப்புரங்கள். ஒவ்வொன்றும் தனித்திருந்து சிறப்புப் பெறுவதால் புரம் (நகரம்) எனப்படும். ஆனால் அறிவு ஏற்படும் வவை தனித்திருந்த இவை அறிவது நிகழ்ந்ததும் ஒன்றாகிவிட்டன. அதனால் திரிபுரம் ஒரு தொகுப்பு. அறியப்படும் பொருளையொட்டியும் அறிபவனை ஒட்டியும் அறிவில் சிறிது பெரிது என்ற மாறுபாடு உண்டு. ஆனால் இந்த சிற்றறிவிற்கெல்லாம் ஆதாரமாகவும், காரணமாகவும் நிற்கும் பேரறிவு, அறியப்படும் பொருளையும் அறிபவனையும் ஒட்டி ஏற்றத்தாழ்வுகொள்ளாதது. அதனால் மஹாத்திரிபுரம் அது. அதன் நடுவே அதற்கு அழகூட்டும் ஸுந்தரியாக இருப்பவள் தேவி.

(நா.235-237)

चतुष्षष्ट्युपचाराढ्या चतुष्षष्टिकलामयी ।
महाचतुष्षष्टिकोटियोगिनीगणसेविता ॥ 58 ॥

**சதுஷ்ஷஷ்ட்யுபசாராட்யா சதுஷ்ஷஷ்டிகலாமயீ.**

**மஹாசதுஷ்ஷஷ்டி கோடியோகிநீ கணஸேவிதா. 58.**

**37. சதுஷ்ஷஷ்டி - உபசார- ஆட்யா. அறுபத்திநான்கு விதமான பணிவிடைகளைப் பெற்றுப் பெருமை கொண்டவள்.**

37-1. தேவியின் வழிபாட்டில் சிறப்பு மிக்கதொரு அம்சம், அறுபத்திநான்கு வகைப் பணிவிடைகளைத் தேவிக்குச் சமர்ப்பிப்பதே. மானஸமான பூஜையில் பணிவிடைகள் ஐந்து வகை. (4.11,12) வெளிப்படையான பூஜையில் பதினாறு வகை. தியானம், (ஆவாஹனம்), ஆஸனம், பாத்தியம், அர்க்க்யம், ஆசமநீயம், ஸ்நானம், வஸ்த்ர தாரணம், சந்தன- குங்குமதாரணம், அக்ஷததாரணம், ஆபரண தாரணம், புஷ்பதாரணம், தூபம், தீபம், நைவேத்யம், நீராஜனம், பிதரக்ஷிண நமஸ்காரங்கள் என. (ஆபரணதாரணம், பிரதக்ஷிண நமஸ்காரம்

இவ்விரண்டிற்கும் பதிலாக உபவீததாரணமும், மந்திரபுஷ்பமும் சிலர் செய்வர்). தேவி வழிபாட்டில் இவை 64 ஆக விரிகின்றன. இவைகளைச் செய்ய வசதி படைத்தவர்கள் அந்தந்த பொருளை அல்லது உபசாரத்தை தேவிக்கு ஸமர்ப்பணம் செய்யலாம். அப்படிச் செய்ய இயலாதவர்கள் மனத்தால் அவைகளைச் செய்வதாகப் பாவனை செய்து தேவியின் சரணத்தில் புஷ்பத்தையோ அக்ஷதையையோ ஜலத்தையோ விடுவது உண்டு.

37-2. உபசாரங்கள் - 64. தேவியை வரவேற்று அவளுக்குகந்த சிறந்த ஆசனத்தில் அமர்த்தியதும் 1. பாத்தியம் - திருவடிகளை அலம்ப நீா வாாப்பது. (இதனுள் கைகளையும் முகத்தையும் அலம்ப நீர் வார்ப்பதான அர்க்கியமும் ஆசமனீயதும் அடங்கும்) 2. ஆபரண - அவரோபணம் - திருவாபரணங்களைக் கழற்றி வைப்பது. 3. ஸீகந்தி தைல அப்யங்கம் - மணமுள்ள எண்ணெய்க் காப்பு செய்துகொள்வது. 4. மஜ்ஜந சாலாப் பிரவேசநம்- குளியலறையினுள் நுழைவது. 5. மஜ்ஜநசாலா மணிபீட - உபவேசநம் - குளியலறையிலுள்ள ரத்ன பீடத்தில் அமர்வது. 6. திவ்ய ஸ்நாநீய உத்வர்த்தனம்- வாசனைப் பொடிகளைத் தேய்த்துக்கொள்வது. 7. உஷ்ண உதக ஸ்நானம் - வெந்நீரில் ஸ்நானம் செய்வது. 8. கநககலசச்யுததீர்த்த அபிஷேகம் - தங்கக் குடங்களிலுள்ள கங்கை முதலிய புண்ய தீர்த்தங்களால் ஸ்நாநம். 9. தௌத வஸ்த்ர பரிமார்ஜநம் - காய்ந்த ஆடையால் துவட்டிக்கொள்வது. 10. அருண துகூலபரிதானம் - சிவப்புப் பட்டாடை அணிவது. 11. அருண குசோத்தரீயம்- சிகப்பு மேலாடைதரிப்பது. 12. ஆலேப மண்டப பிரவேசம். 13. மணி பீட உபவேசநம் - வாஸனை அறையில் சென்று ரத்தின பீடத்தில் அமர்வது. 14. சந்தன- அகரு- குங்கும-ம்ருகமத-கர்ப்பூர-கஸ்தூரி, கோரோசநாதி திவ்யகந்த ஸர்வாங்கீண விலேபநம் - சந்தனம், அகில், குங்குமப்பூ, ஜவ்வாது, பச்சைக்கர்ப்பூரம், கஸ்தூரி, கோரோசனை முதலிய நறுமணப் பொருளை உடலெங்கும் பூசிக்கொள்வது. 15. கேசபாரஸ்ய காலாகருதூபம்-கேசங்களில் அகிற்புகை காட்டுவது. 16. மல்லிகா-மாலதீ-ஜாதீ-சம்பக-அசோக-சதப்த்ர-பூக-குஹலீ-புந்நாக-கல்ஹாரமுக்ய ஸர்வர்து குஸும மாலா ஸமர்ப்பணம் - மல்லி, நித்யமல்லி, ஜாதி, சம்பகப்பூ,அசோகம், தாமரை, பாக்குப்பூ, குவளை, புன்னை, ஆம்பல் முதலிய எல்லா ருதுக்களிலும் கிடைக்கக்கூடிய பூமாலைகளை வழங்குவது. 17.பூஷண மண்டப ப்ரவேசம்-ஆபரணம் பூணும் அறையினுள் நுழைவதும். 18. பூஷண மண்டப மணிபீட உபவேசனம்- அங்குள்ள ரத்தின பீடத்தில் அமர்வது. ( அங்கு பின்வரும் அணிகளை வரிசையாக அணிவிப்பது) 19. நவமணி மகுடம் - ஒன்பது ரத்தினங்கள்

பதித்த கிரீடம். 20. சந்த்ர சகலம் - சந்திரனது பிறைவடிவமான நெற்றியணி 21.ஸீமந்தஸிந்தூரம் - வகிட்டில் சிந்தூரப் பொட்டு. 22. திலக ரத்னம் - நெற்றியில் பொட்டு. 23. காலாஞ்ஜனம் - கண்ணிற்கு மை. 24. வாலீ (பாலீ) யுகளம் - இரு காது மடல் அணிகள். 25. மணிகுண்டலயுகளம் - இரு ரத்தின குண்டலங்கள். 26. நாஸாபரணம் - மூக்குத்தி. 27. அதரயாவகம் - உதட்டுச்சாயம். 28. ப்ரதம பூஷணம்- மங்கள நாண். 29. கநக சிந்தாகம் - தங்க அட்டிகை. 30. பதகம் - பதக்கம். 31. மஹா பதகம் - பெரும் பதக்கம். 32. முக்தாவளி- முத்துச்சரம். 33. ஏகாவளி-27 முத்துகள் கோர்த்த ஒற்றை வடமுள்ள மாலை. 34. சந்ந வீரம்- பூணூல் போன்று இடது தோளிலிருந்து வலது விலாப்புறம் வரையிலும் வலது தோளில் இருந்து இடது விலாப்புறம் வரையிலும் தொங்கும் சங்கிலி. 35. கேயூர யுகள சதுஷ்டயம் - தோளின் மேலும் புஜத்திலும் தரிக்கும் நான்கு கைகளுக்கான கேயூர ஜோடிகள். 36. வளயாவளி- வளைகள். 37. ஊர்மிகாவளி - மோதிரவரிசை. 38. காஞ்சீதாம - ஒட்டியாணம். 39. கடிஸீத்ரம் - அரைஞாண். 40. ஸௌபாக்யாபரணம் - அரசிலை, அரைமூடி. 41. பாதகடகம் - கால் காப்பு. 42. ரத்நநூபுரம் - ரத்னப் பரல்கள் கொண்ட சிலம்பு. 43. பாதாங்குலீயகம் - கால் விரல் மோதிரம் 44. பாசம்- பாசாயுதம் (மேல் வலது கையில்). 45. அங்குசம் - துறட்டி ( மேல் இடது கையில்). 46. புண்ட்ரேக்ஷீசாபம் - கரும்பு வில் (கீழ் இடது கையில்) 47. புஷ்ப பாணம் - பூ அம்புகள் (கீழ் வலது கையில்). 48. ஸ்ரீமன் மாணிக்ய பாதுகே - ஒளிவிடும் சிகப்பு ரத்தினம் பதித்த இரு பாதுகைகள். 49. ஸ்வஸமான வேஷாபி: ஆவரண தேவதாபி : ஸஹமஹாசக்ராதிரோஹணம் - தனக்கொப்பான அணி முதலியவைகளை அணிந்த ஆவரண தேவதைகளுடன் மஹாசக்கிர பீடத்தில் அமர்தல். 50. காமேச்வர பர்யங்க உபசேவநம் - காமேசுவரரது மடியில் அமர்தல். 51. அமிருத ஆஸவ சஷகம் - அமிருதமாகிய மது நிரம்பிய கிண்ணம் தாங்குதல். 52. ஆசமநீயம் - வாய் அலம்ப நீர் வார்த்தல். 53. கர்ப்பூரவீடிகா - ஏலரிசி, கிராம்பு, பச்சைக்கர்ப்பூரம், கஸ்தூரி, குங்குமப்பூ, ஜாதிக்காய், ஜாதிப்பத்திரி, பாக்கு, வால்மிளகு, சுக்கு, சுண்ணாம்பு, கத்தக்காம்பு சேர்ந்த தாம்பூலம், 54. ஆநந்த உல்லாஸ விலாஸ ஹாஸம் - ஆனந்த எக்களிப்பை காட்டும் சிரிப்பு. 55. மங்களாரார்த்திகம் - மங்கள ஆரத்தி. 56. சத்ரம் - குடை. 57. சாமரம் 58. தர்பணம் - கண்ணாடி. 59. தானவ்ருந்தம் - விசிறி. 60. கந்தம் - சந்தனம். 61. புஷ்பம். 62. தூபம். 63. தீபம். 64. நைவேத்தியம். இவைகளில் சந்தனம், புஷ்பம், தூபம், தீபம், நைவேத்தியம் என்ற ஐந்து உபசாரங்களைச் செய்துவிட்டு மற்றவைகளைப் பாவனையால் ஸமர்ப்பணம் செய்யலாம்.

37-3. ஸ்ரீ சங்கர பகவத்பாதரது சதுஷ்ஷஷ்டி உபசார பூஜா ஸ்தோத்திரம் இந்த வரிசையில் அழகாகப் பணிவிடை புரிவதைத் தொகுத்து தருகிறது. பொருள் அறிந்து அதனைப் பாடிக்கொண்டே இவைகளைச் செய்வது மிகவும் ஆனந்தமாக இருக்கும். (235)

**38. சதுஷ்ஷஷ்டி - கலா- மயீ. 64. கலைகளாக இருப்பவள்.**

38-1. கலைகள் அறுபத்தி நான்கு. இவை எவை என்பதில் கருத்து வேறுபாடு உண்டு. பாஸ்கரராயர் தொகுத்துக் கொடுத்தவை பின்வருமாறு: 1. அஷ்டாதசலிபிபோதம் - 18 பாஷைகளின் எழுத்து அறிவது (ஸம்ஸ்கிருதம், பிராக்ருதம், உதீசீ, மஹாராஷ்டிரீ, மாகதீ, மிச்ரமாகதீ, சகாபீரீ, அவந்தீ, திராவிட, ஒட்ரீயா, பாச்சாத்யா, ப்ராச்யா, பாஹ்லீகா, ரந்திகா, தாக்ஷிணாத்யா, பைசாசீ, ஆவந்தீ, சௌரஸேநீ, என 18 பாஷைகள்) 2. எழுத்துகளை எழுதுவது, 3. எழுதியதைப் படிப்பது (இவை மூன்றும் எழுத்தறிவு), 4. பாஷை அறிவு. 5. கவிதை, 6. ச்ருதநிகிதா - ஒன்றிரண்டு தடவை கேட்டதும் அப்படியே ஞாபகத்துடன் திருப்பிச் சொல்வதும் அதனை மறக்காதிருப்பதும், (இவை மூன்றும் மொழி அறிவு) 7-10. வேதங்கள் (ருக்-யஜீஸ்ஸாம அதர்வவேதங்கள்) 11-14, உபவேதங்கள் (காந்தர்வம், ஆயுர்வேதம், தநுர்வேதம், அர்த்த சாஸ்திரம்). 15-20. சாஸ்திரங்கள் (நியாயம், வைசேஷிகம், ஸாங்கியம், யோகம் மீமாம்ஸை, வேதாந்தம்) 21-26. ஆறு வேதாங்கங்கள். (சிக்ஷா, வியாகரணம், சந்தஸ், நிருக்தம், ஜோதிஷம், கல்பம்) 27. தந்திர - புராண - இதிஹாஸங்கள் - ஸ்மிருதிகள். 28. காவியம், நாடகம், அலங்கார சாஸ்திரம். (7-28 வரை 22ம் நூலறிவு) 29-32. ரத-கஜ-அச்வ-நரசிக்ஷா-தேர்ப்படை, யானைப்படை, குதிரைப்படை, காலாட்படை இவைகளில் தேர்ச்சி. 33. ஸாமுத்ரிகம் - அங்க அடையாளங்களைக்கொண்டு வாழ்வின் ரகசியத்தைச் சொல்வது. 34.மல்ல வித்யை - உடற்பயிற்சி பெற்று மல்லச் சண்டை முதலிய போட்டிகளில் ஈடுபடுவது, 35. ஸூதம்- (ஸூபம்) சமையல், 36. காருடகம்-விஷ சிகித்ஸை, 37. சில்பம், 38. சித்திரம் (33 முதல் 38 வரை, தொழிற் பயிற்சி) 39-42. நான்கு வகை வாத்யங்களில் தேர்ச்சி, (புல்லாங்குழல் போன்று ஊதுவது, மிருதங்கம் போன்ற தோலாலானது, வீணை போன்ற நரம்பு அல்லது கம்பிகளாலானது, தாளம் போன்ற உலோகத்தாலானது), 43.வாய்ப்பாட்டு, 44.நிருத்தம் (இந்த ஆறும் சங்கீதக் கலைகள்). 45. இந்திரஜாலம், 46. சூதாட்டம் 47. திருட்டு, 48.அத்ருச்யத்வம் - கண்கட்டுவித்தை (இவை நான்கும் பிறரை ஏமாற்றப் பயன்படுபவை), 49. தாது பரீக்ஷை, (பூமியின் அடியில் உள்ள கனிகளை

ஆராய்வது) 50. ரத்ன பரீக்ஷை, 51. ரஸவாதம் - மட்டமான உலோகத்தைத் தங்கம் முதலிய உயர்ந்த உலோகமாக்குவது, அழியும் உடலை அழியாமற் செய்வது, 52-57. மந்திர சித்தியால் பிறரது மனப்போக்கை மாற்றுவது முதல் அழிப்பது வரை உள்ள அபிசார கர்மங்கள். அவையாவன:சாந்தி - மன அமைதியைத் தருவது, மனத்தை வசியம் செய்வது, ஆகர்ஷணம் - பிறரிடமுள்ள பூதப்ரேத பிசாசங்களை வெளியேற்றுவது ; வித்வேஷணம் - நண்பரை விரோதியாக்குவது; உச்சாடனம் - பூதம் முதலியவற்றைப் பிறர் மேல் ஏவி விடுவது; மாரணம் - உயிர்க்கு ஆபத்து விளைவிப்பது-இந்த ஆறையும் மந்திரவாதம் என்பர். 58-64. ஸ்தம்பன வித்யைகள் - யோக சித்தியால் இயற்கை இயக்கங்களைத் தடை செய்வது. அவையாவன; கதிஸ்தம்பம் - நடையை முடக்குவது, அசையை நிறுத்துவது, ஜலஸ்தம்பம் - ஜலத்தின் மேல் நிற்பது, நடப்பது ; விருஷ்டி ஸ்தம்பம் - மழையைத் தடை செய்வது; அக்கினி ஸ்தம்பம்-நெருப்பு சுடாதபடி செய்தல்; ஆயுத ஸ்தம்பம் -கத்தி முதலியவை பாயாது தடுப்பது; வாக் ஸ்தம்பம் - பேச்சை முடக்குவது; ரேதஸ் ஸ்தம்பம் - பெண்ணுடன் உறவு கொள்ளும் போது இயந்திரியம் நழுவாது தடை செய்தல். இந்த ஏழும் ஸ்தம்ப வித்யைகள். இப்படி 64 கலைகளைக் கணக்கிடுகிறார் பாஸ்கர ராயர்.

38-2. இவைகளில் 7-28 வரை உள்ள நூலறிவு பெறப் பயன்படும் வேதங்கள், உபதேசங்கள், வேதாங்கங்கள், சாஸ்திரங்கள், இதிஹாஸ புராணங்கள் காவியம் முதலியவற்றை வித்யா ஸ்தானங்கள் என்று சிலர் தனித்துப் பிரித்தனர். பிழைப்பிற்காகவோ மனத்திற்கு உல்லாசமளிப்பதற்காகவோ அறிய வேண்டியவற்றை மட்டும் கலை எனும் பிரிவில் கொண்டனர். அதன்படி சிலவற்றைச் சேர்த்தும் சிலவற்றை விலக்கியும் தத்தம் போக்கில் பல்வேறு விதமாக 64 கலைகளைக் கணக்கிட்டுள்ளனர். பாஸ்கர ராயர் குறிப்பிட்ட கலைகளில் சேராமல் மற்றவர்களால் அவ்விதம் குறிப்பிடப்பட்ட சில கலைகள் பின்வருமாறு; 1. கணகம் (கணக்கு) 2. வியவஹாரம் (நீதித்துறை - வழக்காடுதல்) 3. ஸ்வர சாஸ்திரம் (மூச்சு இழுத்துவிடும் போது மூச்சின் நிலையிலிருந்து வரப்போவதை அறிதல்) 4. சகுனம் (பட்சி சாஸ்திரம், பிரயாணம் முதலியவற்றைத் திட்டமிட்டதும் முதலில் தென்படும் வானில் பறக்கும் பட்சிகளைக்கொண்டு பலன் ஆராய்தல்) 5. பூருஹ விஜ்ஞானம் (மரம், செடி, கொடி, பயிரிடுதல், உரம் முதலியன) 6. கந்தவாதம் (மணப்பொருள் சேர்க்கை தயாரிப்பு) 7. பிலவாதம் (பூமியினுள் மறைந்துள்ள செல்வங்களை ஆராய்வது) 8. குடிகாசித்தி (ரஸவாதத்தால் தயாரித்த மாத்திரையை வாயினுள் அடக்கி ஆகாயம் வழியே செல்லுதல் போன்ற சித்திகளைப் பெறுதல்) 9.ஸ்வரவஞ்சனம். (பிறரது குரலில் பேசிப் பழகி

அதனால் ஏமாற்றுதல்) 10. மணி - மந்திரம் எனும் சிகித்ஸை. (நோய் தீர்க்கச் சில ரஸமணிகளைத் தயாரித்துக் கட்டிக்கொள்ளுதல், மந்திரத்தால் நோய் தீர்த்தல்) 11. லோஹக்ரியா (கருமார் தொழில்) 12. அச்மக்ரியா (கல் தச்சு) 13. மிருத்க்ரியா (குயவர் தொழில்) 14. தாருக்ரியா (மரத்தச்சு) 15. வேணுக்ரியா (மூங்கிலைக்கொண்டு பொருட்களை தயாரித்தல்) 16. சர்மக்ரியா (தோல் பொருள் தயாரித்தல்) 17. அம்பரக்ரியா (நெசவு) 18. மிருகயா (வேட்டை) 19. பரகாயப்பிரவேசம் (கூடுவிட்டுக் கூடு பாய்தல்) 20. பாதுகாஸித்தி (காலணிகளை மந்திரத்தால் தயாரித்து அதன் மேலேறி இஷ்டம்போல் சுற்றுதல்) 21. ஸீவநம் (தையல்) 22. ரங்கபரிஜ்ஞானம் (வர்ணக் கலவை தயாரித்தல்) 23. மாநவிவேகம் (அளக்கும் கருவிகள், விஞ்ஞானக் கருவிகள் தயாரித்தல்) 24. ஆஜிவிஜ்ஞானம் (புதிது புதிதாக பிழைப்பிற்கான தொழிலைக் கண்டுபிடித்தல். 25. கர்மாசிரயம் (தொழிற்சாலை நிறுவுதல்) 26. புஸ்தககர்ம (நூல் எழுதி வைத்தல்) 27. க்ரீடா கௌசலம் (விளையாட்டுத்துறை) 28. லோகஜ்ஞானம் (அரசியல்) 29. ஸம்வஹனம் (உடலைப் பிடித்துவிடுதல்) 30. சயநோபசாரம் (சிற்றின்ப சுகத்தைத் தரும் பொருள்கள் தயாரிப்பு) இப்படிப் பல கலைகள்-கலைகளாகவே கற்க வேண்டியவை. போஜன் இயற்றிய ஸமாரங்கண ஸூத்திரம் முதலியவற்றில் மற்றும் பல்வேறு விஞ்ஞானத் துறைகள் கலை என்ற தலைப்பில் கொடுக்கப்பட்டு உள்ளன. இந்தக் கலைகளைத் தன் வடிவமாகக் கொண்டவள்.

38-3. கலைகள் எனத் தந்திரங்களைக் குறிப்பிடுவதும் உண்டு. நித்யாஷோடசிகார்ணவம் எனும் நூலில் அவைகளின் பெயர்கள் காணப்படுகின்றன. 1. மஹாமாயா, 2. சம்பரம், 3. யோகிநீ, 4. ஜாலசம்பரம், 5. தத்வசம்பரம், 6. பைரவாஷ்டகம், 7. ப்ராம்ஹீ, 8. மாஹேச்வரீ, 9. கௌமாரீ, 10. வைஷ்ணவீ, 11. வாராஹீ, 12. மாஹேந்த்ரீ, 13. சாமுண்டா, 14. சிவதூதீ, 15. ப்ரும்ஹயாமளம், 16. விஷ்ணுயாமளம், 17. ருத்ரயாமளம், 18. லக்ஷ்மீயாளம், 19. உமாயாமளம், 20. ஸ்கந்தயாமளம், 21. கணேசயாமளம், 22. ஜயத்ரதயாமளம், 23. சந்திரஜ்ஞானம், 24. வாஸுகி, 25. மஹாஸம்மோஹனம், 26. மஹோச்சுஷ்யம், 27. வாதுலம், 28. வாதுலோத்தரம், 29. ஹிருத்பேதம், 30. தந்த்ரபேதம், 31. குஹ்யதந்த்ரம், 32.காமிகம், 33. கலாவாதம், 34. கலாஸாரம், 35. குப்ஜிகாமதம், 36. தந்த்ரோத்தரம், 37. வீணா தந்திரம், 38. த்ரோதலம், 39. த்ரோதலோத்தரம், 40. பஞ்சாமிருதம், 41. ரூபவேதம், 42. பூதோட்டாமரம் 43. குலஸாரம், 44. குலோட்டீசம், 45.குலசூடாமணி

46. ஸர்வஜ்ஞானோத்தரம், 47. மஹாகாளீமதம், 48. மஹாலக்ஷ்மீமதம், 49. ஸித்த யோகீச்வரீமதம், 50. குருபிகாமதம், 51. தேவரூபிகாமதம், 52. ஸர்வவீரமதம், 53. விமலாமதம், 54. பூர்வாம்நாயம், 55. பச்சிமாம்நாயம், 56. தக்ஷிணாம்நாயம், 57. உத்தராம் நாயம், 58. நிருத்தராம்நாயம், (ஊர்த்வாம்நாயம்) 59.வைசேஷிக தந்த்ரம், 60. ஞானார்ணவம், 61. வீராவளி, 62. அருணேசம், 63. மோஹினீசம், 64. விசுத்தேச்வரம் என. இந்த தந்திரங்களைத் தன் வடிவமாகக் கொண்டவள் தேவி.

## 39. மஹா-சதுஷ்ஷஷ்டி - கோடி - யோகிநீ - கண - ஸேவிதா. அறுபத்தினான்கு கோடி யோகினி கணங்களால் பணிவிடை செய்யப் பெற்றவள்.

39-1. பிராம்மீ, மாஹேச்வரீ, கௌமாரீ, வைஷ்ணவீ, வாராஹீ, மாஹேந்த்ரீ, சாமுண்டா, மஹாலக்ஷ்மீ, சாமுண்டா, மஹாலக்ஷ்மீ, என எட்டு மாதாக்கள் பிரகட யோகினிகளாக ஸ்ரீ சக்கிரத்தில் சதுரச்ரத்தின் நடு ரேகையில் வசிக்கிறார்கள். (9.10.21) இவர்கள் ஒவ்வொருவருக்கும் எட்டு யோகினிகள் என்பர். இவர்கள் ஒவ்வொருவருக்கும் ஒரு கோடி யோகினிகள் பரிவாரங்களாக உள்ளனர். இப்படி 64 கோடி யோகினிகளால் பணிவிடை செய்யப்பெற்றவள் தேவி.

39-2. இந்த யோகிணிகள் ஒவ்வொரு சக்கிரத்திலும் விளங்குகின்றனர். 9 ஆவரணங்களாக உள்ள 9 சக்கிரங்களிலும் 64 கோடியாக 576 கோடி யோகினிகளாவர். ஒன்பது என்பதை மஹா என்று ஸங்கேத மொழியில் குறிப்பிடுவர். மஹா 9 மடங்கான சதுஷ்ஷஷ்டி கோடி - 64 கோடி (576 கோடி) யோகிநீ கணங்களால் ஸேவிக்கப் பெற்றவள் என்றும் பொருள் கூறுவது உண்டு.

39-3. பாஸ்கர ராயலைப் பற்றிய ரஸமுள்ள வரலாறு கூறப்படுவது உண்டு. காசியில் பாஸ்கர ராயர் கௌல மார்க்கத்தில் மஹா யாகம் எனும் சிறந்த வழிபாட்டை ஏற்படுத்தி அதில் பங்கு கொள்ளுமாறு காசியிலுள்ள தேவீ பக்தர்களையும், பண்டிதர்களையும் அழைத்தார். குங்குமாநந்தர் என்ற யோகியைத் தலைவராகக் கொண்டு பண்டிதர்கள் அந்த வேள்வியில் பார்வையாளர்களாகக் கலந்துகொண்டனர். குங்குமானந்த யோகி பாஸ்கர ராயரது வழிபாட்டின் உயர்வைக் கண்டு மகிழ்ந்து தேவியின் அருள் வெளிப்படுகின்ற அந்த வேள்வியில் தான் கலந்து கொண்டதில் திருப்தி அடைந்தார். பொறாமையில் மதியிழந்த சில பண்டிதர்கள் பாஸ்கரராயரை வாதுக்கழைத்தனர். மஹா சதுஷ்ஷஷ்டி கோடி யோகிநீ கணஸேவிதா

என்ற நாமத்தில் குறிப்பிட்ட யோகினிகள் யாவர்? அவர்கள் பெயர் என்ன? என்று கேள்வி எழுப்பினர். மஹா யாகத்தில் யோகினிகளின் வழிபாடு முக்கியமானது. அவர்களைப் பற்றி அறியாமலேயே மஹாயாகப் பணிகளில் இறங்கியதாக அவரை அவமதிப்புக்குள்ளாக்க நினைத்தே இக்கேள்வியைக் கேட்டனர். பாஸ்கர ராயர் உடனே யோகினிகளின் பெயர்களைக் குறிப்பிடுவதாகக் கூறி அவைகளை எழுதிக்கொள்ளச் சொன்னார். பல்லாயிரக் கணக்கான ஸஹஸ்ரநாமங்களின் விரிவுக்கொப்பான விரிவு கொண்ட அந்தப் பெயர் பட்டியல் பாஸ்கரர் வாயிலிருந்து தங்கல் தடையின்றி வந்து கொண்டிருந்தது. சில நொடிகளிலேயே பெயர் எழுதிக் களைந்த பண்டிதர்கள் அதனை நிறுத்திவிடக் கோரினர். இதை ஞான திருஷ்டியின் மூலம் கவனித்து வந்த குங்குமானந்தர், பாஸ்கரரின் தோளில் தேவி அமர்ந்து தானே பாஸ்கரர் வாய் வழியே யோகினிகளின் பெயரைச் சொல்லி வருவதைக் கண்டு, அங்கேயே தலையால் விழுந்து வணங்கிக் கண்ணீர் மல்க நின்றார்.

குங்குமானந்தர் கண்டு மகிழ்ந்த தேவியின் தோற்றத்தைத் தானும் காணவேண்டுமெனப் பிடிவாதம் பிடித்த நாராயண தீர்த்தர் என்பவல் பாஸ்கரரது கருணையால் அதனைப் பெற்றார். ஆனால் அவர் உடனே கண் பார்வை இழந்தார். பாஸ்கரரது பூஜா தீர்த்தம் பெற்றுக் கண்களைத் துடைக்க மீண்டும் பார்வை பெற்றார்.

பாஸ்கரர் தேவியைப் பற்றிய ரகசியமான பல விபரங்களை அறிந்தவரானாலும் தமது உரையில் சிலவற்றை மட்டும் மிக விளக்கமாகக் கூறிவிட்டுக் குருவினிடமிருந்து அறிந்துகொள்ளத் தக்கவை என்று சிலவற்றை குறிப்பிட்டிருக்கிறார் என்பதனைக் காணும்போது மந்திர சாஸ்திரம், மந்திரத்தை மந்திரமாகக் காப்பாற்றி வந்துள்ளதையும் அப்படிக் காப்பாற்றுவதன் அவசியத்தையும் உணர முடியும்.

(நா. 238 - 243)

मनुविद्या चन्द्रविद्या चन्द्रमण्डलमध्यगा ।
चारुरूपा चारुहासा चारुचन्द्रकलाधरा ॥ 59 ॥

**மநுவித்யா சந்த்ரவித்யா சந்த்ரமண்டலமத்யகா**
**சாருரூபா சாருஹாஸா சாருசந்த்ரகலாதரா.**

### 40. மநு - வித்யா. மநுவால் உபாசிக்கப்பட்ட வித்யை.

40-1. ஸ்ரீவித்யை பன்னிரு உபாசகர்களால் முதலில் உபதேசிக்கப் பெற்றது. அவர்கள் உபதேசித்த பன்னிரு வித்யைகளும் வேறுபட்டவை. இந்த உபாசகர்களை ருஷிகள் என்பர். ( மந்த்ரத்ரஷ்டா - மந்திரத்தைக் கண்டவர் ருஷி ). இந்த வித்யை ஒவ்வொன்றும் அதனை உபதேசித்த ருஷியின் பெயரைத் தன் பெயராகக் கொண்டவை. மனுவால் உபாசிக்கப் பெற்றதும் உபதேசிக்கப் பெற்றதுமான வித்யையாயிருக்கும் தேவி மனு வித்யை.

40-2. மனு, சந்திரன், குபேரன், லோபாமுத்திலை, அகஸ்தியர், மன்மதன், அக்னி, ஸீர்யன், இந்திரன், ஸ்கந்தன், சிவன் குரோதபட்டாரகர் எனப்படும் துர்வாசர் ஆகிய இவர்களே பன்னிருவர். இவர்களோடு மற்றும் விஷ்ணு, பிரும்மா, நந்தி ஆகிய மூவரும் ஸ்ரீவித்யையைக் கண்டுபிடித்தவர்களாகக் குறிப்பிடப் பெறுகின்றனர். (33.29). மஹேச - மாதவ- விதாத்ரு - மந்மத - ஸ்கந்த - நந்தி - இந்திர - மநு - சந்திர - குபேர - அகஸ்திய - க்ரோத பட்டாரகவித்யாத்மிகே (தேவீகட்கமாலா) அந்த நாமம் மனுவைக் குறிப்பிடும் நாமங்கள், 231, 239, 297,305, 359, 375, 406, 558, 586, 647, 715, 720, 733, 785, ஆகும்.

### 41. சந்த்ர - வித்யா. சந்திரனால் உபாசிக்கப்பெற்ற வித்யை.

41-1. ஸ்ரீவித்யோபாசகர்களில் ஒருவரான சந்திரனால் உபாசிக்கப் பெற்றதும், உபதேசிக்கப் பெற்றதுமான வித்யையாய் இருப்பவள்.

### 42. சந்த்ர - மண்டல - மத்யகா. சந்திர மண்டலத்தின் நடுவில் இருப்பவள்.

42-1. சந்திர மண்டலம்- சந்திரனின் வட்ட வடிவம். பௌர்ணமியன்று சந்திர மண்டலத்தின் நடுவிலிருப்பவளாகத் தேவியைத் தியானித்து ஸஹஸ்ரநாமத்தைப் பாராயணம் செய்வது ரோகங்கள் விலகவும் நீண்ட ஆயுள் பெறவும் உதவுகிற ஆயுஷ்கரப் பிரயோகம். (32.4) சந்திரமண்டலம் - ஸ்ரீசக்கிரம், சந்திர கண்டம் ( விசுத்தி, ஆஜ்ஞை என்ற இரு சக்கிரங்கள்). ஸஹஸ்ராரத்தில் சந்திரனின் ஸாதா கலை உள்ள இடம். தேவி இவ்விடங்களில் வசிக்கிறாள். (12.11.2, 12.16.2)

### 43. சாரு - ரூபா. அழகிய உருவமுள்ளவள்.

43-1. ஸுந்தரீ, லலிதா, திரிபுரசுந்தரீ முதலான நாமங்களால் தனித்துத் தேவியின் அழகு பாராட்டப்பெறுகிறது. அழகே தெய்வ வடிவம் கொண்டதா, தெய்வமே அழகு வடிவம் கொண்டதா என்றறிய முடியாத அளவிற்கு அழகானவள் தேவி.

**44. சாரு - ஹாஸா. அழகிய சிரிப்புள்ளவள்.**

44-1. "ஹாஸோ ஜநோந்மாதகரீச மாயா ". தெய்வத்தின் சிரிப்பு மக்களின் மனத்தை மயக்கும் மாயை. "ஹாஸ: பரமாநந்தப்ரத: ப்ரபோத:" 'தெய்வத்தின் சிரிப்பு பரமானந்தமளிக்கும் தெளிந்த அறிவு'.மனத்திற்கு மயக்கமும் ஆனந்தமும் அறிவுத் தெளிவும் தரவல்ல அழகிய சிரிப்பு உள்ளவள்.

**45. சாரு - சந்த்ர - கலா- தரா. அழகிய சந்திரகலையைத் தரிப்பவள்.**

45-1. தேய்வும், வளர்ச்சியும் மாறி மாறி அமையாமல், அழிவற்ற பூரண நிலையில் உள்ள ஸாதா எனும் சந்திரகலை. சாரு- மிக அழகானது. சித் எனும் தேவியின் பேரறிவு வடிவமே இந்தக் கலை. இதைத் தேவி சிரசில் தரித்துக்கொண்டிருக்கிறாள்.

45-2. சந்திரகலை எனும் அழகி, தனக்குக் கணவனாக வர இருப்பவன் தேவியை வழிபடும் ஸுதர்சனன் என ஸ்வப்னத்தில் தேவி கூறியதால் அதனை நம்பி ஸுதர்சனனை மணந்தாள். (தேவீ பாகவதம்) அந்த அழகியான சந்திரகலையைத் தாங்கி வாழ்க்கையில் மேம்பாடடையச் செய்தவள். (243)

(நா. 244 - 248)

**चराचरजगन्नाथा चक्रराजनिकेतना ।**
**पार्वती पद्मनयना पद्मरागसमप्रभा ॥ 60 ॥**

**சராசரஜகந்நாதா - சக்ரராஜநிகேதநா.**

**பார்வதீ பத்மநயநா பத்மராகஸமப்ப்ரபா. 60**

**46. சர - அசர- ஜகத் - நாதா. அசைவதும் அசையாததுமான உலகிற்குத் தலைவி.**

46-1. இயக்கமே வடிவான ஸூக்ஷ்ம உலகம் கண்ணிற்குப் புலப்படாதது. இயக்கமில்லாத ஜட உலகம் புறத்தோற்றமுள்ளது. இரண்டின் வடிவமாயிருப்பவள். (244)

**47. சக்ர - ராஜ - நிகேதநா. ஸ்ரீசக்கிரத்தைத் தன் இருப்பிடமாகக் கொண்டவள்.**

47 - 1. த்ரைலோக்ய மோஹனம் முதலான ஒன்பது சக்கிரங்களால் அது விளங்குவதால் சக்ரராஜம். மற்ற யந்திரங்களாகிய சக்கிரங்களுக்குள் சிறப்பு மிக்கதும்கூட. அதனை இருப்பிடமாகக் கொண்டவள். (245)

**48. பார்வதீ. மலையரசனின் பெண்.**

48 - 1. மலையைத் தகப்பனாக்கி அவருக்குப் பெருமை தருவதற்கே பெண்ணாகத் தோன்றியவள். (நா. 634, 956) (246)

49. பத்ம நயநா.தாமரை இதழுக்கொப்பான கண்கள் உள்ளவள்.

49 - 1. அன்பும், பரிவும், புன்சிரிப்பும் நிறைந்து தாமரை இதழ் போன்று நீண்டு சிவந்து குளிர்ச்சியும், ஈர்ப்பும், இனிமையும் அழகும் கொண்ட கண்கள் உடையவள். (247)

50. பத்ம ராக ஸம ப்ரபா. பத்மராகத்திற்கொப்பான ஒளியுள்ளவள்.

50 - 1. பத்மராகம் - தாமரை நிறமுள்ள ரத்தினம், அதனுக் கொப்பான மேனி ஒளியுடன் கூடியவள். பத்மம் - தாமரை. அதன் சிவப்புடன் ஒத்த செவ்வொளி கொண்டவள். (248)

* * *

அதிகாரம் - 17

## தேவியின் ஐந்தொழிலும் ஜீவ - ஈசுவர வடிவமும்

(நா. 249 - 255)

पञ्चप्रेतासनासीना पञ्चब्रह्मस्वरूपिणी ।
चिन्मयी परमानन्दा विज्ञानघनरूपिणी ॥ 61 ॥
ध्यानध्यातृध्येयरूपा धर्माधर्मविवर्जिता ।

**பஞ்சப்ரேதாஸநாஸீநா பஞ்சப்ரம்ஹஸ்வரூபிணீ**
**சிந்மயீ பரமாநந்தா விஜ்ஞாநகநரூபிணீ.**
**த்யாநத்யாத்ருத்யேயரூபா தர்மாதர்மவிவர்ஜிதா.**

### 1. பஞ்ச - ப்ரேத - ஆஸந - ஆஸீநா. ஐந்து பிரேதாங்களாலான ஆஸனத்தில் அமர்ந்திருப்பவள்.

1 – 1. பிரும்மா, விஷ்ணு, ருத்திரன், ஈசுவரன், ஸதாசிவன் என்ற ஐவரும் பிரும்மத்திலிருந்து தோன்றியவர்கள். தேவி தனது ஐந்து தொழில் புரியும் சக்தியை இவர்களுக்குப் பகிர்ந்தளித்துள்ளாள். தேவியின் ஆணைப்படி இவர்கள் படைத்தல், காத்தல், ஒடுக்குதல், திரோதானம், அநுக்கிரஹம் எனும் ஐந்து தொழில்களைப் புரிகின்றனர். மஹாப்பிரளயம் ஏற்பட்டதும் இந்த ஐந்து தொழில்களிலிருந்தும் விடுபட்டுத் தேவியிடம் (பிரும்மத்திடம்) லயித்து விடுவார்கள். அவர்கள் அடையும் லயமாவது – ஸதாசிவன் தேவி அமர்ந்துள்ள ஆஸனத்தின் மேம்பலகையாகிறார்; மற்ற நால்வரும் அதன் நான்கு கால்கள் ஆகிறார்கள். அவர்கள் தத்தம் நிலையை விட்டுத்தேவியிடம் லயமடையக் கிளம்பிச் சென்றவர்களாத லாலும் மற்றொரு நிலையைஅடைந்தாலும் பிரேதர்கள். ப்ர – இத: – ஓரிடத்தை விட்டு மற்றோர் இடத்தை அடையக் கிளம்பியவர்ஸ்ரீ (9.7.1, 17.2.1, 30.46.1) (249)

### 2. பஞ்சப் ப்ரம்ஹ ஸ்வரூபிணீ, ஐந்து பிரும்ம ஸ்வரூபத்தை உடையவள்.

2 – 1. ஆஸனமாக அமைந்த ஐந்து பிரம்மங்களாகவும் இருப்பவள் தேவியே. (9.7.1.1–2) பிரும்மத்திலிருந்து தோன்றி ஐந்து தொழில் புரிகின்ற ஐந்து பிரும்மங்களைத் தனது வடிவமாகக் கொண்டவள் தேவி. (17.2.1)

2 – 2. ஈசாநர், தத்புருஷர், அகோரர், வாமதேவர், ஸத்யோஜாதர் என ஐந்து சிவனது தோற்றங்களையும் பஞ்சப் பிரும்மம் என்றுகுறிப்பிடுவ துண்டு. இதை ஐந்து பிரும்மஸ்வரூபத்தில் விளங்குபவள் தேவி.

2 – 3. க்ஷேத்ரஜ்ஞன், பிரகிருதி, புத்தி, அஹங்காரம், மனம் என்கிற ஐந்தும் பிரும்ம வடிவும், ஆதியான ஐந்து பூத தன்மாத்திரங்கள் பிரும்ம வடிவம் அந்த வடிவில் அமைந்தவள்.

2 – 4. நாராயணன், வாஸுதேவன், பிரத்யும்நன், அநிருத்தன், ஸங்கர்ஷணன் என்ற ஐந்து தோற்றங்களில் விஷ்ணு (எங்கும் நிரம்பியிருக்கும் பரம் பொருள்) உலகைக் காக்கிறது. (கருட புராணம்) அந்த ஐந்து வடிவங்களாயிருப்பவள். (250)

**3. சிந்மயீ. சித்தாக உள்ளவள்.**

3 - 1. சித் - பேரறிவு. தனித்த பேரறிவாக இருப்பவள். இந்தப் பேரறிவில் அறிபவன், அறியப்படும் பொருள், அறிவு என்ற முப்புரம் கிடையாது. முப்புர அறிவிற்கும் காரணமான அறிவாகி நிற்கும் பேரறிவே தேவி.

3 - 2. பேரறிவும் சிற்றறிவும், உலகைக் கண்கள் முதலிய பொறிகளும் மனமும் நமக்கு அறிமுகப் படுத்துகின்றன. இந்த உலகத்தைக் காண்டல் கேட்டல் தீண்டல் முதலிய உணர்ச்சிகளால் உணர்வது அறிவாகும். உணரப்பெறுவது உலகம். உணர்வு சித்சக்தியாகிக அறிவு. இந்த உணர்விற்குக் கண்கள் முதலான பொறிகளும் மனமும் ஜன்னல்கள். இந்த ஜன்னல்கள் மூலம் வெளிவராத அறிவுதான் பேரறிவு - சித் சக்தியாகும். அது அறிவின் மூலம் பேரூற்று. அந்த அறிவு எனும் மூலப்பொருள்தான் மனம் வழியேவெளியாகிப் பார்ப்பது கேட்பது போன்ற குறுகிய உணர்வைப் பெறும்போது அறிவின் பேராற்றல் குறுகிச் சிறுத்துச் சிற்றறிவாகி விடுகிறது. சிற்றறிவை ஸாகாரஞானம் ஸம் வித் என்பர். விழிப்பு நிலையிலும் கனவு நிலையிலும் இந்தச்சிற்றறிவைக் காணலாம். மனமும் கண் முதலியவைகளும் அறிவில் குறுக்கிட்டு அதன் பெருமையை முழுவதும் வெளிப்படாதவாறுதடை செய்கின்றன. இந்த ஸாகார ஞானமும் சித் சக்தியே. ஆனால் அதன் முழுத் தோற்றமல்ல. தூங்கும் போது மனமும் பொறிகளும் இயங்காதபோது வெளிப் பொருளைத் துலக்குகின்ற சிற்றறிவாக இராமல், பேரறிவாக எங்கும் பரவி நிற்பதே பேரறிவு. இதை ஞானி புலனடக்கத்தால் பெற்ற ஸமாதி நிலையில் உணர்கிறான். இது வெளிப் பொருளல்லாததால் வேறொன்றால் அறிய முடியாது. வெளிச்சத்தால் உலகைக் காண்கிறோம். வெளிச்சத்தைத் தனித்து நாம் பார்ப்பதில்லை. வெளிச்சத்தால் காணும் உலகைக் கொண்டு வெளிச்சமிருப்பதை உணர்கிறோம். புற உலகத் தோற்றம் மறைந்தால்தான் வெளிச்சத்தைக் காணமுடியும். அதுபோல மறைந்தால் அறிவை உணர முடியும். ஞானி இதனைக் காண்கிறான். உலகின் இயக்கமும் தனி மனிதனின் இயக்கமும் இதனைச் சார்ந்ததே. தேசத்திற்கும் காலத்திற்கும் வேறு எதற்கும் கட்டுப்படாத பேராற்றல் அது.

3 - 3. நான் குடத்தைப் பார்க்கிறேன். குடத்தைப் பார்த்த அறிவு எனக்கு ஏற்பட்டது. கண்ணால் நுகர்ந்த குடம் வெளியே உள்ளது. இது விஷயம் - ஜடம். அறிவால் உணர்ந்த குடம் உள்ளே உள்ளது. இது

ஜ்ஞேயம். இது அறிவு கலந்தது. இரண்டும் ஒன்றல்ல. என மனத்தால் கண்ட குடத்தில் என் முன் வினை வாஸனைகள், மனம், கண்கள், இவற்றால் ஏற்பட்ட பாதிப்புகள் அதனை மாற்றி உருவகப்படுத்துகின்றன. அதனால் வெளியில் தெரிந்த குடம் (விஷயம்) என்பதைக் காட்டிலும் அதிகமாக சிறிது - பெரிது, அழகானது - அழகற்றது, விரும்பியது - வெறுத்தது, சுகம் தருவது - துன்பம் தருவது என்றவாறு பல உணர்வுகளுடன் கலந்தே நுகரப்பட்டுள்ளது. இது சுத்தமான அறிவல்ல, கலப்புள்ளது. குடத்தைப் பார்த்தேன் என்ற இந்த சிற்றறிவு அந்தப் பேரறிவின் ஓரம்சமே. அந்தப் பேரறிவில் இந்தக் கலப்புகள் ஒன்றுமில்லை. அதனைப் புறச் சாதனங்களால் உணர முடியாது.

3 - 4. வெளிச்சம் அறை முழுவதும் பரிவியுள்ளது. அந்த வெளிச்சத்தால் துலங்கக்கூடிய பொருள் அனைத்தும் அந்த வெளிச்சத்தின் உள் அடங்குபவை. வெளிச்சமின்றித் தோற்றமில்லை. நமக்குள் எல்லா சக்திகளுக்கும் மூலப் பேருற்றாக விளங்குகின்ற சித்சக்தியே இத்தனை விரிந்த - பலவாறாகப் பிரிந்த உலக அறிவாக வெளிப்படுகின்றது. இந்த உலகைக் காட்டாத வெளிச்சமும் தனித்து உண்டு. அதுவே சித் சக்தி. அது எப்போதும் எதனையும் துலக்குவதுமில்லை. மறைப்பதுமில்லை. அதன்மூலம் நாம் மனமும் பொறிகளுமாகி உலகை உணர்கிறோம். அதன் உதவியின்றி உலகை உணர முடியாது. அதன் ஸ்ப்புரணம் என்ற இயக்கமில்லாவிடில் உலகமே இல்லை. தானேதன்னைத் துலக்கிக் கொண்டு, உலக இயக்கத்திற்கு மூலமாக உள்ள அந்த மாபெரும் சக்தியே, பேரறிவு, பேரொளி, பேரானந்தம், பேரிருக்கை, ஸத் சித் ஆனந்தம் என்றவாறு பல பெயர்களில் அறிமுகப்படுத்தப்படுகின்றது. இதனையே 362, 364, 416, 417, 574, 700, 728 நாமங்களில் வேறு முறையில் விளக்குகிறார்கள். (251)

**4. பரம - ஆநந்தா. உயர்ந்த ஆனந்தமாயிருப்பவள்.**

4 - 1. துண்டாடப்படுவதும் துண்டாயிருப்பதும் (கண்டம்) நிறைவால் ஏற்படும் ஆனந்தத்தைத் தராது. அகண்டமான நிறைவுள்ள பொருள்தான் நிறைவாகிய ஆனந்தத்தைத் தரும். நிறைவேதான் ஆனந்தம். குறைவே துக்கம். நிறைவே வடிவான தேவிநிறைவாகிய உயர்ந்த ஆனந்தமா யிருக்கிறாள். (நா. 365) (252)

**5. விஜ்ஞான - கன - ரூபிணீ. நெருக்கம் மிக்க அறிவின் வடிவானவள்.**

5 – 1. **பிரஜ்ஞானம்** – பேரறிவு; நிராகாரஞானம் – வடிவ வரம்பிற்கு உட்படாத ஞானம், அறிபவன், அறியப்படுவது, அறிவு என்ற முப்புரமற்றது; அகண்டமானது; ஆகாயம் போன்று நீக்கமற நிறைந்திருப்பது (17.3.2, 23.40.12) **விஜ்ஞானம்** – விசேஷ ஞானம், ஸாகாரக – ஞானம் – வடிவ வரம்பிற்குட்பட்டது; முப்புரங்கள் மூலம் அறியப்பட்ட தனிப்பட்ட பொருள் பற்றிய அறிவு; முப்புரத்தைச் சார்ந்ததனால் கண்டம் – துண்டாடப்பட்ட அறிவு; வடிவுள்ள பல சிற்றறிவுகள் நெருக்கம் பெற விஜ்ஞான கனம் ஆகிறது. அத்தகைய சிற்றறிவுத்திரள் வடிவினள் தேவி.

5 – 2. **விஜ்ஞானம்** – புத்தியில் பிரதிபலிக்கும் ஆத்ம ஸ்வரூபமான ஜீவன், அவர்களது கனம் – நெருக்கமான திரள் – ஜீவர்களின் ஸமஷ்டி – அந்த வடிவு கொண்டவள். ஜீவர்களின் ஸமஷ்டி வடிவங்களுக்கு விழிப்பு, கனவு, தூக்கம் என்ற நிலையையும், ஸ்தூலம், ஸூக்ஷ்மம், காரணம் என்ற சரீரங்களின சார்பையும் ஒட்டி வைச்வாநரம், ஹிரண்யகர்ப்பன், ஈச்வரன் என்று பெயர் அமையும். (நா. 256-261) (253)

**6. த்யான - த்யாத்ரு - த்யேய - ரூபா. தியானம், தியானிப்பவர், தியானிக்கப்படுபவர் என்ற மூன்றாயும் இருப்பவள்.**

6 – 1. தேவி பேரறிவு வடிவினள். (நா. 251, 253) அந்நிலையில் உள்ள அவளை அறிய ஒரே உபாயம் தியானம். புலப்படத்தக்க உருவில் இருந்தால், பொறிகளால் அறியலாம். இந்த உருவம் பொறிகளுக்கப்பாற் பட்ட ஸூக்ஷ்ம ரூபம். ஒரு பொருள் பொறிகள் மூலம் அறியப்பட்டபின் அதன் நிறைவு தொடர்கிறது. பொறிகளால் அறியப்படாவிட்டாலும் கேள்வி அறிவைக்கொண்டு மனம் தானே ஒரு பொருளை உருவகப்படுத்தும். அதில் மனம் ஒன்றிப்போய் நிலைத்திருந்தால் அது தியானம். (த்யானம் – சித்தா – மாநஸம் ஜ்ஞானம், ப்ரத்யயைகதாநதா த்யானம்). இப்படி அமையும் தியானம் எனும் நிலைத்த மன உணர்வு, தியானிப்பவன், தியானிக்கப்படும் பொருள் என்ற மூன்றும் தேவியே. (25.44.11) (254)

**7. தர்ம - அதர்ம - விவர்ஜிதா. தர்ம, அதர்மங்களி லிருந்து விடுபட்டவள்.**

7 – 1. தர்மமும் அதர்மமும் வினைப்பயனாக உடல் பந்தத்தை அடைந்த ஜீவனுக்கு ஏற்பட்டவை. அவன் அடைந்திருக்கும் பல நிலைகளுக்கேற்ப அவை மாறுபடும். ஒரு நிலையில் தர்மமாவது மற்றொரு நிலையில் அதர்மமாகக்கூடும். ஒருவனுக்குத் தர்மமாக அமைந்தது மற்றவனுக்கு அதர்மமாகக்கூடும். இதைச் செய் எனத் தேவியின் ஆணை வடிவான வேதமும், அதை ஒட்டி அதை விளக்க வந்த ஸ்மிருதி முதலானதும் கட்டளையிட்டபடி பின்பற்றவேண்டிய வாழ்க்கை முறை தர்மமாகும். இதனைச் செய்யாதே என அவை கட்டளையிட்டபடிப் பின்பற்றக்கூடாத வாழ்க்கை முறை அதர்மமாகும். (18.13.1) அந்த அந்த ஜீவன் இந்த தர்ம அதர்மக் கட்டளைகளைப் பின்பற்றி நடக்க, அவனிடம் ஒட்டியுள்ள வினைக்கட்டுத் தளர்ந்துவிடும். ஜீவனை நல்வழிப்படுத்த ஏற்படுத்திய கட்டுப்பாடு தர்மமும், அதர்மமும், வினைக்கேற்ப உடலும், சூழ்நிலையும் அமைவதால் அதற்கேற்ப தர்மமும், அதர்மமும் நடத்தை முறையளவில் மாறுபடும். ஆனால் தர்மம், அதர்மம் இவற்றின் லக்ஷ்யம் மாறுபடாது. தாரயதீதி தர்ம: – தாங்குவது, வரம்பு. வயலைச் சுற்றி ஏற்பட்ட வரம்பு, அந்த வயலில் சேரவிருக்கும் நீர் உரம் போன்றதைச் சிதறாமல் காப்பாற்றவும், மற்ற வயல்களுக்குச் செல்லாமல் தடுக்கவும பயன்படுகிறது. மற்ற வயல்களுக்கு இதில் தங்கியுள்ளவற்றால் பாதகம் விளையாதபடியும் பாதுகாக்கிறது. தனிப்பட்டவனின் வாழ்க்கை முறை வகுப்பால் ஏற்படும் தர்மம் எனும் வரம்பு அப்படி அவனையும் சூழ்நிலையையும் காப்பாற்றுகிறது. இவனுக்கு அமைந்துள்ள தர்மம் இவன் மேம்படுவதற்காக அமைந்ததே தவிர, பிறரைத் துன்புறுத்துவதற்காக அல்ல. ஒவ்வொருவரும் அவரவரது வரம்பினுக்குட்படும்போது, உலக நெறி சீராகிறது. அதர்மம் அவனவனது ரம்பை மீறிப்போகுதல். தர்மம் வரம்பினுக்குட்பட்டு நெறியாகச் செயல்படும்போது அது அவன் அவன் வேண்டுவதைத் தருகிறது. அதனால் சுகமான வாழ்க்கை அமைகிறது. ஜீவனது மேம்பாட்டிற்காக வகுக்கப்பட்ட தர்மம் அதர்மம் எனும் நெறி வரம்பு தேவியிடம் பயன்படுவதில்லை. வினை தீர்க்கப்படவேண்டிய நிலை அவளுக்கு இல்லை. அதற்காக ஏற்பட்ட நெறிகளும் அவளுக்கு இல்லை. வினைகளுக்கு அப்பாற்பட்ட அவள் வாழ்க்கை நெறிக்கு உட்படுவதில்லை. தர்ம – அதர்ம – விவர்ஜிதா.

7 – 2. தர்மம் என்பது தன்மை. தர்மி – தர்மமுள்ளவன். சூடு தன்மை – தர்மம். சூட்டைத் தன் தன்மையாக – தர்மமாகக் கொண்ட நெருப்பு தர்மி. அது எப்போதும் சூடாகத்தான் இருக்க வேண்டும். அது அதற்குத் தர்மம். அதனை மீறி நெருப்பு குளிர்ந்ததானால் அது அதற்கு அதர்மம். இப்படித் தன்மையால் கட்டுப்பட்டது பொருள். தேவியிடம் இந்தக் கட்டுப்பாடுகள் கிடையாது.

7 – 3. தர்மம் – தன்மையால் ஏற்படும் கட்டு (பந்தம்), ஜீவன் பல தன்மைகளால் கட்டுப்படுகிறான். தகப்பன், பிள்ளை, கணவன், மனைவி, நண்பன் என்ற பல நிலைகளில் பல தன்மைகள் அவனுக்கு அமைகின்றன. ஒவ்வொன்றும் அவனைக் கட்டுப்படுத்துகின்றது. அந்நிலையில் அவனுக்கு பந்தம் (கட்டு) ஏற்படுகிறது. இந்தக்கட்டிலிருந்து விடுபடுவது – அதர்மம் – மோக்ஷம். கட்டுப்பட வேண்டியவனுக்குக் கட்டும் உண்டு. கட்டிலிருந்து விடுபடுவதாகிய மோக்ஷமும் உண்டு. எதிலும் எதனாலும் கட்டுப்பட வேண்டாத தேவிக்கு கட்டுமில்லை. விடுதலையுமில்லை. தர்ம – அதர்ம – விவர்ஜிதா.

7 – 4. தர்மம் தன்மை; அதன் நிலைக்கு முற்றிலும் மாறுபட்ட தர்மி (தர்மத்துடன் தொடர்பு அமைந்தவன், தர்மமுள்ளவன்) அதர்மமாகிறான். மனிதன் பிறக்கும்போதே தகப்பனாகப் பிறக்கவில்லை. தகப்பனது தர்மம் பின் வந்து ஒட்டிக்கொண்டது. அதனால் தர்மம் வேறு, தர்மி (தர்மத்தொடர்புள்ளவன்) வேறு. தர்மத்திலிருந்து வேறுபடுவதால் அவன்தர்மமல்ல.அதனால் தர்மி அதர்மமாகிறான். தர்மம், தர்மி (அதர்மம்) என்ற இரு நிலைகளும் அற்றவள் தேவி. (255)

(நா. 256 – 263)

विश्वरूपा जागरिणी स्वपन्ती तैजसात्मिका ॥ 62 ॥
सुप्ता प्राज्ञात्मिका तुर्या सर्वावस्थाविवर्जिता ॥

**விஸ்வரூபா ஜாகரிணீ ஸ்வபந்தீ தைஜஸாத்மிகா. 62**
**ஸுப்தா ப்ராஜ்ஞாத்மிகா துர்யா ஸர்வாவஸ்த்தாவிவர்ஜிதா.**

**8. விஸ்வரூபா - விஸ்வனை வடிவமாகக் கொண்டவள்.**

8-1-1. **ஸ்ருஷ்டிக்கிரமம். ஒரு விளக்கம்** – ஐந்தொழில்களில் முதலாவதான படைப்பு நானே பலவாக ஆவேன் என்ற தேவியின் ஸங்கல்பத்தால் தொடங்கியது. பானைக்கு மண்போல் தேவியே உலகின் மூலப்பொருள் ஆனாள். உலகமாக மாறவிருக்கின்ற மூலப்பொருள் உருவமற்று இன்னதென விளக்கமாக அறிய முடியாதிருந்தது. அது அவ்யக்தம் – தமஸ் (இருட்டு) என்ற படைப்பின் முதல் நிலை. (16–14–2)

8-1-2. பிறகு அந்த இருட்டாகி நின்ற நிலையிலிருந்து புரிந்தும் புரியாத நிலை உருவத்தின் குணமும் செயலும் அகலம் நீளம் கனம் ஆகிய பரிமாணங்களும் தோன்றாத நிலை. (வ்யக்த – அவ்யக்த நிலை)

இரண்டாவதாகத் தோன்றிற்று. அவயவங்களாகப் பிரித்தால்தான் பரிமாணங்களும் வெளிப்படும். அந்த அளவிற்கு வியக்தமாகவுமில்லை. அவ்யக்த நிலையிலிருந்து வ்யக்த நிலைக்கு வரும் நடுநிலை. இதனை மஹத் என்பர். அளவிற்ககப்படாத அளவில் மஹத் (பெரிது). பரிமாணங்கள், அவயவப்பிரிவு, குணம், செயல் தெரியாதிருப்பதால் மஹத். இது புத்தி தத்துவத்தின் உற்பத்தி ஸ்தானம். இது படைப்பின் இரண்டாம் நிலை.

8-1-3. மஹத்திலிருந்து அஹங்காரம் தோன்றிற்று. பரிமாணத்திற்கு உட்படவேண்டிய ஸூக்ஷ்மமான மாறுதல்கள் ஏற்பட்டுக்கொணடிருக்கும் நிலை. தனித்தனிப் பொருளாகத் தோன்ற வேண்டியதன் மூலக்கரு இது. பிரகிருதி தன்னிடம் அடங்கியுள்ள குணத்தை மூன்றாக்கி இதற்கு உதவ இதனிடம் சேர்ந்தது, ஸத்வம் ரஜஸ் தமஸ் என்ற முக்குணங்கள் அஹங்காரத்திற்கு உதவின. அதிலிருந்து தந்மாத்திரங்கள், பஞ்சபூத ஞானேந்திரியங்கள், மனம், பஞ்சபூத கர்மேந்திரியங்கள், பிராணன், இந்திரியங்களை இயக்கும் தேவதைகள் இவை தோன்றின.

8-1-4. அஹங்காரம் ஸத்வ குணத்துடன் சேர ஸாத்விகா ஹங்காரமாயிற்று. ரஜோ குணத்துடன் சேர்ந்து தைஜ ஸாஹங்கார மாயிற்று. தமோ குணத்துடன் சேர்ந்து தாமஸாஹங்காரமாயிற்று. தாமஸாஹங்காரம் தைஜஸத்தின் துணையுடன் ஐந்து பூதங்களின் தன்மாத்திரங்களைப் படைத்தது. (அதனால் தாமஸாஹங்காரத்திற்கு பூதாதி என்ற பெயருமுண்டு.) ஸாத்விகாஹங்காரம் தைஜஸத்தின் துணையுடன் ஞானகர்மேந்திரியங்கள் பத்தையும் மனத்தையும் பிராணனையும் தோற்றுவித்தது. ராஜஸாஹங்காரத்திலிருந்து இந்த இந்திரியம் - மனம் - பிராணன் ஆகிய பன்னிரண்டின் தேவதைகளும் தோன்றினர்.

8-1-5. ஸாத்விகாஹங்காரம் பஞ்சபூததத்துவத்தின் உதவிபெறத் தாமஸாஹங்காரத்தின் துணை நாடியது. மூலப்பிரகிருதியின் ஞான சக்தியும் கிரியா சக்தியும் ஸாத்விகாஹங்காரம் மூலம் வெளிப்பட்டன. அதனால்ஸாத்விகாஹங்காரம் பஞ்சபூத தத்துவங்களின் உதவியுடன் ஞானசக்தி மூலம் வியஷ்டியான பூதங்களைக் கிரஹிக்கும் ஐந்து இந்திரியங்களைப் பெற்றது. அவை ஞானேந்திரியங்கள். ஆகாசத்தின் குணமான சப்தத்தை கிரஹிக்கக் காது, வாயுவின் குணமான ஸ்பர்சத்தைக் கிரஹிக்கத் தோல், அக்னியின் குணமான ரூபத்தை கிரஹிக்கும் கண், ஜலத்தின் குணமான ரஸத்தைக் கிரஹிக்கும் நாக்கு, பிருதிவியின்

குணமான கந்தத்தைக் கிரஹிக்கும் மூக்கு இவை ஞான சக்தி மூலம் தோன்றிய **வியஷ்டியான** பூதங்களின் ஞானேந்திரியங்கள். ஐந்து பூதங்களிலிருந்து ஸமஷ்டியாக ஞானசக்தி மூலம் தோன்றிய ஞானேந்திரியம் **மனம்**. தனித்துக்காணப்படுவது மரம். இது **வியஷ்டி**. மொத்தமாகக் காணப்படுவது காடு. இது **ஸமஷ்டி**. காட்டில் தனித்தமரத்தைக் காணும்போது காடு புலப்படாது. காட்டைக் காணும்போது மரம் தனித்துப்ப உலப்படாது. மரத்தைக் காணும்போது காடு மறையும். ஸமஷ்டியில் வியஷ்டி மறையும். வியஷ்டி – தனித்த ஒரு பொருள். ஸமஷ்டி – கூட்டம்.

8-1-6. ஸாத்விகாஹங்காரம் கிரியா சக்தி மூலம் பஞ்சபூத தத்துவங்களின் உதவி கொண்டு பெற்றவை ஐந்து கர்மேந்திரியங்கள். ஆகாசத்தின் கிரியை வசனம் (பேசுவது); அது வெளியாகும் வாக்கு ஆகாசத்தின் கர்மேந்திரியம். வாயுவின் கிரியை ஆதானம் (எடுப்பது); அதைச் செய்வது வாயுவின் கர்மேந்திரியமான கை. அக்கினியின் கிரியை கமனம் – சலனம் (நடப்பது); அதைச் செய்வது அக்கினியின் கர்மேந்திரியமான கால். ஜலத்தின் கிரியை ஆனந்தம் – அதனைத் தருவது ஜலத்தின் கர்மேந்திரியமான ஜநந உறுப்பு. பிருதிவியின் கிரியை விஸர்கம் (வெளியேற்றுவது); அதனைச்செய்வது பிருதிவியின் கர்மேந்திரியமான பாயு (மலத்துவாரம்). இவ்வனைத்தும் வியஷ்டி பூதங்களின் கர்மேந்திரியங்கள். பூத ஸமஷ்டியின் கர்மேந்திரியம் பிராணன்.

8-1-7. தாமஸாஹங்காரம் பஞ்சபூத ஸுக்ஷ்மங்களைத் தோற்றுவித்தது. அவை தனித்துஇருக்கும்வரை பரிமாணமுள்ள உலகம் தோன்றாது. ஐந்தில் ஆகாசம் எப்போதும் ஸுக்ஷ்மதமம் (மிக மிக சூட்சுமம்) மற்றவையும் ஸுக்ஷ்ம நிலையில் உள்ளன. இவைகளை ஸ்தூலப் பொருளாக்க, இவைகளையே ஸ்தூலமாக்க வேண்டியதாயிறு. ஐந்து பூதங்களும் ஒன்றோடு மற்றவை கலந்தன. அப்படிக்கலக்கும்போது தனது முழு சுய நிலையையும் இழக்காதவாறு பஞ்சீகரணம் என்ற முறையில் அவை கலந்த ஸ்தூல பூதங்களாயின. ஆகாசம் தனது பாதியை மற்ற நான்கிற்கும் பங்கிட்டுக் கொடுத்துவிட்டு மற்றொரு பாதியைத் தன் தனி நிலை தெரிவதற்காக வைத்துக்கொண்டது. அப்படியே மற்ற பூதங்களும் செய்ய எல்லா எல்லாம் பஞ்சீகரணம் (ஒவ்வொன்றும் 5 பூதங்களாலானதாக) ஆகி ஸ்தூல பூதங்கலாயின. அதனால் ஆகாசம் எனும் ஸ்தூல பூதத்தில் ஆகாச ஸுக்ஷ்மம் தனது 1/2 பங்குடன், வாயு ஸுக்ஷ்மம், அக்கினி ஸுக்ஷ்மம், ஜல ஸுக்ஷ்மம், பிருதிவி ஸுக்ஷ்மம் ஆகிய நான்கும் தத்தம் அளவில் 1/8 பங்கு அளித்ததையும் சேர்த்துக் கொண்டு ஆகாசஸ்தூல பூதமாயிற்று. மஹாபூதம் என்றும் இந்த நிலையைக்

குறிப்பிடுவர். இவ்வகையில் பஞ்சீகரணமடைந்து மற்ற நான்கு பூதங்களும் தோன்றின. (பக்கம் 215)

8-1-8. ராஜஸாஹங்காரம், இந்திரிய ஸ்ருஷ்டியில் ஸாத்விகா ஹங்காரத்திற்குத் துணை நின்றது. பூதஸ்ருஷ்டியில் தாமஸா ஹங்காரத்திற்குத் துணை நின்றது. தானும் ஸாத்விஹங்காரத்தின் துணை கொண்டு ஸாத்விகாஹங்காரம் படைத்திருந்த பன்னிரண்டையும் ஆளும் தேவதா சக்திகளைத் தோற்றுவித்து அவைகளுடன் இணைத்தது. திக்தேவதைகள் (காது); வாயு (தோல்); த்வஷ்டா எனும் ஸூர்யன் (கண்); வருணன் (நாக்கு); அச்விநீ தேவதைகள் (மூக்கு); அக்னி (வாக்கு); இந்திரன் (கை); விஷ்ணு (கால்); பிரஜாபதி (லிங்கம்); மித்ரன் எனும் ஸூர்யன் (பாயு); சந்திரன் (மனம்); விராட் (பிராணன்).

8-1-9. ஆக அஹங்காரம், பூததன்மாத்திரங்களையும் அவைகளின் தத்துவங்களடங்கிய 5 ஞானேந்திரியங்களையும் 5 கர்மேந்திரியங் களையும் ஸமஷ்டி ஞானேந்திரியமான மனத்தையும், ஸமஷ்டி கர்மேந்திரியமான பிராணனையும் தோற்றுவித்தபடியால் இதனை பூத - இந்திரிய - மனஸ்தத்துவம் என்று கூறுவர். **இது படைப்பின் மூன்றாம் நிலை.**

8-1-10. ஸ்ருஷ்டிக் கிரமத்தைச் சுருக்கமாகப் பார்ப்போம். 1. **மாயை** பிரும்மத்தின் இச்சா சக்தியாகி நான் பலவாக ஆவேன் என்று உலகின் நிமித்தகாரணமான **ஸங்கல்**பமானது. பிரும்மத்தை உலகிற்கு உபாதான காரணமாக்க, ஞானசக்தி கிரியா சக்தியாகி **மூலப்பிரகிருதி**யானது. இந்த இரண்டும் அடங்கியது முதல் நிலை. (நா.397) 2. **ப்ரகிருதி** - பிரும்மத்திலிருந்து தோன்றிய உலகம் அவ்யக்தமாக உள்ளநிலை, ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற முக்குணங்களோ ஞானக்கிரியாசக்திகளோ வெளித் தோன்றாத நிலை **அவ்யக்தம்** - (இருட்டு) எனப்படுவது. (நா. 398) 3. மஹத் - முக்குணங்களும் சக்திகளும் உள்ளே தோன்றத் தொடங்கினாலும் மலர்ந்து வெளியே தோன்றாத நிலை. வியக்தமும் அவ்யக்தமுமானது. (நா.399) **4. அஹங்காரம்** - முக்குணங்களும் ஞானக் கிரியாசக்திகளும் கலந்து உலகத் தோற்றத்திற்கான மூலக்கருக்கள் தோன்றின. ஐந்து பூதங்கள், அந்த பூதங்களுக்கான தனித்த குணங்கள், அவைகளை கிரகிக்கும் பொறிகள், புலன்கள், மனம், பிராணன் அவற்றினுள் இருந்து அவற்றை இயக்கிவைக்கும தேவதாசக்திகள் இவை தோன்றின. (நா.400) 5. **ஸ்தூலமான உலகம்** - பூதங்கள் சேர்ந்து பஞ்சீகரணமடைந்து ஒன்றோடொன்று சேர்ந்து வியக்தமான உலகமாக எங்கும் நிரம்பியது. (நா.401) இந்த ஐந்து நிலைகளில் விரிவடைந்ததே தேவியின் விராட்ஸ்வரூபம்.

(பாரா. 8.1.10)

**சிருஷ்டிக்கிரமம்** - (ஒரு கண்ணோட்டம்)

**தேவி**

|

**ஸங்கல்பம் (இச்சா சக்தி) 1. மாயை - மூலப்பிரகிருதி (ஞான - கிரியா சக்தி)**
**(நிமித்தகாரணம்) (உபாதானகாரணம்)**

|

**2. ப்ரகிருதி (அவ்யக்தம்)**

|

**3. மஹத் (வ்யக்தாவ்யக்தம் புத்தித்துவம்)**

|

**4. அஹங்காரம் (வ்யக்தம் - பூதேந்திரிய மனத்தத்துவம்)**

|

**5. பஞ்சபூத தன்மாத்திரங்கள்**

**வ்யஷ்டி (மஹாபூதங்கள்)** | **ஸமஷ்டி**

| | | ஆகாசம் | வாயு | அக்னி | ஜலம் | பிருதிவி | |
|---|---|---|---|---|---|---|---|
| ஞான சக்தி | குணம் | சப்தம் | ஸ்பர்சம் | ரூபம் | சுவை | மணம் | மனனம் |
| | இந்திரியம் | காது | தோல் | கண் | நாக்கு | மூக்கு | மனம் |
| கிரியா சக்தி | குணம் | வசனம் | ஆதானம் | கமனம் | ஆனந்தம் | விஸர்கம் | தாரணம் |
| | இந்திரியம் | வாக்கு | கை | கால் | லிங்கம் | பாயு | பிராணன் |
| **பஞ்சீகரணமடைந்த ஆகாசம்** | | **1/2** | **1/8** | **1/8** | **1/8** | **1/8** | |
| **பஞ்சீகரணமடைந்த வாயு** | | **1/8** | **1/2** | **1/8** | **1/8** | **1/8** | |
| **பஞ்சீகரணமடைந்த அக்னி** | | **1/8** | **1/8** | **1/2** | **1/8** | **1/8** | |
| **பஞ்சீகரணமடைந்த ஜலம்** | | **1/8** | **1/8** | **1/8** | **1/2** | **1/8** | |
| **பஞ்சீகரணமடைந்த பிருத்வீ** | | **1/8** | **1/8** | **1/8** | **1/8** | **1/2** | |

8-1-11. தனி மனிதனிடம் இந்த சிருஷ்டி எப்படி அமைகிறது? ஸ்தூலபூதங்கள் சேர்ந்து உருவத்தால் அறியக்கூடியதான ஸ்தூல தேகத்தைத் தந்தன. பத்து இந்திரியங்களும் மனதும் பிராணனும் அறிவாலும் செயலாலும் ஊகித்தறியக்கூடிய ஸூக்ஷ்ம தேகத்தை அமைத்துத் தந்தன. ஜீவன் இதனுட்புகுந்தான். அவன் தான் புகத் தனக்கென வினை தேர்ந்தெடுக்க சரீரத்தைக்கொண்டான். அவன் பல பிறவிகளில் செய்த வினைகளில் பலன் கொடுத்துத் தீர்ந்தவை நீங்கிவிட்டன. மற்றவைகளில் இந்தப்பிறவியை அளிக்க முற்பட்டுள்ள (பிராரப்த) வினைகள் தனக்கேற்ற இடத்தை - ஸ்தூலஸூக்ஷ்மதேக அமைப்பத் தேடிக்கொண்டன. இவைகளைத் தவிர மீதியிருக்கும் ஸஞ்சிதம் எனப்படுபவை வாஸனைகளாக ஜீவனைச் சுற்றிச்சிறையெடுத்தது போன்று சூழ்ந்து நிற்கின்றன. இவையே காரண சரீரம் எனப்படுபவை. இந்த மூன்று சரீரங்களுக்குள் அகப்பட்டுக்கொண்ட ஜீவன் நான் ஆனான். அதனையும் சிறிது விளக்கிப்பார்ப்போம்.

8-1-12. தனி ஜீவனின் ஜனனமும் மரணமும் போல், பகலும் இரவும்போல், ஸ்ருஷ்டியும் பிரளயமும் மாறி மாறி வருகின்றன. பிரளயம் ஏற்படுமுன் கடைசியாக இருந்த பிராணி வர்க்கங்கள் மறைந்து அடுத்த பிறவியைப்பெறவேண்டும். அடுத்த பிறவியைத் தரவிருக்கும் வினைகளாகிற விதைகள் முளைக்கக் காலத்தை எதிர்பார்க்கின்றன. ஈச்வர ஸங்கல்பத்தால் காலம்திடீரென இயக்கமற்று நின்றுவிடுகிறது. காலத்தின் வெளித்தோற்றமான சூரியன், சந்திரன் முதலானோர் மறைந்து விடுகின்றனர். வினைகளாகிற விதைகள் காலத்தை எதிர்பார்த்துக் குளிர்பதனத்தில் வைக்கப்பட்டதுபோல் இயக்கமற்றிருக்கின்றன. இதனையே பிரளயம் என்கிறோம். வினை, வினையைத் தாங்கிநிற்கும் காரண சரீரம், அதனை வெளியாக்கி அனுபவிக்கும் ஸூக்ஷ்ம சரீரம் இவை அனைத்தும் மிகவும் ஸூக்ஷ்மமான மூலமான பிரகிருதிநிலைக்கு மாற்றப்படுகின்றன. அந்த பிரகிருதியும் மூலப்பிரகிருதியான மாயையினுள் அடங்கிவிடுகின்றது. மாயையும் பரம்பொருளிடம் அடங்கிவிடுகிறது. பரம்பொருள் மட்டும் தனித்தும் எல்லாமாயும் உள்ளது இந்த நிலை.

8-1-13. மாயை மறுபடி எழுகிறாள். காலத்தை எழுப்புகிறாள். பரம்பொருளிடம் ஸங்கல்பம் தோன்றுகிறது. சலனம் ஏற்பட்டு மாயையில் அடங்கிய பிரகிருதி வெளிவருகிறது. ஸ்தூல பூதம் வரை வெளியாகிறது. பிரளயத்திற்கு முன்பாகக் கடைசியாக இருந்தவர்களின் வினையும் அதனைத்தாங்கி நிற்கும் வினையாலான காரண சரீரமும் மாயையில் இருதுகாறும் அடங்கியிருந்தது; அதுவும் மற்றவைகளுடன் சேர்ந்தே

மாயையிலிருந்து வெளியாகிறது. இந்தக் காரண சரீரத்தினுள் பிடிபட்டிருந்த ஆத்மாவும் வெளியானான். பிரகிருது ஸ்ருஷ்டியும் அவ்யக்தம் மஹத் அஹங்காரம் பூதஸூக்ஷ்மம் வரையுள்ள பிரகிருதி விகிருதி ஸ்ருஷ்டியும் முடிந்து விகிருதி ஸ்ருஷ்டியாகத் தொடங்கி மரம், செடி, மனிதன், மிருகம், தேவன், அசுரன் என்ற பல தோற்றங்கள் ஏற்பட்டதும் விதியின் கட்டுப்பாட்டுக்கு உட்பட்டு, காரண சரீரத்தினுள் சிக்கிய ஜீவன் அவைகளுக்குள் நுழைந்து அந்தத் தோற்றங்களைத் தனதாக்கிக் கொள்கிறான். மறுபடியும் ஜனன மரணச் சங்கிலித்தொடர் தொடர்கிறது.

8-1-14. ஸ்தூல - ஸூக்ஷ்ம - காரண சரீரங்களில் சிக்கிக்கொண்ட ஆத்மா தன்னிலிருந்து முற்றிலும்வேறுபட்ட அந்த மூன்று சரீரங்களையும் தான் ஆகவே பாவித்துக் கொள்கிறான். ஆனால் சில சமயத்தில் ஸ்தூல சரீரத்தொடர்பற்றவனாகவும், சில சமயம் ஸ்தூல ஸூக்ஷ்ம சரீரத் தொடர்பற்றவனாகவும் காணப்படுவது உண்டு. ஸ்தூல-ஸூக்ஷ்ம சரீரத்தொடர்பு செயற்கையாக வந்ததே தவிர, இயற்கையாக அமைந்ததல்ல என்பது பகுத்தறிவுள்ள அவனுக்குத் தெளிவாகிறது. அதே மாதிரி காரண சரீரத்தொடர்பும் செயற்கை என்ற அனுபவம் நேரிடையாக ஏற்படாவிட்டாலும் ஊகித்தறிய முடிகிறது. இதனைத் தினந்தோறும் மனிதன் பெறும் அனுபவத்திலிருந்து விளக்க முடியும்.

8-1-15. மனிதன் விழித்திருக்கும்போது அவனுக்கு ஒரு பெயரும் உருவமும் உண்டு. தன் சரீரத்தில் தான் என்ற அபிமானமிருக்கிறது. (அபிமானம் - தான் - தனது அல்லாத பொருளிடம் பற்றின் காரணமாகத் தான் - தனது என்ற மதிப்பை ஏற்படுத்திக்கொள்வது) இந்த சரீரத்திற்கான வயதைத் தன் வயதெனக் குறிப்பிடுகிறான். இந்த சரீரத்தினுள் நுழைவதற்கு முன் இப்படிப் பல சரீரங்களில் அவன் நுழைந்திருக்கிறான். அவைகளைக் கணக்கிட முடியாது. அதனால் அவன் வயதையும் கணக்கிட முடியாது. இப்படிக் கணக்கிட முடியாத தன் வயதை மறைத்து, இந்த உடலில் நுழைத்ததிலிருந்து தொடங்கிய ஆண்டுகளைத்தன் வயதெனக் காட்டுகிறான். இது ஸ்தூல சரீரத்தில் வைத்த தான் - தனது என்ற அபிமானத்தின் விளைவு.

8-1-16. நான் நன்கு பார்க்கிறேன், கேட்கிறேன் எனக் கூறிக்கொள்பவன், பார்க்கும் கண்ணையும் காதையும் தான் என அபிமானத்தால் நினைக்கிறான். இப்படி ஸூக்ஷ்ம சரீரமாக அமைந்தவை களிடத்தில் தான்-தனது என்ற எண்ணம் கொள்கிறான்.

8-1-17. ஸ்தூல தேகத்திலும் ஸுக்ஷ்ம தேகத்திலும் தான் என்ற எண்ணம் பரவக் காரணமாயிருப்பது வினையும் வினையின் காரணமான அஜ்ஞானமும். (இங்கு அஜ்ஞானம் என்பது அறியாமை, அறிவின்மை என்ற அறிவிற்கு நேர் எதிரிடையான பொருளைத்தருவதல்லை. எதை எப்படி அறிய வேண்டுமோ அப்படி அறியாதிருப்பது என்ற பொருளில் அமைந்தது). அதற்குக் காரணம் முன் வினையின் வாஸனை. அதனால் இந்த வினையும் வினைக்குக் காரணமாக அமைந்த அஜ்ஞானமும் காரண தேகமாக அமைந்தன. அதிலும் தான் என்ற அபிமானத்தால், தன்னிலை நித்யஞானானந்த ஸ்வரூபமான தென்பதை மறந்து விடுகிறான். தன்னிலை துக்கமயமானது. அதனை மாற்றிக் கொள்வதற்குத் தான் வாழ்வின் ஆசாபாசங்கள் என நினைக்கிறான். அப்பொழுது இவனது தான் - தனது உலகளவில் வியாபித்து நிற்கிறது. அதனால் மூன்று தேக அபிமானத்துடன் இருப்பவனை விசுவன் என்பர். (நா. 256)

8-1-18. பகலிலிருந்து இரவு தானே அமைது போல் விழிப்பு தூக்கமாக மாறுகிறது. விழிப்பிற்கும் தூக்கத்திற்கும் நடுவே கனவுநிலை வருகிறது. கனவு காண்கிறான். அதில் நான்கு சுவர்களால் அடைக்கப்பட்ட அறையில் தூங்கும் உடலை - தான் - தனது என்று விழிப்பில் அபிமானித்திருந்த உடலை - விட்டு அது போன்றோ மாறுபட்டோ உள்ள ஓர் உடலை எடுத்துக் காசிக்கும் கல்கத்தாவிற்கும் செல்கிறான். விழிப்பிலிருந்த கால தேசக்கட்டுப்பாடு இவனை விட்டுவிட்டது. அவன் பார்க்கும் கண்களே கூட வேறு. மனம் மட்டும் அதுவே. முன் அனுபவித்ததையோ அனுபவிக்க நினைத்ததையோ தான் கனவில் அனுபவிப்பதால் அதே மனம் என்று புரிந்துகொள்ளலாம். இந்இலையில் ஸ்தூல தேகாபிமானமற்ற ஆத்மாவாகிறான். தேஜஸ் ஆகிற மனத்தின் வடிவில் இருப்பதால் தைஜஸன் என இவனை அழைப்பர். (நா. 259)

8-1-19. அயர்ந்த தூக்கம் ஆனந்தமாய் அமைகிறது. மறு நாள் விழித்தெழுந்ததும் தூக்கத்தில் ஆனந்தமாய் இருந்தது நினைவிற்கு வருகிறது. அந்த ஆனந்த நிலையில் ஸ்தூல - ஸுக்ஷ்ம தேகத்தொடர்பு அறவே இல்லை. காரண சரீரத்தொடர்பும் இல்லை என்றே சொல்லலாம். ஆனந்தத்தை அனுபவிக்கும் அந்த நேரத்தில் அந்த ஆனந்தத்தை அனுபவித்த உணர்வில்லை. மறுநாள் விழித்தெழுந்த பின் தான் நினைவில் வருகிறது. நினைவு முன் அனுபவித்ததைப்பற்றித்தான் வரும். தூங்கும் நிலையில் அஜ்ஞானம் என்ற மறைப்பு சிறிது உள்ளது. இந்த

அஜ்ஞானத்தின் தொடர்பும் செயற்கைதான். இயற்கை அல்ல என்று விவேகத்தால் அறிய முடிகிறது. இப்படி அறியக்கூடியவனாக இருப்பதால் அவனை பிராஜ்ஞன் என்பர். இவன் அஜ்ஞானம் என்ற காரண சரீரத்தில் மட்டும் அபிமானியான ஜீவன. (நா. 261)

8-1-20. விசுவன், தைஜஸன்,பிராஜ்ஞன் என்ற மூன்று விதமாக ஜீவன் காட்சியளிப்பதுபோல் ஈசுவர தத்துவமும் மூன்று விதமாகக் காட்சி அளிக்கிறது. வியஷ்டி - ஜீவன், ஸமஷ்டி - ஈச்வரன். (17.8.15) (இந்த ஈசுவரனும் திரோதனம் எனும் தொழில் புரிபவனாக உள்ள ஈசுவரனும் வேறு. (நா. 271) வியஷ்டி நிலையில் ஸ்தூல தேகாபிமாம் மிகுந்து உடலையும் வயதையும் பொருட்படுத்தும் ஜீவன் விசுவன். இப்படிப் பல ஜீவர்களின் - விசுவர்களின் ஸமஷ்டியும் - ஸ்தூல தேக ஸமஷ்டியில் அபிமானமுள்ளவனும் வைச்வாநரன் (விச்வநரர்களுடன் கூடியவன்). ஸூக்ஷ்ம சரீர அபிமானியான தைஜஸர்களின் ஸமஷ்டியும், ஸூக்ஷ்ம சரீர ஸமஷ்டியில் அபிமானமுள்ளவனும் ஹிரண்யகர்ப்பன். காரண சரீர அபிமானியான பிராஜ்ஞர்களின் ஸமஷ்டியும் காரண சரீர ஸமஷ்டியில் அபிமானமுள்ளவனும் ஈச்வரன்.

8-1-21. இந்த வியஷ்டி - ஸமஷ்டி நிலைகளில் முதல் நிலையில் ஸ்தூல சரீரம் உபாதியாக நிற்கிறது. இரண்டாம் நிலையில் ஸூக்ஷ்ம சரீரம் உபாதியாக நிற்கிறது. மூன்றாம் நிலையில் காரண சரீரம் உபாதியாக நிற்கிறது. (உபாதி. 14.23)

8-1-22. பரமாத்மாவும் ஜீவாத்மாவிடம் பிரதிபலிக்கிறார். அவர் பிரதிபலிக்கும் இடம் மூன்று. ஞானசக்தி வடிவமான அந்தஃகரணமாகிற புத்தியிலும் மனத்திலும் பிரதிபலிக்கும்போது மனமும் புத்தியும் உபாதியாகி அவரை மறைக்க ஹிரண்யகர்ப்பர் ஆகிறார். கிரியா சக்தியான பிராணனில் பிரதிபலித்து, பிராணன் உபாதியாகி அவரை மறைக்க அவர் ஸூத்ராத்மா ஆகிறார். ஞானசக்தியும் கிரியா சக்தியும் சேர்ந்து உபாதியாக மறைக்க அந்தர்யாமி ஆகிறார். அதே பரமாத்மா ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் என்ற முத்தொழிலையும் உபாதியாகக்க கொண்டு பிரும்மா, விஷ்ணு, ருத்திரன் என்று குறிப்பிடப்பெறுகிறார். இவை முறையே விழிப்பு, கனவு, தூக்கம் என்ற மூன்று நிலைகளை ஒத்தன.

8-1-23. மூன்று தேகங்களின் தொடர்பு இந்த மூன்று நிலைகளில்தான். நான்காவது (துரீய) நிலையில் ஸ்தூல ஸூக்ஷ்ம காரண

தேகத் தொடர்பு இல்லை. ஐந்தாவது நிலையை நிலையெனக் குறிப்பிட முடியாது. அதால் துரீயாதீதம் (நான்காவதற்கு அடுத்தது) என்றே குறிப்பிடுவர். இந்த இரு நிலைகளில் நடைபெறும் தொழில் திரோதானம், அனுக்ரஹம் என்பவை. இந்நிலைகளில் உள்ள ஜீவனானவள் (வியஷ்டி நிலையில்) மஹாகாரணன், சிவன் எனவும், ஈச்வரனானவன் (ஸமஷ்டி நிலையில்) துரீயன், துரீயாதீதன் எனவும், பரமாத்மாவானவன் ஈச்வரன், ஸதாசிவன் எனவும் வழங்கப்படுகிறார்கள். இனி நாமங்களை விளக்குவோம்.

8-2. விழிப்பு நிலையில் ஸ்தூல பூதங்களாலான சரீரத்தில் அபிமானமுள்ள விசுவனையும், வைச்வாநரனையும் தன் வடிவமாகக் கொண்டவள் தேவி. வியஷ்டி ஜீவன் - விச்வன்; ஸமஷ்டிஜீவன் - வைச்வாநரன்; இவ்விரண்டிலும் சைதன்ய (ஞான) வடிவிலுள்ள ஆத்மா ஸ்தூல சரீரத்தை உபாதியாகக்கொண்டு தான் என்ற அபிமானத்திற்கு ஆளாகிறான். பிரும்மம் ஜீவத்தன்மையை ஏற்பது இழிவானது. மிகப் புத்திசாலியான மனிதன் நாயாவதுபோல் அது வெறுக்கத்தக்கது. உண்மயில் பிரும்மம் ஜீவாத்மாவாகவில்லை. நாய் உருவம் - ச்வரூபம். (ச்வா = நாய்) நாய் எனும் பிராணி மிக நீசம். அதன் உருவத்திலிருந்தும் விடுபட்டவள். விகதம் ச்வரூபம் யஸ்யா: விச்வரூபா. ஜீவனாக நாய்த் தன்மையை அடையாதவள்.

8-3. சுக்லபக்ஷத்துப் பதினைந்து இரவுகளுக்கும் வேத்தில் தனிப்பெயர் உண்டு. அவைகளாவன: தர்சா,த்ருஷ்டா, தர்சதா, விச்வரூபா,ஸுதர்சநா,ஆப்யாயமாநா, ப்யாயமாநா, ஆப்யாயா, ஸிந்துரா, இரா, அபூர்யமாணா, பூர்யமாணா, பூரயந்தி, பூர்ணா, பௌர்ணமாஸீ என. அதில் நான்காவது திதியின் இரவாக இருப்பவள் தேவி. (காடகம் 1 - 1)

8-4. இந்த 15 திதிகளும் சந்திரனின் 15 கலைகள். சந்திர மண்டலமும் பஞ்சதசாக்ஷரியும் ஒன்றே. அதனால் திதிகள் பஞ்சதசாக்ஷரியின் 15 அக்ஷர தத்துவங்களாகும். அதன்படி விச்வரூபா என்ற நான்காம் திதி வாக்பவ கூடத்தின் நான்காவது அக்ஷரமான ல வைக் குறிக்கும். அந்த அக்ஷர சக்தியாயிருப்பவள். (114.2)

8-5. கிருஷ்ண பக்ஷத்துப் பகல்களுக்கு 15 பெயர்கள் வேதத்தில் காணப்படுகின்றன. அவையவன : ப்ரஸ்துதம், விஷ்டுதம், ஸம்ஸ்துதம்,கல்யாணம், விச்வரூபம், சுக்ரம், அம்ருதம், தேஜஸ்வி, தேஜ: ஸமித்தம், அருணம், பானுமதி, மரீசமத், அபிதபத், தபஸ்வத் என. அதில் கிருஷ்ணபக்ஷத்துப் பஞ்சமீ திதியின் பகல் விசுவரூபம். அதனை வடிவாகக் கொண்டவள். (காடகம் 1.1) முன் சொன்னபடி பஞ்சதாக்ஷரியின் காமராஜ

கூடத்தின் ஆறாவது எழுத்தாக இருப்பவள். (கிருஷ்ண பக்ஷத்தில் அக்ஷர எண்ணிக்கை வரிசை மாறும். 10.8.1) (256)

### 9. ஜாகரிணீ, விழிப்பு நிலையில் உணரப்படுபவனான ஜீவனாயிருப்பவள்.

9-1. எல்லாப் பொறிகளாலும் உணர்வைப்பெறும் நிலை ஜாகரம் - விழிப்பு. அந்த. நிலையிலுள்ளவன் ஜாகரீ - ஜீவன். விச்வன் என்றும் வைச்வாநரன் என்றும் குறிப்பிடப்பட்டவன். ஜாகரீயான ஜீவனே இவள். (ஜாகரீ - ஜீவ: ததபிந்நா - ஜாகரிணீ) (257)

### 10. ஸ்வபந்தீ. கனவு காணும் ஜீவனாக இருப்பவள்.

10 - 1. ஸ்வபந் - கனவு காண்பவன். ஸ்வப்ந நிலையில் ஸூக்ஷ்ம சரீரத்தில் தான் என்ற அபிமானமுள்ள ஜீவன் அவன். வியஷ்டியில் தைஜஸன். ஸமஷ்டியில் ஹிரண்யகர்ப்பன். அந்த ஜீவனாகவே இருப்பவள் ஸ்வபந்தீ. (258)

### 11. தைஜஸ - ஆத்மமிகா. தைஜஸன் வடிவினள்.

11 - 1. தேஜஸ் - ரஜோகுணம் மிக்க மனம். அதன் சக்தி மிக்கவன் தைஜஸம். கனவு காணும் நிலையில் ஸூக்ஷ்ம சரீரத்தில் தான் என்ற அபிமானம் கொண்டவன். தைஜஸன் என வியஷ்டியிலும் ஹிரண்யகர்ப்பன் என ஸமஷ்டியிலும் பெயருள்ளவன். (259)

### 12. ஸுப்தா. தூங்கும ஜீவனாக இருப்பவள்.

12 - 1. தூக்கம் - பகுத்தறிவின்மை மிகுந்த நிலை. நான் சுகமாகத் தூங்கினேன். ஒன்றையும் அப்போது அறிந்திலன் என்று தூங்கியவன்தன் அனுபவத்தைக் கூறுகிறான். நேற்று நடந்ததன் நினைவு இன்று அந்தச்சொல்லில் வெளியாகிறது. நான் தூங்கினேன் எனக் கூறுவதால் நான் என்ற உணர்வு (அஹந்தா). சுகமாகத்தூங்கினேன் என்பதால் சுகமும், ஒன்றையும் அறிந்திலன் என்பதால் அஜ்ஞானமும் அந்த நிலையில் உணர்விற்குப் பொருளாக ஏற்பட்டுள்ளன. இந்த மூன்றையும் கொண்டவன், காரண சரீரத்தில் தான் என்ற அபிமானமுள்ள ஜீவன. அந்த ஜீவனாக இருப்பவள் தேவி. (260)

### 13. ப்ரஜ்ஞ - ஆத்மிகா. பிராஜ்ஞனாக இருப்பவள்.

13-1. காரண சரீரத்தில் தான் என்ற அபிமானமுள்ள வ்யஷ்டியான ஜீவன் பிராஜ்ஞன். அவனே ஜீவ சமஷ்டியில் ஈச்வரன் எனப்படுவான். அந்த ஜீவ வடிவில் உள்ளவள் தேவி. (261)

### 14. துர்யா. நான்காம் நிலையில் உள்ள ஜீவனாக இருப்பவள்.

14-1. விழிப்பு, கனவு, தூக்கம் என்ற மூன்று நிலைகளையும் அவைகளில் 'தான்' ஆக உணரப்பட்டதனைத்தையும் பகுத்தறிந்து அதில் உபாதியற்ற தனித்த ஆத்ம தத்துவத்தையும், உபாதியான மூன்று சரீரங்களையும் புரிந்துகொண்டு, மூன்று நிலைகளையும் கடந்த சுத்த ஞான நிலையில் உணரப்பெறும் ஆத்மாவே நான் என்று உணர்பவன் துர்யன். (துர்யன் - துரீயன் = நான்காமவன்) மறுபடியும் வியவஹார தசையில் உலகியலில் கலக்கும்போது மூன்று நிலைகள் சூழ்ந்து நின்றாலும தனித்துத் தன்னை உணர்பவன் துர்யன். அவன் விடிவில் உள்ளவள் துர்யா.

14 - 2. பிரும்மா, விஷ்ணு, ருத்திரன் என்ற மும்மூர்த்திகளின் சக்திகளாக இருப்பதுடன் அச்சக்திகளுக்கும் அப்பாற்பட்ட பராசக்தியாக இருப்பவள். "துரீயா காபி த்வம் துரதிகம நிஸ்ஸீம மஹிமா. ஸரஸ்வதி, லக்ஷ்மீ, கௌரி என்ற மூவருக்கும் அப்பாற்பட்டு விளக்கம் பெற முடியாத எல்லையற்ற பெருமையுள்ள நான்காமவளாக நீ விளங்குகிறாய்". (ஸௌந்தர்யலஹரீ) (262)

### 15. ஸர்வ - அவஸ்த்தா - விவர்ஜிதா. எல்லா நிலைகளும் அற்றவள்.

15-1. முதல் மூன்று நிலைகளையும் கடந்தவன் துர்யன். நான்காம் நிலையையும் கடந்தவன் துரீயாதீதன் (துர்யாதீதன்). இந்த ஐந்தாவதை நிலையென்று குறிப்பிட இயலாது. அதனால் துரீயாதீதம் - நான்காவதைக் கடந்தது. ஸர்வ - அவஸ்தா என்பது முன் குறிப்பிட்ட நான்கு நிலைகளே. அதனைக் கடந்தவள் - நிலைகள் எனும் பாகுபாட்டிற்குட்படாதவள். இதில் ஸமஷ்டி, வியஷ்டி என்ற வேறுபாடும் கிடையாது. நான்கு நிலைகளைக் கடந்த ஜீவன் சிவனாகிறான். ஜீவமேநம் சிவம் வா கரோஷி, தேவி நீ ஜீவனை சிவனாக்கி விடுகிறாய். (ஸ்ரீ சங்கர பகவத் பாதரது தேவீபுஜங்கம்) இவனும் உலக வியவகாரத்தில்கலக்க நேரிடலாம். அப்போதுஅவளது பேச்சு ஜபமாகவும், உடலை வளர்க்கும் உபாயங்கள் விரதமாகவும் அமையும். மனத்தில் நினைப்பதும் சொல்வதும் மந்திரமாகும். ("ஜபோ ஜல்ப: சில்பம் ஸகலமபிமுத்ராவிரசநா". (சங்கரரது ஸௌந்தர்ய லஹரி 27) இந்த சிவனாகிவிட்ட ஜீவனாக இருப்பவள் தேவி. (263)

(நா. 264 - 274)

सृष्टिकर्त्री ब्रह्मरूपा गोप्त्री गोविन्दरूपिणी ॥ 63 ॥
संहारिणी रुद्ररूपा तिरोधानकरी (ई)श्वरी ।
सदाशिवा (अ)नुग्रहदा पञ्चकृत्यपरायणा ॥ 64 ॥

**ஸ்ருஷ்டிகர்த்ரீ ப்ரம்ஹரூபா கோப்த்ரீ கோவிந்தரூபிணீ. 63**
**ஸம்ஹாரிணீ ருத்ரரூபா திரோதாநகரீ(ஈ)ச்வரீ.**
**ஸதாசிவா (அ)னுக்ரஹதா பஞ்சக்ருத்யபராயணா.64**

### 16. ஸ்ருஷ்டி கர்த்ரீ. ஸ்ருஷ்டியைச் செய்பவள்.

16 - 1. அவித்யையால் கட்டப்பட்ட ஜீவன் மூன்று வகைப்படுகிறான். ஆத்ம - அநாத்ம விவேகத்தால் தான் என்பதன் உண்மைப் பொருளை அறிந்து அவித்யையின் கட்டு விலகியதும், துரீய - துரீயாதீத நிலைகளில் நித்யமான ஆத்ம தத்துவத்தை அனுபவிக்கிறான். இவ்விரு நிலைகளில் அவித்யை என்ற கட்டு விலகி முக்தனாகிவிடுதலை பெற்றவனாகிறான். இதே ஐந்து நிலைப் பரம்பொருளும் தன்னிடம் மாயையால் ஏற்படுத்திக் கொள்கிறது. ஜீவனிடத்தில் 'நான்' என்பதை மறைத்த அவித்யை போல், பிரும்மா, விஷ்ணு, ருத்திரன், ஈசுவரன், ஸதாசிவன் இவர்களில் உள்ள பிரும்மம் என்ற உண்மை நிலையை மாயை மறைக்கிறது. ஜீவன் அவித்யை எனும் மாயைக்கு வசப்பட்டவன். மூல பிரகிருதிஆகிய மாயை பரம்பொருளுக்கு வசப்பட்டது. மாயை உபாதியாகி ஸ்ருஷ்டி முதலிய தொழிகளைப் புரியும் பிரும்மா முதலானோரைப் பரம்பொருளிலிருந்து வேறுபட்டவராகக் காண்பிக்கிறது. அத்தகைய தோற்றங்களும் தேவியினுடையதே.

16 - 2. ஸ்ருஷ்டி என்பது உலகைப்படைப்பது. ஈசுவரனிடம் ரஜோகுணம் முக்கியமாக வெளிப்படும் நிலையில் படைப்பு நடக்கிறது. படைப்பைச் செய்பவள். (264)

### 17. ப்ரம்ஹ - ரூபா. பிரம்மா வடிவமுள்ளவள்.

17 - 1. பிரும்மா - நான்முகக் கடவுள்; படைப்புத் தொழிலின் அதிகாரி. ரஜோகுணம் மிக்கவர். அவராகத் தோன்றுபவள். (265)

### 18. கோப்த்ரீ. காப்பாற்றுபவள்.

18 - 1. ஸத்வகுணம் மிக்க ஈசுவரனது தொழிலான காப்பும் உலகை ஒரே சீராக நியதிக்குட்படுத்துகிறது. (266)

### 19. கோ - விந்த - ரூபிணீ. கோவிந்தன் வடிவுள்ளவள்.

19 – 1. காப்பு என்ற தொழிலைச் செய்பவர் ஸத்வ குணம் மிக்க ஈச்வரன். அவருக்குப் பெயர் கோவிந்தர். பசுக்களுக்கு தலைவர். இந்திரனுக்காக கோகுலத்தில் நடந்த வேள்வியைக் கண்ணன் தடைசெய்ய இந்திரன் வெகுண்டு பிரளய காலத்து மேகங்களை ஏவி கோகுலத்தை அழிக்க முற்பட்டான். பசுக்களையும் கோபர்களையும் அழிவிலிருந்து காப்பாற்றுவதற்காகக் கண்ணன் கோவர்த்தன் மலையைக் குடையாகப் பிடித்தார். இந்திரனது முயற்சி வீணானது. இந்திரன் கண்ணனிடம் மன்னிப்புக் கோரினான். காமதேனு காரணமின்றி தன் குலத்தினரை இந்திரன் அழித்ததைக்கண்டு தங்களுக்கு இனி அவன் தலைவனில்லை. கண்ணனே தங்களுக்கு இந்திரன் (கவாம் இந்த்ர: - கோவிந்த:) எனக் கண்ணனுக்கு இந்திர பட்டாபிஷேகம் செய்வித்தாள். ஸ்திதி காலத்தில் காப்புத் தொழிலில் உதவும் இந்திரன் போன்ற தெய்விக அதிகாரிகள் வழி கெடும்போதுஸ்திதி அதிகாரியாகிய நாராயணன் கோவிந்தனாகி இந்திரன் முதலியவர் செருக்கை அடக்கி வழிப்படுத்துகிறார்.

19 – 2. கோ - வாக்கு. அதனால் அடையக்கூடியவன் கோவிந்தன். வாக்குக்கெட்டாதிருந்த இறைவன், காப்புத் தொழிலை ஏற்றுக் கொண்டதும் குரல் கேட்டு ஓடி வருபவனாக நல்ல காப்பாளானாக ஆகிறார். கோ – பூமி. அதனை அடையச் செய்தவர் கோவிந்தர். ஸ்ருஷ்டி ஆரம்பித்ததும் பூமி நிலைகொள்ளாமல் ஜலத்தில் அழுந்தியது. அதனைத் தாங்கினார். மறுபடி ஹிரண்யாக்ஷன் அதனைச்சுருட்டி எடுத்துச்சென்றதும் அதனை மீட்டார். இப்படிக் காப்புத்தொழிலைப் பொறுப்புடன் கவனிக்கின்ற கோவிந்தன் வடிவைத்தாங்கி உலகைக்காப்பவள். (267)

### 20. ஸம்ஹாரிணீ. ஸம்ஹாரம்செய்பவள்.

20 – 1. உலகத்தைப் பரமாணுவளவில் மீதமாகும்படி உருக் குலைப்பது ஸம்ஹாரம். உலகை ஐம்பூதங்களின் ஸூக்ஷ்ம நிலைக்கு மாற்றி ஒடுக்குவதே இத்தொழில். தமோ குணம் மிகுந்த ருத்திர உருவில் இருந்து கொண்டு ஸம்ஹாரத்தொழிலைப் புரிபவள் தேவி. (268)

### 21. ருத்ர - ரூபா. ருத்திர வடிவினள்.

21 – 1. தமோ குணம் மிக்கவராக உலகை ஒடுக்க எடுத்த தோற்றம் ருத்திரன். தமோ குணம் மறைக்கும். ஸம்ஸாரச் சுழலில் சுற்றிச்சுற்றி வருவதால் ஏற்பட்ட வேதனையை மறக்க செய்வதால் (ருஜம் திரவயதி -

வேதனையை, ஓடச் செய்கிறார்) ருத்திரன். அழவைப்பதால் (ரோதயதி) ருத்திரன். பிரிவு அழ வைக்கிறது. பிரவை விளைவிப்பவர் ருத்திரன். பிரும்மனது படைப்பில் ருத்திரன் என்ற தேவன் படைக்கப்பட்டார். அவர் தோன்றியதும் அழுதார். அதனால் ருத்திரன் எனப் பெயர் பெற்றார். ஸூர்யர்களில் ஒருவர் ருத்திரன். அவர் பிரளய காலத்தில் தோன்றி தனது கிரணங்களால் உலகைப் பொசுக்குவார். அந்த ஆவியின் விளைவாகப் பிரளய காலத்தில் மேகங்கள் உருவாகி மழை பொழிந்து உலகை அழிக்கும். அந்த மேகங்களை ருத்திரன் எனும் சூரியனின் கண்ணீர் என்பர். இந்த ருத்திரனின் வடிவில் தோன்றுபவள். (269)

## 22. திரோதான - கரீ. திரோதானத்தை ஏற்படுத்துபவள்.

22 – 1. திரோதானம் – பிறர்க்குப் புலப்படாதவாறு மறைப்பது. ருத்திரனால் தன்மாத்திர நிலைக்குக் கொணரப்பட்ட உலகைத் தனித்தில்லாமல் மூலத்தில் மறையச் செய்வது. படைப்பு தொடங்கியபோது எந்த வரிசையில் உலகம் தோன்றியதோ, அதே வரிசையில் திருப்பி லயப்படுத்துவது திரோதானம். மூலப் பிரகிருதியிலிருந்து அவ்யக்தம், மஹத், அஹங்காரம், பஞ்சபூதங்கள் என்றவாறு வெளியான உலகம், திரும்ப மாயையினுள் அடங்கும் போது, பஞ்சபூதங்கள் அஹங்காரத்தில் அடங்கி, அவ்யக்தம் மூலப் பிரகிருதியில் அடங்கி, மூலப்பிரகிருதி பரம்பொருளில் அடங்கும். இந்தப் பிரகிருதிலயம் சுத்த ஸத்வகுணம் மட்டும் கொண்ட ஈசுவரனது தொழில், திரோதானத்தைச்செய்பவள் தேவி.

22-2. திரஸ்கரிணீ என்ற சக்தி – தேவியின் பரிவாரங்களில் ஒருவள், பக்தியற்றவர்களுக்குத் தேவி புலப்படாதவாறு மறைப்பாள். திரஸ்கரிணீ – திரை. திரைபோட்டு மறைப்பது போன்று தேவியை மணக்கின்ற திரஸ்கரிணியானவள். (270)

## 23. ஈச்வரீ. ஈச்வரன் வடிவிலுள்ளவள்.

23-1. திரோதானம் என்ற பிரும்மத்தின் நான்காவது தொழிலைச் செய்யும் ஈச்வரநவள் (ஜீவஸமஷ்டியாகக் குறிப்பிட்ட ஈச்வரன், (17.8.1.20 வேறு) பிரும்மா, விஷ்ணு, ருத்திரர் என்ற மூவரும் முறையே ரஜஸ், ஸத்வம், தமஸ் என்ற குணங்கள் மிகுந்தவர்கள். ரஜஸ் அதிகமாகவும் மற்ற இரண்டும் அதற்குத் துணை புரிவதாகவும் உள்ளவர் பிரும்மா. ஸத்வம் மிகுந்து மற்ற இரண்டும் அதற்குத்துணை புரிவதாக உள்ளவர் விஷ்ணு. தமஸ் மிகுந்து மற்ற இரண்டும் அதற்குத் துணை புரிவதாக உள்ளவர் ருத்திரன். மூவரும் முக்குணமுள்ளவரே. இந்த முக்குணங்களுள்ள

மூவரையும் தாண்டி நிற்பவர் ஈசுவரன். நிறமற்ற சூரியனது ஒளியிலிருந்து ஏழு நிறங்கள் தோன்றுவதுபோல் குணமெனக் கருத முடியாத சுத்த ஸத்வத்திலிருந்து ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற குணங்கள் தோன்றின. முக்குணங்களாகப் பிரிவதற்கு முன்னிருந்த நிலை சுத்தஸத்வ நிலை. இதுவும் இரண்டுவிதம். சூரிய கிரணங்களால் வானிற்கு எடுத்துச் செல்லப்பட்ட ஜலாம்சம் கார்மேகமாக நெருக்கமடையுமுன் வானில் பரவி உருத்தெரியாதபடி அவ்யக்தமாக இருப்பது போல் அவ்யக்தமான சுத்தஸத்வம் அனுக்கிரஹம் என்ற பிரும்மத் தொழில் புரியும் ஸதாசிவனது வடிவம். மழை பொழிவதற்காகக் கறுத்த வடிவம் கொண்ட மேகம் போன்று நெருக்கமடைந்த சுத்தஸத்வம் ஈச்வரனது வடிவம். இதனை கனதரசுத்த ஸத்வப்ரதானர் ஈசுவரன்; விரளதர சுத்தஸத்வ ப்ரதானர் ஸதாசிவன் என்று குறிப்பிடுபவர். (கனதர - நெருக்கமடைந்து உருப்பெற்ற; விரளதர - நெருக்கமற்றிருப்பதால் உருக்கொள்ளாது), முக்குணங்களையும் தாண்டிய சுத்தஸத்வம் துரீயநிலை. துரீயரான ஈசுவரனாக இருப்பவர். (271)

### 24. ஸதா - சிவா. ஸதாசிவனாயிருப்பவள்.

24 - 1. நெருக்கமற்று அவ்யக்தமாயிருக்கும் சுத்தஸத்வ வடிவானவர் ஸதாசிவன். ஸதா - எப்போதும், சிவன் - மங்களமானவர். பரம்பொருளின் இச்சாசக்தியின் ஒரு பிரிவான கருணையின் வடிவானவர். கருண மங்கள வடிவம் கொண்டது. அனுக்கிரஹம் எனும் பிரும்மத் தொழில் புரிகின்ற ஸதாசிவனானவள். (272)

### 25. அனுக்ரஹ - தா. அனுக்கிரகம் புரிபவள்.

25 - 1. அனுக்கிரஹம் என்பது பிரும்மத்தின் தொழில். அனு - படைக்கப்பெறும் உலகிற்கு அனுகூலமாக, அதனை ஒட்டி, க்ரஹம் எல்லாவற்றையும் தாங்கி நிற்பது. தேவி அனுக்கிரஹம் புரிகிறாள் என்றால், வழிபடுபவனுக்கு அளிப்பதற்காக இதமானதைத்தாங்கி வழங்க முன் நிற்கிறாள். அப்படி வழங்குகிறாள் என்று பொருள்படும். பிரளயத்திற்கு முன் பிரும்மத்தினுள் அடங்கிய உலகம் மறுபடிப் பரம்பொருளின் ஸங்கல்ப்படி வெளியாவது இவர் கருணையால். பிரளயத்திற்கு முன் அனுபவதித்துத் தீராதிருந்த வினைகளை அனுபவித்துத் தீர்த்துவிடுவதற்காகவே மறுபடி உலகம் தோன்றுகிறது. அதற்கேற்ற தநு - கரண - புவன - போகங்களைக் கருணையால் அமைத்துக்கொடுக்கின்ற ஸதாசிவரானவள்.

25 - 2. திரோதானம் அனுக்கிரகம் என்ற இந்த இரண்டு தொழிலும் பந்தத்தையும் மோக்ஷத்தையும் குறிக்கும் என்பர் சிலர். அவனவனது

வினைக்கேற்ப மறுபிறவியை அமைத்துக்கொடுப்பவர் ஈசுவரன். இதில் ஈசுவரனது செயல் வெளிப்படையாகத்தெரியும். அரசின் சட்டங்களின்படி நேர்மையை அதிகாரத்தின் மூலம் நிலை நிறுத்தி நேர்மையற்றதைக் கண்டிக்கும் அதிகாரிபோல் ஈசுவரன் என்ற நிலையில் தனது அதிகாரத்தைத் தேவி வெளிப்படையாகச்செய்கிறாள்.

25 – 3. இந்த அதிகாரத்தைச் செலுத்திக் கொண்டிருக்கும் போதே, உள்ளம் கனிந்து, சட்டதிட்டங்களுக்குட்படுபவன் அதிகக்கஷ்டத்திற்கு உட்படாமல் நன்மை அடைய வழி ஏதேனும் உண்டா எனக் கருணையால் சிந்தித்து அதற்கேற்ற வழிகளை அமைத்துக்கொடுப்பவர் ஸதாசிவன். இது உள்ளத்தில் கொண்டுள்ள கருணையின் வடிவம். வெளியில்தெரியாது. வெளியில் தெரிகிற ஈசுவரத் தன்மை பாறை போன்று இறுகிய கனிவற்ற தோற்றம். உள்ளத்தில் கருணையால் வெண்ணெய் போன்று நெகிழ்ந்து இனியதான சுபாவம் ஸதாசிவத்தன்மை. ஈசுவரத்தன்மையால் பந்தமளிக்கிறாள். ஸதாசிவத்தன்மையால் மோக்ஷமளிக்கிறாள். வெளியில் கடின சித்தத்துடன்கண்டிப்புள்ளவனாகத் தோன்றினாலும் உள்ளத்தால் தாய்போல் மக்களுக்கு அனுகூலமானதைச்செய்யும் அரசனைப் போன்றவள் தேவி. (ஈச்வர: பஹிருன்மேஷலக்ஷண:, ஸதாசிவ: அந்தருன்மேஷலக்ஷண: – ஈச்வரன் வெளிப்படையாகத் தெரியும் செயலுடையவன், ஸதாசிவன் உள்கிடக்கும் செயலுடையவன்). (273)

## 26. பஞ்ச - க்ருத்ய - பராயணா. ஐந்தொழில்களில் அதிக ஈடுபாடுள்ளவள்.

26-1. பர – அயநம் – முக்கிய நோக்கு, முக்கியப்பணி, முக்கியமான விருப்பம். ஐந்தொழில்கள் புரிதலையும் முக்கிய நோக்கமாகக் கொண்டவள், அவைகளையே முக்கியமான அன்றாட நடவடிக்கைகளாகக் கொண்டவள். அதில் விருப்பத்துடன் ஈடுபடுபவள் தேவி.

26-2. ஐந்தொழில் விளக்கம் – புராணத்தில் ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் என்ற மூன்றின் விளக்கம் விரிவாகத் தரப்படுகின்றது. திரோதானம் ஸம்ஹாரத்திற்குப் பின் பிரும்ம தத்துவத்தில் உலகம் ஒடுங்கும் வகை. அனுக்கிரகம் ஸ்ருஷ்டிக்கு முன் பிரும்மத்திலிருந்தும் உலகம் வெளியாகும் முறை. இந்த ஐந்து தொழில்களும் ஒவ்வொரு கணத்திலும் நடைபெற்று வருகின்றன. உற்பத்தியாவதும் இருப்பதும் அழிவதும் மறைவதும் தோன்றுவதும் சங்கிலித் தொடர்போல் எப்போதும் நிகழ்ந்து

கொண்டிருப்பவை. இந்த ஐந்து தொழில்களும் முழுவதும் நின்றுபோகும் நிலை மஹாப்ரளயம். அந்தப் பெருவிழாவில் ஸாக்ஷிணீயாகத் தேவி நிற்பதை 232, 571 நாமங்கள் கூறும். ஐந்து தொழில்களும் நின்று போகும் நிலை பிரும்மாவின் ஆயுள் முடிவில் ஏற்படுகிறது.

26-3. பிரும்மாவின் ஆயுள் - மனிதனுக்கு நூறாண்டுகள் பூர்ண வயது. பிரும்மாவிற்கும் நூறாண்டுகள் பூர்ண வயது. பிரும்மாவின் வயதுதேவமானத்தால் கணக்கிடப்பெறுகிறது. லக்ஷம், கோடி என்பதுபோல் பரம் எனும் ஓர் எண்ணளவு உண்டு. பத்து, நூறு, ஆயிரம், பத்தாயிரம் லக்ஷம், பத்து லக்ஷம், கோடி என்ற பத்து மடங்கு வரிசை போல, கோடிக்கு மேற்பட்ட பத்து மடங்கு வரிசை பின்வருமாறு. அர்புதம், அப்ஜம், கர்வம், நிகர்வம், மஹாபத்மம், சங்கம், ஸமுத்ரம், (கோடி கோடி) அந்த்யம், மத்யம், பரார்த்தம் (ஆயிரம், கோடி, கோடி) என (18 ஸ்தானங்கள் கொண்டது). பரார்த்தம் என்ற எண் பரத்தின் பாதி. அதனால் இரு பரார்த்தங்கள் அளவுள்ள ஆண்டுகள் பரனான பிரும்மனின் ஆயுட்காலம். பரார்த்த த்வயஜீவிந: என்று ஸங்கல்பம் கூறும். இதனை மற்றொரு வகையில் புராணங்கள் விளக்குகின்றன.

26-4. 2000 சதுர்யுகங்கள் பிரும்மாவிற்கு ஒரு நாள். ஒரு சதுர் யுகம் 43,20,000 ஆண்டுகள். கலி 4,32,000; துவாபரம் 8,64,000; திரேதா 12,96,000; கிருத 7,28,000 ஆண்டுகள். பிரும்மாவின் ஒரு நாளுக்கு 864 கோடி ஆண்டுகள். அதில் பகல் 432 கோடி ஆண்டுகள். இரவு 432 கோடி ஆண்டுகள். இப்படி 365 நாட்கள் கொண்ட 100 ஆண்டுகள் அவரது ஆயுட்காலம். மற்றொரு வகையிலும் கணக்கிடுவது உண்டு. நமது ஓர் ஆண்டு தெவர்களுக்கு ஒரு நாளாகும். அப்படி 360 நாட்கள் கொண்ட 12,000 ஆண்டுகள் பிரும்மாவின் பகல்; 12,000 ஆண்டுகள் பிரும்மாவின் இரவு. இதன் முடிவில் ஏற்படுவது பிரும்மப் பிரளயம் எனும் மஹாப்பிரளயம் (நா. 232, 571)

26-5. பிரும்மாவின் பகலாகிய 432 கோடி ஆண்டுகளில் 14 மனுக்கள் உலகத்தை ஆள்கின்றனர். ஒவ்வொரு மனுவின் ஆளுகைக் காலத்தை மந்வந்தரம் என்பர். தற்போது நடைபெறும் பிரும்ம தினத்தில் ஸ்வாயம்புவர், ஸ்வாரோசிஷர், உத்தமர், தாமஸர், ரைவதர், சாக்ஷுஷர் என்ற ஆறு மனுக்களின் அந்தரங்கள் நடைபெற்றுவிட்டன. வைவஸ்வத மன்வந்தரம் தற்போது நடைபெற்று வருகிறது. இதன்பின் ஸாவர்ணி,

தக்ஷஸாவர்ணி, ப்ரும்ஹஸாவர்ணி, தர்மஸாவர்ணி, ருத்ரஸாவர்ணி, தேவஸாராவர்ணி, இந்த்ரஸாவர்ணி என்ற ஏழு மனுக்கள் வரவிருக்கின்றனர். ஒரு மனுவின் ஆட்சிகாலம் 71 6/14 சதுர்யுகங்கள் - 30,85,71,428 ஆண்டுகள். பகலில் 14 மனுக்கள் ஆண்ட பின் பிரும்மாவின் இரவு தொடங்குகிறது. இரவாகிய ஆயிரம் சதுர் யுகங்களும் ஒரு பிரளய காலம்; இந்த பிரளயம் **பிரும்ம தினப் பிரளயம்.**

26-6. ஒவ்வொரு மனுவின் ஆட்சியின் முடிவிலும் ஒரு பிரளயமுண்டு. இது **மந்வந்தரப்பிரளயம் அவாந்தரப்பரளயம் வைக்ருதிக ப்ரளயம்** எனப்படும். தற்போது நடக்கும் வைவஸ்வத மந்வந்தரத்திற்கு முன் நடந்தது சாக்ஷுஷ மன்வந்தரம். அதன் முடிவில் ஏற்பட்ட அவாந்தரப் (இடைவெளி) பிரளத்தில் வேதம் ஸப்தரிஷிகள் மூலப்பொருள்கள் முதலியவற்றைக்காப்பாற்ற வைவஸ்வத மனுவாக வரவிருந்த ஸத்யவிரதருக்கு உதவுவதற்காக நாராயணன் மத்ஸ்யாவதாரம் எடுத்து ஓடத்தில் அவர்களை ஏற்றிப் பிரளய காலம் முழுவதும் காப்பாற்றினார் என்று புராணம் கூறும். (நா. 604)

26-7. **பிரளயம்** - நமது வாழ்வில் ஒவ்வொரு க்ஷணத்திலும் முத்தொழில்களும் நடைபெறுகின்றன. ஒரு பொருள் மற்றொரு பொருளாக மாறும்போது ஒன்றின் தன் நிலை அழிவும் மற்றொன்றாகப் படைப்பும் இவற்றின் இடையில் காத்தலும் நிகழ்கின்றன. அதே வேகத்தில் வினைப்பயன்களைக் கணக்கிட்டு மூலப்பொருள்களை அதற்கேற்ப மாற்றியமைத்து ஸ்தூல - ஸுக்ஷ்ம - காரண தேகங்களின் மாற்றமும் நடைபெறுகிறது. வினப்பயனுக்கேற்ப மூன்று தேகங்களை அமைக்கும் பந்தமும், பந்தத்திலிருந்தும் விடுவிக்கும் அனுக்கிரகமும் இப்படி நிகழ்ந்து கொண்டிருக்கும். இது நித்தியமும் நடைபெறும் பிரளயமானதால் **நித்தியப்பிரளயம்** எனப்படும்.

26-8. ஒவ்வொரு இரவிலும் அடையும் நல்ல தூக்கமும் ஒரு பிரளயமாகும். ஆத்மாவிடம் மற்றவை அடங்கும் பிரளயம் இது. இதுவும் ஒரு நித்தியப் பிரளயமே.

26-9. மன்வந்தரத்தின் இறுதியிலும் அவாந்தரப்பிரளயம் நிகழ்கிறது. இதில் பூலோகம் மறைகிறது. அடுத்த மன்வந்தரத்தின் அதிபதியாக இருக்கத் தக்கவர், வேதத்தைக் காப்பாற்றும் ஸப்தரிஷிகள், உணவு விதைகள், மனிதன் முதலான எல்லாபிராணி இனத்தையும்

அடுத்த மன்வந்தரத்தில் துவக்கி வைக்கக்கூடியவர்கள் முதலியவர்கள் மட்டும் காப்பாற்றப்படுவார்கள். மற்றவை அனைத்தும் அந்தப் பிரளய ஜலத்தில் கரைக்கப்பட்டுச் சூட்சுமமாக்கப்பட்டு மஹாபூத நிலைக்குக் கொணரப்படுகின்றன. அவைகள் தன்மாத்திரங்களாக்கப்பட்டுத் திரோதானமடைகின்றன. அடுத்த மன்வந்தர ஆரம்பத்தில் பிரளய காலத்தில் காப்பாற்றப்பட்ட மனு முதலியவர்களால் ஸ்ருஷ்டி துவக்கப்படும் போது பூலோகமும் தன்மாத்திர நிலையிலிருந்து விடுவிக்கப்பட்டு (அனுக்கிரகம்) ஐந்து மஹாபூதங்களாகிப் பிராணிகளாகவும் மரம் செடி கொடி முதலியனவாகவும் படைக்கப்படுகின்றன. பிரகிருதி, பிரகிருதி - விகிருதி, விகிருதி என்ற மூன்ற நிலைகளிலுள்ள மூலப் பொருள்களில் (17-8-12) விகிருதி என்ற நிலையிலுள்ள மூலப் பொருள்கள் மட்டும் இதில் லயமாவதால் வைகிருதிகப்பிரளயம், விகிருதிப் பிரளயம் என்பர்.

26-10. பிரும்மதினத்தைக் கல்பம் என்பர். தற்போது நடப்பது சுவேதவராஹ கல்பம் எனும் பிரம்மதினம். பிரும்ம தினத்தின் மாலைக்குப்பின் இரவு தொடங்கும்போது ஏற்படும் பிரளயம் கல்பாந்தப்பிரளயம் எனும் பிரும்மதினப் பிரளயமாகும். பிரும்மலோகம் தவிர கீழுள்ள உலகங்கள் மறையும். மனு முதலியவர்களும் மறைவர். பிரிகிருதி தவிர மற்றவை மறைவதால் இது பிரகிருதப் பிரளயமாகும். பிரும்மாவின் மறுநாள் விடியும்போது பிரகிருதி எனும் மூலப்பொருலிலிருந்து மஹத் முதலிய பிரகிருதி - விக்ருதிகளும் அதிலிருந்து புதிய உலகங்களும் தோன்றும். பிரும்ம - விஷ்ணு - ருத்திரர்கள் மறைவதில்லை. அவர்களது உலகங்களும் மறைவதில்லை. பிரும்மலோகம் தவிர மற்ற 13 லோகங்களும் மறைந்து திதோதானமும் அதனைத் தொடர்ந்து புது ஸிருஷ்டிக்கான அனுக்கிரஹமும் இப்போது நடைபெறுகின்றன.

26-11. மஹாகல்பம் எனும் பிரும்மாவின் ஆயுட்காலம் முடிந்ததும் ஸிருஷ்டியும் ஸ்திதியும் நின்றுவிடுகின்றன. 14 உலகங்களும் மறைகின்றன. திரிமூர்த்திகளும் செயலிழந்து தேவியடம் அடங்குகிறார்கள். (நா.270-271) ஈசுவரன் மஹாபூதங்களைத் தன்மாத்திரங்களும், தன்மாத்திரங்களை அஹங்காரத்திலும், அஹங்காரத்தை மஹத்திலும், மஹத்தை அவ்யக்தத்திலும், அவ்யக்தத்தை மூலப்பிரகிருதியிலும் மூலப்பிரகிருதியை மாயையிலும் ஒடுக்கிவிடுகிறார். மஹாகல்பத்தின் இறுதியில் மஹேசுவரன் மஹாதாண்டவமாடுகிறார். (நா.232) தானும் கடைசியில் தேவியிடம் ஒடுங்கிவிடுகிறார். இது மஹாப்பிரளயம். பின்னர்தேவியிடம் ஸிருஷ்டிக்கான ஸங்கல்பம் எழும்போது ஸதாசிவன்

தேவியிடம் ஒடுங்கியவைகளை வெளிக்கொணர்ந்து உலகப் படைப்பிற்கான மூலப் பிரகிருதி முதலியவற்றை விடுவிக்கிறார். இந்த அனுக்கிரஹம் நிகழ்ந்ததும் ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் என்ற முத்தொழில்கள் வழிசையாகத் தொடங்குகின்றன.

26-12. பிரகிருதிவரை ஏற்படும் இந்தப் பிரளயம் கீழ்க்கண்ட முறையில் அமைகிறது. நூறாண்டுகள் பூமியில் மழை இருக்காது. உணவுப் பயிர்கள் மறையும். பிராணிகள் ஒருவருக்கொருவர் அடித்துக்கொண்டு மாண்டவரை உண்டு வாழ்வர். பூமி, கடல், பிராணிகளின் உடல் முதலியவற்றிலுள்ள நீர்ப்பகுதியை பிரளயகால சூர்யன் வளரச் செய்கிறான். திரும்ப மழையாக அதனைவிடாமல் தன்னிடம் அடக்கிக்கொள்கிறான். பிரளயகால நெருப்பு நூறாண்டுகள் எரிக்கிறது. நன்கு எரிந்த கோமயப் பிண்டம்போல் உலகமாகிறது. அதனைப் பேய்க்காற்று அணைத்து எரிந்தவற்றை சாம்பலாக்கிப் புழுதியாக்கிப் பறக்கவிடுகிறது. இதனைத்தொடர்ந்து நூறாண்டுகள் பிரளய மேகங்கள் தொடர்ந்து பொழிகின்றன. ஜலத்தில் உலகம் கரைந்துவிடுகிறது. பூமி எரிந்து சாம்பலாகி பூமியின் இயற்கைக் குணமான மணமும் ஜலத்தில் கரைந்து மறைந்ததும் பூமி தத்துவம் ஜலத்தில் லயமடைகிறது. ஜலம் வற்றி நெருப்பில் மறைகிறது. காற்று ஆகாசத்திலும், ஆகாசமும் இந்திரியங்களும் மனமும் பிராணனும் அஹங்காரத்திலும், மஹங்காரம் மஹத்திலும், மஹத்து அவ்யக்தத்திலும், அவ்யக்தம் மூலப் பிரகிரிதுதியிலும், மூலப் பிரகிருதி மாயையிலும், மாயை பிரும்மத்திலும், மூலப்பிரகிரிதி மாயையிலும், மாயை பிரும்மத்திலும் மறைகின்றன. தோன்றுவதும் அப்படியே. கடைசியில் புகுந்தது முதலில் வெளியாக மற்றவற்றின் தோற்றத்திற்குக் காரணமாகிறது. (274)

* * *

அதிகாரம் - 18

# தேவியின் பலவிதத் தோற்றங்கள் - விபூதிகள்

(நா. 275 - 280)

भानुमण्डलमध्यस्था भारवी भगमालिनी ।
पद्मासना भगवती पद्मनाभसहोदरी ॥ 65 ॥

**பானுமண்டலமத்த்யஸ்தா பைரவீ பகமாலிநீ.**
**பத்மாஸநா பகவதீ பத்மநாபஸஹோதரீ. 65**

**1. பாநு - மண்டல - மத்த்யஸ்தா. சூரிய மண்டலத்தின் நடுவில் இருப்பவள்.**

1 - 1. பகலும் இரவும் கூடும் வேளைகளான ஸந்தியா காலங்களில் சூரிய மண்டலத்தில்தேவியைத் தியானிப்பர். தேவி நமது மூன்று தேகங்களுக்கும் ஒளியும் சக்தியும் தரும் அந்தர்யாமியாயிருப்பதுபோல், ஒளி மண்டலத்திற்கும் பேரொளி வழங்குபவளாக, அந்த ஒளி மண்டலத்தின் உள்ளேயே இருக்கிறாள். முன்ப சந்த்ர மண்டல மத்தியகா வாகத்தியானித்தோம். (நா.240) வஹ்நி மண்டலவாஸிநீயாக 352ம் நாமம் தேவியை அறிமுகப்படுத்தவிருக்கின்றது. ஸூர்யன், சந்திரன், நெருப்பு என்ற தேஜோமண்டலங்கள் அனைத்திலும் உள் உறைபவளாக, அவைகளுக்கும் ஒளிரும் தன்மையை அளிப்பவளாகத் தியானம் செய்து அவ்வொளி நம் இதய குகையினுள்ளும் பரவி நின்று அருள்புரிய வேண்டுகிறோம்.

1-2. அனாஹதத்தைக் கேந்திரமாகக்கொண்டு குண்டலினி ஸுஷும்நா காண்டத்தில் உறையுமிடம் ஸூர்ய கண்டம். (12.10.1), அங்கு உறைபவள். தேவி. (275)

**2. பைரவீ. பைரவரது சக்தி.**

2-1. பைரவர் - பயங்கரர். முத்தொழில் புரிவதால் பயங்கரத் தோற்றம் கொண்டவர் பரமசிவன். அவரது சக்தியாயிருப்பவள் தேவி.

2-2. பீரு: - பயத்தைச் சுபாவமாகக் கொண்டவளான பெண். அத்தகைய பெண்களது கூட்டம் (பீருணாம் ஸமூஹ:) பைரவம், அக்கூட்டமாயிருப்பவள் தேவி. பெண்களுக்குரிய தர்மங்களைப் பேணுவதில்தான் அவர்களுக்குப் பயம். தர்மத்திற்குப் பயந்து அதற்கு

அடங்கி நடக்கின்ற அருந்ததீ, அனஸூயா, லோபாமுத்திரை முதலிய பதிவிரதைகளாக இருப்பவள் தேவி. ஸ்த்ரீ லிங்கசப்தவாச்யா யே ஸர்வா தேவ்யா விபூதய: பெண்பாலுள்ள சொற்களால் கூறப்படுபவர்கள் அனைவரும் தேவியின் சிறப்புத்தோற்றங்கள் என்கிறது லிங்க புராணம். பைரவரது சக்தியாயிருந்து பயன் தருபவள் அவள். பயப்படும் பதிவிரதைகளும் அவளே.

2-3. பிரதமை முதல் பௌர்ணமி முடிய 15 நாட்களுக்குச் செய்யும் கன்னிகை பூஜையில் துவாதசியன்று 12 வயதுள்ள கன்னிகையாக பூஜிக்கப்பெறுபவள், பைரவீ. 12 வயதுள்ள கன்னிகை பைரவீ. (18.11.2) பைரவீ என்ற மந்திர வடிவினள். (276)

### 3. பகமாலிநீ. பகமாலினியாக இருப்பவள்.

3-1. பகம் - முக்கோணம், யோநி, பல பகங்களை மாலையாகக் கோர்த்துத் தன் கழுத்தில் அணிந்தவள். 15 நித்யாதேவிகளில் சுக்கில பக்ஷத்துத் துவிதீயை - கிருஷ்ண பக்ஷத்து சதுர்தசி திதிகளின் நித்யாவாகவும் வழிபடப் பெறுபவள் பகமாலினீ. (10.8.1, 18.6.2) (277)

4. பத்ம - ஆஸநா. தாமரையை ஆஸனமாகக் கொண்டவள்.

4-1. தாமரையை ஆஸனமாகக் கொண்டவர்கள் லக்ஷ்மியும், ஸரஸ்வதியும், பிரும்மாவும். இம்மூவரின் வடிவிலிருப்பவள். உலகம் நாராயணனின் தொப்புளிலிருந்து ஒரு தாமரை வடிவில் தோன்றியது. அதனுள் அமர்ந்து அதனைப் பலவாறாக அமைத்தார் பிரும்மா. நீண்ட வட்ட வடிவம் கொண்டது தாமரை. வேகமாகச் சுற்றிவரும் வட்டம் நீண்ட வட்ட வடிவம் பெறும். அண்டம் - முட்டை. அண்ட வடிவில் நீண்ட வட்ட வடிவம் கொண்டதானதால் உலகத்தை அண்டம். அண்டகோசம், பிரும்மாண்டம் என்று குறிப்பிடுகிறோம். உலகம் ஒரு தாமரை. பிரகிருதி (17.8.1.10) அதன் இதழ்கள். விக்ருதி அதன் கேஸரங்கள் (பூக்கூந்தல்கள்) சைதன்ய சக்தி இவைகளுக்கு ஊட்டம் தரும் தண்டு. இத்தகைய தாமரையைத் தனது ஆஸனமாக, தான் விளங்கக் கூடிய இடமாகக் கொண்டவள்.

### 5. பகவதீ. ஈச்வரசக்தி அனைத்தையும் பெற்றவள்.

5-1. உலகத்தின் தோற்றம், அதன் மறைவு, பற்பலவான பொருள்கள் வந்த வழி, சென்ற வழி, அஞ்ஞானம், ஞானம் இவைகளைப்பற்றிய முழு அறிவு பெற்றவளானதால் தேவி பகவதீ எநப்படுவாள். (உத்பத்திம் ப்ரலயம் சைவ பூதாநாம் ஆகதிம் கதிம். அவித்யாவித்யயோஸ்தத்வம் வேத்தீதி

பகவத்யஸெள – தேவீபாகவதம்) உலகத்தின் தோற்றத்தையும், மறைவையும் பற்றி உலகம் தோன்றுவதற்கு முன்னும் பின்னும் இருக்கும் அவள் தான் அறிவாள். நடுவில் தோன்றும் பற்பல பொருள்களில் வந்த வழி, சென்ற வழி பற்றி, எங்கும், எந்நேரத்திலும், எதிலும் நீக்கமற நிறைந்திருக்கும் அவள்தான் அறிவாள். அவித்யையையும், வித்யையையும் பற்றி ஞானஸ்வரூபிணியான அவள் ஒருவள்தான் அறிந்திருக்க முடியும். ஆகவே பகம் என்ற பேரறிவு பெற்றவளானதால் தேவி ஒருவளே பகவதீ.

5–2. பகம் – ஆறு குணங்கள். (1) நிறைவு பெற்ற ஐச்வர்யம் (ஆளும்சக்தி (2) எல்லாவற்றையும் வரம்பிற்குள் அடக்கிச்சீராகத்தாங்கி நிற்கும் தர்மம் (3) புகழ் (யசஸ்), (4) செல்வம், (5) பேரறிவு – எதனையும் அறியும் திறம் (6) தனிப்பட்ட ஒரு வித்யையில் விரிந்த அறிவு (விஞ்ஞானம்) இவை ஆறும் பகம் எனப்படும். ஈச்வரனது அவதாரமாகத் தோன்றுபவர்களிடத்தில் கூட இதில் ஒன்றிரண்டு சக்திகள் கூடிச் சிறப்புற்றும், மற்றவை தனிச்சிறப்புற்றும் காணப்பெறுமிடம். எல்லாம் ஒரே சீராகச் சிறப்புற்று நிறைவுடன் காணப்பெறுமிடம் பகவதீ. (பகவான்). பகம் எனும் ஈச்வர சக்திகள் ஏதேனும் ஓரம்சத்தைப் பெறுவதுகூட விரும்பத்தக்க பாக்கியம், ஸெளபாக்கியம். (279)

### 6. பத்மநாப - ஸஹோதரீ. பத்மநாபனின் சோதரி.

6–1. தேவியின் ஸங்கல்பத்தால் மூன்று அண்டங்கள் தோன்றி. அவைகளுள் மூன்று இரட்டைக் குழந்தைகள்தோன்றினர். தங்கநிறமுள்ள பிரும்மாவும், லக்ஷ்மியும் சேர்ந்து தோன்றியதால் சோதரர்கள். நீல நிறமுள்ள விஷ்ணுவும் அம்பிகையும் சோதரர்கள். வெண்ணிறமுள்ள சிவனும் ஸரஸ்வதியும் சோதரர்கள். ரஜஸ், தமஸ், ஸத்வம் என்ற முக்குணங்கள் கூடியவர்கள் ஒருவருக்கொருவர் குணவழியில் உதவி நிற்பதற்காகப் பிரும்மனுடன் ஸரஸ்வதியியையும், விஷ்ணுவுடன் லக்ஷ்மீயையும், சிவனுடன் அம்பிகையையும் தேவி இணைத்து வைத்தாள். தாமரையைத் தொப்புளில் தோற்றுவித்த விஷ்ணுவின் சோதரியாகத் தோன்றியதால் தேவி பத்மநாப ஸஹோதரீ. காஞ்சியில் வரதராஜருடன் தேவி காமாக்ஷி சேர்ந்து தோன்றினாள். (காஞ்சி புராணம்) அந்தத் தோற்றத்திலும் பத்மநாப ஸஹோதரீ.

6–2. ஸஹஸ்ரநாமத்தின் ஒவ்வோர் அக்ஷரமும் மந்திரம். அதனைச் சொற்களாகப் பாவித்து இதுகாறும் நாம் பொருள்கண்டு வந்திருக்கிறோம். ஆனால் பாஸ்கரராயர் இதன் ஒவ்வோர் அக்ஷரத்திற்கும் பொருள் காணமுடியும். என்று இங்கு விளக்கம் தந்துள்ளார். பத்மாஸநா பகவதீ

பத்மநாப ஸஹோதரீ என்ற இந்த மூன்று நாமங்கள் பஞ்சதசாக்ஷரியின் வாக்பவகூடமாக அமைந்த 5 அக்ஷரங்களைக் குறிப்பிடுவதாக பாஸ்கரராயர் உரைதருகிறார். மந்திரங்களில் உள்ள அ, ஆ முதலிய 50 எழுத்துக்களையும் குறிப்பிட ஸங்கேத மொழியில் ஒரு கோசம் உண்டு. இந்த கோசத்தை ஒட்டி சிவ: சக்தி: காம: க்ஷிதிரத ரவிச் சீதகிரண: ஸமரோஹம்ஸ: சக்ரஸ் ததநு ச பராமாஹரய: அமீ ஹ்ருல்லேகாபிஸ் திஸ்ருபிரவாஸாநேஷு கடிதா: பஜந்தே வர்ணாஸ்தே தவ ஜநநி நாமாவயவதாம் என்ற ஸௌந்தர்யலஹரியின் 32வது சுலோகம் பஞ்சதசாக்ஷரியின் அக்ஷரங்களை ஸங்கேத மொழியில் குறிப்பிடுகிறது. சிவ: க, சக்தி: ஏ, காம: (காமேசுவரன்) ஈ, க்ஷிதி: (பூமி) ல, இத்துடன் முடிவில் ஹ்ருல்லேகா - ஹ்ரீம். இப்படி எழுத்துக்கள் உன் மந்த்ரமாகிய பெயரின் அவயவங்களாகின்றன. இதில் ஒவ்வொரு தெய்வத்தின் பெயர் ஒவ்வொரு எழுத்தை ஸங்கேத மொழியில் தெரிவிப்பதைக் காண்கிறோம். அதே முறையில் பத்மாஸநா பகவதீ பத்மாபஸஹோதரீ என்ற மூன்று நாமங்களும் வாக்பவ கூடத்தின் க, ஏ, ஈ, ல, ஹ்ரீம் என்ற எழுத்துக்களைக் குறிப்பிடுவதைக் காண்போம். பத்மாஸந - பிரும்மா, ஸங்கேத கோசப்படி க. பகம் என்றால் யோநி. யோநி - பெண்ணின் கருவகம். அதன் வெளியமைப்பு முக்கோண வடிவில் உள்ளது. ஏ என்ற எழுத்து ஆதி லிபியில் முக்கோண வடிவில் அமைந்திருந்தது.

---

கீழே ஏ என்ற எழுத்தின் பண்டைய லிபி வடிவங்கள்.



1 2 3 4 5 6 7 8 9 10 11 12

1-11. எண்ணுள்ளவரை ஏ என்ற எழுத்தின் கல்லெழுத்து வடிவங்கள். 12. மந்திரங்கள் குறிப்பிடும் ஆதிலிபியில் இருக்கும் ஏயின் வடிவமாக ஊகிக்கப்படுவது.

1. தமிழ் குகைக்கல்வெட்டு (கி.மு மூன்றாம் நூற்றாண்டு). 2. மௌர்யன் (கி.மு. மூன்றாம் நூற்றாண்டு) 3. ஸாதவாஹனர் (கி.பி. 3ம் நூற்றாண்டு) 4. க்ஷத்ரபர் (கி.பி. 2ம் நூற்றாண்டு) 5. குப்தர் (கி.பி. 5ம் நூற்றாண்டு) 6. யசோதர்மர் (கி.பி. 6ம் நூற்றாண்டு) 7. பல்லவர் (கி.பி.7ம் நூற்றாண்டு) 8.சாளுக்கியர் (கி.பி. 11ம் நூற்றாண்டு) 9. சோழர் (கி.பி. 13ம் நூற்றாண்டு) 10-11. விஜயநகரம் (15ம் நூற்றாண்டு)

(யௌதி – ஸம்யோஜயதி. வினைப்பயனாகப் பிறவி பெறவிருக்கின்ற ஸூக்ஷ்ம சரீரம் தந்தையின் வந்து வழியே தாயின் கருவறைக்குள் செல்கிறது. அங்கு அதற்கான ஸ்தூல சரீரத்திற்கான நாதமெனும் கரு காத்துக்கொண்டிருக்கிறது.ஸ்தூல சரீரத்தை ஸூக்ஷ்ம சரீரத்துடன் சேர்த்துக்கருவாக உருவாக்குமிடம் யோநி.) பகவதீ + ஈ என்று சேரும்போது தீர்க்க ஸந்தியில் பகவதீ என்றே நிற்கும். அந்த மறைந்த ஈ என்ற எழுத்து மூன்றாவது எழுத்துதாகும். பத்மநாபன் வாமனாவதாரத்தில் அதிதியின் பிள்ளையாக வந்தவராதலால் இந்திரனின் ஸகோதரராகிறார். பத்மனாபனுடன் கூட இருந்தவன் பத்மாஸ - இந்திரன். அவனால் குறிப்பிடப்படும் எழுத்து ல. ஹோதரீ, ஹ எனும் எழுத்து, உத – ஜலம் (ஜலம் – சொட்டு – பிந்து), ஹ வுடனும், பிந்துவுடனும் கூடிய ரீ (ஹோதரீ) ஹ்ரீம் ஆ க, ஏ, ஈ, ல, ஹ்ரீம் என்ற ஐந்தெழுத்து பத்மாஸனா, பகவதீ, பத்மநாப ஸஹோதரீ என்று மூன்று நாமங்களுக்குள் அடங்கி இருப்பதை ஸங்கேதகோச அறிவும், நுண்ணறிவும், தேவியின் திருவருள் பயனாகப் பெற்ற திவ்ய ஞானமும் பெற்றவர்கள் மட்டுமே அறிவர். (280)

(நா. 281 - 284)

**उन्मेषनिमिषोत्पन्नविपन्नभुवनावली ।**
**सहस्रशीर्षवदना सहस्राक्षी सहस्रपात् ॥ 66 ॥**

**உந்மேஷ நிமிஷோத்பந்த விபந்ந புவநாவளீ.**
**ஸஹஸ்ரசீர்ஷவதநா ஸஹஸ்ராக்ஷீ ஸஹஸ்ரபாத்.66**

**7. உந்மேஷ - நிமிஷ - உத்பந்ந - விபந்ந - புவந - ஆவலீ. கண்கள் திறந்து மூடுவதற்குள் உண்டாகி மறைந்த உலக வரிசையுடன் கூடியவள்.**

7-1. தேவி காலத்தைக் கடந்தவள்.ஸகுணமான வடிவில் அவளது அழகிய கண்கள் இமைப்பொழுது மூடித்திறக்கும். ஒவ்வொரு தடவையும் இமைகள் மூடித்திறக்கின்ற கணத்திற்குள் பலகோடி உலகங்கள் தோன்றி மறையும். இமைப்பதற்கு முயற்சி தேவை இல்லை. அதனால் சிரமமோ, களைப்போ ஏற்படாது. அதற்கான ஸங்கல்பம் தேவையில்லை. தானே நிகழக்கூடியது. இமைப்பவன் உயிருடன் இருக்க வேண்டும். ஒன்று மட்டும் தேவை. தேவி உலக வரிசையைப் படைக்க ஸங்கல்பமோ முயற்சியோ எடுத்துக்கொள்வது கிடையாது. அவளது அருகாமையே உலகைப் படைத்தும் மறைத்தும் விடுகிறது. கண் இமைப்பதும் மூடுவதும் பிரும்ம நிலையில் கற்பனையால் ஏற்படுத்தப்பட்டது. படைப்பது மிக எளிதான காரியம் என்பதைக் காட்ட இந்த கற்பனை. (281)

**8. ஸஹஸ்ர - சீர்ஷவதநா. எண்ணற்ற தலைகளும், வாய்களும் உள்ளவள்.**

**9. ஸஹஸ்ர அக்ஷீ. எண்ணற்ற கண்களுள்ளவள்.**

**10. ஸஹஸ்ர பாத். எண்ணற்ற கால்களுள்ளவள்.**

10 – 1. தேவியின் விராட் ஸ்வரூபத்தை (17-8-1-10) இந்த மூன்று நாமங்களும் விளக்குகின்றன. உலகைப் படைக்குமுன் தேவியின் ஸங்கல்பம் விரிந்து ஐந்து மஹாபூதங்கள் தோன்றியதும் அவை வினைப்பயனையொட்டி அந்தந்த ஜீவன் நுழைவதற்கேற்ப விசித்திரமான பல கூடுகளாகச் சேர்ந்து தனித்தனி உருவங்களைப் பெற்றன. ஒவ்வொன்றையும் தனித்து அடையாளம் காட்டுவதற்காகத் தலை முதலியவைகளின் அமைப்பு ஒவ்வொன்றிலும் வேறுபட்டதாக அமைக்கப் பெற்றது. அப்படி அமைந்த தலைகளும் வாய்களும் கண்களும் கால்களும் எத்தனை எத்தனையோ, ஸஹஸ்ரம் – ஆயிரம். எண்ணற்ற எனப் பொருள். அந்தந்த அங்கங்களைத் தனித்தனியாக எண்ணற்றவையாக முதலில் படைத்து அவைகளைத் தக்கபடி பிறகு சேரச்செய்து முழு உருவமாக்குகிறாள் தேவி. அப்படிப்டைக்கப்பெற்ற எண்ணற்ற தலை முதலியவை கொண்ட விராட் வடிவினள். (282-284)

(நா. 285 - 288)

आब्रह्मकीटजननी वर्णाश्रमविधायिनी ।
निजाज्ञारूपनिगमा पुण्यापुण्यफलप्रदा ॥ 67 ॥

**ஆப்ரம்ஹகீடஜநநீ வர்ணாச்ரமவிதாயிநீ.**
**நிஜாஜ்ஞாரூபநிகமா புண்யாபுண்யபலப்ரதா. 67**

**11. ஆ - ப்ரம்ஹ - கீட ஜநநீ. பிரும்மா முதல்புழு வரை எல்லாவற்றையும் பெற்றவள்.**

11-1. எல்லா ஜீவர்களது ஸமஷ்டியான ஹிரண்யகர்ப்பன் பிரும்மா. (17-8-22, 25) படைக்கும் சக்தி படைத்தவனாக பிரும்மத்தின் முதல் தோற்றம் பிரும்மா. கீடம் புழு. கண்களுக்குப் புலப்படாத மிக நுண்ணிய உருவம் உள்ளது. பெரு உருவமுள்ள தெய்வநிலை பெற்ற நான்முகன் தொடங்கிக் கண்களுக்குப்புலப்படாத ஈன ஜந்துவான புழுவரை உலகனைத்திற்கும் தாய். பிரும்மாவிற்கும் புழுவிற்கும் இடையே பெருத்த

வேறுபாடு இருக்கக்கூடும். ஆனால் தாயான தேவிக்குத் தான் பெற்ற ஜீவர்களிடத்தில் வேறுபாடு கிடையாது. எல்லோருக்கும் அவள் தாய். (நா.823) (285)

### 12. வர்ண - ஆச்ரம - விதாயிநீ. வர்ண ஆசிரம முறைகளை வகுத்தவள்.

12-1. பிரும்மா முதல் புழு ஈறாக எல்லாவற்றையும் படைத்த தேவி, படைக்கப்பட்டவர்களுக்கு நல்வழி காட்டுவதற்கெனத் தனது ஆணையே வடிவெடுத்த வேதத்தைத் தோற்றுவித்தாள். கர்மகாண்டம், பிரும்மகாண்டம் என இரண்டு பகுதிகளாக அதைப் பிரித்தாள். அதில் மனிதனைத்தவிர மற்றவர்களுக்கு வேதத்தில் கூறப்பட்ட முறைகளைப் பின்பற்ற வாய்ப்பில்லாததால், மனிதனை மட்டும் வர்ணங்கள் என்ற பிரிவில் அடக்கிப் பின் தகுதிக்கேற்ற நான்கு ஆசிரமங்களை வகுத்தி அடக்கிப் பின் தகுதிக்கேற்ற நான்கு ஆசிரமங்களை வகுத்து அந்தந்த நிலையில் பின்பற்ற வேண்டிய முறைகளை வேத்ததின் மூலமும் அதை ஒட்டிய ஸ்மிருதி முதலானவற்றாலும் அமைத்துத் தந்தாள். அப்படி வர்ணங் களையும் ஆசிரமங்களையும் வகுத்துத்தந்தவள் தேவி. (நா.828). (286)

### 13. நிஜ - ஆஜ்ஞா - ரூப - நிகமா. தனதுகட்டளைகளின் வடிவமாக உள்ள வேதங்களை உடையவள்.

13-1. தேவி கட்டளைகளை வேத்தின் மூலம் வெளியாக்கினாள். இதைச்செய், இதைச் செய்யாதே என்ற விதியும் நிஷேதமும் வேதத்தில் வெளியிடப்பெறுகின்றன. செய் செய்யாதே எனக் கட்டளையிடுபவள் தேவி. அதன் மூலம் வர்ணதர்மங்களையும் ஆசிரமதர்மங்களையும் வரையறுத்துத் தந்திருக்கிறாள்.

நிகமம் - வேதம். காரியகாரண விளக்கத்துடன் நிரூபிப்பது நிகமநம். அப்படிக் காரியகாரண விளக்கத்துடன் வேதம் ஈசுவர தத்துவத்தைக் காட்டுவதால் வேதம் நிகமமாகும். ஈசுவரத் தத்துவத்தில் ஆட்படுத்தும் சக்தியும் அடங்கியுள்ளது. ஆட்படுத்துபவளது கட்டளைகளையும் வேதம் தாங்கி நிற்கிறது. மக்களுக்கு இதத்தை நயத்துடன் நண்பன் போல் கூறுவது புராணம். மனைவிபோல் அன்பில் தோய்த்துக் கூறுவது காவியம். அரசனது கட்டளைபோல் கூறுவது வேதம். மனைவியின் சொல்லை மீறமுடியாதபடி அன்பு மயக்கும். நண்பனின் சொல்லை மீற முடியாதபடி நட்பு வற்புறுத்தும். அரசனின் ஆணையை மீறமுடியாதபடி அதன் பின்னுள்ள தண்டனை கட்டுப்படுத்தும். (287)

### 14. புண்ய - அபுண்ய - பல - ப்ரதா. புண்ய - பாப - வினைகளின் பலனைத் தருபவள்.

14-1. தான் வரையறுத்து நிலை நிறுத்தியபடிச் செய்ய வேண்டியதைச் செய்வதால் புண்யமும் செய்யத் தகாதவைகளைச் செய்வதால் பாபமும் விளைந்ததை தேவி கணக்கிட்டு அதற்கேற்பப் பலன்களையும் அளிக்கிறாள்.

புண்ய – பாப வினைகள் என்று கூறாமல் புண்யம் அபுண்யம் என்று கூறியதில் ஒரு தத்துவமுண்டு. அபுண்யம் என்ற சொல்லிற்கு புண்யம் போலத் தோன்றுவது என்ற பொருளும் உண்டு. அதுபோல் நமது அறியாமையாலோ ஆணவத்தாலோ பாபச் செயலைப் புண்ணியமாக நினைத்துச்செய்திருப்போம். அதன் பின்விளைவை நாம் முன் அறிந்திருக்க முடியாது. அதற்காகவே வேதம் இதனைச் செய்யாதே என்ற கண்டிப்பாய் பாபச் செயலைத் தவிர்க்கக் கூடியது. அதனை மதிக்காமல் பாப வினைகளை மக்கள் புரியும்போது தேவி நீதிபதிபோல் அந்த வினைக்கும் பலன் தரவேண்டி வருகிறது. அன்புள்ளம் படைத்தவளாயினும் தவறுகளைத் தண்டிக்காமல் அவளால் இருக்க இயலாது. (288)

(நா. 289 - 290)

श्रुतिसीमन्तसिन्दूरीकृतपादाब्जधूलिका ।
सकलागमसन्दोहशुक्तिसम्पुटमौक्तिका ॥ 68 ॥

**ச்ருதிஸீமந்தஸிந்தூரீக்ருதபாதாப்ஜதூளிகா.**
**ஸகலாகமஸந்தோஹ சுக்திஸம்புடமௌக்திகா. 68**

### 15. ச்ருதி ஸீமந்த ஸிந்தூரி க்ருத பாத அப்ஜ தூளிகா. வேதமாதாவின் தலைவகிட்டில் சிந்தூரமாகப் பதிந்துள்ள திருவடித் தூளிகளைக் கொண்டவள்.

15-1. வேதமாதாவின் தலைப்பகுதி உபநிடதங்கள். உபநிடதங்களின் நடுப்பகுதி வேதமாதாவின் தலைவகிடாக அமைந்துள்ளது. அதில் தேவியின் திருவடித்தூளிகள் மிக அழகாககச்சிந்தூரப்பொட்டுபோல் தூரத்திலிருந்தபடியே அறிந்துகொள்ளத்தக்கபடி அமைந்துள்ளன. வேதமும் தேவியின் தத்துவத்தை இவ்வண்ணம் இப்படி என்று நன்கு விளக்கி கூறத்தயங்குகிறது. இப்படி அல்ல, அப்படி அல்ல என்று

மறுப்புரைகள் மூலம் விளக்கும் வேதம் பயந்தும் வெட்கியும் உண்மை நிலைக்கு வெகு தூரத்திலேயே நிற்கின்றது. ஞானகாண்டமான உபநிடதங்களில் தேவியின்கால்தூசி பற்றிய பெருமை கூறப்படுகிறது. ஆனால் அதுவே சிந்தூரப் பொட்டுபோல் மிகச்சிறந்து விளங்குகிறது. தேவியின் திருவடிகளையாவது அதனால் கூற முடிந்திருந்தால் எத்தனை அழகாயிருந்திருக்கும்? ஈசுவர தத்துவங்களைக் கூறுவதற்காகவே தேவியாலேயே தோற்றுவிக்கப்பட்ட வேதத்தின் சக்தியே இம்மட்டில்தான் என்றால், அதைக்கூற வேறு யாருக்குத் தகுதி இருக்கமுடியும்?

15-2. வினை எனும் பாசத்தில் பிணைக்கப்பெற்றவர்களுக்கு வேதம் மூலம் வழிகாட்டினாள் தேவி. சித்த சுத்திக்காகவே வேதம் கூறிய கர்மங்களைச் செய்து வினை எனும் பாசத்தை அறுத்துக் கொண்டவர் சிலர். அவர்களுக்கு வேத சிரஸ் எனும் உபநிடதங்களாகிற ஞானத்தால் வழிகாட்டுகிறாள் தேவி. நெற்றியைவிட நெற்றியின் மேலிட்ட சிந்தூரப் பொட்டு நன்கு துலங்கும். சிந்தூர பொட்டால் நெற்றி அழகுபடும். தேவியின் கால்தூசிபற்றிய விளக்கத்தால் உபநிடதங்கள் வேதத்தில் தலைசிறந்த பகுதியாகும் பெருமை பெறுகின்றன. தேவியின் திருவடித்தூள்கள் பற்றிய விளக்கமே உபநிடதமாகிய பெண்ணின் தலைவகிட்டில் அமைந்த சிந்தூரப் பொட்டாக ஒளியுடன் விளங்குகின்றது. (289)

### 16. ஸகல - ஆகம - ஸந்தோஹ - சுக்தி - ஸம்புட - மௌக்திகா. எல்லா ஆகமக் கூட்டமாகிற முத்துச்சிப்பி சம்புடத்தில் அமைந்துள்ள முத்தாக விளங்குபவள்.

16-1. ஆகமங்கள் – தந்திர நூல்கள். அவை வேதங்களுக்கொப்பான சிறப்புள்ளவை. இறைவன் முகத்திலிருந்து வெளியானவை. (ஆகதம் சிவவக்த்ராத்) வேதங்களைப் போல் தந்திர நூல்களும் மதிக்கப்படுகின்றன). (16-8-1-3) (16-3-8-4) தந்திர நூல்களும் தேவியை வர்ணிக்கப் புகுந்து, இயலாமையால், தேவி சம்பந்தப்பட்ட எதேனுமொன்றை விளக்குவதுடன் திருப்தி அடைகின்றன. அதையும் வெளிப்படையாகக்கூற முடியாமல் முத்துச்சிப்பியினுள் அமைந்த முத்துபோல் மூடி வைத்தே காட்டுகின்றன. முத்துக் குளிக்கும் தைரியம் கொண்டு செயலாற்றி அறிவு நூல்களாகிற கடலில் மூழ்கி அதன் அடியில் உள்ள ஆகமமாகிற சிப்பியைக்கொணர்ந்து அதன் மதிப்பை உணர்ந்து பிரித்து உள்ளே முத்தைக் காண்பர். அந்த முத்து தேவி அணிந்த அணியில் நடுவில் பதித்துள்ளவைகளில் ஒன்று. அதனைக்கொண்டு தேவியை ஊகித்து அறிய வேண்டும்.

16-2. தேவியே சிப்பியினுள் முத்துபோல் விளங்குகிறாள். கடலில் ஆழத்தில் உள்ளசிப்பிபோல் உள்ளது தேவியைப் பற்றிய தத்துவம். அதை மிகக் கருத்துடன் கொணர்ந்து திறந்தால் அதனுள் ஒளியுடன் விளங்கும் தேவியைக் காணலாம். முத்துச்சிப்பியைக் கொணரும் திறன் மட்டுமிருந்தால் போதாது. அந்த முத்துச் சிப்பியினுள் துலங்கும் முத்தை மதிப்பிடத் தெரிவதும் அவசியம். மதிப்பிட அறிந்தவர் மிகச் சிலரே. சில முத்துக்கள் யாராலும் உண்மையாக மதிப்பிட முடியாதபடி மிகச் சிறந்ததாக இருக்கவும் கூடும். அப்போது மிகச்சிறந்த மதிப்பிட முடியாத முத்தைக் கண்டோம் என்றே திருப்தி அடையவேண்டியிருக்கும். தேவி அத்தனை சிறப்புடைய முத்து போன்றவள். முத்து அதற்கேற்ற முத்துச் சிப்பியினுள் அமைந்திருக்கும்போது மிகத்தெளிவாகக்காணப்படுகிறது. அதுபோல் ஆகமங்கள் தேவி தத்துவத்தை மிக அழகாக வெளிக்காட்டுகின்றன. (290)

(நா. 291 - 297)

पुरुषार्थप्रदा पूर्णा भोगिनी भुवनेश्वरी ।
अम्बिकाऽनादिनिधना हरिब्रह्मेन्द्रसेविता ॥ 69 ॥

**புருஷார்த்தப்ரதா பூர்ணா போகிநீ புவநேச்வரீ.**
**அம்பிகா (அ)நாதிநிதநா ஹரிப்ரம்ஹேந்த்ரஸேவிதா.69**

**17. புருஷ - அர்த்தப் - ப்ரதா. புருஷார்த்தங்களை அளிப்பவள்.**

17 - 1. அறம், பொருள், இன்பம், வீடு என்று நான்கு புருஷார்த்தங்கள். தனக்கு இது நல்லது, இது கிடைக்க வேண்டும் என்று திட நிச்சயத்துடன் முயன்று அதில் வெற்றி காண்பவன் புருஷன். அந்தத் தகுதிபெற்ற பெண்ணும் புருஷனே. புருஷனால் நாடப்படுவது (புருஷேண அர்த்யதே) புருஷார்த்தம்.அதுபற்றிய தீர்மானத்துடன் செயலில் இறங்குபவனுக்குத்தான் நல்லதை அடையத்தகுதி உண்டு. அப்படி இறங்குபவன் வெற்றி பெருவான். அவன் பெறும் வெற்றி தேவியின் அருளால் கிட்டுகிறது. வேதங்கள் ஆகமங்கள் காட்டும் வழியில் செல்பவனுக்குப் புருஷார்த்தங்களைக் கொடுப்பதில் மிகுந்த ஈடுபாடு கொண்டவள். மனத்தையும், புத்தியையும், இந்திரியங்களையும், உடலையும் தன்வசப்படுத்திச் செயல்புரிபவன் புருஷன். அவன் தீரன் - தன் இஷ்டப்படி புத்தி சக்தியைப் பயன்படுத்துபவன். தீரனுக்குத் தேவையானதைத் தருபவள். (291)

**18. பூர்ணா. நிறைந்தவள்.**

18-1. எங்கும், எப்போதும்,எல்லாமாக இருப்பவள் பூர்ணா. ஓர் இடத்தில் இருந்து மற்றோரிடத்தில் இல்லாதபோதும், ஒருபோது இருந்து மற்றொரு போதில்லாததும், ஒன்றாக இருந்து மற்றொன்றாக இல்லாததும் நிறைவற்றது. தேவியிடம் இந்த மூன்று குறைகளும் காண முடியாததாகையால் பூர்ணா. (தேச - கால - வஸ்துக்ருத - பரிச்சேத - ராஹித்யாத் பூர்ணா) புருஷார்த்தங்களை வாரி வழங்கினாலும், எந்நிலையிலும் குறைவை அடையாதவள். ஆதலால் அவள் பூர்ணா.

18-2. திதிகளில் பஞ்சமீ, தசமீ, பூர்ணிமா, அமாவாசை இவை நான்கும் பூர்ணா, சுக்லபக்ஷ சதுர்தசியின் இரவு பூர்ணா, (17.8.4)

**19. போகிநீ. போகமுள்ளவள்.**

19-1. போகம் - சுகானுபவம். அதை அடைந்தவள் தேவி. போகம் - பாம்பின் உடல். அதை உடைய பெண் பாம்பு - குண்டலினியின் வடிவம். சுருட்டிக்கொண்டுள்ள பெண் பாம்பின் உடலைக் கொண்ட குண்டலினியும் தேவியே. (12.1.4) (293)

**20. புவந - ஈச்வரீ. புனங்களின் தலைவி.**

20-1. புவனங்கள் - உலகங்கள், அவை பதினான்கு. (9.20.25). அவைகளைத் தன் விருப்பப்படி ஆட்டுவிப்பவள்.

20-2. ஹ்ரீம் என்ற மாயாபீஜம் புவனேச்வரி எனும் மந்திர வடிவம். அந்த மந்திர வடிவிலுள்ளவள். அந்த மந்திரத்தால் வழிபடப்பெறும் புவனேச்வரியாக இருப்பவள். ஹ்ற என்ற அக்ஷரத்தால் ஆகாசத்தையும் ர் என்ற அக்ஷரத்தால் அக்னியையும் ஈ என்ற அக்ஷரத்தால் ஜலத்தையும் படைத்து உலகைத் தோற்றுவித்ததால் அவள் புவநேச்வரீ. ஹ, ய, ர, வ, ல என்ற ஐந்து அக்ஷரங்கள் ஆகாயம் முதலிய ஐந்து பூதங்களையும் தோற்றுவித்தன. பஞ்சபூதங்களின் பீஜ (விதை) - அக்ஷரங்கள் இவை. (4.12) இவைகளிலிருந்து விரிந்தவை ஐந்து பூதங்கள். பூதங்களாலான புவனத்தில் தலைவி. (294)

**21. அம்பிகா. சிறந்த தாய்.**

21-1. அம்பா - தாய். அம்பிகா சிறப்பு மிக்க தாய். உலகனைத்திற்கும் அவள் சிறப்பு மிக்க தாய். இச்சா சக்தி, ஞான சக்தி, கிரியா சக்தி என்ற

மூன்று சக்திகளுக்கும் ஸமஷ்டி வடிவம் அம்பிகா. அவளே தேவி. அம்பிகா - இரவு. தாயைப்போல் அரவணைத்துக் கட்டாயமாக ஓய்வும் நிம்மதியும் தருபவள் இரவெனும் ராத்திரி தேவி. தேவியை ராத்திரி தேவதையாக வழிபட உதவுவது ருக்வேதத்திலுள்ள ராத்திரி ஸூக்தம். தாயின் வடிவமான இரவாயிருப்பவள். அம்பிகா - தூக்கம். தூக்கமும் தேவியின் வடிவமாகக் கொண்டாடப்படும். யா தேவீ ஸர்வபூதேஷு நித்ரா ரூபேண ஸம்ஸ்திதா. நமஸ்தஸ்யை, எவள் எல்லா பிராணிகளிடத்தும் தூக்கத்தின் வடிவில் ஆட்கொண்டிருக்கிறாளோ அவளுக்கு வணக்கம். (தேவீ மகாத்மியம் 5-25) மனிதனின் வாழ்வில் பாதி நேரத்தை விழுங்கி, பாக்கி நேரத்திலும் தனது நிழலாகிற அறியாமையைப் படரவிடுபவள் நித்ராதேவி. அவள் உள்ளே நுழைந்தவுடனேயே வீரனும், சூரனும் கொட்டாவி விடுகிறான். அவளது வேகத்தில் யாவரும் மீள முடியாதபடி அழுத்தி விடுகிறார்கள். அவள் வேகத்தைத் தாங்கி நிற்பவர் நாராயணன் ஒருவரே என ஹரிவம்சம் கூறும். அந்த விஷ்ணுவும் ஹயக்ரிரீவரானது இந்த நித்திராதேவி ஆட்கொண்டதால். (தேவீ பாகவதம்) (1-15) (295)

### ௨௨. அநாதி - நிதநா. ஆதியும் அந்தமுமற்றவள்.

22-1. ஆதியும் அந்தமுமற்ற தேவியை முழுவதும் அறிந்து விட முடியாது. அவளது ஆதியையும் அந்தத்தையும் யாரும் நேரில் கண்டதில்லை. அவளால் படைக்கப்பெற்ற உலகில் நடுவில் தோன்றி நடுவில் மறையும் ஒருவன் உலகிற்கு மூலகாரணமாக அதற்கு முன் உள்ளவளும் பின் மூலகாரணமாக நின்று அதனைத் தன்னுள் அடக்கிக் கொள்பவளுமான தேவியை அறியமுடியாது. ஆதியும் அந்தமும் அற்றவள் என ஊகித்தறியலாம். ஊகத்தால் அவளுக்கும் ஆதியிருப்பதாகக் கொண்டால் என்ன என்ற கேள்வி எழலாம். அவளுக்கும் ஆதி இருப்பதாக ஊகித்தால் அந்த ஆதிக்கு ஆதி எது என்று நிலையற்றதாக ஊகம் சென்றுகொண்டிருக்கும். பயனற்ற அந்த ஊகத்தொடரைத் துண்டித்துத் தேவியே ஆதி எனக்கொள்வது மரபு. உலகம் அவளிடமிருந்து தோன்றியதை விளக்கவரும் உபநிடத வாக்கியம். யதோ வா இமாநி பூதாநி ஜாயந்தே முதலியது, அந்த ஊகத்திற்குப் பக்க பலம் தருகிறது. (5.7)

22-2. தோற்றத்திற்கும் மறைவிற்கும் (ஆதி - நிதநம்) இடையே வளர்வதும் தேய்வதும் காரணமாகப்பல நிலை மாற்றங்கள் ஏற்படுகின்றன. பூர்ணையாக, நிறைவு துலங்கும் யௌவனம் ஒன்றையே பருவமாகக்

கொண்ட திவ்ய மங்கள வடிவுடன் தோன்றுபவளாகையால் தோற்றமும் மறைவும் இடையே நிகழும் நிலைமாற்றங்களும் அற்றவள்.

22-3. நிதநம் - யோக ஸாதனையில் இடையூறு. அவை ஆதி - கடபயாதிஸங்கியை முறைப்படி[1] (தி 8. ஆ0) எண்பது. எண்பது வகைத் தடைகளும் அவளது வழிபாட்டிற்கான யோக ஸாதனையில் தோன்றாதாகையால் அவள் அநாதி நிதநா. பத்து அந்தராயங்கள், ஆறு உபாஸர்கங்கள், அறுபத்தி நான்கு சித்திகள் என அவை எண்பதாகும்.

22-4. உபாஸனையானது முறைப்படி அமைய அதை நியமத்துன் கையாள்வது அவசியம். அதுவும் ஒரு யோக ஸாதனையே. அதற்கு அந்தராயங்கள் (இடையூறுகள்) எட்டு. (1) ஆலஸ்யம் - உடலும் மனமும் தடித்துச் சிறிதும் ஊக்கமில்லாதிருப்பது. (2) வ்யாதி - விலைப்பயனாகவோ நடைமுறைப் பிசகாலோ ஏற்படும் நோய். (3) ப்ரமாதம் - மனவடக்கத்திற் குரிய சாதனங்களைப் பெறுவதில்கவனக்குறைவு. (4) ஸம்சயம் - ஸாதனத்திலும் ஸாத்தியத்திலும் நிச்சயமின்மை. (5) அநவஸ்திதி - மனம்

---

1. கடபயாதி - எழுத்தால் எண்ணைக் குறிக்கும் முறை

| | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 0 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| க ஆதி | க$^{1}$ | க$^{2}$ | க$^{3}$ | க$^{4}$ | ங | ச$^{1}$ | ச$^{2}$ | ச$^{3}$ | ச$^{4}$ | ஞ |
| | क | ख | ग | घ | ङ | च | छ | ज | झ | ञ |
| ட ஆதி | ட$^{1}$ | ட$^{2}$ | ட$^{3}$ | ட$^{4}$ | ண | த$^{1}$ | த$^{2}$ | த$^{3}$ | த$^{4}$ | ந |
| | ट | ठ | ड | ढ | ण | त | थ | द | ध | न |
| ப ஆதி | ப$^{1}$ | ப$^{2}$ | ப$^{3}$ | ப$^{4}$ | ம | | | | | |
| | प | फ | ब | भ | म | | | | | |
| ய ஆதி | ய | ர | ல | வ | ஶ | ஷ | ஸ | ஹ | ள | |
| | य | र | ल | व | श | ष | स | ह | ळ | |

இவற்றை வலமிருந்து இடமாக எழுதி இடமிருந்து வலமாக வாசிக்க வேண்டும். முதலில் ஒத்தை ஸ்தானம், பிறகு பத்து ஸ்தானம், பிறகு நூறு ஸ்தானம் என்றவாறு எழுதிப் பிறகு நூறிலிருந்து படிக்க வேண்டும். உதாரணமாக 215 என்ற எண் ம (5) க(1) ர(2) என்று எழுதப்படும். 215 என்று வாசிக்கப்படும். 605 என்ற எண் ம(5) ந(0) த(6) என்று எழுதப்படும். 605 என்று வாசிக்கப்படும்.

நிலைகொள்ளாமல் சஞ்சலப்படுவது. (6) அச்ரத்தா - மேலும் மேலும் பயிற்சிகள் பயனளித்துத் தெளிவு ஏற்பட்டு வரும் போது முன் வாஸனைக் குறிக்கீட்டால் ஸாதனங்களில் பூர்ண ஈடுபாடின்மை. (7) ப்ராந்தி தர்சனம் - குரு. ஞானம், தெய்வம், ஆசாரம் இவைகளைப்பற்றிய தவறான அறிவு. (8) துக்கம் - ஆத்யாத்மிக - ஆதி பௌதிக - ஆதிதைவிக துக்கமாகிய இயற்கையாக ஏற்படும் துன்பங்கள். இவை எட்டும் இடையூறுகள் - மனத்தின் திடமான விருப்பத்தைக்குலைப்பவை. வைராக்கியத்தால் வெல்லத்தக்கவை. இவற்றை வென்றால் மனம் பயிற்சியில் ஈடுபட்டுப்பல நிலைகளைப்பெறும். பொது அறிவும் புலனறிவும் கூராகும். இயற்கையாகப்பெற முடியாத பல உணர்வுகளை இதனால் பெறலாம். அத்தகைய உணர்வுகளைப் பெற்றதும் அவையே சித்தி என ஏமாறக்கூடும். அப்படி ஏமாற்றமடைந்தால் அந்த சித்திகளே உபஸர்க்கங்களாக - இடையூறாக அமைந்துவிடும். இந்த சித்திகள் யோக சாதனை சரியா அமைந்து உள்ளதா என்பதைச் சோதிக்கப் பெருவழியில் உள்ள மைல்கல்கள் போலப் பயன்படுபவை. மைல் கல்லோ பெரு வழியோ அடைய வேண்டிய இடமல்ல. இவற்றைப் பயன்படுத்திப் பயணத்தின் எல்லையை அடையவேண்டும்.

22-5. உபஸர்க்கங்கள் (தடை) ஆறு. (1) ப்ரதிபா. இதுகாறும் உணர்ந்திராத அளவில் ஸூக்ஷ்மமானதும் வெகு தூரத்தில் இருப்பதும் வேறொன்றால் மறைக்கப்பட்டதும் முன் என்றோ நடந்ததும் பின் என்றோ நடப்பவிருப்பதும் புலனாவது. எல்லாமும் எப்போதும் வரிசையாக உணரப்பெறுவது. (2) ச்ரவணா - இதுவரை கேட்டறியாத மிக ஸூக்ஷ்மமும் மிக பெரியதுமான ஒலிவடிவங்களைக் கேட்பது (3) ஸ்பர்சநா - மிக ஸூக்ஷ்மமான தொடு உணர்ச்சி. (4) தர்சனா - மனித சக்திக்கப்பாற்பட்ட தேவர் முன்னோரின் வடிவங்களைக் காண்பது. (5) ஆஸ்வாதா - இது காறும் உணர்ந்திராத திவ்யச் சுவை உணர்ச்சி. (6) வார்த்தா - திவ்ய மண உணர்ச்சி. யோக ஸாதனையில் உள்ளவர் இந்த நிலைகளைப் பெற்றதும் அறியதொன்றைப் பெற்றுவிட்ட நிறைவுடன் மேலும் ஸாதனைகளில் ஈடுபடாமல் நின்றுவிடக்கூடும்.

22-6. இந்தத்தடைகளால் தடையுறாமல் மேல் ஸாதனைகளில் ஈடுபடுபவன் எட்டு பிரகிருதி சித்தி நிலைகளைப்பெறுகிறான். ஒவ்வொரு பிரகிருதி ஸித்தியும் எட்டு அபூர்வமான சக்திகள் உடையது. அவை (8 8) அறுபத்தி நான்காகும். பிருதிவீ, ஜலம்,அக்னி, வாயு,ஆகாசம், மனம் ,

அஹங்காரம், மஹத் என எட்டும் பிரகிருதி நிலைகள். இவைகளில் ஒவ்வொன்றையும் யோக வழியில் தாண்டிச்செல்வதே பிரகிருதி ஜயமாகும். பிரகிருதியை வசப்படுத்துபவனே தேவியை அடைய முடியும். ஆனால் பிரகிருதி ஜயத்தை அடைந்ததுமே எல்லாவற்றையும் பெற்றதாக நிறைவு ஏற்பட்டால், அவற்றால் பெறும் அறுபத்தி நான்கு சித்திகளில் ஏதேனும் ஒன்றையோ சிலவற்றையோ எல்லாவற்றையுமோ பெற்றதும் நிறைவு கண்டால், பகவதனுபவம் பெற முடியாமல் தடையுறுகிறான்.

22-7. (1) பிருதிவி தத்துவ சித்தியானது பிசாசத் தன்மை பெறுதலாகும். உடல் பருத்தல், இளைத்தல் (குறுகுதல்), இளமை, கிழத்தன்மை, யௌவனம், இனம் மாறுதல், உருவம் மாறுதல், உடலைத் தாங்கும் ஐந்து பூதங்களில் பிருதிவீ தத்துவம் மறைந்து மற்ற நான்குமே உடலைத் தாங்கி நிற்பது என்ற எட்டும் பிருதிவீ தத்துவத்தை வெல்வதால் கிட்டும் சித்திகள்.

(2) ஜல தத்துவ சித்தியானது ராக்ஷஸத் தன்மை பெறுதலாகும். பூமியில் வசிப்பது போல் நீரினுள் வசிப்பது, நனையாமல் நீரிலிருந்து வெளிப்படுவது, கடலளவு நீரையும் பருகுவது, நினைத்த இடத்தில் நீரைத் தோற்றுவிப்பது, சுவையற்றதையும் சுவையுள்ளதாக்குவது, நீரை நினைத்த வடிவில் உருட்டிப் பாத்திரமின்றிக் கையால் தாங்குவது, உடலில் புண் எற்படாமை, பிருதிவீ ஜலதத்துவங்களின்றி மற்ற மூன்று தத்துவங்களே உடலைத் தாங்கி நிற்பது ஆகிய இவை எட்டும் ஜல தத்துவத்தை வெல்வதால் ஏற்படுபவை.

(3) உடலிலிருந்து நெருப்பு உண்டாக்குவது, அந்த நெருப்பு அவரைச் சுடாதிருப்பது, இஷ்டப்படி எரிப்பதும் எரிக்காதிருப்பதும், நீரின் நடுவே நெருப்பைக் காப்பது, கையால் நெருப்பைக்கட்டுப்படுத்துதல், நினைத்தவுடன் உண்டாக்குவது, சாம்பல் ஆக்கியதை மறுபடி உயிர்ப்பிப்பது, பிருதிவீ ஜல அக்னி தத்துவக்கலப்பின்றி மற்ற இரு பூதங்களைக்கொண்டு உடலைத் தாங்குவது. இவை எட்டும் அக்னி தத்துவ ஜயத்தால் யக்ஷத்தன்மை பெறுதலாகும்.

---

1. இந்த பிரகிருதி சித்தி நிலைகளில்திருப்தி அடைவதையே பிரகிருதிஷ்டி என ஸாங்கிய காரிகை கூறும். (18.42.10)

(4) மனத்தைப் போல்தடையின்றி செல்லுதல், பிறர் உடலுக்குள் நுழைதல், மலை முதலிய பெரும் சுமையைத்தாங்குதல், உடலை லேசாக்குதல், உடலைப்பெரும் பாரமுள்ளதாக்குதல், கையால் காற்றைக் கட்டுப்படுத்துதல், விரல் நுனியின் அழுத்தத்தால் பூகம்பம் ஏற்படுத்துதல், ஆகாசம் என்ற ஒரு பூதத்தைக்கொண்டே உடலைத் தாங்குதல், இவை எட்டும் வாயு தத்துவ ஜயத்தால் கந்தர்வத் தன்மை பெறுதலாகும்.

(5) நிழலின்மை, கண் முதலிய புலனாகாத பொறிகளைக் காணுதல், ஆகாயத்தில் செல்லுதல், எப்போதும் எல்லாப் பொறிகளால் உணர்பபெறும் பொருளைப் பொறிகளின்றியே உணர்தல், வெகு தூரத்தில் உள்ள ஒலி கேட்டல், எல்லா ஒலிகளையும் மனத்தில் பதித்துக் கொள்ளுதல், பஞ்சபூத ஸூக்ஷ்ம நிலைகளை உணர்தல், எல்லா உயிரினங்களையும் நேரே காணுதல் என்ற எட்டும் ஆகாச தத்துவ ஜயத்தால் இந்திரனின் பெருமை பெறுதலாகும்.

(6) விரும்பியதை அடைவது, விரும்பியபடி செல்லுதல், எங்கும் வெற்றி, எல்லா ரகசியங்களையும் அறிதல், விருப்பப்படி படைப்பது, எல்லாவற்றையும் வசப்படுத்துவது, எல்லாவற்றிலும் அன்புகொள்வது, வாழ்க்கை நிலை (ஸம்ஸாரம்) உணர்தல் என்ற எட்டும் மனத் தத்துவ ஜயத்தால் சந்திரனது பெருமை பெறுதலாகும்.

(7) பிளத்தல், அடித்தல், கட்டுவித்தல், வாழ்க்கை முறையை அமைத்துக்கொடுப்பது, வாழ்க்கையை மாற்றியமைப்பது, எல்லா உயிரினங்களையும் தெளிவித்து அன்புபூணச் செய்தல், மரணத்தை வெல்வது, காலத்தை வெல்வது என்ற எட்டும் அஹங்கார தத்துவ ஜயத்தால் பிரஜாபதி நிலை பெறுவதாகும்.

(8) காரணமின்றி படைத்தல், காத்தல், அழித்தல், உலகைக் கட்டுப்படுத்தும் அதிகாரம், உலகின் போக்கைத் தொடங்கிவைப்பது, ஒன்றுக்கொன்று பொருந்தாதபடி செய்வது, தனித்தனியாகப் படைப்பது, வாழ்க்கைத் தொடரை ஏற்படுத்துவது என்ற எட்டும் மஹத் தத்துவத்தை வெல்வதால் பிரமனின் நிலை பெறுவதாகும். இவை அனைத்தும் ஸித்திகளேயாயினும் முடிவானவை அல்ல. இவற்றால் தடையுறாமல் மேல் சென்று பகவதனுபவம் பெறுவதே உயர்ந்த சித்தி. இந்த 80 தடைகளுமின்றி வழிபாட்டை அமைத்துக் கொடுப்பவள் – **அநாதிநிதநா.**

22 - 8. இந்த யோக சித்திக்கு இடையூறாக உள்ள நிதனங்களை வதம் என்ற பெயரில் விஷ்ணு புராணம் குறிப்பிடுகிறது. உத்பதக்ராஹிணச் சைவ தே அஜ்ஞாநே ஜ்ஞாநமாதித: அஹங்க்ருதா அஹம்மாநா: அஷ்டாவிம்சத் வதாத்மகா:. (1.5.11) என்று. பகவதனுபவத்திற்கு தடையாயிருப்பவை இருபத்தெட்டு. இந்த இருபத்தெட்டு இடையூறுகளைப் பற்றிய குறிப்பு ஸாங்க்ய காரிகையில் (ச்லோ.49.51) காணப்படுகிறது. இந்த இடையூறுகள் அசக்தி, துஷ்டி, ஸித்தி என மூன்று வகைப்படும். இசக்தி 11 வகை, துஷ்டி 9 வகை, ஸித்தி 8 வகை.

22-9. அசக்தி - ஐந்து ஞானேந்திரியங்களும் ஐந்து கர்மேந்திரியங்களும் தன் தன் சக்தியை இழந்துபொட்டை, ஊமை, செவிடு முதலிய குறைகளை அடைவதும் மனம் பேதலித்துப் பைத்தியம் பிடிப்பதும் பதினொன்று அசக்திகள், இந்தியரியச் சக்திகக்குறைவால் யோக சாதனையில் ஈடுபட முடியாமற் செய்பவை.

22-10. துஷ்டி என்பது மனநிலை. காரியம் முழுவதும் சித்திபெறு முன்னரே நடுவிலேயே கிடைத்துவிட்டது போல் திருப்திப்படுவது துஷ்டியாகும். இது இலையில் அன்னம் வைத்த உடனேயே சாப்பிட்டது போன்ற திருப்தி ஏற்படுவது போலாகும். இதற்குப்பின் தொடர்ந்து முயல்வதற்கு இது இடையூறு. இத்தகைய துஷ்டி 9 வகைப்படும். (1) பூமி, ஜலம், அக்னி, வாயு, ஆகாசம்,அஹங்காரம், மஹத் அவ்யக்தம் என்ற எட்டு வகைப்பட்ட பிரகிருதியிலிருந்து மீண்டு அதில் லயிக்காமல், விடுபட்டு, பிரகிருதிக்கு அப்பாற்பட்ட இறைவனிடம் மனோலயம் ஏற்படுவது தான் உபாஸனா யோகத்தின் முக்கிய நோக்கம். இந்த பிரகிருதியானது ஜடம். அதனைப் பற்றிக்கொள்ளும் இந்த யோகியின் மனமும் ஜடமாகிறது. ஸ்தூல உடலில் லயமடைந்திருந்ததைவிட அதன் மூல காரணமான பிரக்ருதியில் லயமடைவது சிறந்ததெனினும் இது வழியில் உள்ள மைல்கல் போலத்தானே தவிர அதுவே அடைய வேண்டிய இடம் அல்ல. இன்னமும் வெகுதூரம் செல்ல வேண்டும். இந்த ஜடத்தில் லயித்ததுமே அடைய வேண்டியதை அடைந்து விட்டதாக நிறைவுணர்ச்சி ஏற்பட்டால் அது ஸாதனையில் தடை ஏற்படுத்தும். இது பிரகிருதி துஷ்டி.1 (2) காஷாயம் தரிப்பது போன்ற வெளி வேஷத்தாலும் ஸந்யாஸியாகிவிட்டோம் என்ற பிரமையாலும் நிறைவு காண்பது உபாதான துஷ்டி. (3) அதது அந்தந்த

1. இந்த பிரகிருதி துஷ்டியையே அறுபத்து நான்காக லிங்க புராணம் விளக்குகிறது. (18.22.6).

வேளையில்தான் நடக்கும். காலம் தானே கூட்டுவிக்கும், ஸாதனை எதற்கு? எனச்சோம்பியிருப்பது கால துஷ்டி. (4) அவர் அருளியிருந்தால் யோகம் கூடும். பகவான் அருள்வார் என்று வாளாவிருப்பது பாக்ய துஷ்டி. இந்த நான்கும் மனத்தளவில் ஏற்படும் நிறைவு. (5-9) காதால் அவரைப்பற்றிக் கேட்கவேண்டும். கண்களால் அவர் திருவுருவைப் பார்க்க வேண்டும் என்றவாறு ஐந்து இந்திரியங்களையும் அவர்பால் லயிக்கச்செய்யும் முயற்சியின் இடையே, என் காது பகவானைப் பற்றிக் கேட்கக் கொடுத்து வைக்காதது. அதற்கு விருப்பமில்லை. என்ன செய்வது என்றவாறு பொறிகளைக் குறை கூறி முயற்சியைக் குறைத்துக்கொள்வது இந்திரிய துஷ்டி. இது ஐந்து வகைப்படும். ஆக துஷ்டி ஒன்பது வகைப்படும்.

22-11. சித்தி எட்டு வகை. நம் முயற்சியில் அடையக்கூடியவை கூடத்தானே தற்செயலாக ஏற்படக்கூடும். அவற்றையே அடையவேண்டிய சித்தியாக நினைத்து ஏமார்ந்து மேற்கொண்டு முயற்சிகளைக் கைவிட்டுவிடக்கூடும். அத்தகைய சித்திகள் எட்டு. இவை சாதகனது பயிற்சி நிலையை உணரப் பயன்படுபவரை. இவையே சித்திகள் அல்ல. (1) உபதேசம் பெறாமலேயே பொருளை ஊகித்தறிவது ஊஹ சித்தி (2) தற்செயலாகக் கேட்ட ஒரு சொல்லால் (உபச்ருதி) பொருள் விளங்கப்பெறுவது சப்த சித்தி. (3) குருவினடமிருந்து உபதேசம் பெற்றதுமே சித்தியாவதும், அதனைப் பகுத்தறியத் தன் விவேகத்தைப் பயன்படுத்துவதும் அத்யயன சித்தி. (4) பகவத் தத்துவமறிந்தவனது நட்பு கூடி அதனால் நிறைவுறுவது ஸுஹ்ருத் ஸித்தி. தான் விரும்பிய அற்பப் பொருள் கிடைத்ததால் கூடத் திருப்தியடைவதும் ஸித்தியே. (5) பெரியோர்களது பணிவிடைக்கான வாய்ப்பு சுஷ்ருஷா ஸித்தி (தான ஸித்தி). (6-8) ஆத்யாத்மிகம்,ஆதிதைவிகம், ஆதிபௌதிகம் என்ற மூன்று துக்கங்களும் நீங்குவதால் ஏற்படும் நிறைவு துக்கவிகாத துஷ்டி. இப்படி 28 விதமான இடையூறுகள். பாசங்கள் 52 ஆக 80 இடையூறுகள்.

22-12. இந்த இருபத்தெட்டு இடையூறுகளையும் அங்குசங்கள் என்ற பெயரிட்டு ஸாங்கிய காரிகை கூறும். யானையைக் கட்டுப்படுத்தும் துறட்டிபோல இவை ஸாதனைகளைக் கட்டுப்படுத்துபவை. இவைகள் குறுக்கிடாதவாறு தனது உபாஸனையை அமைத்தருளுபவள் அநாதிநிதநா. (296)

**23. ஹரி-ப்ரம்ஹ-இந்த்ர-ஸேவிதா. நாராயணன், பிரும்மா, இந்திரன் இவர்களால் பூஜிக்கப்பட்டவள்.**

23-1. ஸ்ரீநகரத்தில் 17-18 மதில்களுக்கிடையே உள்ள நவரத்தின பிரகாரத்தில் விஷ்ணுவும், 16-17 மதில்களுக்கிடையே உள்ள பிரவாளப் பிரகாரத்தில் பிரும்மாவும், 14-15 மதில்களுக்கிடையே உள்ள முக்தாப் பிராகாரத்தில் இந்திரன் முதலான திக்பாலர்களும் தேவியை வழிபடுகின்றனர். (9.10.10) (297)

(நா.298 - 304)

नारयणी नादरूपा नामरूपविवर्जिता ।
ह्रींकारी ह्रीमती हृद्या हेयोपादेववर्जिता ॥ 70 ॥

**நாராயணீ நாதரூபா நாமரூபவிவர்ஜிதா.**
**ஹ்ரீங்காரீ ஹ்ரீமதி ஹ்ருத்யா ஹேயோபாதேயவர்ஜிதா.**
**70**

**24. நாராயணீ, நாராயணி.**

24 - 1. நர: - பரம்பொருள். அதனைச் சேர்ந்தவர்கள் நாரர்கள். அயநம் - அவர்கள் அடைய வேண்டிய இடம், அடைய வேண்டியதற்கான வழி. அது நாராயணம். மஹாவிஷ்ணுவையும் சிவனையும் இந்த நாராயணம் என்ற சொல் குறிக்கும். சிவனான நாராயணனுக்கு சக்தி நாராயணீ. விஷ்ணுவான நாராயணனைச் சேர்ந்த பெண் (சகோதரி) நாராயணீ (நா.280).

24-2. நர: - பரம்பொருள். நாரா: - அதனிடமிருந்து தோன்றிய உலகிற்குக் காரணமானகாரணஜலம் (காரண - உதகம்) அதனைத் தன் இருப்பிடம் (அயனம்) ஆகக் கொண்டவர் நாராயணன். உலகம் அழியும்போது பிரளய காலத்திய மேகங்கள் தொடர்ந்து பொழிந்த ஜலத்தில் நிலம் கரைந்து எல்லாம் ஜலமாகி நின்றதும், அந்த ஜலம் பிரளய கால ருத்திரனாகிய சூர்யனால் பொசுக்கப்பட்டு மூலப் பொருளாக்கப்பட்டது. மீண்டும் படைப்புத் தொடங்கும்போது உலகின் காரணமானதனைத்தும் ஆகாசம், வாயு, அக்னி என்ற பூதங்களாகத் தோன்றிப் பின் ஜலமாக காரணோதகமாக நின்றன. அதில் கரைந்திருந்த பிருதிவியின் அம்சம் இறுதி நிலம் தோன்றிற்று. இந்த காரணோதயம் நாரா: எனப்படும். அதனைத் தன்னிருப்பிடமாகக்கொண்டவர் நாராயணன்; உலகைப் படைக்கப்பிரும்மனைத் தன் நாபியிலிருந்து தோற்றுவித்த நாராயணன். அவரது சகோதரி, அவரது சக்தி நாராயணீ.

24-3. நாராயணனுக்கும் தேவிக்கும் பேதம் கிடையாது. சிவனது இடது பாகத்தைத் தேவியாகவும் (அர்த்தநாரீசன்) நாராயணனாகவும் (சங்கரநாராயணன், ஹரிஹரன்) இருந்து நிரப்புவது உண்டு. இந்த பேதத்தால் தேவியும் நாராயணனே. அதனால் நாராயணீ. அமிருத்ததிற்காகப்பாற்கடலைக் கடைந்து அமிருதத்தைப்பெற்றதும் அதனை விநியோகிக்க மோஹினி வேஷம் எடுத்து அஸுரர்களை நாராயணன் ஏமாற்றினார். அந்த மோஹினி வேடத்தைக் கண்டுகளிக்கச் சிவனும் விரும்பினார். தேவியை ஆராதித்து அவள் அருளால் தேவியாக மாறி விஷ்ணு சிவனை மயக்கினார் என்பதை ஹரிஸ்த்வாம் ஆராத்ய என்ற ஸௌந்தர்ய லஹரீ சுலோகம் விளக்கும். அப்படி நாராயணனைத்தன் வடிவாக்கியவள் தேவி. (நா. 562) ஸுபார்சுவம் எனும் க்ஷேத்திரத்தில் நாராயணி என்ற நாமம் பூண்ட தேவியாக விளங்குபவள். (298)

**25. நாத - ரூபா. நாதமாக விளங்குபவள்.**

25-1. பரா, பச்யந்தீ, மத்யமா, வைகரீ என்று ஒலியின் தோற்றத்தில் நான்கு நிலைகள் உண்டு. (நா.366-371) மத்யமா நிலையிலிருந்து வைகரீ நிலையை அடையும் ஒலியில் ஒன்பது நாதங்கள் பிரியும். அவிக்ருதம், சூன்யம், ஸ்பர்சம், நாதம், துவனி, பிந்து, சக்தி, பீஜம், அக்ஷரம் என, அவை ஒன்பது. இந்த ஒன்பதும் அ, க, ச, ட, த, ப, ய, ச ( ), ள என்ற ஒன்பது வர்க்கங்களாக விரிகின்ற எழுத்துக்களாகப் பிரிந்து வைகரீ இலையை (காதால் கேட்கக்கூடிய நிலையை) அடைகின்றன. இந்த அக்ஷரங்கள் அனைத்திற்கும் காரணமாகப் பரவி நிற்கின்ற நாத வடிவில் உள்ளவள். (வரிவஸ்யா ரஹஸ்யம் - முதல் அம்சம்).

25-2. வைகரியாக வெளியான ஹ்ரீம் முதலிய எழுத்துக்களில் உள்ளம் எனும் அரை மாத்திரை அளவுள்ள பிந்து நீண்ட கார்வை (ஒலி நீட்சி) பெற்றது. அந்தக் கார்வையினுள் ம் என்ற அந்த பிந்துவின் ஒலி 8 நிலைகளை அடைகிறது. அர்த்தசாஸ்திரம், ரோதினீ, நாதம், நாதாந்தம், சக்தி, வியாபிகா, ஸமநா, உந்மநீ, என பிந்துவிலிருந்து விரிந்த இந்த எட்டு நிலைகளுக்கும் வடிவமும் நிறமும் உண்டு. இதன் விளக்கத்தை பாஸ்கரராயரது விரிவஸ்யாரஹஸ்யத்தில் காணலாம். பிந்து இந்த 8 நிலைகளைத் தாண்டியதும் மஹா பிந்துவாகிறது. பிந்துவில், அது சார்ந்துள்ள ஹ்ரீ முதலிய எழுத்துக்களின் சாயை உபாதியாக நிற்கும். மஹா பிந்துவில் மற்ற எழுத்துக்களின் சாயை தோன்றாது. நிர்க்குணப் பிரும்மத்தின் வடிவம் இது. இவைகளைப்பற்றிய குறிப்பு:



1. பிந்து: நெற்றியின் மத்தியில் தீபத்தைப் போன்ற ஒளியுடையதாய் வட்டமாயிருக்கும். (கீழ்க்கோடு சார்பைக் குறிக்கும்.
2. அர்த்தசந்திரன் : பிந்துவின் மேல் ஒளியிலும், வடிவிலும் பிறை போலிருக்கும். (உமா)
3. ரோதிநீ : நிலவைப் போன்ற ஒளியு,ம் முக்கோண வடிவும் கொண்டது.
4. நாதம் : பத்மராகம் எனும்சிறப்புநிற ரத்தினத்தின் ஒளியுடன் பீஜ கோசங்களுக்கு இடையே உள்ள தையல்போல் வடிவம்கொண்டது.
5. நாதாந்தம் : மின்னலைப்போல் ஒளியுடன் இடது பக்கத்தில் பிந்துவோடு ஏர்க்காலைப் போன்றுள்ளது.
6. சக்தி : குறுக்கே இரு பிந்துக்கள். இடது பிந்துவின் மேல் செங்குத்துக்கோடு. சக்தியின் வடிவமிது.
7. வியாபிகா : கீழே பிந்துவைக்கொண்ட முக்கோண வடிவம் கொண்டது.
8. ஸமநா : மேலும் கீழும் பிந்துவுடன் கூடிய செங்குத்துக் கோட்டின் வடிவம் கொண்டது.
9. உந்மநீ : கீழ் பிந்துவுள்ள செங்குத்துக் கோட்டின் வடிவம் கொண்டது.
10. மஹாபிந்து : சார்பற்ற தனி பிந்து.

இவற்றில் மூன்றாவதான நாத வடிவில் உள்ளவள். (299)

**26. நாம-ரூப-விவர்ஜிதா. பெயரும் உருவமுமற்றவள்.**

26-1. சர – அசரமான உலகிற்கு ஐந்து வடிவங்கள் – அஸ்தி, பாதி, பிரியம், நாம, ரூபம் என முதல் மூன்று வடிவங்கள் சித்துடன் உலக்குக்கேற்பட்ட பிணைப்பைக் குறிக்கும். பின் இரண்டு வடிவங்கள் சித்தல்லாததுடன் அதற்கேற்பட்ட பிணைப்பைக் குறிக்கும். சித் கிரந்தி, அசித் கிரந்தி, என இந்த இரண்டு பகுதிகளையும் குறிப்பிடுவர்.

26-2. நான் என்பதனை விளக்கினால் இந்த ஐந்தும் அதனுள்ளிருப்பது விளங்கும்.

(அ) நான் இருப்பவன். இல்லாததொன்றை நான் எனக் கொள்ள முடியாது. அதனால் நான் என்பது அஸ்தி – இருக்கிறது. பிரும்மத்தின் சித் என்ற அம்சம் நான் இல் பிரதிபலிப்பதால் நான் இல் அஸ்தி தோன்றுகிறது.

(ஆ) நான் புலப்படுவேன். அறிவிற்குப் புலப்படுவதொன்றையே சொல் குறிப்பிடும். அதனால் நான் என்பது பாதி புலப்படுகிறது. பிரும்மத்தின் சித் என்ற அம்சம் நான் இல் பிரதிபலிப்பதால் நான் இல் பாதி உணரப்படுகிறது.

(இ) நான் பிரியமானவன். நான் என்ற உணர்விற்கு ஆதாரம் நான் இடம் வைத்துள்ள எதிர்பார்த்தலற்ற நிகரற்ற பிரியம். மற்ற பொருள்களிடத்திலோ நான் ஐத் தாங்கி நிற்கும் உடலிடமோ வைத்துள்ள பிரியம் எதிர்பார்த்தலுள்ளது. அந்த எதிர்பார்த்தல் நிறைவேறாவிடில் பிரியம் மறைந்துவிடும். ஒருசமயதில் ஒன்று பிரியமாயிருக்கும். மற்றொன்று அதைவிடப் பிரியமாயிருக்கும். (பிரியதரம்). மற்றொன்று எல்லாவற்றையும் விட பிரியமாயிருக்கும். (பிரிதமம்) பிரியதமமானதும் பிரியத்திற் குரியதல்லாததாக ஆகலாம். அந்தப் பிரியமான பொருளை இழக்க நேரிடலாம். அதனால் அதுவே துக்கத்திற்குக் காரணமாகலாம். இவையனைத்தும் பிரியமாயிருப்பது நான் என்ற பிரியமான பொருளுக்குப் பிரியமாக அமைவதால்தான். (மனைவிக்குப் பிரியமானது தனக்குப் பிரியம் என்பதுபோல்). மற்றப் பிரியமான பொருளில் உள்ள பிரியத்தன்மை நிலையற்றது. நான் இல் உள்ள பிரியத்தன்மை நிலைத்தது. ஏற்றத் தாழ்வற்றது. (அதனால் பிரியதரம், பிரியதமம் என்ற அடைமொழி தேவையற்றுப் பிரியம் என்றே குறிக்கப்படுகிறது.) எக்காலத்திலும் இழக்க நேராதது. பிரும்மத்தின் ஆனந்தம் என்ற அம்சம் நான் இல் பிரதிபலிப்பதால் ஆனந்தமயமான நான் பிரியமாக இருக்கிறது. அஸ்தி பாதி ப்ரியம் என்ற மாறுபாடற்ற மூன்றும் பிரும்மத்துடன் ஏற்பட்ட பிணைப்பால் (சித் – க்ரந்தி) தோன்றுபவை.

(ஈ) நான் பெயருள்ளவன், தனித்தும் உருவத்தாலும் இனத்தாலும் மற்றவற்றாலும் பிரித்தறியும்படிச் செயற்கையாக வைக்கப்பட்டுள்ளது. நாம – பெயர். இது மாறுபாடடையக் கூடிய அசித் எனும் ஸ்தூல ஜகத்தின் தொடர்பால் ஏற்பட்டது. இது மாறுபாடும் அழிவும் உள்ளது.

(உ) நான் உருவமுள்ளவன். நான் ஐப் பிரித்தறிய அசித் ஏற்படுத்திய ரூபம் எனும் ஸ்தூலத் தோற்றம். இதுவும் நிலையற்றது. மாறுபாடும் அழிவும் உள்ளது.

26-3. தேவி ஸத் - சித் - ஆனந்த வடிவமானவள். நித்யமானவள். மாறுபாடற்றவள். ஏற்றத்தாழ்வற்றவள். நிலையின்மையும் மாறுபாடும் அழிவும் ஏற்றத்தாழ்வும் கொண்ட அஸத் - அசித் - அநாநந்த வடிவமான நாமரூபங்கள் அவளிடம் இல்லை. நாமத்தையும், ரூபத்தையும் கொண்டதால் உலகம் வெவ்வேறாகத் தோற்றமளிக்கிறது. அந்த நாம ரூபங்களாக இல்லாமல், இந்தத்தோற்றத்திற்கு ஆதாரமாக உள்ள அஸ்தி, பாதி, ப்ரியம் என்ற அழியாத அம்சமாகப் பிரும்ம வடிவில் உள்ளவள் தேவி. (300)

### 5. ஜ்வாலினீ கலை - (301 - 400 நாமங்கள்)

### 27. ஹ்ரீங்காரி. ஹ்ரீங்கார வடிவினள்.

27-1. ஹ்ரீங்காரம் - ஹ்ரீம் எனும் அக்ஷரம் தேவியின் பிரணவம். அதனை வடிவமாகக் கொண்டவள். ஹ்ரீம் என்றே தேவிக்கு ஒரு நாமம் உண்டு. (லலிதாத்ரிசதீ நா.99) ஹ்ரீம் - மாயை, சக்தி. அந்தச் சக்தி ஸ்ருஷ்டி முதலிய ஐந்தொழில்களால் வெளிப்படுகின்றது. அந்த ஐந்தொழில்களைப் புரிபவள் ஹ்ரீங்காரீ. ஹ்ரீம் - என்ற அக்ஷரத்தைத் தன் மந்திரவடிவமாகக் கொண்ட புவனேசுவரி எனும் தேவி. (301)

### 28. ஹ்ரீமதீ. நாணமுள்ளவள்.

28-1. ஹ்ரீ: - லஜ்ஜா - நாணம். கெட்ட செயலைப் புரிவதில் இருந்தும் தடுப்பது லஜ்ஜை. சால்பு, பண்பு முதலிய குணங்களால் உயர்ந்தவர். நற்குலத்தில் உதித்தவர், நல்கல்வி பெற்றவர். நல்லவர்களோடு தொடர்பு கொண்டவர். தமக்கு ஒவ்வாத செயலைச் செய்ய நாணுவர். இயற்கையாக அமையும் குணம் இது. (குல - ஜந - ப்ரபவஸ்ய லஜ்ஜா - தேவீமாகாத்மியம் 4-5) லஜ்ஜை உள்ளவள், லஜ்ஜையைத் தன் வடிவமாகக் கொண்டவள். (302)

### 29. ஹ்ருத்யா - மனத்திற்கு உவப்பானவள்.

29-1. ஒரு பொருளைக் கண்டு அதை விரும்பி அதனைப் பெற எண்ணம் கொள்கிறோம். அந்தப் பொருளை நம் மனம் ஏற்றுக்கொண்டு விட்டது. அதற்குக் காரணம், அது மனத்திற்கு இதமாக அமைந்துள்ள தென்பதே. ஹ்ருதே - ஹிதா. ஹ்ருத்யா மனத்திற்கு இதமாக அமைந்த அழகும் குணங்களும் மற்றதும் உள்ளவள் தேவி. ஹ்ருதி பவா - ஹ்ருத்யா - இதயத்தில் தோன்றுபவள். புலன்களை அடக்கி மௌனத்துடன் வெளி நாட்டமில்லாது இருப்பவர்களின் இதயத்தில் தோன்றுபவள். (303)

**30. ஹேய - உபாதேய - வர்ஜிதா. தள்ளத் தக்கதும் கொள்ளத்தக்கது மில்லாதவள்.**

30-1. இதைச் செய்யாதே என்ற வேதக் கட்டளையின்படி மனிதன் தள்ள வேண்டியவை சில (ஹேயம்). இதைச் செய் என்ற கட்டளையின்படி ஏற்க வேண்டியவை சில (உப-ஆதேயம்). வினைப்பயனாகத் தேகபந்தம் கொண்டவர்களை வேதத்தின் கட்டளைகளை கட்டுப்படுத்தும். வினைக்கப்பாற்பட்ட தேவியை அவை கட்டுப்படுத்தா. தேவிக்குத் தவிர்க்க வேண்டியதோ ஏற்றுக்கொள்ள வேண்டியதோ எதுவுமில்லை.

30-2. ஹேயம் - விருப்பமின்மையால் தள்ளப்பட வேண்டியவை. உபாதேயம் - விருப்பமேற்பட்டதால் ஏற்க வேண்டியவை. தேவி விருப்பும் வெறுப்புமற்றவள், பூர்ணா - நிரம்பியவள். அதனால் அடைய வேண்டியதில்லாததால் அவளுக்கு விருப்பம் ஏற்படுவது இல்லை. அதனால் ஏற்க வேண்டியதொன்றுமில்லாதவள். எங்கும் நிறைந்தவளான தால் வெறுப்பு ஏற்படுத்தும் பொருளுமில்லை. வெறுப்பில்லாததால் தவிர்க்கவேண்டியதொன்றும் இல்லாதவள். (304)

(நா. 305 - 312)

राजराजर्चिता राज्ञी रम्या राजीवलोचना ।
रञ्जनी रमणी रस्या रणत्किंकिणिमेखला ॥ 71 ॥

**ராஜராஜார்ச்சிதா ராஜ்ஞீ ரம்யா ராஜீவலோசனா.**
**ரஞ்ஜநீ ரமணீ ரஸ்யா ரணத்கிங்கிணிமேகலா. 71**

31. ராஜ - ராஜ - அர்ச்சிதா. ராஜாதிராஜராலும் வழிபடப் பெற்றவள்.

31-1. ராஜராஜன் - அரசர்களுக்கெல்லாம் அரசன். அரசவம்சத்தை உலகில்தோற்றுவித்த மனு. அவரால் பூஜிக்கப்பட்டவள். ராஜராஜன் - குபேரன். பன்னிரு உபாஸகர்களில் ஒருவர். அவரால் பூஜிக்கப்பட்டவள். ஸ்ரீநகரத்தில் 14-15 மதில் சுவர்களுக்கிடையே உள்ள முக்தாப்பிராகாரத்தில் வடக்கு திக்கில் இருந்து குபேரன் தேவியை வழிபடுகிறார். ராஜா பரமேசுவரன். அவரிடம் விளங்கும் ராஜா சந்திரன் - ராஜராஜன். சந்திரனால் வழிபடப்பெற்றவள். (9, 10.10, 16, 40.1-2, 16.41.1) (305)

**32. ராஜ்ஞீ. அரசி.**

32-1. உலகை ஆள்பவள், உலகை ஆளும் காமேசுவரனது பட்டமஹிஷி மஹாராஜ்ஞியுமானவள். (6.2.1) (306)

**33. ரம்யா. அழகானவள்.**

33-1. மனத்தைக்களிக்கச்செய்யும் அழகு படைத்தவள். மற்ற மாதரிடத்தில் உள்ள அழகு மயக்கும், கொல்லும், ஆனால் தேவியின் அழகு, மனத்தைக் களிக்கச்செய்து அவள்பால் ஈர்த்துக்கொள்ளும் சக்தி படைத்தது. (307)

**34. ராஜீவ - லோசநா. தாமரை போன்ற கண்ணுள்ளவள்.**

34-1. ராஜீவம் - தாமரை, மீன், மான், அரசனை அண்டிப் பிழைப்பவன். தேவியின் கண்கள் தாமரை இதழ் போன்று அழகியவை. மீனின் கண் போன்று பார்வையாலேயே ஊட்டமளிப்பவை. மானுடைய கண்கள் போன்று எப்போதும் ஆடிக் கொண்டிருப்பதாலும் மருட்சி கொண்டிருப்பதாலும் அழகுள்ளவை. அரசரை அண்டிப் பிழைப்பவர் களைக் கருணையுடன் பார்த்து அருள் புரிபவள் தெவி. நேர்மையுடன் நடந்து மக்கள் நன்கு வாழ உதவுகிறார்கள் என்று அருள் நோக்குடன் அவர்களைக் காப்பவள். (308)

**35. ரஞ்ஜநீ. திருப்திப்படுத்துபவள்.**

35-1. சொல்லோ, பொருளோ மனத்தில் உவப்பதாகப் பதிந்து நிறைவு தருவது ரஞ்ஜனம். பாட்டைக் கேட்பதால் உள்ளம் கனிந்து தன்மயமாகி அதில் ஈடுபட்டு நிறைவு பெறும்போது பாட்டு ரஞ்ஜனமாகும். பக்தனின் இதயத்தினுள் புகுந்து, அதனைத் தன் வடிவமாக்கி உள்ளத்தில் நிறைவைத் தருகிறாள். அதனால் ரஞ்ஜநீ.

35-2. ரஞ்ஜநீ - செந்நிறமடையச்செய்பவள். செஞ்சாயமேற்றுவது ரஞ்ஜனம். ஸ்படிகம் போன்று நிறமற்றவர் காமேச்வரனாகிய சிவன். அவரது மடியில் அமர்ந்து தனது செம்மையை அவர் மீது படரச் செய்து அவரை நமக்குப் புலப்படும்படி தேவி செய்கிறாள். சிவ: ஸ்வச்சச்சாயா கடித கபடப்ரச்தபட: த்வதீயா நாம் பாஸாம் பர்திபலநராகாருணதயா சரீரீ ச்ருங்காரோ ரஸ இவத்ருசாம் தோக்தி குதுகம். (ஸௌந்தர்யலஹரீ 92) பஞ்சப் பிரும்மாஸனத்தில் சிவனாகிய காமேசுவரன் மடியில் வீற்றிருக்கிறாள் தேவி. (நா.52) உள்ளேயுள்ள பொருளைத் தெள்ளெனக்

காட்டும் நிறமற்ற மேலாடைபோலுள்ள காமேசுவரனால் தேவிக்கு மறைப்பு ஏதும் ஏற்படவில்லை. தேவியின் உடலிலிருந்து கிளம்பும் செங்கதிர்களின் ஒளி ஸ்படிக நிறமுள்ள காமேசுவரனின் மேல் படும்போது இதுகாறும் ஸ்படிகம் போன்று நிறமற்றுப் புலப்படாதிருந்த அவரது மேனி செம்மேனியாவதால், சிருங்காரரஸமே வடிவெடுத்தாற்போல், சிவன் கண்களுக்கு வியப்பூட்டுகிறார். (சிருங்கார ரஸம் செந்நிறமுள்ளதென வர்ணிப்பது கவிகளின் மரபு). (309)

### 36. ரமணீ - விளையாடுபவள்.

36-1. அடியார்கள் தனது பெருமையைக் கண்டு ஒதுங்கி நில்லாமல் இருப்பதற்காகத் தன்னுடைய எளிமையைக்காட்டி அவர்களுடன் சமமாக விளையாடுபவள். (310)

### 37. ரஸ்யா - உணர்ந்து அனுபவிக்கத்தக்கவள்.

37-1. நேரிடையாக மனம் பெற்றதொரு அனுபவத்தைத் தொடர்ந்து ஏற்படும் உணர்வு ரஸமாகும். முதலில் மனம் பெறும் அனுபவம் மனக்கிளர்ச்சி அல்லது வேதனை தருவதாக இருக்கலாம். அதனை அனுபவித்த பின் அதனால் ஏற்படும் உணர்வு இனிமையானதாக இருந்தால் அது ரஸம். கசப்பாயிருந்தால் அது விரஸம். அதனால் இழிவான காமம் சிருங்கார ரஸமாவதில்லை. பின்னர் அது விரஸமாவதால், ஹாஸ்யமும், பயமும் ரஸமாவது அதன் உணர்வு மனத்திற்கு இனிப்பதால் - ரஸமாயிருப்பதால். இத்தகைய இனிய உணர்வாக அமைபவள். (ரஸயிதும் யோக்யா). பரம்பொருளை ரஸமாகவே வேதம்கூறும். (ரஸோ வை ஸ:) அப்படி ரஸமாக அனுபவிக்கத்தக்கவள். ரஸ: - ஸாரம், சாறு - சுவை. பழத்தின் சாற்றைப் பழத்திலிருந்து பிரித்துச் சுவைப்பதுபோல், ஸ்தூலத்திலிருந்து ஸாரமாக ஸூக்ஷ்மத்தைப் பிரித்துப் பின் அனுபவிக்கத்தக்கவள். (311)

### 38. ரணத் - கிங்கிணீ - மேகலா. சதங்கைகள் ஒலிக்கும் ஒட்டியாணம் அணிந்வள்.

38-1. ரமணியான அவளது விளையாட்டில் இடுப்பிலுள்ள ஒட்டியாணத்தின் சதங்கைகள் இனிமையாக ஒலிக்கின்றன. அந்த இனிய ஒலிகளும் நம் மனத்தை அவள்பால் ஈர்த்து அனுபவிக்கச் செய்து உள்ளுணர்வைத் தருகின்றன. ரமணியாவும் ரஸ்யாவாகவும் இருக்கும் தேவியின் வெளித்தோற்றம் ரணத் கிங்கிணி மேகலா. (312)

(நா. 313 - 320)

रमा राकेन्दुवदना रतिरूपा रतिप्रिया ।
रक्षाकरी राक्षसघ्नी रामा रमणलंपटा ॥ 72 ॥

**ரமா ராகேந்துவதநா ரதிரூபா ரதிப்ரியா.**
**ரக்ஷாகரீ ராக்ஷஸக்நீ ராமா ரமணலம்படா. 72**

### 39. ரமா. லக்ஷ்மி.

39-1. ரமா - லக்ஷ்மிதேவி - செல்வம். மனத்தைக்களிப்புறச் செய்வதால் (ரமயதி) ரமா.லக்ஷ்மீதேவியின் அருள் மனக்களிப்பைத் தருகிறது. அவள் அருளால் பெற்ற செல்வமும் மனக்களிப்பைத் தருகிறது. மனக்களிப்பைத் தராத செல்வம் அலக்ஷ்மீ என்பர். (துரித்திரத்தன்மை மட்டும் அலக்ஷ்மி அல்ல) யா ஸ்ரீ: ஸ்வயம் ஸுக்ருதிநாம் பவநேஷு, அலக்ஷ்மீ: பாபாத்மநாம். நற்பணிகளை செய்பவரது வீடுகளில் ஸ்ரீயாகலக்ஷ்மியாகத் தேவி தங்குவாள். (ஸ்ரீ: - பிறர்க்கு இடமளித்து உதவுமளவிற்குச் செல்வப்பெருக்கு. லக்ஷ்மீ: - தனவந்தன், வள்ளல் என அடையாளத்துடன் குறிப்பிடுமளவிற்குச்ச செல்வப் பெருக்கு) பாபச் செயல் புரிபவரது வீடுகளில் அலக்ஷ்மீயாக - இழிவாகக் குறிப்பிடும் அளவில் உள்ள செல்வமாக அமைவாள். (தேவி மாகாத்ம்யம் 4-5) (313)

### 40. ராகா - இந்து - வதநா. பௌர்ணமி சந்திரன் போன்ற முகமுள்ளவள்.

40-1. ராகா - பௌர்ணமி. அன்று தோன்றும் பூர்ண சரந்திரனுக்கொப்பான முகமுள்ளவள். முழுமை, குறைவின்மை. அப்பழுக்கின்மை, மனத்திற்குக் குளிர்ச்சி, பார்க்கப் பார்க்கத் தெவிட்டாமை ஆகிய பூர்ண சந்திரனது சிறப்புகொண்ட முகம் தேவியுடையது. (314)

### 41. ரதி - ரூபா. ரதியின் வடிவில் உள்ளவள்.

41-1. மன்மதனது மனைவி ரதி. அவனது வடிவத்தையே தன் வடிவமாகக் கொண்டவள் தேவி. ரதி: - ஒரு பொருளில் ஏற்பட்ட அளவுகடந்த ஆசையால் நிலைத்த ஈடுபாடு, அதனைப் பெற்றால் அன்றி நிம்மதி இல்லை என்றவாறு. மன்மதனது துணைவியான ரதிதேவி அவனுக்கு முன் நின்று காமிகளின் மனத்தில் ஆசையையும், ஆசைப்படும் பொருளில் ஈடுபாட்டையும் ஏற்படுத்தி உதவுவாள். அப்படி ரதி மூலம் வெளிப்படுவது தேவியின் சக்தியின் ஓரம்சம். அதனால் தேவி ரதி வடிவில் இயங்குகிறாள்.

41-2. ரமா ராகேந்துவதநா - ரதிரூபா என்ற மூன்று நாமங்களும் ஸங்கேத மொழியில் ஈம் என்ற காமகலையைக் குறிக்கின்றன. ரமா - லக்ஷ்மியின் எழுத்து ஈ. இந்து - சந்திரன் வட்டமானவன். அவன் குறிப்பிடுவது O (ம்) எனும் பிந்து. ரதி - காமனின் கலை - சக்தி. ரதிரூபா - காமகலையின் வடிவம் ஈயும் O(ம்) ம். (11.4.4) (315)

**42. ரதி - ப்ரியா. ரதியிடம் பிரியம் உள்ளவள்.**

42-1. ரதி - மன்மதனின் மனைவி. அவளிடத்தில் பிரியமாய் இருப்பவள் தேவி. ரதி கணவனை இழந்து வாடும்போது அவளிடமுள்ள பிரியத்தால் மன்மதனை மீண்டும் உயிர்த்தெழச்செய்து ரதியுடன் சேர்த்தவள். (10.21.1) ரதி - மனத்தின் நிலைத்த ஈடுபாடு. நிலைத்த ஈடுபாட்டில் பிரியமுள்ளவள். ரதி - காம விளையாட்டு. அதில் பிரியமுள்ளவள். (316)

**43. ரக்ஷா - கரீ. காத்தல் புரிபவள்.**

43-1.ரக்ஷா - காத்தல். பிரும்மா முதல் சிறு புழு வரை உள்ள உலகத்தினரைத் தனித்தும் சேர்த்தும் காப்பவள், ரக்ஷா விபூதி - திருநீறு. திருநீறாகத் தரிக்கப் பெற்றதனால் காப்பவள். ஸம்ஹாரம் புரிபவள். (317)

**44. ராக்ஷஸ - க்நீ. இராக்ஷதர்களை அழிப்பவள்.**

44 - 1. பிரும்மாவின் கொடும் பசியே வடிவெடுத்து ராக்ஷஸர் களாயிற்று. இவர்கள் பிரும்மனின் உடலிலிருந்து வெளியானதும், தம் பசியைத் தணிக்க அனைத்தையும் உண்ண ஆரம்பித்தனர். இவர்களால் பீடிக்கப்பெற்றவர்கள் பிரும்மாவை அணுகி ரக்ஷ, ரக்ஷ காப்பாற்று, காப்பாற்று எனக் கதறினார்கள். இந்தக் கதறலை உண்டாக்கின. இவர்கள் ராக்ஷஸர் - ரக்ஷஸ் - ஆனார்கள். எவர்களிடமிருந்து நம்மைக்காப்பாற்றிக் கொள்ள வேண்டுமோ அவர்கள் ராக்ஷஸர்கள். (ரக்ஷதி யஸ்மாத்) அவர்களை அழிப்பவள்.

44 - 2. பிறர் அங்கம் சிதறியோ, நோய்வாய்ப்பட்டோ, துணையின்றியோ துன்புறுவதைக் கண்டு தயை ஏற்பட்ட உதவ முன்வராத கடினமான உள்ளம் படைத்தவர் ராக்ஷஸர். த்ருஷ்டவா து விகலான் அங்கான் அநாதான் ரோகினஸ் ததா. தயா ந ஜாயதே யஸ்ய ஸ ரக்ஷ: இதி மே மதி: (ஆக்நேய புராணம்) அவர்களே அழிப்பவள் தேவி. (318)

### 45. ராமா. பெண்கள் வடிவில் உள்ளவள்.

45-1. ஸ்திரீலிங்கச் சொற்களால் பெண்பாலாகக் குறிப்பிடப்படுபவை அனைத்தும் பெண்கள். அவர்கள் தேவியே. பெண்வடிவில் உள்ள அனைவரும் தேவியே. ஒரு வீட்டில் பெண் மகிழ்ச்சியுடன் வாழ்ந்தால் தேவியே. பெண்வடிவில் உள்ள அனைவரும் தேவியே. ஒரு வீட்டில் பெண் மகிழ்ச்சியுடன் வாழ்ந்தால் தேவி மகிழ்கிறாள். பெண் பெருமையுடன் போற்றப்பட்டால் தன்னைப்போற்றியதாகத் தேவி உணர்கிறாள். பெண் கோபித்துக்கொள்ளும் சூழ்நிலையில் தேவி கோபிக்கிறாள். பெண்கள் பெருமைப்படக் குலம் வளரும். பெண்கள் இகழப்பட்டால் குலம் அழியும். ஸ்த்ரிய: துஷ்டா: ஸ்த்ரியோ ரு,டாஸ் துஷ்டா ருஷ்டாச் ச தேவதா: வர்த்தயந்தி குலம் துஷ்டா: நாசயந்தி அபமாநிதா: (பிருஹத்பராசரஸ்மிருதி) பெண்களின் சுபாவமும், அதனைத்தூண்டும் சூழ்நிலையும் மகிழ்ச்சி தருவதால் இருந்தால் தேவி அங்கு நித்யவாஸம் புரிவாள். (319)

### 46. ரமணா - லம்படா. பதியுடன் குலாவுவதை மிகவும் விரும்புபவள்.

46-1. தன் பதியான காமேசுவரனுடன் ஸஹஸ்ரார கமலத்தில் கூடிக் குலாவுவதில் மிகுந்த விருப்பமுள்ளவள் தேவி. ஒவ்வொரு பெண்ணிடத்திலும் தன் பதியுடன் கூடிக் குலாவுவதில் உள்ள நாட்டமாக விளங்குபவள் தேவி. (12.9.1., 12.22.2). (320)

(நா. 321 - 326)

**काम्या कामकलारूपा कदम्बकुसुमप्रिया ।**
**कल्याणी जगतीकन्दा करुणारससागरा ॥ 73 ॥**

**காம்யா காமகலாரூபா கதம்பகுஸுமப்ரியா.**
**கல்யாணீ ஜகதீகந்தா கருணாரஸஸாகரா. 73**

### 47. காம்யா, விரும்பப்படுபவள்,

47-1, அடைவதற்குரிய பெரும் பொருளெனவும், தன்னைக் காக்கும் தெய்வமெனவும் அவள் அருளைப் பெற அனைவராலும் விரும்ப பெறுபவள்.

47-2. ஸுதா, ஸுந்வதீ, ப்ரஸுதா, ஸக்ஷயமாநா, அபிஷூயமாணா, பிதீ, ப்ரபா, ஸம்பா, த்ருப்தி, தர்பயந்தீ, காந்தா, காம்யா, காமஜாதா,

ஆயுஷ்மதீ, காமதுகா என்ற 15 கிருஷ்ண பக்ஷத்து இரவுகளில் கிருக்ஷ்ணபத்துத் துவாதசி இரவான காம்யாவாக இருப்பவள். (காடகம் 1,1) (321)

### 48. காம - கலா-பா, காமகலை வடிவினாள்,

48-1. காமகலா என்பது ஈ என்ற அக்ஷரமும் பிந்துவும் சேர்ந்தது, (11,4,4, 18,41,2) காமேச்வரன், காமேச்வரி என்ற இரு காமர்களின் கலைகளும் ஒருங்கே சேர்ந்த எழுத்து காமகலா, பிந்து சிவ வடிவம், ஈ சக்தி அக்ஷரம், சிவ சக்தி ஐக்கியம் இந்த ஈம் ல் உள்ளது, காமன் - மன்மதன், அவனது எழுத்து ஈ (18.6.2), கலா-பிந்து , இரண்டும் சேர்ந்து காமகலா, காமா என்று தேவிக்குப் பெயர், காமாக்யா (காமா என்ற பெயருள்ளவள்) எனத் தேவி அஸ்ஸாமில் காமாக்கியா க்ஷேத்திரத்தில் விளங்குகிறாள். அவளது கலா-விலாஸம்-கேளிக்கை. அதன் வடிவில் அமைந்தது காமகலா எனும் அக்ஷரம், காமகலாவினால் குறிப்பிடப்பெறுபவள் காமகலாரூபா,

48-2, ஹ்ரீம் எனும் எழுத்து சிவ அம்சமும், சக்தி அம்சமும் பெற்றது, அதனால் ஆது பஞ்சதசாக்ஷரியின் ஒவ்வொரு கூடத்திலும் முடிப்பெழுத்தாக உள்ளது, அதிலுள்ள ஹ்ர் என்ற இரு மெய்யெழுத்துக் களுக்களுக்கு உயிர் ஆக உள்ளது காமகலா, அதன் வடிவிள் உள்ளவள், (11.4, 3-4) (322)

### 49. கதம்ப - குஸும - ப்ரியா, கதம்பப்பூவில் பிரியம் உள்ளவள்.

49-1, கடம்பின் பூவில் தேவிக்கு உள்ள அளவு கடந்த பிரியமே அவளை கதம்பவனத்தின் நடுவே இருக்கச் செய்தது, அப்படிக் கடம்புப் பூவில் பிரியமுள்ளவள் தேவி (9,9,1, 9,10,1) (323)

### 50, கல்யாணீ, மங்கள வடிவானவள்

50-1, மங்களத் தன்மையே உருவாகி நிற்பவள் தேவி, (9,2,1) மங்களமான பேச்சு கல்யா, மங்களமான பேச்சையே பேசுபவள் (கல்யாம் அணதி), அப்படிப் பேசும் பெண் வடிவில் உள்ளவள். தேவியை உள்ளிருத்தி வைத்திருப்பதால் குளிர்ந்து மங்களமாகி நிற்கும் உள்ளத்திலிருந்து வெளப்படும் சொல் மங்களமாகி இருக்கும்,

### 51. ஜகதீ - கந்தா, உலகிற்கு வேர் போன்றவள்,

51-1, உலகமாகிய தாவரத்திற்கு வேர் போன்றவள் தேவி, அதற்கு ஊட்டம் தருகிறாள், அதைத் தாங்கி நிற்கிறாள், நிலை பெயர்ந்து விழாமல் பிடிப்பாகி நிற்கிறாள், இப்படிப் பலவகையிலும் உதவினாலும் தற்பெருமையற்றவளானதால் வேர்போல் தன்னை வெளிக்காட்டாமல் மறைந்திருக்கிறாள், தாவரத்தின் பூர்ண வளர்ச்சியை அதன் வேர் காட்டும், உலகமாகிய தாவரத்தின் மிகப் பலத்த வேர், பூர்ணத்துவம் பெற்ற வேர் அவள், அதனால் உலகம் இன்னமும் பல மடங்கு பெருகினாலும் தாங்கக்கூடிய சக்தி பெற்றவள் தேவி, உலகில் அவள் நீக்கமற நிறைந்து நிற்பவளானதாலும் ஜகதீகந்தா, (325)

**52, கருணா - ரஸ- ஸாகரா, கருணைக்கடல்,**

52-1. கருணையாகிய நீர் நிரம்பிய கடலாக இருப்பவள், (326)

(நா. 327-333)

कलावती कलालापा कान्ता कादम्बरीप्रिया ।
वरदा वामनयना वारुणीमदविह्वला ॥ 74 ॥

**கலாவதீ கலாலாபா காந்தா காதம்பரீப்ரியா.**
**வரதா வாமநயநா வாருணீமதவித்வலா. 74**

**53. கலாவதீ. கலைகளை உடையவள்,**

53-1, 64 கலைகளும் (16,38,1) அவளிடத்தில் அடங்கியுள்ளன, அதனால் கலாவதீ. (327)

**54. கல - ஆலாபா, கொஞ்சும் மொழியினள்,**

54-1, கலம் - புரிந்தும் புரியாமலும் இனியதாயும் உள்ள கிள்ளைமொழி. சிறு குழந்தை பேசும் மொழி, மழலை, அதன் தாய்க்குப் புரியக்கூடியது, மற்றவர்களால் அறிய முடியாதது, தாய்க்குக் களிப்புட்டுவது. மற்றவர்கள் அதனை அவளளவில் சுவைக்க முடியாது, அப்படி அன்புள்ளம் படைத்த அடியார்கள் மட்டும் அறிந்து சுவைக்கக்கூடிய இனிய மொழியுள்ளவள் தேவி,

54-2. லாலா - லாலாபம் - சொள்ளுநீர். கொஞ்சும் மொழி பேச்சுடன் சொள்ளுநீர் கொட்டும். அது குழந்தையின் பேதை உள்ளத்தைக் காட்டும். தேவியின் கொஞ்சு மொழியுடன் வெளியாகும் சொள்ளுநீர்

பிரும்மமாகிய அவளது உண்மை நிலையைக் காட்டும். அவள் பேச்சைக் கேட்கும்போது பிரும்மத்தை நேரிடை அனுபவமாக அவ்வளவு எளிதாக உணரலாம். (328)

### 55. காந்தா, மிக அழகானவள்,

55-1. காந்தி மிக்கவள், அழகுறத் தோன்றுபவள், கம்-பரம்பொருள்; அதனையே தன் முடிவாகக் கொண்டவள். குருவாகவும், ஸகுண வடிவமுள்ளவளாகவும் தோன்றி நம்மை வலிய ஆட்படுத்திக் கடைசியில் தன் கடை நிலையான பிரும்ம வடிவைக் காட்டுகிறாள் தேவி. கிருஷ்ண பக்ஷத்து ஏகாதிசியின் இரவு காந்தா. (18.47.2) அவ்வடிவில் உள்ளவள் தேவி, கல்பநாரஹிதா காஷ்டாகாந்தா என்ற சொற்றொடர் பின்னர் வருகிறது. அங்கு காஷ்ட்டா அகாந்தா (நா.860) எனப் பதம் பிரியும். (329)

### 56. காதம்பரீ - ப்ரியா. உயர்ந்த மதுவில் நாட்டமுள்ளவள்.

56-1. வாமாசார வழிபாட்டில் ஐந்து வகை நிவேதனப் பொருள்களில் மதுவும் ஒன்று. அதில் பிரியமுள்ளவள். (330)

### 57. வரதா. வரம் அளிப்பவள்.

57-1. வரம் - வேண்டுபவைகளில் சிறந்தது. அவைகளைக் கொடுப்பவள் தேவி. நான்கு கைகளிலும் மன அடக்கத்தைத்தரும் ஆயுதம் தாங்கி நிற்பவளானதால் இவளது திருவடிகளும் கண்களும் வரத்தைக் கொடுக்கின்றன. விச்வ கர்ப்பா ஸ்வர்ண கர்ப்பாவரதா என்ற சொற்றொடர் பின்னர் வருகிறது. அங்கு ஸ்வர்ண கர்ப்பா அவரதா (நா. 639) எனப் பதம் பிரியும். (331)

### 58. வாம - நயநா. அழகிய கண்கள் உள்ளவள்.

58-1. வாமம் - அழகியது. நயனம் - கண்கள். அவள் கண்கள் அழகியவை. விரும்பியதை வாரி வழங்குபவை. அவற்றின் அழகு நிலைத்து நிற்கிறது. (9.11.1) வாமம் - வாம மார்க்கம். தேவியை வழிபடும் மார்க்கங்களில் (நா.912) வாம மார்க்கமும் ஒன்று. அது மனத்தை இழுப்பதால் வாமம். அழகானதும் கூட. அதன் வழியே தன்னிடம் அழைத்து செல்பவள் தேவி. (நயனம் - அழைத்துச் செல்லுதல்). வாமம் -

வினைகளின் பயன். வினைகளின் பயனை அனுபவிக்கும்படி அவனவனிடம் (நயநா) கொண்டு சேர்ப்பவள். (332)

59. வாருணீ - மத - விஹ்வலா. வாருணீ மதுவின் போதையால் தளர்ந்திருப்பவள்.

59-1. வாருணீ - வருணனுக்குப் பிரியமானது - பேரீச்சம் பழத்தின் சாரம் கொண்டு தயாரிக்கப்பெறும் மது. அதைப் பருகுவதால் ஏற்படும் கிளுகிளுப்பால் தன்னிலை மறந்து தளர்ந்திருப்பவள்.

59-2. வாருணீ - வருணனால் சுட்டிக்காட்டப்பட்ட பிரும்ம வித்யை, தைத்திரீய உபனிடதத்தில் விளக்கப்பட்டது. அதனால் விளைந்த வெளியுலக மறதியால் தளர்ந்த ஞானிகளைத் தன் அடியார்களாகக் கொண்டவள்.

59-3. வாருணீமத் - அவிஹ்வலா. வருணனின் பெண் வாருணீ. அவளை மணந்த ஆதிசேஷன் வாருணீமான், தேவியின் அருளால்தான் சிறிதும் களைப்பின்றி பூமியைத் தாங்குகிறான். (வஹதி ஏநம் சௌரி: கதமபி ஸஹஸ்ரேண சிரஸாம். ஸௌந்தர்யலஹரீ - 2) உலகைத் தாங்கும் வாருணீமானாக சேஷனைப்போல் தளராதவள் தேவி.

59-4. வாருணீ எனும் நாடி உடலில் வாயுவின் சக்தியைப் பரப்புகின்றது. அந்த நாடியின் சக்தியை வென்ற யோகி வாருணீமான் - அந்த யோகியைத் தளராமலிருக்கச் செய்பவள். (333)

(நா, 334 - 340)

विश्वाधिका वेदवेद्या विन्ध्याचलनिवासिनी ।
विधात्री वेदजननी विष्णुमाया विलासिनी ॥ 75 ॥

**விச்வாதிகா வேதவேத்யா விந்த்யாசலநிவாஸிநீ,**
**விதாத்ரீ வேதஜநநீ விஷ்ணுமாயா விலாஸிநீ. 75**

**60. விச்வ -அதிகா, எல்லாவற்றிற்கும் மேம்பட்டவள்,**

60-1. விசுவன் என்ற ஜீவனைவிடப் பெரியவள், (17-9) விசுவன் என்பதால் விச்வன், தைஜஸன், பிராஜ்ஞன் என்ற மூவரையும் குறிப்பிடலாம். அவர்களைத் தாண்டித் துரீயமாக இருப்பவள். விச்வம்-உலகம், தோன்றும் உலகைவிடப் பெரியவள். விராட் என்ற ஸ்தூல ஸமஷ்டிஸ்வரூபமான (நா,282, 284) உலகம் கால்பங்கு, பாக்கியுள்ள

முக்கால் பங்கு அழியாத நிலையில் பரமாகாசத்தில உள்ளது. பாதோஸ்ய விச்வா பூதாநி – த்ரிபாத் அஸ்ய அம்ருதம் திவி (புருஸூக்தம்). தோன்றும் உலகைவிட அதன் காரணமான தேவி பன்மடங்கு விரிவுள்ளவள். பூமி முதல் சிவன் ஈறான தத்துவங்களுக்கு அப்பாற்பட்டவள். (16,5, 1-3) (334)

## 61, வேத-வேத்யா, வேதங்களால் அறியத்தக்கவள்,

61-1, விச்வாதிகையான தேவியை வேதங்கள் நமக்கு அறிமுகப் படுத்துகின்றன. தேவி தன்னை அறிவிக்கும் நுல்களாக வேதங்களை முதலில் படைத்தாள். அதிலுள்ள அக்ஷரங்கள்–அழியாத்தன்மை படைத்த எழுத்துக்கள். அக்ஷரமான- அழியாத்தன்மை படைத்தை தேவியின் ஸ்வருபத்தைக் காட்டவல்லவை.

61-2. வேதங்கள் தேவியைப் பற்றி அறிவிக்க, ஸ்ரீ நகரத்தின் நான்கு வாயில்களாக அமைந்துள்ளன. ருக் வேதம் கிழக்கிலும், ஸாம வேதம் மேற்கிலும், அதர்வ வேதம் வடக்கிலும் வாயில்கள். தேவியை அடைய வாயில்களாக அமைந்த வேதங்கள் உதவுகின்றன.

61-3, ஸ்ரீசக்கரத்தின் நடுவில் உள்ள பிந்துவில் ஆம்நாய சக்திகளாக விளங்குபவர்களை வழிபடுகிறோம்,(9.10.29) அவர்கள் வேதத்தின் சக்திகள். அவர்களில் சுத்தவித்யை முதலான 24,000 சக்திகள் ருக்வேதத்தின் சக்திகள். அவர்களுக்குத் தலைவி **உந்மோதிநீ**, ஸௌபாக்யவித்யா முதலான 30,000 சக்திகள் யஜுர்வேதத்தின் சக்திகள். அவர்களுக்கு தலைவி போகிநீ, லோபாமுத்ரா முதலிய 2,000 சக்திகள் ஸாமவேதத்தின் சக்திகள். அவர்களின் தலைவி குஞ்சிகா, துர்யாம்பா முதலிய 2,000 சக்திகள் அதர்வண வேதத்தின் சக்திகள், அவர்களின் தலைவி காளிகா, இவர்கள் முறையே பூர்வாம்நாயம், தக்ஷிணாம்நாயம், பச்சிமாம்நாயம், உத்தராம்நாயம் இவற்றின் தேவதைகள், இவர்களால் அறிமுகப்படுத்தப்படுபவள். (335)

## 62. விந்த்யாசல-நிவாஸிநீ. விந்த்யமலையில் வசிப்பவள்.

62-1. தேவி உறையும் க்ஷேத்திரங்ளில் சிறப்புள்ள விந்திய மலையில் விந்த்யவாஸினி – நந்தா எனும் பெயருடன் வசிக்கிறாள். நந்தகோபர் வீட்டில் யசோதைக்குப் பெண்ணாகப் பிறந்து கண்ணனுக்குப் பதிலாக வடமதுரைக்கு வசுதேவரால் எடுத்துச் செல்லப்பட்டாள். கம்ஸனின் கைகளிலிருந்து நழுவி கண்ணன் எங்கோ பிறந்திருக்கிறான் என்பதை அறிவித்து மறைந்துவிட்டாள். இவளே கம்பனையும் நிசும்பனையும்

அழித்தவள், (தேவீ மாகாத்ம்யம் 11. 41-42) (336)

### 63. விதாத்ரீ, உலகைத் தாங்குபவள்.

63-1. தாத்ரீ-தாய், தன் கருவில் சிசுவைத் தாங்கி, ஓரளவு அது வளர்ந்தும், அதனை வெளப்படுத்தி மேலும் வளர்ப்பவள். வி-தாத்ரீ-என்றுமே தாங்கும் சிறப்புமிக்க தாய். தேவி உலகைக் கருவில் சுமந்து வெளிப்படுத்தி வளர்ப்பவள். விதாதா-பிரும்மா, அவரது சக்தியாக - பத்தினியாக இருப்பவள். தாத்ரீ-நெல்லிக்கனி, அதில் (வி) தனித்த ஆவல் கொண்டவள், நெல்லிமரம் தேவி தங்கும் இடமாக வழிபடப்பெறும். (337)

### 64. வேத - ஜநநீ. வேதங்களின் தாய்.

64-1. பெருவெளியான பரம்பொருளிலிருந்து சொல்லாக முதலில் தோன்றியவை நான்கு வேதங்கள், தஸ்மாத் யஜ்ஞாத் ஸர்வஹுத: ருச: ஸாமாநி ஜஜ்ஞரே. சந்தாம்ஸி ஜஜ்ஞரே தஸ்மாத், யஜுஸ்தஸ்மாத் அஜாயத. எல்லாவற்றையும் ஆஹுதியாக ஏற்கும் வேள்வி வடிவிலிருந்த விராட் புருஷனிடமிருந்து ருக், ஸாம, அதர்வ, யஜுர் வேதங்கள் தோன்றின (புருஷஸுக்தம்). அப்படி நான்கு வேதங்களையும் படைத்தவள். (338)

### 65. விஷ்ணு-மாயா. பரம்பொருளின் மாயாசக்தியாக இருப்பவள்.

65-1. விஷ்ணு - எங்கும் நீக்கமற நிரம்பிருப்பதும் எக்காலத்திலும் உள்ளதும் எல்லாயுமிருப்பதுமான பரம்பொருள். அதன் சக்தியான மாயை வடிவினள். மாயை மறைக்கும் சக்தி படைத்தது. அது கருணையால் மறைக்கிறது. பரம்பொருளின் உண்மை வடிவத்தையும் முழு நிலையையும் எவராலும் உணரமுடியாது. பிரும்மா, விஷ்ணு, ருத்திரன் முதலிய பல வடிவங்களாக அதனைக் காட்டுகிறாள் மாயை. பிரும்மத்தின் எண்ணற்ற சக்திகளில் பலவற்றை மறைத்துச் சில சக்திகள் மட்டும் வெளிப்படும் தோற்றங்களே பிரும்மா முதலியவர்கள். தெய்வத்தன்மை (விபூதி) நிறைந்த வேறு வடிவங்களையும் காட்டுகிறாள் மாயை. அதனால் ஓரளவிற்கு அறிவிற்குப் புலனாகிப் பரம்பொருள் தியானம் செய்ய உகந்ததாகிறது. அப்படிக் கருணையால் தேவி எடுத்துக்கொண்ட உருவம் விஷ்ணுமாயை.

65-2. மாயை இரு சக்திகள் கொண்டது. ஒன்று ஆவரணம், மற்றொன்று விக்ஷேபம். ஆவரணம் என்பது தமோகுணத்தால்

இருப்பதனை மறைப்பது. பரம்பொருளின் உண்மை வடிவைப் பார்க்கவொண்ணாமல் மறைப்பது மாயை. மாயை ஏமாற்றும். இருப்பதை இல்லாததுபோலும், இல்லாததை இருப்பது போலும்காட்டும், எங்கும் நீக்கமற நிறைந்துள்ள அகண்டமான பரம்பொருளைப் பார்க்க முடியாமல் மறைத்து அதனிடத்தில் இல்லாததும், தோற்றத்தால் மட்டும் இருப்பது போன்று மயக்குகின்றதுமான உலகமாகிற துண்டு துண்டாக-கண்டமாகத் தோன்றும் பல பொருள்களைக் காட்டி மயக்குகிறாள் மாயை.

65-3. மூலப்பிரகிருதி தேவியின் ஞானக்கிரியா சக்திகளின் வடிவம். இதனை மாயை என்பர், அவ்யக்தம், வ்யக்தாவ்யக்தம், வ்யக்தம் என்ற மூன்று நிலைகளில் உலகாக மாறவிருக்கும் மூலக்கருவைத் தோற்றுவித்தவள் மூலப்பிரகிருதி. தன்னுள் மறைந்திருந்த ரஜஸ், தமஸ், ஸத்வம் எனப்படும் முக்குணங்களை அஹங்காரத்திடம் செலுத்தி அதனைப் பல வடிவங்கள் பெற்ற உலகமாக மாற்றியவள். (17.8.1.10)

65-4. புலப்படாததொன்றைப் பொறிகளுக்கு உட்படுவதாகச் செய்ய வேண்டும். சுத்த வெண்மை நிறம்கொண்டதொன்றைச் சுற்றிக்கருத்த கோட்டினை வரைந்தால் வெண்மை பளிச்சென்று துலங்கும். புலப்படாதிருந்தது புலப்படும். சுற்றிலுமுள்ளதை மறைத்தால் நடுவில் உள்ளது நன்கு புலப்படும். இப்படி மறைப்பதே துலக்குவதற்குத் தான். மறைப்பை மட்டும் கண்டு, துலங்குவதைக் காணாதவன் ஏமாறுவான். அது மறைப்பால் அல்ல, அறியாமையால். அறியாமையே மாயை. மாயை பரம்பொருளை மறைத்தது அதனை விளக்கவே. இதனை அறிந்தவர் மாயையெனும் திரையினுள் மறைந்துள்ள பரம்பொருளை நன்கு அறிவர். மாயையை அறிந்தவர் மாயையைத் தாண்டுவர். (339)

**66. விலாஸிநீ. விக்ஷேப சக்தியாக இருப்பவள்.**

66-1, மாயையின் விக்ஷேப சக்தி ஒன்றைப் பலவாகக் காட்டும், அததன் உண்மை நிலையைப் புலப்படாமல் செய்து உண்மை நிலைக்குப் புறம்பான தோற்றத்தை உண்மைத்தோற்றமாகக் காட்டும். நிறமற்ற ஒளியை மறைக்கும் சிகப்புக் கண்ணாடி ஒளியைச் செந்நிறமாகக் காட்டுகிறது. அதுபோல் மாயை ரஜோ குணத்தாலான விக்ஷேப சக்தியால் பிரும்மத்திடமிருந்து தோன்றியதனைத்தையும் பிரும்மத் தன்மையற்றவை யாகக் காட்டுகிறது,

66-2. விலாசம்-கேளிக்கை. அதில் மிகவும் ஈடுபாடுள்ளவள் விலாஸிநீ. விலம்-பிலம்-பிரும்மரந்திரம் எனும் உச்சிக்குழி, அல்லது

காஞ்சியில் காமகோட்டத்தில்உள்ள பிலம். அவற்றுள் அமர்ந்துள்ளவள். (340)

(நா. 341 - 345)

**क्षेत्रस्वरूपा क्षेत्रेशी क्षेत्रक्षेत्रज्ञपालिनी ।**
**क्षयवृद्धिविनिर्मुक्ता क्षेत्रपालसमर्चिता ॥76 ॥**

**க்ஷேத்ரஸ்வரூபா க்ஷேத்ரேசீ க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞபாலிநீ.**
**க்ஷயவ்ருத்திவிநிர்முக்தா க்ஷேத்ரபாலஸமர்ச்சிதா. 76**

**67. க்ஷேத்ர ஸ்வரூபா. க்ஷேத்திர வடிவானவள்.**

67-1. தெய்வ ஸாந்நித்யம் நிலைத்திருக்கும்படி யந்திர -தந்திர -மந்திர விதிகளால் பண்படுத்தப்பெற்றதும், அல்லது தானே இயற்கையாய் க்ஷேத்திரமாக அமையப் பெற்றதுமான காஞ்சி, காசி, மதுரை, ராமேசுவரம் முதலிய க்ஷேத்திரங்களைத் தன் வடிவமாகக் கொண்டவள். **க்ஷேத்திரம்** -விதைத்துப் பயிராக்கத் தக்கதாக வரையறுக்கப் பெற்றுள்ள பண்பட்ட பூமி, வயல்: அனாதி காலமாய் வழிபாடு முதலியவற்றால் தெய்விகம் மிக்கதாய் செய்யப்பட்ட புண்ய ஸ்தலம், வயலாகிய இந்த உடலில் முன் வினையை விதையாக விதைத்துத் தற்போது செய்யும் வினைகளாகிய கர்மங்களை நீராக்கி வார்த்து உரிய காலத்தில் ஸுக துக்க அனுபவமாகிய அறுவடையைச் செய்கிறோம். அதனால் உடல் க்ஷேத்திரம். இறைவனது கோயிலாக்கிப் புனிதமாகக் காத்து வழிபாடு முதலியவற்றால் அதில் தெய்விகத் தன்மையை ஏற்றியதும் தரிசு நிலம் கூட க்ஷேத்திரமாகிறது. அது போன்று இந்த உடலும் தெய்விக வாழ்க்கை முறையால் தெய்விகத் தன்மைக்கு இருப்பிடமானவுடன் நடமாடும் கோயிலாக காசி - காஞ்சி போன்ற க்ஷேத்திரமாக ஆகிறது. இந்த க்ஷேத்ரத்தின் வடிவில் இருப்பவள்.

67-2. பொறிகளும் மனமும் புத்தியும் கொண்ட உடலானது ஸம்ஸாரமாகிய பயிர்முளைத்து வளரக்கூடிய பூமியாக அமைந்தமையால் க்ஷேத்திரமாகும். அவ்யக்தம், மஹத், அஙங்காரம், தன்மாத்திரங்கள் 5, இந்திரியங்கள் 19, ஞானஇந்திரியங்களால் அறியக்கூடிய புலன்கள் 5, மனம ஆகிய 24ம் அவைகளால் ஏற்படும் உணர்ச்சிகளான விருப்பு, வெறுப்பு, சுகம், துக்கம், தைர்யம் உணர்வு இவைகளும் மனம் பொறிகள் உடல் இவை ஒருங்கணைந்திருப்பதும் க்ஷேத்திரமாகும், (கீதை 13.1-6) இவைகளைத் தன்வடிவாகக் கொண்டவள்.

67-3. இந்த க்ஷேத்திமாகிய உடல், வழிபாடு முதலியவையால் தெய்விக சக்தி பெற்று ஸம்ஸாரமாகிய பயிர்விளையும் வயலாக அமைந்த இந்த உடல் தெய்விக வாழ்க்கையை ஏற்றுக் கொள்ளும்போது காசி, காஞ்சி போன்ற புண்ணிய ஸ்தலமாகும் பெருமையை அடைகிறது. அத்தகைய புனித உடலைத் தன் வடிவடிவமாகக்கொண்டு தேவி அதனுள் வசிக்கிறாள். (341)

## 68. க்ஷேத்ர - ஈசீ, க்ஷேத்திரத்தை ஆள்பவள்.

68-1. க்ஷேத்திரங்களான காசி, காஞ்சி முதலிய புண்ய ஸ்தலங்களையும், க்ஷேத்திரமான உடலையும் ஆள்பவள். க்ஷேத்திங்களுக்கு அதிபரான ஈசனின் சக்தி அல்லது பத்தினி. (342)

## 69. க்ஷேத்ர - க்ஷேத்ரஜ்ஞ - பாலிநீ, க்ஷேத்திரத்தையும் க்ஷேத்திரஜ்ஞனையும் காப்பாற்றுபவள்.

69-1. க்ஷேத்திரம் - பண்பட்ட உடல், க்ஷேத்திரஜ்ஞன் - உடலைத் தானென்றும் தன்னுடையதென்றும் உணர்ந்து அபிமானம் கொண்ட ஜீவன். (பா.1708-15-17) வயல் போன்ற உடலில் வினையாகிய விதையை விதைத்து நீர்வார்த்துப் பயிராக்கி உரிய காலத்தில் அறுவடை செய்து அதன் பயனைப் பெறும் விவசாயி போன்றவன் ஜீவன். க்ஷேத்திரத்தைத் தான் -(ஜடமான சரீரமே நான்) என அபிமானம் கொள்வதால் அவன் க்ஷேத்திரஜ்ஞன். க்ஷேத்திரம் வரையறுக்கப்பட்டுள்ளதையும், பண்படுத்தப் பட்டுள்ள நிலையையும் உணர்ந்து, ஸ்துல ஸுக்ஷ்ம தேகங்களைக் கொண்டு ஆற்றக்கூடிய செயல்கள் நியதிக்கு உட்படுபவை; உடலும் உள்ளமும் அமைந்துள்ள பாங்கில் நிறைவேற்றக்கூடிய பணி இந்த அளவில்தான் அமையும் என உண்மை நிலை அறிந்தவன் க்ஷேத்திரஜ்ஞன். இத்தகைய க்ஷேத்திரத்தையும், க்ஷேத்திரஜ்ஞனையும் காப்பவள், வினை விதைத்துப் பயிராக்கத் தக்க க்ஷேத்திரமாக அமைந்த உடலை வினைகளை அறுத்துச் சுட்டெரிக்கும் ஞானஅக்னியில் புடமிட்டுப் புண்ய க்ஷேத்திரமாக்கித்தேவி காக்கிறாள். ஜடமான பொருள்களையும் 'தான்' எனஅபிமானித்துள்ள ஜீவனுக்கு ஆத்மாவான சேதன ஸ்வரூபத்தையும், ஜடமான உடல் மனம் முதலியதன் நிலையையும் விளக்கி உணர்த்தி, ஜடத்திலிருந்தும் சேதனத்தைப் பிரித்தறியச்செய்து 'தான்' சேதன வடிவினன் என்பதை நேரிடையான அனுபவத்தின் மூலம் உணரச் செய்து ஜீவன் முக்தனான க்ஷேத்திரஜ்ஞனாக்கிக் காக்கிறாள். (343)

### 70. க்ஷய-வ்ருத்தி-விநிர்முக்தா. தேய்வும் வளர்ச்சியுமில்லாதவள்.

70-1. க்ஷேத்திரம், க்ஷேத்திரஜ்ஞன் என்ற இரு வடிவங்களாலும் தேய்வையும் வளர்ச்சியையும் மாறி மாறி அடையவேண்டி இருப்பதால் தேவியின் நித்யத் தன்மையில் குறை ஏற்படுமோ என ஐயத்திற்கு இடமில்லை. அவள் தேய்வும் வளர்ச்சியுமற்றவள். குடத்தினுள் அடங்கியதால் ஆகாயத்தின் அளவற்ற தன்மைக்கு ஊறு விளைவதில்லை. மணம் பரப்புபவை கலப்பதால் ஆகாயம் மணப்பதில்லை. மேகங்கள் வேகமாக அலையும்போது ஆகாயத்தில் சலனம் ஏற்படுவதில்லை. செயலாலோ, சேர்க்கையாலோ, ஏற்படக்கூடிய தேய்வும், வளர்ச்சியும் தேவியைப் பாதிப்பதில்லை, சிறிதாயிருந்தது பெரிதாக வளரும். தேவி பூர்ணா–நிறைந்தவள். குறிப்பிட்ட பரப்பில் அடங்கியவளல்ல. அதனால் சிறிது பெரிது என்ற பாகுபாட்டிற்கு இடமில்லை. வளர்ந்தது தேயும், விரிந்தது குறுகும். என்றும் எங்கும் நிரம்பிய தேவியிடம் தேய்வையும் வளர்ச்சியையும் காண முடியாது. (344)

### 71. க்ஷேத்ரபால-ஸமர்ச்சிதா. க்ஷேத்திரபாலரால் நன்குபூஜிக்கப்பெற்றவள்.

71-1. பைரவர்களில் (பயங்கரத் தோற்றமுள்ள சிவமூர்த்திகளில்) ஒருவர் க்ஷேத்திரபாலர், வேள்விகளை அழித்து வந்த தாருகன் எனும் அஸுரனை அழிக்கச் சிவன் காலகண்டி எனும் காளியைத் தோற்றுவித்தார், காளி தாருகனை அழித்த பின்னும் உக்கிரம் அடங்காதிருந்தாள், அவளை மகிழ்விக்கக் கூடியவர் சிவன் ஒருவரே. காளி பயங்கரமான உள்ளமும் தோற்றமும் கொண்டவள். அவள் மனத்தை ஈர்க்கப் பயங்கரமான தோற்றமுள்ள குழந்தையால் தான் இயலுமென உணர்ந்த சிவன் பைரவ உருவில் சிசுவாகவந்தார். (21.84) காளி தாய்மை உணர்ச்சி மேலீட்டால் அந்தச் சிவக்குழந்தையை எடுத்துப் பாலூட்டினாள். சிவக்குழந்தை பாலுடன் அவளது உக்கிரத்தையும் குடித்துவிட்டது, காளியின் உக்கிரத்திலிருந்து – உக்கிரமான தேவதாசக்தியிடமிருந்து அந்த க்ஷேத்திரத்தைக் காப்பாற்றியவரானதால் க்ஷேத்திரபாலர் எனப் பெயர் பெற்றார். அவரால் நன்கு பூஜிக்கப்பட்டவள் தேவி.

71-2. க்ஷேத்திரம்–உடல். ஆதில் காப்பாளத்களாக உள்ள திக்தேதைகள், வாயு, சூர்யன், அக்னி முதலிய தேவதைகளால் வழிப்பட்டவள். (17.8. 1-8)

(நா. 346-352)

विजया विमला वन्द्या वन्दारुजनवत्सला।
वाग्वादिनी वामकेशी वह्निमण्डलवासिनी ॥77 ॥

**விஜயா விமலா வந்த்யா வந்தாருஜநவத்ஸலா,**
**வாக்வாதிநீ வாமகேசீ வஹ்நிமண்டலவாஸிநீ. 77**

**72. விஜயா, தனிச் சிறப்புள்ள வெற்றி பெறுபவள்.**

72-1, தேவியின் வெற்றி தனிச் சிறப்புள்ளது, மற்றவர்களது வெற்றி, ஒன்று அழிவதன் விளைவாக அமையும். இவளது வெற்றி மற்றவற்றைச் சிறப்புள்ளவையாக ஆக்குவதாக அமையும்.

72-2. விஷயா-உள்ளுணர்வு 'நான்' என்ற சேதனத்தின் உள் உணர்வானவள். புரட்டாசி மாதத்தில் விஜயதசமியன்று மாலையை ஒட்டி நக்ஷத்திரங்கள் உதிக்கத் தொடங்கிய இரவின் முற்பகுதி விஜயா எனும் நல்முகூத்தமாகும். வெற்றி தரும் வேளையெனக் கருதி அரசாகள் இதில் விஜய யாத்திரைக்குக் கிளம்புவர். இந்த நல்வேளையாக உள்ளவள். சிவதீர்த்தங்கள் 68ல் காச்மீரத்திலுள்ள விஜயதீத்தம் ஒன்று. அந்த தீத்தமாயிருப்பவள். விசுவகர்மா எனும் தேவசிற்பி விஜயமெனும் மாளிகை அமைப்பை விளக்கி அது அரசர்களுக்கு வெற்றிதரும் எனக் கூறியுள்ளார். அந்த விஜயமாளிகையாக இருப்பவள். த்ருவம், தான்யம், ஷயம், காந்தம், விபுலம், விஷயம், ஸுமுகம், விமலம், நந்தம், மநோரமம் என்ற மாளிகை வகைகளைச் சிற்ப சாஸ்திரத்தில் விசுவகர்மா குறிப்பட்டுள்ளார். நேரமும் தீர்த்தமும் மாளிகையும் தேவியன் விபூதியில் ஓரம்சம் பெற்றிருப்பதால் வெற்றி தருகின்றன. (346)

**73. வி மலா - அழுக்கற்றவள்.**

73-1. அறியாமையால் ஏற்படும் அழுக்கை மலம் என்பர். (14-4-1) அவித்யைத் தொடர்பில்லாமையால் மலமற்றவள். புருஷோத்தமமெனும் ஜகன்னாதத்தில் விமலா என்ற சக்தி பீடமானவள். விசுவகர்மாவெனும் தேவச் சிற்பியால் வடிவமைக்கப் பெற்ற விமலம் எனும் மாளிகை வடிவிலுள்ளவள். (347)

**74. வந்த்யா - வணங்கத்தக்கவள்.**

**75. வந்தாரு - ஜந - வத்ஸலா. வணங்குபவர்களிடத்தில் வாத்ஸல்யம் உள்ளவள்.**

75-1. தேவி எல்லோரது வணக்கத்திற்கும் உரியவள். வணங்குபவர்பால் அவள் கொண்டுள்ள நிகரற்ற அன்பினால் அந்த உரிமை அவளுக்குக் கிடைத்தது. தேவியை வணங்குவதொன்றையே பழக்கமாகக் கொண்டவன் வந்தாரு. ஜந:-பிறவிப் பிணிக்குள்ளானவன். தான் கரையேறத் தேவியின் திருவடிகளே சரணம் எனக் கருதி அவைகளை வணங்குவதே வாழ்நாள் முழுவதும் செய்யவேண்டிய பணி எனக் கொண்டவன். அவனிடம் தேவிக்கு அளவுகடந்த பிரியம். அந்தப் பிரியத்திற்கு இணையாப் பசு தன் இளம் கன்றிடம் கொண்ட பிரியத்தைக் கூறலாம். தனது மூத்த கன்றைக்கூட முட்டி விரட்டிப் பின் தன் இளைய கன்னிற்குப் பால் ஊட்ட மடிதரும் பசு வத்ஸலா - இளங்கன்றை போற்றி வளர்ப்பதில் நிகரற்ற ஈடுபாடு கொண்டது. அதனைப்போல் தேவியும் வணங்கித் தன்னைச் சரணமாகக் கொண்டவனிடம் வத்ஸலா-வாத்ஸல்யம் கொண்டவள். அதனால் அவள் வந்த்யா வணங்கத் தக்கவள். (348-349)

### 76. வாக் வாதிநீ - வாக்வாதினியாயிருப்பவள்.

76-1. ஸரஸ்வதியின் ஒரு தோற்றம் வாக்வாதினீ தேவி. சியாமளா தேவியின் துணை அங்க தேவதை (10-11-4) உத்தராம்நாய தேவதைகளில் ஒருவள். (18-61-3) தாமரையில் அமர்ந்திருப்பாள். ஏழுதுகோலையும் புத்தகத்தையும் இரு கைகளில் தாங்கியிருப்பாள். முல்லை போன்ற வெண்ணிற மேனியாள். சந்திரனது பிறையுள்ள கிரீடத்தோடு கூடியவள். பேசும் சக்தி தருபவள். (350).

### 77. வாமகேசீ - அழகிய கூந்தல் உள்ளவள்.

77-1. வாம - அழகிய, கேசீ - கேசங்களுள்ளவள். வாமக - ஈசீ, வாமாசாரமுள்ளவர்களின் தலைவர் வாமகர் சிவன். அவரது மனைவி வாமகேசீ. வாமகேசம் என்று 68 சிவ தீர்த்தங்களில் ஒன்று. அதன் தலைவி. வாமகேசரான சிவன் சொல்லிய தந்திரநூல் வாமகேச்வர தந்திரம். அதில் விளக்கப்படுபவள் வாமகேசீ. வாமன்-அழகே வடிவான சுந்தரர் சிவன். சிறப்புள்ள சிவன் வாமகர். அவரது சக்தி வாமகேசீ. (நா.945) (351)

### 78. வந்நி மண்டல - வாஸிநீ - அக்னி மண்டலத்தில் வசிப்பவள்.

78-1. தேவியை சந்திர மண்டலத்திலும் (16.42-1) சூர்ய மண்டலத்திலும் (18.1-62) வசிப்பவளாக முன்னர் தியானம் செய்தோம்.

மூன்றாவது ஒளிமண்டலம் அக்னி மண்டலமாகும். அதில் வசிப்பவள். அக்னி மண்டலம் மூலாதார ஸ்வாதிஷ்டான சக்கிரங்கள் அடங்கியதாகும். (12.11-2) அதனுள் வசிப்பவள் தேவி. வந்ஹி என்பது ஸங்கேத மொழியில் 3ஐக் குறிக்கும். கார்ஹபத்யம் ஆஹவனீயம் தக்ஷிணம் என வேள்விகளுக்கான அக்கினி மூன்றாகும். ஆதனால் வந்ஹி-அக்கினி முதலிய நெருப்பைக் குறிக்கும் சொற்கள் மூன்றைக்குறிக்கும். மூன்று மண்டலங்களான ஸோம-ஸூர்ய-அக்னி மண்டலங்களில் வசிப்பவள். (352)

(நா.353-356)

भक्तिमत्कल्पलतिका पशुपाशविमोचनी ।
संहृताशेषपाषण्डा सदाचारप्रवर्तिका ॥ 78 ॥

**பக்திமத் கல்பலதிகா பசுபாசவிமோசநீ.**
**ஸம்ருதாசேஷபாஷண்டா ஸதாசாரப்ரவாத்திகா. 78.**

**79. பக்திமத் - கல்பலதிகா - பக்தர்களுக்குக் கற்பகக் கொடி.**

79-1. கல்பலதா-கற்பகக்கொடி. அழகியலதா-லதிகா. ஆணைக் குறிப்பிடும்போது கல்பவ்ருக்ஷ: கற்பக மரம் என்றும் பெண்ணைக் குறிப்பிடும்போது கல்பலதா என்றும் குறிப்பிடுவர். அதனடியில் அமர்ந்துள்ளவன் வேண்டுவதை அது வாரி வழங்கும். அப்படிப் பக்தர்களுக்குத் தேவி வாரி வழங்குகிறாள்.

79-2. பக்திமத்கல்பர்கள் சிலர். பக்தி நிறைந்தவர்கள் பக்திமான்கள் (பக்திமத்). அந்த நிலையை இன்னமும் அடையாதவர்களையும், பக்திமான் போன்று தோன்றுபவர்களையும் பக்திமத் கல்பர்கள் என்பர். லதா-கொடி-தானே படரக்கூடியது. அணைக்க விரும்புமிடத்தை நோக்கித் தானே படர்ந்து அதனை அணைத்து மகிழக்கூடியது, பக்திமத்கல்பர்களைத் தேடிச் சென்றுக் கொடி போலாகி அவாகள்மேல் படர்பவள். சிறிதளவு தன்னிடம் பக்தி எனும் துளிர்விட்டதும் அதனை வளர்த்து மாபெரும் கொடியாக்கி எங்கும் படரவிட்டு, அடையத்தக்க தன்னை அடையும்படி செய்பவள்.

79-3. லதிகா -கஸ்தூரிக் கொடி. இது கஸ்தூரியின் மணத்தைக் கொண்ட கொடி. இதனை முகர மனம் நிறைந்த அமைதி பெறும். பக்திமத்கல்பர்களை மகிழ்விக்கும் கஸ்தூரிக் கொடி போன்றவள்.

79-4. முறையுடனும் முறையற்றும், சிறிதளவிலும் கூடத் தேவியிடம்பக்தி அமைந்தால், அதனை முறைப்படுத்தி நிறைவுறச் செய்துவிடுவாள். அதனால் நமக்கேற்பட்டுள்ள வினைப்பாசக் கட்டிலிருந்து விடுவிப்பாள். இதனை அடுத்த நாமம் விளக்கும். (353)

### 80. பசு பாச விமோசநீ - பசுவான ஜீவர்களைத் தளையிலிருந்து விடுவிப்பவள்.

80-1. கட்டிற்கு உட்படும் பிராணி பசு. ஜீவன் பசு. ஜீவனது அந்தாயாமியாயிருந்து எல்லாப் பணிகளையும் நிறைவேற்றுபவளும் ஜீவன் 'நான்' என்ற உணரும் உணர்வில் 'நான்' ஆக இருப்பவளுமான தேவியை அறியாதவன் பசு. பிறவிக்கு உட்பட்டதால் அறிவற்ற பசு தன்னிஷ்டப்படிச் சுற்றி வர முடியாது. வினைக்கேற்ற பயன் தரும் ஈசுவரன் பசுபதி. இந்த அறிவற்ற பசுவைப் பாசத்தால் பிணைக்கிறார். ப + அசம் = பாசம். பா - நீர் வேட்கை, அசம்-பசி. தாகமும் பசியுமே முக்கிய உணர்வாகக் கொண்டது பசு. அந்த உணர்வுகளையே பாசமாக்கி, அதனால் பசுவைப் பிணைக்கிறார். பசி தாகங்களிலிருந்து விடுபடுவதே சுகம்-மோக்ஷம் என அந்தப் பசு நினைக்கும். அதற்காகவே வாழ்நாள் முழுதும் உழலும். அறியாமையால் கட்டுண்ட பசுவைப் பாசத்திலிருந்தும் தேவி விடுவிக்கிறாள். தேவி தான் உள்ளிலிருந்து ஆட்டுவிப்பதை அவனுக்கு உணர்த்துகிறாள். உள்ளும் புறமும் அவள் சூழ்ந்திருப்பதை அறிந்த ஜீவனுக்குப் பசியும் தாகமும் மறைகின்றன. அறியாமை அகலுகின்றது. அவளது அன்பைத் தன் அன்பால் பெற்று ஜீவன் விடுதலை பெறுகிறான்.

80-2. பசியும் தாகமும் தளையானதற்குக் காரணம் ஐந்து. அவைகளும் பாசங்கள். "அவித்யாம் அஸ்மிதாம் ராகம் த்வேஷம் சத்விபதாம் வர. வதந்த்யபிநிவேசம் ச க்லேசான் பாசத்வமாகதான்" **அவித்யா, அஸ்மிதா, ராகம், துவேஷம், அபிநிவேசம்** என்பவை அவை. 'நான்' என்ற எண்ணத்தின் ஆதாரமான ஆத்மா எது? ஆத்மாவென வேஷம் போட்டுக்கொள்பவை எவை என்பதைப் பித்தறியாமை அவித்யா-அஞ்ஞானம். உடலும் பொறிகளும் மனமும் 'நான்' ஆக இருக்க முடியாது. இவை மூன்றும் இயங்காத தூக்க நிலையிலும் நான் இருக்கிறேன். இந்த 'நான்' அல்லாத உடலையும் மனத்தையும் பொறிகளையும் 'நான்' என நினைத்துக்கொள்கிறேன். நான்

கண்ணாக இருப்பவனாகப் பாவித்துப் 'பார்க்கிறேன்' எனக் கூறுகிறேன். இது அஸ்மிதா-அஸ்மி- "அதாக இருக்கிறேன்". அந்த உணர்வின் தன்மை அஸ்மிதா. இது அவித்தையால் விளைந்தது. கண் ஒரு பொருளை நாடுவதால் அதனிடம் மனம் விருப்பம் கொள்கிறது. அதனை 'எனது' விருப்பமாக்கி 'நான்' அதில் ஈடுபடுகிறேன். இது 'ராகம்'. இது 'அஸ்மிதா' வால் விளைந்தது. ஆசை தடைபட்டாலோ ஆசைப்படுவது கிடைக்காவிட்டாலோ கோபமும் அதன் விளைவாக வெறுப்பும் ஏற்படுகின்றன. ஆசைப்பட்ட பொருள்கிடைத்தாலும் அது கண்ணிற்கும் மனத்திற்கும் திருப்தியை எதிர்பார்த்தபடி கொடுக்காததாலும் வெறுப்பு ஏற்படுகிறது. இது துவேஷம். இது ராகத்தால் விளைந்தது. இந்த விருப்பும் வெறுப்பும் தாற்காலிகம் தான். ஆனால் மனத்தில் ஏற்பட்ட பாதிப்பு மனத்தில் நிலைத்ததொரு வாசனையாகக் குடியேறிவிடுகிறது. இது அபினிவேசம். மனம் அந்த விருப்பு-வெறுப்புகளின் அடிமையாகி அவைகள் ஆட்டுவித்தபடி ஆடுகிறது. இவை ஐந்துமே பாசமாக-பசி தாக உணர்ச்சியாக நம்மைப் பிணைக்கின்றன. ஆத்மா எது என்று அறிய தேவி அறிவைத் தருகிறாள். அறிவால் அறியாமை அகல, அதன் பின்விளைகளும் மறைய, அவைகளின் உருவிலிருந்த பாசங்களும் தளர்ந்து விலகுகின்றன.

80-3. பாசங்கள் மூன்றுவகை, ஆணவம், மாயை, காமம் என. (நா.133-135) இவைகளை மலமென்றும் குறிப்பிடுவர். இந்தக் கயிற்றைத் திரித்துப் பின் அதனால் தன்னைப் பிணைத்துக் கட்டிக்கொள்ள அறிந்த நாமே இதிலிருந்து விடுபடும் முறையையும் அறியவேண்டும். எங்கும் நிரம்பியுள்ள பரம்பொருளே நான் . அளவிட முடியாத பரப்பு கொண்டதை என் சாரத்தினுள் அடங்கியதாக அணு அளவுள்ளதாகக் குறுக்குவது ஆணவம். ஆத்மாவின் பெருமையைக் குலைப்பதால் இது மலம். பேரறிவும் பேராற்றலும் படைத்ததொன்றை உடற்கட்டிற்குள் அடங்கியவனாக்கிச் சிற்றறிவும் ஆற்றலின்மையும் கொண்டவனாகக் கட்டி விடுவதால் இது பாசம் ஆகிறது. ஆணவம் எனும் பாசம் மாயை எனும் பாசத்தை ஏற்படுத்துகிறது. ஒவ்வோர் உடலிற்கும் ஒவ்வோர் ஆத்மா; அதற்கு வேண்டியதும் வேண்டாததும்; அதனால் ஏற்படும் விருப்பும் வெறுப்பும் இவை அந்த ஆத்மாவைக் கட்டி மேலும் குறுகியவனாக்கு கின்றன. விருப்பும் வெறுப்புமற்ற ஆத்மாவை விரும்புபவனாகவும் வெறுப்பவனாகவும் அவதூறுக்கு உட்படுத்துவதால் இது மலம். விரும்பும்

(வெறுக்கும்) பொருளுக்கு அவனை ஆட்படுபவனாக ஆக்குவதால் பாசம். விரும்புபவனாகவும் வெறுப்பவனாகவும் மாறிய ஆத்மாவை நியதி (விதி) கட்டுப்படுத்துகிறது. நியதிக்குட்பட்டதும் இதனைச் செய், இதனைச் செய்யாதே எனச்சட்ட திட்டங்கள் அவனைக் கட்டுப்படுத்துகின்றன. விருப்பும் வெறுப்பும் வலிவடைந்திருந்தால் சட்ட திட்டங்களுக்குக் கட்டுப்படாமல் செல்ல நேர்ந்து பாபம் மூட்டையாகச் சேர்கிறது. இந்த வினை மேலும் ஒரு கட்டாகிறது. ஆத்மாவை மேலும் உருக்குலைத்து விடுகிறது. இது **கர்மம்** எனும் பாசமும் மலமும்.

80-4. சிலருக்கு இந்த மூன்று கட்டுகளும் பலமாக இருக்கும். அவர்களை ஸகலர் என்பர். இவாகள் சுயநலம் நிறைவேறத் தேவியை வழிபடுகிறார்கள். அதனால் சிறிது சிறிதாக இந்த மலங்கள் பழுத்துத் தளாந்து விடுவதால் தேவியைப் பற்றி மேலும் அறிய ஆவல் ஏற்படுகிறது. இந்த ஆவலில் தேவியிடம் ஈடுபாடு அதிகமாகிக் கட்டுக்களின் பலம் குறைந்து, தான் அறிந்ததை அறியாதவர்களிடம் சொல்லும் கருணையுள்ள ஆசாரியர்களாக ஆகிறார்கள். இதனால் தானும் கடைத்தேறிப் பிறரையும் கடைத்தேற்றுகிறார்கள். தன்னைப் பற்றிய அறிவையூட்டிப் பந்தங்களிலிருந்தும் தேவி இவர்களை விடுவிக்கிறாள். சிலருக்கு முற்பிறவிகளில் செய்த தேவி வழிபாடு முதலியவற்றால் ஓரிரு பாசங்கள் தளர்ந்துபோகும். இந்தப் பிறவியிலும் தொடர்ந்த தேவி வழிப்பட்டால் மலங்கள் மேலும் அகலும். பிரளயாகலர், விஜ்ஞான கேவலர் என்ற மேல்நிலையை அடைந்த யோகீச்வரர்கள், மந்திர மூர்த்திகள் இந்தப் பிரிவினைச் சேருவர்.

80-5 இறுகப் பிணைக்கும் கயிறு தத்துவ ஞானிகளிடம் பசுவின் கழுத்திலேயே சுற்றப்பட்ட கயிறுபோல் பயனற்றுவிடும். யோகசக்தி பெற்றவர்களிடம் நெருப்பல் பொசுங்கிச் சாம்பலாகி வடிவத்தால் மட்டும் கயிறுபோன்றிருக்கும். அது செத்த கயிறு. தத்துவ ஞானமும் மனமுனைவுமின்றிப் பிறவிச்சூழலில் சுழன்று கொண்டிருப்பவரை மட்டும் அறுபடாத தடித்த கயிறுபோல் அது இறுகப் பிணைக்கும். (ப்ரஸுப்தா: தத்வ வேத்த்ருணாம், தக்த தேஹாஸ்து யோகிநாம். அவிச்சிந்நோதாரரூபா: க்லேசா விஷய ஸங்கிநாம் - தேவீபாகவதம்).

80-6. வாழ்க்கையில் துன்பம் நேரிடுகையில் துணையை நாடுகிறோம். துணையிருக்கிறதென்ற நம்பிக்கையே நமக்கு நிம்மதி தருகிறது. முன்செய்த ஏதோ ஒரு நல்வினை காரணமாகத் தேவியையே துணையாக நாடும் பக்குவம் ஏற்படுகிறது. தேவி துணை நின்று துக்கங்களின் அன்றாடப் பாதிப்புகளிலிருந்தும் விடுவிக்கிறாள். அதனால்

தேவியிடம் ஏற்பட்ட நெருக்கம் அன்பாகித் தன்னை வாழவைக்கும் தாயாகத் தேவியை நினைக்கத் துண்டுகிறது. தாயான தேவி தன் சுய உருவைச் சிறிது சிறிதாக அவன் மனக்கண்முன் நிறுத்தித் தன் நினைப்பை மேலும் வலிவுடையதாக்குகிறாள். அவளுக்காக வாழும் நினைவு ஏற்பட்டு அவளுக்குப் புரியும் பணிவிடையாகவே உலகப் பணிகளைச் செய்யும் பாங்கு வளர்கிறது. செய்து வரும் கர்மங்களின் பாப புண்ணியத் தொடர்பு விலகிக் காமபந்தம் விலகுகிறது. விரிந்த ஆத்மஸ்வரூபம் தெளிவாகிறது. மாயை மறைகிறது. பேரொளியும் பேரறிவும் பேராற்றலும் கொண்ட பரம்பொருளுடன் இணைந்துத் 'தன்'னை இழக்கிறான். எல்லாப் பாசங்களும் தானே மறைகின்றன. துணையாகி நின்று தேவி ஜீவனைத் தளைகளிலிருந்தும் விடுவிக்கிறாள். (354)

## 81. ஸம்ஹ்ருத -அசேஷ-பாஷண்டா. எல்லா பாஷண்டர்களையும் அழித்தவள்

81-1. பாஷண்டர்கள் - வேஷம் போடுபவர்கள்; வேதத்தைப் பிரணமாகக் கொண்டவாகளாளத் தம்மைக் காட்டிக்கொண்டு வேதத்திற்கு மாறுபட்ட பொருளைக் கூறுபவர்கள்; வேதம் முதலியவற்றில் கூறியுள்ளபடி நடக்காதவர்கள் தத்தம் தர்மத்தை மீறியவர்கள். பாகண்டர்கள் எனவும் இவர்களைக் கூறுவதுண்டு. அதனால் ஸம்ருதா சேஷபாகண்டா என்ற பாடபேதமுமுண்டு. பா-வேதமும் அதன் கருத்தும். குண்டா-துண்டாடியவர். தன் விருப்பப்படி வேதத்தை ஒடித்தும் பிரித்தும் பொருள் கூறி நியாயம் காட்டுபவர்கள். அவர்களை ஒடுக்கியவள். வேத மாக்கத்தை எல்லோரும் பின்பற்றக் கட்டளையிட்டாள். (நா.287, 828) அந்த மார்க்கத்தில் நம்பிக்கையின்மைக் காட்டி வழி தவறுபவர்களை களை பிடுங்குவதுபோல் அகற்றிவிடுகிறாள். (355)

## 82. ஸதாசார - ப்ரவர்த்திகா - நல்வழியில் நடத்தி வைப்பவள்.

82-1. ஆசாரம் - வாழ்நாள் முழுவதும் கடைப்பிடிப்பது நல்லதென அறிந்து, இடர்கள் ஏற்படினும் தளராமலும் வழுவாமலும் கடைப் பிடிப்பதாகும். (ஆ-ஸமந்தாத் - முடிவு வரை, சார்-நன்னடத்தையாக ஏற்றுக்கொள்ளப்பட்டது) புறத் துய்மைக்கும் உள்ளத் தூய்மைக்கும் பயன்படுபவை அனைத்தும் அதில் அடங்கும். ஸத் - நல்லோர்கள் - பெரியோர்கள். ஸத்-நிலைத்திருப்பவர்கள். அவர்கள் மறைந்த பிறகும் வழிகாட்டியாக வாழ்வதால் நிலைத்திருக்கிறாகள். அப்படி வழிகாட்டியாக என்றும் வாழ்பவர்களானதால், பெரியோர்களை 'ஸத்' எனக்

குறிப்பிடுகிறோம். ஆவர்கள் கடைப்பிடித்த வழியானதால் கூடிய ஆசாரம். ஸத: ப்ரும்ஹண: ஆசார: - ஸத்யமான பரம்பொருளை நாடும் ஆசாரம். ஸதாசாரம் நன்கு நடைபெறுமாறு துண்டி அதனை நடத்தி வைப்பவள்.

82-2. வேதங்கள் நான்கு, அவைகளின் அங்கங்கள் 6, புராணம், நியாயம், மீமாம்ஸை, தர்மசாஸ்திரம் ஆகிய 14 வித்யாஸ்தானங்களில் முதல் 11 ஸ்தானங்களால் 'இதனைச் செய்', 'இதனைச் செய்யாதே' என மாக்கத்தைக் காட்டுகிறாள். அந்த வழியில் நடக்கும் மேதாவிக்கு ஏற்படக்கூடிய ஐயங்களை, யுக்திமூலம் வேதப்பொருளை விமர்சிக்கும் நியாயம் மீமாம்ஸை என்ற இரு சாஸ்திரங்களால் போக்குகிறாள். செய்யவேண்டிய தர்மத்தின் நடைமுறையை தர்ம சாஸ்திரங்கள் மூலம் காட்டுகிறாள். ஸதாசாரம் இப்படி அமைய வேண்டுமென வழிவகுத்து அதன்படி நடக்கத் துண்டிவிடுகிறாள். அதன்படி நடப்பவர்களுக்கு ஏற்படும் இடர்களைக் களைந்து எறிகிறாள். துணைநின்று வழியின் எல்லைவரை அழைத்துச் செல்கிறாள் தேவி. (356)

(நா.357-361)

तापत्रयाग्निसन्तप्तसमाह्लादनचन्द्रिका ।
तरुणी तापसाराध्या तनुमध्या तमोऽपहा ॥ 79 ॥

**தாபத்ரயாக்நிஸந்தப்தஸமாஹ்லாதந சந்த்ரிகா**
**தருணீ தாபஸாராத்யா தநுமத்யா தமோ(அ)பஹா.**
**79**

**83. தாப - த்ரய - அக்நி - ஸந்தப்த ஸமாஹ்லாதந சந்திரிகா. முத்தாபங்களின் கனலால் வாட்டப் பட்டுள்ளவர்களுக்கு மன அமைதி தருகிற நிலவானவள்.**

83-1. ஆத்யாத்மிகம், ஆதிபௌதிகம், ஆதிதைவிகம் என மூன்று தாபங்கள்-துக்கங்கள்-தாபத்திரயம். (15.4.2) இம்மூன்றும் நெருப்பு போல் மனிதனை வாட்டுகின்றன. தாபமாகிற கனலே ஸம்ஸாரத்தின் சின்னம். நிலவு போலாகி அனலால் நன்கு வாட்டப்பட்டவர்களை வாட்டம் நீங்கியவர்களாக்குகிறாள். துன்பம் உடலையும், மனத்தையும் வாட்டும்.

---

18 வித்யாஸ்தானங்களில் உபவேதங்களைத்தவிர மற்றவை 14 வித்யாஸ்தானஙகள். உபவேதங்களாகிய காந்தர்வம் (ஸங்கீதம்) தனுர்வேதம், ஆயுர்வேதம், அர்த்தசாஸ்திரம் என்ற நான்கும் பொதுவித்யைகளல்ல. அதனால் இந்த நான்கைச் சேர்ப்பதில்லை.

குளிந்த ஸ்பாசமும் சாந்தியும் ஏற்படுத்துவதே தாபம் தணிவதற்கான உபாயம். நிலவு மனஅமைதியைத் தந்து மன வாட்டத்தைப் போக்கும். குளிந்த தனது கிரணங்களால் உடல் தாபத்தையும் போக்கும். தேவி நிலவுபோல் ஸம்ஸார தாபத்தை போக்குகிறாள். (357)

### 84. தருணீ - யுவதியாய் இருப்பவள்.

84-1. வளாச்சியும் தேய்வும் அற்றவள். (நா.344) பால்யம் வளரும் பருவம்; இவ்விரண்டு பருவங்களும் தேவியிடம் கிடையாது. உற்பத்தியுண்டானால் வளர்ச்சி உண்டு. அழிவதனால் தேய்வுண்டு. தேவி ஆதியும் அந்தமுமற்றவள். (நா.296) நித்யையான (நா.136) தேவி, பூர்ணா, (நா.292). எப்போதும் நிறைவு பெற்றவள். அதனால் நிறைவு துலங்கும் யௌவனம் ஒன்றையே பருவமாகக் கொண்டு யுவதியாக இருப்பவள் தேவி. (நா.430) தருணீ என்ற நிலையிலுள்ள குண்டலினி. (12.22.2) (358)

### 85. தாபஸ-ஆராத்த்யா. தவத்திலிருப்பவர்களால் வழியடப் பெற்றவள்.

85-1. தவத்திலுள்ளவாகள் தமது தவத்தால் காணத்தக்க பிரும்ம ஸ்வரூபிணியான தேவியை உள்ளத்திலும் வெளியிலும் வழிபடுகிறார்கள். தாப-ஸார-ஆத்த்யா. தாபமே உருவான ஸம்ஸாரத்தில் ஸாரமாக பலம் தருவது அவளது தியானம். (ஆத்த்யா-முழுமை பெற்ற தியானம்) அப்படி ஸாரமாகத் தியானக்கப்பெறுபவள் தேவி. (359)

### 86. தநு-மத்த்யா - மெல்லியடையாள்.

86-1. தேவியின் இடை மிகவும் மெலிந்தது. அதனால் அவள் தநுமத்த்யா.(நா.35-36) காஞ்சியில் பில்வேசுவரரது சக்தியாக தநுமத்த்யா என்ற பெயருடன் விளங்குபவள்.

86-2. தநுமத்த்யா என்பது தகணம் யகணம் இவ்விரண்டாலும் அமைந்த பாதத்துடன் கூடிய யாப்பு. "மாம் பாது நிசாயாஇ தீரே நியஸந்தீ பில்வேச்வரகாந்தா தேவீ தநுமத்த்யா". இது தநுமத்த்யா விருத்தத்தில் அமைந்த தநுமத்தயா தேவியைப் பற்றிய பிரார்த்தனை. இது காயத்திரீ சந்தஸ்ஸில் அமைந்தது. சந்தஸ்ஸுகளில் காயத்திரீ இறைவனின் விபூதி என கீதை கூறுகின்றது. "காயத்தி சற்தஸாமஹம்". (10-35) காயத்ரீ சந்தஸ் 24 எழுத்துக்கள் கொண்டது. (21.40.1) அதில் அடங்கிய தனுமத்த்யா விருத்தம் பாதத்திற்கு 6 அக்ஷரங்கள் கொண்டது. துநுமத்த்யா விருத்தத்தைத் தன் வடிவாகக் கொண்டவள். (306)

### 87. தமோ - அபஹா. இருளைப் போக்குபவள்.

87-1. தம: - இருட்டு. அஞ்ஞானமே இருட்டு. அறிவொளி வீசி அஞ்ஞான இருளை அகற்றுபவள். (361)

(நா.362 - 365)

**चितिस्तत्पदलक्ष्यार्था चिदेकरसरूपिणी ।**

**स्वात्मानन्दलवीभूतब्रह्माद्यानन्दसन्ततिः ॥ 80 ॥**

**சிதிஸ் தத்பதலக்ஷ்யார்த்தா சிதேகரஸரூபிணீ.**

**ஸ்வாத்மானந்த லவீபூத ப்ரும்த்யாநந்தஸந்ததி: 80**

### 88. சிதி: - ஞான வடிவினள்

88-1 அஞ்ஞான இருளைப் போக்கவல்லதான ஞானமே உருவானவள். வாழ விரும்புபவர்களுக்கு வாழ்வின் ஒளியாக இருப்பது ஞானம். மற்றதன் உதவியை எதிர்பாராமல் தன்னியல்பாகப் பொருளை அறிய உதவுவது ஞானம். உலகம் தோன்றக் காரணமானது ஞானசக்தி - தேவியின் சித்சக்தி. அதன் வடிவானவள். (17.3.12) (362)

### 89. தத் - பத - லய - அத்தா. தத் என்ற சொல்லின் லக்ஷ்யப் பொருளாக இருப்பவள்.

89-1. தத் த்வம் அஸி என்ற உபநிடத மகாவாக்கியம் 'அது நீயாக இருக்கிறாய்' எனக் கூறிப் பிரும்மத்திற்கும் 'நான்'க்கும் வேற்றுமை இல்லை என விளக்குகிறது. தத் - அது உலகைப் படைத்துக் காத்து ஒடுக்கும் சக்தியுள்ளதென முன் விவரிக்கப் பட்டுள்ள 'அது' வானப் பிரும்மமே சிற்றறிவும் சிற்றாற்றலும் பெற்ற ஜீவனான நீயாக இருக்கிறாய் என்பது அந்த சொல்லின் நேரிடைப் பொருள் (வாச்ய அத்தம்). அது பொருந்தாது. பேரறிவு பெற்றதும் சிற்றறிவு பெற்றதும் ஒன்றாகாது. இப்படிப் பலதரப்பட்ட வேற்றுமை கொண்ட இரண்டை ஒன்றெனக் கூறும்போது நேரிடைப் பொருள்பொருந்தாகையால், இலக்ஷணையால் இங்கு வேறு பொருள் கூறுகிறோம். சிற்றாற்றல் சிற்றறிறவு முதலியவை ஜீவனின் தர்மம். அத்தர்மங்கள் கொண்டமையால் ஜீவன் தர்மி. பேராற்றல் பேரறிவு முதலியவை பிரும்மத்தின் தர்மம். அத்தர்மங்கள் கொண்டமையால் பிரும்மம் தாமி. தர்மியானபிரும்மத்தை மட்டும் இங்கு லக்ஷணையால் பொருளாக எடுத்துக்கொள்கிறோம். தர்மத்தை விட்டுவிடுவோம். தர்மமற்ற தர்மி கேவலன். சுத்தப்பிரும்மம். அதுவே 'தத்' என்ற சொல்லின்

இலக்ஷணையால் கூறும் பொருள். த்வம் என்ற இடத்திலும் சிற்றாற்றலும் சிற்றறிவுமாகிய ஜீவதர்மத்தைவிட்ட கேவலனான சுத்த ஆத்மாவை நீ என்று லக்ஷணையால் குறிப்பிடுவோம். தர்மமற்ற கேவலமான பிரும்மமும் தர்மமற்ற கேவலமான ஆத்மாவும் ஒன்றே. இப்படி லக்ஷணையால் கூறப்பட்ட லக்ஷ்யப் பொருள் பொருந்துகிறது. இப்படி தத் என்ற சொல்லின் லக்ஷ்யப் பொருளாக கேவல-பிரும்மஸ்வரூபிணியாக இருப்பவள் தேவி.

89-2. தேவதத்தின் ராமனின் நண்பன். ராமன் தேவதத்தனைப் பார்த்து 30 வருடங்களாயிற்று. 30 வருடங்களுக்கு முன் தேவதத்தன் 20 வயதுடைய இளைஞன். அன்றைய உருவமைப்பு அதற்கேற்ப அமைந்திருந்தது. இன்று பார்க்கப்படும் தேவதத்தன் முதியவன். உருவமைப்பில் முற்றிலும் மாறுபட்டவன். இன்று பார்த்ததும் ராமனுக்கு 'அந்த தேவதத்தனை இவன்' என்று புரிகிறது. அந்த தேவதத்தனை வேறாகவும் இந்தத் தேவதத்தனை வேறாகவும் காட்டுவது அன்றிருந்த இளமையும் இன்றிருக்கும் முதமையும். இளமையும் முதுமையும் தேவதத்தனின் தர்மங்கள். அவனைத் தனித்து அடையாளம் காட்டக்கூடியவை. அந்த தர்மங்களோடுகூடிய தேவதத்தன் இவன்தான் என்பது "அந்த தேவதத்தன் தான் இவன்" என்ற சொற்றொடரில் உள்ள 'அந்த-இவன்' என்ற இரு சொற்களின் நேரிடைப் பொருள். இளைஞனே முதியவன் எனக் கூறுவது பொருந்தாது. அதனால் இளமை முதுமை போன்ற தர்மங்களை விலக்கி அன்று (கேவல - தனித்த - தர்மமற்ற) தேவதத்தனாயிருந்தவனும், இன்று (கேவல - தனித்த - தர்மமற்ற) தேவதத்தனாயிருப்பவனுமான தர்மியை மட்டும் எடுத்துக் கொண்டால் பொருத்திப் பாக்க முடியும். அப்போது தான் அவனே இவன் எனக் கூறுவது பொருந்தும். அப்படியே தத் - த்வம் என்ற இரண்டையும் பிரித்துக் காட்டக்கூடிய தர்மங்களை விலக்கி, இரண்டிலும் ஒன்றாகத் தோன்றும் தர்மியான ஆத்மஸ்வபத்தை மட்டும் கொள்வது லக்ஷணை என்ற பொருள் காணும் முறையால் இயலும். அப்படி லக்ஷணையாக தத்-என்ற சொல்லிற்குப் பொருளாக அறியப்பட்டவள் தேவி.

89-3. 'தெப்பக்குளத்தில் குடியிருக்கிறேன்' என்றான் ஒருவன். குளத்தில் குடியிருக்க இயலாது. அதனால் நேரிடையான பொருள் இங்கு கொள்ள முடியவில்லை. இந்நிலையில் குளத்தின் அருகில் அமைந்த தெப்பக்குளம் என்ற ஊரில் அல்லது தெருவில் அமைந்த குடியிருப்பதாக லக்ஷணையால் பொருள் கொள்ளவேண்டி நேருகிறது. தேவியின் உண்மை நிலைக்குப் பொருந்தாத சில தோற்றங்களைத் தேவியை அறிய நேரும்போதும், அதன் வெளிப்படையான தோற்றத்தைப் புறக்கணித்து

உட்பொருளாக நிற்கும் தேவியின் உண்மை நிலையைப் புரிந்துகொள்வது லக்ஷணா முறையால் இயலும். (363)

**90. சித் - ஏக - ரஸ - ரூபிணீ. ஞானத்துடன் ஒன்றிய வடிவமுள்ளவள்.**

90-1. தேவிக்குப் பல தோற்றங்கள் உண்டு. அவை சித் என்ற ஞானசக்தி வடிவமானவை. (17.3.1-2) சர்க்கரையாலான பொம்மைகள் பல தோற்றங்களிலிருந்தாலும் அவற்றின் ஒவ்வோர் அணுவும் சாக்கரையாலானது. ஒவ்வோர் அணுவும் இனிக்கும். தோற்றங்கள்தான் மாறுபாடுள்ளவை. அதுபோல் தேவி எந்த வடிவிலிருந்தாலும் அதன் ஒவ்வெரு துளியும் 'சித்' ஆல் ஆனதே. சித்துடன் ஏகரஸமாக ஒரே (சுவை - சாரம்) தன்மையுள்ள ரூபம் உள்ளவள். ஞான வடிவம் எனும்போது, ஞானமாகிய வடிவு வேறு, வடிவுள்ள அவள் வேறு என்ற எண்ணம் தோன்றக்கூடும். அவள் வடிவான சித்திற்கும் அவளுக்கும் எத்தகைய வேறுபாடும் கிடையாது. அது ஏகரஸமானது. (364)

**91. ஸ்வ - ஆத்ம - ஆநந்த - லவீபூத - ப்ரும்ஹாதி - ஆநந்த ஸந்ததி: தனது ஸ்வரூபமாயுள்ள ஆனந்தத்தின் ஒரு துளியாகப் பிரும்மாதி தேவர்களின் ஆனந்த வரிசையைச் செய்தவள்.**

91-1. தேவி ஆனந்த வடிவினள். அவளது வடிவமாக உள்ள ஆனந்தம் கடல் போன்றது. மனிதன், தேவர்கள், இந்திரன், பிரஜாபதிகள், பிரும்மா, இவர்களது ஆனந்தம் அளவுக்குட்பட்டது. மனிதனின் ஆனந்தத்தைவிட மனுஷ்ய கந்தர்வர்களின் ஆனந்தம் 100மடங்கு அதிகமானது. மனுஷ்ய கந்தவர்களது ஆனந்தத்தைவிடத் தேவகந்தவர்களின் ஆனந்தம் 100 மடங்கு அதிகமானது. இப்படி வாஸையாக பித்ருக்கள், ஆஜானஜ தேவர்கள், கர்ம தேவர்கள், இந்திரன், பிருஸ்பதி, பிரஷாபதி, பிரும்மா இவர்களது ஆனந்தம் முன்னதைவிட பின்னது 100 மடஙகு அதிகமானது. இவைகளுள் பிரும்மாவின் ஆனந்தமே அதிக அளவுள்ளது. (தைத்திரீய உபநிஷத் 2-8) தேவியின் ஸ்வரூபமான ஆனந்தம் ஒரு கடல். பிரும்மாதிகளின் ஆனந்தம் அதிலுள்ள ஒரு துளி. பிரும்மாதிகளின் ஆனந்தம் ஆனந்தத்தை தருகின்றதொன்றை எதிர்பார்க்கும். ஆனந்தத்தைத் தரும் பொருளின் சக்தியையும் அளவையும் அதனை ஏற்கும் பிரும்மாதிகளின் மனத்தின் நிலையையும் பொறுத்து ஆனந்தம் அமையும். ஆகையால் அது

அளவுக்குட்படுகிறது. அளவற்றதும்-கலப்பற்றதும் தனக்குக் காரணமாக வேறொன்றையும் எதிர்பாராததுமான ஆனந்தமே தேவி. (365)

* * *

அதிகாரம் - 19

## தேவியின் ஒலி வடிவங்கள்

(நா.366-372)

परा प्रत्यक्चितीरूपा पश्यन्ती परदेवता ।
मध्यमा वैखरीरूपा भक्तमानसहंसिका ॥ 81 ॥

**பரா ப்ரத்யக்சிதீரூபா பச்யந்தீ பரதேவதா.**
**மத்யமா வைகரீரூபா பக்தமானஸஹம்ஸிகா. (81)**

**1. பரா. பரா எனும் -ல ஒலி.**

1-1. பராசக்தி செயல்படும் முறை : இச்சாசக்தி, ஞான சக்தி, கியா சக்தி என்ற தேவியின் சக்திகள் மூன்றும் ஸங்கல்பமும் மூலப்ரகிருதியுமாகி உலகைத் தோற்றுவித்தன. (17.8) ஸச்சிதானந்தப் பேரொளி வடிவத்திலிருந்த பரம்பொருளிடம் உலகை மீண்டும் படைப்பதற்கான ஸங்கல்பம் ஏற்படக் காரணமான ஸ்புரணம்-துடிப்பு ஏற்பட்டது. அத்துடிப்பு பிரும்மத்தின் சக்திகள் அனைத்தும் திரண்ட வடிவமாக 'பராசக்தி'யாக வெளிப்பட்டது. அது 1.பராசக்தி, 2.இச்சா சக்தி, 3.ஞானசக்தி, 4. கியா சக்தி, 5. குண்டலினீ சக்தி, 6. மாத்ருகா சக்தி என ஆறு வகைகளில் பிந்து உலகின் மூலக் கருத்தோற்றத்திற்கான செயலில் ஈடுபட்டது.

1-2. பரா - ஒலியின் மூலசக்தியாக உள்ளது. இதிலிருந்ததும் பச்யந்தீ மத்யமா வைகரீ என்று பரிணாமமடைந்து ஒலி நம் காதில் விழத்தக்கதாகிறது. (நா.366-371)

1-3. இச்சா சக்தி - தேவியின் ஸங்கல்பமாக முதலில் வெளிப்பட்டுச் செய்தல், செய்வித்தல், உதவுதல், எதிர்த்தல், சும்மாயிருத்தல் என்ற ஐந்து செயல்களைத் தூண்டும் விருப்பமாக வடிவெடுத்தது. (காத்தும் காரயிதும் உபகர்த்தும் ப்ரதிகர்த்தும் உதாஸிதும் ச).

1-4. ஞான சக்தி - படைக்க வேண்டியவைகளைப் பற்றிய முன்னறிவாக ஏற்பட்ட ஞான சக்தி பின்னர் இரு வகையில் பிரிந்தது. ஸாலம்பஜ்ஞானம் - அறிபவன், அறியப்படும் பொருள், அறிவு என்ற மூன்றையும் பற்றிக்கொண்டு விளைந்த அறிவு. ஆலம்ப: - பற்றுக்கோல், ஊன்றுகோல், ஞானத்திற்கு அறிபவன், அறியப்படும் பொருள், அறிவு என்ற மூன்றும், பிடித்து எழ உதவும் பற்றுக்கோடாக அமைகின்றன. இதுவே ஸாகார ஞானம். மற்றொன்று நிராலம்பஜ்ஞானம் - பற்றுக்கோடற்ற தனித்த உள்ளுணர்வு வடிவானது. இதில் நான், நீ என்றவாறு விளக்க முடியாத ஞானம் தோன்றும். நிராகாரஜ்ஞானம் என்றும் இதனைக் கூறுவர். இது அஹங்காரத்துடன் கலந்து மனத்தையும் ஞானேந்தியங்களையும் படைத்தது. (17.8.1.5)

1-5. கிரியா சக்தி - இச்சா சக்தியில் தோன்றி ஞான சக்தியால் விளக்கம் பெற்றுச் செயலாகப் பரிணமிக்கும் மூன்றாம் சக்தி இது. மூலப்பிரகிருதியாக வெளிவந்து, மஹத், அஹங்காரம் ஆகிய மூலப்பொருளாகி, அஹங்காரத்தில் தனிப்பட்டுக் கலந்து, ஐந்து கர்மேந்திரியங்களையும், பிராணனையும் தோற்றுவித்தது. (17.8.1.6)

1-6. குண்டலிநீ சக்தி - எல்லாச் சக்திகளுக்கும் மூலக் கருவாகி நின்று உடல் முழுவதும் பரவி, சக்தி அனைத்தையும் உடலில் துடிக்கச் செய்வது இது. (நா.90)

1-7. மாத்ருகா - ஒலிக்குப் பற்றுக்கோடாக நின்று அதனை விளக்கி உலகியல் நடைபெற உதவும் 50 அக்ஷர வடிவில் அமைந்த சக்தி. (நா.577)

1-8. இந்த ஆறு சக்திகளில் பரா என்ற ஒலியின் மூல சக்தி பற்றி 366 - 371 நாமங்களில் விளக்குகிறார்கள்.

1-9. உலகத்தோற்றத்தை வரிசைப்படுத்திக் காட்ட வந்த தைத்திரீய உபநிடதம், பரம்பொருளிலிருந்து முதலில் ஆகாயமும், ஆகாயத்திலிருந்து வாயுவும், வாயுவிலிருந்து அக்கினியும், அக்கினியிலிருந்து ஜலமும், ஜலத்திலிருந்து பிருதிவியும் தோன்றின என்று கூறுகிறது. தஸ்மாத் வா ஏதஸ்மாத் ஆத்மந ஆகாச: ஸம்பூத:. ஆகாசாத் வாயு: வாயோக்நி:. அக்நேராப:. அத்ப்ய: ப்ருதிவீ. (2-1) இது ஒரு வகையான விளக்கம். அவ்யக்தம், மஹத், அஹங்காரம் என்ற தோற்ற வரிசையில் (17.8.1.10) அஹங்காரத்திலிருந்து ஐந்து தன்மாத்திரங்கள் தோன்றும்போது அந்த

தன்மாத்திரங்கள் அமைந்த வரிசை இது. தைத்திரீயத்தில் முன் குறிப்பிட்ட ஆகாயத்தைத் தோற்றுவித்த பரம்பொருளானது அவ்யக்தம், மஹத், அஹங்காரம் என்ற மூன்று நிலைகளை அடைந்ததாகும்.

1-10. முதலில் தோன்றியது ஆகாயம். தன்மாத்திர நிலையில், அதன் குணமான சப்தம் (ஒலி) ஒன்றே அதன் வடிவம். ஆகாயம் என்ற ஸூக்ஷ்ம பூதமும் அதன் தனிச் சிறப்புள்ள சப்தம் என்ற குணமும் என்று இரண்டாகப் பிரித்தறிய முடியாத நிலை அது. சப்தம் எனும் பூத சக்தியையே வடிவமாகக் கொண்டதால் சப்த தன்மாத்திரம் என்று இந்த முதலில் தோன்றிய ஆகாயத்தைக் குறிப்பிடுவர். ஒரு பொருளின் ஸ்தூலத் தோற்றம் அதன் வடிவம். அது புலப்படக்கூடியது. புலப்படாதபடி அதன் உள் அமைந்தது ஸூக்ஷ்மமான அதன் சக்தி. எந்தப் பொருளின் சக்தியையும் பொறிகளால் உணர முடியாது. சக்தி கொண்ட பொருளின் ஸ்துல வடிவமே பொறிகளுக்கு அகப்படுவதாகும். ஸூக்ஷ்மத்திற்கும் காரணமான அதி ஸூக்ஷ்மமான ஆதித் தோற்றத்தில் சப்தமெனும் சக்தி வடிவில் ஆகாயமிருந்தது. ஐந்து பூதங்களுக்கும் முதலானது ஆகாயம். அதனால் அது பரம். அதன் சக்தியான சப்தம் பரா. இதுவே மற்றப் பூதங்களுக்கும் பூத சக்திகளுக்கும் தோற்றுவாய். இந்த பூத சக்தி பொறிகளுக்கு அகப்படாதாகையால் அவைகளுக்கு அப்பாற்பட்டது. அதனால் பரா. அந்தப் பரா எனும் ஒலி நம் காது கேட்கும்படியாக ஆக, இடையே பெறும் மாறுதல்களை இனிக் காண்போம்.

1-11. மூலக்கரு நிலையில் உள்ள ஒலி பரா. பிரளய காலத்தில் ஒலி அனைத்தும் அஹங்காரம், மஹத், பிரகிருதி என மூலக் கருவாக மாறிப் பரம்பொருளிடம் அடங்கியது. ஸ்ருஷ்டி ஆரம்பத்தில் பிரகிருதி, மஹத், அஹங்காரம் என்ற வரிசையில் வெளிவந்த அந்த பரா எனும் ஒலி பிந்து வடிவில் வெளிப்பட்டது. அதனைக் காரண பிந்து என்பர். அதில் ஒலியின் பல வடிவங்கள் நெருக்கம்மிக்க நிலையில் திரண்டு, பிரித்தறிய முடியாதபடி இருந்தன. சிறு ஆலம் விதையில் பெருத்த ஆலமரமாக விரிவடைய வேண்டிய பல பகுதிகள் அடங்கி, உட்பிவுகள் பிரித்தறிய முடியாதபடி காணப்படுவதுபோல்.(18.25, 1-2).

1-12. கரு தோன்றுமுன், ஆணின் பிந்துவும், பெண்ணின் நாதமும் கலந்து பீஜநிலையை அடைகின்றன. ஒலியின் காரண பிந்துவில் உள்ள சிவாம்சம் பிந்துவாகவும், சக்தியம்சம் நாதமாகவும் பிரிந்து பின் இணைந்து சிவசக்தியம்சமான பீஜம் ஆகிறது. காரண பிந்துவான ஒலி,

அவ்யக்தமானது. பிந்து, நாதம், பீஜம், என்ற பரிணாமம் பெற்று அது வியக்தமாக வேண்டும். விதையை விதைப்பதற்கு முன் நீரில் ஊற வைப்பர். அதனால் விதை உப்பி விரிவடைய வேண்டிய பகுதிகள் மலர்ந்து விவரிவடையத் தகுதி பெறும். அப்படி உப்பிய நிலையிலுள்ளது பரா எனும் வாக்கு. எல்லாச் சக்திகளும் தனி மனிதனிடம் அவ்யக்த நிலையிலிருந்து வியக்த நிலைக்கு வருவதற்கு ஏற்ற இடமாக மூலாதாரத்தை அமைத்துக் கொள்கின்றன. குண்டலிநீ அவ்விதம் மூலாதாரத்திலிருந்து வெளிப்படுவதை முன்னர் பாத்தோம். ஒலியும், தான் வெளிப்படத்தக்க இடமாக மூலாதாரத்தையே அடைந்தது. பிராண சக்தி வடிவான மூச்சுக் காற்றின் உதவி கொண்ட வாயுவானது பேச விரும்புபவனின் (இச்சா சக்தியின்) முயற்சியால் சலனமடைந்தது. அந்தச் சலனத்தின் மூலம் அவ்யக்த நிலையில் உள்ள ஒலியை வியக்த நிலைக்குக் கொணர்ந்தது. தேஹே அபிமூலாதாரே அஸ்மிந் ஸமுதேதி ஸமீரண:. விவக்ஷோரிச்சயா உத்தேன ப்ரயத்நேந ஸுஸம்ஸ்க்ருத:. ஸ்வயஞ்ஜயதி தத்ரைவ சப்தப்ரம்ஹறணி ஸர்வகம். இப்படி வாயுவின் உதவிகொண்டு வியக்த நிலைக்குக் வரவிருக்கும் அவ்யக்தமான சப்தப் பிரும்ம நிலையிலுள்ள காரண பிந்துவானாது பரா வாக் எனப்படுகிறது. மூலாதாரத்திலுள்ள வாயுவின் துண்டுதலால் பிந்து, நாதம், பீஜம் என்ற விரிவை அடைய அது நாபிக்குச் செல்லவிருக்கிறது. விரிவடையவேண்டுமென்ற இச்சா சக்தி தூண்ட விரிவடையத் தயாராக இருக்கும் மூலகாரணப் பொருளாக, காரணபிந்துவாக, பராவாக மூலாதாரத்தில் தேவி விளங்குகிறாள்.

1-13. வெளிப்படையாகவிருக்கும் பச்யந்தீ, மத்யமா, வைகரீ என்ற மூன்று நிலைகளுக்கும் அப்பாற்பட்டிருப்பதனாலும் இன்னதென விளக்க முடியாதபடியால் மனத்திற்கும் வாக்கிற்கும் எட்டாததாக இருப்பதனாலும், பரா – அப்பாற்ட்டவள். (366)

**உ. ப்ரத்யக் - சிதீ - யா. உள்நோக்கால் கண்ட பேரறிவு வடிவினள்.**

2-1. பரா எனும் வாக்கு, பேரறிவு வடிவானது: உள் நோக்கால் மட்டுமே அறியக்கூடியது. உள்நோக்கு பிரத்யக், வெளிநோக்கு பராக். வெளிநோக்கு இயற்கையை ஒட்டியது. இதற்கு உதவும் பொறிகளும் அவை வழியே அறிய முயலும் மனமும் வெளிநோக்கிற்கேற்றவாறு அமைந்தவை. பொறிகளுக்கு வெளிநோக்கு அனுகூலம். (கூலம் – ஆற்றங்கரை, அனுகூலம் – கரையை ஒட்டி பிரவாகத்துடன் செல்வது,

எளிதானது. தனி முயற்சியின்றி தானே நடப்பது) உள்நோக்கு பிரதிகூலம் (கரையை விட்டு விலகிப் பிரவாகத்தை எதிர்த்துச் செல்வது, கடும் முயற்சியால் நடைபெறக்கூடியது, ஆபத்துண்டு). பொறிகளைச் செயலிழக்கச் செய்து மனத்தை உள்திருப்புவது யோக முறையால் நடைபெறக்கூடியது. இப்படி யோகமுறையால் உள்திருப்பப்பட்ட மனம் காண்பது வடிவமற்ற சித்ஸ்வரூபம் (பேரறிவு). பரா என்ற நிலையில் வாக்கு பிரும்மத்தின் பராசக்தியாக உள்ளது. அதில் பொருள், சக்தி, குணம் என்ற வேறுபாடும் வடிவமும் இல்லை. அதனால் வடிவமற்ற (நிராகார) ஞானமாக விளங்குகிறது. அப்படி 'பிரத்யக்' ஆன 'சிதி' ஆக - பேரறிவாக விளங்குபவன். (17.3.2)

### 3.பச்யந்தீ. ஒலியாக வெளிவருமிடத்தைப் பார்வையிடுபவள்.

3-1. மூலாதாரத்தில் பிராணசக்தியால் எழுப்பப்பட்ட பரா எனும் ஒலி சக்தியானது, பிந்து, நாதம், பீஜம் என்ற மலர்ச்சித் தொடரைப் பெற விரும்பி, மேல் எழுந்து, நாபிக்கு வருகிறது. விதை உப்பி அதனுள் மறைந்திருந்த மரத்தின் பல்வேறு பகுதிகள் கலகலத்துத் தனித் தனி உருவம் கொள்ளத் துடித்துக்கொண்டிருக்கும் நிலையை ஒத்தது இது. பிரகாசமாயிருந்த (பேரொளியாய் சலனமற்றிருந்த) பரம்பொருளில் விமர்சனம்(ஒலியின் சலனம்) ஏற்பட்டதுபோல் இந்தச் சலனமற்றுப் பிரித்தறிய முடியாதிருந்த சப்தப் பிரும்மத்திடம் சலனம் ஏற்பட்டு, மூலப் பிரிவான பிந்துவும் நாதமும் விளக்கம் பெற்று இரண்டும் இணைந்து பீஜமாகியது. காரண பிந்துவானது கார்ய பிந்துவாக பீஜமாக விதையாக மாறிற்று. உள் நீர்கோர்த்து உப்பிய விதை வெடித்தது. இது முளைக்க வேண்டும். முளைக்கும் தகுதி வந்ததுவிட்டதா எனத் தன்னையே உற்று நோக்குவதால் அவள் பச்யந்தீ. வெளியே கிளம்பநினைப்பவள் தன்னை அலங்கரித்துத் தயாரித்துக் கொண்டு ஜன்னல் வழியே செல்ல வேண்டிய இடத்தைக் குறித்துக் கண்ணோட்டம் விடுவதுபோல் சப்தப்பிரும்மம்-பரா-தான் அடைய வேண்டிய நிலையை எதிர்பார்த்து நிற்கிறது. இப்படிக் கண்ணோட்டம் விடும் பச்யந்தீ எனும் ஒலி சக்தியாக இருப்பவள் தேவி.

3-2. "பச்யதி ஸர்வம் ஸ்வாத்மநி கரணாநாம் ஸரணிமபியதுத்தீர்ணா. தேநேயம் பச்யந்தீ இதி உத்தீர்ணா இத்யபி உதீயதே மாதா" தன்னுள் ஏற்பட்டுள்ள மாறுதல்கள் போதுமானதா எனத் அனைத்தையும் பார்வையிடுகிறாள். (பச்யந்தீ). தான் இனி வெளிவர

வேண்டிய இதயம், தொண்டை, நாக்கு முதலிய அவயவ வரிசையையும் பாவையிடத் தனது இருக்கையிலிருந்து வெளி வருகிறாள். (உத்தீர்ணா). அதனால் இந்த நிலையிலுள்ள பராவாக் சக்தியை பச்யந்தீ எனவும் உத்தீர்ணா எனவும் கூறுவர். (368)

### 4. பர-தேவதா. பொறிக்கு அப்பாற்பட்டு ஒளி மயமாக விளங்குபவள்.

4-1. தேவதா - ஒளி மயமாக விளங்குபவள். இன்னமும் இதன் தோற்றம் வடிவாகி விளக்கப்பெறவில்லை. பரா-பொறிகள் ஏற்கும் நிலைக்கும் முந்திய நிலையிலிருப்பவள். இந்த ஒலி இன்னமும் தேவதா - தெய்விக நிலையிலேயே இருக்கிறது. மனிதனது ஒலியாக மாறவில்லை. அந்த தெய்வ ஒலி வடிவில் பொறியால் ஏற்கப்படும் நிலைக்கு முந்தியளாக இருப்பவள் பச்யந்தீ என்ற ஒலி வடிவில் உள்ள தேவி. (369)

### 5. மத்த்யமா. நடுநிலையடைந்த ஒலியானவள்.

5-1. சப்தம் மூலாதாரத்திலிருந்து கிளம்பி நாபியை அடைந்து அங்கு மலர்ந்து பீஜமாகி, வெடித்துத் தன்னுள் மறைந்திருந்த ஒலிவடிவை விரிவாக வெளிப்படுத்த நினைத்து, விரிவடையத்தக்க இடமும் அனாஹாதம் எனும் நாதம் எழும் இடமுமான இதயத்தை அடைந்து, மத்த்யமா ஆகிறது. ஒன்றோடொன்று மோதுவதால் ஒலி ஏற்படுகிறது. விரல் முதலியவை வாத்யங்களின் ஒலி எழும்பும். உள்ளிருந்து வெளியாகும் காற்று தொண்டை, அண்ணம், நாக்கு, உதடு, மூக்கு முதலியவற்றில் மோதி எழுத்தொலியாக வெளியாகிறது. இவை அனைத்தும் ஆஹதம்-மோதுவதால் ஏற்படுவது. இந்த ஆஹத ஒலிக்கு மூலமானது அநாஹதம்- மோதுவதால் ஏற்படாத இயற்கை ஒலி. ஒலி விளக்கம் பெற ஆஹனனம் (மோதுதல்) உதவுகிறது. இந்தச் செயற்கை உதவி தேவையில்லாமல், மூலாதாரத்திலிருந்து கிளம்பிய ஒலி சக்தி, இதயத்தில் அனாஹதமாக-இயற்கையான ஒலியாகக் கேட்கிறது. இதனை நாதம் என்பர் இந்த ஒலி எப்போதும் கேட்கும். இந்த ஒலியை (நாதத்தை)க் கேட்க யோகப் பயிற்சி தேவை. இந்த அனாஹத ஒலி வெளியாகுமிடமான ஸுஷும்னா காண்டத்தில் அமைந்த சக்கரத்திற்கு அநாஹத சக்கிரம் என்றே பெயர். அனாஹத ஒலியாக - நிச்சயமாக வெளிவந்துவிட்ட ஒலி மத்தயமா. இந்த நிலையை அடைந்த ஒலி இனி வாய் வழியே வெளி வராமல் இருக்க இயலாது. விதை வெடித்து முளை பிரிய ஆரம்பித்த பின் முளைக்க வேண்டுமே தவிர விதை நிலையை மீண்டும் அடைய முடியாது. விதை வெடித்து உள்ளே முளை ஏற்பட்டுப் பிந்துவிட்ட நிலை இது. முளை இன்னமும் வெளித் தோன்றவில்லை.

5-2. "பச்யந்தீவ ந கேவலம் உத்தீர்ணா, நாபி வைகரீவ ஸ்ப்புடதரநிகிலாவயவா வாக்பா மத்தயமா தயோரஸ் மாத்." பச்யந்தீ போல் செல்லுமிடத்தை முன் பார்வையிடுவதுடன் நிற்காதவனள், தனது அடுத்த நிலையாகிய வைகரீ போல் முழுவதும் வெளி வராதவள், தனது அடுத்த அவயவங்கள் அனைத்தும் நன்கு பிரிந்து விளக்கம் பெறத்தக்க நிலையில் உள்ளவள்-இந்த நடு நிலையில் உள்ள வாக்கு மத்தயமா எனப்படும்.

(370)

## 6. வைகரீ - ரூபா. காதுக்குக் கேட்கும் ஒலி வடிவடினள்

6-1. மத்தயமா நிலைக்கு வந்த சப்தம் அதனை எழுப்பிக் கொணர்ந்து வந்த வாயுவின் வேகத்தால் துரிதமாக வெளியேறும் போது தொண்டை, அண்ணம், நாக்கு பற்கள், உதடு இவைகளில் மோதி 'அ' முதலிய எழுத்துக்களின் வடிவைப் பெறுகிறது. இந்நிலையில் அது காதுகளால் உணரப் பெறுகிறது. இதயத்திலிருந்து தொண்டை வழியே ஒலியை கொணரும் வாயுவிற்கு விகரன் எனப் பெயர். விகரன் என்ற வாயுவால் வெளியானபடியால் வைகரீ.

6-2. வை - க - தீமானமாக, இது இன்னதென்று நன்கு புரியும்படியாக, காதாக அமைந்த ஆகாயத்தை, அடைந்த ஒலி. காதினுள் உள்ள வெட்டவெளி (ஆகாயம்) காது எனும் இந்திரியமாகும். ஸ்துலமாக உள்ளும் வெளியிலும் உள்ள காது- அதன் பொறி.

6-3. சிறப்பாக, கடினத் தன்மை பெற்ற எழுத்தின்- விகரத்தின் - ஒலி, வைகரீ. காற்று வடிவமாக நெருக்கமற்றிருந்த ஒலி, குறுகிய வாசல் வழியே மோதி வருவதால் நெருக்கமடைந்து இறுகிச் சொல் வடிவம் பெற்றுள்ளதால் வைகரீ. விதை முளைவிட்டு விந்து வெளியேறி மரமாகத் தோன்றவிருக்கிறது.

6-4. ஒலி தொண்டையிலிருந்து கிளம்புகிறதென்று பொதுவாக நாம் கருதுகிறோம். பேச விரும்புவனது நினைப்பு காரணமாகப் பிராண சக்தி மூலாதாரம் வரை பாய்ந்து அங்கிருந்து பரா எனும் ஒலி சக்தியைக் கிளப்பிப் பச்யந்தீ, மத்த்யமா, வைகரீ என்ற மூன்று நிலைகளை அடையச் செய்கிறது என்ற பூர்ணமான ஒலி வடிவம் இந்த ஆறு நாமங்களால் விளக்கப்பெற்றது. (371)

❋❋❋

அதிகாரம் - 20

# தேவி அமர்ந்துள்ள பீடங்கள்

**1. பக்த-மாநஸ- ஹம்ஸிகா. பக்தர்கள் மனமாகிற மானஸ ஸரஸ்ஸில் அழகிய அன்னப்பேடுபோல் விளங்குபவள்.**

1-1. பனிமலையான இமயத்தின் உயர்ந்த பகுதியில் மானஸஸரஸ் என்ற ஓடை, மிகத் தெளிந்த நீருடையது. அதில் அன்னபட்சிகள் வசிக்கும். மிகத் துய நீரில் விருப்பம் கொண்ட அவை வேறிடத்தில் வசிக்கப் பிரியப்படுவதில்லை. தேவியும் ஒரு அன்னப்பேடு. அன்பால் மிகத் தூய்மையான அடியார்களின் மனத்தையே மானஸ ஓடையாக மதித்து அதில் அன்னைப்பேடுபோல் மகிழ்ந்து உலவுகிறாள் தேவி. தேவி அமரும் பீடங்களில் அடியார்களின் மனம் முதலிடம் பெறுகிறது. (372)

(நா.373-378)

कामेश्वरप्राणनाडी कृतज्ञा कामपूजिता ।
शृङ्गाररससंपूर्णा जया जालन्धरस्थिता ॥ 82 ॥

**காமேச்வரப்ராணநாடீ க்ருதஜ்ஞா காமபூஜிதா.**
**ச்ருங்காரரஸஸம்பூர்ணா ஜயா ஜாலந்த்தரஸ்த்திதா.82**

**2. காமேச்வர-ப்ராண-நாடீ. காமேசுவரது உயிர் நாடியாக விளங்குபவள்.**

2-1 காமேசுவரது உயிர் நிலையாக இருப்பவள் தேவி.அமிருதத்தை உண்ட பின்னரும் பிரளய காலத்தில் தேவர்கள் மறைகின்றனர். அமிருதத்திற்காகப் பாற்கடலைக் கடையும்போது முதலில் உண்டான விஷத்தைக் கண்டு மற்றவர் பயந்து ஒதுங்க, தேவி பிராண நாடியாக இருக்கும் தைரியத்தால், சிவன் விஷத்தைக் கவளம்போல் மென்று சாப்பிட்டார். மரணத்தைக் கொடுக்கும் விஷம் தன் தன்மை இழந்தது. காமேசுவரனை வாழ வைத்தப் பிராண சக்தி தேவி. காமேசுவரரின் பிராணன் தங்கும் இடத்தில் தங்குபவள். (373)

## 3. க்ருதஜ்ஞா. செய்ததை அறிந்தவள்.

3-1. உலகில் வாழ்பவர் அனைவரும் செய்யும் ஒவ்வொன்றையும் தேவி அறிவாள். செய்த செயல் நல்லதா கெட்டதா என அறிவாள். சூரியன், சந்திரன், யமன், காலம், ஐந்து பூதங்கள் ஆக ஒன்பது சாக்ஷிகள், மக்கள் ஒவ்வொருவரும் செய்யும் வினைகளைக் கண்காணிக்கின்றனர். அவரவர் செய்த வினைகளைக் கணக்கிட்டு அதற்கேற்ற பலனைக் குறிப்பிடுகின்றனர். இந்த ஒன்பது சாகக்ஷிகளாக இருப்பவள். நற்செயல்கள், கெட்ட செயல்கள் நடக்குமிடங்களில் சாக்ஷியாக இருப்பவள்.

3-2. செய்த வினைகளைப் பற்றி அறிந்து அதற்கேற்ற பின் விளைவுகளை வகுப்பவள். தெய்வ நியதி-தெய்விகச் செயல்முறை எனும் சக்கரத்திற்கு உதவக்கூடிய நற்பணிகளைச் செய்பவர்களுக்கு நற்பயனைத் தருகிறாள். கிருதஜ்ஞா – செய்நன்றியுள்ளவள்.

3-3. கிருதம் எனும் யுகம் அளவுகடந்த ஆற்றலும் அறிவும் பூர்ணத்துவம் பெற்றிருக்கும் காலம். கிருத யுகத்தில் இருந்தது போல் பூர்ண ஞானம் பெற்றவள் தேவி. (க்ருதே இவ ஜ்ஞா).

3-4. சூதாட்டத்தில் கிருதம், திரேதா, த்வாபரம், கலி என்று நான்கு ஆட்ட முறைகள் உண்டு. அவைகளில் பெரிது கிருதம். இந்த ஆட்டம் தெரிந்தவள் தேவி. சிவனுடன் தேவி பொழுதுபோக்காகச் சூதாடுவது உண்டு. தேவி கிருத ஆட்டம் அறிந்தவளானதால் தேவிதான் ஜெயிப்பாள். சூதாட்டம் ஒரு கலை. அவள் 64 கலை வடிவானவள்.(நா.235) அதனால் சூதாட்டத்திலும் தேர்ச்சி பெற்றிருக்கிறாள்.

3-5. க்ருதம்-செயல்வரை, ஜ்ஞா-அறிவுள்ளவள். காயம் நிறைவேறும் அளவிற்கான அறிவுள்ளவள். தொடங்கிய செயல் நடுவே நிற்பது அறிவின்மையால். செயல் முடியும் வரை ஏற்படும் விளைவுகளை அறிவால் முன்னதாகவே அறிந்து அதற்கேற்பச் செயல் புரியும் அறிவாற்றலுள்ளவள். (374)

## 4. காமபூஜிதா. மன்மதனால் வழிபடப் பெற்றவள்.

4-1. காம: – மன்மதன், ரதியிடம் உள்ள அன்பினால் மன்மதனைத் தேவி பிழைக்க வைத்தாள். (நா.84, 316) தனக்கு மறு வாழ்வளித்த

தேவியைக் காமன் வழிபட்டான். காமன் வழிபட்ட இடம் காஞ்சி, காமகோட்டம், காமகோடி, காமபீடம் என்ற அதன் பெயர்களும், காமனிடம் அருள்நோக்கு கொண்டுள்ளதைக் காட்டும். காமாக்ஷீ (நா.62) என்ற தேவியின் திருநாமமும் காமனின் வழிபாட்டுச் சிறப்பை விளக்குகின்றன. தேவியின் வாத்ஸல்யம் காரணமாகப் பன்னிருதேவி உபாஸகர்களிடையே மன்மதனும் இடம் பெறுகிறான். (16.40.2) காமன் தவமிருந்து தேவியை வழிபட்டுத் தேவியின் அருளைப் பெற்று சிவனை ஜயித்தான். அதனால் சிவஜித் - க்ஷேத்திரம் என்று காஞ்சிக்கு ஒரு பெயர் உண்டு. இப்படி காமே-பூஷிதா. காமபீடத்தில், பூஜிக்கப்பெற்றவள், காமேந-பூஜிதா மன்மதனால் பூஜிக்கப் பெற்றவள்.

4-2. தேவியின் முக்கிய பீடங்கள் 51. பஞ்சாத்பீடரூபிணீ. (நா.833) அவைகளில் பாரதத்தின் தெற்கேயுள்ள காம பீடமும், மேற்கேயுள்ள ஜலந்தர பீடமும், வடக்கேயுள்ள பூர்ணகிரி பீடமும், கிழக்கேயுள்ள ஒட்டியாண பீடமும் மிகச் சிறப்புப் பெற்றவை. காம பீடத்தை இந்த நாமம் குறிக்கிறது. மற்ற பீடங்களை அடுத்து வரும் 376, 378, 379, நாமங்கள் குறிக்கும். ஸதீ தேவியின் காஞ்சி (அரைஞாண் தரிக்கும் பகுதி) இந்த இடத்தில் விழுந்ததாகக் கூறுவர். (இணைப்பு-2)

4-3. இந்த நான்கு பீடங்ளும் நம் உடலாகிய க்ஷேத்திரத்தில் உள்ள நான்கு சக்கிரங்களைக் குறிப்பிடும். காம பீடம் - மூலாதாரம், பரா எனும் வாக்கின் ஸ்தானம். பூர்ணகிரி - மணிபூரகம், பச்யந்தீ எனும் வாக்கின் ஸ்தானம், ஜாலந்தரம் - அனாஹதம், மத்யமாவின் ஸ்தானம். ஒட்யாணம் - விசுத்தி, வைகரியின் ஸ்தானம். அதனால் மூலாதாரமாகிய காம பீடத்தில் காஞ்சியில் உள்ள காம பீடத்தில் காமனால் பூஜிக்கப் பெற்றவள் தேவி.

4-4. தேவியை வழிபட்டதால் நாராயணன் மோகினி வேடம் ஏற்று சிவனை மயக்கினார். நாராயணனின் மகன் மன்மதன். தந்தை சிவனை வெற்றி கண்டதுபோல், மன்மதனும் தேவியின் வழிபாட்டின் சிறப்பால் சிவனையும் மகாயோகிகளையும் கலக்கினான். (ஸௌந்தர்யலஹரி 5-6).

4-5. தன்னைச் சிவனுடன் சேர்த்து வைப்பதற்காக மன்மதன் உயிரை இழந்தான் என்பதைத் தேவி அறிநதவள் - க்ருதஜ்ஞா. (நா.374) அந்த நன்றியுணர்வால் காமனது வழிபாட்டை ஏற்று அவனுக்கு எல்லாப் பெருமைகளையும் தருகிறாள். ஆவனது வில்லையும் அம்பையும் தானும் ஏந்தி நிற்பவளாக உலகிற்குக் காட்டுகிறாள். க்ருதஜ்ஞாவிற்கு அடுத்த நாமமாக காமபூஜிதா வருவது அப்படியும் பொருந்துகிறது.

### 5. ச்ருங்கார - ரஸ - ஸம்பூர்ணா. சிருங்கார ரஸம் நிறைந்திருப்பவள்.

5-1. வடிவழகு மிக்க தேவி லலிதா, மனத்தில் சிருங்கார ரஸம் நிறைந்தவளாகக் காணப்படுகிறாள். காமபூஷிதா ஆக இருப்பவள் சிருங்கார ரஸம் நிறைந்திருப்பவளாக இருப்பது இயற்கைதானே! சிருங்காரமாகவே இருக்கும் தேவியை வழிபட்டுக் காமன் சிவனிடம் காமத்தைத் துண்டும் சக்தியைப் பெறுகிறான்.

5-2. சிருங்காரம், வீரம், கருணம், ரௌத்திரம், பீபத்ஸம், ஹாஸ்யம், அத்புதம், பயனாகம், சாந்தம் என ஒன்பது ரஸங்கள். வீரம் முதல் மற்ற எட்டும் சிருங்காரத்தின் பின் விளைவுகளே. எழுத்துக்கள் அனைத்தும் அ என்ற முதல் எழுத்தின் மாறுபட்ட தோற்றங்களே. சுவைகளைத்தும் இனிப்பின் மாறுபாடுகளே. சிருங்காரம், அகாரம், இனிப்பு முதலியன முதலில் தோன்றியவையாதலால் பின் மலர்ந்து பல உருவங்களை எடுத்துக்கொள்கின்றன. அதனால் முதலில் தோன்றிய சிருங்கார ரஸம் நிரம்பியவளானதால் மற்ற ரஸங்களும் இவளிடம் நிரம்பி இருக்கும் எனக் கொள்ளலாம்.

5-3. பூர்ண கிரி எனும் பீடத்தை 'ஸம்பூர்ணம்' என்ற தொடரால் குறிப்பிடுகிறார்கள். பூர்ண - நிரம்பியது. எதனால் என்ற கேள்விக்கு 'ச்ருஙகாரரஸ' என்ற தொடர் விடையளிக்கிறது. சிறந்த மனக்களிப்பைத் தரும். சிருங்கார ரஸத்தால் நிரம்பிய பூர்ண கிரி பீடமாக இருப்பவள். (20.4.3) மணிபூரக சக்கிரமாகிய பூர்ணகிரி பீடம், சிருஙகார ரஸம் நிரம்பிய ஸ்தானம். அதில் நிறைந்திருப்பவள் தேவி (376)

### 6. ஜயா. ஜயாவாக இருப்பவள்.

6-1. வராஹசைலத்தில் தேவி ஜயா என்ற திருநாமம் பூண்டு விளங்குகிறாள். ஜயம்- வெற்றி. அதன் வடிவானவள் தேவி மற்றொரு நாமம் விஜயா. (நா.346)

### 7. ஜாலந்த்தர - ஸ்த்திதா. ஜாலந்தர பீடத்தில் அமர்ந்திருப்பவள்.

7-1. ஜாலந்திரம் என்ற பீடத்தில் விஷ்ணுமுகி யாக விளங்குகிறாள். ஜாலந்தரம் அனாஹத சக்கிரமாகும். (20.4.3) அங்கு அமர்ந்திருப்பவள். (நா.833) (378)

(நா. 379 - 382)

ओड्याणपीठनिलया बिन्दुमण्डलवासिनी ।

रहोयागक्रमाराध्या रहस्तर्पणतर्पिता ॥ 83 ॥

**ஒட்யாண - பீட - நிலயா பிந்து மண்டலவாஸிநீ.**

**ரஹோயாகக்ரமாராத்யா ரஹஸ்தர்ப்பணதர்ப்பிதா.**

**83**

**8. ஒட்யாண - பீட - நிலயா. ஒட்டியாண பீடத்தைத் தன் இருப்பிடமாகக் கொண்டவள்.**

8-1. நிலயம் - பிறர் கண்களில் படாமல் ஓய்வெடுத்துக் கொள்ளும் இருப்பிடம் நிலயமாகும். ஒட்டியாண பீடத்தை நிலயமாகக் கொண்டவள் தேவி. விசுத்தி சக்கிரமும் ஒட்டியாண பீடம் ஆகும். (20.4.3) அங்கு தங்குபவள். (நா.833) (379)

**9. பிந்து - மண்டல - வாஸிநீ. பிந்து மண்டலத்தில் வசிப்பவள்.**

9-1. ஸ்ரீ சக்கிரத்தின் ஒன்பதாவது ஆவரணமும் (9.10.29) அது நடுவில் உள்ள சக்தி சக்கிரமாகிய திரிகோணத்தின் நடுவே அமைந்துள்ள ஸர்வாநந்தமய சக்கிரமும் சிவசக்கிரமுமான வட்டமும் உடலில் ஸஹஸ்ரார சக்கிரமும் பிந்து மண்டலமாகும். அங்கு வசிப்பவள். (380)

* * *

## அதிகாரம் - 21

# ஞானயோகத்தால் தேவியின் வழிபாடு

### 1. ரஹோயாக - க்ரம - ஆராத்யா. ரகசிய யாக முறையால் வழிபடத்தக்கவள்.

1-1. தேவி வழிபாட்டில் நியாஸங்கள் செய்து ஸாமான்ய - விசேஷ அர்க்ய - பாத்திரங்கள் முதலியவைகளை அமைத்து வழிபட்டபின் தேவியை ஆவாஹனம் செய்வதற்கு முன் தன்னிடமுள்ள தோஷங்களைக் களைய வேண்டும். அதற்கான முறை இந்த ரஹோயாகம். இதனைப் புண்யாதிஹோமாஷ்டகம் என்பர். இது பாவனையால் நடக்கும் ஒரு ஹோமம். மூலாதாரத்தில் கேசத்தின் நுனி போன்ற மிக மெல்லிய வடிவில் குண்டலினீ எனும் என்றும் அணையாத தீ எரிந்துகொண்டிருக்கிறது. அது தானே எரியும். விறகு தேவையில்லை. நமது வாஸனைகளை விறகாக்கி அதில் போட்டுப் பெரிதாக்குகிறோம். இதுவே சிதக்னி குண்டத்தில் அமைந்த அக்கினி மண்டலம். பாபம், புண்யம், அவை விளைவதற்குக் காரணமான நமது கெட்ட செயல், நற்செயல், செயலாற்றத் தூண்டிய மனத்தின் ஸங்கல்பம் - விகல்பம், அவைகளுக்கும் காரணமானவைகளும் நம்மைத் தனித்தனியே கட்டுப்படுத்துபவைகளுமான தர்ம-அதர்மங்கள், இவை எட்டும் நம்மைத் தேவியிடமிருந்து பிரிப்பவை. இவை அழிந்தால்தான் தேவியுடன் அபேத பாவனையாகிற அந்தர்யாகம் அமையும். அதனால் குண்டலினியில் உள்ள சிதக்னி குண்டத்தில் சிதக்னியில் புண்யம், பாபம், நற்செயல், தீச்செயல், ஸங்கல்பம், விகல்பம், தர்மம், அதர்மம் என்ற எட்டையும் ஹோமம் செய்து அவை சாம்பலாகிப் பயனுற்றுப் போய்விட்டதாகப் பாவிப்பதே இந்த ஹோமம். பிராணன், புத்தி, தேகம், தர்மம் இவைகளுக்குக் கட்டுப்பட்டு விழிப்பு - சொப்பன - தூக்க நிலைகளில் மனத்தாலும் சொல்லாலும் செயலாலும் கைகளாலும் கால்களாலும் வயிற்றாலும் குறியாலும் நினைத்தும் சொல்லியும் செய்தும் விளைந்ததனைத்தையும் பிரும்மமாகிய தேவியிடம் அர்ப்பணம் செய்து ஜோதி வடிவமாக, களங்கமும் பேதமுற்றவனாக, சிதக்னியாகவே மாறியவனாகத் தன்னைப் பாவித்துக்கொள்ள வேண்டும். ஆத்மாவைக் கட்டுப்படுத்துபவை அனைத்தும் சாம்பலாகி விட்டபடியால், ஆத்மா பரமாத்மாவுடன் தானே இணைந்து விடுகிறது. ஆத்மா ஒளிவடிவினன். அவனைச் சட்டைகள்போல் மறைத்திருந்ததனைத்தும் அக்கினியால் அழிக்கப்பட்டன. புடமிட்ட தங்கம்போல் ஆத்மா ஒளிவிடுகிறான். இதனை

ரஹோயாகம் – பிறர் அறியாத வேள்வி என்பர். (ரகசியமான இடத்தில் செய்யத்தக்கது என்ற பொருள் அல்ல). பேச்சு, நினைப்பு, செயல், வீடு, துணைவர்கள் முதலிய புறச் சூழ்நிலையிலிருந்தும் ஆத்மாவை ஒதுக்கி, அதனைச் சூழ்ந்துள்ளதனைத்தும் சிதக்னியில் – குண்டலினியில் கனன்றுகொண்டிருக்கும். அறிவுத்தீயில் தன்னளவில் பொசுங்கி மறைந்துவிட்டதாகப் பாவிப்பதால், ரகசியத்தில் நடைபெறுகிற யாகம் இது. பேச்சு முதலிய புறச் சூழ்நிலையில் ஈடுபட்டவன் பலரறிய இருப்பான். அவன் ஏகாந்தத்தில் அனுபவிக்கத்தக்க சுகத்தை அனுபவிக்க முடியாது. ஏகன் ஆத்மா, அவன் தனிப்பட்டவன். அவன் மட்டுமிருக்குமிடம் ஏகாந்தம் – தனிமை, ஜனநெருக்கடி உள்ள இடத்திலிருந்தவாறே ஆத்மாவைத் தனித்து உணர்பவன் தனிமையில் ரகச்யத்தில் இருக்கிறான்.மனித ஸஞ்சாரமே அற்ற இடத்தில் இருந்தால்கூட புறச் சூழ்நிலையால் பாதிக்கப்படுபவன் தனிமையில் இல்லை. தனிமையில் நடக்கும் இந்த யாகத்தினால் வழிபடப் பெறுபவள் தேவி (381)

## உ. ரஹஸ் - தர்ப்பண - தர்ப்பிதா. ரகசிய தர்ப்பணத்தால் திருப்தி அடைந்தவள்

2-1 புண்ணியம் முதலிய எட்டையும் ஆஹுதி செய்த பின் மறைப்புகள் அனைத்தும் விலகி ஒளிவடிவினனாகிவிட்டதாகத் தன்னைப் பாவனை செய்யவேண்டும். அதற்கான மந்திரங்கள் இரண்டு. அந்தர் நிரந்தர நிரிந்தநம் ஏதமானே மோஹாந்தகார பரிபந்திநி ஸம்விதக்நௌ. கஸ்மிம்ச்சித் அத்புத மரீசிவிகாஸ பூமௌ விச்வம் ஜுஹோமி வஸுதாதி சிவாவஸாநம். என்னுள் இடைவிடாமல் விறகின்றி கனன்று கொண்டிருப்தும் மோகமாகிய இருட்டிற்கு எதிரியும் வியக்கத்தக்க ஒளி பரப்பிக் கொண்டிருப்பதும் இன்ன தன்மை படைத்தது என அறியமுடியாதிருப்பதுமான ஞானமாகிற அக்கினியில் பூமி முதல் சிவன் ஈறான முப்பத்தாறு தத்துவங்கள் அடங்கிய விசுவத்தை ஹோமம் செய்கிறேன். விச்வம் ஜுஹோமி. வி-ச்வம் நாளை இல்லாதது – முடிவுள்ளது. அவித்யை அநாதி – ஆதியற்றது. ஆனால் அதற்கு அந்தம் – முடிவு உண்டு. அவித்யையால் ஏற்பட்ட ஸம்ஸார பந்தமும் அநாதி. அதற்கும் முடிவுண்டு. இவ்விரண்டின் முடிவும் பிரும்ம ஞானத்தால் ஏற்படும். பிரும்ம ஞானம் என்பது பிரும்மமென்று ஒன்று உண்டு என்று அறிவதல்ல. எங்கும் நிரம்பிய அந்தப் பொருளே தான் என்ற உண்மையான உணர்வு பிரும்ம ஞானம். அந்த ஞானம் ஏற்பட்டதும் பூமி முதலான சிவன் ஈறான 36 தத்துவங்களும் ஞானிக்கு மறைந்து விடுகின்றன. அவனுக்கு அப்போது அவை விசுவம் – நாளை என்பது இல்லாதவை. அதற்குப் பின் அவனிடம் விசுவம் – 36 தத்துவங்கள் ஒட்டாது.

2-2. ஹோமமானதும் சொல்லும் மந்திரம் இரண்டாவது. ஆர்த்ரம் ஜ்வலதி ஜ்யோதிர் அஹமஸ்மி. ஜ்யோதிர் ஜ்வலதி ப்ரும்மாஹமஸ்மி. ஸோ (அ) ஹமஸ்மி ப்ரும்ஹாஹமஸ்மி அஹ மஸ்மி ப்ரும்ஹாஹமஸ்மி அஹமேவாஹம் மாம் ஜுஹோமி ஸ்வாஹா. நான் ஆஹுதியாக இட்டதும் நெருப்பிற்கு எதிரிடையான குணமுள்ளதும் இதுகாறும் என்னுள்ளிருந் ஆத்ம ஜோதியை அறியத் தடையாயிருந்ததுமான புண்யம் முதலியவை, ஈரமான பொருளயினும் கொழுந்துவிட்டெரிகின்றனவே! அந்த ஜோதியாகவே நான் (ஆத்மா) இருப்பதை உணர்கிறேன். ஜோதிதான் எரிகிறது. அந்தப் பிரும்மமே நான் என்பதை உணர்கிறேன். (மற்றதொன்றையும் காணோம்) நானே இருக்கிறேன். பிரும்மமே நான். பிரும்மமாகிய நான் இதுவரை வேறாகியிருந்த நான் ஐ ஆஹுதி செய்துவிட்டேன். இந்த இரு மந்திரங்களின் பொருளையும் உணர்ந்து பாவனை செய்தல், பாவனையால் பிரும்மமாக ஆகிவிடுதல் ரஹஸ் தர்ப்பணம் ஆகும். ரகசியத்தில் தனிமையில் பெறும் தர்ப்பணம் - ஆத்ம திருப்தி. அதனால் திருப்திப்படுபவள் தேவி.

2-3. ரஹஸ் தர்ப்பணத்தால் தேவி திருப்திப்படுகிறாள். ப்ரியோஹி ஜ்ஞாநிந : அத்யர்த்தம் அஹம் : ஸ ச மம ப்ரிய : ஞானிக்கு நான் அதிகமாக பிரியமானவன் (ஆத்மாவானதால்). எனக்கும் அவன்தான் பிரியன். (தன்னிடமிருந்து பிரித்த அவித்யையைத் தாண்டித் தன்னைச் சேர்ந்துவிட்டவன் ஆனதால்) (கீதை.7-17) (382)

सद्यःप्रसादिनी विश्वसाक्षिणी साक्षिवर्जिता ।
षडङ्गदेवतायुक्ता षाड्गुण्यपरिपूरिता ॥ 84 ॥

**ஸத்ய : ப்ரஸாதிநீ விச்வஸாக்ஷிணீ ஸாக்ஷிவர்ஜிதா.**
**ஷடங்கதேவதாயுக்தா ஷாட்குண்யபரிபூரிதா.**

**3. ஸத்ய :- ப்ரஸாதிநீ. உடனே அருள்புரிபவள்.**

3-1, ரஹோ யாகம், ரஹஸ் தர்ப்பணம் என்ற இரண்டாலும் திருப்திப்பட்டு உடன் தேவி அருள்புருகிறாள். பக்தனின் பாவனையை வலிவடையச் செய்து ஆத்ம ஞானம் ஏற்படச் செய்கிறாள். தனது உண்மை நிலையை அவனுக்குக் காட்டுகிறாள். இதுகாறும் தெளிவற்ற நிலையில் தன்னைக் கண்டுகொண்டிருந்த பக்தனைத் தனது தெளிவான உண்மை நிலையைக் காணச்செய்கிறாள். ஸத்ய :- ப்ரஸாதிநீ - உடனே தெளிவற்றதைத் தெளிவாக்குகிறாள். அருள் புரிகிறாள். (ப்ரஸாதயதி - ப்ரஸீததி) (383)

**4. விச்வ - ஸாக்ஷிணீ. அனைத்திற்கும் சாட்சியாக இருப்பவள்**

4-1. தேவி உலகைப் பார்க்கிறாள். உலகனைத்தையும் தன் வடிவமாகப் பார்க்கிறாள். தன் வடிவமான உலகைப் பார்க்கிறாள். உலகமாயும், உலகிற்கு அப்பாற்பட்டவளாயும் இருப்பவள் அவள். தன்னையே பார்ப்பதால் முழுவதையும் உணர்வாள். அதற்கு அப்பால் நின்று பார்ப்பதால் அதன் ஸுக துக்கம் முதலிய துவந்துவங்களால் பாதிக்கப்படாதவாறு அதனை உணர்வாள். அவளது உணர்வில் உலகத்தின் சுக துக்கங்கள் முதலியவை யாதொரு பாதிப்பையும் விளைவிக்காது. நடப்பதை (நடந்ததை) நன்கு அறிந்து அதன்பின் விளைவுகளால் பாதிப்புறாமல் காண்பவள் தான் சாட்சியாவாள். உலகை முழு நிலையிலும் அறிந்து அதன் விளைவுகால் பாதிப்புறாமல் அதற்கப்பால் நின்று சாட்சியாக பார்ப்பவள். விருப்பும், வெறுப்புமின்றி உண்மை நிலையறிந்து உதவுபவள். முழுவதும் அறிபவளானதால் உடன் அருள்புரிய முடியும். முன் நாமத்தை விளக்க வந்த நாமம் இது. விசுவம் தோன்று முன்னும், தோன்றியுள்ள நிலையிலும், மறைந்த பின்னரும் அதன் பரிணாமங்களைக் காண்பவள் தேவி. (16.34.14)

**5. ஸாக்ஷிவர்ஜிதா, சாட்சியற்றவள்.**

5-1, உலகின் சாட்சியான தேவியைக் கண்ட மற்றொரு சாட்சி கிடையாது. எல்லாக் காட்சிகளுக்கும் அவள் ஒருவளே சாட்சி. உலகம் தோன்றுமுன்னும், தோன்றி மறைந்தபோதும் அதன் தோற்ற நிலையிலும் அவளை முழுவதும் அறிந்தவன்தான் அவளுக்குச் சாட்சியாக இருக்க முடியும். அவள் ஆதியந்தமற்றவள். அவளே எல்லாத் தோற்றத்திற்கும் காரணம். முன்னும் பின்னும் இருந்தும் நடுவில் தொடர்ந்தும் அவளை அறிபவராக வேறொருவருமில்லை. (16.34.1)

**6. ஷடங்க - தேவதா - யுக்தா. ஆறு அங்க தேவதைகளுடன் கூடியவள்**

6-1, தேவியின் மந்திரத்தாலான வடிவிற்கு ஆறு அங்கங்கள். ஹிருதயம், சிரஸ், சிகா, நேத்திரம், கவசம், அஸ்திரம் என அவை ஒவ்வொன்றுக்கும் சக்தி வடிவங்களான தேவதைகள் உண்டு. ஹ்ருதய

தேவீ, சிரோ தேவீ, சிகா தேவீ, நேத்ர தேவீ, கவச தேவீ, அஸ்திர தேவீ என. இவர்கள் ஒன்பதாவது ஆவரணத்தில் பிந்து மண்டலத்தில் லயாங்க பூஜையில் வழிபடப் பெறுகிறார்கள். இவர்களோடு கூடி பிந்து மண்டலத்தில் அமர்ந்திருப்பவள் தேவி.

6-2. ஈசுவரத் தன்மைக்கு ஆறு அங்கங்கள். 1. ஸர்வஜ்ஞதா - எல்லாவற்றையும் அறிந்திருப்பது; 2. த்ருப்தி :- நிறைவு, பூர்ணத்தன்மை; 3. அநாதிபோதம். ஆதியற்ற ஞானம்; 4. ஸ்வதந்த்ரதா - எல்லாவற்றையும் தன்னிஷ்டப்படி நடத்திக்கொள்வது; 5. நித்யம் அலுப்த சக்தி - என்றும் எந்தச் செயலிலும் குன்றாத சக்தி; 6. அநந்ததா - முடிவின்மை. இந்த ஆறு தன்மை பெற்றவர் ஷடங்க தேவதையான மஹேச்வரன். அவருடன் கூடியவள்.

6-3 ஈசுவரத் தன்மைகளான ஸர்வஜ்ஞதா முதலியவற்றிற்கு மாறுபட்ட ஆறு தன்மைகள் ஜீவனைக் கட்டுப்படுத்துகின்றன. அவை வித்யை, ராகம், அவித்யை, நியதி, கலா, காலம் என்பனவாகும். குறிப்பிட்டதொன்றில் விரிவான அறிவு கொடுப்பது வித்யை. அதனால் அவனால் எல்லாமறிந்தவனாக- ஸர்வஜ்ஞனாக இருக்க முடியவில்லை. ராகம் - ஆசை, அது - திருப்தியை - நிறைவைப் பாதிக்கிறது. அவித்யை - ஈச்வரனையும் தன்னையும் பிரித்த அநாதியான அஜ்ஞானம். அது அநாதி போதத் தன்மைக்கு எதிரானது. நியதி - தலை எழுத்து விதி - முன்வினைப் பயனாக அமைந்தது. அது ஸ்வதந்த்ரத்துடன் தன்னிஷ்டப்படி நடக்கவொண்ணாமல் தடுக்கிறது. கலா - செயல்களில் ஏதேனும் ஒன்றில் தனித் திறமை. இது எல்லாவற்றையும் செய்ய இயலாமல் தடுக்கிறது. காலம் - இவனை முடிவிற்கு அழைத்துச் செல்கிறது. ஜீவனைக் கட்டுப்படுத்துகிற இந்த மாயா தத்துவங்களிலிருந்தும் விடுதலை தந்து ஈச்வரத் தன்மை பெறச் செய்பவள்.

6-4 தேவி வேத வடிவினள், வேதத்திற்கு ஆறங்கங்கள். அவை சிக்ஷா, வியாகரணம், சந்தஸ், நிருக்தம், ஜ்யோதிஷம், கல்பம் ன. சிக்ஷா - அக்ஷர இலக்கணம் - அக்ஷரங்களை உச்சரிக்கும் வகை பற்றிய அறிவு நூல் : வியாகரணம் - சொல் இலக்கணம். சந்தஸ் - யாப்பு இலக்கணம். நிருக்தம - பொருள் இலக்கணம். ஜ்யோதிஷம் - கால இலக்கணம். கல்பம் - செயல் இலக்கணம். இவை முறையே வேத மாதாவின் மூக்கு, வாய்,

கால்கள், காதுகள், கண்கள், கைகள் ஆகிய அங்கங்களாக அமைந்தவை. அதனால் வேதம் ஷடங்கமாகும். (இந்த ஷடங்கங்களின் துணைகொண்டு புரியும் வேள்வி முதலியவற்றை சடங்கு எனக் கூறுகிறோம்.) அந்த ஆறு அங்கங்களாகி தேவதைகளுடன் கூடிய வேதமாதாவானவள். (386)

**7. ஷாட்குண்ய பரிபூரிதா. ஆறு குணங்களால் நிறைவு பெற்றவள்**

7-1, ஷாட்குண்யம் - ஆறு குணங்களின் தொகை, ஈசுவரத் தன்மை (21.6.2) வீர்யம் (உலகைத் தாங்கும் தன்மை), புகழ், செல்வம், ஞானம், வைராக்யம் என்று ஆறு குணங்கள் (18.5.1-2) இவை ஆறும் நிரம்பியிருப்பவள். அவதாரங்களாகக் கருதப்படும் மூர்த்திகளில் இந்த ஆறில் சிலவற்றின் மறைவும் காணப்படும். தேவியிடத்தில் இவை ஒவ்வொன்றுமே நிறைவுடனுள்ளன.

7-2 தேவி பேரரசி. (6.2.1, 18.32.1) அரசியலுக்கு ஆறு குணங்கள் தேவை. அஸுரர்களோடு போரிடும்போது தேவி தன் சக்திகளில் பலவற்றை மறைத்துக்கொண்டு அவர்களுக்குச் சமமாகத் தன்னைச் செய்துகொண்டு போர்த்திறனைக் காட்டுவாள். அவளுக்கு அது ஒரு லீலை. அரசன் கையாளவேண்டிய போர்த்தந்திரங்கள் ஆறு. (1) சண்டை வீணெனத் தோன்றினால் சமனான அரசனுடன் ஒப்பந்தம் செய்துகொள்ளுதல் - ஸந்தி. (2) போர் அவசியமெனத் தோன்றினால் போரிடுவது - விக்ரஹம். (3) போரிட எதிரியை எதிர்க்க அவனிடத்திற்கே செல்லுதல் - யாநம். (4) எதிரி தன்னை எதிர்ந்து வரும்படி அமைந்திருத்தல் - ஆஸனம். (5) எதிரிகளுக்கிடையே கிளர்ச்சி ஏற்படுத்தி ஒருவருக்கொருவரை மோத விட்டு எதிரியின் வலிவைக் குறைத்தல் - த்வைதீபாவம். (6) எதிரி பலவானாயின் தக்க துணை நாடுதல் - ஸமாசிரயம். இந்த ஆறு போர்த் தந்திரங்களும் குணங்களாக நிறைந்தவள். (387)

नित्यक्लिन्ना निरुपमा निर्वाणसुखदायिनी ।
नित्याषोडशिकारूपा श्रीकण्ठार्धशरीरिणी ॥ 85 ॥

**நித்யக்லிந்நா நிருபமா நிர்வாணஸுகதாயிநீ.**
**நித்யாஷோடசிகாரூபா ஸ்ரீகண்டார்த்த சரீரிணீ. 85**

**8. நித்ய - க்லிந்நா. எப்போதும் உள்ளக்கசிவுள்ளவள்.**

8-1 எப்போதும் கருணைக்கசிவால் ஈரமுள்ள இதயம் உள்ளவள். நித்யக்லிந்நா - என்ற சுக்லபக்ஷத்துத் திருதீயாதிதியின் நித்யையாகவும்

கிருஷ்ணபக்ஷத்துத் திரயோதசி திதியின் நித்யையாகவும் இருப்பவள். (9.10.28, 10.8.1) (388)

**9. நிர் - உபமா உவமையற்றவள்.**

9-1 ஒரு பொருளுக்குச் சமமானதும் அதைவிடச் சிறப்புள்ளதும் தான் உவமையாகக் கூறத்தக்கது. தேவிக்கு ஈடானவரும் மிக்காருமில்லை. அதனால் யாரையும் உவமையாகக் கூற முடியவில்லை. (நா.184, 198)

(389)

**10. நிர்வாண - ஸுக - தாயிநீ. மோக்ஷசுகம் தருபவள்.**

10-1 வாணம் - சரீரம். நிர்வாணம் - சரீரமற்றது. சரீரத்தின் துணை நாடாதது. (தேவர்களை அசரீரிகள் என்பர். அசரீரியாக வாக்கு ஒலித்தது எனக் குறிப்பிடுவர். தேவர்களுக்கு நம்மைப்போல் பஞ்சபூதங்களாலான சரீரம் கிடையாது. அதனால் அசரீரிகள். அவர்களது பேச்சால்தான் அவர்களிருப்பதை உணர முடியும். சொல்லையே சரீரமாகக் கொண்டவர்களாதலால் கீர் - வாணர்கள் என்றும் கூறுகிறோம். (கீர் - சொல் ) மோக்ஷ சுகம் சரீரத் தொடர்புள்ளவரை கிட்டாது. அது சரீரத் தொடர்பு அற்றதும் உணரக் கூடியது. மற்ற சுகங்கள் சரீரத் தொடர்பிருந்தால்தான் உணர முடியும். சரீரத் தொடர்பிருந்தால் உணர முடியாதது மோக்ஷ சுகம் ஒன்றே. (உடல் உணர்வற்ற நிலையாகிய ஆடையின்மையை நிர்வாணம் என்பர்). நிர் - வாண சுகத்தை அளிப்பவள். (390)

**11. நித்யா - ஷோடசிகா - ரூபா. 16 நித்யைகளின் வடிவானவள்.**

11-1 காமேச்வரி முதலிய 15 நித்யாதேவிகள் திதிகளாயிருக்கும் சந்திரனின் 15 கலைகள். 16வது கலையான ஸாதாகலையாயிருப்பவள் ஸ்ரீ லலிதா தேவி, அவள் மஹா நித்யா. இந்த 16 திதி நித்யைகளின் வடிவானவள். (9.10.28, 10.8.1)

11-2 நித்யைகளில் ஒருவளாகத் தேவி பதினாறாமவள்- ஷோடசீ ஆகிறாள். ஷோடசீ என்பதைத் தன் பெயராகவே கொள்கிறாள். மற்ற 15 நித்யைகளையும் தினமும் பக்தர்கள் நினைவில் கொள்ளவேண்டும். அப்போதுதான் பதினாறாவது நித்யையான தன்னை வழிபடும் தகுதி அவர்களுக்கு ஏற்படும். அதற்காகத் தன்னை 16வது நித்யை வடிவினளாக ஆக்கிக் கொண்டவள்.

11-3. சந்திரனது கலைகள் தேய்வதும் வளர்வதும் உண்டு. சுக்லபக்ஷத்து அஷ்டமி என்றால் சந்திரனுக்கு முதல் எட்டு கலைகள் மட்டும்தான் உள்ளது. 9வது முதல் 15 வது வரை இனி வளர வேண்டும் என்று பொருள்படும். இது தவறான கருத்து, நித்யைகளாக - அழிவற்றவர்களாக எப்போதும் திதிகள் இருக்கிறார்கள், 16வது நித்யையான தேவி எப்படி அழிவற்றவளோ அப்படி மற்ற 15 திதிகளும் அழிவற்றவை. 16 கலைகள் கொண்ட சந்திரன் எப்போதும் பூர்ணன், நித்யனும் கூட, ஆனால் நம் கண்களுக்குக் குறைவுள்ளவனாகவும் அழிந்துவிடுபவனாகவும் தோன்றுவது ஆவரணத்தால் - மறைப்பால், கலை என்று சந்திரனைப் பிரிந்துப் பார்ப்பதே தவறு. சந்திரன் எப்போதும் பூர்ணன். அகண்டமான பொருளைக் கண்டமாக - துண்டு துண்டாகப் பார்ப்பது நமது அஞ்ஞானத்தால் என்பதைக் காட்டவே திதிகளை நித்யைகளாக்கித் தன்னையும் ஷோடசீயாக ஆக்கிக்கொண்டவள் தேவி.(391)

### 12. ஸ்ரீகண்ட - அர்த்த - சரீரிணீ, பரமசிவனைப் பாதி உடலாகக் கொண்டவள்.

12-1 ஸ்ரீ: என்ற சொல்லுக்கு உள்ள பல பொருள்களில் அழகுள்ளது, விஷம் என்ற இரண்டும் உட்பட்டவை. விஷத்தைக் கழுத்தில் கொண்டமையால் சிவனின் கழுத்து அழகாகத் தோன்றுகிறது. விஷமும் சிவனிடத்தில் அழகாகத் தோன்றுகிறது. (சிலரிடம் அழகே விஷமாகத் தோன்றக்கூடும்). உலக நன்மைக்காக விஷத்தைப் பருகியதால் சிவனின் கருணை விஷத்தைக் கூட அழகிய பொருளாக்கிவிட்டது. விஷத்தை அழகாகக் கழுத்தில் கொண்ட பரமசிவனது பாதி உடலாக இருப்பவள் அல்லது பரமசிவனைப் பாதி உடலாகக் கொண்டவள் தேவி.

12-2. அர்த்தநாரீச்வர ரூபத்தில் இடப்பகுதியாயுள்ள தேவியின் கழுத்தும் விஷத்தால் அழகானதே. விஷத்தை அருந்தியதில் அவளுக்கும் பாதிப் பங்கு உண்டு. ஸ்ரீ கண்ட விஷம் கொண்ட கழுத்துள்ள, அர்த்தசரீரிணீ - பாதி உடலைக் கொண்டவள்.

12-3. ஸ்ரீ கண்டனாகிய சிவன் தன் உடலில் தேவியாகிய இடப்பகுதி சிவப்பாகவும் தானாகிய வலப்பகுதி வெளுப்பாகவும் கொண்டவர். ஸ்ரீகண்டனைப் போல் தேவியும் வலப்பகுதி வெளுப்பாகவும் (கௌரீ) இடப்பகுதி கருப்பாகவும் (காளீ) கொண்டவள், ஸ்ரீ கண்டவத் அர்த்தசரீரம் யஸ்யா:) அப்படியும் தேவிக்கு ஒரு தோற்றம் உண்டு. (392)

**(நா. 393 - 399)**

**प्रभावती प्रभारूपा प्रसिद्धा परमेश्वरी ।**
**मूलप्रकृतिरव्यक्ता व्यक्ताव्यक्तस्वरूपिणी ॥ 86 ॥**

**ப்ரபாவதீ ப்ரபாரூபா ப்ரஸித்தா பரமேச்வரீ.**
**மூலப்ரக்ருதிரவ்யக்தா வ்யக்தாவ்யக்த ஸ்வரூபிணீ. 86**

### 13. ப்ரபாவதி - பிரபை உள்ளவள்.

13-1. பிரபை - ஒளிவட்டம், அணிமாதிபி: ஆவ்ருதாம் மயூகை: அஹமித்யேவ விபாவயே பவாநீம் என்று தியானம் செய்தோம். (4.2.10) தேவியின் உடலிலிருந்து வெளியான கிரணங்கள் அணிமாதி ஸித்திகளாகவும் மற்ற யோகினிகளாகவும் வடிவெடுத்தன. இப்படிப் பிரித்தறியுமளவில் தனித்தன்மை பெற்ற ஒளி வட்டம் கொண்டவள் தேவி. மற்றவர்களின் மேனி ஒளி, சாயலாக உடலுடன் சேர்ந்தே காணும், தேவியின் மேனி ஒளி தனித்தும் காணப்படுகிறது. (9.10.21, 16.26.1) (393)

### 14. ப்ரபா - ரூபா, பிரபைகளான அணிமா முதலியவர்களின் வடிவிலுள்ளவள்.

14-1. அணிமா முதலிய சித்திகள் அடங்கிய யோகினிகளின் கூட்டம் தேவியின் மேனி ஒளியின் கிரணங்களாயினும், தனித்த தேவி வடிவங்களாகவே தோன்றுகின்றனர். அவர்களின் வடிவையே தன் வடிவமாகக் கொண்டவள்.(394)

### 15. ப்ரஸித்தா, எல்லோராலும் நன்கு அறியப்பட்டவள்

15-1. ப்ரஸித்தா - நாம் அறிவதற்கு முன்பே நன்கு பூர்ண உருப்பெற்றவள். அதனால் எல்லோராலும் நன்கு அறியப் பெற்றவள். தேவியை அறியாதவர்கள் பலர் இருக்கிறார்களே என்ற ஐயம் எழும். நான் அவளை அறியவில்லை என்பான் ஒருவன். அந்த நான் ஆக இருப்பவளே தேவி தானே! நான் ஐ யாவரும் அறிவர். அந்த நான் ஐத் தேவியாகப் பலர் அறியார்.எல்லோராலும் உணரப்படும். நான் ஆக இருப்பதால் தேவி எப்போதும் பிரஸித்தமானவள். (395)

### 16. பரம - ஈச்வரீ. சிறந்த ஈச்வரி.

16-1. ஈச்வரத் தன்மையால் மேம்பட்டவள், ஈசுவரத் தன்மை

பெற்றவர்களுக்குள் முக்கியமானவள் பர – மா – ஈசுவரீ. பரம்பொருளின் சக்தியாகிய ஈசுவரி (21,6.2, 21.7.1) (396)

## 17. மூலப் - ப்ரக்ருதி:. ஆதிகாரணமான பிரகிருதியாய் இருப்பவள்.

17-1. ஸிருஷ்டிக் கிரமத்தை மறுபடி ஐந்து நாமங்களால் விளக்குகிறார்கள் வாக்தேவிகள், ( நா. 256-274) பிரகிருதி, பிரகிருதி - விகிருதி, விகிருதி என்று தத்துவங்கள் மூன்று நிலைகளில் உள்ளன. (17.8.1. 1 - 26) பிரகிருதி – முதற் காரணமான மூலப்பிரகிருதி. இது மற்றவற்றிற்கெல்லாம் மூலகாரணம். இதற்கும் காரணம் (பிரக்ருதி) ஒன்றுமில்லை. பிரகிருதி - விகிருதி - தான் ஒன்றிற்குப் பிரகிருதியாகவுமிருந்து கொண்டு, தான் ஒன்றின் விகிருதியாகவும் (காரியமாகவும்) இருப்பது. ஆகாசம் அஹங்காரத்திலிருந்து தோன்றியதால் விகிருதி, அதுவே வாயுவிற்குக் காரணமாதலால் பிரகிருதி, அதனால் பிரகிருதியாயும் விகிருதியாயும் உள்ளது. மஹத், அஹங்காரம், தந்மாத்திரங்கள் 5 ஆக 7ம் இந்த வகையைச் சேர்ந்தவை. காரணப் பிரபஞ்சம் இத்துடன் முடிவடைகிறது. விகிருதி – தன் மாத்திரங்களிலிருந்து எதற்கும்ட காரணமில்லை. கார்யப்பிரபஞ்சம் இவைகளிலிருந்தும் தொடங்குகிறது. விகிருதி – தன்மாத்திரங்களிலிருந்து தோன்றிய மகா பூதங்கள், இந்திரியங்கள், மனம் முதலியவை, இவை எதற்கும் காரணமாக வில்லை. கார்யப்பிரபஞ்சம் இவைகளிலிருந்தும் தொடங்குகிறது. இந்த மூன்று நிலைகளிலும் உள்ள காரண காரியப் பிரபஞ்சமான தத்துவங்களனைத்தும் தேவியே என 397-401 நாமங்கள் விளக்குகின்றன.

17-2. அவ்யக்தம், பிரகிருதி, தமஸ் என குறிப்பிடப்பெறும் முதல் தத்துவத்திற்கும் மூல காரணமான மாயையாக இருப்பவள். (17.8.1.10)ஸ்ருஷ்டிக்கும் மூலமாயிருப்பவள், இச்சா சக்தி, கிரியா சக்தி, ஞான சக்தி, குண்டலினி, பரா மாத்ருகா என்ற ஆறு சக்திகளும் இணைந்த வடிவம். (19.1.1.)

## 18. அவ்யக்தா, அவ்யக்தம் எனும் தத்துவ வடிவினள்.

18-1. அ - வ்யக்தம் வெளிப்படையாகத் தோன்றாதது. முக்குணங்களும் இருந்தாலும், அவை எதனையும் வெளிப்படையாக விளக்க முன் வராமல் அடங்கியிருக்கும் நிலை. பிரதானம், யோநி, பிரகிருதி, தமஸ் என்று இதற்கு வேறு பெயர்கள் உண்டு. (17.8.10) அவ்யக்தமெனும் தத்துவ வடிவத்தில் தோன்றுபவள். (398)

**19. வ்யக்த - அவ்யக்த ஸ்வரூபிணீ, வ்யக்தமாயும் அவ்யக்தமாயுமுள்ள வடிவமுள்ளவள்.**

19-1. அவ்யக்தத்திலிருந்து தோன்றிய மஹத் எனும் தத்துவம் அவயக்தத்தைக் காட்டிலும் வெளிப்படையாக ஓரளவு அறியக்கூடியது. எனினும் அதன் முழு உருவம் காண முடியாதபடி அதன் மஹத்துவம் - பெரியதாயிருக்கும் நிலை குறிக்கிடுகிறது. ஓர் அளவிற்கு மேற்பட்ட பெரிய உருவமுள்ளதும் கீழ்ப்பட்ட சிறிய உருவமுள்ளதும் புலப்படாது. ஆகாயமே மஹத்தாக இருப்பதால் புலப்பட்டும் முழுவதும் புலப்படவில்லை. அதற்கும் காரணமான அஹங்காரமும் மஹத் தத்துவமும் ஆகாயத்தைவிட மகத்தானவை. அதனால் வியக்தமும் அவ்யக்தமுமாயிருக்கும் நிலையிலுள்ளவை. ஆவ்யக்தம் என்று பிரிப்பதும் உண்டு அஹங்காரம் முக்குணப் பிரிவிற்கு இடமளிப்பதால் மஹத்தைவிட பொதுவாக (ஆ) அதிக அளவில் விளங்கும் நிலையிலுள்ளது. அதனால் அஹங்காரம் - ஆவயக்தம். மஹத், அஹங்காரம், இவைகளின் வடிவில் வெளிப் படையாய் தோன்றியும் தோன்றாமலும் இருப்பவள். (17.8.1,2,10) (399)

(நா. 400 - 403)

व्यापिनी विविधाकरा विद्याविद्यास्वरूपिणी ।
महाकामेशनयनकुमुदाह्लादकौमुदी ॥ 87 ॥

**வ்யாபிநீ விவிதாகாரா வித்யா(அ)வித்யாஸ்வரூபிணீ.**
**மஹாகாமேசநயநகுமுதாஹ்லாதகௌமுதீ. 87**

**20. வ்யாபிநீ. எங்கும் பரவுபவள்.**

20-1. அஹங்காரமானது முக்குணங்களின் உதவிகொண்டு பூததந்மாத்திரங்கள், ஞான-கர்மேந்திரியங்கள்,மனம், பிராணன், இந்திரிய தேவதை ஆனவற்றைப் படைத்து விராட் ஆகி ஸஹஸ்ர சீர்ஷவதநா, ஸஹஸ்ராக்ஷீ, ஸஹஸ்ரபாத் என (18.8, 18.9 18.10) உலகம் முழுவதும் வியாபித்தது. (17.8.1.10) அது தேவியின் வடிவம். (400)

**(6. ருசி கலை 401 - 500 நாமங்கள்)**

**21. விவிதாகாரா, பல பல வடிவங்களுள்ளவள்.**

21. தாவரம், ஜங்கமம், தேவர், மனிதர், பிராணி, மண், கல், புல், பூண்டு எனப் பலவித வடிவங்களைக் கொண்டவள் தேவி. (17.8.1.13) (401)

**22. வித்யா - அவித்யா - ஸ்வரூபிணீ, வித்தியை அவித்தியை வடிவானவள்.**

22-1. ஆத்மாவை அறிய உதவுவது வித்தியை. ஆத்ம ஞானத்திற்கு ஸாதனமானவைகளை அறிய உதவுவது அவித்தியை. (இங்குள்ள அவித்தியை என்ற சொல் அஜ்ஞானம் என்று பொருள்படும் அறியாமையைக் குறிப்பிடாது). அவித்தியையை அபர வித்தியை என்றும் கூறுவர். வித்தியை - ஆத்ம ஞானமும், ஆத்ம ஞானத்திற்கு உதவும் உபநிடதம் முதலிய ஆத்மாவைப் போதிக்கும் நூல்களும். அவித்தியை - கர்ம மார்க்கத்தைப் போதிக்கும் கர்ம காண்டம் முதலியன. கர்ம காண்டத்தில் கூறப்பட்டுள்ள கருமங்களையும் ஈசுவரனுக்கு அர்ப்பணம் செய்யும் கருத்துடன் செய்து வர அதுவும் ஞானத்திற்குத் தேவையான வைராக்கியத்தையும் மனத் தூய்மையையும் அளிப்பதால் வித்தியைக்கு உதவுவதால் அவித்தியை என்பர். அவித்தியையால் ஈவரார்ப்பண நோக்குடன் செய்த கருமங்கள் கரும பந்தத்தை ஏற்படுத்தாமல் சித்த சுத்தியைத் தந்து ஆத்ம ஞானம் பெறத் தகுதியை ஏற்படுத்துகின்றன. அந்த வித்தியையாகவும், அவித்தியையாகவும் இருப்பவள் தேவி.

22-2. வித்தியை - உண்மை அறிவு, அவித்தியை - வித்தியையைப் போன்றது - பிரமை ஏற்படுத்தும் அறிவு. வித்தியை விடுதலை அளிக்கும் அவித்தியைப் பந்தத்தைத் தரும். தகுதிக்கு ஏற்ப வித்தியையும் அவித்தியையும் ஆக இருப்பவள் தேவி. (402)

**23. மஹா - காமேச - நயந - குமுத - ஆஹ்லாத - கௌமுதீ. பெருமைமிக்க காமேசனின் கண்களாகிற அல்லியை மலரச் செய்யும் நிலவு போன்றவள்.**

23-1. காமம் - பரம்பொருளின் ஆசை - இச்சா சக்தி, (நமது ஆசைகள் சிறு எதிர்பார்ப்பவைகள். இவை நிறைவேறுவது நிச்சயமில்லை.) அது மஹா காமம், பெருமைமிக்க பெருங் காமம். அதற்கு ஈசன் பரமேசுவரன். அவரது கண்கள் அல்லிப்பூ போல் அழகாகத் தோன்றுகின்றன. தான் மலர்ச்சி அடைவதற்கு நிலவு போன்ற தேவியை அவை எதிர்பார்க்கின்றன. கௌமுதீ - நிலவு. கார்த்திகை மாதத்திய மிகத் தெளிந்த பூர்ணிமை நிலவிற்கும் கௌமுதீ எனப்பெயர் தேவியைக்

கண்டதும் மிகவும் மகிழ்ச்சியுற்ற காமேச்வரரின் இரு கண்களும் அன்பால் மலர்ந்து அழகாக விளங்குகின்றன. (403)

**(நா. 404 - 408)**

भक्तहार्दतमोभेदभानुमद्भानुसन्ततिः ।
शिवदूती शिवाराध्या शिवमूर्तिः शिवङ्करी ॥ 88 ॥

**பக்தஹார்த்ததமோபேதபாநுமத்பாநுஸந்ததி:**
**சிவதூதீ சிவாராத்த்யா சிவமூர்த்தி: சிவங்கரீ. 88**

**24. பக்த - ஹார்த்த - தமோ - பேத - பாநுமத் - பாநு - ஸந்ததி: பக்தர்களின் இதயத்திலுள்ள இருளைப் போக்குவதில் ஒளிக்கதிர் அடர்ந்த சூரியர்களின் வரிசையாக இருப்பவள்.**

24-1-குளிர்ந்த நிலவொளியாகித் தாபத்தை அகற்றுகிற தேவி, ஒளிமிக்க சூர்யனின் கிரணங்களாகி அக இருளையும் போக்குகிறாள்.(ஹார்த்தம் - இதயத்திற்குப் பிடித்தது என்ற பொருளுமுண்டு). பக்தர்களின் இதயத்திலுள்ள இருட்டு அவர்களுக்கு உவப்பானதாயிருக்கக்கூடும். அதனை அவர்களே போக்கிக்கொள்ள விரும்பாவிடினும், இவள் போக்கிவிடுவாள். நாம் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் கதிரவன் இருட்டைப் போக்கும் பாங்குடையவன். இருள் தமோகுணத்தின் மறைப்பால் உண்டாவது. தெய்வத் தன்மை உள்ளத்தில் புலப்படாதபடி தமோகுணம் தடுக்கிறது. தமோகுணமே இருட்டு. தமஸ் நம்மை உணர்வற்றுப் போகும்படி செய்யும். அந்த நிலையில் நிலவாக இருக்கும் தேவியைவிட (நா.403) சூடு தந்து உணர்வூட்டும் சூரிய ஒளியாயிருக்கும் தேவி அதிகமாக உதவுகிறாள். அகத்தில் இருட்டைப் போக்க ஒரு சூரியன் போதாதென, சூர்யர்களின் வரிசையாக இருப்பவள் தேவி. (404)

**25. சிவதூதீ. சிவனைத் தூதனாகக் கொண்டவள்.**

25-1. தேவீ மஹாத்ம்யத்திலுள்ள வரலாறு, சும்பன்- ஆணவத்தால் நன்கு பிரகாசிப்பவன். அசடல்ல.நிசும்பன் சும்பனை விட வல்லவன். இருவரும் அசுராகள். சும்பனுடனும் நிசும்பனுடனும் போர் புரிவதற்காகத் கௌசிகீ தேவி (பார்வதியின் உடலிலிருந்து வெளி வந்தவள்) ஸிம்ஹத்தை வாஹனமாக்கிப் புறப்பட்டாள். சண்டன் முண்டன் என்ற இரு அசுர தளபதிகள் போரிட வந்தனர். கௌசிகீயின் கோபமுற்றுச் சிவந்த

முகத்திலிருந்து சண்டிகை தோன்றி (காளீ–சாமுண்டா என இவளுக்குப் பெயரும் உண்டு). சண்ட முண்டர்களை அழித்தாள். (நா.756) சண்டிகையின் சரீரத்தில் இருந்து கிளம்பியவள் சிவதூதீ எனும் சக்தி. நூறு நரிகள் ஊளை இடுவது போன்று கோரமான பேரொலி எழுப்ப வல்லவள் அவள். இவள் யுத்தத்தில் கலந்துகொள்ள வந்த சிவபெருமானைத் தூதனாக்கிச் சும்பனிடம் அனுப்பி அவர் மூலம் சும்பனைத் தேவியிடம் சரணடையும்படிச் செய்தி அனுப்பினாள். அப்படிச் சிவபெருமானையே தூதனாக்கிய பெருமையைத் தன் பெயரால் விளக்கிக் கொண்டிருக்கும் சிவதூதியும் தேவியே.

25–2. தன்னைப் பற்றி அறிவூட்டுவதற்காகச் சிவபெருமானை முன்னறிவிப்பாளராக அனுப்புவாள் தேவி. சிவன் ஆசாரியனாகத் திகழ்ந்து தேவீ தத்துவத்தை அடியாருக்கு உபதேசிப்பார். (405)

### 26. சிவ - ஆராத்த்யா. சிவனால் வழிபடப் பெற்றவள்.

26–1. தேவியின் பன்னிரு உபாஸகர்களுள் சிவன் ஒருவர்.(16.40.2) அவரால் உபாசிக்கப்பட்ட நான்கு கூடங்களுள்ள வித்யையாயிருப்பவள் தேவி. இவளை வழிபட்டதால் சிவன் எல்லா வித்தியைகளுக்கும் சித்திகளுக்கும் ஈசனானான் என பிரும்மாண்ட புராணம் கூறும். அதஸ் த்வாமாராத்த்யாம் ஹரிஹர விரிஞ்சாதிபிரபி (ஸௌந்தர்யலஹரீ 1) சிவேந– ஆராத்த்யா, சிவனால் வழிபடப்பட்டவள் தேவி.

26–2. தேவியும் சிவனை வழிபடுவதுண்டு. மாயூரம், மயிலை, ஜம்புகேசுவரம் முதலிய க்ஷேத்திரங்களில் தேவி வழிபடுகிறாள். அப்படி (சிவ: ஆராத்த்ய: யஸ்ய: ஸா) சிவனை ஆராதிக்கத்தக்கவராகக் கொண்டவள். சிவனை ஆராதிப்பவள் தேவி. (406)

### 27. சிவ - மூர்த்தி: மங்களமான உருவமுள்ளவள்.

27–1. மங்களத் தன்மையையே தன் வடிவமாகக் கொண்டவள். மங்களத் தன்மையே வடிவான சிவபெருமானின் உடலாகி நிற்பவள் தேவி. சரீரம் த்வம் சம்போ: (ஸௌந்தர்ய லஹரி 34) பரப்பிரும்மமே மங்களம். ப்ருஹ்ம தந் மங்களம் பரம். அதனை உருவகப்படுத்துபவள் தேவி. ஆத்ம ஸ்வரூபமே சிவம். அதுவே மங்களம். ஆத்ம ஸ்வரூபமாக ஆவதே மோக்ஷம் – விடுதலை. விடுதலையே சிவம். மோக்ஷமாக விளங்குபவள்.

(407)

### 28. சிவங்கரீ. மங்களத்தை செய்பவள்.

28-1. மங்களத்தைச் செய்பவள் ( சிவம் கரோதி ), மங்களத்தைக் கையில் கொண்டவள் (சிவம் கரே யஸ்யா:) தூய்மையற்றதும் அறிவற்றதும் அழுக்கே வடிவமாகி நிற்பதுமான உடலை - அமங்களமான பொருளை நான் ஆகிய ஆத்மஸ்வரூபத்தை விளக்கி அவித்யை எனும் பாசத்தை அறுத்து விடுவித்து அவனைத் துய்மைமிக்கதும் ஞானமே வடிவானதும் மங்களமுமான ஆத்ம ஸ்வரூபமாக - சிவனாக மாற்றுபவள் (அசிவம் சிவம் கரோதி). ஜீவம் ஏநம் சிவம் வா கரோஷி - சங்கரான் தேவீ புஜங்கம். சு-4. (408)

(நா. 409- 415)

शिवप्रिया शिवपरा शिष्टेष्टा शिष्टपूजिता ।
अप्रमेया स्वप्रकाशा मनोवाचामगोचरा ॥ 89 ॥

**சிவப்ரியா சிவபரா சிஷ்டேஷ்டா சிஷ்டபூஜிதா**
**அப்ரமேயா ஸ்வப்ரகாசா மநோவாசாம் அகோசரா. 89.**

**29. சிவப்ரியா. சிவனுக்கு பிரியமானவள்.**

29-1. தேவியிடத்தில் அதிகப் பிரியம் கொண்டவர் சிவபெருமான். (சிவஸ்ய ப்ரியா) தேவி சிவனிடத்தில் அதிகப் பிரியம் கொண்டவள். (சிவ ப்ரியோ யஸ்யா:) சிவமான மங்களப் பொருள்களில் அதிக நாட்டம் கொண்டவள். (சிவம் ப்ரியம் யஸ்யா:) (409)

**30. சிவபரா. சிவனைப் பரனாகக் கொண்டவள்.**

30-1. பரன்-மேம்பட்டவள். சிவன் ஒருவரையே தனக்கு மேம்பட்டவராகக் கொண்டவள் தேவி. (சிவ: ஏவ பர: யஸ்யா:). சிவனுக்கு மேம்பட்டவளாக இருப்பதும் உண்டு. சிவஸ்ய பரா. சிவ: சக்த்யா யுக்தோ யதி பவதி சக்த: ப்ரபவிதும். தேவி துணை புரிந்தால் தான் சிவன் பிரபுவாக ஆக முடியும் (ஸௌந்தர்யலஹரி.1) சிவமாகிய பரம்பொருளை விளக்க வந்தவள். (410)

**31. சிஷ்ட - இஷ்டா. சிஷ்டர்களை விரும்புபவள்.**

31-1. குரு முகமாக நல்வழி போதிக்கப்பெற்றவர்களும், குருவால் பண்படுத்தப்பெற்றவர்களும் தெய்விக வாழ்க்கை முறையின் கட்டுப்பாடுகளுக்கு அடங்கி நடப்பவர்களுமான சிஷ்டர்களால் வழிபடப் பெறுபவள். சிஷ்டர்களால் விரும்பப் பெறுபவள். சிஷ்டர்கள் தேவியின்

அருளையே நாடுவர். வேதத்தில் கூறப்பட்டவை. சிஷ்டம்- வேள்விகள். அவைகளை விரும்புபவள். (சிஷ்டாநி இஷ்டாநி யஸ்யா:) பரம்பரையாக வந்ததும் வேதத்தில் கூறப்பட்டதுமான ஆசாரங்களில் ஈடுபாடுள்ளவர்கள் சிஷ்டர்கள். அவர்கள்தான் தேவிக்கு இஷ்டர்கள் - நெருங்கிய தொடர்புள்ளவர்கள். (சிஷ்டா: இஷ்டா: யஸ்யா: ஸா). (411)

## 32. சிஷ்ட பூஜிதா. சிஷ்டர்களால் வழிபடப்பெற்றவள்.

32-1. இஷ்டர்களான சிஷ்டர்களால் வழிபடப் பெற்றவள். (சிஷ்டை: பூஜிதா) அவளது அருள் பெற சிஷ்டர்கள் எங்கும் நன்கு மதிக்கப் பெறுவர். (சிஷ்டா: பூஜிதா: யஸ்யா:)

## 33. அப்ரமேயா - அளவிட முடியாதவள்.

33-1.. பிரத்யக்ஷம், அனுமானம், சப்தம் என்ற மூன்று அளவு கோல்கள் - பிரமாணங்கள். அவற்றால் எல்லாவற்றையும் அறிகிறோம். தேவியை நேரில் உணர முடியாது. அதனால் பிரத்யக்ஷத்தால் தேவியை அளவிட முடியாது. முன் அடைந்த அனுபவத்தைக் கொண்டுதான் அனுமானம் துணை புரியும். தேவியிடம் அத்தகைய அனுபவம் பெற வாய்ப்பில்லை. அறிய வேண்டியதை அறிந்த ஆப்தர்களிடமிருந்து வந்ததானால் சொல் துணை புரியும். தேவியை முழுவதும் அறிந்த ஆப்தர்கள் இல்லை. வேதம் மிகவும் நம்பிக்கையான சொல் படைத்தது- ஆப்ததமம். மனத்தாலும் சொல்லாலும் அறிய முடியாத தத்துவம் என அந்த வேதமும் கூறுகிறது. தேவியை நாமறிவதற்குப் பிரமாணங்கள் ஒன்றும் பயன்படவில்லை. அவள் அப்ரமேயா- பிரமாணங்களால் அளவிட முடியாதவள். (413)

## 34. ஸ்வ ப்ரகாசா - ஒளியைத் தன் தனித்தன்மையாகக் கொண்டவள்.

34-1. தேவி தன்னைத் தானே விளக்கிக்கொள்ளும் பேரொளியா யிருக்கிறாள். மற்றொரு ஒளியால் விளக்கப் பெறாதவள் ஆவள். மற்ற எல்லா ஒளிகளும் அவளிடமிருந்தே ஒளி பெறுகின்றன. அவளது தனிப்பட்ட தன்மையே ஒளிதான். பேரொளியைச் சிற்றொளி விளக்காது. சூரியனைப் பார்க்க மற்றொரு ஒளி பயன்படாது. தேவியாகிற பேரொளியை சூரியன் விளக்குவதும் அவ்விதமே பயன்படாது. ந தத்ர ஸூர்யோ பாதி ந சந்த்ர தாரகம் நேமா வித்யுதோ பாந்தி குதோ (அ) யமகநி:. தமேவ பாந்தமனு பாதி ஸர்வம் தஸ்ய பாஸா ஸர்வமிதம் விபாதி. அவளது எதிரில் பாதி ஸர்வம் தஸ்ய பாஸா ஸர்வமிதம் விபாதி. அவளது எதிரில் சூரியன் இருப்பதே தெரியவில்லை. சந்திரன், நக்ஷத்திரங்கள், மின்னல் போன்ற

பேரொளி மண்டலங்களும் விளங்கவில்லை எனில் அக்கினி எங்கே தெரியப்போகிறது? தன்னையே விளக்கிக்கொள்ள முடியாத இவை தனக்குக் காரணமான பரம்பொருளை எப்படி விளக்கப் போகின்றன? பரம்பொருள் விளங்குவதாலேயே இவைகளும் தாம் இருப்பதைக் காட்டிக்கொள்கின்றன. பரம்பொருளின் ஒளியிலேயே இந்த உலகனைத்தும் விளக்கப் பெறுகின்றன. அது விளக்கப்பெற வேண்டுமாயின் ஒளி வடிவமான அதனைக்கொண்டே அதனை அறிய வேண்டும். ஸ்வயம் ஜ்யோதி:-ஸ்வயம் ப்ரகாசமாக இருக்கும் பரம்பொருள். (414)

**35. மநோ - வாசாம் - அகோசரா. மனத்திற்கும் வாக்கிற்கும் எட்டாதவள்.**

35-1. கோசரம்- வழியில் வருவது - புலப்படுவது. மனம் தன் வழியில் வருவதை அறிகிறது. வாக்குத் தன் வழியில் வருவதைப் பேசுகிறது. இப்படியே கண் முதலிய பொறிகளும் அதனதன் வழியில் வருபவைகளை உணர்கின்றன. தேவி, மனம் வாக்கு முதலியவற்றின் வழியில் இருப்பவள் அல்ல. இவைகளுக்குக் கோசரமாகக் கூடிய உருவம் முதலியதொன்றும் தேவியிடமில்லை. அதனால் மநோவாசாம் அகோசரா. அளவிற்குட்பட்டதே அப்படிக் கோசரமாகும். அப்படித் தேவியிடம் உள்ளது அனைத்தும் அநந்தம்- அளவிற்குட்படாதது. (415)

(நா.416-423)

चिच्छक्तिश्चेतनारूपा जडशक्तिर्जडात्मिका ।
गायत्री व्याहृतिः सन्ध्या द्विजबृन्दनिषेविता ॥ 90 ॥

**சிச்சக்திச் சேதநாரூபா ஜடசக்திர் ஜடாத்மிகா.**
**காயத்ரீ வ்யாருஹ்ருதி: ஸந்த்யா த்விஜப்ருந்தநிஷேவிதா.90**

**36. சித் - சக்தி. ஞான சக்தி வடிவினள்.**

36-1. ஞானமே வடிவான தேவியிடம் சில சமயம் ஞானம் சக்தியாகத் தனித்துப் புலப்படும். அந்த ஞான சக்தியாக இருப்பவள் தேவி. இதுகாறும் அறியாத பொருளை முன்னமே அறிந்த வேறொரு பொருளை அதற்கு உவமையாக்கி விளக்கப் பெறுகிறோம். யாஸ்கர் என்ற வேத பாஷை இலக்கணம் வகுத்த ரிஷியும் பாணினி என்ற லௌகிக பாஷை இலக்கணம் கூறிய ரிஷியும் அப்படி உபமானம் கூறுவதை சித் சக்தி என்பர். அந்த விளக்கப்படி தேவி உவமையால் ஏற்படும் அறிவாக விளங்குகிறாள்.

அறியாமையைப் போக்கும் உள்ளறிவே சித் சக்தி எனத் தேவீ பாகவதம் கூறும். அது இல்லாவிடில் மனிதன் சவமே. அந்த சித் சக்தி வடிவில் உள்ளவள் தேவி. (17.3.2) (416)

**37. சேதநா ரூபா. உள்ளறிவால் அறியத்தக்கவள்.**

37-1. பரம்பொருள் இருப்பதை அறியும் சக்தி அவளே. எல்லோர் உள்ளத்திலும் உள்ளறிவாக சேதநா ஆக இருக்கிறாள். (சேதநா-சைதன்யம், உள்ளறிவு. ஆதனைப் பெற்றவன் சேதநன் - உள்ளறிவு உள்ளவன்) அந்தச் சேதனா சக்தியால்தான் கண், காது, மனம் முதலியவை காட்டுவதை அறிகிறோம். அந்தச் சேதனா சக்தியை எதனால் அறிவது? அதன் இயக்கத்தைக் கொண்டுதான் அதனை அறிய முடியும். அதனை வேறொன்றின் உதவியால் அறிய முடியாது. (சேதநயா ரூப்யதே - சேதநாரூபத்வேந) உள்ளறிவின் இயக்கத்தைக்கொண்டு உள்ளறிவு ஒன்றிருப்பதை அறிகிறோம். (சேதநா சக்தியின் ஒளி, கண், மனம் முதலியவைகளில் பாயாததால்) கண்ணிருந்தும் பாக்க முடியாமல், மனமிருந்தும் நினைக்க முடியாமல் ஆகிறது. இந்த நிலையைப் பிறகு கண், மனம், முதலியவற்றில் சேதனா சக்தி பாய்ந்ததனால் ஏற்படும் அறிவைக்கொண்டு ஊகிக்கிறோம். (417)

**38. ஜட - சக்தி: ஜடப்பொருளினுள் துலங்கும் சக்தியாய் இருப்பவள்.**

38-1. நெருப்பில் சூடு, நீரில் தன்மை, மண்ணில் நெருக்கமும் கனமும் இவ்வாறு ஒவ்வொரு ஜடப்பொருளின் தனித் தன்மையையும் விளக்கும் சக்தியாயிருப்பவள். ஒரே சக்தி பல பொருள்களில் பலவிதமான தனித் தன்மையைக் காட்டுகிறது. பிரகிருதியை பரா அபரா எனக் கீதை இரு விதமாக விளக்கும் (கீதை 7.4) சேதனாரூபா பராவாகும். ஜட சக்தி அபரா. (418)

**39. ஜட ஆத்மிகா. ஜடமான பிரபஞ்சத்தைத் தன் வடிவமாகக் கொண்டவள்.**

39-1. ஆத்மா - சரீரம். மாயை ஸ்துலப் பொருளாக - உலகமாகத் தோன்றிய நிலை ஜடம். அந்த ஜடத்தைத் தன் வடிவமாகக் கொண்டவள். (419)

**40. காயத்ரீ. காயத்திரியாயிருப்பவள்.**

40-1. வேதத்தின் தாயென மதிக்கப்படும் காயத்திரீ எனும் மந்திரம் 24 அக்ஷரங்கள் கொண்டது. 24 அக்ஷரங்களுள்ள யாப்பும் காயத்தி எனப்படும். அந்த மந்திரத்தைப் பாடுபவனை அது காப்பாற்றுவதாலும் (காயந்தம் த்ராயதே) மனத்தை ஆனந்த நிலைக்கு உள்ளாக்கி மெய்மறந்து பாடவைத்துக் காப்பாற்றுவதாலும் காயத்ரீ எனப்படுகிறது. காயதி ச த்ராயதே ச (சாந்தோக்யம்).

40-2. பத்ம புராணத்தில் ஒரு வரலாறு. பிரம்மா ஒரு வேள்வியினை தொடங்க எண்ணித் தன் பத்தினியான ஸரஸ்வதியை அதன் தொடக்கத்தில் தன்னுடனிருக்கப் பணித்தார். ஸரஸ்வதி மற்றவர் வருகையை எதிர்பார்த்துச் சற்றுத் தாமதித்தாள். பிரும்மா தாமத்தைப் பொறுக்கமாட்டாதவராக கோபர் குலத்தில் பிறந்த தெய்வ சக்தி நிரம்பிய காயத்திரி எனும் பெண்ணை அழைத்து வந்து மணந்து அவளது சகாயத்துடன் வேள்வியை ஆரம்பித்தார். அந்த காயத்திரி வேத மாதாவான காயத்திரியின் அம்சம் ஆவாள். நாக்கை அடக்கியவர்கள், வேதத்தைக் காப்பவர்கள் கோபர்கள். (கோ - வேதம், நாக்கு). அவர்கள் குலத்தில் வந்தவள் காயத்திரி. அந்த காயத்திரியாக இருப்பவளும் தேவியே. (420)

### 41. வ்யாஹ்ருதி. வியாஹ்ருதியாயிருப்பவள்.

41-1. வ்யாஹ்ருதி - உச்சரிப்பது. உலகைப் படைக்கு முன் மூன்று வேதங்களிலிருந்தும் அததன் முதல் எழுத்தான அ, உ, ம், என்ற மூன்றைச் சேர்த்துப் பிரணவத்தை பிரும்மா உச்சரித்தார். மூன்று உலகைப் படைக்க எண்ணி இதைப் படைக்கிறேன் என ஸங்கல்பத்திற்காக பூ: புவ: ஸுவ: என உச்சரித்தார். அதன் பின் மூன்று உலகங்களையும் படைத்தார். முதலில் சொன்ன சொற்களானதால் அவை நிலைத்து நிற்கின்றன. மூவுலகங்கள் விரிவடைந்து பூ:, புவ:, ஸுவ:, மஹ:, ஜன:, தப:, ஸத்யம் என்ற சொற்களாக உச்சரிக்கப்பட்ட பின் ஏழு உலகங்களாக விரிந்தன. அதனால் பிரணவத்தையும் பிரணவத்துடன் கூடிய பூ:, புவ:, ஸுவ: என்ற மூன்றையும் பிரணவத்துடன் கூடிய பூ: - புவ:, ஸுவ:, மஹ:, ஜந:, தப:, ஸத்யம் என்ற ஏழையும் வியாஹ்ருதி எனக் கூறுவர். அந்த வியாஹ்ருதியாயிருப்பவள் தேவி. (421)

### 42. ஸந்த்யா. ஸந்தியா தேவியாயிருப்பவள்.

42-1. ஸந்தெள பவா ஸந்தியா - பகலும் இரவும் கூடும் நேரம் ஸந்தி. காலையிலும் மாலையிலும் இந்த ஸந்தி அமைகிறது. அந்த ஸந்தி

வேளையில் தோன்றுபவள் ஸந்தியா தேவி. ஸூர்யன் மூலம் வெளியாகிய பிரும்ம சக்தி ஸந்தியா. உலகைத் தோற்றுவிப்பது, காப்பது, மறைப்பது என்ற பிரும்ம சக்தியின் ஓரம்சம் காலை ஸந்தியிலும் மாலை ஸந்தியிலும் வெளியாகிறது. ஸந்தி வேளையில் வெளிப்படுவதால் ஸந்த்யா.

42-2. ஸம்யக் த்யாயதே - நன்கு தியானிக்கப்படுவதால் ஸந்தியா. பிரும்மத்தின் தோற்றத்தை ஒளி வடிவில் உணர்ந்து அந்த ஒளியே தன்னுள் விளங்கும் நான் என தியானிப்பதுதான் ஸந்தியா வந்தனம். அஸௌ ஆதித்யோ பிரம்ஹ, பிரம்ஹ ஏவ அஹம் அஸ்மி - அதோ தெரியும் ஆதித்யனே பிரும்மம், அந்தப் பிரும்மமே நான் என தியானிக்கப் பெறுவது ஸந்தியா எனும் பிரும்ம சக்தி.

42-3. பிரும்மா பரம்பொருளைத் தியானித்திருக்கும்போது அவரது தியானத்தில் ஈடுபட்ட மனத்திலிருந்தும் தோன்றிய பெண் ஸந்தியா எனும் தேவி. இவளே அருந்ததியாகவும் பின்னர் தோன்றினாள் என காளிகா புராணம் கூறும். ஓராண்டு நிரம்பிய கன்னியையும் ஸந்தியை என்பர். இவர்கள் வடிவிலுள்ளவள். (422)

**43. த்விஜ - ப்ருந்த - நிஷேவிதா. இரு பிறப்பாளர் கூட்டத்தால் சூழப்பட்டவள்.**

43-1. தாயிடமிருந்து ஒரு பிறப்பு. பின்னர் மந்திரத்தைத் தாங்கும் சக்தி பெறுவதற்காக உபனயனம் என்ற சடங்கால் பெற்ற மறுபிறவி என இரு பிறப்புள்ளவாகள் த்விஜர்கள். இவர்களது கூட்டத்தால் ஒரே சமயத்தில் வழிபடப் பெறுகிற ஸந்தியா தேவியாக விளங்குபவள் தேவி.

43-2. வியாகிருதி:, ஸந்த்யா, த்விஜப்ருந்த நிஷேவிதா என்ற மூன்று நாமங்களும் விழிப்பு, கனவு, துக்கம் என்ற மூன்று நிலைகளைக் குறிக்கும். வியாஹ்ருதி என்பது பேச்சு. அது விழிப்பில் பொறிகள் இயங்குவதைக் குறிக்கும். ஸந்த்யா - இரு நிலைகளின் சந்தியில் தோன்றுவதைக் குறிக்கும். விழிப்பும் தூக்கமும் கனவில் சந்தித்து இரண்டின் அம்சமும் மறைந்தும் வெளியாகியும் காண்கின்றனவாதலால் ஸந்த்யா கனவைக் குறிக்கும். த்விஜப்ருந்த நிஷேவிதா - த்விஜ - இரு பிறப்புள்ளவர்கள் முதலில் முட்டையாகவும் பிறகு முட்டையிலிருந்து குஞ்சாகவும் வெளியாகும் பட்சி இனத்தைத் துவிஜர்கள் என்பர். அத்தகைய பட்சிக் கூட்டம் இரவில் ஓய்விடத்தைச் சென்றடைவதுபோல் ஜீவர்களும் தன்

சுய நிலையைச் சென்றடைவதான தூக்கத்தைக் குறிக்கும். அந்த மூன்று நிலைகளிலும் ஜீவர்களால் தன் ஆசிரயமாக - தான் சாரும் பொருளாக உணரப்பெறும் ஆத்ம ஸ்வரூபமாயிருப்பவள். (423)

(நா.424-431)

तत्त्वासना तत् त्वं अयी पञ्चकोशान्तरस्थिता ।
निस्सीममहिमा नित्ययौवना मदशालिनी ॥ 91 ॥

**44.தத்துவாஸநா தத்த்வம் அயீ**
**பஞ்சகோசாந்தரஸ்த்திதா**
**நிஸ்ஸீமமஹிமா நித்யயௌவநா மதசாலிநீ. 91**

**44. தத்துவ - ஆஸநா. தத்துவங்களை ஆஸனமாகக் கொண்டவள்**

44-1. தத்துவங்கள் 36. தன்மாத்திரங்கள். மஹாபூதங்கள், ஞானேந்திரியங்கள், காமேந்திரியங்கள், மனம், அஹங்காரம், புத்தி, (மஹத்) பிரகிருதி என்ற 24 ஜடதத்துவங்கள். ஜீவன், நியதி, காலம், ராகம், கலா, வித்யா, மாயா என்ற ஏழு மாயா தத்துவங்கள். சுத்த வித்யா, ஈச்வரன், ஸதாசிவன், சக்தி, சிவன் என்று ஐந்து சிவதத்துவங்கள் ஆக (16.5.1.4) 36 தத்தவங்கள். பூமி முதல் மாயை வரை ஆத்மதத்துவம் (31) சுத்த வித்யை ஈச்வரன் ஸதாசிவன் வித்யாதத்துவம் (3) சக்தி சிவன் சிவ தத்துவம் (2) என்ற முறையிலும் கணக்கிடுவர். பிரகிருதி ஈறாக உள்ள 24-ம் ஜீவனும் சேர்ந்து 25 தத்துவங்கள் என சில சாஸ்திரங்கள் கூறும். இந்த தத்துவங்களைத் தனது இருக்கையாகக் கொண்ட பரம்பொருள் தத்த்வாஸநா. தத்துவங்களைத் தன்னிடமிருந்து வெளிப்படும்படி (தத்வாநி அஸ்யத) செய்பவளானதாலும் தத்த்வாஸநா. (424)

**45. தத் - அது ஆக இருப்பவள்.**

45-1. தத் தின் தன்மைகள் தத்துவங்கள் அந்த தத் ஆக இருப்பவள் தேவி. புத்தியால் மட்டும் உணரக் கூடியதும் மனத்தாலும், பொறிகளாலும் காண முடியாததும் அவற்றிற்கப்பாற்பட்டதுமான ஒன்றை அது என்று குறிப்பிடுவோம். அது என்று ஒன்று இருக்கிறது. அது எங்கு எப்படி இருக்கிறது என்பது புரியவில்லை. உள்ளுணர்வால் மட்டும் அறியக் கூடியது. அது. தத் ஆகும். அது வாக இருப்பவள். அவள். தத்த்வமஸி என்ற

மகா வாக்கியத்தில. தத் என்று குறிப்பிடப்பட்டவளும் அதன் லக்ஷ்யப் பொருளும் அவள். (18.89.12) (425)

**46. த்வம். நீ ஆக இருப்பவள்.**

46-1. ஜீவன் முதலிய எல்லாப் பிரபஞ்சமும் அந்த தத் ஐக் காட்டிலும் வேறுபட்டதாக அஜ்ஞான நிலையில் உணரப்பட்டவை. அவை நீ என இங்கு குறிப்பிடப்படுகின்றன. தான் தனிப்பட்டதென உணரும் பிரபஞ்சமே!. நீ அதிலிருந்து வேறுபட்டதல்ல என்று தத்த்வம் அஸி என்ற மகா வாக்கியம் உணர்த்துகிறது. அந்த நீ யாக இருப்பவளும் அவளே. (18-89-1) (426)

**47. அயீ. அன்புடன் அழைக்கப்படுபவள்.**

47-1. தாய் சகோதரி போன்ற அன்புமிக்க பெரியவர்களை அன்புடனும் நெருக்கத்துடனும் இனிதாகவும் விளிக்கப் பயன்படும் சொல் அயி! அயி கிரிநந்திநி என்ற மஹிஷாஸுரமர்த்தினீ ஸ்தோத்திரம் தாயான தேவியை அயி என்று விளித்துத் தொடங்குகிறது. எல்லோருக்கும் அன்புக்குகந்த தாயானதால் அவள் அயீ. (தமிழ், மராட்டி முதலிய மொழிகளில் தயை அயி, ஆயாள் அயி ஆயீ என அழைக்கிறாகள்.)

47-2 . அய:- மங்களமாக நிறைவேற்றப்பட வேண்டிய விவாஹம் முதலிய நற்கருமங்கள். அவைகளின் வடிவத்தில் இருப்பவள்.

47-3. தத்தவமயீ என்ற இந்த தொடர் தத் த்வம் அயீ என்ற மூன்று நாமங்களாலானது. தத்த்வமயீ என்று மீண்டும் வரும் தொடர் ஒரே நாமம். (நா.907) (427)

**48. பஞ்ச - கோச - அந்தர - ஸத்திதா. ஐந்து கோசங்களின் உள்ளமர்ந்திருப்பவள்.**

48-1. ஜீவனைச் சுற்றி அவனது தத்துவம் புலப்பதாதபடி மறைக்கவல்ல ஐந்து கோசங்கள் - உறைகள் உண்டு. அவை (1) அந்நமய கோசம் (ஸ்தூல உடல்) (2) பிராணமய கோசம் (கிரியா சக்தி மிக்க 5 கர்மேந்தியங்களும் பிராணனுமானது); (3) மனோமயகோசம் (ஞானசக்தி மிக்க 5 ஞானேந்தியங்களும் மனமுமானது) (4) விஜ்ஞானமயகோசயம் (மஹத் எனும் புத்தியானது) (5) ஆநந்த மய கோசயம் (அஜ்ஞான மயமானது). முதல் கோசத்தை ஸ்துல தேகம் என்றும் நடு மூன்றை ஸுக்ஷ்ம தேகம் என்றும் ஐந்தாவதைக் காரண தேகம் என்றும் கூறுவர்.

இந்த ஐந்தும் கத்தியை உறை மறைத்திருப்பதுபோல் ஆத்ம தத்துவத்தை மறைத்திருக்கின்றன. அவைகளுள், அவைகளின் நடுவே ஆத்மாவாக இருப்பவள் தேவி.

48-2. ஒன்பதாவது ஆவரணத்தில் பிந்து சக்கிரத்தில் தேவி அமரும் ஸிம்ஹாஸனத்தைப் பாவனை செய்து அதன்மேலும் நாற்புறத்திலும் முறையே ஸ்ரீவித்யை, பரஞ்சோதி, பராநிஷ்கலா, அஜபா, மாத்ருகா என்ற ஐந்து கோசாம்பிகைகளை வழிபடுவர். ஆவர்களாக வழிபடப்படுபவள் தேவி. இந்த ஐந்து கோசாம்பிகைகளும் முறையே ஆனந்தமயம், விஜ்ஞானமயம், மனோமயம், பிராணமயம், அன்னமயம் என்ற ஐந்து கோசங்களின் தனித்த சக்தி வடிவங்கள். ஒவ்வொரு கோசத்தின் நடுவே அததன் தனித்த சக்தியாயுமிருப்பவள். (9-10-29) (428)

**49. நிஸ்ஸீம - மஹிமா. எல்லையற்ற பெருமையுள்ளவள்.**

49-1. ஸீமா - எல்லை. அவளது பெருமை வரையறையில் அடங்காது. (429)

**50. நித்ய யௌவநா. அழியாத யௌவனமுள்ளவள்.**

50-1. வளர்ச்சியும் தேய்வுமற்று ஒரே நிலையில் தருணியாக இருப்பவள். (18-84-1) (430)

**51. மத - சாலிநீ. ஆனந்தமதத்தால் விளங்குபவள்.**

51-1. வேறு பொருள் நாட்டமின்றி ஆனந்தமொன்றையே உணர்ந்து கொண்டிருக்கும் மனநிலை மதமாகும். அந்த மதநிலையால் நன்கு பிரகாசிப்பவள். (431)

(நா.432-435)

मदघूर्णितरक्ताक्षी मदपाटलगण्डभूः ।
चंदनद्रवदिग्धाङ्गी चांपेयकुसुमप्रिया ॥ 92 ॥

**மதகூர்ணிதரக்தாக்ஷீ மதபாடலகண்டபூ:**
**சந்தனத்ரவதிக்த்தாங்கீ சாம்பேயகுஸுமப்ரியா. 92**

**52. மத - கூர்ணித - ரக்த - அக்ஷீ. மதத்தால் சுழலும் சிவந்த கண்களுள்ளவள்.**

52-1. தேவியின் கண்கள் இயற்கையாகச் சிவந்தவை. ஆனந்த மதத்தால் மேலும் அவை சிவந்திருப்பதுடன் வேறு வெளிப்பொருள் ஒன்றிலும் நாட்டமின்றி சுழன்று கொண்டிருக்கின்றன. (432)

**53. மத - பாடல - கண்ட - பூ: மதத்தால் பாதிரிப் பூ போன்ற சிவந்த கன்னத்தடமுள்ளவள்.**

53-1 . ஆனந்த வெறியால் தேவியின் கன்னங்களும் சிவந்து பாதிரிப்பூவின் நிறத்துடன் காணப்படுகின்றன. மதம்- கஸ்தூரி, பாடலம் - செந்நிறம். கன்னத்தில் கஸ்தூரியையும் செந்நிறமுள்ள வண்ணக் கலவையும் கொண்டு மகரிகா எனும் அழகான ரேகைகள் வரையப்பட்டுள்ளன. அதனால் அழகாயிருப்பவள். (433)

**54. சந்தந - த்ரவ - திக்த - அங்கீ. மெல்லிய சந்தனப் பூச்சு பெற்ற அங்கங்களுள்ளவள்.**

54-1 . சந்தனத்தை நன்கு அரைத்து மெல்லியதாகக் கரைத்துப் பூசிக்கொண்டிருக்கிறாள். (434)

**55. சாம்பேய - குஸும - ப்ரியா. புன்னாகப்பூவில் பிரியமுள்ளவள்.**

55-1. சாம்பேயம் - சம்பகப்பூ எனச் சிலர். (435)

(நா. 436-441)

कुशला कोमलाकारा कुरुकुल्ला कुलेश्वरी ।

कुलकुण्डालया कौलमार्गतत्परसेविता ॥ 93 ॥

**குசலா கோமலாகரா குருகுல்லா குலேச்வரீ.**
**குலகுண்டாலயா கௌலமார்க்கதத்பரஸேவிதா. 93**

**56. குச - லா. திறமையுள்ளவள்.**

56-1. கெடுதலிலிருந்தும் விடுபட்டவள். (குசாத் லாதி) மிக நுண்ணிய பொருளையும் கையாளும் திறமையுள்ளவள். (குசான்லாதி) படைத்தல் முதலிய பல தொழில்களையும் திறம்படச் செய்பவள். சல:-சந்திரன் (குத்ஸித: சல: யஸ்யா:) சந்திரனை அவமதிக்கும் காந்தியுள்ளவள். (436)

### 57. கோமளா - ஆகாரா. மென்மையான வடிவமுள்ளவள்.

57-1 . தேவியின் வடிவம் மிருதுவும் அழகியதுமானது. (437)

### 58. குருகுல்லா. குருகுல்லாவானவள்.

58-1. ஸ்ரீ நகரத்தில் அஹங்காரப் பிரகாரத்தில் உள்ள விமர்சவாபியை நிர்வகிக்கும் பொறுப்புள்ளவள், குங்குமம் பூசிய உடலுள்ள குருகுல்லா தேவி. (438)

### 59. குல - ஈச்வரீ. குலத்திற்கு ஈச்வரீ.

59-1. ஒரு இனத்தைச். சார்ந்த (1) அளக்கும் கருவி (மாத்ரு) (2) அளக்கப்படுவது (மேய) (3) அளவை (மானம்) என்ற மூன்றையும் குலம் என்பர். இத்தகைய குல அறிவிற்கு -ஸாகார ஞானத்திற்குத் தலைவி தேவி. பேரறிவின் ஒளிகொண்டு இந்தச் சிற்றறிவுகள் புலப்படுவதால் பேரறிவு வடிவமாகி தேவி சிற்றறிவுகளுக்கு ஈச்வரியாகிறாள். (12-1-7) (439)

### 60. குல - குண்ட - ஆலயா. குலகுண்டத்தைத் தங்குமிடமாகக் கொண்டவள்.

60-1. மூலாதாரத்திலுள்ள பிந்துஸ்தானம் (சிவஸ்தானம்) குலகுண்டம் எனும் அகுல சக்கிரம். அகுல ஸஹஸ்ராரம் என்றும் இதனைச் சொல்வர். (12-1-4) அந்தக் குலகுண்டத்தை ஆலயமாக உறையுமிடமாகக் கொண்டவள் தேவி. ஆலயம் மறைந்து தங்கி ஓய்வுடன் தூங்குமிடம். (ஆ-ஸமந்தாத், லய: ஸுஷுப்தி:). அவாப்ய ஸ்வாம் பூமிம் புஜகநிபம் அத்யுஷ்டவலயம் ஸ்வம் ஆத்மாநம் க்ருத்வா ஸ்வபிஷி குலகுண்டே குஹரிணி குண்டலினியான தேவியே! (சிரசிலுள்ள ஸஹஸ்ராரம் வரை சென்று திரும்பி) தன்னிடமான மூலாதாரத்தை அடைந்து சிறு துவாரமுள்ள குலகுண்டத்தினுள் உடலைச் சுருட்டிப் படுத்துக்கொண்டிருக்கும் பாம்பின் வடிவில் தன்னை அமைத்துக் கொண்டு நீ தூங்குகிறாய்! (ஸௌந்தர்யலஹரீ சு.10) (440)

### 61. கௌல - மார்க்க - தத்பர - ஸேவிதா. கௌல முறையில் ஈடுபட்டவர்களால் பூஜிக்கப்பெற்றவள்.

61-1. அவரவரது வம்சபரம்பரை மூலமே அறிந்து கொள்ளக்கூடிய ரகசிய மார்க்கமானதால் அது கௌல மார்க்கம். மிகவும் நுண்ணிய

தத்துவங்களுள்ளது. வெளிப்படையாக உள்ள ஆசாரம் கர்வத்திற்கும், உபசாரப் பொருள்கள் போக உணர்ச்சிக்கும் இடமளித்துக் கீழ் தள்ளக்கூடியது. தகப்பன் பிள்ளையிடம் மட்டும் அல்லது ஆசாரியன் சீடனிடம் மட்டும் அதன் ரகசியங்களைக் கூறி அவ்வழியில் சீரிய தேர்ச்சியும் மனத் திடமும் வரும்வரை கூட இருப்பார். நிவேதனப் பொருளான மது முதலியவைகளும் கூட்டு வழிபாடும் மனிதனைக் கீழ்த்தர உணர்ச்சிகளுக்கு அடிமைப்படுத்தி வழி மாற்றிவிடக்கூடும். கத்தி முனை போன்று கூறான வழியில் செல்வது ஆபத்து. அவ்வழி சென்று சித்தி பெற்றவர்களின் கண்காணிப்பு அவசியம். (12.5)

61-2. ஸமய மார்க்கம், கௌல மாக்கம், மிச்ர மாக்கம் என மார்க்கங்கள் மூன்று, வஸிஷ்டர், சுகர், முதலிய ஐவரால் வகுக்கப்பட்ட மாக்கம் ஸமயம். (12.8.1) 64 தந்திரங்களால் வகுக்கப்பட்ட மாக்கம் கௌலம். (16.38.4) இரண்டு மார்க்கங்களும் கலந்தது மிச்ரம். சுந்திரகலா, ஜ்யோத்ஸ்நாவதீ, கலாநிதி, குலாணவம், குலேச்வரீ, புவநேச்வரீ, பார்ஹஸ்பத்யம், தூர்வாஸ மதம் எனும் எட்டு தந்திரங்களில் மிச்ரம் கூறப்பட்டுள்ளது. கௌல மாக்கத்திற்கான வழிபாட்டுமுறை, அவைகளைச் செய்யும் தகுதி முதலியவை கௌல தந்திர நூல்களில் விளக்கப்பட்டுள்ளன. அவ்வழியில் ஈடுபாடு கொண்டவாகளால் வழிபடப் பெற்றவள். (441)

(நா.442-451)

कुमार-गणनाथांबा तुष्टिः पुष्टिर्मतिर्धृतिः ।
शान्तिः स्वस्तिमती कान्तिः नन्दिनी विघ्ननाशिनी ॥ 94 ॥

**குமாரகணநாதாம்பா துஷ்டி: புஷ்டிர் மதித்த்ருதி:**
**சாந்தி: ஸ்வஸ்திமதீ காந்தி: நந்திநீ விக்க்னநாசிநீ. 94**

**62. குமார - கணநாத - அம்பா. குமாரனுக்கும் கணநாதனுக்கும் தாய்.**

62-1. என்றும் இளமையுள்ளவர் குமாரர். மன்மதனைப் பழிக்கும் அழகு படைத்தவரானதால் குமாரர். (குத்ஸிதோமாரோ யேந). கெட்டவர்களை அழிப்பவர், (குத்ஸிதான் மாரயதி) சுப்ரமண்யர். தனித்தனியாக இருந்து துன்புறுத்தும் சக்திகள் அனைத்தையும் கூட்டமாக ஓரிடத்தில் சேர்த்து அவர்களின் தலைவராக ஆகி அவர்களைத் தம் ஆணைக்குள் அடக்கியவரும் வெளியே செல்லும் இந்திரிய கணங்களை யோக சக்திக்கு உட்படுத்தித் தன்னைக் காணும்படி செய்பவருமான

கணநாதர் விநாயகப் பெருமான். அவர்கள் இருவருக்கும் தாய். (அம்பா- அம்பதே - பத்தநாதி அன்பினால் கட்டுப்படுத்துவதால் அம்பா) (நா.606, 706, 719)

62-2. கெட்ட காம எண்ணங்களின் கூட்டம் கு - மார - கண:. அவர்களின் தலைவர்களாக இருக்கும் காமம், க்ரோதம் போன்றவை களைக் கட்டுப்படுத்துபவள். (442)

### 63. துஷ்டி:. சந்தோஷ வடிவினள்.

63-1. இந்த நாமம் முதல் 7 நாமங்களில் தேவியின் கல்யாண குணங்களை வர்ணிக்கிறார்கள். அந்த குணங்களே தேவியின் வடிவம். துஷ்டி- மன நிறைவு, போதும் என்ற மனப்பான்மை, சந்தோஷம். வஸ்திரேச்வரம் எனும் க்ஷேத்திரத்தில் துஷ்டி என்ற நாமத்துடன் விளங்குபவள். (443)

### 64. புஷ்டி:. புஷ்டி வடிவினள்.

64-1. புஷ்டி:- உடல் நிறைவு - அங்கங்களும் தாதுக்களும் தேய்வின்றி நிறைவு பெற்றிருக்கும் நிலை. தேவதாரு வனம் எனும் க்ஷேத்திரத்தில் புஷ்டி எனும் நாமம் பூண்டு வசிப்பவள். (444)

### 65. மதி:. புத்தியாக இருப்பவள்.

65-1. மதி - தன் மதிப்பைக் கொள்வது. பகுத்தறிவது. உடலாலும் மனத்தாலும் பெற்ற போகத்தைத் தான் அனுபவிப்பதாக உணர்வது. இது புத்தியின் சக்தி. இந்த புத்தி வடிவினள். மதிக்கத்தக்கதை மதிப்பதும், வேதம், மங்களமான பணிகள், தெய்வம், பெரியோர்கள் முதலியவற்றில் நன்மதிப்பு கொள்வதும் மதி. அதனை வடிவமாகக் கொண்டவள். ஸ்வாஹா ஸ்வதா மதிர் மேதா என்ற சொற்றொடர் பின் வருகிறது. அங்கு ஸ்வதா அமதி: எனப் பதம் பிரியும் (நா.537). (445)

### 66. த்ருதி. தைர்ய வடிவினள்.

66-1. த்ருதி:- தாங்கும் தன்மை, மனத்தையும் உடலையும் பாதிப்பவைகளால் குலையாமல் தன்னிலையில் ஊன்றி நிற்பது. தாமறிந்த ஒன்றைப் பிடித்து நிற்பது. பிண்டாரகம் எனும் க்ஷேத்திரத்தில் த்ருதி என்ற நாமம் பூண்டு வசிப்பவள். (446)

### 67. சாந்தி:. மனவடக்கத்தை வடிவமாகக் கொண்டவள்.

67-1. மன அடக்கமும் அதனால் பெறும் மன அமைதியும் பொருள்களின் நாட்டத்திலிருந்து பொறிகள் விடுபடுதலும் சாந்தியாகும். அதனைத் தன் வடிவமாகக் கொண்டவள் தேவி. நிவ்ருத்தி, பிரதிஷ்டை, வித்யா, சாந்தி, சாந்தியாதீதா என்று ஐந்து கலைகள். இதில் சாந்தி எனும் கலை ஸதாசிவ தத்துவமாகும். இது வாயு தத்துவத்தின் கலை. சுத்த ஸ்படிக நிறமும் ஐந்து முகங்களும் கொடி, அபய முத்திரை, ஜபமாலை, தாமரை ஏந்திய நான்கு கைகளும் உபவீதமும் கொண்ட தேவி. வடிவத்தில் இந்த கலையை உருவகப்படுத்தித் தியானம் செய்வர். இக்கலையின் வழிபாட்டால் மாயாமலம் அகன்று மன அமைதி ஏற்படும். (447)

### 68. ஸ்வஸ்தி - மதீ. க்ஷேமத்தை உடையவள்.

68-1. ஸு -அஸ்தி: ஸ்வஸதி: - நல்ல நிலையில் இருப்பது, நிலைத்திருப்பது, க்ஷேமமாயிருப்பது, க்ஷேமமாயிரு என வாழ்த்துவது, புண்யம், மங்களம் எனப் பொருள்படும். இவை எல்லாவற்றுடனும் இருப்பவள். என்றும் மாறுபடாத அழியாத மங்களமான பிரும்மமாயிருப்பவள். (448)

### 69. காந்தி:. மேனி ஒளியாயிருப்பவள்.

69-1. பிறரை ஈர்க்கும் மேனி ஒளி, பரம்பொருளின் இச்சா சக்தி. காமத்தின் சக்தி, மனத்தின் நாட்டம் காந்தியாகும். இவை தேவியே.

69-2. இந்த 7 நாமங்களும் எல்லாப் பிராணிகளிடத்திலுள்ள தேவியின் அம்சத்தைக் குறிப்பிடுகின்றன. தேவீ மாஹாத்ம்யத்தில் (5.19.77) ஒவ்வொரு உயிரினத்திலும் சேதநா, புத்தி, நித்திரை, பசி, சாயல், சக்தி, வேட்கை, பொறுமை, ஜாதி, வெட்கம், அமைதி, சிரத்தை, சாந்தம், செல்வம், ஜீவனோபாயம், ஞாபக சக்தி, தயை, துஷ்டி, தாய், பிரமை முதலிய பல வடிவங்களிலுள்ள தேவியை மூன்று முறை வணங்குகிறோம் எனக் கூறப்பட்டுள்ளது. ஒவ்வெரு ஜீவனிடத்திலும் தேவி வடிவங்களில் அமைந்து உதவுவதை உணர்வதே தேவியின் அருள் பெறச் சிறந்த உபாயம். (449)

### 70. நந்திநீ. நந்தினியாக இருப்பவள்.

70-1. காமதேனுவின் பெண் நந்தினியெனும் பசு. நந்தனுக்கு யசோதைக்கும் பெண்ணாகப் பிறந்து கண்ணனுக்காக இடம் மாறிக் கம்ஸனை ஏமாற்றி, வானேறிய தேவி நந்தா எனும் விந்திய வாஸினீ. (நா.336) மனத்தைக் களிப்படையச் செய்பவள். இமயமலையில்

தோன்றும் ஏழு கங்கைகளில் நந்தினியும் ஒருவள். இவாகள் வடிவில் உள்ள தேவி. (450)

**71. விக்ந்ந - நாசிநீ இடையூறுகளைப் போக்குபவள்.**

71-1. தேவியை அடைவதற்கான ஸ்ரீவித்யா உபாஸனத்தில் இடையூறுகளாக வருபவைகளை அழிக்கவல்லவள். விக்ந நாசனர் எனப் புகழ் பெற்ற விநாயகரின் சக்தியாயிருப்பவள். (451)

(நா.452-458)

तेजोवती त्रिनयना लोलाक्षीकामरूपिणी ।
मालिनी हंसिनी माता मलयाचलवासिनी ॥ 95 ॥

**தேஷோவதீ த்நயநா லோலாகாமபிணீ.**
**மாலிநீ ம்ஸிநீ மாதா மலயாசலவாஸிநீ. 95**

**72. தேஜோவதீ. தேஜஸ் படைத்தவள்.**

72-1. தேஜ:- ஒளி பிறரை ஆட்படுத்தும் தன்மை, பிறரை எதிர்க்கும் சக்தி, பிறரால் ஏற்படும் அவமதிப்பைப் பொறுக்காத சீற்றம், வலிமை, சாரம், நெருப்பின் தன்மையான சூடு. இவை அனைத்தும் உள்ளவள். தேஜோ மண்டலங்களாகிற ஸுர்ய சந்திரர்களின் ஆதாரமாயிருப்பவள் தேவி. (452)

**73. த்ரி - நயநா. முக்கண்கள் உள்ளவள்**

73-1. சூரியன், சந்திரன், அக்கினி என்ற மூன்று தேஜோ மண்டலங்களையும் தனது மூன்று கண்களாகக் கொண்டவள். ஸ்வதா, ஸ்வாஹா, வஷட், வௌஷட், ச்ரௌஷட் என ஐந்தும் அக்கினியில் ஆஹுதி செய்யும்போது சொல்லப்படும் சொற்கள். வௌஷட்டிற்கு திரிநயநா என்ற பெயருண்டு. அந்த மந்திர வடிவினள். பிரத்யக்ஷம், அனுமானம், சப்தம் என்ற மூன்று பிரமாணங்கள், அறிவை நோக்கி அழைத்துச் செல்பவை. சிவரணம் (காதால் கேட்பது) மநநம் ( மனத்தால் அதை ஆராய்வது) நிதித்யாஸனம் (கேட்டு மனத்தால் ஆராய்ந்ததை உள்ளுணர்வால் நீண்ட காலம் ஆழ்ந்து சிந்தித்து அதுவாக ஆகி விடுதல்). இந்த மூன்றும் பரம்பொருளை அடைய உதவும் மூன்று உபாயங்கள். கேட்பது - சப்தம், மனனம் - அனுமானம். நிதித்தியாஸனம் - பிரத்யக்ஷம் தன்னை அறிய

இந்த மூன்று பிரமாண (நயன)ங்கள் உள்ளவள். தேவியை அடைய தக்ஷிணம் வாமம், பிரும்ம மார்க்கம் என மூன்று வழிகள் உள்ளன. அந்த மாக்கங்களாக இருப்பவள். நயனம் –மார்க்கம். (நா.441, 912) (453)

### 74. லோலா - காம - ரூபிணீ. பெண்களின் காமமாய் இருப்பவள்.

74-1. சுழலும் கண்களுள்ள அழகான பெண்களின் காமமாகவும், அவர்களை அடைவதற்கான காமமாகவுமிருப்பவள் தேவி. காமம் என்ற குணத்தின் ஈசுவரியாக இருப்பவள் தேவி. காமம், குரோதம், லோபம், மதம், மோஹம், மாச்சரியம், பைசுந்யம், அஸூயா என்ற எட்டு குணங்களும் யோகேசுவரீ, மஹேசுவரீ, வைஷ்ணவீ, பிரும்மாணீ, ஸ்வயம்பூ (கல்யாணி), இந்திரஷா, யமதண்டதரா, வாராஹீ என்ற எட்டு சக்திகள் உண்டு. காமத்திற்கான சக்தியாக யோகேசுவரியாக இருப்பவள். (454)

### 75. மாலிநீ. மாலையுள்ளவள்.

75-1. மாலையைத் தரிப்பதால் மாலினீ. 51 மாத்ருகா-அக்ஷரங்களின் தேவதை மாலிநீ. அக்ஷ மாலையைத் தரித்திருப்பவள். அ முதல் ள வரை 50 அக்ஷரங்கள். ( அ முதல் ஔ வரை 14 உயிர் எழுத்துக்கள். அம் அ: என்ற அனுஸ்வார விஸர்க்கங்கள், க ச ட த ப வர்க்க எழுத்துக்கள் 25, ய ர ல வ ச ஷ ஹ ஸ ள என ) க்ஷ என்ற கூட்டெழுத்து 51 வது அக்ஷரமாகும். அ முதல் ள வரை 50ம் ள முதல் தலைகீழாக அ வரை 50 மாக 100 என்று கணக்கிடுவது வழக்கம். அம் நமச்சிவாய. ஆம் நமச்சிவாய. ஹம் நமச்சிவாய. ளம் நமச்சிவாய என 50 எண்ணிக்கை முடிந்ததும் க்ஷம் என்பதைக் கூறாமல் ளம் நமச்சிவாய என 50 தடவை ஜபிப்பது, வாய்-ஜப மாலை முதலிய புறச் சாதனங்களைப் பயன்படுத்தாமலே ஜபம் செய்யும் மானஸ ஜப முறையாகும். க்ஷ என்பது மேரு. மாலையாயின் 51வது மணியாக இதனைத் தனித்துப் பெரு மணியாக வைத்திருப்பர். அதில் 1 முதல் 50 வரை மணிகளை எண்ணியதும் நடு மணியைத் தொடாமலும் தாண்டாமலும் 50 வது மணி, 49 வது மணி என்று பின் வரிசையாக எண்ணுவது வழக்கம். மேருவைத் தாண்டக்கூடாது என்று நியமம். அ முதல் க்ஷ வரை உள்ள எழுத்துக்களின் வடிவில் அமைந்த மாலையானதால் அது அ – க்ஷ – மாலை எனும் அக்ஷர மாலை. (23.43.30, 28.26.2) சரஸ்வதி, பாலா, பிராம்ஹீ முதலிய வடிவங்களில் அக்ஷ மாலையைக் கையில் ஏந்தியவள். (455)

**83. ஸுரநாயிகா. தேவர்கள் தலைவி.**

**84. காலாண்ட்டீ. காலகண்டரது மனைவி.**

84-1. விஷத்தை அருந்தியதால் கறுத்த கழுத்து உள்ளவர் சிவபெருமான். அவரது பத்தினி. அர்த்தநாரீசுரவடிவில் இவள் கழுத்தும் கறுப்பாக அமையுமானதால் காலகண்ட்டீ. 62 சிவ தீர்த்தங்களில் ஒன்றான காலஞ்ஜாம் எனும் க்ஷேத்திரத்தில் காலகண்டர் எனும் சிவனது தேவியாக விளங்குபவள். கலம் - காலம் - இனிமையான மொழி. இனிமையாகப் பேசும் தொண்டையுடன் கூடியவள். தாருகாஸுரனைக் கொல்லச் சிவன் படைத்த காளிக்குக் காலண்டீ எனப் பெயர். (18.71.1) (464)

**85. காந்திமதி. காந்தியுடையவள்.**

85-1. காந்தி-மேனி அழகு, கலை, மேனியின் ஒளி, ஆசை, இச்சா சக்தி முதலியவை. (21.69.1) காந்தியுடன் கூடியவள் காந்திமதீ. (465)

**86. க்ஷோபிணீ. உணர்ச்சிக் கொந்தளிப்பை உண்டாக்குபவள்.**

86-1. க்ஷோபணம் - குமுறல். உணாச்சிக் கொந்தளிப்பு வலிய சலனம், ஸ்ருஷ்டி தொடங்கும் முன் பரம்பொருள் மட்டும் தனித்திருந்த நிலையில் அவரிடம் மாயை சலனம் ஏற்படுத்தியதும் உலகம் தோன்றியது. உலகம் தோன்றக் காரணமாயிருந்த அந்த வலிய சலனத்தை ஏற்படுத்தியவள் தேவி. (17.81.10)

86-2. வைஷ்ணவீ சக்தியாகத் தோன்றிய தேவி மந்தர மலையில் தவம்புரியச் சென்றபோது அவளது மனம் கொந்தளித்தது. அந்தக் கொந்தளிப்பிலிருந்தும் அழகிய பெண்கள் வடிவில் சக்திகள் கோடிக்கணக்காகத் தோன்றினர். அவர்கள் தோன்றக் காரணமாயிருந்த மனக் கொந்தளிப்பை ஏற்படுத்தியவள் தேவி.

86-3. பொறிகள் அயர்ந்து செயலற்றிருக்கும்போது அவைகளை உசுப்பி எழுப்பிச் செயலாற்றத் துண்டுபவள். (466)

**87. ஸூக்ஷ்மரூபிணீ. மிக நுண்ணிய வடிவமுள்ளவள்.**

87-1. மிக நுண்ணிய வடிவமுள்ளவளானதால் எளிதில் அறிய முடியாதவள். மூலாதார மத்தியிலுள்ள குண்டலிநீ எனும் அக்கினியில்

செய்யப்படும் ஹோமம் ஸுக்ஷ்மமாகும். ரஹோயாகம் என அதற்குப் பெயர். (21 1.1) அந்த ஹோமம வடிவத்தில் உள்ளவள். ஸுக்ஷ்மமான மந்திர வடிவம், குண்டலினீ வடிவம், வாஸனா வடிவம் படைத்தவள். (7.4.1, 11.1.1, 12.1.1)

(நா.468-474)

वज्रेश्वरी वामदेवी वयोऽवस्थाविवर्जिता ।
सिद्धेश्वरी सिद्धविद्या सिद्धमाता यशस्विनी ॥ 97 ॥

**வஜ்ரேச்வரீ வாமதேவீ வயோ(அ)வஸ்த்தாவிவர்ஜிதா.**
**ஸித்த்தேச்வரீ ஸித்த்தவித்யா ஸித்த்தமாதா யசஸ்விநீ.**
**97**

**88. வஜ்ரேச்வரீ. வஜ்ரேசுவரியாயிருப்பவள்.**

88-1. ஜாலந்தர பீடத்தில் வஜ்ரேசுவரீ எனும் திருநாமம் பூண்டிருப்பவள். சுக்ல பத்து ஷ்ஷ்டி- கிருஷ்ண பக்ஷத்துத் தசமி திதிகளின் நித்யாதேவியானவள். (9.10.28, 10.8.1 இணைப்பு 2) ஸ்ரீபுரத்தில் வஜ்ரப் பிராகாரத்தில் உள்ள வஜ்ரா என்ற நதியின் தலைவியாக அதன் கரையில் மாளிகை கொண்டவள். வைர ரத்தினங்காலன ஆபரணம் பூண்டிருப்பவள், இந்திரனுக்கு வஜ்ரம் எனும் ஆயுதத்தை அளித்தவள், வஜ்ரேச்வரீ எனத் திருநாமம் பூண்டவள். தேவியின் திருமேனியிலிருந்து புறப்பட்ட கிரணங்கள் எடுத்த யோகினீ வடிவங்களில் இவளும் ஒருவள்.

**89. வாமதேவீ. வாமதேவரது பத்தினி.**

89-1. ஈசானர், தத்புருஷர், அகோரர், வாமதேவர், ஸத்யோஜாதர் என்று ஐந்து சிவ மூர்த்திகள். அதில் ஒருவர் வாமதேவர். கூமதேவர். வாம:தேவ:- மிக அழகான தேவர். அர்த்தநாரீசுவர வடிவில் இடது பகுதியில் தேவியைக் கொண்டமையால் அழகாக இருப்பவர். வாமேந தீவ்யதி இடது பகுதியில் உலகை ஜயிப்பவர். (வாமேந தீவ்யதி ஐந்து முகங்களுள்ள சிவபெருமானின் வடக்கு நோக்கிய முகமாயிருப்பவர் வாமதேவர், வாமதேவரின் பத்தினி அல்லது சக்தி.

89-2. வாமா தேவீ- மிக அழகான தேவி. வாமம்-கர்ம பலாநி- வினைப்பயன்கள். (18.58.1) அவைகளின் தேவியாயிருந்து ஜீவர்களைக் கட்டுப்படுத்துபவள். வாமாசாரத்தில் ஈடுபட்டவர்கள் வாமர்கள் அவர்களது தேவதை. (469)

**76. ஹம்ஸிநீ. ஹம்ஸர்களுடன் கூடியவள்.**

76-1. ஹம்ஸ:- அன்னபட்சி, துறவி, அஜபாமந்திரம், அன்னப்பட்சிகள் தேவியைச் சூழ்ந்து நின்று நடைபயிலும். (ஸௌந்தர்யலஹரீ: சு.91) பிரும்ம வித்யா ஸ்வரூபிணியான தேவியைப் பரமஹம்ஸர்கள் நாடுவார்கள். நம்மை அறியாமல் வாய்விட்டு ஜபிக்காமல் நிமிடந்தோறும் நம் பிராண சக்தி ஜபிக்கும் மந்திரம் ஸோஹம் ஹம்ஸ: என்பது. இது மூச்சிழுக்கும்போது ஸோ என்றும், மூச்சு விடும்போது ஹம் நாத வடிவில் உணரும் மந்திரம். இதை ஹம்ஸ மந்திரம், அஜபா மந்திரம் என்பர். அந்த மந்திர வடிவில் இருப்பவள். (456)

**77. மாதா. மாதாவானவள்.**

77-1. மாதா- மாதாவாயிருப்பவள் (6.1.1-6) மாத்ருகை எனும் சக்தி வடிவினள். (19, 1.7) மந்திரங்களுக்குத் தாயானதால் மாத்ருகா- அக்ஷர வடிவினள். சுக்ல தசமீ - கிருஷ்ண ஷஷ்டி திதிகளுக்கான நித்யா தேவி நித்யா என்றே பெயர் பெற்றவள். அவளது மந்திரத்தை மாதா என்று மந்திர சாஸ்திரம் கூறும். காயாவரோஹண க்ஷேத்திரத்திலுள்ள தேவி மாதா எனத் திருநாமம் பூண்டவள். ஶ்ரீம் எனும் லக்ஷ்மீ பீஜத்திற்கு மாதா எனப் பெயர் இந்த வடிவங்களுள்ளவள்.

**78. மலய - அசல - வாஸிநீ. மலய மலையில் வசிப்பவள்.**

78-1. பகவதீ என்ற பெயருடன் மலயாசலமாகிய கேரள தேசத்தில் கோயில் கொண்டவள். (மலயாலயா பகவதீ-மலையாள பகவதியானாள்).

(நா.459-467)

सुमुखी नलिनी सुभ्रूः शोभना सुरनायिका ।
कालकण्ठी कान्तिमती क्षोभिणी सूक्ष्मरूपिणी ॥ 96 ॥

**ஸுமுகீ நலிநீ ஸுப்ப்ரூ: சோபநா ஸுரநாயிகா.**
**காலகண்ட்டீ காந்திமதீ க்ஷோபிணீ ஸூக்ஷ்மரூபிணீ.96**

**79. ஸுமுகீ. அழகிய முகம் உள்ளவள்.**

79-1. அகத்தின் அழகு முகத்தில் தெரியும். தேவியை அகத்தில் கொண்டவனது முகம் மிக அழகாக இருக்கும். பிரும்ம வித: இவ தே

ஸௌம்ய முகம் ஆபாதி. பிரும்மத்தை அறிந்தவனது முகம் போல் உன் முகம் அகாக விளங்குகிறது. (சாந்தோக்ய உபநிடதம் 4.14.2) பிரும்மத்தை அறிந்தவனது முகமே ஸுமுகம் ( அழகான முகம் ) ஆனால் அந்த பிரும்மவித்தியை ஆக இருப்பவள் முகம் மிக அழகியது.

79-2. ஸுமுக: என்பது விநாயகப் பெருமானது 16 திவ்ய நாமங்களில் முதலாவதாகும். கணேச ஸஹஸ்ரநமத்தில் உள்ள இந்த நாமாவிற்குச் செய்யுள் வடிவில் உரை எழுதிய பாஸ்கரராயர் ஆரம்பா: சோபநா யேந யஸ்ய சோபநாமாநநம். ஸ ஏவ ஸுமுக: தஸ்மை ஸுமுகாய நமோ நம:, தொடங்கிய பணிகள் மங்களமாக எவரது அருளால் நிறைவு பெறுகின்றனவோ, (ஸு - மங்களமான, முகம்- ஆரம்பம்) எவரது முகம் அழகியதோ அந்த ஸுமுகருக்கு நமஸ்காரம் எனத் தநயனுக்குக் கூறியது தாய்க்கும் பொருந்தும். அவளை நினைத்துத் தொடங்கின பணிகள் இனிது மங்களமாக நிறைவேறும். அதனால் ஸுமுகீ. ஸுமுகரின் சக்தி ஸுமுகீ. ஷோடசியின் அங்க தேவதைகளில் ஒருவள் ஸுமுகீ. (459)

## 80. நலிநீ. தாமரைக் குவியலாக இருப்பவள்.

80-1 . நலிநீ - தாமரைக் குவியல். தேவியின் கைகள், கால்கள், முகம், கண்கள் முதலிய அவயவங்கள் தாமரைக் கொப்பானவை. தேவியைக் காணும் போது தாமரைகளைக் குவியலாக வைத்துள்ளது போலக் காண்கிறது. நெருக்கமாகத் தாமரைகள் பூத்துள்ள ஓடையும் நலீநீ ஆகும். சிவபெருமானது ஜடையிலிருந்து கங்கை இமயத்தில் ஏழு தாரைகளாகப் பிரிந்து விழுந்தது. கிழக்கு நோக்கிச் சென்ற மூன்று தாரைகளில் நலிநீ என்பது ஒன்று. (ஹ்லாதிநீ, பாவநீ, நலிநீ என்ற மூன்றும் கிழக்கு நோக்கிச் சென்றன. ஸுசக்ஷுஸ், ஸீதா, ஸிந்து என்ற மூன்றும் மேற்கே சென்றன. அலகநந்தா பகீரதனது ரதத்தைத் தொடாந்து பூமியை அடைந்தது ராமாயணம் பால-43) இவர்களது வடிவில் இருப்பவள். (460)

## 81. ஸுப்ப்ரு. அழகிய புருவம் உள்ளவள்.

## 82. சோபநா. அழகி மங்களமானவள்.

82-1. இந்த சோபனா என்ற தொடரை ஒத்த மற்ற இரு நாமங்கள் 683, 972 ஆகும். 683வது நாமம் சோபநா ஸுலபா கதி: என்ற மூன்று பதங்கள் கொண்ட ஒரே நாமம். தனித்து சோபநா என அங்கு பிரிப்பது கூடாது. 972-வது நாமம் ஆசோபநா. ஆ மறைந்திருக்கும். பிரித்துச் சொல்லும்போது ஆசோபநா ஆகும். இந்த மாற்றம் கவனிக்கத்தக்கது. (462)

### 90. வயோ - அவஸ்தா - விவர்ஜிதா. வயதால் நிலை மாறுதல் அற்வள்.

90-1. இளமை, முதுமை முதலியவற்றின் மாறுதல்கள் அவளிடம் காணப்படுவதில்லை. அவள் நித்யா. (14.05) தருணீ (18.84) நித்யயௌவநா (21.50) அழிவு அற்றவள். நிறைவு பெற்றவள். வளர்ச்சி தேய்வு பெறத்தக்க மாறுதலற்றவள். (470)

### 91. ஸித்த்த - ஈச்வரீ. ஸித்தர்களின் ஈசுவரீ.

91-1. அணிமா மஹிமா முதலிய ஸித்திகளைப் பெற்றவர்கள் ஸித்தர்கள். இவர்கள் மனித இனத்தைச் சாந்தவர்களாயினும் இயற்கைகுக் கட்டுப்படும் மனிதத் தன்மையிலிருந்தும் சித்திகள் மூலம் விடுபட்டவர்கள். இவர்களைப் பூமியாலான உடல் நெருக்கம் பரிமாணம் எடை முதலியன தடை செய்யாது. ஜலம் நனைக்காது. உள்ளே அமுத்தாது. நெருப்பு சுடாது. காற்று அசைக்காது. ஆகாயத்தைப் போல் எங்கும் பரவி நிற்கவும் காதுக்கெட்டாத ஒலிகளைக் கேட்கவும் முடியும். இப்படி மனிதனைக் கட்டுப்படுத்தும் பூத சக்திகளை வெல்லும் சித்தி பெற்றவர்கள். (10.22.6) குரு மண்டலத்தில் திவ்யௌகர்கள், மான வௌகாகள், ஸித்தௌகர்கள் என்று மூன்று பிவு உண்டு. (2.11.4) இவர்கள் ஸ்ரீ சக்கிரத்தில் ஸர்வ ஸித்திப்பிரத சக்கிரமாகிய நடு முக்கோணத்தைச்சுற்றி உள்ள ஸர்வரோகஹரம் எனும் அஷ்டகோணத்தில் நடு முக்கோணத்தின் கிழக்குக்கோட்டின் வெளியில் (நா.600, 713) நான்கு கோணம் போன்ற அமைப்பின் நடுவே மூன்று கோடுகளிட்டு நடுக்கோட்டில் இவர்களைப் பூஜிப்பது வழக்கம். (33.8.1) ஸித்தர்கள் நால்வர். இவர்களைத் தவிர பல சித்திகள் உண்டு. அவர்களுக்குச் சக்தி அளிக்கும் ஈச்வரி தேவி. ஸித்தேசுவரி என்ற திருநாமம் பூண்டு காசியில் வசிப்பவள்.

91-2. உடலை அழியாமலும், வெயில், மழை முதலிய இயற்கைப் பாதிப்புகளால் வேதனைப்படாமலும், திடப்படுத்தித் தவமியற்றுவதற்கு இடையூறுகளில்லாமல் செய்து கொள்ளும் யோகப் பயிற்சிகளால் சித்தி ஏற்படும். சித்திகளைப் பெறுவதே லக்ஷ்யமல்ல. சித்திகளைக் கொண்டு மனோலயம் ஏற்படுத்தித் தவம் புரிவதுதான் லயம். தவத்திற்குரிய சாதனங்கள் இவை. (18.22.6)

91-3. குருவின் குருவை (பரம குருவை) ஸித்தர் என அழைப்பர். அந்த ஸித்தரது ஈசுவரியாயிருந்து குருவின் ஈசுவரியாக ஆகித் தனக்கு

ஈசுவரியாக இருப்பவள் தேவி. குரு – பரம குரு – ஸ்மரணத்துடன் தேவியை அணுகுகிறோம். (471)

92. ஸித்த்த வித்யா. சித்தமான வித்தியையாயிருப்பவள்.

92-1. வித்தியை பெண்ணைத் தேவதையாகக் கொண்ட மந்திரம். அது பலன் தருவதற்கு புரச்சரணம் முதலிய வழிபாட்டுமுறைகளைக் கையாள வேண்டும். திருமணம் நடத்துமுன் பெண்ணிற்கும் பிள்ளைக்கும் மண வாழ்க்கை சரியாக அமையுமா என்று பெருத்தம் பாப்பது போல் மந்திரங்களுக்கும் மந்திரங்களை ஏற்க விருப்பவனுக்கும் பொருத்தம் பர்ப்பதுண்டு. ஸித்தாரி கோஷ்டம் என இதைக் கூறுவர். மந்திரங்கள் ஸித்தம், ஸுஸித்தம், ஸாத்யம், அரி என நான்காகப் பிரியும். மந்திரங்களின் சித்தி பெறப் பொதுவாக மந்திரத்திரலுள்ள அக்ஷரங்களைக் கணக்கிட்டு அக்ஷர எண் எவ்வளவோ அவ்வளவு லக்ஷம் மந்திர ஜபம் புரிய வேண்டும். மூன்று அக்ஷரங்களுள்ள பாலா மந்திரத்திற்கு 3 லக்ஷம் ஜபம். ஐந்து அக்ஷரங்களுள்ள சிவ பஞ்சாக்ஷரிக்கு 5 லக்ஷம் ஷபம், ஜப எண்ணிக்கைக்கு ஏற்றவாறு ஹோமம், போஜனம், தர்ப்பணம், மார்ஜனம் என்ற நான்கும் செய்ய வேண்டும். இது புரச்சரணம் எனப்படும்.(2.3.3)

92-2. புரச்சரணம் செய்வதால் அந்த மந்திரம் நினைத்த பலனைக் கொடுக்குமளவிற்குச் சித்தியாகிவிடும். குறிப்பிட்ட அளவு ஜபம் முதலியவை. செய்தால் கட்டாயம் சித்தியாகுபவை சில. அவை ஸித்த மந்திரங்கள் குறிப்பிட்ட அளவு ஜபம் செய்யாமலேயே குருவிடமிருந்து உபதேசம் பெற்றதும், அல்லது குறைந்த அளவு ஜபம் செய்ததும், சித்தி தரவல்லது ஸுஸித்தம். முன் பிறவியில் இப்படிச் சித்திக்கான முயற்சிகளைத் தொடங்கி ஏதோ வினையால் அம்முயற்சி தடைபட்டுவிட்டதால், அந்த மந்திரம் நமக்குக் கடன் பட்டதுபோலாகி, விட்ட குறை தொட்ட குறையாக இப்பிறவியில் உரிய புரச்சரணம் செய்யாமலேயே சித்தியாகும். குறிப்பிட்ட அளவிற்கு மேல் ஓரிரு மடங்கு அல்லது மந்திர சித்தி பெறும் வரை ஜபம் முதலியவற்றைச் செய்து மிகவும் வருந்திப் பயன்பெற்றது ஸாத்தியம் ஆகும். முன் பிறவிகளில் மந்திரத்தைத் தவறான முறையில் சக்திக்கு மீறிப் பயன்படுத்தியதால் அதற்கு நாம் கடனாளியாகி அதிக அளவு ஜபம் முதலியதை எதிர்பார்க்கிறது என்று பொருள். மந்திர தேவதையிடம் தவறாக நடந்து அதனை எதிரியாக்கிக் கொண்டவன் அந்த மந்திரத்தை ஜபம் செய்யும்போது மந்திரம் காப்பாற்றும் தன்மையைக் கைவிட்டு அவனையும் குடும்பத்தையும் அழிக்க முற்படும். இதனை அரி (சத்துரு) மந்திரம் என்பர்.

சித்தம் முதல் அரி வரையுள்ள மந்திரங்களை அறிய கட்டங்கள் போட்டு ஜாதகம் பார்ப்பது போல் விடை காண்பது ஸித்தாரி – கோஷ்டம். ஸித்தாரி கோஷ்டம் போட்டு ஸித்தமாகவோ ஸுஸித்தமாகவோ அமையும் மந்திரத்தைத் தேர்ந்தெடுத்து உபதேசிப்பது வழக்கம்.

92-3. சில மந்திரங்களுக்கு இந்த கோஷ்டம் பார்ப்பது வழக்கமில்லை. ஓரக்ஷரமுள்ளவை, மூன்று அக்ஷரங்களுள்ளவை, ம்ருத்யுஞ்ஜயம், காளீ, சியாமளா, சண்டிகா, ராமன், ஸ்ரீவித்யா, புவனேச்வரீ, ராஜசியாமளா முதலியவைகளுக்கு இந்த கோஷ்ட பரிசீலனை கிடையாது. எப்போதும் யாவருக்கும் ஸித்தமான மந்திரங்கள் இவை. அதனால் பஞ்சதசாக்ஷரீ எனும் ஸ்ரீவித்தியை ஸித்தமான மந்திரமாகும். ஸித்த வித்யாவாக இருப்பவள். (472)

### 93. ஸித்த்த மாதா. சித்தர்களைக் காப்பாற்றும் தாய்.

93-1. சித்தி பெற்றவாகளைத் தாய் போல் அரவணைத்து அவர்களுக்கு இதமானவைகளை அளிப்பவள். சித்தாகள் விஷயத்தில் மாதா என்ற சொல்லால் குறிப்பிடும் தன்மைகள் அனைத்தும் கொண்டவள். (நா.1, 457) சித்தர்களின் தாயாகிச் சித்தர்களைத் தன்னுள் அடக்கிக் கொண்டு காப்பவள், அவர்களை எல்லை மீறீச் செல்லாமல் தடுப்பவள். அவர்களுக்கு வேண்டியதையெல்லாம் அவர்கள் கோராமலிருக்கையிலேயே வாரி வழங்குபவள். (473)

### 94. யசஸ்விநீ. புகழ் உள்ளவள்.

94-1. இயற்கையாகவே அவள் புகழுள்ளவள். வியக்கத் தக்க செயலாலும் அன்பு, கருணை முதலியவைகளை அவ்வப்போது காட்டுவதாலும் ஏற்படும் செயற்கையான புகழ் மாறுபடும். இவைகளை எதிர்பாராமல் இயற்கையாகவே ஏற்பட்ட புகழ் மாறுபடாதது. அத்தகைய புகழைத் தன்மையாகக் கொண்டவள். (18.5.27, 21.1.1) (474)

❋ ❋ ❋

அதிகாரம் - 22

# தேவியின் யோகினீ வடிவங்கள்

# டாகினீ யோகினீ

(நா.475-484)

वुशुद्धिचक्रनिलया (आ) रक्तवर्णा त्रिलोचना ।
खट्वांगादिप्रहरणा वदनैकसमन्विता ॥ 98 ॥

पायासान्नप्रिया त्वक्स्था पशुलोकभयङ्करी ।
अमृतादिमहाशक्तिसंवृता डाकिनीश्वरी ॥ 99 ॥

**விசுத்த்தி சக்ர நிலயா (ஆ) ரக்தவர்ணா த்ரிலோசநா.**
**கட்வாங்காதி ப்ரஹரணா வதநைக ஸமந்விதா. 98**

**பாயஸாந்ந ப்ரியா த்வக்ஸ்த்தா பசுலோக பயங்கரீ**
**அம்ருதாதி மஹாசக்தி ஸம்வ்ருதா டாகினீச்வரீ. 99**

**1. விசுத்த்தி சக்ர நிலயா. விசுத்தி சக்கரத்தில் தங்குபவள்.**

1-1. விசுத்தி சக்கிரம் - ஸுஷும்நா காண்டத்தில் தொண்டைக் குழிக்குப்பின் 16 தளங்களுள்ள தாமரை போன்று அமைந்து உள்ளது. இது ஆகாச தத்துவம் தோன்றிய இடம். அதன் நடுவில் உள்ள மொட்டில் தங்கியிருப்பவள்.

1-2. இதனைத் தொடர்ந்து 534வது நாமம் வரை யோகினிகளைப் பற்றிய விளக்கம். ஷோடா நியாஸம் என்ற முறையில் யோகினீ நியாஸம் அடங்கும். (3.1) அதற்கான ஆறு நியாஸங்களையும் தனித்து யோகிநீ நியாஸ் முறையையும் சிறிது விளக்குவோம்.

1-3. நியாஸம். நியாஸம் பதித்து வைப்பது. தேவதையின் சக்தி-உடலிலும் உள்ளத்திலும் ஒவ்வொரு பகுதியிலும் பதியவேண்டும் என்ற உள்ளமாந்த பிரார்த்தனையுடன் அந்தந்த மந்திரங்களைச் சொல்லி அந்தந்த தேவதை வடிவைத் தியானம் செய்து அந்த இடத்தைத் தொட்டு அங்கு தேவதா சக்தி பதிந்து விட்டதாகப் பாவனை செய்வதே நியாஸம்(3.1)

1-4. ஷோடா நியாஸம் என்பது தேவி வழிபாட்டிலுள்ள தனித்த நியாஸ முறை. இது ஆறு வகைப்படும். 1.கணேச நியாஸம், 2. கிர நியாஸம், 3.நக்ஷத்திர நியாஸம், 4. யோகிசீ நியாஸம், 5. ராசி நியாஸம், 6. பீட நியாஸம் என. நான்காவதாகிய யோகிநீ நியாஸம் 475-534 நாமங்களால் விளக்கப் பெறுகின்றது. ஆறாவது பீட நியாஸம் பஞ்சாசத்பீட ரூபிணீ என்ற 833-ம் நாமத்தால் விளக்கப்பெறுகிறது. இந்த நியாஸங்கள் அ முதல் க்ஷ வரை உள்ள மாத்ருகாக்ஷரங்களாலும் செய்யப்படுவதால் மாத்ருகா நியாஸங்களின் உட்படும். கணேச-க்ரஹ-நக்ஷத்ர-யோகிநீ-ராசி-ரூபிணீம். தேவீம் பீடமயீம் வந்தே மாத்ருகாம் ஸுந்தரீம் பராம் என்று ஆறு நியாஸங்களில் குறிப்பிட்ட தேவதைகள் அனைவரையும் தேவியாகப் பாவித்து நியாஸம் செய்வர். யோகிநீ பீட நியாஸங்களுடன் மற்ற நான்கு நியாஸங்களைப் பற்றியும் முன்னதாக அறிவோம்.

1-5. கணேச நியாஸம் : 51 கணேசர்கள். இளம் சூரியனுக்கொப்பான நிறம், யானை, முகம், முக்கண்கள், பாசம்- அங்குசம் - வரம் - அபயம் தாங்கிய நான்கு கைகள். இடது தொடையில் அமர்ந்த கணேச சக்திகள். இப்படிக் காட்சி தருவர். கணேச சக்திகள் இடது கையில் தாமரை தாங்கி வலது கையால் கணேசரை அணைத்துச் சிந்துர வர்ணம் கொண்டவர்களாகக் காணப்படுவர். அவாகளின் பெயர்கள், அவர்களை நியாஸம் செய்யவேண்டிய உடல் பகுதி இவைகளின் குறிப்பு பின்வருமாறு (முதலில் சக்தியின் பெயர், அடுத்து கணேசரின் பெயர், நகக் குறியினுள் நியாஸத்திற்கான உடற்பகுதி

1. ஸ்ரீ, விக்நேசர், (தலை)
2. ஹ்ரீ - விக்நராஜர் (முகம்)
3. துஷ்டி, விநாயகர் (வலது கண்)
4. சாந்தி, சிவோத்தமர் (இடது கண்)
5. புஷ்டி, விக்க்நஹ்ருத் (வலது காது)
6. ஸரஸ்வதீ, விக்க்நகர்த்தா (இடது காது)
7. ரதி, விக்க்நராஜர் (வலது மூக்கு)
8. மேதா, கணநாயகர் (இடது மூக்கு)
9. காந்தி, ஏகதந்தர் (வலது கன்னம்)
10. காமிநீ, த்விதந்தர் (இடது கன்னம்)
11. மோஹநீ கஜவக்திரர் (மேல் உதடு)
12. ஜடா, நிரஞ்ஜநர் (கீழ் உதடு)

13. தீவ்ரா, கபர்தப்ருத் (மேல் பல்வாசை)
14. ஜ்வாலிநீ, தீர்க்கமுகர் (கீழ் பல்வரிசை)
15. நந்தா, சங்கு கர்ணர் (நாக்கின் நுனி)
16. ஸுரஸா- விருஷத்வஜர் (தெண்டை)
17. காமரூபிணீ, கணநாதர் (வலது புஜம்)
18. ஸுரப்ப்ரு, கஜேந்திரர் (வலது முழங்கை)
19. ஜயிநீ, சூர்ப்பகர்ணர் (வலது மணிக்கட்டு)
20. ஸத்யா, திரிலோசனர் (வலது கைவிரல் அடிப்பகுதி)
21. விக்நஞ்ரீ, லம்போதரர் (வலது கைவிரல் நுனி)
22. ஸுருபா- மஹாநாதர் (இடது புஜம்)
23. காமதா, சதுர்மூர்த்தி (இடது முழங்கை)
24. மதவிஹ்வலா, ஸதாசிவர் (இடது மணிக்கட்டு)
25. விகடா, ஆமோதர் (இடது கைவிரல் அடிப்பகுதி)
26. பூர்ணா, துர்முகர் (இடது கைவிரல் நுனி)
27. பூதிதா, ஸுமுகர் (வலது தெடையிடுக்கு)
28. பூமி, பிரமோதர் (வலது முழங்கால்)
29. சக்தி, ஏகபாதர் (வலது கணுக்கால்)
30. ரமா, த்விஜிஹ்வர் (வலது கால்விரல் அடிப்பகுதி)
31. மானுஷீ, சூரர் (வலது கால் விரல் நுனி)
32. மகரத்வஜா, வீரர் (இடது தொடை இடுக்கு)
33. வீரிணீ, ஷண்முகர் (இடது முழங்கால்)
34. ப்ருகுடீ, வரதர் (இடது கணுக்கால்)
35. லஜ்ஜா, வாமதேவர் (இடது கால் விரல் அடிப்பகுதி)
36. தீர்க்ககோணா, வக்ரதுண்டர் (இடது கால் விரல் நுனி)
37. தநுர்த்தரா, த்விரண்டகர் (வலது விலா)
38. யாமிநீ, ஸேநாநீ (இடது விலா)
39. ராத்ரி, கிராமணீ (முதுகு)
40. சந்த்ரிகா, மத்தர் (தொப்புள்)
41. சசிப்பரா, விமத்தர் (வயிறு)
42. லோலா, மத்தவாஹனர் (இதயம்)
43. சபலா, ஜடீ (வலது தோள்)
44. ருத்தி, முண்டீ (மென்னி – கழுத்தின் பின்புறம்)
45. துர்பகா, கட்கீ (இடது தோள்)
46. ஸுபகா, வரேண்யர் (இதயத்திலிருந்து வலது கைவிரல் நுனி வரை)
47. சிவா, விருஷகேதனர் (இதயத்திலிருந்து இடது கைவிரல் நுனி வரை)

48. துர்கா, பக்ஷயப்ரியர் (இதயத்திலிருந்து வலது கால் விரல் நுனி வரை)
49. காளீ, கணேசர் (இதயம் முதல் இடதுகால் நுனிவரை)
50. காலகுப்ஜிகா, மேகநாதர் (இதயத்திலிருந்து குறிவரை)
51. விக்க்நஹரா (கா) ரிணீ, கணேச்வரா (இதயத்திலிருந்து தலை வரை)

1-6. கிரஹந்யாஸம் - கிரகங்கள் 9. அவர்கள் திவ்யாபரணங்கள் பூண்டவர்களாய் இடது தொடையில் இடது கையை வைத்து வலது கையில் வரத முத்திரை தாங்கி உட்கார்ந்திருப்பார்கள். அவர்களது மடியில் அவர்களது சக்திகள் வரத - அபய முத்திரை தாங்கியவர்களாக அமர்ந்திருப்பார்கள். சக்தியின் பெயர், கிரஹத்தின் பெயர், நிறம், நியாஸம் செய்யுமிடம் (நகக் குறியினுள்) என்ற வரிசையில் குறிப்பு:

1. ரேணுகா, சூர்யன், சிகப்பு (மாபுக் குழியில்)
2. அமிருதா, சந்திரன், வெண்மை (புருவ நடுவில்)
3. தர்மா, அங்காரகன், சிகப்பு (இரு கண்களில்)
4. யசஸ்விநீ, புதன் கார்மேக நிறம் (காதுகளுக்குக் கீழுள்ள குழியில்)
5. சாங்கரீ, பிருஹஸ்பதி, மஞ்சள் (கழுத்தில்)
6. ஜ்ஞான ரூபா, சுக்கிரன், மஞ்சள் படர்ந்த வெண்மை (இதயம்)
7. சக்தி, சனைச்சரன், கருப்பு (தொப்புள்)
8. கிருஷ்ணா, ராஹு, புகை நிறம் (முகம்)
9. தூம்ரா, கேது அடர்ந்த புகை நிறம் (ஆஸனத் துவாரம்)

1-7. நக்ஷத்திர நியாஸம் : பேரொளியுடன் எரிகின்ற நெருப்பு போன்ற தோற்றம், வரத - அபய முத்திரை தாங்கிய இருகைகள், கூப்பிய இரு கைகள், (நான்கு கைகள்) இப்படி எல்லா ஆபரணங்களும் அணிந்தவர்களாகத் தோன்றுகிறார்கள்.

1. அச்விநீ (நெற்றி)
2. பரணீ (வலது கண்)
3. கிருத்திகா (இடது கண்)
4. ரோஹிணீ (வலது காது)
5. மிருகசிரஸ் (இடது காது)
6. ஆர்த்ரா (வலது மூக்கு)
7. புனர்வஸு (இடது மூக்கு)
8. புஷ்யா (தொண்டை)

9. ஆச்லேஷா (வலது தோள்)
10. மகா (இடது தோள்)
11. பூர்வ பல்குநீ (முதுகு)
12. உத்தர பல்குநீ (வலது முழங்கை)
13. ஹஸ்தா (இடது முழங்கை)
14. சித்ரா (வலது மணிக்கட்டு)
15. ஸ்வாதீ (இடது மணிக்கட்டு)
16. விசாகா (வலது கை)
17. அநுராதா ( இடது கை)
18. ஜ்யேஷ்டா (தொப்புள்)
19. மூலா (இடுப்பு)
20. பூர்வாஷாடா (வலது தொடை)
21. உத்தராஷாடா (இடது தொடை)
22. சிரவணா (வலது முழங்கால்)
23. தனிஷ்டா (இடது முழங்கால்)
24. சததாகார (வலது கணைக்கால்)
25. பூவபாத்ரபதா (வலது பாதம்)
26. ரேவதீ (இடது பாதம்)

1-8. ராசி நயாஸம் : 12 ராசிகள். ஒவ்வென்றுக்கும் தனி நிறம். (ராசியின் பெயர், நிறம், நியாஸம் செய்யவேண்டிய இடம் என்ற வரிசையில்)

1. மேஷம், சிகப்பு (வலது பாதம்)
2. விருஷபம், வெண்மை (குறியின் வலது புறம்)
3. மிதுனம், பச்சை (வயிற்றின் வலது புறம்)
4. கர்கடகம், மஞ்சள் வெண்மை (இதய வலது புறம்)
5. ஸிம்ஹம், பல நிறங்களின் கலவை (வலது புஜம்)
6. கந்யா, கறுப்பு (தலையின் வலது புறம்)
7. துலா, கருமையும் மஞ்சளும் படர்ந்த சிகப்பு (இடது புறம்)
8. விருச்சிகம், கருமை கலந்த சிகப்பு (இடது புஜம்)
9. தனுஸ், செம்பட்டை (இதயத்தின் இடதுபுறம்)
10. மகரம், பொட்டு பொட்டாகப் பல நிறங்கள் கலந்தது (வயிற்றின் இடது பாகம்)
11. கும்பம், கறுப்பு (குறியின் இடது பாகம்)
12. மீனம், புகை நிறம் (இடது பாதம்)

1-9. **யோகினீ ந்யாஸம்** - யோகினிகள் பற்றிய விளக்கம் முன் (9.10.15, 16.29) தரப்பட்டுள்ளது. மீண்டும் 653-655 நாமங்களிலும் மேலும் விளக்கம் பெறலாம். தேவி, தேவியை பூஜிக்குமிடமான ஸ்ரீசக்கிரம், அவளது மந்திரமான ஸ்ரீவித்யை, அதனை உபதேசித்த குரு, வழிபடும் சிஷ்யன் என்ற ஐவரும் ஒரே தத்துவம் என உணரும் ஐக்கிய பாவனை யோகமாகும். அந்த யோக சக்தி மிக்கவர்களானதாலும் அந்த யோக சக்தியை அருள்பவர்களானதாலும் இவர்கள் யோகினிகள்.

1-10. **டாகினீ, ராகினீ, லாகினி, காகினீ, ஸாகினீ, ஹாகினீ, யாகினீ** என ஏழு யோகினிகள், 51 சக்திகளால் சூழப்பட்டவர்களாக, முறையே விசுத்தி, அனாஹதம், மணிபூரகம், ஸ்வாதிஷ்டானம், மூலாதாரம் ஆஜ்ஞை, ஸஹஸ்ராரம் என்ற ஏழு சக்கிரங்களில் வசிக்கிறார்கள். இந்த ஏழு சக்கிரங்கள் நம் உடலில் அமைந்த ஸ்ரீ சக்கிரமாகும்.

1-11. **யோகினிகள் அமர்ந்துள்ள சக்கிரங்கள்.** பொதுவாக இந்தச் சக்கிரங்களைக் குறிப்பிடும்போது மூலாதாரத்திலிருந்து தொடங்கி விளக்கம் தருவது மரபு. ஆனால் இங்கு நான்கு சிறப்பான காரணங்களால் விசுத்தியிலிருந்து தொடங்கி ஆறு சக்கிரங்கள் கணக்கிடப்பெறுகின்றன.

(1) தஸ்மாத்வா ஏதஸ்மாத் ஆத்மந: ஆகாச: ஸம்பூத: என உபநிடதம் முதலில் தோன்றிய தத்துவமாக ஆகாயத்தைக் குறிப்பிட்டுள்ளது. ஆகாயத்திலிருந்து வாயுவும், வாயுவிலிருந்து அக்கினியும், அக்கினியிலிருந்து ஜலமும், ஜலத்திலிருந்து பிருதிவியும் உண்டாயின. ஐந்து பூதங்களும் சேர்ந்து ஞானசக்தியின் உதவியால் மனத்தை உண்டாக்கின. இந்த ஸிருஷ்டிக் கிரமத்தை ஒட்டி, ஆகாயத்தின் ஸ்தானமாகிய விசுத்தி சக்கிரம் முதலில் குறிப்பிடப்பட்டுள்ளது. அதே வரிசையில் வாயுஸ்தானமாகிய அனாஹதம், அக்கினிஸ்தானமாகிய மணிபூரகம், ஜலஸ்தானமாகிய ஸ்வாதிஷ்டானம், பிருதிவீஸ்தானமாகிய மூலாதாரம், மனஸ் ஸ்தானமாகிய ஆஜ்ஞை என்ற வரிசையில் அந்தந்த சக்கிரங்களில் உள்ள யோகினிகள் குறிப்பிடப்பட்டுள்ளனர்.

(2) ஆகாயம் முதலில் தோன்றியது. அதனால் விசுத்தி சக்கிரத்தில் வீற்றிருக்கும் டாகினீ என்ற யோகினீ என்ற ஆகாச தத்துவத்துடன் யோகம் கொண்டவளாதலால் ஒரு முகம் உள்ளவளாக இருக்கிறாள். ஆகாயத்திலிருந்து வாயு தோன்றியது. ஆதில் ஆகாய தத்துவமும் வாயு தத்துவமும் அடங்கியிருப்பதால் அவைகளுடன் யோகம் கொள்ள

அநாஹதத்தில் இடம் பெற்ற ராகினீ இரண்டுமுகம் கொண்டுள்ளாள். வாயுவிலிருந்து தோன்றியது. அக்கினியில் அக்கினி தத்துவத்துடன் அதன் காரணங்களான ஆகாச - வாயு தத்துவங்களும் கூடியிருப்பதால் அவைகளுடன் யோகம்கொள்ள அக்கினிஸ்தானமான மணிபூரகத்தில் லாஹினிக்கு மூன்று முகங்கள். அக்கினியிலிருந்து ஜலம் தோன்றியது. ஜலத்தில் ஆகாச - வாயு - அக்கினி - ஜல தத்துவங்களுள்ளதால் ஜல ஸ்தானமான ஸவாதிஷ்டானத்தில் உள்ள காகினிக்கு 4 முகங்கள். அப்படியே மூலாதாரத்திலுள்ள ஸாகினிக்கு பஞ்சபூதங்களுடன் யோகம் கொள்ள 5 முகங்கள். ஆஜ்ஞையில் பஞ்சபூதங்களுடன் மனமும் யோகமும் கொள்ள ஹாகினிக்கு ஆறு முகங்கள். இப்படி வரிசையாக 1-2-3-4-5-6 என்ற முகங்கள் கொண்டமையாலும் விசுத்தி முதல் கணக்கிட நேர்ந்தது.

(3) இந்த யோகினிகள் சரீரத்திலுள்ள உள்ள ஏழு தாதுக்களில் தங்கி அவைகளை நிறைவுள்ளவைகளாகச் செய்கிறார்கள். அந்த ஏழு தாதுக்கள் வளர்ந்து புஷ்டி பெற உதவுகிற ஏழு அன்ன வகையை நாடுகிறார்கள். அந்த தாதுக்கள் உடலில் ஏற்படும் வரிசை பின்வருமாறு:- நாம் உண்ட உணவின் சாரம் ரஸமாக மாறுகிறது. அந்தப் பால் போன்ற சாரமான ரஸம் உடலில் உள்ள தாத்வக்னிகளால் பக்குவம் செய்யப்படுகிறது. பாலில் ஏடு போல் அந்த ரஸத்தின் பெரும்பகுதி தோலாகவும் ஜவ்வுகளாகவும் மாறுகிறது. இதை த்வக் என்பர். ரஸமும் பக்குவமடைந்து அதில் இருந்தும் சாரம் பிரிந்து இரத்தமாகிறது. இரத்திலிருந்து ஸாரமாக மாம்ஸம் (தசை), அதிலிருந்து ஸாரமான மேதஸ் (கொழுப்பு), அதிலிருந்தும் ஸாரமாக அஸ்தி (எலும்பு), அதன் ஸாரமாக மஜ்ஜா (எலும்பினுள் உள்ள கொழுப்பு-செவ்வெண்ணெய்), அதிலிருந்தும் ஸாரமாக சுக்கிலம் என்ற ஜீவதாது. அந்த வரிசையில் ரஸத்தின் அம்சமாகிய தோலில் வசிக்கும் டாகினீ முதலில் இடம் பெறுகிறாள். மற்றவர்களும் தாது வரிசையை ஒட்டித் தொடர்ந்து விளக்கப்படுகிறார்கள்.

(4) இந்த யோகினிகள் எழுவருக்கும் 51 மாத்ருகா அக்ஷர சக்திகள் பரிவாரமாக அமைந்துள்ளனர். விசுத்தியில் அ முதல் அ: வரை உள்ள உயிரெழுத்துக்களின் சக்திகள், அநாஹத்தில் க முதல் ட$^2$ வரை உள்ள அக்ஷர சக்திகள் என்றவாறு வரிசை அமைவதாலும் விசுத்தி முதல் கணக்கிட நேர்ந்துள்ளது.

1-12. இவர்கள் எல்லோரும் தேவியின் வெவ்வேறு தோற்றங்களே. யோக சக்தி மிக்க இவர்களை வழிபடுவதாலும் உடலில் அமைந்த சக்கிரங்களில் அமர்ந்திருக்கும் இவர்களை ஐக்ய பாவவனையுடன்

தியனிப்பதாலும், அந்தந்த ஸ்தானத்திலுள்ள பூதஜயம் (18.22.7) ஏற்படும். அந்தந்த ஸ்தானத்தின் விசேஷ சக்திகளுடன் யோகம் நமக்கு ஏற்படும். யோக சக்தி மிக்க யோகினிகளாக இருப்பவளும் தேவியே. (நா.653) அவர்களை வழிபடும் நமக்கு யோக சக்தி அளிப்பவளும் தேவியே. (நா.654) யோகத்தால் ஐக்ய பாவனையுடன் அனுபவிக்கப்பெறுபவளும் தேவியே. (நா.655) (475)

## யோகினிகள் அமரும் சக்கிரங்கள்




1. ஸஹஸ்ராரம், 2. ஆஜ்ஞா, 3. விசுத்தி, 4. அநாஹதம்
5. மணிபூரகம், 6. ஸவாதிஷ்ட்டானம், 7. மூலாதாரம்

| யோகிநீ | சக்கிரம் | நிறம் | முகம் | எழுத்து | தாது |
|---|---|---|---|---|---|
| டாகிநீ | விசுத்தி | ஆரக்தம் | 1 | அ–அ: | தோல் |
| ராகிநீ | அநாஹதம் | ச்யாமம் | 2 | க–ட$^{2}$ | ரக்தம் |
| லாகிநீ | மணிபூரகம் | ரக்தம் | 3 | ட$^{3}$–ப$^{2}$ | மாம்ஸம் |
| காகிநீ | ஸ்வாதிஷ்டானம் | பீதம் | 4 | ப$^{3}$–ல | மேதஸ் |
| ஸாகிநீ | மூலாதாரம் | புகைநிறம் | 5 | வ–ஸ | அஸ்தி |
| ஹாகிநீ | ஆஜ்ஞா | சுக்லம் | 6 | ஹ–க்ஷ | மஜ்ஜா |
| யாகிநீ | ஸஹஸ்ராரம் | எல்லா | பல | அ–க்ஷ | சுக்கிலம் |

**2. ஆரக்தவர்ணா. சிகப்பு கலந்த வெண்ணிறமுள்ளவள்**

2-1. பாதிரிப்பூவின் நிறம் ஆரக்தம்- (சிறிது சிவந்தது) பாதிரிப்பூவின் நிறமுடைய மேனி உள்ளவள். விசுத்தி சக்ரநிலயா ரக்தவர்ணா என்று இரு சொற்கள் சேரும்போது ஆ மறைந்து உள்ளது. ரக்தவர்ணா என்ற நாமம் (நா. 499) பின்வருகிறது. (476)

**3. த்ரிலோசநா. மூன்று கண்கள் உள்ளவள்.**

**4. கட்வாங்க - ஆதி - ப்ரஹரணா- கட்வாங்கம் முதலிய ஆயுதங்களை உடையவள்.**

4-1. கட்வாங்கம் - கட்டில் கால். அதனைப்போல் மேல் பருத்துக் கீழ் சிறுத்து அமைந்துள்ள தடி கட்வாங்கம் என்ற ஆயுதமாகும். ஒரு குண்டாந்தடியின் மேல் மனிதன் தலையோட்டைப் பதித்தது இந்த ஆயுதம் என்பர். டாகினி எனும் இந்த யோகினி நான்கு கைகளில் கட்வாங்கம், கத்தி, சூலம், கேடயம், இவைகளைக் கொண்டவள். (478)

**5. வதன - ஏக - ஸமந்விதா. ஒரு முகத்துடன் கூடியவள்.**

5-1. டாகினீ தேவீ ஆகாச தத்துவத்தை விளக்கும் ஒரு முகமுள்ளவள்.

**6. பாயஸ - அந்ந - ப்ரியா. பாயஸான்னத்தில் விருப்பம் உள்ளவள்.**

6-1. பாலில் வேக வைத்த அன்னம் பாயஸான்னம்: இது ரஸ தாதுவை வளர்க்கவல்ல புஷ்டிகரமான உணவு. இதனை விரும்பி நிவேதனமாக ஏற்பவள் தேவி. (480)

**7. த்வக்ஸ்த்தா. தோலில் இருப்பவள்.**

7-1. உட்கொண்ட உணவு, ஜீர்ணகோசத்தின் உள்ளே உள்ள பஞ்சபூதாக்கினி, ஜாடராக்கினி முதலிய ஜீர்ணத்திற்கு உதவும் அக்கினி சக்தியுள்ளத் திரவத்தில் ஜீர்ணமாகி மலமாக வெளியேற்றப்பட வேண்டியவை பிரிக்கப் பெற்றதும், ரஸாயனிகள் மூலம் சாரம் உறிஞ்சப் பெற்று ரஸம் எனும் தாதுவாகச் சுற்றி வருகிறது. அதனையும் தாதுவக்னி பக்குவப்படுத்துகிறது. ரஸ தாது ஏடு போல் தோலாக மாறுகிறது. அந்தத் தோலில் இருப்பவள் தேவி. (481)

**8. பசு - லோக - பயங்கரீ. பசுக்களாக இருப்பவர்களுக்குப் பயத்தை விளைவிப்பவள்.**

8-1. விருப்பு - வெறுப்புகளுக்கு ஆட்பட்டு ஒவ்வொன்றையும் வேண்டியது, வேண்டாததென வேறுபடுத்திக் காண்பவன் பசு. தேவதை வேறு; அதனை உபாசிக்கும் தான் வேறு என நினைப்பவன் பசு. (18.80.1) வேறுபட்டது (தன்னைச் சேர்ந்தது அல்ல) என எண்ணிய நொடியிலேயே அதனிடமிருந்து பயம் ஏற்படுகிறது. அப்படிப் பயந்தவர்களுக்கு பசுவாய் இருப்பவாகளுக்கு டாகினி தேவி, பயத்தை விளைவிக்கிறாள். தேவதையிடம் ஆத்ம பாவனையுடன் நெருங்கி வழிபடுபவர்களுக்குப் பயத்தைப் போக்குகிறாள். தடி கொண்டவனைக் கண்டதும் அவனைத் தனக்கெனதிரி என நினைத்துப் பசு மருண்டு ஓடும். அவன் பசுவைக் காப்பாற்றவும் அதற்கேற்படக்கூடிய கெட்ட விளைவுகளிலிருந்தும் தடுத்தாட்கொள்ளவுமே தடி ஏந்தி இருக்கிறான். தடியிடம் உள்ள வெறுப்பால்தடி கொண்டு தன்னைக் காப்பவனை அறியாமல், அவனை வேற்றானாக மதித்துப் பசு பயப்படுவது போல், மனிதன் தெய்வத்திடம் வேறுபட்டதென்ற எண்ணத்துடன் நெருங்கும்போது தெய்வம் பயங்காட்டிச் சோதிக்கிறது.

**9. அம்ருதா - ஆதி - மஹாசக்தி - ஸம்வ்ருதா. அமிருதா முதலிய மாபெரும் சக்திகளால் சூழப்பட்டவள்.**

9-1. விசுத்தி சக்கிரம் 16 இதழ்கள் கொண்டது. அதன் தளங்களில் உயிர் எழுத்துக்கள் பதினாறின் சக்திகள் அமர்ந்து டாகினி யோகினியைச் சூழ்ந்திருக் கின்றனர். அவர்களின் பெயர்கள் அந்த உயிர் எழுத்துக்களையே முதல் எழுத்தாகக் கொண்டிருக் கும். அவை பின்வருமாறு : அம்ருதா, ஆகாஷிணீ, இந்திராணீ, ஈசாநீ, உமா, ஊர்த்த்வகேசீ, ருத்திதா, ரூகாரா, லுகாரா, லூகாரா, ஏகபதா, ஐச்வாயாத்மிகா, ஓங்காரா, ஔஷதி, அம்பிகா, அக்ஷரா. (483)



**10. டாகினீ - ஈச்வரீ. டாகினீச்வரீ எனும் யோகனி வடிவம் பெற்றவள்.**

10-1. இந்த 10 நாமங்களால் விசுத்தி சக்கிரத்தில் அமர்ந்த யோகினியின் நிலை விளக்கப்படுகிறது. இந்த யோனிகி வடிவில் அமர்ந்திருப்பவளைத் தேவி என்ற பாவனையுடன் அவளுக்குப் பிரியமான பாயஸான்னத்தை நிவேதனம் செய்து வழிபடத் தோலிலும் ரஸதாதுவிலும் அவளது சக்தி சிறப்பாக விளங்கும். பசு எண்ணம் நீங்கும். கழுத்தில் 15 தளமுள்ள விசுத்திஸ்தானத்தில் ரஸ தாதுவில் அபிமானமுள்ளவளும், ஒரு முகமுள்ளவளும், கட்வாங்கம் முதலிய ஆயுதங்கள் ஏந்தியவளும், வெண்ணிறமுள்ளவளும், தத்துவம் அறியாதவர்களுக்குப் பயம் தருபவளும், பாயஸானத்தில் விருப்பமுள்ளவளும், அம்ருதா முதலிய சக்திகளால் சூழப்பட்டவளுமான டாகினீ எனும் யோகினியை தியானம் செய்கிறேன். எனத் தொண்டைக் குழியில் தொடுவது முதல் யோகினி நியாஸமாகும். (484)

(நா.485-494)

**ராகினீ யோகிநீ**

अनाहताब्जनिलया श्यामभा वदनद्वया ।
दंष्ट्रोज्ज्वलाऽक्षमालादिधरा रुधिरसंस्थिता ॥ 100 ॥

कालरात्र्यादिशक्त्यौघवृता स्निग्धौदनप्रिया ।
महावीरेन्द्रवरदा राकिण्यम्बास्वरूपिणी ॥ 101 ॥

**அநாஹதாப்ஜநிலயா ச்யாமாபா வதநத்வயா.**
**தம்ஷ்ட்ரோஜ்வலா(அ)க்ஷமாலாதிதரா ருதிரஸம்ஸ்த்திதா. 100**

**காலராத்ர்யாதிசக்த்யௌகவ்ருதா ஸ்நிக்தௌதநப்ரியா**
**மஹாவீரேந்த்ரவரதா ராகிண்யம்பாஸ்வரூபிணீ. 101**

**11. அநாஹத - அப்ஜ - நிலயா. அனாஹதமெனும் தாமரையில் வசிப்பவள்.**

11-1. இதயத்தின் பின் பக்கத்தில் ஸுஷும்நாகாண்டத்தில் உள்ள அநாஹதம் எனும் சக்கிரத்தில் தங்கியிருப்பவள் தேவி. இதற்குப் பன்னிரண்டு இதழ்கள். வாயுவின் ஸ்தானமிது. தாமரை இதழ்களின் நடுவில் உள்ள மொக்கின் மேல் ராகிணீ எனும் யோகினியாகத் தேவி அமாந்திருக்கிறாள். (485)

**12. ச்யாமாபா. பசுமை கலந்த கரு நிறமுள்ளவள்.**

12-1. ச்யாமம் - மேகம் முதலியவற்றில் காணப்படுகிற பசுமை கலந்த கரு நிறம். அந்நிறமுள்ள திருமேனி கொண்டவள் ராகிணீ. சியாமா- யௌவனத்தின் செழிப்புமிக்க நடுப்பகுதியில் உள்ள பெண், 16 வயதுடையவள். அவளைப் போன்ற தோற்றம் உள்ளவள். (486)

**13. வதநத்வயா. இரு முகங்களுள்ளவள்.**

13-1. ஆகாசம், வாயு என்ற இரு தத்துவங்களை விளக்க இரண்டு முகங்கள் உள்ளவள். (487)

**14. தம்ஷ்ட்ரா - உஜ்ஜ்வலா. தெற்றிப் பற்களால் ஒளி மிக்கவள்.**

14-1. தம்ஷ்ட்ரா - தெற்றிப் பற்கள், காட்டுப்பன்றியுடையது போன்றவை, கருமையான உடலிற்கு வெண்மையால் ஒளியூட்டுவதாக வெளியே தோன்றுகின்றன. அதனால் அழகாகத் தோன்றுபவள்.

**15. அக்ஷமாலா - ஆதி - தரா. அக்ஷமாலை முதலியதைத் தாங்கியிருப்பவள்.**

15-1. அ முதல் க்ஷ வரையிலுள்ள எழுத்துக்களாகப் பாவனை செய்யத்தக்க 51 மணிகள் கொண்ட மாலை அக்ஷமாலை, ஜபம் செய்ய உதவுவது. அக்ஷமாலை, சூலம், கபாலம் (மண்டை ஓடு) டமரு (உடுக்கை) இவைகளை நான்கு கைகளில் ஏந்தியவள் ராகிணீ யோகினி.

15-2. அக்ஷமாலை - சக்கிராயுதம். அக்ஷம் - தேரின் அச்சு, அதன் மா - லம் - அழகைக் கொண்டு சேர்ப்பது, அச்சில் கோர்த்துள்ள தேர்ச்சக்கிரம், தேர்ச் சக்கிரத்தையோ, அதன் வடிவில் அமைந்த சக்கிராயுதத்தையோ ஏந்தி நிற்பவள். (489)

**16. ருதிர - ஸம்ஸ்த்திதா. இரத்தம் எனும் தாதுவின் அபிமானி தேவதையாக விளங்குபவள்**

16-1. இரத்தம் எனும் தாதுவைத் தன்னுடையது என எண்ணி அதன் வளர்ச்சியிலும், சிறப்பிலும் அக்கறை காட்டும் தேவதையாக இருப்பவள். (490)

**17. கால - ராத்ர்யாதி - சக்தி - ஔக - வ்ருதா. கால ராத்திரி முதலிய சக்திக் கூட்டத்தால் சூழப்பட்டவள்.**



17-1 . தாமரையின் 12 இதழ்களில் க முதல் ட$^2$ வரை உள்ள 12 அக்ஷரங்களைத் தனதென்று எண்ணும் தேவதைகளான காலராத்திரீ, கண்டிதா, காயத்ரீ, கண்டாகார்ஷிணீ, ஙார்ணா, சண்டா, சாயா, ஜயா, ஜங்காரிணீ, ஞானரூபா, டங்கஹஸ்தா, ட$^2$ங்காரிணீ என்ற 12 சக்திகளின் கூட்டம் சூழ நிற்பவள் தேவி.

17-2. ருத்திரனின் சக்தி காலராத்தி; தமோ குணத்தின் வடிவானவள். ஸம்ஹார சக்தி பெற்றவள், மரணமடையும் தினத்தின் முந்தைய நாளிரவு காலராத்தி எனப்படும். அந்த இரவில் மறுநாள் முடிவு நெருங்குவதை உணர்த்தும் கனவு முதலியன முன்னறிவிப்பாகத் தோன்றும் என்பர். (491)

**18. ஸ்நிக்த்த - ஓதந - ப்ரியா நெய்ப்பு மிகுந்த உணவில் நாட்டம் கொண்டவள்.**

18-1. நெய் நிறையச் சேர்ந்ததால் நெய்ப்பு மிகுந்த உணவு- ஸ்நிக்த்த - ஓதநம். அதனிடத்தில் ராகிணீ யோகினிக்கு நாட்டம் அதிகம். இரத்தத்தை வளர்க்கும் சக்தி மிக்க உணவு இது. இரத்தத்திலிருந்து மாம்ஸதாது தோன்றத்தக்காத, இரத்த்ததைச் சாரமிக்க தாதுவாக ஆக்கவல்ல உணவு ஸ்நிக்த - ஓதநம். (492)

**19. மஹா - வீர - இந்த்ர - வரதா மஹாவீரத் தலைவர்களுக்கு வரமளிப்பவள்.**

19-1. இரா - ஈரா - சொற்கள் - பேச்சு. வி - இரா (ஈரா) யேஷாம் - மஹா வீரர்கள் - சிறப்பு மிக்க பேச்சாளர்கள். அவர்களுக்கு இந்திரன் தலைவர். மகா வீரர்களுக்கும், இந்திரனுக்கும் அவரவர் கோரியதை அளிப்பவள். தேவியின் புகழ் பாடிச் சிறப்புற்றவர்களுக்குக் கோரியதை வழங்குபவள். (28.28.1)

19-2. மஹா வீரம் - ஸோம யாகத்தில் ஸோம மது வைத்திருக்கும் கிண்ணம். அதனைக் கையில் ஏந்தியவர்கள் மஹா வீரர்கள். வேள்விக்காக மதுக்கிண்ணம் ஏந்திய மஹா வீரர்களுக்கும், தலைவருக்கும் கோரிய வரமளிப்பவள்.

மாறுகிறது. அதனால் செந்நிறம் ஏற்படுகிறது. மற்றொரு நாமம் ஆரக்தவர்ணா. (நா.476) இது ரக்தவர்ணா. (499)

### 26. மாம்ஸ - நிஷ்டா. மாம்ஸத்தில் அபிமானமுள்ளவள்.

26-1. தசைகளாக அமையும் தாது மாம்ஸம். லாகினீ யோகினி அதனைத் தன்னிருப்பிடமாகக் கொண்டுள்ளாள். அதன் இடத்தில் தன்னுடைய தாது என்ற எண்ணம் அவளுக்கு உண்டு. (500)

## 7. ஸுஷும்நா கலை (நா. 501 - 600)

### 27. குட - அந்ந - ப்ரீத - மாநஸா. வெல்லப் பொங்கலால் மன நிறைவடைந்தவள்.

27-1. வெல்லத்தோடு கலந்து வேகவைக்கப்பட்ட அன்னம் குடான்னம். அதனைப் பெறுவதால் அவளது மனம் மகிழ்ந்து நிறைவுறுகிறது. (501)

### 28. ஸமஸ்த - பக்த - ஸுகதா. எல்லா பக்தர்களுக்கும் சுகமளிப்பவள்.

28-1. பொறிகளும் மனமும் திருப்தி பெறச் செய்வது சுகம். அதனைத் தருபவள் தேவி. (502)

### 29. லாகினீ - அம்பா - ஸ்வரூபிணீ. லாகினி அம்பாளின் வடிவம் கொண்டவள்.

29-1. "நாபிக்கு அருகிலுள்ள பத்து தளமுள்ள தாமரை வடிவிலுள்ள மணிபூரகத்தில் மூன்று முகங்களும், நான்கு கைகளும் செந்நிறமும் கொண்டு, 10 சக்திகளால் சூழப்பட்டு வெல்லப் பொங்கலைப் படையலாகப் பெற்று மாம்ஸ தாதுவின் நிறைவை அளித்து எல்லா பக்தர்களையும் மகிழ்விக்கும் லாகினி தேவியை வணங்குகிறேன் எனத் தொப்புளைத் தொடுவது லாகினி யோகினிக்கான நியாஸமாகும். (503)

(நா. 504 - 513)

**காகினீ யோகினீ**

स्वाधिष्ठानाम्बुजगता चतुर्वक्त्रमनोहरा ।
शूलाद्यायुधसंपन्ना पीतवर्णा (अ) तिगर्विता ॥ 104 ॥

मेदोनिष्ठा मधुप्रीता बन्धिन्यादिसमन्विता ।
दध्यन्नासक्तहृदया काकिनीरूपधारिणी ॥ 105 ॥

**ஸ்வாதிஷ்ட்டாநாம்புஜகதா சதுர்வக்த்ரமனோஹரா.**
**சூலாத்யாயுதஸம்பந்நா பீதவர்ணா (அ)திகர்விதா.104**

**மேதோநிஷ்ட்டா மதுப்ரீதா பந்திந்யாதிஸமந்விதா.**
**தத்யன்னாஸக்தஹ்ருதயா காகினீ ரூபதாரிணீ. 105**

**30. ஸ்வாதிஷ்ட்டான - அம்புஜ - கதா.**
**ஸ்வாதிஷ்டானமெனும் தாமரையை அடைந்தவள்.**

30-1. ஆறு தளங்களுள்ள தாமரை வடிவிலுள்ள ஸ்வாதிஷ்டானம் என்ற சக்கிரத்தில் தேவி காகினீ என்ற யோகினியின் வடிவில் அமர்ந்துள்ளாள். தொப்புளுக்கும், மூலாதாரத்திற்கும் இடையே இந்தச் சக்கிரம் அமைந்துள்ளது. 504

**31. சதுர் - வக்த்ர - மநோ - ஹரா. நான்கு முகங்களால் மனத்தை ஈர்ப்பவள்.**

31-1. ஸ்வாதிஷ்டானம் ஜலமென்ற பூதத்தின் இருப்பிடம். ஜலத்தில் அதன் மூலகாரணமான ஆகாசம், வாயு, அக்னி என்ற மூன்று பூத சக்திகளும் ஜலத்தின் தனித்த சக்தியான ரஸமும் உள்ளபடியால் இந்த நான்கு பூத சக்திகளை விளக்குவதற்காக நான்கு முகங்களைக் கொண்டுள்ளாள். (505)

**32. சூல - ஆதி - ஆயுத - ஸம்பந்நா. சூலம் முதலிய ஆயுதங்களுடன் கூடியவள்.**

32-1. சூலம், பாசம், கபாலம் எனும் மூன்று ஆயுதங்களையும் அபய முத்திரையையும் தனது நான்கு கைகளில் தாங்கி நிற்பவள் காகினீ. (506)

**33. பீத - வர்ணா. மஞ்சள் கலந்த செந்நிறமுள்ளவள்.**
**(507)**

19-3. பிரும்மமே ஸோம ரஸம். அதுவே மது. அதனைப் பருகுவதில் - பிரும்மானந்த பானத்தில் - ஈடுபட்டவர்கள், அதனால் இந்திரர்கள்- சிறப்புமிக்க (பிரும்ம) நோக்குள்ளவர்கள். விழித்து இருக்கும்போதும் கனவு காணும்போதும், தூங்கும்போதும் கூட துரீய நிலையில் காணத்தக்க பிரும்ம தர்சனம் பெற்றவர்கள். அவர்கள் கோரும் பிரும்ம சுகத்தை அளிப்பவள் தேவி.

19-4. மஹா வீரன் பிரஹ்லாதன், இந்திரன் தேவேந்திரன் இவர்களிருவருக்கும் வரமளிபப்பவள். இந்திரனுக்கும் பிரஹ்லாதனுக்கும் இடையே நூறாண்டுகள் கடுமையான போர் நிகழ்ந்தபோது தேவி தோன்றி இருவரையும் சமாதானப்படுத்தி அவர்கள் கோரிய வரத்தைத் தந்தாள். (தேவீ பாகவதம்). (493)

**20. ராகணீ - அம்பா - ஸ்வருபிணீ. ராகிணீ என்ற யோகினி வடிவில் இருப்பவள்.**

20-1. இந்த யோகினியை நெய்ப்பு மிக்க நெய்யன்னம் நிவேதனத்துடன் வழிபட ரத்ததாது சிறப்புடன் விளங்கும். பிரும்ம ஞானமும் அழகிய பேச்சும் உள்ளவராகலாம். அனாஹதத்தில் தெற்றிப் பற்கள் துலங்கும் இரு முகமுள்ளவளும் ரத்தாபிமானியும் அக்ஷமாலை முதலியதை ஏந்தியவளும், காலராத்திரி முதலிய சக்திகளால் சூழப்பட்டவளும், மஹா வீராகளுக்கு வரமளிப்பவளும், முக்கண்கள் கொண்டவளுமான ராகிணீயை தியானிக்கிறேன் என நெஞ்சுக்குழியைத் தொடுவது இரண்டாவது யோகினியின் நியாயாஸமாகும். (494)

(நா.495-503)

**லாகிநீ யோகினி.**

मणिपूराब्जनिलया वदनत्रयसम्युता ।

वज्रादिकायुधोपेता डामर्यादिभिरावृता ॥ 102 ॥

रक्तवर्णा मांसनिष्ठा गुडान्नप्रीतमानसा ।

समस्तभक्तसुखदा लाकिन्यम्बास्वरूपिणी ॥ 103 ॥

**மணிபூராப்ஜநிலயா வதநத்ரஸம்யுதா.**
**வஜ்ராதிகாயுதோபேதா டாமர்யாதிபிராவ்ருதா. 102**

**ரக்தவர்ணா மாம்ஸநிஷ்டா குடாந்நப்ரீதமாநஸா.**
**ஸமஸ்தபக்தஸுகதா லாகிந்யம்பாஸ்வரூபிணீ. 103**

**21. மணிபூர - அப்ஜ - நிலயா. மணிபூரமெனும் தாமரையில் வசிப்பவள்.**

21-1. மணிபூரம் என்ற சக்கிரம் 10 தளங்களுள்ளது. நாபியின் பக்கத்தில் ஸுஷும்நா காண்டத்தில் அமைந்தது. அக்கினியின் ஸ்தானம். அங்கு லாகினி யோகினி என்ற திருநாமம்பூண்டு தேவி வசிக்கிறாள். (495)

**22. வதந - த்ரய - ஸம்யுதா. மூன்று முகங்கள் உள்ளவள்.**

22-1. ஆகாசம் - வாயு - அக்கினி என்ற பூத தத்துவங்களை விளக்க மூன்று முகங்கள் கொண்டுள்ளாள் தேவி. (496)

**23. வஜ்ர - ஆதிக - ஆயுத - உபேதா. வஜ்ரம் முதலான ஆயுதங்களுடன் கூடியவள்.**

23-1. தன் நான்கு கைகளில் வஜ்ஜிரம், வேல், குண்டாந்தடி எனும் ஆயுதங்களையும் அபய முத்திரையையும் ஏந்தி நிற்பவள். (497)

**24. டாமரீ. ஆதிபி: - ஆவ்ருதா. டாமரீ முதலிய சக்திகளால் சூழப்பட்டவள்.**

24-1. பத்து இதழ்களில் $ட^{3}$ முதல் $ப^{2}$ வரை உள்ள 10 அக்ஷர சக்திகள் உள்ளன. அவை- டாமரீ, டங்காணீ, ணார்ணா, தாமஸீ, ஸ்தாண்வீ, தாக்ஷாயணீ, தாத்ரீ, நாரீ, பார்வதீ, பட்காரிணீ, அவர்களால் சூழப்பட்டவள். (498)



**25. ரக்தவர்ணா. செந்நிறமுள்ளவள்.**

25-1. இரத்தம் தனது தாது அக்னியால் பக்குவம் அடைந்ததும் அதன் ஸாரம் தசைக்கான மாம்ஸ தாதுவாக

**34. அதிகர்விதா. மிக்க கர்வமுள்ளவள்.**

34-1. கொழுப்பு தாதுவில் வசிப்பவளானதால் கர்வம் உள்ளவள். கர்வமுள்ளவனைக் கொழுப்பு அதிகமானவன் எனக் கூறுவர்.

**35. மேதோ - நிஷ்டா. கொழுப்பு தாதுவில் தங்குபவள்.**

35-1. உடலில் கொழுப்பாக மாறும் தாது மேதஸ் எனப்படும். மாம்ஸ தாது தனது தாது அக்னியால் பக்குவமடையும் அதன் ஸாரமாக மேதஸ் வெளிப்படுகிறது. நீர்த்து விடுவதால் சற்று மஞ்சள் படர்ந்த செந்நிறம் கொண்டது. அதனைத் தன்னிடமாகக்கொண்டு அதனிடத்தில் தனதென்ற அபிமானம் கொண்டவள். (509)

**36. மது - ப்ரீதா. தேனில் விருப்பமுள்ளவள்.**

36-1. மது - தேன், தேனால் ஆன போதை தரும் பானகம். இரண்டிலும் பிரியமுள்ளவள். (510)

**37. பந்திநீ - ஆதி - ஸமந்விதா. பந்திநீ முதலியவர்களுடன் கூடியவள்.**



37-1. ப$^{3}$ முதல் ல முடிய ஆறு எழுத்துக்களின் தேவதைகளாகிய பந்திநீ- பத்திரகாளீ- மஹாமாயா - யசஸ்விநீ, ரக்தா, லம்போஷ்டீ என்ற சக்திகளால் சூழப்பட்டவள். (511)

**38. ததி - அந்ந - ஆஸக்த - ஹ்ருதயா. தயிர் அன்னத்தில் ஈடுபட்ட மனமுள்ளவள்.**

38-1. தயிர் கலந்து பிசையப்பட்ட அன்னம் தத்யன்னம். அதில் அதிக நாட்டமுள்ளவள். (512)

**39. காகினீ - ரூப - தாரிணீ. காகினீ வடிவைத் தாங்கியவள்.**

39-1. ஸ்வாதிஷ்டானமெனும் சக்கிரத்தில் நான்கு முகங்களும் நான்கு கைகளும் மஞ்சள் கலந்த செந்நிறமும் கொண்டவளும் காலம் மிக்கவளும் கொழுப்பு தாதுவின் அபிமானி தேவதையும் தேனிலும்

தயிரன்னத்திலும் விருப்பமுள்ளவளும் பந்திநீ முதலிய ஆறு சக்திகளால் சூழப்பட்டவளுமான காகினீ என்ற யோகினியை வணங்குகிறேன் என்று தெப்புளுக்கும் குறிக்கும் நடுவே உள்ள பகுதியைத் தெடுவது காகினீ யோகினிக்கான நியாஸமாகும். (513)

**ஸாகினீ யோகினீ**

(நா. 514 - 520)

मूलाधाराम्बुजारूढा पञ्चवक्त्राऽस्थिसंस्थिता ।

अंकुशादिप्रहरणा वरदादिनिषेविता ॥ 106 ॥

मुद्गौदनासक्तचित्ता साकिन्यम्बास्वरूपिणी ॥

**மூலாதாராம்புஜாரூடா பஞ்சவக்த்ரா(அ)ஸ்த்திஸம்ஸ்த்திதா.**

**அங்குசாதிப்ரஹரணா வரதாதி நிஷேவிதா. 106**

**முத்கௌதநாஸக்தசித்தா ஸாகிந்யம்பாஸ்வரூபிணீ.**

**40. மூல - ஆதார - அம்புஜ - ஆரூடா. மூலாதாரக் கமலத்தில் வீற்றிருப்பவள்.**

40-1. நான்கு தளமுள்ளது குண்டலினீ சக்தியின் ஆதாரமான மூலாதாரம். ஆஸனத் துவாரத்தின்மேல் அமைந்துள்ள சக்கிரம். ஸாகினீ வடிவில் தேவி இங்கு அமாந்திருக்கிறாள். (514)

**41. பஞ்சவக்த்ரா. ஐந்து முகமுள்ளவள்.**

41-1. மூலாதாரம் பிருதிவீதத்துவத்தின் ஸ்தானமாகும். பிருதிவீதத்துவத்தில் அதற்குக் காரணமான மற்ற நான்கு பூதங்களின் சக்திகளும் அடங்கியிருப்பதால் ஐந்து பூத தத்துவங்களையும் விளக்குவதற்காக இந்த ஸ்தானத்தில் அமர்ந்துள்ள ஸாகினீ எனும் யோகினி ஐந்து முகம் கொண்டிருக்கிறாள். (515)

**42. அஸ்த்தி - ஸம்ஸ்த்திதா. எலும்பில் உறைந்திருப்பவள்.**

42-1. எலும்பு எனும் தாது மேதஸ் தாதுவின் ஸாரமாக உண்டாகிறது. தன் தாது என்ற எண்ணம் கொண்டு அதனைத் தேவி தன்னிருப்பிடமாகக் கொண்டிருக்கிறாள். (516)

**43. அங்குச - ஆதி - ப்ரஹரணா. அங்குசம் முதலிய ஆயுதங்கள் உள்ளவள்.**

43-1. அங்குசம், தாமரை, புத்தகம், ஞானமுத்திரை இவைகளை நான்கு கைகளில் ஏந்தியவள். தாமரை அமைதியின்மையை அழிப்பதாலும், புத்தகமும் ஞானமுத்திரையும் அறியாமையை அழிப்பதாலும் ஆயுதமாகின்றன. (517)

**44. வரதா - ஆதி - நிஷேவிதா. வரதா முதலியவர்களால் வழிபடப்பட்டவள்.**



44-1. மூலாதாரத்தின் நான்கு இதழ்களும் வ.ச.ஷ.ஸ என்ற நான்கு அக்ஷரங்களின் இருப்பிடம். அங்கு அந்த அக்ஷர சக்திகளான வரதா, ஶ்ரீ:, ஷண்டா, ஸரஸ்வதீ என்ற நால்வரும் ஸாகினீயை வழிபடுகிறார்கள். (518)

**45. முத்க - ஓதந - ஆஸக்த - சித்தா. பயற்றம் பொங்கலில் ஈடுபட்ட மனமுள்ளவள்.**

45-1. அரிசி 32 பங்கு, பயற்றம் பருப்பு 16 பங்கு, வெல்லம் 8 பங்கு, தேங்காய் துருவல் 8 பங்கு, மிளகு 2 பங்கு, இந்துப்பு 1 பங்கு, ஜீரகம் 1/2 பங்கு, நெய் 8 பங்கு இவைகளை வேக வைக்கத் தேவையான பசுவின் பால், இவைகளைக் கொண்டு இளந்தீயில் வெந்த பொங்கல் - பயறை முக்கியமாகக் கொண்டது - முத்க ஓதனம் ஆகும். ஸாகினீ யோகினிக்கு அதனை உட்கொள்வதில் மிகுந்த விருப்பம் உண்டு. (519)

**46. ஸாகிநீ - அம்பா - ஸ்வரூபிணீ. ஸாகிநீ தேவியைத் தன் வடிவமாகக் கொண்டவள்.**

46-1. மூலாதாரம் என்ற சக்கிரத்தில் வசிப்பவளும், ஐந்து முகமுள்ளவளும், அஸ்தி தாதுவில் உறைபவளும், அங்குசம் முதலியவற்றை ஏந்தியவளும், வரதா முதலிய நான்கு சக்திகளால் சூழப்பட்டவளும், பயிற்றுப்பொங்கலில் விருப்பம் கொண்டவளுமான தேவியை வணங்குகிறேன் என்ற பாவனையுடன் மூலாதார ஸ்தானத்தைத் தொடுவது ஸாகினீ நியாஸமாகும். இந்த யோகினியின் மேனி நிறம். இங்கு

குறிப்பிடப் பெறவில்லை. புகை போன்ற நிறமுள்ளவள், முக்கண்களுள்ளவள், மதுவருந்தியதால் மதமுடையவள் என்றும் இவளது தியான சுலோகம் கூறும். (520)

(நா. 521 - 527)

## ஹாகினீ யோகினி

आज्ञाचक्राब्जनिलया शुक्लवर्णा षडानना ॥ 107 ॥
मज्जासंस्था हंसवतीमुख्यशक्तिसमन्विता ।
हरिद्रान्नैकरसिका हाकिनीरूपधारिणी ॥ 108 ॥

**ஆஜ்ஞாசக்ராப்ஜநிலயா சுக்லவர்ணா ஷடாநநா. 107**
**மஜ்ஜாஸம்ஸ்த்தா ஹம்ஸவதீமுக்க்யசக்திஸமந்விதா.**
**ஹரித்ராந்நைகரஸிகா கிநீரூபதாரிணீ. 108**

**47. ஆஜ்ஞா - சக்ர - அப்ஜ - நிலயா. ஆஜ்ஞா சக்கிரமெனும் தாமரையில் உறைபவள்.**

47-1. ஆஜ்ஞா சக்கிரம் புருவங்களுக்கிடையே உள்ளது. ஈரிதழ் தாமரை வடிவுடையது. அதில் ஹாகினீ எனும் யோகினியாக இருப்பவள் தேவி. (521)

**48. சுக்ல - வர்ணா. வெண்ணிறமுள்ளவள். (522)**

**49. ஷட் - ஆநநா. ஆறு முகங்களுள்ளவள்.**

49-1. ஆஜ்ஞா சக்கிரம் மனத்தின் ஸ்தானம். மனத்தின் மூலப்பொருளான ஐந்து பூதங்களின் சக்திகளையும் மனத்தின் சக்தியையும் விளக்குவதற்காக ஆறு முகங்கள் கொண்டவள். ஆஜ்ஞா சக்கிரமானது விசுத்தி முதலிய ஐந்து சக்கிரங்களுக்கும் தலைமை இடமானதால் அந்த சக்கிரங்களின் செயல்களையும் கட்டுப்படுத்தும் சக்தி படைத்தது. (523)

**50. மஜ்ஜா - ஸம்ஸ்த்தா. மஜ்ஜை எனும் தாதுவில் இருப்பவள்.**

50-1. எலும்பினுள் உள்ள சத்து மஜ்ஜை. அதைத் தனது இருப்பிடமாகக் கொண்டவள். அதன் அபிமானி தேவதையாக அதனுள் உறைபவள் தேவி. (524)

**51. ஹம்ஸவதீ - முக்ய - சக்தி - ஸமந்விதா. ஹம்ஸவதியை முன்னிட்ட சக்திகளுடன் கூடியவள்.**



51-1. ஆஜ்ஞா சக்கிரத்தின் இரு தளங்களிலும் ஹ - க்ஷ என்ற இரு அக்ஷர சக்திகள் ஹம்ஸவதீ, க்ஷமாவதீ என்ற பெயருடன் விளங்குகின்றனர். அவர்களோடு கூடியவள். (525)

**52. ஹரித்ரா - அந்ந - ஏக - ரஸிகா. மஞ்சள் பொங்கலில் தனித்த ஈடுபாடுள்ளவள்.**

52-1. மஞ்சள் பொடி சேர்த்துப் பொங்கிய அன்னம் ஹரித்திரான்னம். அதனிடம் அதிக ஈடுபாடு கொண்டவள். (526)

**52-1. ஹாகிநீ - ரூப - தாரிணீ. ஹாகிநீ என்ற வடிவைக் கொண்டவள்.**

53-1. ஆஜ்ஞை சக்கிரத்தில் ஹம்ஸவதீ, க்ஷமாவதீ என்ற இரு சக்திகள் சூழ மஜ்ஜை எனும் தாதுவின் அபிமானி தேவதையாகவும், வெண்ணிறமும் ஆறு முகங்களும் கொண்டவளாகவும், மஞ்சள் பொங்களில் பிரியமுள்ளவளுமான ஹாகிநீ தேவியை வணங்குகிறேன் எனப் புருவ நடுவில் தொடுவது ஹாகிநீ யோகினியின் நியாஸமாகும். ஞான முத்திரை, உடுக்கை, அக்ஷமாலை, கபாலம் இவை ஏந்திய நான்கு கைகளுள்ளவள், முக்கண்கள் உள்ளவள், எல்லா ஸுகங்களையும் அளிப்பவள் என்ற சிறப்புகள் அதிகமாகத் தியான சுலோகத்தில் கூறப்பட்டுள்ளன. (527)

(நா. 528-534)

**யாகினீ யோகினி**

सहस्त्रदलपद्मस्था सर्ववर्णोपशोभिता ।
सर्वायुधधरा शुक्लसंस्थिता सर्वतोमुखी ॥ 109 ॥
सर्वौदनप्रीतचित्ता याकिन्यम्बास्वरूपिणी ।

**ஹஹஸ்ரதளபத்மஸ்த்தா ஸர்வவர்ணோபசோபிதா**
**ஸர்வாயுததரா சுக்லஸம்ஸ்த்திதா ஸர்வதோமுகீ.109**
**ஸர்வௌதநப்ரீதசித்தா யாகிந்யம்பாஸ்வரூபிணீ**

**54. ஸஹஸ்ர - தள - பத்மஸ்த்தா. ஆயிரம் தளங்களுள்ள தாமரையில் இருப்பவள்.**

54-1. பிரும்மரந்திரத்தில் ஆயிரம் தளங்களுள்ள தாமரை போல் இருப்பது ஸஹஸ்ராரசக்கிரம். அதில் இருப்பவள். (528)

**55. ஸர்வ - வர்ண - உபசோபிதா. எல்லா நிறங்களாலும் அழகாக இருப்பவள்.**



55-1. யாகிநீ எல்லா யோகினீ சக்திகளும் பொருந்தியவள். மற்ற யோகினிகளின் மேனி ஒவ்வொரு நிறம் கொண்டது. இவள் எல்லா நிறங்களும் கொண்ட மேனி படைத்தவள். அ முதல் க்ஷ வரை உள்ள எல்லா எழுத்துக்களின் சக்திகளும் இவளைச் சூழ்ந்து நிற்கின்றன. அ முதல் ள வரை எழுத்துக்கள் ஐம்பது. அவைகளைத் திருப்பித் தலைகீழாகச் சொல்லும் போது ள முதல் அ வரை எழுத்துகள் ஐம்பது. ஆக நூறு. உப என்ற சொல் கடபயாதி முறையில் (18.22.3) 10ஐக் குறிக்கும. ஸர்வ வர்ணங்களை – நூறானதைப் பத்து தடவை திருப்பிச் சொல்ல ஆயிரம் ஆகிறது. ஆயிரம் இதழ்களில் ஆயிரம் எழுத்துக்களின் சக்திகள் அமைந்திருக்கின்றன. பத்து, ஆயிரம் என்பது எண்ணற்றது

என்றும் பொருள் கொண்டது. 100 அக்ஷரங்களையும் எண்ணற்ற தடவை திருப்பிச் சொல்ல எண்ணற்ற அக்ஷரங்கள். அவற்றின் சக்திகள் நிரம்பிய எண்ணற்ற இதழ்கள் கொண்ட ஸஹஸ்ராரம். அதில் விளங்குபவள். (529)

**56. ஸர்வ - ஆயுத - தரா. எல்லா ஆயுதங்களையும் தாங்கி இருப்பவள்.**

56-1. ஆயிரக்கணக்கான கைகளில் ஆயிரக்கணக்கான ஆயுதங்களைத் தாங்கி நிற்பவள். (530)

**57. சுக்ல - ஸம்ஸ்த்திதா. சுக்கில தாதுவில் அமர்ந்திருப்பவள்.**

57-1. சுக்கிலமானது ரஸம் முதலிய எல்லா தாதுக்களின் ஸாரமானது. உடலின் சக்திகள் அனைத்திற்கும் இருப்பிடம். ஆண் பெண் இரு பாலரிடம் உள்ளது. இரு பாலருக்கும் நிறைவைக் கொடுப்பது. உடல் முழுவதும் சுற்றி வலிவு, ஸகிப்புத் தன்மை, ஜீவசக்தி ஊட்டுவது. உடலுறவின் போது ஆணிடம் வெளியாகும் சுக்கிலம் இந்த சுக்கிலத்தின் ஓரம்சம். உயிர் உள்ளவரை உடலைத் தாங்குவது. அதில் தனது என்ற எண்ணத்துடன் அமர்ந்திருப்பவள். (531)

**58. ஸர்வதோ - முகீ. எங்கும் முகமுள்ளவள்.**

58-1. சக்திகளை ஆயிரக்கணக்கான முகங்களால் வெளிப்படுத்துபவள். எல்லா திக்குகளையும் நோக்கி ஆயிரக்கணக்கான இவளது முகங்கள் அமைந்துள்ளன. (532)

**59. ஸர்வ - ஓதந - ப்ரீத - சித்தா. எல்லா உணர்வுகளிலும் விருப்பம் கொண்ட மனமுள்ளவள்.**

59-1. பாயஸான்னம் முதல் ஹரித்ரான்னம் வரை முன் கூறப்பட்ட அன்னங்களிலும், மற்றும் பலவகைப்பட்ட அன்னங்களிலும் ஈடுபாடு கொண்டவள். (533)

**60. யாகிநீ - அம்பா - ஸ்வரூபிணீ. யாகினீ தேவியின் வடிவைக் கொண்டவள்.**

60-1. ஸஹஸ்ரார கமலத்தில் பல நிறங்களுள்ளதும் பல

முகங்களுள்ளதும் பல ஆயுதங்கள் கொண்ட பல கைகளுள்ளதுமான வடிவம் தாங்கி சுக்கில தாதுவின் அபிமானதேவதையாகவும் எல்லா அன்னங்களையும் விரும்பி ஏற்பவளாயும் உள்ள யாகினீ யோகினியை வணங்குகிறேன் எனப் பிரும்மரந்திரத்தைத் தொடுவது யாகிநீ யோகினியின் நியாஸமாகும். (அ முதல் ள வரை வரிசையாகவும் திருப்பியும் அக்ஷரங்களை ஒவ்வொரு தடவையும் கூறிப் பத்து தடவை நியாஸம் செய்வது மரபு.)

60-2. இங்கு கவனிக்கத்தக்கது - ஒவ்வெரு யோகினிக்கும் ஒரு தனிப்பட்ட தாதுவிடமும், ஒரு தனிப்பட்ட உணவு வகையிலும் விருப்பம் காணப்படுகிறது. அந்த தாதுவை அளவில் அதிகமாக்கி சக்திமிக்கதாகச் செய்வதற்கு அந்த உணவு ஏற்றது. அதனால் அவைகளை நிவேதனப் பொருளாக ஆக்கி அந்தந்த யோகினிக்கு அர்ப்பணம் செய்வர். உலகியலிலும் இது பொருந்தக் கூடியதே. வழிபாட்டிலும் அந்தத் தொடர்பு நல்லதெனத் தெளிவாகிறது. பால் பொங்கல் அன்னச் சத்து மிக்க உணவு. அது ரஸதாதுவை வளப்படுத்தித் தோலை நன்கு பாதுகாக்கக் கூடியது. அதனால் தோலின் அபிமான தேவதையான டாகினிக்கு அது நிவேதனப் பொருளாகிறது. இப்படியே மற்றவற்றையும் பொருத்திப் பார்க்கலாம். (534)

❋ ❋ ❋

அதிகாரம் - 23

# தேவியின் சில விபூதிகள்

(நா. 535 - 547)

स्वाहा स्वधाऽमतिर्मेधा श्रुतिः स्मृतिरनुत्तमा ॥ 110 ॥
पुण्यकीर्तिः पुण्लभ्या पुण्यश्रवणकीर्तना ।
पुलोमजार्चिता बन्धमोचनी बर्बरालका[1] ॥ 111 ॥

**ஸ்வாஹா ஸ்வதா(அ)மதிர்மேதா ச்ருதிః ஸ்ம்ருதிரனுத்தமா. 110**
**புண்யகீர்த்திః புண்யலப்யா புண்யச்ரவண கீர்த்தநா.**
**புலோமஜார்ச்சிதா பந்தமோசநீ பர்பராலகா[1]. 111**

---

1 बन्धुराकला பந்துராலகா என்று பாடம்.

**1. ஸ்வாஹா. ஸ்வாஹா வடிவானவள்.**

1-1. அக்கினியில் ஹோமம் செய்யும் போது தேவதையின் பெயரைக் குறிப்பிட்டு இது அப்பணம் என்ற பொருளில் ஸ்வாஹா என்று குறிப்பிடுவர். ஸ்வாஹா, ஸ்வதா, வௌஷட், வஷட், ச்ரௌஷட் என்ற சொற்கள் வேள்விகளில் பயன்படுபவை. அக்நயே ஸ்வாஹா எனும் போது அக்கினி தேவருக்கு இது அர்ப்பணமாகிறது என்று பொருள். தான் கொடுக்கும் ஆஹுதியைப் பெறுவதற்குத் தேவர்களை அழைப்பதற்கேற்ற இனிய சொல் ஸ்வாஹா. தேவதை இதனால் நன்கு மகிழ்ச்சி அடையும்படி கூப்பிடப்படுவதால் ஸ்வாஹா. (ஸுஷ்ட்டு ஆஹுயதே அநயா) புகழும் இனிய சொற்களில் மகிழ்பவர்கள் தேவர்கள். அக்நயே ஸ்வாஹா என்றவுடன் அக்னி தேவதையை அடையாளம் கண்டுகொண்டு ஹோமம் பண்ணப்பட்ட பொருள் அவரிடம் செல்கிறது. (ஸ்வகீயாந் ஆஜிஹுதே, கச்சதி, ஸ்வீயத்வேந ஸம்யக் ஜாநாதி). அத்தகையத் தெய்வீக சக்தி நிரம்பிய ஸ்வாஹா என்ற சொல் வடிவில் இருப்பவள்.

1-2. அக்கினி தேவனின் மனைவி ஸ்வாஹா. சிவனது எட்டு மூர்த்திகளில் அக்னி மூர்த்தியான சிவன் பசுபதி என்பவர். (9.2.1) அவரது மனைவியாயிருப்பவள் ஸ்வாஹா. மாஹேச்வரம் என்ற பீடத்தில் உறைந்திருப்பவள் ஸ்வாஹா தேவி. (535)

**2. ஸ்வதா. ஸ்வதாவாக இருப்பவள்.**

2-1. பித்ரு தேவதைகளுக்காகச் செய்யப்படும் சடங்குகளில் இது அர்ப்பணம் என்ற பொருளில் வழங்கப்படும் சொல் ஸ்வதா. மிகுந்த சிரத்தையுடன் பித்ரு தேவதைகளுக்கு இது அப்பணம் செய்யப்படுகிறது என்றும் இதற்குப் பொருள் உண்டு. (ஸுஷ்டு ஆதீயதே அநயா). பொருள் வழங்கும் முறையாலும் சிரத்தையாலும் மகிழ்பவர்கள் பித்ருக்கள். அவர்களுக்குத் திருப்தி அளிக்கும் ஸ்வதா என்ற சொல் வடிவினள். (536)

**3. அமதி: அவித்யை வடிவானவள்.**

3-1. இங்கு ஸ்வதாமதி: எனும் போது ஸ்வதா, அமதி: என்று இரண்டு நாமங்கள் பிரிக்கப்படுகின்றன. மதி: என்ற நாமம் 445 ஆவதாக முன் வந்துவிட்டது. அவித்யை - அறியாமை. ஓரளவு அறிந்திருந்தும் அறிய வேண்டியதை எப்படிஅறியவேண்டுமோ அப்படி அறியாததால் நமது அறிவு அவித்யை அறியாமை எனப்படும். ஈஷத் மதி: அமதி:. சிறிதளவுள்ள அறிவு, பொறிகள் மூலம் பெறும் அறிவு சிற்றறிவு. அந்தச் சிற்றறிவாக இருப்பவள் தேவி.

3-2. அவ்யக்தம், மஹத், அஹங்காரம் முதலிய முதலில் படைக்கப்பட்ட தத்துவங்களில் மத் என்பது புத்தி தத்துவம். அதற்கு மூலமான அவ்யக்தத்தில் புத்தி தத்துவம் விரிவு பெறாது இருந்தது. (17.8.1.2) அப்படிப் புத்தி தத்துவம் விரிவு பெறாத அவ்யக்தமானவள். படைக்கப்படவிருப்பவர் அனைவரது அவித்யையின் ஸமஷ்டி அது. அதன் வடிவில் இருப்பவள். (537)

**4. மேதா. மேதையாயிருப்பவள்.**

4-1. அறிந்து வெகு நாட்களுக்குப் பிறகு அறிந்த பொருளின் வடிவு தேய்ந்து மறைந்துவிடும். மிகச் சிரமப்பட்டால் அதை நினைவிற்குக் கொணரலாம். அவ்விதம் சிரமமின்றி, அறிந்தது மனத்தில் ஆழப்பதிந்து எப்போதும் புத்தம் புதிதாகவே நினைத்த உடன் தெள்ளெனத் தோன்றுவதற்கு மேதா சக்தி நன்கு அமைந்திருக்க வேண்டும். ஆழ்ந்து, தெளிந்து, விரிந்த அறிவு மேதை அதன் வடிவாக இருப்பவள் தேவி.

4-2. அமதி: என்ற முன் நாமத்தில் குறிப்பிட்டபடி மஹத் எனும் புத்தி தத்துவமாகவும் அதற்குப் பின்னருள்ள படைப்புகளாகவும் உள்ளவை மேதா என்ற தேவியின் வடிவங்களாகும்.

4-3. காச்மீரத்தில் கோவில் கொண்டுள்ள தேவி மேதை எனப்படுவாள். (538)

**5. ச்ருதி:. வேதங்களாயிருப்பவள்.**

5-1. ச்ருதி:- கேட்டே ஓதத்தக்கது. வேதம் புத்தகத்தில் படித்து அறிவது அல்ல. ருக், யஜுஸ், ஸாமம், அதர்வணம் எனும் நான்கு வேதங்களாயிருப்பவள். ச்ருதி: கேட்பது. சிரவணம் (பரம் பொருளைப் பற்றிச் சிந்திப்பது) நிதித்யாஸனம் (எண்ண வடிவில் பரம் பொருளிடம் பதிந்து விடுவது) என்ற ஆத்ம ஞானத்திற்கான மூன்று வழிகளில் சிரவண வழியாயிருப்பவள். (539)

**6. ஸ்ம்ருதி. ஸ்மிருதியாயிருப்பவள்.**

6-1. ஸ்மிருதி.-நினைவு நூல். வேதத்தில் கூறப்பட்டுள்ள தர்ம - அதர்மங்களை நினைவிற் கொண்டு தெளிவாக வரையறுத்து ருஷிகள் எழுதியவை ஸ்மிருதி எனப்படும் நூல்கள். அந்த ஸ்மிருதியாயிருப்பவள்.

6-2. சிரவணம் என்ற ஆத்ம ஞான வழியில் கேட்டதைத் தனித்திருந்து பகுத்தறிந்து ஐயங்களைப் போக்கிக்கொள்ளும் உபாயம் மனனம் ஆகும். கேட்டதை நினைவுப்படுத்திக்கொள்வது மனனத்திற்கு அவசியமானதால் மனனம் ஸ்ம்ருதி ஆகிறது. மனனமாகிய ஆத்ம ஞான ஸாதனமாக இருப்பவள். சென்றதை நினைத்து நடப்பதை அறிந்து அதன் அடிப்படையில் நடக்கவிருப்பதை அகக்கண்கொண்டு ஊஹிக்கும் சக்தியை ஸ்மிருதி என்பர். அதனை வடிவாகக் கொண்டவள். (540)

### 7. அநுத்தமா. தன்னைக்காட்டிலும் மிக்கார் இல்லாதவள்.

7-1. தேவியைவிடச் சிறந்ததெதுவும் எங்கும் இல்லை. அதனால் அவள் அநுத்தமா. (யஸ்யா உத்தமம் நாஸ்தி) ந நுத்தா மா யஸ்யா:- அநுத்தமா. (நுத்தா - பரப்ரேரிதா) ம என்பது செல்வம், புத்தி, சக்தி இவைகளைக் குறிக்கும். இவை செயற்கையாகப் பிறபொருள் சோக்கையாலும் ஏற்பட்டால் நுத்தா. தேவியிடமுள்ள செல்வமும், புத்தியும், சக்தியும் இயற்கையாக ஏற்பட்டவை - அநுத்தா. இயற்கையாகச் செல்வம், புத்தி, சக்தி முதலியவற்றைப் பெறாதவர்கள் பிறர் உதவியாலும் பிற பொருளைச் சேர்த்துக்கொள்வதாலும் அவைகளை அடைகின்றனர். தேவி சென்றடையாச் சீர் உடையாள் சீர் அவள் ஸ்வரூபம். அதனை அவள் அடையவேண்டியதில்லை. சீர் நம்மைக் காட்டிலும் வேறுபட்டிருப்பதால் அது நம்மை சென்றடைகிறது. அல்லது நாம் அதனைச் சென்றடைகிறோம். செல்வமும், புத்தியும், சக்தியும் ஸ்வபாவமாகவும், ஸ்வரூபமாகவும் கொண்டவள். (541)

### 8. புண்ய - கீர்த்தி:. புண்யமான கீர்த்தி உள்ளவள்.

8-1. நற்செயல்களின் பின் விளைவு புண்ணியம். இந்தப் பின்விளைவு உடனேயோ காலம் கடந்தோ இப்பிறவியிலோ வேறு பிறவியிலோ அனுபவிக்கக் கூடியதாக இருக்கலாம். பணிகளின் தன்மைக்கு மாறுபட்டதாகவும் அதன் பின் விளைவு அமையக்கூடும். உடலை வறுத்தியும் தனதென இருந்ததைப் பிறர்க்கு அளித்தும் செய்த வேள்வி தானே அனுபவிக்கும் போகமான ஸ்வர்க்க ஸுகத்தைத் தரக்கூடியது. வேள்வியால் ஏற்பட்ட புண்யம் ஸ்வாக்க ஸுகமாக மாறி அனுபவத்தைக் கொடுத்தது. நற்பணிகளால் விளைந்ததும் ஸுகானுபவம் தரவல்லதுமான பின் விளைவு புண்ணியம். இது கண்களுக்குப்

புலப்படாததாகையால் அத்ருஷ்டம் எனப்படும். புண்யத்தை விளைவிக்கவல்ல நற்பணிகளையும் (ஸுக்ருதம்) புண்ணியமென்பர். நற்பணிகளைப் புரிவதால் மீண்டும் நற்பணிகளில் ஈடுபடும் விருப்பம் ஏற்படும். அப்படி நற்பணிகளில் ஈடுபடத் தூண்டுமளவிற்கு ஆழ்மனத்தில் ஏற்பட்ட தடத்தையும் (வாஸனையையும்) புண்ணியம் என்பர். அத்தகைய புண்ணியம் தரவல்ல புகழுடன் கூடியவள் தேவி. (542)

## 9. புண்ய - லப்யா. புண்ணியத்தால் அடையக் கூடியவள்.

9-1. முன் பிறவிகளிலும் இப்பிறவியிலும் செய்துள்ள நற்பணிகளால் விளைந்த புண்ணியத்தாலேயே தேவியை அடைய முடியும். அவளை அறிவதும், அவளை வழிபடுவதும், அவளது அடியாராவதும் புண்ணியத்தால் மட்டும் கிட்டக்கூடியவை. கெட்ட வழிகளில் சென்று, கெட்ட பணிகள் புரிந்து, கெட்ட வாஸனை நிரம்பிய மனத்தில் அவள் தங்கமாட்டாள். கெட்ட வினைகள் நம்மை அவளிடமிருந்து வெகு தூரத்திற்கு அகற்றிவிடும். நல்வினைகள் அவளிடம் நம்மைச் சேர்க்கும். (543)

## 10. புண்ய - ச்ரவண - கீர்த்தநா. புண்ணியம் தரவல்ல சிரவண கீத்தனங்கள் உள்ளவள்.

10-1. சிரவணம் - அவள் புகழ் பாடப்படுவதைக் கேட்பது. கீர்த்தனம் - அப்படிக் கேட்டறிந்த அவள் புகழைத் தானே பாடுவது. இப்பிறவியிலும் முற்பிறவியிலும் சேமித்த புண்ணியத்தின் பயனாகவே தேவியின் புகழைக் கேட்கவும்- பாடவும் வாய்ப்பு கிட்டும். அவ்விதம் கிடைத்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டால் அதில் ஈடுபாடு மிகுந்து மீண்டும் மீண்டும் அவள் புகழ் பாடச் செய்யும். அதனால் இவ்வாழ்விலும்- மறுவாழ்வுகளிலும் க்ஷேமம் தரவல்ல புண்ணியம் சேரும். இதுகாறும் பற்பல கெட்ட பணிகளில் ஈடுபட்டிருந்ததால் ஆழ்மனத்தில் ஏற்பட்டிருந்த கெட்ட வாஸனைத் தடம் அழியும். நல்வாஸனைத் தடம் அமையும். புண்ணியம் தரவல்லதும், கேட்கக்கூடியதும், பாடக்கூடியதுமான புகழுடன் கூடியவள். (544)

## 11. புலோமஜா - அர்ச்சிதா. இந்திராணியால் பூஜிக்கப்பட்டவள்.

11-1. புலோமன் எனும் அஸுரனின் பெண் சசீதேவி. இந்திரனின் மனைவி. இந்திரன் பதவி இழந்து ஒளிந்து வாழ்ந்து கொண்டிருந்த சமயத்தில் நஹுஷன் தாற்காலிகமாக இந்திரப்பதவி பெற்றான். இந்திரனது மனைவியும் தன் மனைவியாக வேண்டுமென்று நஹுஷன் விரும்பினான். தேவியை வழிபட்டு இந்திராணி நஹுஷனது துன்புறுத்தலிலிருந்தும் விடுபட்டாள். (தேவீ பாகவதம்) இந்திரனது நல்வாழ்விற்கும், தன் கற்பின் பாதுகாப்பிற்கும் இந்திராணியால் வழிபடப் பெற்றவள். (545)

## 12. பந்த்த - மோசநீ. தளைகளிலிருந்து விடுவிப்பவள்.

12-1. மனிதனின் சுதந்திரத்தைக் கட்டுப்படுத்தும் தளைகள் பந்தங்கள் எனப்படும். மனிதனைப் பல தளைகள் கட்டுப்படுத்துகின்றன. சில தளைகள் தர்ம வடிவில் அமைந்து நன்மையைத் தருபவை. சில தளைகள் அதர்ம வடிவில் அமைந்து கெடுதியை விளைவிப்பவை. சில காலம் கடந்தும், சில உடனடியாகவும் தளையாகும். சிறைவாசம் முதலியவைகளும் தளைகளே. இத்தனைத் தளைகளுக்கும் மூலகாரணமாக உள்ளது அஜ்ஞானம் என்ற பிறவியைத் தரும் தளை. பிறந்ததால் மற்றத் தளைகள் சுழ்ந்தன. அத்தகையத் தளைகளனைத் திலிருந்தும் விடுவிப்பவள் தேவி. பந்தமோசநீ என்ற நாமத்தை மட்டும் ஜபம் செய்வதாலேயே தளைகள் விலகும். மற்ற நாமங்களையும் ஜபித்துத் தேவியையும் வழிபட்டு அவளது அருள் பெற்றுவிட்டால் நீங்காத தளைகளும் உண்டோ?

12-2. உஷாவை மணப்பதற்குச் சென்ற அநிருத்தன் என்ற கிருஷ்ணனின் பேரன் உஷாவின் தந்தையான பாணனால் சிறைப்படுத்தப்பட்டான். அநிருத்தன் தேவியை வழிபட்டான். தளைகள் நீங்கின (ஹரி வம்சம்). ஏகாவளீ என்ற பெண் காலகேது எனும் அஸுரனால் சிறைப்படுத்தப்பட்டாள். ஏகாவளீயின் தோழி யசோவதீ, தேவியை வழிபட்டு, மந்திர பலத்தால் ஏகாவளீயை மீட்டாள் (தேவீ பாகவதம்). இப்படிச் சிறைகளிலிந்தும் விடுவிப்பவள் தேவி. (546)

## 13. பர்பர - அலகா. நுனி சுருண்டு குட்டையான முன் தலையிலுள்ள கேசங்களோடு கூடியவள்.

13-1. முன் தலையிலுள்ள கேசங்கள் குட்டையாகவும், அடுக்கடுக்காகவும், நுனி சுருண்டும் அமைந்து நெற்றியின் மேல்புறத்தை அழகாக மறைக்கின்றன. பந்துராலகா என்ற பாடமுமுண்டு. பொருள் அதே. (547)

(நா. 548 – 552)

विमर्शरूपिणी विद्या वियदादिजगत्प्रसूः ।
सर्वव्याधिप्रशमनी सर्वमृत्युनिवारिणी ॥ 112 ॥

**விமர்சரூபிணீ வித்யா வியதாதிஜகத்ப்ரஸூ:.**
**ஸர்வவ்யாதிப்ரசமநீ ஸர்வம்ருத்யுநிவாரிணீ. 112**

**14. விமர்ச ரூபிணீ. விமர்ச வடிவினள்.**

14–1. விமர்சம் – சலனம், துடிப்பு, விளக்கம். பொறிகளால் அறியத்தக்க வடிவமற்றிருப்பதால் மனத்தாலும், வாக்காலும், எட்ட முடியாத பேரொளியாகப் பரம்பொருள் விளங்குகிறது. அதிலிருந்தும் தனித்துப் பிரிக்க முடியாதபடி பரம்பொருளின் சக்தி பரம்பொருளிடம் அடங்கியிருந்தது. உலகைப் படைக்கும் எண்ணமாக அந்தச் சக்தி பரம்பொருளிடமிருந்து முதலில் வெளிப்பட்டது. சக்தியின் இயற்கையான உருவம் துடிப்பு (ஸ்ப்புரணம்). அலையின்றிச் சலனமற்றுக் காணப்படும் பேரொளிக்கடலாக இருந்த பரம்பொருள் துடிப்புத் தன்மை கொண்ட சக்தியின் சலனத்தால் தானும் அலையுள்ள கடல்போல் சலனம் அடைந்ததாகி ஐந்தொழில்கள் புரியும் ஐந்து பிரும்மங்களான பிரும்மா, விஷ்ணு, ருத்திரன், ஈசுவரன், ஸதாசிவன் என்ற ஐவரைத் தோற்றுவித்தது. பிரகாசமாக – பேரொளியாகப் புலப்படாதிருந்த பரம்பொருளிடம் சலனமேற்படுத்தி அதனைப் புலப்பட வைத்தது இந்தச் சக்தி. விமர்சம் – விளக்கம். இதுகாறும் விளங்காதிருந்த பரம்பொருள் சக்தியின் துடிப்பால் வடிவம், குணம் – செயல் முதலியவற்றைப் பெற்று உருவகப்படுத்தக் கூடியதாயிற்று. பரம்பொருளை விளக்கிய சக்தியாயிருப்பவள் தேவி.

14–2. மனத்தால் கருதப்பட்ட பொருள் பிறருக்கு விளங்கச் சொல் வடிவத்தைப் பெறவேண்டியிருக்கிறது. சொல்லின்றிப் பொருள் விளங்காது. பொருளின்றிச் சொல் தோன்றாது. பரம்பொருள் விளங்க, விமர்சம் அடைய, செயலாற்றச் சக்தி உதவுகிறது. அந்தச் சக்தி பரம்பொருளை விட்டுத் தனித்திருக்காது. இதனையே வாகர்த்தாவிவ ஸம்ப்ருக்தௌ .... பார்வதீ பரமேச்வரௌ, சொல்லும் பொருளும் போல் இணைந்தவர்கள் பாவதீ பரமேசுவரர்கள் என ரகுவம்சத்தின் முதல் சுலோகத்தில் காளிதாசன் குறிப்பிடுகிறார். சொல்லாகி விளங்குபவள் தேவி. விளக்க உதவும் சொல்லிற்குப் பொருளாக ஆதாரமாகி நிற்பவர் பரமேசுவரன். விளக்கின்றிப்

பொருள் துலங்காது. பொருளின்றி விளக்கு எதனையும் விளக்க முடியாது. சக்தியின்றிச் சிவன் செயலாற்ற முடியாது. சிவனின்றிச் சக்தி தன் துடிப்பைக் காட்ட முடியாது. இப்படி பிரகாச விமர்ச வடிவினள் தேவி. ஒரு பொருளையும் தனித்துப் புலப்படுத்தாத பேரறிவு (நிராகார ஞானம்) பேரெளி – பிரகாசம் ஆகும். அறிபவனையும், அறியப்படும் பொருளையும் பிரித்துக்காட்டும் ஸாகாரஞானம், விமர்சமாகும். விமர்ச வடிவினள் தேவி. விமர்ச வடிவமே பிரகாசத்தை அறிய உதவுகின்றது. (548)

### 15. வித்யா. முக்தி தரும் வித்தியையாயிருப்பவள்.

15-1. விமர்ச ரூபிணியான தேவியே வித்தியையாகவும் இருக்கிறாள். அறிவைத் தருவது வித்யை. பரம்பொருளை வேறுபட்ட பல பொருள்களாக அறிவிப்பவை அனைத்தும் அவித்தியை. பரம்பொருளைப் பரம்பொருளாக உணர்த்துவது மாயையை விளக்கி ஞானத்தைத் தரும் வித்தியை. பிரும்ம வித்யா ஸ்வரூபிணி. (549)

### 16. வியத் - ஆதி - ஜகத் - ப்ரஸூ:. ஆகாசம் முதலாகத் தோன்றிய உலகின் தாய்.

16-1. பரம்பொருளான ஆத்மாவிடமிருந்து ஆகாயமும், ஆகாயத்திலிருந்து வாயுவும், வாயுவிடமிருந்து அக்னியும், அக்னியிலிருந்து ஜலமும், ஜலத்திலிருந்து பிருதிவியும், அதனிடம் இருந்து பயிர்களும், பயிர்களிலிருந்து உணவும், உணவிலிருந்து மனிதனும் தோன்றியதாக தைத்திரீய உபநிடதம் (2-1) கூறும். பரம்பொருளிடமிருந்து தோன்றிய முதல் பூதம் ஆகாசம் அதனைத் தொடர்ந்து மற்ற பூதங்கள் தோன்றின. உலகம் எப்போதும் சலனத்தையே தன் ஸ்வபாவமாகக் கொண்டது. (ஜகத் – எப்போதும் சென்று கொண்டே இருப்பது) அந்த உலகின் காரணமாகப் பூதங்கள் அமைந்தன. ஆகாசம் முதலான உலகைத் தோற்றுவித்த அன்னை தேவி. வியத் – (வ்யேதி இதி) விலகி நிற்பது. ஆகாசம் புலப்படுவது போலத் தோன்றி நெருங்கும்போது காண்பவனை விட்டு விலகி நிற்கும் (புலப்படாது). பரம்பொருள் புலப்படுவது போல் தோன்றும். புலப்பட்டுவிட்டது என்ற உணர்வு தோன்றும் போதே அது புலனுக்கு வெகு தூரத்தில் இருப்பதாகத் தெரியும். இந்த நிலை அதனிடமிருந்து முதலில் தோன்றிய ஆகாயத்திலும் உண்டு. அதனால் அதற்கு வியத் – புலனுக்கு எட்டிப் போவது என்று பெயர். அதனை முதலில் வெளியில் விடுவித்தவள் தேவி. (17.8.1)

16-2. கருவாகத் தாங்கிய சிசு இனி தன்னுள்ளிருந்து ஊட்டம்பெறத் தேவையில்லை. அதனால் தனித்திருக்க முடியும். வெளியிலிருந்து ஊட்டம் பெற முடியும் என்ற நிலை ஏற்பட்டதும் தாய் அதனைத் தன்னிடமிருந்து பிரித்து வெளியிடுகிறாள். அந்தத் தாய் ப்ரஸூ:- பிரஸவிப்பவள். ஆகாசம் முதலியவற்றைக் கருவாகக் தன்னில் கொண்டு சிறிது காலம் வளர்த்துப் பின்னர் தனி உருவம் கொண்டவைகளாக அவைகளை வெளிப்படுத்திய தாய். (550)

### 17. ஸர்வ - வ்யாதி - ப்ரசமநீ. எல்லா நோய்களையும் அடக்குபவள்.

17-1. வ்யாதி: - விசேஷத: ஆதீயதே, செயற்கையாக நம் மேல் அழுத்தமாகப் படிவதால் நோய்களுக்கு வியாதி என்ற பெயர். உடலின் இயற்கை நிலை ஆரோக்யம். நோய் செயற்கையாக நம் மேல் பலாத்காரமாகத் திணிக்கப்படுகிறது. ஆதி:- (ஆதீயதே) என மனநோயைக் குறிப்பிடுவர். அதுவும் அப்படிச் செயற்கையாக வெளியிலிருந்து மனத்தின் மேல் படிகின்றது. மன நோய் இருப்பது வெளியில் தெரியாது. அதன் குறிகளைக் கொண்டே அறியமுடியும். உடல் நோய் வியாதி. இது உடலில் பதிந்திருப்பது வெளிப்படையாகத் தொயும். வியாதியினுள் ஆதி - மனநோயும் அடங்கும். எல்லா மனநோய்களும் உடன் தீராவிட்டால், அது உடல் நோயாகவும் மாறும். அத்தகைய உடல் மனநோய்கள் அனைத்தையும் தீர்ப்பவள் தேவி. ஸர்வவ்யாதி ப்ரசமநீ என்ற நாமமே ஜபத்தால் நோய் தீர்க்கவல்லது. (551)

### 18. ஸர்வ - ம்ருத்யு - நிவாரிணீ. எல்லா மரணங்களையும் தடுப்பவள்.

18-1. வயது முதிர்ந்து ஏற்படும் உடல் மறைவு காலமரணம். 120 ஆண்டுகள் பூர்ணமாக வாழ்ந்து நவக்கிரகங்களின் தசைகளை ஒரு தடவை வாழ்நாளில் பூர்ணமாக அனுபவிப்பது பூர்ண வாழ்வு. இதன் எல்லையில் கால மரணம் தோன்றும். இதற்குக் காரணம் காலமாகிற வயது. வினைப்பயனாகக் கடும் உடல்மன நோய்களாலும், அபாயங்களாலும் ஏற்படுவது அகால மரணம். இதற்குக் காரணம் ஆயிரம். மரணத்திற்குக் காரணமான அவை ஒவ்வொன்றும் ம்ருத்யுக்கள், அபமிருத்யு, அகால ம்ருத்யு, கால ம்ருத்யு என்பவை. இவைகளைப் போக்குபவள் தேவி. ம்ருத்யுவைப் போக்க இந்த நாமமே மந்திரமாகி உதவுகிறது.

18-2. இறப்பிற்குக் காரணமாக இருப்பவை பிறப்பிற்குக் காரணமான வினைகள். பிறந்ததால் இறக்கிறான். இறந்ததால் பிறக்கிறான். இப்படிப் பிறந்திறக்கக் காரணமான வினைச்சுமை அளவற்றது. தன் ஸ்வபாவத்தை உணர்த்தி வித்தியையால் அமிருத நிலையை அடையச் செய்து மிருத்யுவின் வாயிலிருந்து காப்பாற்றுகிறாள். ஜ்ஞாத்வா தேவம் ம்ருத்யு முகாத் ப்ரமுச்யதே. பரம்பொருளை உணர்ந்து மரணவாயிலிருந்தும் விடுபடுகிறான் (உபநிடதம்) (552)

(நா. 553 - 558)

अग्रगण्याऽचिन्त्यरूपा कलिकल्मषनाशिनी ।
कात्यायनी कालहन्त्री कमलाक्षनिषेविता ॥ 113 ॥

**அக்ரகண்யா (அ) சிந்த்யரூபா கலிகல்மஷநாசினீ.**
**காத்யாயநீ காலஹந்த்ரீ கமலாக்ஷநிஷேவிதா. 113.**

**19. அக்ர - கண்யா. முதலாவதாகக் கணக்கிடப்படுபவள்.**

19-1. காரியப் பொருளுக்கும் முன்னதாகக் காரணப்பொருள் இருக்கும். எது முதல் தத்துவம் என்று கணக்கிடும்போது எல்லாவற்றிற்கும் காரணமான முதல் பூதமான ஆகாயத்திற்கும் மூலகாரணம் தேவி என்றறிந்ததனால் தேவியே எல்லாவற்றிற்கும் முதன்மையானவளாகக் கணக்கிடப்பெறுகிறாள். (23.16) நெருக்கடி நேரத்தில், காப்பாற்றுபவர் யாரென்று திகைக்கும் போது முதலில் மனக்கண்முன் தோன்றுபவள் தாயான தேவி. காப்பாற்றக் கூடியவள் என முதலில் மதிப்பிடப்பெறுபவள். (553)

**20. அசிந்த்ய - ரூபா. சிந்திக்க இயலாத வடிவமுள்ளவள்.**

20-1. மனத்தின் செயல் சிந்தை - எண்ணம். எண்ணத்திற்கு உட்படுவதற்கு வடிவமைப்பு, குணங்கள், செயல்கள் போன்ற குறிப்பு தேவை. ஒரு குறிப்புமற்ற தேவி அசிந்த்யரூபா. சிந்தை - கவலை. மனத்தை அரித்து எரிக்கக்கூடியது. தேவியின் வடிவம் உள்ளே தோன்றியதுமே அங்கு இனி சிந்தைக்கிடமில்லை. காப்பாற்றுவதற்கென அவள் எடுக்கின்ற தோற்றம் நம்மால் எண்ணிப்பாக்க முடியாதது. (554)

**21. கலி - கல்மஷ - நாசிநீ. கலிதோஷத்தைப் போக்குபவள்.**

21-1. கெட்ட எண்ணங்கள் மலிந்து, ஒருவருக்கொருவர், நெருங்கியவராயிருந்தும் மனம்விட்டுப் பழக முடியாதபடி வஞ்சம் நெஞ்சில் நிரம்பியிருக்கச் செய்வது கலியின் இயல்பு. கெட்ட எண்ணத்தால் கெட்ட செயல்களில் ஈடுபடுவதால் பாபமூட்டை கழுவாய் காண முடியாத அளவில் எளிதில் சேரும். மனத்தில் ஆழ்ந்த தடத்தை ஏற்படுத்தி மீண்டும் கெட்ட செயலில் துண்டுவதால் கழுவாய்கள் பலனற்றுப்போகும். அத்தகையக் கலிதோஷத்தைப் போக்குவதற்குத் தேவியின் திருநாமங்களே கதி. இவை மனத்தடத்தை அழித்துத் துய்மையை ஏற்படுத்திப் பாபச் செயல்களின் துண்டுதலை நிறுத்திவிடுகின்றன. தேவியை மனத்தில் நிறுத்துவதால் முன் சேர்ந்த வினைகள் பொசுங்கிவிடுகின்றன. நல்வினைகளில் ஈடுபாடு இயற்கையாக ஏற்படுவதால் கலிதோஷத்திற்கு இனி இடமில்லை. (555)

### 22. காத்யாயநீ. காத்யாயனி என்ற தேவியின் வடிவினள்.

22-1. கதர் என்ற ருஷியின் பெண்ணாகத் தோன்றி அவருக்குப் பெருமை தருகிறாள் தேவி. அந்தத் தோற்றத்தில் அவள் பெற்ற பெயர் காத்யாயனீ. எல்லாத் தேவர்களின் சக்தியும் இவளிடத்தில் அடங்கிவிட்டன. ஓட்டியாண பீடத்தில் உறையும் தேவிக்கும் காத்யாயனீ என்று பெயர். கோபிகள் மார்கழி மாதத்தில் காத்யாயனியை வழிபட்டு நோன்பிருந்தனர். அதன் பயனாகக் கிருஷ்ணனின் அருள் பெற்று ராஸ லீலைகளில் பங்கு பெற்றனர். (பாகவதம்) காத்யாயனி என்ற சொல் மருவிக் காத்தாயி என்றாகிவிட்டது. காத்தாயியாக வழிபடப் பெறுபவள் காத்யாயனி தேவியே எனப் பெரியோர்கள் கூறுவர். (556)

### 23. கால - ஹந்த்ரீ. காலனை அழிப்பவள்.

23-1. கால: - யமன், காலம். பிராணிகளின் உயிரை மாய்ப்பவன் யமன். சிவசக்தியாயிருந்து மாக்கண்டேயனுக்காக யமனை மாய்த்தவள். பிறவிப் பிணியில் அகப்படுபவர்களை அழிப்பவன் யமன். தேவியின் அருளால் பிறவிப் பிணி நீங்கியவர்களிடம் எமன் அடங்கிவிடுகிறான். அப்படி யமனை அடக்கிவிடுபவள். தேவியை நினைக்காத நேரம் நகர்ந்து செல்லும் நேரம், வீணாகிக் கழியும் நேரம், அழியும் நேரம். நேரம் செல்லச் செல்ல யமன் நெருங்குகிறான். இந்தக் காலம் அந்தக் காலனிடம் அழைத்துச் செல்கிறது. தேவியை நினைக்கும் நேரம் நகராத நேரம். அத்தகைய நேரச் சேமிப்பு உள்ளவர்களிடத்தில் காலம் நெருங்கத்

தாமதமாகும். இடைவிடாது நினைப்பவர்களிடம் யமன் நெருங்கவே முடியாது. அப்படிக் காலத்தின் சக்தியை (யமனை அருகில் கொணரும் சக்தியை) அழிப்பவன். (557)

### 24. கமலாக்ஷ - நிஷேவிதா. விஷ்ணுவால் ஆராதிக்கப் பெற்றவள்.

24-1. தேவியின் உபாஸகர்களில் ஒருவர் கமலக்கண்ணனான நாராயணன். (9.10.10, 16.40.2, 18.23.1) நாராயணன் தேவியை உபாசித்து மோஹினி வடிவம் தாங்கிச் சிவபெருமானின் மனத்தைக் கலக்கினார். (ஸௌந்தியலஹரீ சுலோ 5). இந்திர நீலக் கல்லாலான தேவியின் வடிவத்தை நீலமேக வர்ணனான நாராயணன் வழிபடுகிறார். (பாத்ம புராணம்) வழிபடப்பெறுபவனைத் திருப்திப்படுத்துவது ஸேவை - பணிவிடை. தன்னை மறக்குமளவில் அவனைத் திருப்திப்படுத்துவது நிஷேவா. தேவி மோஹினி வேடத்தில் நாராயணனையே தன் உருவமாக்கிக் கொண்டு தன் கணவனான சிவனை மோகிக்கச் செய்கிறாள். அதில் சிவன் ஏமாந்ததாகப் பிறர் அறியச் செய்யுமளவிற்கு நாராயணன் வழிபாட்டில் தேவி திருப்திப் படுகிறாள். (நா. 559, 562)

24-2. சிவன் தனது இடது பக்கத்தில் தேவியைக் கொண்டிருக்கிறார். சில இடங்களில் இடது பாகத்தில் நாராயணனையும் கொண்டிருப்பார். சங்கரநாராயணன், ஹரிஹரன் என்ற மூர்த்திகளில் அந்தத் தோற்றத்தைக் காணலாம். சிவனாகிய பரம்பொருளின் சக்தியாகி இடது பக்கத்தில் இணையும் பெருமை தேவி வழிபாட்டால் நாராயணனுக்குக் கிடைத்தது. (558)

(நா. 559 - 565)

ताम्बूलपूरितमुखी दाडिमीकुसुमाप्रभा ।
मृगाक्षी मोहिनी मुख्या मृडानी मित्ररूपिणी ॥ 114 ॥

**தாம்பூலபூரிதமுகீ தாடிமீகுஸுமப்ரபா.**
**ம்ருகாக்ஷீ மோஹிநீ முக்க்யா ம்ருடாநீ மித்ரரூபிணீ.114**

### 25. தாம்பூல - பூரித - முகீ. தாம்புலம் நிறைந்த வாயினள்.

25-1. ஸுமங்கலிப் பெண்டிர் எப்போதும் தாம்பூலம் தரிப்பர். தாம்புலம் தரிப்பது மங்களமானது. தேவி எப்போதும் தாம்புலம் தரிப்பாள். (நா.26) அவள் தாம்பூலம் சுவைத்துச் சக்கையை துப்பும் போது அதனை

ஏந்தத் தேவேந்திரன் காளாஞ்சி ஏந்தி (பதத்க்ரஹ:- வாயிலிருந்து விழுவதைப் பிடிப்பவன்) நிற்பார். தேவி வாக்கு சக்தியை அருளும்போது தாம்புலச் சாற்றை அடியாரின் வாயில் உமிழ்வாள். ஞானத்தை அருளும்போது தன் ஸ்தன்யத்தைத் தருவாள்.

25-2. தேவியின் மேனி இயற்கையாகச் சிவந்தது. தேவியின் சிவந்த மேனியை விட அவள் உதடு அதிகச் சிவப்புள்ளது. அந்த இயற்கைச் சிவப்பும் போதாதெனத் தாம்புலத்தால் சிவப்பாக்குகிறாள் தேவி. ஏதோ ஒருபொழுது தாம்பூலம் போட்டாள் என்றில்லை. எப்போதும் தன் வாயைத் தாம்பூலத்தால் நிரப்பிக் கொண்டிருக்கிறாள். இத்தனைச் செம்மையும் சிவனை மயக்குவதற்காக, நாராயணனின் வழிபாட்டால் களித்த தேவி சிவ மோஹினியாகத் தோன்ற இத்தனை முன் ஏற்பாடுகள். (559)

### 26. தாடிமீ - குஸும - ப்ரபா. மாதுளம் பூவின் சாயல் கொண்டவள்.

26-1. பூத்துக் காய்க்கும் மாதுளை மரம் உண்டு. பூத்து ஆனால் காய்விடாத மாதுளையும் உண்டு. பூத்துக் காய்க்கும் மாதுளையின் பூவைவிடப் பூத்துக் காய்விடாத மாதுளையின் பூ செம்மை மிக்கது. அந்தப் பூ தேவியின் புஜைக்கு ஏற்றது. அதன் நிறங்கொண்ட மேனி உள்ளவள் தேவி. மோஹினியாகத் தோன்றும் தேவி தாம்பூலத்தை எப்போதும் வாயினுள் நிரம்பிக் கொண்டிருப்பதால், உடல் முழுவதும் அதனால் ஏற்பட்ட சுறுசுறுப்பு பரவி மேலும் சிவந்துவிட்டதை மேனியின் மாதுளம் பூ நிறம் உணர்த்துகிறது. ஆசை அளவிற்கு மீறி ஏற்பட்டு வெளிப்படும்போதும், அதை நாணத்தால் வெளிக்காட்டாமல் அடக்கும்போதும், உடல் சிவக்கும். ராகம் - ஆசை எனும் உணர்ச்சி செந்நிறங்கொண்டதென்பர். தேவி சிவமோஹனத்தில் ஈடுபட்டதும் சிவனிடமுள்ள அடங்காக் காதலை வெளிப்படுத்தியும், அடக்கியும், நடனம் புரியும் போது மிகச் சிவந்த தேவியின் மேனி மேலும் அடர்ந்த செந்நிறமடைகிறது. (560)

### 27. ம்ருக - அக்ஷீ. மானுடைய பார்வை உள்ளவள்.

27-1. மோஹினி வேடத்தில் தன் உள்ளக் கிடக்கையை நேரிடையாக வெளிப்படுத்த முடியாமல் கண்களால் உணர்த்தியும் நாணத்தால் அதனைத் தொடர்ந்து செய்ய முடியாமல் பாவையைத் தாழ்த்தியும் அங்குமிங்கும் செலுத்தியும் சஞ்சலத்திற்குள்ளான தேவியின் கண்கள் மானின் கண்கள்போல் ஓரிடத்தில் நிலைக்காமல் மருட்சியுடன் காண்கின்றன. காதல் வசப்பட்ட பெண்ணாகித் தன் காதலை வெளிப்படுத்திச் சிவனை மயக்குகின்றன நிலைக்கேற்ற பாவை இது. (561)

### 28. மோஹிநீ. மயக்குபவள்.

28-1. அமிருதம் கடைந்தபோது அசுரர்களை மயக்கவும், பின்னர் சிவபெருமானை மயக்கவும், நாராயணன் தேவியின் அருளால் எடுத்த தோற்றம் மோஹிநீயாகும். நாராயணன் தேவியைப் பாவனை செய்ததால் மஹாமாயாஸ்வரூபிணீயான தேவியாகவே மாறிவிட்டார். அதனால்தான் தேவி ஒருவளிடம் மட்டுமே மயக்கும் சிவபெருமான் அந்த மோஹினியிடம் மயங்குகிறார். அந்த நாராயணனிடம் தோன்றிய சிவமோஹினியாக இருப்பவள்.

28-2. உலகனைத்தையும் தன்னிடம் மோஹிக்கச் செய்பவள். தேவியை உணர்ந்தவர்களை வேறொன்றையும் நாடாமல் தேவியை மட்டும் சிந்திப்பவர்களாக மாற்றும் மோஹினி. பக்தி அற்றவன் தன்னை அறிய முடியாதபடிப் பல விஷயங்களில் அவனை ஈடுபடுத்தித் தடுமாறச் செய்யும் மோஹினியும் அவளே.

28-3. பிரவரா எனும் நதியின் கரையில் நிவாஸபுரத்தில் கோயில் கொண்டுள்ள தேவி மோஹிநீ என்ற திருநாமம் பூண்டவள். கமலாநிஷேவிதா (558) என்ற நாமம் முதல் இந்த நாமம் வரை நாராயணன் தேவியை வழிபட்டு அடைந்த பேறு விளக்கப்படுகிறது. (562)

### 29. முக்க்யா. முக்கியமாக இருப்பவள்.

29-1. சிசு பிறக்கும் போது முதலில் தோன்றுவது முகம். அதனால் முகமாக - முதலாவதாக - மதிக்கத்தக்கவைகளை முக்கியம் என்போம். உடலின் அவயவங்களில் பிரதான இந்திய வாயிலாகவும், மூளையின் இருப்பிடமாகவும் அமைந்த முகம் பிரதானமானது. அதனால் பிரதானமானதை முக்கியம் என்போம்.(முக்கியம் - முக ஸ்தானத்தில் இருப்பது) தோன்றிய பொருள்களுக்கெல்லாம் முன் இருப்பவள் தேவி. தேவர்கள் முதலிய சக்திமிக்கவர்களிடையே பிரதானமாயிருப்பவள் தேவி. பிரும்மா, விஷ்ணு, சிவன் முதலிய தேவர்களை ஆவரண தேவதைகளாக்கி ஸ்ரீசக்கிரத்தின் நடுவில் பிந்துஸ்தானத்தில் முக்கிய தேவதையாகத் தான் அமர்ந்து வழிபாட்டை ஏற்றுக்கொள்வதால் தேவி முக்க்யா. (563)

### 30. ம்ருடாநீ. மிருடன் எனும் சிவனது பத்நீ.

30-1. காத்தல் தொழிலுள்ள சிவன் ம்ருடன். (16.13.1) சுகத்தைத் தருவதால் அவர் ம்ருடன். அவரது சக்தியாகவும் பத்தினியாகவும் இருப்பவள். அதே குணமுள்ளவள். (564)

**31. மித்ர - ரூபிணீ. சூரிய வடிவினள்.**

31-1. உலகிற்கு எல்லா உதவிகளையும் வேறு பயனை எதிர்பாராமல் நண்பன்போல் தேவைப்பட்ட போது கோரிக்கையின்றி புரிவதால் சூரியனுக்கு மித்திரன் என்று பெயர். சூர்யர்கள் பன்னிரண்டு. மித்ரன், ரவி, ஸூர்யன், பானு, ககன், பூஷா, ஹிரண்யகர்ப்பன், மரீசி, ஆதித்யன், ஸவிதா, அர்க்கன், பாஸ்கரன் என. பன்னிருவர் வடிவிலுள்ள ஸூரியனாகவும், பன்னிருவாரில் ஒருவரான மித்திரனாகவும் இருப்பவள் தேவி.

31-2. மித்திரன் - நண்பன். உயிரினம் அனைத்திற்கும் நெருங்கிய நண்பனாக இருப்பது ஆத்ம ஸ்வரூபம். அந்த ஆத்மாவாக இருப்பவள் தேவி. புற உலகில் நெருங்கிய நண்பனாக இருப்பவனும் இறைவியின் வடிவே. தோழனைத் தவறான வழியில் செல்லாமல் தடுத்துக் காப்பவன் மித்ரன். (மாதி - அடக்குகிறான், த்ராயதே - காப்பாற்றுகிறான்). தேவி அடியாரைக் கெட்ட வழியில் இருந்தும் திருப்பி நல்வழிப்படுத்தி மித்ரனாகிறாள். (565)

(நா. 566 - 571)

नित्यतृप्ता भक्तनिधिर्नियन्त्री निखिलेश्वरी ।
मैत्र्यादिवासनालभ्या महाप्रलयसाक्षिणी ॥ 115 ॥

**நித்யத்ருப்தா பக்தநிதிர் நியந்த்ரீ நிகிலேச்வரீ.**
**மைத்ர்யாதிவாஸநாலப்யா மஹாப்ரளயஸாக்ஷிணீ.115**

**32. நித்யத்ருப்தா. எப்போதும் மனநிறைவுள்ளவள்.**

32-1. போதும்; இனித் தேவையில்லை என்ற நிறைவுணர்வு திருப்தியாகும். எப்போதும் எல்லாம் பூர்ணமாக உள்ளவள், அவளிடம் எப்போதும் எதற்கும் குறை கிடையாது. (நித்யம் த்ருப்தா).

32-2. அநித்யமான (நிலையற்ற) பொருளால் ஏற்படுகிற மன நிறைவு நிலைத்திருக்காது. நித்தியமானது ஆத்மானந்தம் ஒன்றே. அதனால் நித்தியமான ஆத்மானந்தத்தால் திருப்தி அடைந்தவள். எதிர்பார்த்தலற்ற உத்தமமான அன்பு நித்யமான திருப்தி தரவல்லது. அத்தகைய நித்யமான அகச்சாதனங்களாலான வழிபாட்டாலும் திருப்தி அடைபவள். (நித்யேந த்ருப்தா)

32 - 3. மூர்த்தா-மூர்த்தாநித்யத்ருப்தா என்ற சொற்றொடரில் அநித்ய த்ருப்தா (நா. 815) என்று நாமம். (566)

**33. பக்த - நிதி:. பக்தர்களின் செல்வக் குவியல்.**

33-1. தேவி பக்தர்களின் விருப்பங்களை நிறைவேற்றி வைக்கும் செல்வக் குவியல். தான் ஈட்டிய பொருளிலிருந்து பின்னர் தோன்றவிருக்கும் தேவைக்காக நன்கு பாதுகாப்புடன் வைக்கப்பட்ட பெரும் பொருள் சேமிப்பு நிதியாகும். பக்தர்கள் அப்படிச் சேமித்து வைத்துள்ள நிதியாகப் பக்தர்களின் பாக்கிய விருத்திக்கான புண்ணியச் சேமிப்பாகத் தேவி விளங்குகிறாள். (567)

**34. நியந்த்ரீ. கட்டுப்படுத்துபவள்.**

34-1. உலகனைத்தையும் தன் ஆளுகைக்குள் கட்டுப்படுத்துபவள். (568)

**35. நிகில - ஈச்வரீ. எல்லாவற்றிற்கும் ஈசுவரீ.**

35-1. உலகனைத்தையும் அப்படி ஆட்படுத்தும் திறமை கொண்ட ஈசுவரி.

**36. மைத்ரீ - ஆதி - வாஸநா - லப்யா. மைத்ரீ முதலிய வாஸனைகளால் அடையத்தக்கவள்.**

36 - 1. மனத்தைத் தூயதாக்க நல்ல வாஸனைகளை ஏற்படுத்திக் கொள்ள வேண்டும். (7.5.2) அவை முன்னதாக உள்ள கெட்ட மன வாஸனைகளை அகற்றவல்லவையாகவும் இருக்க வேண்டும். யோக நூல்கள் நல்ல வாஸனைகளை மனத்துய்மைக்காக ஏற்படுத்திக்கொள்ளக் கூறுகின்றன. மைத்திரீ, கருணா, முதிதா, உபேக்ஷா என அவை நான்காகும்.

36 - 2. சுகப்படுபவனைப் பார்க்கும்போது பொறாமை கெட்ட வாஸனையாக ஏற்படக்கூடும். பொறாமை ஏற்படக்கூடிய அந்த இடத்தில் நட்பைக் கடைப்பிடிப்பதன் மூலம் அவனுக்கு ஏற்பட்டுள்ள சுகத்தில் தான் மகிழ்ச்சிப் பெறப் பழக்குவது மைத்திரீ வாஸனை.

36 - 3. துக்கமனுபவிப்பவனைக் கண்டு எள்ளி நகையாடவோ அதனால் மகிழ்ச்சியுறவோ தோன்றும். அந்த வாஸனையை ஜயிப்பதற்கு துக்கப்படுபவன் எதியாகவோ விருப்பிற்கோ வெறுப்பிற்கோ உட்படாத

உதாஸீனனாகவோ இருந்தாலும் அவனிடம் கருணையைத் தானே ஏற்படுத்திக்கொண்டு அவனது துக்கத்திற்குக் காரணமானவைகளை அகற்றி மகிழ்வுறச் செய்வதைப் பழக்கமாக்கிக்கொள்வது கருணா எனும் வாஸனை.

36-4. ஒருவன் சுகப்படுவதற்குக் காரணம் அவன் முன் செய்த நல்வினையாலான புண்ணியம். அவனுக்குச் சுகமளிக்க முன்வினை பயன்பட்டதே என்ற மகிழ்ச்சியடையும் பழக்கத்தை ஏற்படுத்திக் கொள்வது முதிதா எனும் வாஸனை.

36-5. ஒருவனது கஷ்டத்திற்கு அவன் முன் செய்த கெட்ட வினை காரணமாயிருக்கக்கூடும். உன் கஷ்டத்திற்கு நீ முன் செய்த கெட்ட வினைதான் காரணம். அதனால் இந்தக் கஷ்டம் எப்படி விலகும்? நீ அதனைச் செய்யாதிருந்திருக்கலாம். இப்போது நொந்து என்ன பயன்? கஷ்டத்தை அனுபவி! என்று முன்னரே நொந்துள்ள அவனைக் கொடுஞ்சொல்லால் மீண்டும் வருத்தத் தோன்றலாம். இந்தக் குறை காண்கின்ற எண்ணத்தை அடக்கி, அவனது முன் வினைகளைச் சிறிதும் பொருட்படுத்தாமல் அவனுக்கு உதவுவதும், முன்வினைப் பயனாக இந்தக் கஷ்டம் விளைந்தது என அவனே நொந்துகொண்டாலும் கஷ்டத்தை விலக்குவது மிக்க எளிதென ஆறுதலும், தைரியமும், உற்சாகமுமளித்துச் செயல்படுவதும் உபேக்ஷா எனும் வாஸனை.

36-6. இந்த நான்கு வாஸனைகளும் உள்ளத்தில் அன்பை நிலைக்கச் செய்பவை. வெறுப்பு, பொறாமை முதலிய கொடும் எண்ணங்களுக்கு இடம் தராதவை. மனத்தில் தூய்மை நிறைய உதவுபவை. இவைகளைப் பழக்கிக்கொள்ள தேவியிடம் பக்தி நிலைக்கும். தேவியை எளிதில் அடையலாம். (570)

### 37. மஹா - ப்ரளய - ஸாக்ஷிணீ. மஹாப்பிரளய காலத்தில் ஸாக்ஷியாயிருப்பவள்.

37-1. படைப்பு, காப்பு என்ற இரு தொழில்களும் தொடர்ந்து நடந்து கொண்டே இருக்கின்றன. அவைகளுடன் அழித்தல் என்ற தொழிலும் எப்போதும் நடைபெறுகிறது. ஆனால் அழித்தல் நடைபெறுவதைத் தனித்து உணர முடிவதில்லை. ப்ரளயத்தில், படைத்தல், காத்தல் என்ற இரு தொழில்களும் நிறுத்தப் பெற்றதும், அவற்றைப் புரிந்து வந்த பிரும்மா, விஷ்ணு என்ற இரு பிரும்மத் தோற்றங்களும் தேவியை சென்றடைந்து

மறைந்து விடுகின்றன. அழித்தலும் மறைத்தலுமான இரு தொழில்களை ருத்திரன், ஈசுவரன் என்ற இரு பிரும்மத் தோற்றங்கள் நிறைவேற்றிக் கொண்டிருக்கின்றன. இந்த இரு தொழில்களும் நிறைவேறுவதால் உலகமாகத் தோன்றியதனைத்தும் மூலப் பொருளாக மூலப்பிரகிருதியாக மாறித் தேவியிடம் ப்ர - லயம் (விசேஷமான லயம் - மறைவு) அடைகின்றன. அந்த அழித்தல் - மறைத்தல் (ஸம்ஹாரம் - திரோதானம்) என்ற இரு பணிகளும் நடைபெறும் போது மஹாப்ரளய காலத்தில் ருத்திரனும், ஈசுவரனுமே மீதி உள்ளனர். அவர்கள் புரியும் பணியை ஸாக்ஷியாகப் பார்த்துக் கொண்டிருப்பவள், அவர்களும் தன்னுள் ஒடுங்குவதை எதிர்பாத்து நிற்கும் தேவி. (16.34.1- 17.27, 8-13)

37-2. விழிப்பு நிலையில் ஸ்தூலம், ஸூக்ஷ்மம் எனும் இரு தேகங்களும் நன்கு உணரப்படுகின்றன. அப்போது மூன்றாவதான காரணதேகம் சற்றே மறைந்து ஊகத்தால் அறியப்படுகிறது. கனவு நிலையில் ஸ்தூல தேகமானது மற்ற இரு தேகங்களில் லயமாகிவிட்டதை உணர்கிறோம். ஸ்தூல தேக உணர்வு அப்போது இல்லை. ஸுஷுப்தி - ஆழ்ந்த தூக்க நிலை. அப்போது ஸ்தூலம், ஸூக்ஷ்மம் என்ற இரு தேகங்களும் மறைந்து அஹங்காரம் என்ற மறைப்பிற்குட்பட்ட ஆனந்த வடிவான ஆத்மா என்ற காரணசரீரம் மட்டும் இருப்பதை உணர்கிறோம். மறுபடி விழித்தபிறகு தோன்றும் ஞாபகத்தால் ஸுஷுப்தியில் உணர்ந்தது சரியென அறிகிறோம். ஸ்தூல - ஸூக்ஷ்ம தேகத் தொடர்பின்றி தனித்துள்ள அந்த ஆத்மாவைப் பற்றி ஆராயும் போது, அந்த மஹாப் பிரளயத்தில் (ஸ்தூல தேகலயம் ப்ரளயம் - கனவில் நேர்வது. ஸ்தூல - ஸூக்ஷ்ம தேகலயம் மஹாப்ரளயம் - ஸுஷுப்தியில் நேர்வது) ஸாக்ஷியாக, ஸ்தூல - ஸூக்ஷ்ம தேகத் தொடர்பற்றவனாக அந்தந்த தேகங்களால் விளைந்த செயல்களின்மீது யாதொரு பொறுப்பும் அற்றவனாக, ஒருவித சார்புமற்றவனாக ஆத்ம ஸ்வரூபத்தை உணர்கிறோம். அப்படி உணரப்பெறும் ஆத்ம ஸ்வரூபமாக இருப்பவள் தேவி. (571)

(நா. 572 - 577)

परा शक्तिः परा निष्ठा प्रज्ञानघनरूपिणी ।
माध्वीपानालसा मत्ता मातृकावर्णरूपिणी ॥ 116 ॥

**பரா சக்தி: பரா நிஷ்ட்டா ப்ரஜ்ஞாநகநரூபிணீ.**
**மாத்த்வீபாநாலஸா மத்தா மாத்ருகாவர்ணரூபிணீ. 116**

## 38. பரா சக்தி: மேலான சக்தி வடிவினள்.

38-1. உடலில் உள்ள ரஸம் ரக்தம் முதலிய தாதுக்கள் ஒவ்வொன்றும் உடலைத் தாங்குபவை. அவை உடலைத் தாங்குவது அவைகளுக்கும் மேம்பட்ட சக்தி ஒன்று இருப்பதால், அந்த மேம்பட்ட சக்தியாயிருப்பவள் தேவி. ஒவ்வொரு பொருளிலும் மேம்பட்ட சக்தியாக இருந்து அதனை விளங்க வைப்பவள்.

38-2. சிவத்திடம் முதன் முதலாயுதிக்கும் நான் என்ற உணர்வு சக்தி எனப்படும். இதனை ஆதி சக்தி என்பர். (நா. 515) பிரகாசமான சுத்த சிவத்தை விமர்சம் செய்வது இந்த ஆதி சக்தியே. (நா. 548- 615) ஆதி சக்தியை ஆதாரமாகக் கொண்டு உலகைத் தோற்றுவிக்கும் மாயை தான் பரா சக்தி, ஜடசக்தி, மாயா சக்தி என்ற பெயர்களால் குறிப்பிடப் பெறுகிறாள். இந்தப் பரா சக்தியே, நாம ரூபங்களால் பல பேதங்களுற்று விளங்கும் உலகின் காரணமானவள். (17.8.1) இவளது தோற்றங்களே இச்சா சக்தி, ஞான சக்தி, கிரியா சக்தி என்ற மூவர். (19.1.1.8) (572)

## 39. பரா நிஷ்டா. சொல் எண்ணம் செயல் முதலியவற்றின் எல்லையாக இருப்பவள்.

39-1. மிகச்சிறந்ததொன்றை அடைய வேண்டும். அதனை அடைந்த பிறகு மறுபடி வேறொன்றை நாடும் சிந்தனை எழக்கூடாது. ஆசை ஓய்ந்துவிட வேண்டும். அத்தகைய சிறந்த பொருளைப் பற்றி எழும் எண்ணமும், சொல்லும், செயலும் சென்றமைந்த நிலையே நிஷ்டா - நிறைவு தரும் தன்னுணர்வு, ஸ்வானுபவம். தேவி அந்த நிஷ்டாவானவள். ஆசாரியனிடமிருந்து கற்க வேண்டியதைக் கற்றும், பகுத்தறிவு கொண்டு விவாதித்தும், முறையான அப்பியாசங்களால் ஒவ்வொன்றாக அனுபவித்தும் தனது ஆத்மாவைக் காட்டிலும் வேறுபட்டதாக இதுகாறும் அறிந்திருந்ததனைத்தும் சுத்தப் பிரும்ம ஸ்வரூபம் தான் என்றும் தன்னுள் ஸாக்ஷியாகத் துலங்கும் ஆத்மா என்றும் உணர்வது தான் அறிவின் எல்லையும், செயலின் எல்லையுமாகும். அப்படி அறிவால் தேர்ந்த முடிவான ஆத்மானுபவ வடிவினள். (573)

## 40. ப்ரஜ்ஞாந - கந - ரூபிணீ. அடர்ந்த பேரறிவு வடிவானவள்.

40-1. மனமானது பொறிகளின் மூலமோ தனித்தோ அடைந்த ஒரு பொருளின் வடிவைச் சாந்து அறிவு அமைவதால் அப்படி மனம்பெற்ற அறிவு குறுகி வடிவம் முதலிய கட்டுப்பாட்டிற்குட்பட்டு நிலையற்றதாகிறது.

இது சிற்றறிவு. இதனை விருத்தி ஜந்ய ஞானம் என்பர். மனமானது ஒரு பொருளைச் சார்ந்து அவ்வடிவமாக அமைவதே விருத்தியாகும். மனம் கண் வழியே சென்று ஒரு பொருளைப் பாத்ததும், பார்க்கப்பட்ட பொருளின் முழு வடிவத்தைப் புத்தியினுள் பதியவைக்கிறது. இதுவே விருத்தி ஞானம், மன விருத்தியால் பெற்ற ஞானம். குறுகிய வட்டத்தில் உள்ள இந்த அறிவு தாற்காலிகமானது. அல்பமான பயன் தரவல்லது. இந்த விருத்திஜ்ஞானம் உள்ளே உள்ள பேரறிவின் ஒளியால் கிடைத்த பிரதிபிம்பமான அறிவு. அந்த உள்ளறிவு பிரஜ்ஞானம் - ஆத்ம ஸ்வரூபம். சூரியனின் ஒளி கண்ணாடியில் பட்டுப் பிரதிபிம்ப ஒளியாகி, ஓர் அறையை விளக்குகிறது. அந்த பிரதிபிம்பத்தால் பெற்ற ஒளி வரையறுக்கப்பட்டதாகும். ஆதன் மூல காரணமான சூரியனது பேரொளியில் இது ஓர் அம்சமே. கண்ணாடிக்கு மற்றொன்றை விளக்கும் தன்மை இயற்கையாகக் கிடையாது. சூர்யனது ஒளியைப் பிரதிபலிக்கும் சக்தி அதனிடம் இருப்பதால் அது பொருளை விளக்குகிறது. அந்தக் கரணம் எனும் கண்ணாடியில் பிரதிபலிக்கும் ஆத்ம ஒளியால் விருத்தி ஞானம் ஏற்படுகிறது. விருத்தி ஞானம் முழுமையானதல்ல. ஒளியைப் பிரதிபலிக்கும் கண்ணாடியின் குறைகள் ஒளிப் பிரதிபலிப்பைப் பாதிக்கும். அவ்வகையில் ஸத்வம், ரஜஸ், தமஸ் எனும் முக்குணச் சார்பு பெற்ற அந்தக் கரணத்தில் பிரதிபலிக்கும் ஆத்ம ஒளி குறையுள்ளதாகத் தோன்றுகிறது. அது பேரொளியிடமுள்ள குறையால் அல்ல. பிரதிபலிக்கும் அந்தக் கரணத்தின் குறையால் ஏற்படுவதாகும். குறையற்ற பேரொளியாக விளங்கும் பேரறிவு அடர்ந்தது. ப்ரஜஞான கனம் என்பர் அதை.

40-2. உப்பளங்களில் உப்பைக் காய்ச்சி மலரச் செய்கிறார்கள். தனித்தனி வடிவம் கொண்ட உப்புக் குவியலாக அது உள்ளது. இந்துப்பு மலைப்பாறைபோல் இறுகிய உப்பு. அதனை ஸைந்தவம் என்பா. ஸிந்து தேசத்தில் அப்படிப் பாறையாக உப்பு கிடைக்கிறது. கடலுப்பைப் போல் அதில் தனி வடிவம் கிடையாது. மிக நெருக்கமாக இறுகிய உப்பு. அதன் உள்ளும் புறமும் ஒரே உப்புதான். வேறு இடைவெளிகூடக் கிடையாது. ஆதனை ஸைந்தவ கனம் என்பர். அதுபோல் இறுகிய ஞான வடிவம் பிரஜ்ஞானம். அதனால் பிரஜ்ஞானகனம். அதில் வேற்றுமையை உணர்த்தும் இடைவெளியோ வேறு பொருளோ கிடையாது. அத்தகைய பிரஜ்ஞானகனமாக இருப்பவள் தேவி. (574)

**41. மாத்த்வீ - பாந - அலஸா. மதுவருந்தியதால் சோம்பியிருப்பவள்.**

41-1. திராக்ஷையும் தேனும் சேர்ந்து அமைந்த மது மாத்வீ எனப்படும். அதனை அருந்தியதால் வெளிப்பொருளில் நாட்டம் குறையுமளவு சோம்பலும் செயலின்மையும் தேவியிடம் காணப்படுகின்றது. திராக்ஷை மது போன்று மனத்தை ஈக்க வல்லது ஆத்மானந்தம். அதனைப் பருகுவதால், அனுபவிப்பதால் வெளிநாட்டம் குறைந்து காணப்படுபவள். (நா.566)

41-2. அலஸா - விளக்கமற்றவள். சோம்பியிருப்பவள். நலஸதி - பளிச்சென்று சுறுசுறுப்புடன் முன்பு விளங்கியதுபோல் தற்போது விளங்கவில்லை. நாட்டமும் உற்சாகமும் குறைந்து மனம் அடங்கிக் காணப்படுகிறாள். ஸத்துவ குணம் மேலிட்டாலும் நாட்டமும், உற்சாகமும் குறையும். அப்போது மனம் பற்றற்றிருப்பதாலும், அடையவேண்டியதை அடைந்த திருப்தியாலும் மனம் அடங்கியிருக்கும். தமோகுணம் மேலிட்டாலும் சோர்வுற்று நாட்டமும் உற்சாகமும் குறையும். திராக்ஷை மதுவால் மனம் மகிழ்ச்சியால் நிரம்பியுள்ளது. உற்சாகத்திற்குத் தேவையில்லாததால் சுறுசுறுப்பின்றி காணப்படுவாள். மதுபோன்ற ஆத்மானந்தத்தால் உள்ளநிறைவேற்பட்டும் அடங்கியிருப்பாள். இரண்டும் தேவியிடம் காணப்படுகிறது. (575)

**42. மத்தா. மதம் கொண்டவள்.**

42-1. மாத்வீ எனும் திராக்ஷை மதுவை அருந்தியதால் வெளிநாட்டம் குன்றிச் செயலிழந்து சோம்பியிருக்கும் தேவி எந்த வெளிப்பொருளையும் உணரமுடியாமல் மதம் பிடித்த நிலையில் இருக்கிறாள். ஆத்மானந்த அனுபவத்தால் வெளிநாட்டம் குன்றித் தன்னிடமே ஆனந்தத்தைக் காணும் யோகி, புறப்பொருள் வலிய அவனைச் சென்றடைந்தாலும் அதன் இருப்பை உணராது உணர்வற்றிருப்பான். அத்தகைய வெளி உணர்வற்ற மதர்த்த நிலையில் இருப்பவள் தேவி.

42-2. மத் என்ற சொல்லிற்கு என்னுடைய என்று பொருள். மத் - தா - எனது தன்மை. ஜீவனிடமுள்ள நான் சிறிய நான் பிரதிபிம்ப ஒளி வடிவமானது. தேவியாகிய பரம்பொருளிடமுள்ள நான் உலகனைத்தையும் தன்னுள் அடக்கும் பெரும் நான் ப்ர - அஹம். அதன் தன்மை பர - அஹந்தா - பர - மத்தா: அந்த பராஹந்தா - பரமத்தா வடிவினள் தேவி.

**43. மாத்ருகா - வர்ண - ரூபிணீ. மாத்ருகாக்ஷரங்களை வடிவமாகக் கொண்டவள்.**

43-1. அ முதல் க்ஷ வரை உள்ள 51 எழுத்துக்கள் மாத்ருகாக்ஷரங்களாகும் (21-75-1) சொல்லிற்கு நிறம் - வடிவம் தருவதால் எழுத்துக்களை வர்ணங்கள் என்பர். மாதா - தாய். சப்தம் எனும் உலகின் தாய் போன்றிருப்பவை அக்ஷரங்கள். அதனால் மாத்ருகா வர்ணங்கள். அவைகள் வடிவில் உள்ளவள் தேவி. (19.1.7)

43-2. ஒவ்வோர் அக்ஷரத்திற்கும் தனித்த நிறம் உண்டு. யோகினி நியாஸத்தில் (நா. 475 - 534) ஒவ்வொரு சக்கிரத்திலும் அமைந்த அக்ஷரங்களுக்கும் தனி நிறம் உண்டு. விசுத்தி சக்கிரத்தில் உள்ள உயிர் எழுத்து 16ம் புகை நிறமுள்ளவை. அநாஹதத்தில் உள்ள க-ட$^{2}$ எழுத்துக்கள் சிந்தூர நிறமுள்ளவை. மணிபூரகத்தில் உள்ள ட$^{3}$-ப$^{2}$ எழுத்துக்கள் முல்லைப்பூ போன்ற வெண்ணிறம் உள்ளவை. ஸ்வாதிஷ்டானத்திலுள்ள ப$^{3}$-ல எழுத்துக்கள் செந்நிறமுள்ளவை. மூலாதாரத்திலுள்ள வ - ஸ எழுத்துக்கள் தங்க நிறமுள்ளவை. ஆஜ்ஞையிலுள்ள - மின்னல் ஒளி போன்ற நிறம் கொண்டவை. சில நூல்களில் நிறங்கள் வேறுபட்டுக் கூறப்பட்டுள்ளன. உயிரெழுத்துக்கள் நிறமற்ற ஸ்படிகம் போன்றவை. தான் சார்ந்துள்ள மெய்யெழுத்தின் நிறத்தைக் காட்டக்கூடியவை. க-ச-ட-த-ப வர்க்க எழுத்துக்கள் பவழநிறங் கொண்டவை. ய-ள மஞ்சள் கலந்த செந்நிறமுள்ளவை. க்ஷ செந்நிறமுள்ளது. 51 எழுத்துக்களும் 51 வர்ணமுள்ளதாக உள்ளன என்றும் கூறுவர். இப்படி மாத்ருகாக்ஷரங்களின் நிறமாக, அவைகளை தனித்துக் காட்டும் சக்தியாக இருப்பவள் தேவி.

43-3. அ முதல் க்ஷ வரை உள்ள மாத்ருகா எழுத்துக்களையே தன் வடிவாகக் கொண்டது அக்ஷமாலை எனும் ஜபமாலை. (21.75.1-28.26.2) அதன் உருவகமே நிறமற்ற ஸ்படிகத்தாலான அக்ஷமாலை, ஸரஸ்வதி, பாலா முதலிய தேவியின் தோற்றங்களில் அது கையில் காணப்படுகிறது. அத்தகைய மானஸ ஜபத்திற்கான அக்ஷரமாலையாக இருப்பவள்.

43-4. மாத்ருகாக்ஷரங்களையே ஸ்ரீ சக்கிரத்தின் கோணங்களாகவும், தளங்களாகவும் பாவித்து ஸ்ரீ வித்யை மந்திரத்தால் அந்த அக்ஷர சக்தியாக அமர்ந்துள்ள தேவியின் தோற்றங்களை வழிபடுவது ஓர் அந்தர்யாகமுறை. இங்கு மாத்ருகாக்ஷரங்களையே ஸ்ரீ சக்கிர வடிவமாகக் கொள்வது கைலாஸப்பிரஸ்தாரம் என்ற ஸ்ரீ சக்கிர அமைப்பாகும். மேருப்ரஸ்தாரம், ஸ்ரீ சக்கிர (பூ) ப்ரஸ்தாரம் என வேறு இரு பிரஸ்தாரங்கள் உண்டு. (9-10-13) மாத்ருகாக்ஷரம், அதனால் அமைந்த ஸ்ரீ சக்கிரம்,

அதனில் பல அக்ஷர சக்திகளாக அமைந்த யோகினிகள் சூழ்ந்த தேவி, இவர்களை ஐக்கிய பாவனையுடன் தியானிப்பது இதற்குள்ள தனிச் சிறப்பு. அத்தகைய கைலாஸப்ரஸ்தாரம் எனும் ஸ்ரீ சக்கிரமாக அமைந்த மாத்ருகா வர்ணங்களின் வடிவில் உள்ளவள். (577)

(நா. 578 - 582)

महाकैलासनिलया मृणालमृदुदोर्लता ।

महनीया दयामूर्तिः महासाम्राज्यशालिनी ॥ 117 ॥

**மஹாகைலாஸநிலயா ம்ருணாலம்ருதுதோர்லதா.**

**மஹநீயா தயா மூர்த்தி: மஹாஸாம்ராஜ்யசாலிநீ.117**

**44. மஹா - கைலாஸ - நிலயா. மஹாகைலாஸத்தில் வசிப்பவள்.**

44-1. கைலாஸம் எனும் சிவன் வசிக்குமிடம் இமய மலைத் தொடரினுள் உள்ளது. உலக வெளிக்கப்பாற்பட்ட பெருவெளியில் உள்ள சிவஸ்தானமானது - மஹா கைலாஸம். அங்கு சிவசக்தியாகத் தேவி வசிக்கிறாள். மனித சரீரத்தில் பிரும்மரந்திரத்தில் அமைந்த அகுலஸஸ்ராரசக்கிரமே (பா. 1207-02) மஹா கைலாஸம். அதனுள் வசிப்பவள். அக்ஷர வடிவில் தியானத்தால் உருவகப்படுத்தப்பட்ட கைலாஸப் பிரஸ்தாரம் எனும் ஸ்ரீ சக்கிரத்தில் வசிப்பவள். (23-43-4) (578)

**45. ம்ருணாள - ம்ருது - தோர் - லதா. தாமரைத் தண்டு போன்று மென்மையான கைகள் உள்ளவள்.**

45-1. தாமரைத் தண்டுபோல் நீண்டு மெல்லியதாய் மென்மை யுள்ளதாய் துவளுவதாய் அழகாய் தேவியின் கைகள் இருக்கும். (579)

**46. மஹநீயா. கொண்டாடத்தக்கவள்.**

46-1. விழா விவாஹம் முதலிய சிறந்த நிகழ்ச்சிகளில் அருள்பெறச் சிறப்பான முறையில் கொண்டாடத்தக்கவள். (580)

**47. தயா - மூர்த்தி:. தயை வடிவானவள்.**

47-1. வேறு எதிர்பார்ப்பின்றி தானே முன்வந்து பிறரது கஷ்டங்களைப் போக்கி மகிழ்விக்கும் எண்ணம் தயை. அதனையே தன் வடிவமாகக் கொண்டவள். (581)

**48. மஹா - ஸாம்ராஜ்ய - சாலிநீ. பேரரசாண்மை படைத்தவள்.**

48-1. பல சிற்றரசர்களை அடக்கி ஆள்பவன் ஸம்ராட். பல ஸம்ராட்டுகளையும் அடக்கி ஆள்பவன் மஹா ஸம்ராட். அவனது ஆட்சி - ஆளுமை - அல்லது அவனது ஆளும் எல்லைப் பரப்பு மஹா ஸாம்ராஜ்யம். அதனை எப்போதும் தன்னியல்பாகக் கொண்டவள். உலகங்களாகிற மஹா ஸாம்ராஜ்யத்தின் தலைவி. ஸ்தூல - ஸூக்ஷ்ம - சரீர ஸமஷ்டியில் அபிமானியான ஈசுவரன் ஸம்ராட். (ஸ்தூல சரீர ஸமஷ்டி அபிமானியான விச்வன், விராட், ஸூக்ஷ்ம சரீர ஸமஷ்டி அபிமானியான ஹிரண்யகர்ப்பன், ஸ்வராட். இரண்டிலும் அபிமானமுள்ள ஈச்வரன் ஸம்ராட்). அவனது ஆளுமை மஹா ஸாம்ராஜ்யம். அதனுடன் கூடியவள். (17-8-1) (582)

(நா. 583 - 590)

आत्मविद्या महाविद्या श्रीविद्या कामसेविता ।
श्रीषोडशाक्षरीविद्या त्रिकूटा कामकोटिका ॥ 118 ॥
कटाक्षकिङ्करीभूतकमलाकोटिसेविता ।

**ஆத்மவித்யா மஹாவித்யா ஸ்ரீவித்யா காமஸேவிதா.**
**ஸ்ரீஷோடசாக்ஷரீவித்யா த்ரிகூடா காமகோடிகா. 118**
**கடாக்ஷகிங்கரீபூத கமலாகோடிஸேவிதா.**

**49. ஆத்ம - வித்யா. ஆத்மாவை அறிய உதவும் வித்யையானவள்.**

49 - 1 . பொருளின் தத்துவத்தை அறிய உதவுகிற கல்வி வித்யா. ஆத்மஸ்வரூபத்தைப் போதிக்கும் பிரும்மவித்யையாக இருப்பவள் ஆத்மவித்யா. பரோ ரஜஸே ஸாவதோம் என்ற துரீயகாயத்ரீ மந்திரமாக ஆத்மவித்யையாக விளங்குபவள் தேவி. (பெண்ணைத் தேவதையாகக் கொண்ட மந்திரம் வித்யை). (583)

**50. மஹாவித்யா. பெருமைமிக்க மந்திரவடிவினள்.**

50-1. எல்லாக் கஷ்டங்களையும் போக்கவல்லதாகையால் ஸ்ரீவித்யை, மஹாவித்யை - பெருமைமிக்க வித்யையாகிறது. துக்கா நவாக்ஷரீ மந்திரத்திற்கு மஹாவித்யை எனப் பெயர். அந்த மந்திர வடிவினள். (584)

**51. ஸ்ரீவித்யா. 15 அக்ஷரங்களுள்ள ஸ்ரீவித்யை மந்திர வடிவினள்.**

51-1. தேவியின் பஞ்சதாக்ஷரீ மந்திரம் ஸ்ரீவித்யை, மற்ற மந்திரங்களைவிடச் சிறப்புமிக்கது. (11-1.2) (585)

**52. காம - ஸேவிதா. மன்மதனால் வழிபடச் பெற்றவள்.**

52-1. காமன் - மன்மதன். அவனுக்கு அருள்புரிந்த காமேசனும் காமன் எனப்படுவார். இருவராலும் வழிபடப் பெற்றவள். ஸேவிதா என்ற சொல்லுக்கு நூலில் மணிபோல் கோர்க்கப்பட்டவள் என்றும் பொருள் உண்டு. லக்ஷ்மியின் புதல்வனான மன்மதன் உடலற்றவன். அவனுக்கு ஒரு மணி கிடைத்தது. விரலற்ற அவன் அதனை நூலில் கோர்த்தான். கழுத்தற்ற அவன் அதனைத் தன் கழுத்தில் தரித்தான். நாக்கற்ற அவன் அதனைச் சுவைத்தான். இவனை அறியாமல் நகரத்தில் நுழையக்கூடாது. புத்ரோ நிர்ருத்யா வைதேஹ:, அசேதா யச்ச சேதந:, ஸதம் மணி மவிந்தத். ஸோ(அ)நங்குலிராவயத். ஸோ(அ)க்ரீவ:ப்ரத்ய முஞ்சத். ஸோ(அ)ஜிஹ்வோ அஸச்சத. நைதம்ருஷிம் விதித்வா நகரம் ப்ரவிசேத் (அருணம் 11-54) என்று வேதம் கூறும். காமன் உடலில்லாதவன். அவன் கண்டெடுத்த மணி ஸ்ரீவித்யை. அவன் அதனைக் கோர்த்து இதயத்தில் தாங்கினான். மந்திரத்தைக் கண்டுபிடித்தவனானதால் அவன் அதற்கு ரிஷி. அவனை அறியாமல் ஸ்ரீ நகரத்திற்குள் நுழைய முடியாது என்பது இந்த வேத மந்திரத்தின் பொருள். அப்படிக் காமனால் கோர்க்கப்பட்ட மணி போன்றவள் தேவி.

52-2. காமபூஜிதா (நா. 375). அந்த நாமத்திற்கு முன்னும் பின்னும் பீடங்களின் விளக்கம் காணப்படுவதால் காமபீடத்தில் புஜிக்கப் பெற்றவள் என்ற பொருளை முக்கியமாகக் கொண்டது. (586)

**53. ஸ்ரீ ஷோடசாக்ஷரீ வித்யா. ஷோடசாக்ஷரீ வித்யையாக இருப்பவள்.**

53-1. பஞ்சதசாக்ஷரீ மந்திரத்துடன் ஸ்ரீ பீஜம் சேர்த்த 16 அக்ஷரங்கள் கொண்ட மந்திரம் ஸ்ரீஷோடசாக்ஷரீ எனப்படும். ஷோடசாக்ஷரீ - 16 அக்ஷரங்கள் கொண்டது. அதனைத் தன் வடிவமாகக் கொண்டவள். 28 அக்ஷரங்கள் கொண்டது பராஷோடசீ. அதன் நடுவே உள்ள பஞ்சதசாக்ஷரியின் மூன்று கூடங்களை மூன்று எழுத்துக்களாகக் கணக்கிட்டு அதனை ஷோடசீ என்பர். (பஞ்சதசாக்ஷரீ தவிர மற்ற எழுத்துகள் 13, பஞ்சதசாக்ஷரியின் மூன்று கூடங்கள் - 3 எழுத்துகள்). (ஸ்ரீம் ஸெள: க்லீம் ஐம் ஹ்ரீம் ஸ்ரீம் ஹ்ரீம் ஓம், பஞ்சதசாக்ஷரீ, ஹ்ரீம் ஸ்ரீம் ஐம் க்லீம் ஸெள:) இந்தப் பராஷோடசீயாக இருப்பவள்.

53-2. ஆத்ம வித்யா, மஹா வித்யா, ஸ்ரீ வித்யா, ஸ்ரீஷோடசாக்ஷரீ வித்யா என்ற நான்கு நாமங்களும் கர்ம மார்க்கத்தைப் போதிப்பதான கர்ம வித்யை, பிரும்மம் உலகமாகத் தோன்றுவதற்காக எடுத்த விராட் - மஹத் - ஸ்வரூபத்தைப் போதிப்பதான ஸ்ரீவித்யை, பரப்பிரும்ம ஸ்வரூபிணியான தேவியைப் போதிப்பதான பிரும்ம வித்யை என்ற இந்த நான்கை குறிப்பிடுகின்றன. (587)

## 54. த்ரி - கூடா. மூன்று தொகுதிகள் உள்ளவள்.

54-1. கூடம் - தொகுதி, கூறு. தேவியின் மந்திரம் மூன்று கூடங்களாலானது. (நா. 85 - 87). பிரும்மத்தைக் குறிப்பிடும் பிரணவம் அ உ ம் என மூன்று தொகுதிகள் உள்ளது. வேதங்கள் மூன்று. (அதர்வ வேதம் மற்ற மூன்றின் காம்ய கர்மங்களின் விதித்தொகுப்பென அதனைக் கணக்கிடாமல் மூன்று வேதங்கள் என்பர்). உலகம் மூன்று. தொழில் மூன்று - படைத்தல், காத்தல், அழித்தல் என. அதனைப் புரியும் தேவர்கள் மூன்று. ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற குணங்கள் மூன்று. விழிப்பு, கனவு, தூக்கம் என நிலை மூன்று. ஸூக்ஷமம், ஸ்துலம், காரணம் என்று தேகங்கள் மூன்று. நடந்தது, நடப்பது, நடக்கவிருப்பது எனக் காலம் மூன்று. அக்நிகண்டம், ஸூர்ய கண்டம், சந்திர கண்டம் எனக் கண்டங்கள் மூன்று. அறிவின் திரிபுடி, இச்சா - ஞான - கியா சக்திகள், இப்படி மூன்று கூறுகளாகப் பிரிந்த தனைத்துமாக இருப்பவள். (588)

## 55. காமகோடிகா. காமகோடியாயிருப்பவள்.

55-1. காம: - காமேச்வரனாகிய சிவன். அவரைக் கோடியாக ஒரு பகுதியாகக் கொண்டவள் தேவி. சிவனுக்கு ஸமமாயிருப்பவள். சிவனுடன் இரண்டறக் கலந்திருப்பவள்; காம கோட்டத்தில் அமைந்த காமகோடி எனும்

பீடமாக இருப்பவள்; காமம் என்ற மூன்றாவது புருஷார்த்தத்தின் எல்லையான மோக்ஷமாயிருப்பவள்; காமன் - மன்மதன், அவனது லக்ஷ்யமாயிருப்பவள். (589)

**56. கடாக்ஷ - கிங்கரீபூத - கமலா - கோடி - ஸேவிதா.**
**கடைக்கண் பார்வையால் இட்ட ஏவலை நிறைவேற்றும் கோடிக் கணக்கான லக்ஷ்மீ தேவிகளால் வழிபடப்பட்டவள்.**

56-1. தேவியின் கடைக்கண்பார்வை விழுமிடத்தில் கிங்கரிகளாக - என்ன செய்ய வேண்டும்? செய்யக் காத்திருக்கிறேன் என்று கூறி நிற்கும் ஏவலாளிகளாகக் - கோடிக்கணக்கான லக்ஷ்மீ தேவிகள் காத்து நிற்கின்றனா. தேவியின் கடைக்கண் பார்வை அடியார்கள் மேல் படுகிறது. அந்த அடியார்களுக்கு லக்ஷ்மீ பணி விடை புரிகிறாள். (590)

* * *

**அதிகாரம் - 24**

# தேவியின் பாவனாவடிவங்கள்

(நா. 591 - 597)

शिरः स्थिता चन्द्रनिभा भालस्थेन्द्रधनुःप्रभा ॥ 119 ॥
हृदयस्था रविप्रख्या त्रिकोणान्तरदीपिका ।

**சிரஸ்ஸ்த்திதா சந்த்ரநிபா பாலஸ்த்தேந்த்ரதனுப்ரபா.**
**119**
**ஹ்ருதயஸ்த்தா ரவிப்ரக்க்யா த்ரிகோணாந்தரதீபிகா.**

**1. சிரஸ் - ஸ்த்திதா. சிரசில் இருப்பவள்.**

1-1. சிரஸ் - பிரும்மரந்திரத்தில் உள்ள அகுல (சிவ) ஸஹஸ்ரார சக்கிரம். தேகமாகிய ஸ்ரீ சக்கிரத்தில் பிந்துஸ்தானம். (12.1.4) அங்கிருப்பவள் தேவி. மந்திரவடிவினளாக தேவியைப் பாவனை செய்யும் போது முதலில் செய்யப்படுவது குரு நியாஸம். (3.4) அந்த குரு ரூபத்தில் பிரும்ம ரந்திரத்தில் தேவி இருக்கிறாள். அங்கு ஹ்ரீம் முதலிய பீஜங்களில் உள்ள ம் என்ற பிந்துவின் உட்பிவுகளான பிந்து முதல் மஹாபிந்து வரை உள்ள 10 ஸ்தானங்களில் கடைசியான மஹாபிந்துவில் உறைபவள். (18.25.2) (591)

## 2. சந்த்ரநிபா. சந்திரன் போன்றவள்.

2-1. பிரும்மரந்திரத்தில் உள்ள ஸஹஸ்ரார கமலத்தில் ஸாதா என்ற 16வது நித்யா கலையாகப் பூர்ண சந்திரனாகத் தேவி தோன்றுகிறாள். அங்குள்ள சந்திரன் நித்யன்; தேய்வும்-வளர்ச்சியுமற்றவன். அந்தப் பூர்ண சந்திரனையே தன் வடிவமாகக் கொண்டவள். (சந்த்ராத்மநா நிபாதி). ஒளியால் சந்திரனுக்கொப்பானவளாக, ஸாதா சந்திர கலை வடிவினளாக தேவி சிரஸில் பாவனை செய்யப்படுகிறாள்.(பா.21.11.1-2) (592)

## 3. பாலஸ்த்தா. நெற்றியில் இருப்பவள்.

3-1. நெற்றியில் உள்ள ஆஜ்ஞா கமலத்தில் ஹ்ரீம் முதலிய பீஜாக்ஷரங்களில் உள்ள ம் என்ற பிந்துவாக தியானிக்கப்பெறுபவள். (593)

## 4. இந்த்ர - தநு: - ப்ரபா. வானவில்லுக்கொப்பான ஒளியுள்ளவள்.

4-1. ஆஜ்ஞா கமலத்தில் தியானிக்கப்பட்ட பிந்துவின் மேல் வானவில் போன்ற ஒளி காணப்படும். (12.18.1) அது பிந்துவின் பிரிவான அர்த்த சந்திரம் என்ற நாதவடிவினுடையது. தீப ஒளி போன்று பிந்துவின்மேல் இது அமைந்துள்ளது. அந்த வடிவில் தியானிக்கப்படுபவள்.(18.25.2) (594)

## 5. ஹ்ருதயஸ்த்தா. இதயத்தில் இருப்பவள்.

5-1. மந்திரத்தின் தேவதையை இதயத்தில் தியானிப்பர். (3.5). ஸ்ரீ வித்யையின் தேவதையாக, இந்த ஸஹஸ்ரநாமத்தின் தேவதையாக, தேவி இதயத்தில் இருப்பவளாகத் தியானிக்கப்படுகிறாள்.

5-2. பாலாமந்திரத்தின் மூன்றாவது கூடம் ஸௌ: என்ற சக்தி பீஷாக்ஷரம். இதனைப் பராமந்திரம் என்றும், ஹ்ருதய பீஜம் என்றும் கூறுவர். நமது உடலில் உள்ள சக்தி அனைத்தும் இதயத்தில் அடங்கி உள்ளது. விதையில் மரத்தின் கரு அடங்கியிருப்பதுபோல். உலகிலுள்ள சராசரமனைத்தின் சக்தியும் இந்த ஹ்ருதய பீஜத்தில் அடங்கியுள்ளது, இந்த மந்திர சக்தி வடிவில் தேவி இதயத்தினுள் வீற்றிருப்பதாகப் பாவனை செய்யப்படுகிறாள்.

5-3. தேவி அந்தர்யாமியாக (நம்மை ஆட்டிவைப்பவளாக) இதயத்தில் இருக்கிறாள் எனப் பரமேச்வரஹ்ருதயம் எனும் உபநிடதம் கூறும். அந்த உபநிடதத்திற்கே ஹ்ருதயம் என்ற பெயரும் உண்டு.

ஹ்ருதயம் என்ற உபநிடதத்தில் ஹ்ருதயத்தில் அந்தர்யாமியாக பாவனை செய்ய உபதேசிக்கப்படுபவள். (595)

### 6. ரவிப்ரக்க்யா. சூரியனைப் போன்று விளங்குபவள்.

6-1. இதயத்தில் விளங்கும் தேவி ஸூர்யனைப் போல் ஒளிமிக்கவள். இதயம் அநாஹதமெனும் சக்கிரமாக ஸூரிய கண்டமாக விளங்குவது. அதில் ஸூரியனுக்கொப்பான காந்தி உள்ளவனாகப் பாவனை செய்யப்படுகிறாள்.

6-2. மூகர் என்ற காமாக்ஷீ பக்தர் தனது ஆர்யா சதகத்தில் மத்த்யே ஹ்ருதயம் மத்த்யே நிடிலம் மத்த்யே சிரோ(அ)பி வாஸ்தவ்யாம். சண்டகர - சக்ரகாமுக - சந்த்ரஸமாபாம் நமாமி காமாக்ஷீம் (சு.15) என்று தேவியைப் பிராத்திக்கிறார். இதயத்தின் நடுவிலும், நெற்றியின் நடுவிலும், தலையின் நடுவிலும் முறையே சூரியன், வானவில், சந்திரன் இவர்களுக்கொப்பான ஒளியுள்ளவளாக விளங்கும் தேவியை வணங்குகிறேன் 591 - 596 நாமங்களில் குறிப்பிட்ட வடிவங்களே இவை. (596)

### 7. த்ரிகோண - அந்தர - தீபிகா. முக்கோணத்தின் இடையே சிறு தீபம் போன்று விளங்குபவள்.

7-1. மூலாதாரத்தில் நடுவில் உள்ள முக்கோணத்தில் அக்னி மண்டலத்தில் சிறு தீபம் போலிருந்து கொண்டு குண்டலினீ- சக்தி ஸ்தானத்தை விளங்குகிறாள்.

7-2. சூரியனைப் போன்ற ஒளி உள்ளவள் தேவி என்று 596வது நாமம் கூறியது. சூரியன் உலகை விளக்கும் விதத்தை இந்த நாமம் விவரித்துக் கூறுகிறது. மேருவை சூரியன் வலம் வருவதாகப் புராணங்கள் கூறும். மேருவின் எட்டு திக்குகளிலும் இந்திரன் முதலிய எட்டு திக்பாலர்களின் நகரங்கள் அமைந்து உள்ளன. ஸூரியன் கிழக்கு திக்கில் இந்திர நகரத்தில் இருந்து வலமாகச் செல்லும்போது இந்திரனின் நகரில் முழு வெளிச்சம் இருக்கும். அவன் செல்லும் பாதையில் தென்கிழக்கில் உள்ள அக்னியின் நகரிலும், அவன் முன், ஸஞ்சரித்த பாதையிலிருந்து வடகிழக்கில் அமைந்த ஈசானனின் நகரிலும் அப்போது ஒளி இருக்கும். தெற்கில் உள்ள யமனது நகரிலும், வடக்கில் உள்ள குபேரபுரியிலும் ஒளிமங்கி விடியற்காலை போலும், மாலை போலும் இருக்கும். மற்ற தென்மேற்கு, மேற்கு, வடமேற்குப் பக்கங்களில் முழு இருட்டிருக்கும்.

கிழக்கை விட்டுத் தென்கிழக்கு வந்தவுடன்கிழக்கு, தென்கிழக்கு, தெற்கு என்ற மூன்று திக்குகளில் வெளிச்சமிருக்கும். தென்மேற்கிலும் வடகிழக்கிலும் சந்தி வேளைபோல் மங்கிய ஒளி நிற்கும். மற்ற மூன்று திக்குகளிலும் (மேற்கு-வடமேற்கு- வடக்கு) இருட்டாயிருக்கும். இப்படி மூன்று கோணங்களில் (திக்குமூலை கோணம்) மட்டும் ஒளி காட்டும் சூரியனைப் போல் தேவியும் முக்கோணங்களில் ஒளிவிட்டுப் பிரகாசிக்கிறாள். தானிருக்கும் கோணத்திலும் அக்கோணத்துடன் இணைந்த பக்கத்திலுள்ள இரு கோணங்களிலும் தேவி பிரகாசத்தைத் தருகிறாள். (597)

***

### அதிகாரம் - 25

# அருள்புரியும் தேவியின் வடிவங்கள்

(நா. 598 - 606)

दाक्षायणी दैत्यहन्त्री दक्षयज्ञविनाशिनी ॥ 120 ॥
दरान्दोलितदीर्घाक्षी दरहासोज्ज्वलन्मुखी ।
गुरुमूर्तिर्गुणनिधिर्गोमाता गुहजन्मभूः ॥ 121 ॥

**தாக்ஷாயணீ தைத்யந்த்ரீ தயஷ்ஞவிநாசிநீ. 120**
**தராந்தோலிததீக்கா தரஹாஸோஜ்ஜ்வலன்முகீ.**
**குரு மூர்த்தி குணநிதி கோமாதா குஹந்மபூ. 121**

**1. தாக்ஷாயணீ. தக்ஷனின் பெண்.**

1-1. பிரும்மாவின் புதல்வர் தக்ஷன். ஒன்பது பிரஜாபதிகளில் (மக்கள் தலைவர்களில்) ஒருவர், தகுதிச் சிறப்பால் அவர்களின் தலைவரும் கூட. (பிரஜாபதிபதி:) மூவுலகிலும் பெருமைமிக்கவராகத் திகழவும் மும்மூர்த்திகளைவிடச் செல்வாக்குமிக்கவராக விளங்கவும் தக்ஷன் விரும்பினார். பிரும்மாவும், விஷ்ணுவும் தந்தையும், பாட்டனாருமானதால் அவர்களிடம் செல்வாக்கு உண்டு. சிவபெருமானையும் தனக்கு மாப்பிள்ளையாக்கிக் கொண்டுவிட்டால் நிறைவு பெறலாம் என நினைத்துத் தேவியை வழிபட்டார். தேவி கருணையால் ஸதீ என்று திருமாமம் பூண்டு அவருக்கு மகளானாள். தக்ஷனின் பெண் தாக்ஷாயணீ.

1-2. தக்ஷனுக்கு 60 பெண்கள். சந்திரனுக்கு 27 பெண்களை மணம் செய்வித்தார். அவர்களே 27 நட்சத்திரங்கள். தக்ஷனின் பெண்களானதால் தாக்ஷாயணிகள். அந்த நக்ஷத்திரங்களாயிருப்பவள். அமாவாசையன்றும், பௌர்ணமியன்றும் புரியப்படும் வேள்விகள் தர்சம், பூர்ணமாஸம் எனப்படும். இவைகளைத் தொடர்ந்து ஒவ்வொரு பருவத்திலும் செய்து வந்தால் அது தாக்ஷாயண வேள்வியாகும். அந்த வேள்வி வடிவிலிருப்பவள். (598)

**2. தைத்ய - ஹந்த்ரீ. அசுரர்களை மாய்ப்பவள்.**

2-1. தன்னலம் மிகுந்து அதற்காகப் பிறரைத் துன்புறுத்துபவர் அசுரர். அசுர இனத்தில் பிறந்த அனைவரும் அசுரராக இருப்பர் என்று கூற இயலாது. அங்கும் நல்லோர் உண்டு. அதனால் அசுரர் அனைவரையும் தேவி மாய்த்ததில்லை. அசுரத் தன்மை கொண்டவர்களை மட்டும் தேவி அழிப்பாள். அசுரர் மனம் கொண்டவர் எல்லா இனத்திலும் உண்டு. அவர்களையும் தேவி அழிப்பாள். தன் தந்தையான தக்ஷனே அசுர எண்ணம் கொண்டு முறை தவறி நடந்தபோது அவர் அழிவிற்குக் காரணமானாள். தன் மாப்பிள்ளையானதால் காணும்போதெல்லாம் சிவன் தன்னை வணங்க வேண்டும். எனத் தக்ஷன் எதிபாத்தார். அது நிறைவேறாததால் வேதம் விதித்துள்ள யாகத்தில் சிவனுக்கு உரியதான பங்கு தரவேண்டியதில்லை என ஆணையிட்டுத் தானே சிவனுக்குப் பங்கில்லாதவாறு யாகம் புரிந்து உலகிற்கு வழிகாட்ட முற்பட்டார். தாக்ஷாயணி தானே வலிய வேள்விக்கு வந்து தந்தையின் தவற்றைச் சுட்டிக் காட்டினாள். அதைக் கேளாது இறுமாந்து இருந்த தக்ஷனின் பெண்ணாக இனி இருக்கக்கூடாது என்று தக்ஷனுக்குப் பெண்ணாகத் தோன்றிய உடலை அவர் எதிரிலேயே யோக சித்தியால் விட்டுவிட்டுச் சிவனை அடைந்தாள். அதனால் கோபமடைந்த சிவனிடமிருந்து தோன்றிய வீரபத்திரர் மூலம் தக்ஷனை அழித்தாள். தன் தந்தையாயினும் அசுரத் தன்மை கொண்டபோது அவரை மாயச் செய்தாள். (599)

**3. தக்ஷ - யஜ்ஞ - விநாசிநீ. தக்ஷனது வேள்வியை அழித்தவள்.**

3-1. தக்ஷனிடம் அசுர எண்ணம் வளரக் காரணம் மக்கள் தலைவராயிருந்து பெற்ற சிறப்பால் வளர்ந்த ஆணவம். தான் பெரியவன், பலவான், நிகரற்றவன் என்ற கர்வத்தால் வேதம் வகுத்த முறைகளைக் கூட

மாற்றியமைத்து அதனை உலகம் பின்பற்றும்படி செய்துவிட முடியும் என நினைத்துச் செயலாற்றத் துணிந்தார். இது அறியாமையால் ஏற்படும் அசுரபாவம். அசுர பாவத்துடன் செய்யப்படும் வேள்வியும், தானமும் பயனற்றவை. மேலும் மேலும் ஆணவத்தை வளர்த்து அழிவுப்பாதைக்குக் கொண்டு செல்பவை. (ஆட்ட்யோ அபிஜநவாநஸ்மி என்று தொடங்கும் சுலோகங்களால் கீதையில் (16, 15-20) அசுரத்தன்மையுடன் செய்யப்படும் வேள்விகள் மறுபடி அசுரப் பிறப்பிற்கும் அழிவிற்கும் காரணமாவதைக் கண்ணன் குறிப்பிடுகிறார்.) தக்ஷன் அசுர எண்ணத்துடன் புரிந்த வேள்விகளை சிவன் அழிக்கக் காரணமாயிருந்தவள் தேவி. தக்ஷன் மறு பிறவி எடுத்தபோதும் அவன் புரிந்த வேள்விகளைச் சிவன் அழித்தார் என பிரும்ம - வாயு புராணங்கள் கூறும்.

3-2. கருணையால் ஒருவருக்கு மகளாகப் பிறக்குமளவிற்குத் தேவி இறங்கி வருகிறாள். தேவியை மகளாக்கிக் கொண்டாலும் ஆணவத்தை வளர்த்துக் கொண்டு முறை தவறி நடந்ததால் தந்தை எனப் பாராமல் அவனை அழிக்கிறாள். அவன் புரிந்தது யாகமே எனினும் முறை தவறிச் செய்யப்பட்டதால் அதனை அழிப்பதற்கும் தேவியே காரணமாகிறாள். இதனை தாக்ஷாயணீ, தைத்ய ஹந்த்ரீ, தக்ஷயஜ்ஞவிநாசிநீ என்ற இந்த நாமத் தொடர் மிக அழகாக விளக்குகிறது. (600)

## (8. யோகதா கலை 601 - 700 நாமங்கள்)

### 4. தர - ஆந்தோலித - தீர்க்க - அக்ஷீ. சிறிது சலிக்கும் நீண்ட கண்கள் உள்ளவள்.

4-1. தரம் ஆந்தோலிதம் - சிறிது நிலையற்றதும் அசைந்து கொண்டிருப்பதும் - எப்போதும் காதுகளின் ஓரத்திற்கும் மூக்கின் ஓரத்திற்குமிடையே தேவியின் பாவை அசைந்து கொண்டிருக்கிறது. நீண்ட விசாலமான கண்கள் அப்படி அசைவது தன் பார்வை எங்கும் படவேண்டும். ஏற்றத் தாழ்வின்றி அனைவரும் இதனால் உய்யவேண்டும் என்ற கருணையால், தரம் ஆந்தோலிதம் – பயம் நிலையற்றதாக்கப்பட்டது. தனது அடியார்களின் பயத்தை நிலையற்றதாக்கும் நீண்ட கண்கள் உள்ளவள். (601)

### 5. தர - ஹாஸ - உஜ்ஜ்வலந் - முகீ. புன்சிப்பால் ஒளி மிக்கதான முகமுள்ளவள்.

5-1. தரம் - சிறிது வெடித்து மலர்ந்தது. தேவியின் உதடுகள் சிறிது பிரிந்து அவற்றில் தோன்றும் புன்சிப்பு முக ஒளியைக் கூட்டுவிக்கிறது. அந்த மந்த ஹாஸம் எனும் புன்சிரிப்பு அருள் புரியும். அட்டஹாஸம் அழிந்துவிடும். (602)

**6. குரு - மூர்த்தி: குருவின் வடிவானவள்.**

6-1. புன் சிரிப்பால் அருள் புரிவதற்குத் தேவி எடுக்கும் வடிவம் குரு. அறியாமையைப் போக்கி இறையுணர்வைத் தந்தருளும் குரு தேவி. மந்திர ஜபத்தைத் தொடங்குகையில் குருவாகத் தலை மேல் கை கூப்பி வணங்குவதற்குரியவள். சொல் வடிவமான மந்திரமும் அதனைப் போதித்த ஆசாரியனும் தேவியே என்று ஐக்கிய பாவனையால் மட்டுமே சித்தி பெற முடியும். அதனை ஆசாரிய வடிவில் அருள்பவள் (நா.471, 713) (603)

**7. குண - நிதி: குணங்களின் சேமிப்பிடம்.**

7-1. நல்ல குணங்களனைத்தும் குவிந்தும், தனித்தும், சிறப்பாக விளங்குமிடம். ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற முக்குணங்கள் ஒன்றுடன் ஒன்று பிணைந்து கோடிக்கணக்கான தோற்றங்களுக்குக் காரணமாகின்றன. அந்த முக்குணங்களும் தேவியின் முதல் தோற்றமான மூலப்பிரகிருதியினுள் அடங்கியவை. அதனால் கோடிக்கணக்கில் பிரிந்த முக்குணங்களின் மூலஸ்தானம் தேவி.

7-2. நிதி என்ற சொல் கடபயாதி முறையில் (18.22.3) 9ஐக் குறிக்கும். காலம், குலம், நாமம், ஞானம், சித்தம், நாதம், பிந்து, கலா, ஜீவன் என ஒன்பது கூட்டங்களை (நவவ்யூஹம்) குணம் என்பர். உலகைப் படைக்க முற்பட்ட மூலப்பிரகிருதி இந்த ஒன்பது வ்யூஹ (அணி - பிரிவு)ங்களாக மூலப்பொருள்களை உண்டாக்கியது. 1. கால வ்யூஹம் - நிமிஷம், நாள், மாதம் முதலிய கால வரைகள். 2. குல வ்யூஹம் - நிறம் முதலியவை, உருவமைப்பைப் பிரித்துக் காட்டுபவை. 3. நாம வ்யூஹம் - ஆடு, மாடு, மனிதன் என இனங்களைப் பிறித்துக்காட்டுபவை. 4. ஞான வ்யூஹம் - பாத்தல், கேட்டல், முகர்தல் முதலிய சிற்றறிவுகள். 5. சித்த வ்யூஹம் - மனம், புத்தி, சித்தம், அஹங்காரம் என்ற அந்தக் கரணங்கள். 6. நாத வ்யூஹம் - ஆசை, செயல், முயற்சி என்ற செயலிற்கு மூலப்பொருள், பரா, பச்யந்தீ முதலிய ஒலி மூலப்பொருள். 7. பிந்து வ்யூஹம் - குண்டலிநீ விரிவடையத்தக்க ஆறு சக்கிரங்கள். 8. கலா வ்யூஹம் - 51 அக்ஷரங்களாக விரிவடையும் அக்ஷரதத்துவம். 9. ஜீவ வ்யூஹம் - வினைகளால் பிரிவை அடைந்து கட்டுப்பட்டுள்ள ஆத்மஸ்வரூபம். இவை ஒன்பது குணங்கள். இவைகளின் தோற்றுவாயும் இவை தோன்றும் வரை அடங்குமிடமும் (நிதி) தேவியே.

7-3. குணம் - கயிறு. நடைபெற்றுவரும் ச்வேதவராஹ கல்பம் எனும் பிரும்ம தினத்தில் ஆறாவது சாக்ஷுக்ஷ மன்வந்தரத்தின் இறுதியிலும் தற்போது நடக்கும் ஏழாவது வைவஸ்வத மந்வந்தரம் தொடங்குவதற்கு முன்னும் நடந்த இடைக்காலப் பிரளயத்தில் பூமி ஜலத்தில் மூழ்கிக் கரைந்தது. வேதத்தைக் காப்பாற்றி வரும் ஏழு ரிஷிகளையும் அடுத்த சிருஷ்டிக்கான மூலப்பொருள்களனைத்தையும் இறைவனின் ஆணையால் ஸத்யவ்ரதர் என்ற வைவஸ்வதமனு ஒரு பெரிய ஓடத்தில் ஏற்றிக் காப்பாற்றினார். (17.26, 56) நாராயணன் மத்ஸ்யாவதாரம் எடுத்து ஓடக் கயிற்றைத் தன் வாயால் கவ்விப் பிரளயக் கடலின் கொந்தளிப்பினால் ஓடம் அழியாமல் காப்பாற்றினார். ஓடத்தை மத்ஸ்ய மூர்த்தியுடன் பிணைத்த கயிறு வடீரிகா (வடக் கயிறு) எனப்படும். அதன் உறுதியைப் பாதுகாக்க மஹாமாயாஸ்வரூபிணியான தேவி அதனுள் உறைந்தாள். ஜகத்தாத்ரீ மஹாமாயா லோகமாதா ஜகந்மயீ. த்ரடயிஷ்யதி தாம் ரஜ்ஜும் ந த்ருட்யதி யதா ததா. யோக நித்ரா ஜகத்தாத்ரீ ஸமாஸீதத் வடீரிகாம் (மத்ஸ்ய - காளீ புராணங்கள்). அப்படி வடக்கயிற்றின் உள் உறைந்து (நதி:) அதனை வலிவுள்ளதாக்கி ஓடத்தைக் காப்பாற்றியவள். (604)

### 8. கோ - மாதா. காமதேனு வடிவினள்.

8-1. உலகிலுள்ள பசுவினத்திற்குத் தாய் காமதேனு. அதன் வடிவில் அமைந்திருப்பவள். கோ என்ற சொல், ஸ்வாக்கம், ஒளி, சந்திரன், வாக்கு, ஜலம், அக்கினி, ஸத்தியம் என்ற பல பொருள்கள் கொண்டது. அவ்வனைத்திற்கும் தாய். (605)

### 9. குஹ ஜந்ம - பூ:. முருகனின் பிறப்பிடம்.

9-1. குஹன் - முருகன். இதயக் குகையினுள் மறைந்திருப்பவன். அவித்யை எனும் போர்வையால் மறைக்கப்பட்ட ஜீவர்களும் குஹர்களே. அவித்யை எனும் மறைப்பு தனிப்பட்டவன் இந்த ஜீவன் எனப் பிறரும் பிரித்தறியச் செய்தது. தான் தனிப்பட்டவன் எனத் தன்னையே நினைக்கச் செய்தது. அந்த ஜீவர்களுக்கும் குஹப்பெருமானுக்கும் தாய். (606)

(நா. 607 - 610)

**देवेशी दण्ड नीतिस्था दहराकाशरूपिणी ।**

**प्रतिपन्मुख्यराकान्ततिथिमण्डलपूजिता ॥ 122 ॥**

**தேவேசீ தண்டநீதிஸ்த்தா தஹராகாசரூபிணீ.**
**பிரதியந்முக்க்யராகாந்ததிதிமண்டலபூஜிதா. 122**

**10. தேவ - ஈசீ. தேவர்களின் ஈசுவரீ.**

10-1. தேவர்கள், பிரும்மா முதலியவர்கள். அவர்களைத் தம் தம் பணியில் ஈடுபடும்படிக் கட்டுப்படுத்துபவள். உடலிலுள்ள கண், காது முதலிய பொறிகளுக்குத் தேவதையாயுள்ள அக்கினி, திக்தேவதைகள் முதலியவர்க்கும் ஈசுவரியாகி அந்தந்தப் பொறிகளைச் சீராக இயங்கச் செய்பவள்.(17.8.1.8) (607)

**11. தண்ட - நீதி - ஸ்த்தா. மக்களைக் கட்டுப்படுத்தும் அரசாளும் முறையிலிருப்பவள்**

11-1. அரசாங்கம் மக்களை அடக்கி ஆளும் முறையைப் போதிக்கும் சாஸ்திரம் தண்டம், தண்ட நீதி, அர்த்த சாஸ்திரம் எனப்படும். அந்த தண்ட நீதி எனும் சாஸ்திர வடிவில் இருப்பவள். தண்டம் வழியே மக்களை ஆளும் முறை (நீதியில் இருப்பவள். (நா.828) (608)

**12. தஹர - ஆகாச - ரூபிணீ. தஹராகாசமாயிருப்பவள்.**

12-1. தஹரம் -மிக நுண்ணியது. மிக நுண்ணிய ஆகாசம். உடலின் சேதனா சக்திக்கு இருப்பிடமான இதயத்திலுள்ள வெளி ஹ்ருதயகுஹாரம், தஹரம் என்பர் இதை. இதயவெளியாக, அதனுள் அந்த உறையும் ஆத்மாவாகத் தேவி இருப்பதாகப் பாவனை செய்வர். ஆகாச தந்மாத்திரத்திற்கும் மூலகாரணமான தேவி பராகாச வடிவினள். (ஆ - ஸமந்தாத், காசதே - எங்கும் நிறைந்து சலனமின்றி பிரகாசிப்பது ஆகாசம்) அந்தப் பராகாசம் இதய குகையினுள் உள்ள மிக நுண்ணிய வெளியாகவும் உள்ளது. அந்தப் பராகாச வடிவினள். (609)

**13. ப்ரதிபத் - முக்க்ய - ராகா - அந்த - திதி - மண்டல பூஜிதா. பிரதமை முதல் பௌர்ணமி வரை உள்ள திதிக் கூட்டத்தில் வழிபடப் பெறுபவள்.**

13-1. தேவியின் வழிபாடு சுக்ல பக்ஷத்துப் பிரதமையன்று தொடங்கிப் பௌர்ணமி வரை செய்வது சிறப்புமிக்கது. சித்திரை, ஐப்பசி மாதங்களில் அங்ஙனம் 15 நாட்கள் தொடர்ந்து வழிபாடு நடத்துவர். அவ்வகையில் வழிபடப் பெறுபவள்.

13-2. சுக்ல பக்ஷத்துப் பிரதமை முதல் பௌர்ணமி வரை உள்ள 15 திதிகளுக்கும் ஒவ்வொரு நித்யாதேவி உண்டு. (10.8.1) திதி நித்யாதேவிகள் என்று இவர்களுக்குப் பெயர். காமேச்வரீ சுக்ல பக்ஷத்துப் பிரதமையன்றும், பகமாலினீ துவிதீயையன்றும். இப்படி வரிசையாக ஒவ்வொரு நித்யாதேவி ஒவ்வொரு திதியிலாகச் சுக்ல பக்ஷத்தில் வழிபடுகிறார்கள். கிருஷ்ண பக்ஷத்துப் பிரதமை முதல் அமாவாசை வரை இவர்களே வரிசை மாறித் தலைகீழாக கிருஷ்ண பக்ஷத்தில் பிரதமையன்று சித்ராவும், துவிதீயையன்று ஜ்வாலா மாலினியும் என்ற வரிசையில் வழிபடுகிறார்கள். இப்படி நித்யைகள் எனப்படும் திதி மண்டலத்தால் வழிபடப் பெறுபவள்.

13-3. தேவதைகளில் சிலருக்குச் சில திதிகளில் தனித்த ஈடுபாடு உண்டு. விநாயகருக்குச் சதுர்த்தி, முருகனுக்கு ஷஷ்டி என்பது போல். அக்கினி - பிரதமை. அச்விநீ தேவதைகள் இருவர் - துவிதீயை, உமா - திருதீயை. விநாயகர் - சதுத்தி, நாகர் - பஞ்சமீ, முருகன் - ஷஷ்டி, சூரியன் - ஸப்தமீ, பிராம்மீ முதலிய மாதாக்கள் - அஷ்டமீ, துர்கா - நவமீ, திக்தேவதைகள் - தசமீ, குபேரன் - ஏகாதசீ, விஷ்ணு - துவாதசீ, யமன் - திரயோதசீ, சந்திரன் - பௌர்ணமி, பித்ரு தேவதைகள் - அமாவாசை. ஒவ்வொரு திதியிலும் தனித்த ஈடுபாடு கொண்ட 16 தேவதைகளாக அந்தந்தத் திதிகளில் வழிபடப் பெறுபவள். (610)

(நா. 611 - 614)

कलात्मिका कलानाथा काव्यालापविनोदिनी ।
सचामररमावाणीसव्यदक्षिणसेविता ॥ 123 ॥

**கலாத்மிகா கலாநாதா காவ்யாலாபவிநோதிநீ[1]**
**ஸசாமரரமாவாணீ ஸவ்யதக்ஷிணஸேவிதா. 123**

**14. கலா - ஆத்மிகா. கலைகளாக இருப்பவள்.**

14-1. அக்கினி, ஸூர்யன், சந்திரன் என்ற மூன்று தேஜோ மண்டலங்களுக்கும் கலைகள் உண்டு. அக்கினிக் கலைகள் 10. தூம்ரார்ச்சிஸ், ஊஷ்மா, ஜ்வலிநீ, ஜ்வாலிநீ, விஸ்புலிங்கிநீ, ஸுச்ரீ, ஸுரூபா, கபிலா, ஹவ்யவாஹா, கவ்யவாஹா என. சூர்ய கலைகள் 12. தபிநீ, தாபிநீ, தூம்ரா, மரீசி, ஜ்வாலிநீ, ருசி, ஸுஷும்நா, போகதா, விச்வா,

---

1 विमोदिनी விமோதினீ என்றும் பாடம்.

போதிநீ, தாரிணீ, க்ஷமா என. சந்திரக் கலைகள் 16. அம்ருதா, மாநதா, பூஷா, துஷ்டி, புஷ்டி, ரதி, த்ருதி, சசிநீ, சந்திகா, காந்தி, ஜ்யோத்ஸ்நா, ஸ்ரீ, ப்ரீதி, அங்கதா, பூர்ணா, பூர்ணாம்ருதா என. பிரும்மா, விஷ்ணு, ருத்திரன், ஈச்வரன், ஸதாசிவன் என்ற ஐவருக்கும் கலைகள் உண்டு. அவையாவன பிரும்ம கலைகள் 10. ஸ்ருஷ்டி, ருத்தி, ஸ்ம்ருதி, மேதா, காந்தி, லக்ஷ்மீ, த்யுதி, ஸ்திதி, ஸிதிதி, ஸித்தி என. விஷ்ணு கலைகள் 10. ஜரா, பாலிநீ, சாந்தி, ஈச்வரீ, ரதி, காமிகா, வரதா, ஹ்லாதிநீ, ப்ரீதி, தீர்க்கா என. ருத்திர கலைகள் 10. தீக்ஷ்ணா, ரௌத்ரீ, பயா, நித்ரா, தந்த்ரா, க்ஷுதா, க்ரோதிநீ, க்ரியா, உத்காரீ, ம்ருத்யு என. ஈச்வர கலைகள் 4. பீதா, ச்வேதா, அருணா, அஸிதா என. ஸதா சிவ கலைகள் 16. நிவ்ருத்தி, பிரதிஷ்டா, வித்யா, சாந்தி, இந்திகா, தீபிகா, ரேசிகா, மோசிகா, பரா, ஸூக்ஷ்மா, ஸூக்ஷ்மாம்ருதா, ஜ்ஞானா, ஜ்ஞானாம்ருதா, ஆப்யாயிநீ, வ்யாபிநீ, வ்யோமரூபா என. இந்தக் கலைகளை வடிவாமாகக் கொண்டவள். (தேஜோ மண்டலம் 38, பிரும்ம மண்டலம் 50).

14-2 . ஜாக்ரத் (விழிப்பு நிலை), ஸ்வப்னம் (கனவு நிலை), ஸுஷுப்தி (துக்க நிலை), துரீய நிலை (விழிப்பு முதலிய மூன்றையும் கடந்த ஆத்ம உணர்வு நிலை). இவைகளில் கலைகள் உண்டு. அவையாவன: ஜாக்ரத் கலை. 4. உற்பத்தி, விழிப்பு,புலன் அறிவு, மனம் பலவற்றில் ஈடுபடுதல் என. ஸ்வப்ந கலைகள் 4. ஆசை, பிரமை, ஒரு பொருளைப் பற்றி எப்போதும் சிந்தித்தல், ஞாபக சக்தி என. ஸுஷுப்தி கலை 4. மரணம்-ஞாபக மறதி, மயக்கம், தூக்கம் என. துரீய கலை 4. வைராக்கியம்- மோக்ஷ ஆசை, ஸமாதி அடையத்தக்க தெளிந்த மனம், நிலைத்ததும் நிலைக்காததும் (நித்ய - அநித்ய) ஆன பொருள்களின் பகுத்தறிவு என. இந்தக் கலைகளை வடிவாகக் கொண்டவள். 64 கலை (16.38.1-5) வடிவானவள். (611)

**15. கலா - நாதா. கலைகளுக்குத் தலைவி.**

15-1. முன் நாமத்தில் கூறப்பட்டுள்ள கலைகள் அனைத்திற்கும் சக்தி தரும் ஈச்வரி. கலாநாதன் - சந்திரன். சந்திர மண்டலம் ஸ்ரீ சக்கிரத்தின் ஒரு வடிவாகும். சந்திர மண்டலமாயும் சந்திரனாயுமிருப்பவள். (612)

**16. காவ்ய - ஆலாப - விநோதிநீ. காவியங்கள் பாடுவதால் மனம் மகிழ்பவள்.**

16-1. வால்மீகி முதலிய கவிகளால் இயற்றப்பட்ட நற்காவியங்களைக் கேட்பதிலும், பாடுவதிலும், உற்சாகத்துடன் ஈடுபட்டு மனவேதனை யற்றிருப்பவள். பாடபேதம் - விநோதிநீ - களிப்புள்ளவள்.

**17. ஸசாமர - ரமா - வாணீ - ஸவ்ய - தக்ஷிணா - ஸேவிதா. சாமரத்துடன் கூடிய லக்ஷ்மியாலும், ஸரஸ்வதியாலும் இடப்புறத்திலும், வலப்புறத்திலும் பணிவிடை செய்யப்பட்டவள்.**

17-1. தேவியின் இடப்புறத்தில் லக்ஷ்மியும், வலப்புறத்தில் ஸரஸ்வதியும் நின்று சாமரம் வீசிப் பணிவிடை புகின்றனர். இடப் புறத்தில் செல்வமும், போகங்களும், வலப்புறத்தில் கல்வியும், ஞானமும் தேவியின் அருளைப் பெற்றவாகளிடம் செல்லக் காத்து நிற்கின்றன. தேவியின் அடியார்களிடம் செல்வதற்கான தகுதி பெற அவையும் தேவியை வழிபடுகின்றன. (614)

(நா. 615- 621)

आदिशक्तिरमेयाऽऽत्मा परमा पावनाकृतिः ।

अनेककोटिब्रह्माण्डजननी दिव्यविग्रहा ॥ 124 ॥

**ஆதிசக்திரமேயா(ஆ) த்மா பரமா பாவநாக்ருதி**

**அநேககோடிப்ரம்ஹாண்டஜனனீ திவ்யவிக்ரஹா. 124**

**18. ஆதி - சக்தி:. முதற்காரணமான சக்தி.**

18-1. எல்லா உலகங்களும் தோன்றுவதற்கு மூலகாரணமாய் பிரும்மத்திடம் அடங்கியிருந்து ஸங்கல்ப வடிவில் முதலில் தோன்றிய சக்தி. (19.1.1 - 23.28.2) 615

**19. அமேயா. அளவிட முடியாதவள்.**

19-1. அளவிடும் கருவிகளான பொறிகளும், மனமும் அளவிடுவதற்கேற்ற குறுகிய பொருளையே அளவிடும். தேவி மஹத்தெனும் மூலகாரணத்திற்கும் அப்பாற்பட்டவள். மனத்தாலும்-பொறிகளாலும் அளவிட முடியாதவள். தேவியிடத்தில் உள்ளது எதுவும் அளவிட முடியாததே. (616)

**20. ஆத்மா. ஆத்மாவாக இருப்பவள்.**

20-1. இந்த நாமம் ஜீவாத்மாவைக் குறிக்கும். பரமா என்ற அடுத்த நாமம் பரமாத்மாவைக் குறிக்கும். பரமசிவனது எட்டு உருவங்களில் ஆத்மாவும் ஒன்று. (9.2.2) ஸ்தூலம், ஸூக்ஷ்மம், காரணம் என்ற மூன்று சாரங்களிலும் அபிமானியான ஜீவனெனும் ஆத்மா, தான் நாடிய பொருளை அடையும். (ஆப்நோதி) அதனைத் தன்னுடையதாக்கிக் கொள்ளும். (ஆதத்தே) அதனை அனுபவிக்கும். (அத்தி) எப்போதும் ஏதோ ஒரு ரூபத்தில் இருக்கும். (அஸ்தி)அத்தகைய ஜீவாத்மா தேவியே.

20-2. ஆத்மா என்ற சொல் உடல், மனம், பரப்பிரும்மம், ஸ்வபாவம் (தன்மை) தைர்யம், புத்தி என்ற பல பொருள்களைக் கொண்டது. அத்தனையாயும் இருப்பவள். (617)

### 21. பரமா. பரம்பொருள்.

21-1. பரம் பொருளாயிருப்பவள் (பரம் மாதி பரிச்சிநத்தி). பரம்பொருள் இன்னதென்று குறிப்பிட முடியாதிருக்கும்போது அதற்கு ஒரு தோற்றத்தை அளித்து (விமரிசம்) இதுதான் பரம்பொருள் என்று காட்டக்கூடியவள். பரனான ப்ரும்மத்தின் அல்லது சிவனின் சக்தியாயிருப்பவள். (பரஸ்ய மா) பரம்பொருள் கொண்டுள்ள மூலப்பிரகிருதி முதலிய பல தோற்றங்களுக்கும் முற்பட்டவள். ஆதியாக இருப்பவள். பெருமை மிக்கவள். மிக தூரத்தில் இருப்பவள். (618)

### 22. பாவந - ஆக்ருதி:. தூய்மை தரும் தோற்றமுள்ளவள்.

22-1. ஆக்ருதி: - தோற்றம். தூய்மையற்றதைத் தூயதாக்குகிற தோற்றமுள்ளவள். வாயினால் பாடி, மனத்தினால் சிந்திக்கச் சித்தத்துள் தன்னை விளக்கித் துய்மை பரப்புபவள். க்ருதி: - செயல். தேவியின் செயல்களைப் பற்றிய சரித்திரங்கள் - கேட்பதாலும், சொல்வதாலும் தூய்மையளிப்பவை. தன் தூய சரித்திர வடிவினள். (619)

### 23. அநேக - கோடி - ப்ரும்ஹாண்ட - ஜநநீ. பல்கோடி பிரும்மாண்டங்களையும் ஈன்ற தாய்.

23-1. எண்ணற்ற பிரும்மாண்டங்களைத் தோற்றுவித்தவள். பல பிரும்மாண்டங்களாக உருவமெடுத்த விராட் (ஸ்தூல தேகங்களின் ஸமஷ்டி) ஹிரண்யகர்ப்பன் (ஸூக்ஷ்ம சரீர ஸமஷ்டி) ஸூத்ராத்மா எனும் ஈச்வரன் (ஜீவர்களின் ஸமஷ்டி) என்ற மூன்று தொகுப்புகளையும் படைத்தவள் தேவி. (இவை பிரும்மத்தின் அண்டங்கள்). (17.8.1-23.48.1) (620)

**24. திவ்ய - விக்ரஹா. மிக அழகான வடிவம் உள்ளவள்.**

24-1. விக்ரஹம் - வடிவமைப்பு. தேவியின் வடிவமைப்பு மிக அழகானது. தெய்வத்தன்மை நிறைந்தது. (2.11.1) விக்ரஹம் - சண்டை. ஆகாயத்தில் சண்டை போடுபவள். (621)

(நா. 622 - 629)

क्लींकारी केवला गुह्या कैवल्यपददायिनी ।
त्रिपुरा त्रिजगद्वन्द्या त्रिमूर्तिस्त्रिदशेश्वरी ॥ 125 ॥

**25. க்லீம் - காரீ. க்லீம் எனும் பீஜவடிவினள்.**

25-1. க்லீம் என்பது காமராஜ பீஜம். இச்சா சக்தியும், வச்ய சக்தியும் மிக்க மந்திரச் சொல். அதனைத் தன் வடிவமாகக் கொண்டவள் தேவி. சிவனது (பரம்பொருளின்) இச்சா சக்தியை க்லீம் எனும் பீஜாரம் குறிப்பிடும். (622)

**26. கேவலா. தனித்திருப்பவள்.**

26-1. தேவியிடத்தில் பிரித்துப் பகுத்தறியத் தக்கதொன்றுமில்லை. எந்தப் பொருளிடத்திலும் உருவம் நிறம் செயல் முதலிய பல காணப்படும். அதனால் பிரித்தும் பகுத்தும் அவைகளை அறிய முடியும். தான் தானேயாகி வேறு ஒன்றின் சேர்க்கையுமற்ற ஏகம், கேவலம் என்ற சொற்களால் குறிப்பிடப்படும் பரம்பொருளின் அத்வைத நிலையில் இருப்பவள் தேவி. தனித்து ஏகமாயுள்ளவள், முழுமையானவள், முடிவாய் முடிந்த பொருள்.(நிர்ணீத: அர்த்த:).

26-2. க்லீம் எனும் பீஜத்தில் ஈம் என்பது காமகலை. (11.4.3) காமபீஜமாகிய க்லீம் மந்திர ஜபத்தால் எல்லா காமங்களும் - அறம் பொருள் இன்பம் என்ற மூன்று புருஷார்த்தங்களும். கேவலமான பரப்பிரும்ம நிலையும் (கைவல்யம் - மோக்ஷம் - வீடு) சித்திக்கும். அந்த மோக்ஷத்தைத் தரக்கூடிய ஈம் எனும் காமகலா மந்திர வடிவினள். மெய்யெழுத்துச் சேராததால் கேவலா. உயிர் எழுத்தாகத் தனித்திருப்பவள். இதனை மேலும் இரு நாமங்களால் விளக்குகிறார்கள். (கேவல என்ற சொல் தற்போது வழக்கில் மதிப்பில் தாழ்ந்ததென்று பொருள்படுகிறது. உண்மையில் மிக மிக உயர்ந்ததைக் கேவலம் என்ற சொல்லால் குறிப்பிடத்தகும் கௌலிநீ கேவலா எனப் பின் ஒரு நாமம் (925) வருகிறது. (623)

**27. குஹ்யா. மிக ரகசியமானவள்.**

27-1. குகையினுள் அடங்கியவள் குஹ்யா. வெளியிலுள்ள வெளிச்சத்தில் பழகிய கண்களுக்குக் குகையினுள் சென்றதும் எல்லாம் இருட்டாகிவிடும். குகையினுட் சென்ற நிதானித்த பின் அங்குள்ள சிறு ஒளியில் கண்கள் பார்த்துப் பழகிய பின் குகையினுள் உள்ள பொருள் துலங்கும். அதுபோல் வெளிநோக்குள்ளவர்களால் புலன்களுக்கப்பாற்பட்ட ரகசியமான தேவி காண முடியாதவள். குகையினுள் அமர்ந்துள்ள தேவியைக் காண்பதற்குத் தகுதி பெற வெளிப்பார்வை நீங்க வேண்டும். உள் பொருளைப் பார்க்கும் ஆவல் மிகுந்து மனம் உள்ளே பதியத் தொடங்கினால் உள்ளொளி பரவும். அவ்வெளியால் குகையில் அமர்ந்த தேவியைக் காண முடியும். (நா. 706) (624)

**28. கைவல்ய - பத - தாயிநீ. கைவல்யத்தை அருள்பவள்.**

28-1. அறிபவன் அறியப்படும் பொருள் அறிவு என்ற திரிபுடீ தேவையின்றி உள்ளொளியால் ஏற்படும் ஞானம் - ஆத்மானுபவம் கேவலம் ஆகும். அந்நிலையில் ஞானத்திற்கும் ஆத்ம ஸ்வரூபத்திற்கும் வேற்றுமையற்ற அத்வைதம் உணரப்படுகிறது. அதனால் அது மட்டும் ஆன கேவலம் ஆகிறது. அதுவே முக்தி எனும் கைவல்யம். ஆந்த பதத்தை - இடத்தைத் தருபவள்.

28-2. ஸாதனையால் அடையவேண்டிய பதங்கள் ஐந்து- ஐந்தையும் முக்தி என்பர். 1. ஸாலோக்யம் - விக்கிரகாராதனை முதலியவற்றால் கிடைப்பது. வழிபட்ட தேவதையின் உலகான வைகுண்டம், கைலாஸம் முதலியவற்றில் வசிப்பது. ஸகுண ஆராதனமானதால் ஸகுணமான போகம் கிட்டியது. 2. ஸாமீப்யம் - வழிபடும் தேவதையுடனேயே எப்போதும் நெருங்கியிருந்து வழிபட்டதால் வைகுண்டம் கைலாஸம் முதலியதை அடைந்து தேவதையின் அருகே இருந்து சேவைகள் புரியும் வாய்ப்பைப் பெறுவது. 3. ஸாரூப்யம் - விக்ரஹம் முதலியவை இல்லாமல் தன்னிடமே ஸகுணவடிவில் தேவதையை இடைவிடாமல் தியானித்து வழிபடுவதால், வழிபடும் தேவதையின் உருவமைப்பைப் பெறுவது. 4. ஸாயுஜ்யம் - நானே அந்த தேவதை என்ற பாவனையுடன் வழிபடுபவர் அந்த ஸகுணதேவதையாகவே ஆகிவிடுவர். 5. கைவல்யம் என முன் குறிப்பிட்ட மோக்ஷம். இந்த முதல் நான்கு வகை மோக்ஷங்களும் மோக்ஷம்போல் பலன் தருபவை. பிராகிருத

சரீரத் தொடர்பாகிய பிறப்பிறப்பு நீங்குவதால் அவை மோக்ஷம் எனக் கருதப்படுகின்றன. எனினும் பிறவிப்பிணி நீங்கியது தற்காலிகமானதே. வழிபாடு என்பது செயல், அதனால் ஸகுண வழிபாட்டால் பெற்ற கைலாஸ வைகுண்டப்பிராப்தி முதலியவை கர்மபலன்கள் தீரும்வரை நிலைப்பவை. அதனால் இவை பதங்கள் - ஸ்தானங்கள் ஆகின்றன. ஞானத்தால் பெற்ற கைவல்யம் எனும் ஐந்தாவது மோக்ஷம் ஒன்றே நிலைத்தது. அதனை அடைந்தவன் மீண்டும் ஸம்ஸாரத்தில் சிக்கித் திரும்புவதில்லை. அடையும் இடம் என ஒன்று இருந்தால், அதனை அடைந்ததுபோல் அதிலிருந்து திரும்பவும் நேரிடும். கைவல்யம் தான் தானேயாகி நிற்பது. அங்கு அடைபவனும் அடைவதும் அடையப்படுமிடமும் கிடையாது. அதனால் ஸ்வஸ்வரூபம் என்பர். அதிலிருந்து ஒருவன் நழுவ முடியாது. நிர்குணமாகத் தேவியை ஞானத்தால் அடைந்தவனுக்குக் கைவல்யம் என்ற ஐந்தாவது முக்தியையும், ஸகுண வழிபாட்டால் தேவியை அடைந்தவனுக்கு ஸாலோக்யம் ஸாமீப்யம் ஸாரூப்யம் ஸாயுஜ்யம் என்ற நான்கு பதம் எனும் முக்திகளையும் தேவி தருகிறாள்.(நா. 926) (625)

## 29. த்ரிபுரா. மும்மூர்த்திகளுக்கும் முந்தியவள்.

29-1. த்ரிபுரா மூன்றிற்கு, முந்தியவளாக இருப்பவள். பிரும்மா விஷ்ணு ருத்திரர் என்ற மூவரும் உலகைப் படைத்தும் காத்தும் அழித்தும் பணிபுரியத் தொடங்குமுன், அவர்களைத் தோற்றுவித்து மூன்று பணிகளை அவர்களிடம் ஒப்படைத்தவளானதால் முன்னவள்.

29-2. ஸத்வம் ரஜஸ் தமஸ் எனும் மூன்று குணங்களும், பூமி, புவர்லோகம், ஸுவர்லோகம் என்ற மூன்று உலகங்களும், அக்கினி சூரியன் சந்திரன் என்ற மூன்று தேஜோமண்டலங்களும் தோன்றுமுன் அவை தோன்றக் காரணமாயிருந்தவள்.

29-3. திரிபுரா - மூன்று வசிக்குமிடம் கொண்டவள். ஸுஷும்நா, இடா, பிங்களா என்ற மூன்று நாடிகள். மனம் சித்தம் புத்தி என்ற மூன்று அந்தஃகரணங்கள், மூன்று கோடுகள் கொண்ட முக்கோணம், மும்மூர்த்திகள், கார்ஹபத்யம் ஆஹவநீயம் தக்ஷிணாக்நி என்ற மூன்று அக்கினிகள், இச்சாசக்தி ஞானசக்தி கிரியா சக்தி என்ற மூன்று சக்தி, உதாத்தம் அனுதாத்தம் ஸ்வரிதம் என்ற மூன்று ஸ்வரங்கள், மூன்று உலகங்கள், மூன்று குணங்கள் அறிபவன், அறியப்படும் பொருள், அறிவு என்ற திபுடி இப்படி மூன்றாகத் தோன்றும் பலவற்றைத்தன் இருப்பிடமாகக் கொண்டவள்.

29-4. த்ரீந் புரதி - அறம் பொருள் இன்பம் என்ற மூன்றையும் தருபவள்.

**30. த்ரி - ஜகத் - வந்த்யா. மூவுலகங்களாலும் வணங்கத் தக்கவள்.**

30-1. மூன்று உலகங்களும் தேவியை வணங்குகின்றன. பிரும்மா முதலிய மும்மூர்த்திகளை உலகால் வணங்கத் தக்கவர்களாக்கியவள். (த்ரய: ஜகத்வந்த்யா: யஸ்யா:) (627)

**31. த்ரி - மூர்த்தி: மும் மூர்த்தி வடிவானவள்.**

31-1. மும்மூர்த்திகளும் தேவியின் வடிவங்கள். அதனால் அவர்களை மூன்று உலகங்களும் வணங்குகின்றன. தேவி வழிபாட்டில் திருதீயையன்று மூன்று வயதுள்ள கன்னிப் பெண்ணைத் திரிமூர்த்தி என வழிபடுவது வழக்கம். (13.11.2)

31-2. குருமண்டல தியான முறையில் காமராஜ சரணர்கள் என மூன்று ஆதிகுரு தம்பதியர். ரக்த சரணர், ரக்த சரணாம்பா, சுக்ல சரணர், சுக்ல சரணாம்பா, மிச்ரசரணர், மிச்ரசரணாம்பா எனப்படும் அந்த மூன்று தம்பதியார் வடிவில் இருப்பவள். மும்மூர்த்திகள் வாமா ஷ்யேஷ்டா ரௌத்ரீ என்றும் இச்சாசக்தி க்ரியாசக்தி ஞானசக்தி என்றும் மூன்று சக்திகள். பிராம்மீ, வைஷ்ணவீ, ரௌத்ரீ என்ற மூன்று தேவிகள். சாம்பவீ, ஸ்ரீவித்யா, சியாமளா என்ற மூன்று மந்த்ர சக்திகள் அனைத்துமாயிருப்பவள் தேவி. (628)

**32. த்ரி - தச - ஈச்வரி. தேவர்களுக்கு ஈசுவரி.**

32-1. த்ரிதசர் - மூன்றாவது தசையில் உள்ளவர். அல்லது மூன்று தசைகள் உள்ளவர். பால்யம் கௌமாரம் யௌவனம் வார்த்தக்யம் என்ற நான்கு நிலைகளில் மூன்றாவதான யௌவனம் என்ற தசை மட்டும் உள்ள தேவர். தோற்றம் வளர்ச்சி தேய்வு அழிவு என்ற நான்கு நிலைகள் ஒவ்வொரு பொருளுக்கும் உண்டு. அதில் அமிருதம் பருகியதால் அழிவு என்ற நான்காவது நிலை தேவர்களுக்குக் கிடையாதாகையால் அவர்கள் மூன்று தசையுள்ளவர்கள். வஸுக்கள் 8, ருத்திரர்கள் 11, ஆதித்யர்கள் 12, விச்வே தேவர்கள் 2 என அவர்கள் 33. அவர்களை மூன்று பத்து என்ற பொருள் கொண்ட த்ரிதச என்ற சொல்லால் குறிப்பிடுவார். சுமார் 30 பேர்கள் எனப் பொருள். தேவர்களுக்கு ஈச்வரீ. (த்ரி - தச - ஈச்வரி) விழிப்பு,

கனவு, துக்கம் என மூன்று நிலை (தசை)கள். அவை ஒவ்வொன்றிலும் எல்லாவற்றிலும் ஈச்வரியாக இருப்பவள். (த்ரி – தசா – ஈச்வரீ) (629)

(நா. 630 – 636)

त्र्यक्षरी दिव्यगन्धाढ्या सिन्दूरतिलकाञ्चिता ।
उमा शैलेन्द्रतनया गौरी गन्धर्वसेविता ॥ 126 ॥

**த்ர்யக்ஷரீ திவ்யகந்த்தாட்ட்யா ஸிந்தூரதிலகாஞ்சிதா.**
**உமா சைலேந்த்ரதநயா கௌரீ கந்த்தர்வஸேவிதா.**
**126**

**33. த்ரி - அக்ஷரீ. மூன்றக்ஷரமுள்ள மந்திர வடிவினள்.**

33-1. பாலா எனும் ஸ்ரீவித்யாமந்திரத்திற்கு மூன்றுஅக்ஷரங்கள். ஒவ்வொரு அக்ஷரமும் ஒரு கூடம். ஐம் வாக்பவகூடம் க்லீம் காமராஜ கூடம் ஸௌ: சக்தி கூடம். சுத்த வித்யைக்கும் 3 அக்ஷரங்கள். (8.14.1) மற்றும் மூன்றக்ஷரங்கள் கொண்ட மந்திரங்கள் அனைத்தும் (அததன் தேவதையை சித்சக்தியின் வடிவமாகத் தியானித்து ஜபிக்கும் போது) தேவியின் வடிவங்களாக அமைகின்றன. (630)

**34. திவ்ய - கந்த்த - ஆட்ட்யா. தெய்வீக மணத்துடன் கூடியவள்.**

34-1. திவ்யம் – வானில் – வானவர் உலகமாகிய ஸ்வர்க்கத்தில் உள்ளது. வானவர் தோட்டமாகிய சைத்ராதம் நந்தவனம் முதலியவற்றில் உண்டான பூக்கள், சந்தனம் முதலிய நறுமணப் பொருள்களால் அலங்கரிக்கப் பெற்றவள்.

34-2. திவ்யம் – தேவதைகளுக்கு உகந்தது. புமியிலும் தேவதைகளின் வழிபாட்டிற்கு உகந்த பொருள்களாக மதிக்கப்படும் சந்தனம், பூக்கள், பச்சைக் கற்புரம், குங்குமப்பூ முதலியவற்றால் அலங்கரிக்கப் பெற்றவள்.

34-3. திவ்யம் – தெய்வத்தன்மை பெற்றது. மனிதனின் காது, மூக்கு முதலியவை குறிப்பிட்ட அளவுக்குட்பட்ட ஒலி, மணம் முதலியவற்றை மட்டும் நுகரக்கூடும். அந்த அளவுக்கு மேற்பட்டவற்றை உணர அவைகளுக்குத் திறமை இல்லை. யோக சக்தியால் மனத்தை அடக்கிக் காதுப்பொறியை ஆகாய தத்துவத்துடன் இணைப்பதால் உலகில் உள்ள

எல்லா ஒலிகளையும் தடையின்றி கேட்க முடியும். அப்படி மூக்கைப் பிருமிவீ தத்துவத்துடன் இணைப்பதால் எல்லா உலக மணங்களையும் நுகர முடியும். யோகிக்குத் திவ்யகந்தங்களை நுகரும் சக்தி தேவியின் அருளால் கிட்டுகிறது. (திவ்யகந்த்தா: ஆட்ட்யா: ஸம்பந்நா: யயா) (631)

**35. ஸிந்தூர - திலக - அஞ்சிதா. சிந்தூரத் திலகத்தால் அலங்கரிக்கப் பெற்றவள்.**

35-1. சிந்துரம் செந்நிறமுள்ள கனிப்பொருள். அதனை இழைத்து நெற்றியின் நடுவிலும், வகிட்டிலும் சுமங்கலிகள் பொட்டிட்டுக் கொள்வர். கோரோசனை, காட்டத்திப்பூவின் மகரந்தப் பொடி இவற்றையும் சிந்தூரம் என்பர். தேவி சிந்தூரப் பொட்டு இட்டுக்கொண்டு அழகாயிருக்கிறாள்.

35-2. ஸிந்தூர - திலகா, சிந்தூரப் பொட்டிட்ட சுமங்கலி. சிந்துரக்கனிமப் பொருளுள்ள மேடுகளில் மோதி மத்தகம் சிவந்து காணும் பெண் யானை ஸிந்தூர திலகா. ஆண் யானை ஸிந்தூர திலகம். இவர்களால் அஞ்சிதா - சூழப்பட்டவள். சிந்தூர திலகத்தை மணமான பெண்டிரே இட்டுக்கொள்வர். இப்படி மணம் நிறைவேறிச் சிந்தூரப் பொட்டிடும் தகுதி பெறக் கன்னிகைகளால் (ஸிந்தூர திலகாய அஞ்சிதா பூஜிதா) வழிபடப் பெற்றவள். கோப கன்னிகைகள், ருக்மிணீ முதலியவர்களால் மணவாழ்க்கைப் பேற்றிற்காக வழிபடப்பட்டவள். (632)

**36. உமா. உமா என்ற திருநாமம் பூண்டவள்.**

36-1. இமவானுக்கு மேனாவிடம் பெண்ணாகத் தோன்றியவள். ஐந்தாவது வயதில் சிவனை மணாளனாகப் பெறக் கடும் தவம் இயற்றக் காட்டிற்குப் புறப்பட்டபோது உ (அப்பாடா) மா (வேண்டாம் அம்மா) என்று தாயால் தடுக்கப்பட்டவள். அதனால் உமா என்ற திருநாமம் ஏற்பட்டது.

36-2. உ - சிவன், அவரது மா - லக்ஷ்மி, சக்தி - உம் மாதி பரமசிவனை அடையாளம் காட்டுபவள். சிவன் நிறமற்றவர். தான் சிவனின் பாதியாகி நின்று, மற்றொரு பாதியில் தனது செம்மையைப் பரப்பிச் சிவனைத் தேவி அடையாளம் காட்டுகிறாள். (ஸௌந்தர்யலஹரீ, 24) உமா, ஆளிப்பூ, மஞ்சள்: ஆளிப்பு போன்ற கருநீல நிறமும், மஞ்சள் போன்ற மஞ்சள் நிறமும் கொண்ட மேனி உள்ளவள். ஆறு வயதுள்ள கன்னி உமா ஆவாள். (13.11.2)

36-3. ஓம் என்று அகார - உகார - மகார வரிசையில் அமைந்தது- சிவப்பிரணவம். ஊமா என்று உகார - மகார - அகார வரிசையில் அமைந்தது, தேவிப் பிரணவம். அகாரம் விஷ்ணுவையும் உகாரம் சிவனையும், மகாரம் பிரும்மாவையும் குறிப்பிடும். இங்கு தேவிப் பிரணவத்தில் சிவ - பிரும்ம - விஷ்ணுக்களைக் குறிப்பிடுமாறு அமைந்துள்ளது. ஸதாசிவர் ஆக அனுக்கிரஹம் புரிந்து பின் ஸ்ருஷ்டி - ஸ்திதிப் பணிகளைத் தேவி புரிகிறாள். (17.17-17.19-17.25) அதனால் இந்த பிரணவ அமைப்பில் மாறுதல் காணப்படுகிறது.

36 - 4. உ - மா - உயர்ந்த மனப்பதிப்பு (சித்தவ்ருத்தி) உமாவாகும். பிறவித்தளையை அறுக்கக்கூடிய ஆத்மானுபவத்தில் ஈடுபட்ட அசையாத சித்தவிருத்தி உமா எனப்படும். (உமாபிதாம் உத்தம சித்தவ்ருத்திம் நமாமி நாநாவித லோக வைபவாம். ஸூதஸம்ஹிதை). பிராணிகள் தூங்கும்போதும், விழித்திருக்கும் போதும் இதயத்தில் அநாஹத நாதமாக மத்தியமா ஒலியாக (19.5.1) கேட்டுக்கொண்டிருக்கும் ஓம் என்றதன் ம் ன் கார்வையாகிய பிந்துவின் மேலுள்ள அர்த்தசந்திரம் உமா. (18.25.2) யோகிகளின் முதிந்த இச்சாசக்தி உமா. விநாயக பீடத்தில் திருக்கோயில் கொண்டுள்ள தேவி உமா. (633)

### 37. சைல - இந்த்ர - தநயா. மலையரசனின் மகள்.

37-1. மலைகளுக்கு இந்த்ரன் - அதிபதி இமவான். அவனது மகள் தேவி. மலை ஜடப்பொருள். அதில் சேதனம் மிகவும் மறைந்திருக்கும். தேவி சேதனமே வடிவானவள். தனக்குத் தகப்பன் என்ற பெருமை மலைக்கு அளிக்கும் கருணை உள்ளத்துடன் அவனுக்கு மகளாகப் பிறந்தவள் . (நா 246- 956) (634)

### 38. கௌரீ. வெண்ணிறமுள்ளவள்.

38-1. சங்கு, முல்லை, சந்திரன் போன்ற வெண்ணிறம் கொண்டவள். தக்ஷனின் பெண்ணென்ற நிலையைத் தவிர்க்க யோக முறையால் தன்னுடலைவிட்ட தேவி இமவானின் பெண்ணாகப் பிறந்தபோது பனிமலையரசனுக்கேற்ற வெண்ணிறத்தோடு தோன்றினாள்.

38-2 . வருணனது சக்தி கௌரீ. கௌரீ என்றொரு நதி உண்டு. கான்யகுப்ஜத் (கனௌஜ்) திலுள்ள பீடத்தில் விளங்கும் தேவி கௌரீ. இவர்கள் வடிவானவள் தேவி. (635)

### 39. கந்த்தர்வ - ஸேவிதா. கந்தர்வர்களால் பணிவிடை செய்யப் பெற்றவள்.

39-1. கந்தர்வர்கள் தேவ இனத்தைச் சேர்ந்த பாடகர்கள் அவர்கள் தனது தேவகானத்தால் தேவியை மகிழ்வித்து வழிபடுகிறார்கள். அவர்களது திவ்ய கானமே கந்தர்வம். அதனால் வழிபடப் பெற்றவள். கந்தர்வ - குதிரை. அவர்களால் சூழப்பட்ட அசுவாரூடா தேவியாயிருப்பவள். (10.4.1) (636)

(நா. 637 - 644)

विश्वगर्भा स्वर्णगर्भाऽवरदा वागधीश्वरी ।
ध्यानगम्याऽपरिच्छेद्या ज्ञानदा ज्ञानविग्रहा ॥ 127 ॥

**விச்வகர்ப்பா ஸ்வர்ணகர்ப்பா (அ)வரதா வாகதீச்வரீ.**
**த்த்யாநகம்யா (அ)பரிச்சேத்யா ஜ்ஞானதா**
**ஜ்ஞானவிக்ரஹா. 127**

**40. விச்வகர்ப்பா. உலகைக் கருவாகக் கொண்டவள்.**

40-1. ஸ்தூலமாகத் தோன்றும் உலகம் விசுவம் எனப்படும். (17.8.1) அதனைத் தன் வயிற்றில் கருவாகத் தாங்குபவள். (637)

**41. ஸ்வர்ணகர்ப்பா. ஹிரண்யகர்ப்ப வடிவினள்.**

41-1. ஸூக்ஷ்ம சரீரத்தின் ஸமஷ்டியில் அபிமானமுள்ளவர் ஹிரண்ய - கர்ப்பர். (17.8, 1.22, 17.1.1) தைஜஸம் எனப்படும் . ராஜஸாலங்காரத்துடன் கலந்து ஸாத்விகாங்காரமானது ஸூக்ஷ்ம சரீரத்தைப் படைத்தது. அப்படிப் படைக்கப்பட்ட ஸூக்ஷ்ம சரீர ஸமஷ்டி, சக்தியும் ஒளியும் மிக்கதாய் தங்கம்போல் பிரகாசித்தது. அதனால் அதற்கு ஹிரண்யம், ஸ்வர்ணம் (தங்க நிறம் கொண்டது) என்ற பெயர் ஏற்பட்டது. அதனைக் கர்ப்பத்தில் கொண்ட ஸூக்ஷ்ம சரீர அபிமானியான ஈச்வரன் ஹிரண்ய கர்ப்பர். அவரது வடிவில் இருப்பவள்.

41-2 ஸு - அர்ண: - அழகான அக்ஷரம். அதனது கருப்பொருளாக விளங்குபவளும் அழகான அக்ஷரங்கள் கொண்ட மந்திரங்களைக் கருவில் கொண்டவளும் தேவி. (638)

**42. அவர - தா. கொடியவர்களை அடக்குபவள்.**

42-1 நேர்மையற்றவர்களும் கொடுஞ்செயல் புரிபவர்களும் மனிதர்களில் தாழ்ந்தவர்கள் (அவரா:) அவர்களைக் கண்டித்து

அடக்குபவள். அவரதா எனப் பிரிகிறது இங்கே. வரதா என வேறொரு நாமம் (331) உண்டு. (639)

### 43. வாக் - அதீச்வரீ. வாக்கிற்கு ஈசுவரீ.

43-1. வாக்கின் தேவதைகளான வசிநீ முதலிய எட்டு சக்திகளும் தேவியின் வடிவங்களே. (2.10.1) வாக்வாதிநீ எனும் மந்திரத்தின் தேவதையாக இருப்பவளும் அவளே. அவள் பேச வைக்கிறாள். பேச்சு அடங்கும்போது தியானத்தில் அவள் வெளிப்படுகிறாள். நாம் அறியாத பொருளைப் பற்றி மனத்தில் உருவகப்படுத்திக்கொள்ள முடியாது. நாம் அறிந்த பொருளைப் பற்றிப் பேசப் பேச மனத்தில் அப்பொருளின் முழு வடிவம் கிடைக்கிறது. தேவியைப் பற்றிய விளக்கங்களை அறிந்து பேசிப் பேசி மனத்தில் திடமாகப் பதிவு செய்துகொள்ளச் செய்கிறாள். பேசிப் பேசிப் பதிந்த தேவியின் உருவம் தியானத்தால் மனத்தில் நிலைத்து நிற்பதை அடுத்த நாமம் விளக்கும். சிரவணமும் மனனமும் வாகதீச்வரியின் அருளால் கிடைக்கும். (640)

### 44. த்த்யாந - கம்யா. தியானத்தால் அடையத்தக்கவள்.

44-1. மனத்தை ஓரிடத்தில் பதிய வைப்பது தியானம். தேவியை மனத்தில் உருவகப்படுத்தி எண்ணத்தை அவள்பால் நிறுத்த முற்படும் போது, வேறு எண்ணங்கள் குறுக்கிட்டுச் சலனம் ஏற்படக்கூடும். வேறு எண்ணங்கள் புகவெட்டாமல் தடுக்கத் தேவியைப் பற்றியே வெவ்வேறு விஷயங்களில் மனத்தைச் செலுத்தித் திரும்பவும் தியானிக்க விரும்புமிடத்திற்குக் கொணரவேண்டும். எப்படியாவது தேவியைப் பற்றிய சிந்தனைகளில் விஷயத்தை மாற்றி மாற்றியாவது, மனத்தை நிறுத்தி வைப்பதும், தேவியைப் பற்றிய பல வடிவங்களிலோ, பல செயல்களிலோ மாற்றி மாற்றி மனத்தை ஈடுபடச் செய்து தேவியை விட்டகலாமல் தாக்கச் செய்வதும் தாரணையாகும். இது சித்தியானதும் ஏதேனும் ஒரு வடிவத்தில் அல்லது செயலில் மனத்தை நிலைக்கச் செய்வது தியானம். அந்த தியானத்தால் மட்டும் அடையத்தக்கவள் தேவி. யோக வழிகளில் யமம் எனும் கர்மேந்திரியங்களின் அடக்கம், நியமமெனும் ஞானேந்திரியங்களின் அடக்கம், ஆஸனமெனும் உடலை லேசாக்கி ஒரே நிலையில் சுகமாக வெகுநேரமிருக்கச் செய்தல், பிரத்யாஹாரமெனும் மனத்தை வெளி விஷயங்களிலிருந்து திருப்பிக்கொணர்ந்து உள்ளே உள்ள தெய்வ வடிவத்தில் பதிய வைப்பது என்று யோகாங்கங்களைப் பழக்கி உடலையும்-பொறிகளையும், மனத்தையும் வசப்படுத்திய பின் மனத்தின் சஞ்சலத்தைக் குறைக்க வழிபடும் தெய்வத்தின் பல்வேறு விபூதிகளிலும், பெருமை

களிலும் போக்குக்காட்டி அடக்குவது தாரணை எனும் யோக அங்கம். அதன் பின்னரே தியானம் வசப்படும். ஸிந்தூராருண விக்ரஹாம் என்ற தியான சுலோகத்தில் (4.1) கூறப்பட்ட தேவியின் வடிவம் இடைவிடாமல், வேறு விமதான எண்ணங்கள் குறுக்கிடாமல் மனத்தில் நிலைக்கத் தியானம் என்ற இந்த யோக அங்கம் பயன்படுகிறது. இதில் மனம் நிலைத்ததும் ஸவிகல்ப ஸமாதி தானே கூடிவிடும். தியானத்தால் அடையத் தக்கவள் தேவி. (641)

### 45. அபரிச்சேத்யா. குறுக்குவதற்குட்படாதவள்.

45-1. இங்கு தான் இருப்பாள் என தேசத்தாலும், இன்று தான் இருப்பாள் என காலத்தாலும், இதுவாகத்தான் இருப்பாள் என வஸ்துவாலும் கட்டுப்படுத்த முடியாதவள் தேவி. இங்குதான் இருப்பாள் என்றால் மற்ற இடங்களில் இல்லை என அவளது வடிவத்தைப் பரப்பால் குறுக்கியதாக ஆகும். இன்று தான் இருப்பாள் என்றால் நேற்றோ நாளையோ அவள் இருக்கமாட்டாள் எனக் காலவரையால் குறுக்கியதாக ஆகும். இதுவாகத் தான் இருப்பாள் என்றால் அதுவாக மற்றதாக இல்லை என்று பொருளால் குறுக்கியதாக ஆகும். அவள் எங்கும் என்றும் எல்லாமாயும் இருப்பவளானதால் தேசத்தாலும், காலத்தாலும், பொருளாலும் குறுக்குவதற்கு உட்படாதவள். ஆனால் தியானத்தில் எளிதில் அகப்படுபவள். (642)

### 46. ஜ்ஞான - தா. ஞானத்தை அளிப்பவள்.

46-1. ஞானம் இரு வகைப்படும். ஒன்று பிறவித்தளையில் இருந்து விடுவிப்பது. பேதமற்ற ஒளி வடிவான ஆத்மஸ்வரூபத்தை அறிய உதவுவது அது. அதனைத் தருபவள் தேவி. (ஜ்ஞானம் ததாதி). மற்றொன்று பிறவித்தளையில் பிணைப்பது. ஆசை வசப்பட்டு ஆத்மாவாக இல்லாத தேகம் முதலியவற்றை ஆத்மா என்று அறியவும் ஆத்மா என்று ஒன்று தனித்திருப்பதை அறியாமலிருக்கவும் உதவும் ஞானம் (அஜ்ஞானம்). அதனைத் துண்டிப்பவள். (ஜ்ஞானம் த்யதி கண்டயதி). அஜ்ஞானமும் ஞானம்போல் தோன்றுவதால் ஞானம் எனப்படுகிறது. அபரிச்சேத்யா (நா. 642) வானதேவி, தியானத்தில் அகப்படுவாள். (நா.647) அவள் அறியப்பட்டதும் எல்லாம் அறிந்ததாகிறது. அத்தகைய பேரறிவைத் தருபவள் தேவி. (643)

### 47. ஜ்ஞான - விக்ரஹா. ஞான உருவினள்.

47-1. ஆத்மாவின் ஞானமும், ஆத்மாவும் வேறுபட்டதல்ல. ஆத்ம ஞானம் ஏற்பட்ட நிலையில் அந்த ஞானம் வேறு, அறிபவன் வேறு, அறியப்படும் பொருள் வேறு என்ற வேற்றுமை தோன்றாது. அதனால் ஞானமே வடிவமான ஆத்மாவாயிருப்பவள் தேவி. சிற்றறிவு பெற்ற நமக்குப் பேரறிவு எப்படிக் கிட்டும் எனத் தயங்கத் தேவையில்லை. நமது சிற்றறிவை விரிவாக்கிப் பேரறிவாக்க அவளால் இயலும். (விக்ரஹ:- விரிவாக்குதல்) தேவியின் அருளால் நாம் பெறும் ஞானம் மேன்மேலும் விரிவடைகிறது. (ஜ்ஞானஸ்ய விக்ரஹ: விஸ்தாரா: யஸ்யா: ஸகாசாத். (644)

(நா. 645 - 648)

सर्ववेदान्तसंवेद्या सत्यानन्दस्वरूपिणी ।
लोपामुद्रार्चिता लीला क्लृप्तब्रह्माण्डमण्डला ॥ 128 ॥

**ஸர்வவேதாந்தஸம்வேத்யா ஸத்யாநந்தஸ்வரூபிணீ.**
**லோபாமுத்ராச்சிதா லீலாக்லுப்தப்ரம்ஹாண்டமண்டலா.**
**128**

**48. ஸர்வ - வேதாந்த - ஸம்வேத்யா. எல்லா உபநிடதங்களாலும் ஒரே விதமாக அறிவிக்கப்பட்டவள்.**

48-1. வேதங்களின் கடைப் பகுதியிலுள்ள உபநிடதங்கள் வேதாந்தம் எனப்படும். வேதங்கள் உணர்த்தும் ஞானத்தின் எல்லை அவைகளில் காணப்படுவதாலும் அவை வேதாந்தங்கள். அவை ஒருமிக்க ஒரே விதமாகத் தேவியைப் பற்றி அறிவிக்கின்றன. வாக்குக்கும் மனத்திற்கும் எட்டாத தேவீ தத்துவத்தின் கோடியைக் (விளிம்பை) காட்டுகின்றன. எவ்வாறு விளக்குகின்றன என்பதை அடுத்த நாமம் கூறுகிறது. (645)

**49. ஸத்ய - ஆனந்த - ஸ்வரூபிணீ. ஸத்தியமும் ஆனந்தமுமே வடிவானவள்.**

49-1. முக்காலத்திலும் அழியாத பொருள் ஸத்தியம். துக்கக் கலப்பற்ற மட்டற்ற மகிழ்ச்சி ஆனந்தம். ஸத்தியமான ஆனந்தமாயும், ஆனந்தமான ஸத்தியமாயும், ஸத்தியமாயும், ஆனந்தமாயும் இருப்பவள் தேவி. ஸத்தியம் வேறு, ஆனந்தம் வேறு: அவை தன்மைகள்; அவைகளோடு கூடியவள் என்று பொருளல்ல. தேவி, ஸத்யம், ஆனந்தம் என்ற மூன்றும் தனித் தனிப் பொருளல்ல. மூன்றும் ஒன்றே. (646)

**50. லோபாமுத்ரா - அர்ச்சிதா. லோபாமுத்திரையால் வழிபடப் பெற்றவள்.**

50-1. அகஸ்தியரது மனைவி லோபாமுத்திரை. அகஸ்தியர் தானே தனக்கேற்ற குணங்களோடு இவளைப் படைத்து விதாப்ப நாட்டரசனைக் கொண்டு வளர்த்துப் பின் மணந்தார். இவள் தேவியின் உபாஸகர்கள் பன்னிருவரில் ஒருவன். பேதங்களை உணர்த்தும் நாம ரூபங்களைப் பொய்யெனக் கண்டறிந்து அதிலுள்ள அபிமானத்தை விட்டவள் லோபா, ஆத்மானந்தத்தைப் பெற்றவள், ஆத்மானந்தத்தைத் தந்தவள் முத்ரா. (முதம் ராதி) என லோபா முத்ரை என்ற பெயர் ஏற்பட்டது. இவள் ஸ்ரீவித்யா மந்திரங்களில் ஹாதி வித்யை எனப்படும் மந்திரத்தைக் கண்டுபிடித்த ருஷியாவாள். (ஹஸகலஹ்ரீம் ஹஸகலஹ்ரீம் ஸகலஹ்ரீம் என்பது அந்த 15 அக்ஷரங்கள் உள்ள மந்திரம்) லலிதா த்ரிசதீ ஸ்தோத்திரத்தை ஹயக்ரீவர் அகத்தியருக்கு உபதேசிக்கத் தயங்கினர். தேவி ஹயக்ரீவர் முன் தோன்றி, பத்ந்யஸ்ய லோபாமுத்ராக்க்யா மாமுபாஸ்தே அதிபக்தித:. அயஞ்ச நிதராம் பக்த: தஸ்மாதஸ்ய வதஸ்வ தத். லோபாமுத்ரை இவரது மனைவி. அவள் என்னை மிகவும் பக்தியுடன் வழிபட்டு வருகிறாள். இவரும் என்னிடம் மிகவும் பக்தி கொண்டவர். அதனால் லலிதாத்ரிசதியை உபதேசிப்பாயாக என்று ஆணையிடுகிறாள். தேவியின் அருளுக்கு அத்தனைத் தகுதி பெற்ற லோபாமுத்திரையால் வழிபடப் பெற்றவள். (1.16)

50-2. மந்திரத்தைக் கண்டுபிடித்த ருஷியும் தேவியின் வடிவமே. ஆதனால் ஹாதி வித்தியையின் ருஷியான லோபா முத்திரையாகவே தேவி வழிபடப் பெறுகிறாள். (லோபாமுத்ரா அர்சிதா ச) லோபாமுத்திரை என அவளது மந்திரத்திற்கும் பெயர். அதனாலும் அதுவாகவும் வழிபடப் பெறுபவள். (647)

**51. லீலா - க்லுப்த - ப்ரும்ஹாண்ட - மண்டலா. விளையாட்டாகவே பிரும்மாண்டங்களின் வரிசைகளைப் படைத்தவள்.**

51-1. சிறிதும் ஆயாசமின்றி பிரும்மாண்டங்கள் அனைத்தையும் படைத்தவள். அந்தப் படைப்பு தேவிக்கு ஒரு விளையாட்டு. விளையாட்டு என்பது விளையாடும் வரை மனத்திற்கு உல்லாசமளிக்கும். அது முடிந்ததும் அதனால் பாதிப்பு இல்லை. அதற்குப் பின்விளைவு கிடையாது. பின்விளைவுகள் விளையாடும் தேவியைப் பாதிக்காது. விளையாடியதற்குக் காரணம் அவளது விருப்பம் அப்படி இருந்ததே. விளையாட்டை நிறுத்தியதற்கும் அவள் விருப்பமே காரணம். அந்த விளையாட்டிற்கு

வேறுபொருள் தேவையில்லை. வேறு பொருள் தேவைப்பட்டால் அதன் தன்மையும் விளையாட்டினைப் பாதிக்கும். இங்கு வேறு பொருளும் கிடையாது. தானே, தானாகிய சுவரில் தானாகிய பந்தை எறிந்து விளையாடுவதுபோல், தானே தன்னிடமிருந்து தானாகிய உலகைத் தோற்றுவித்தாள், விளையாட்டாக. க்லுப்தம் - சீராக, ஒழுங்காக, நன்கு செயல்படும்படி அமைக்கப்பட்டது. பிரும்மாண்ட மண்டலத்தில் படைக்கப்பட்ட சிறுபொருள் கூடத் தத்தம் பணியைச் சீராக ஒழுங்காக நிறைவேற்றும் திறனுள்ளது. சூரியன் சந்திரன் போன்ற கால அவயவங்களிலிருந்து புழு எறும்புவரை இந்த க்லுப்தியைப் பார்க்கலாம். விளையாட்டாகப் படைத்தாள் என்பதற்காக எதிலும் ஏனோ தானோ என்ற நிலை இல்லை. செய்நேர்த்தி, வரிசை, ஒழுங்கு முதலியவற்றை ஒரு குறையையும் கண்டுபிடிக்க இயலாது. (648)

(நா. 649- 657)

अदृश्या दृश्यरहिता विज्ञात्री वेद्यवर्जिता ।
योगिनी योगदा योग्या योगानन्दा युगन्धरा ॥ 129 ॥

**அத்ருச்யா த்ருச்யரஹிதா விஜ்ஞாத்ரீ வேத்யவர்ஜிதா**
**யோகிநீ யோகதா யோக்யா யோகாநந்தா யுகந்தரா.**
**129**

**52. அ - த்ருச்யா. புலப்படாதவள்.**

52-1. த்ருச்ய - பார்க்கத்தக்கது, அறியத்தக்கது, புலப்படுவது. அத்ருச்யா - அறியமுடியாதவள், புலப்படாதவள். எந்தப் பொறியாலும் மனத்தாலும் கண்டுகொள்ளமுடியாதவள். படைப்பவள் படைப்பிற்கு அப்பாற்படுகிறாள். படைப்பினுள் அடங்கிய நாம் அதற்கப்பாற்பட்டவளை அறியமுடியவில்லை. படைப்பும் அவளேயாயினும் படைத்த பொருளைப் பார்க்கும் நமக்கு அதனுள் மறைந்த தேவி புலப்படுவதில்லை. மரத்தால் ஆன யானையை யானையாகப் பார்ப்பவனுக்கு அதனுள் மறைந்த மரம் புலப்படாது. கண்களுக்குப் புலப்படுமளவிற்குக் குறுகிய மரமே புலப்படாதெனில், மஹத்தாக எங்கும் பரவியுள்ள தேவியின் வடிவம் புலப்படாதிருப்பது வியப்பதற்கில்லை. (649)

**53. த்ருச்ய - ரஹிதா. புலப்படுவதொன்றுமில்லாதவள்.**

53-1. தேவி புலப்படாதிருப்பதற்குக் காரணம், புலனாவதற்கு உரிய பகுதிகளோ குணங்களோ செயல்களோ உருவமைப்போ தேவியிடம்

இல்லாமைதான். வானளாவி நிற்கும் மலை முதலியவற்றை முழுவதும் பாக்காவிடினும் அதன் பகுதிகளை அறியமுடியும். பகுதி அறிவைக் கொண்டு முழு அறிவைப் பெற முடியும். உருவம், நிறம், செயல் முதலியவைகளாலும் சிலவற்றை அறியமுடியும். இப்படிப் புலனாவன அனைத்தும் ஸ்துலவடிவங்கள். ஸூக்ஷ்மமாயுள்ள சக்தி புலப்படாதது. தேவி சக்தி வடிவானவள். அதனால் அவள் புலப்படாதவள். புலப்படுவது அனைத்தும் செயற்கையானது. அநித்தியமானது. தேவி இயற்கைக்கும் தாய், நித்தியமானவள். அதனால் அவளிடத்தில் புலப்படுவதொன்றும் காணப்படுவதில்லை. (650)

### 54. விஜ்ஞாத்ரீ. எல்லாவற்றையும் பகுத்தறிபவள்.

54-1. காணப்படாததொன்று விளையாட்டாக இந்த உலகைச் சீராகப் படைத்தது என எப்படி நம்புவது? இந்த உலகம் தானே சீராக ஒழுங்காக இயற்கையாகவே அமைந்துள்ளதெனக் கொள்ளலாமே! படைத்தவள் ஒருவள் தேவையில்லையே என்ற ஐயம் எழும். உலகில் படைக்கப்பட்ட பொருளனைத்தின் பின்னணியில் அதனைப் படைத்தவனைக் காண்கிறோம். இந்த நியதிப்படி உலகையும் படைக்கப் பகுத்தறிவுள்ளது ஒன்று தேவையல்லவா? அப்படி எல்லாவற்றையும் பகுத்தறிபவளாக இருந்து இந்த உலகைப் படைப்பவள் தேவி எனக் கொள்வதில் தடை என்ன? நமக்குப் புலப்படாதிருப்பதால் அப்பொருள் இல்லை எனக் கூறமுடியாது. கண்ணால் பார்த்ததை அறியும் நமக்கு அந்தக் கண்ணெனும் இந்திரியம் புலனாவதில்லை. எதனைக் கொண்டு அது பார்ப்பதை உணர்கிறோமோ, எது இந்த அறிவை உள்ளே பதியவைக்கிறதோ அந்த உள்ளறிவும் புலப்படுவதில்லை. ஆனால் இவ்விரண்டும் இருப்பதை நாம் உணர்கிறோம். ஜீவனிடம் உள்ள சிற்றறிவே புலனாவதில்லையெனில் வடிவற்றுப் பேரறிவாக, புலனாகும் உலகின் பின்னணியாக உள்ளதொன்று எப்படிப் புலப்படும்? புலப்படாமையால் இல்லை எனில் உலகில் பலவற்றை இல்லை என்று கூறநேரும். ஒவ்வொரு ஜீவனுக்குள்ளும் அந்தப் பேரறிவாளியாக நின்று அறிவுட்டுபவள். (651)

### 55. வேத்யவர்ஜிதா. அறியத்தக்கதொன்றும் இல்லாதவள்.

55-1. மாபெரும் உலகைச் சீராகப் படைத்த தேவி, எல்லாமறிந்தவள். ஏதேனும் சிலவற்றைப் பற்றிப் பெற்ற அறிவை அனுபவத்தால் இனி வளர்க்கவிருக்கிறாள் என்று கூறமுடியாது. முற்றுமறிந்த தேவிக்கு இனி அறிவதற்கொன்றுமில்லை. (652)

**56. யோகிநீ. யோகமுள்ளவள்.**

56-1. யோகம் - சேர்க்கை. இதுகாறும் சேர்ந்திருந்ததிலிருந்தும் பிரிவு, சேராதிருந்ததோடு சேர உதவுகிறது. மனம் ஆசையால் கண் முதலியவற்றின் வழியே வெளியில் சென்று பொருளை அடைந்து அதுவாகவே தன்னை ஆக்கிக்கொண்டது. இது சித்த விருத்தி. ஞானேந்தியங்களுக்கும் மனத்திற்கும் வைராக்கியத்தைப் பழக்கி இந்த விருத்தியைத் தடை செய்வது யோகம். யோகசித்தவ்ருத்திநிரோத: (பதஞ்ஜலி யோக ஸூத்ரம்) இதுவரை சேர்ந்திருந்ததிலிருந்து பிரித்தால் மட்டும் போதாது. இதுவரை சேராதிருந்ததுடன் சேர்க்கவும் வேண்டும். இதுவரை சேராதிருந்தவை ஜீவாத்மா வேறு பரமாத்மா வேறு என்ற பாவனையாகிய தடையால் பிரிந்திருந்த ஜீவனும் பரமாத்மாவும்.

56-2. மனம் ஒன்றை நாடாமல் தனித்து அடங்கியிருக்காது. மனத்திற்கு வெளிப்போக்கு இயற்கை. அதற்கு வாயிலாக ஏற்பட்ட பொறிகள் வெளியிலிழுத்துச் செல்பவை. அந்த வாயிலையும் அடைத்து மனத்தின் போக்கையும் தடை செய்தவுடன் மனம் உள்நோக்கித் திரும்பித் தனக்கும் அறிவூட்டும் உள்ளொளி ஒன்றிருப்பதைக் கண்டு அதனை நாடிச் சென்று அதில் சேர்ந்து தன்னை அதில் கரைத்துக் கொண்டு லயமடையும். இந்தச் சேர்க்கை, செய்நேர்த்தித்திறன் படைத்த பலசாலியான பழுத்த விவேகியான ஒருவனால்தான் சாதிக்க முடியும். இதைச் சாதித்துவிட்டவன் பெருந்திறமைசாலி. யோக: கர்மஸு கௌசலம் (கீதை. 2-50). யோகம் ஒரு கலை. செய்யும் செயலில் அழகு, செயல் நேர்த்தி, முறை தவறாமை, எதிரான சக்தியுள்ளதனைத்தையும் இசைவுக்குட்படுத்துதல் முதலியவை கைத்திறமையும் தெளிந்த தளர்வுறாத மனப்பாங்கும் கொண்டவனது வேலைப்பாடாகும்.

56-3. செய்யும் பணியில் மன உறுதியும் ஈடுபாடும் கொண்டு பலனை எதிர்பாராமல் முழுத் திறமையையும் செலுத்திப் பணியாற்றுபவன், வெற்றி - தோல்விகளால் கலங்காதிருப்பான். ஆத்ம - அனுபவம் ஒன்றே அவனுக்கு நோக்கமாயிருக்கும். அதனால் மனம் சமநிலை அடைந்திருக்கும். ஸமத்வம் யோக உச்யதே (கீதை. 2 - 48)

56-4. வெளி நாட்டம் காரணமாகப் பொருள்களுடன் தொடர்பு ஏற்பட்டது. அத்தொடர்பே துக்கத்திற்குக் காரணம் ஆகியது. சுகமென

எதிர்பார்த்தது அதற்கு மாறுபட்டதாகலாம். எதிர்பார்த்தது சுகமேயாயினும் கிட்டாதிருக்கலாம். கிட்டியதும் பிரிந்துவிடலாம். எவ்வகையிலும் நாடிய பொருளின் தொடர்பு துக்கத்திற்குக் காரணமாகிறது. மனம் வெளி நாட்டத்தை விட்டு ஆத்மாவை நாடும்போது துக்கமில்லை. அது எப்போதும் நிலைத்துள்ள பொருள். (ஸித்தவஸ்து) அதனால் பிரிவு ஏற்படாது. நானே ஆனதால் அதை விட்டுப் பிரிய வேண்டியதில்லை. ஆனந்த வடிவானதால் துக்கம் தராது. அப்போது நிலைத்த துக்க வியோகம் – துக்கத்திடமிருந்தும் பிரிவு ஏற்படுகிறது. ஒன்றிலிருந்து பிரிவதே யோகத்தின் முன்னணி. இங்கு அது துக்கத்தின் பிரிவாக அமைகிறது. தம் வித்யாத் துக்கஸம்யோக வியோகம் யோகஸம்ஜ்ஞிதம் (கீதை. 6-22). இந்த யோகங்களைத் தன் சக்தியாகக் கொண்டவளும் யோகினியும் தேவியே. (நா.61, 237, 475)

(653)

## 57. யோகதா. யோகத்தைத் தருபவள்.

57-1. தன்னை வழிபடுபவருக்குச் சித்தத்தை அடக்கி ஞானத்தைப் பெருக்கி, உள்ளுணர்வால் சித்தலயம் பெறும் முறையைக் குருவாக நின்று காட்டி ஆத்மானுபவம் அடையச் செய்பவள் – யோகத்தை அருள்பவள்.

(654)

## 58. யோக்யா. யோகத்தால் அடையத்தக்கவள்.

58-1. யோகத்தை அருள்வதால் ஏற்பட்ட பலன் தேவியை அடைவதாக முடியும். அதற்கு வேறு நோக்கும் போக்குமில்லை. அந்த யோகத்தால் அடையப்படுபவள். (22.1.11) (655)

## 59. யோக - ஆநந்தா. யோகத்தில் விளையும் ஆனந்தமாய் இருப்பவள்.

59-1. யோகத்தால் அடையும் ஆனந்தம் அவள் ஸ்வரூபமாகும். யோக வழியில் மனமடங்கி அவளிடம் ஐக்கியப்படும்போது ஆத்மஸ்வரூபமான ஆனந்தம் கிட்டுகிறது. ஆனந்த அனுபவ நிலையில் மனத்தில் வேறு பொருள் துலங்காதாகையால் அதனை யோக நித்திரை என்பர். தூக்கத்தில் கிடைக்கும் நிம்மதியும் ஆனந்த அனுபவத்தின் ஓர் அடையாளம்தான். வெளி உலக மறைப்பு ஏற்படும்போதுதான் ஆத்ம ஆனந்தம் புலப்படுகிறது. அத்தகைய ஆத்மானந்த வடிவினள். சிவனுக்கும் சக்திக்கும் இடையே வேற்றுமையை சக்தி உணராமல் ஸமரஸ உணர்ச்சி எனும் அபேத பாவனை சிவசக்திஸாமரஸ்யம் எனப்படும். அதுவும் ஒரு

யோகமே. அதனால் சிவசக்த்யைக்யரூபிணியாக (நா. 999) ஆனந்த வடிவினளாகத் தேவி மனத்தில் இடம் பெறுகிறாள். (656)

**60. யுகம் - தரா. யுகத்தைத் தாங்குபவள்.**

60-1. பிரிந்த இரண்டு பொருள்களைச் சேர்த்து வைப்பது யுகம். இரண்டு மாடுகள் அல்லது குதிரைகள் ஒரே நோக்குடன் வண்டியை இழுத்துச் செல்ல அவைகளின் கழுத்தில் பிணைக்கப் பெறும் நுகத்தடி யுகம் எனப்படும். ஒரே நோக்கும் ஒரே விதமான நடையின் சீரும் கொண்டு அடங்கி வண்டியை இழுக்க யுகம் - நுகத்தடி பயன்படுகிறது. மாறுபட்ட பகலும் இரவும் ஒன்றன் பின் ஒன்றாக வரிசையாக அமையத் தொடர்பு தரும் சந்தியாகாலம் யுகமாகும். ஒன்றுக்கொன்று உதவி ஒரே செயலில் ஈடுபடும் தம்பதிகள், கைகள், கால்கள் போன்ற இரட்டைகள் யுகமாகும். கிருதம், திரேதா, துவாபரம், கலி என்று வரிசையாக அமைபவை யுகங்கள். இவையனைத்தின் வடிவில் யுகமாக - நுகத்தடியாக இருந்து தாங்கி நல்வழியில் அழைத்துச் செல்பவள். (657)

(நா. 658 - 661)

इच्छाशक्ति-ज्ञानशक्ति-क्रियाशक्तिस्वरूपिणी ।
सर्वाधारा सुप्रतिष्ठा सदसद्रूपधारिणी ॥ 130 ॥

**இச்சாசக்தி - ஜ்ஞானசக்தி - க்ரியாசக்தி ஸ்வரூபிணீ.**
**ஸர்வாதாரா ஸுப்ரதிஷ்டா ஸதஸத்ரூபதாரிணீ. 130**

**61. இச்சாசக்தி - ஜ்ஞானசக்தி - க்ரியாசக்தி ஸ்வரூபிணீ. இச்சாசக்தி, ஞானசக்தி, கிரியாசக்தி எனும் சக்தி வடிவினள்.**

61-1. இயக்கங்கள் அனைத்தும், விருப்பம் (இச்சா சக்தி) ஸாதன அறிவு (ஞான சக்தி) முயற்சி (கிரியா சக்தி) என்ற மூன்றால் நடைபெறுகின்றன. இவை முறையே சிவன், பிரும்மா, விஷ்ணு என்ற மூவரின் வடிவம். மனத்தில் நாட்டம் (இச்சா) ஏற்பட்ட பின் அதனை அடையும் வழி பற்றிய அறிவும் (ஞானம்) பிறகு முயற்சியும் (கிரியா) ஏற்படுவதால் இச்சா – ஞான – கிரியா என்ற வாசை இங்கு அமைந்துள்ளது. (19.1.3-5)

61-2. பிறந்த க்ஷணத்திலேயே சிசு பசியை உணர்கிறது. பசி நீங்க உணவு தேவை; அந்த உணவு தாயிடமுள்ளது. அதனைப் பெறத் தான் செய்ய வேண்டிய ஒரே செயல் அழுகை. சிசு அழுகிறது. பால் கிடைக்கிறது. பசிக்குப் பால் உணவு என்பதும், அதனை அழுதால் பெறலாம் என்பதும் பல்வேறு பிறவிகளில் ஏற்பட்ட அனுபவம் தந்த பாடம். உணவின் தேவை உணர்ச்சியும் (இச்சாசக்தி) அழுதால் தாயிடமிருந்து அதனைப் பெறலாம் என்ற அறிவும் (ஞான சக்தி) உந்த சிசு அழுவது கிரியா சக்தியால். இப்படி ஒவ்வொருவரிடமும் பிறந்த நொடி முதல் மறையும் வரை தனது மூன்று சக்திகளின் ஓரம்சமாக இருந்து எல்லா இயக்கங்களையும் கட்டுப்படுத்துபவள் தேவி. (658)

### 62. ஸர்வ - ஆதாரா. எல்லாவற்றிற்கும் ஆதாரமாயிருப்பவள்.

62-1. தேவியின் அம்சமான மூன்று சக்திகள் பெற்று ஒவ்வொருவரும் தத்தம் பணிகளில் ஈடுபடுகின்றனர். அதனால் எல்லாவற்றிற்கும் ஆதாரமாயிருப்பவள். (ஸர்வேஷாம் ஆதார:) உலகில் உள்ளதனைத்தையும் தன்னைத் தாங்கும் ஆதாரமாகக் கொண்டு அதனுள் துலங்கும் சக்தி வடிவில் இருப்பவள். (ஸர்வாணி ஆதார: யஸ்யா:) ஒன்றிலிருந்து மற்றொன்று தோன்றுகிறது. பொருள் காலம் முதலியதாகத் தோன்றும் உலகமனைத்தும் இடைவிடாமல் தாரையாகத் தொடர்கிறது. இந்தத் தாரை நடுவில் அறுபடாமல் தொடர்ந்து செல்லக் காரணமாயிருப்பவள். (ஸர்வ - ஆ - தாரா) (659)

### 63. ஸு - ப்ரதிஷ்ட்டா. நல்ல நிலைத்த இருப்பிடமானவள்.

63-1. ஆதாரமாயிருக்கும் பொருள் நிலைத்திருக்குமளவில், அதனை ஆதாரமாகக் கொண்ட பொருள் நிலைத்திருக்கும். உலகிற்கு ஆதாரமான தேவி நிலைத்தவள், அசையாதவள். பூமி, சந்திரன், சூரியன் எனப் பரந்த மண்டலங்களாகத் தனித்தனியாகத் தோன்றுபவை அனைத்தும் நிலைத்த அசையாத தேவியை ஆதாரமாகக் கொண்டிருப்பதால் நிலைத்துள்ளன. விஷ்ணுநா வித்ருதே பூமீ. எங்கும் நிரம்பிய பரம்பொருள்தான் உலகை நன்கு தாங்குகிறது (அருணம்). அந்த ஆதாரம் ஸு அழகானது. நல்லதும்கூட. (660)

### 64. ஸத் - அஸத் - ரூப - தாரணீ. நிலைத்ததும் நிலையற்றதுமான பொருளின் வடிவம் கொண்டவள்.

64-1. ஸத் - இருக்கும் பொருள். இது இரண்டு வகை. (1) முக்காலத்திலும் இருப்பது, உண்மையாக இருப்பது. (பாரமாத்திக ஸத்) அதுதான் பரம்பொருள். (2) தோன்றும் காலத்தில் உலகியல் ரீதியில் இருப்பது. இந்த உலகம் அத்தகையது. குறிப்பிட்ட காலவரையில் உண்மையாக இருப்பது. (வ்யாவஹாரிக ஸத்) உலகம் தோன்றி மறைவதால் முக்காலத்திலும் ஸத் அல்ல. அதனால் அஸத். பரம்பொருளாக நித்யமானதும் உலகமாக அநித்யமானதுமான இரு வடிவங்கள் கொண்டவள் தேவி.

64-2. தேவியே இரு வடிவங்கள் கொண்டாள். தேவி ஸத் ஆனால் இரண்டுமே ஸத் ஆகத்தானிருக்கவேண்டும். ஒன்று ஸத், மற்றொன்று அஸத் என்பது எங்ஙனம்? உலகமும் தேவி என உணரப்பெறும்போது ஸத். அந்நிலையில் அதற்கு அழிவில்லை. அது நித்யம். உலகம் உலகமாகத் தோன்றும்போது அது அநித்தியம், தோன்றி மறைவதால். அந்நிலையில் அது அஸத். நான் பிரும்மம் என்ற உணர்விருக்கும்போது நான் ஸத் ஆகிறேன். நான் இன்னார், இன்ன இடத்தைச் சேர்ந்தவன் எனக் குறிப்பிடும்போது, அதுவாக இல்லை; அந்தக் காலத்தில் இல்லை; அந்த இடத்தில் இல்லை என்றவாறெல்லாம் பல இல்லைகளால் குறுக்குவதால் அஸத் போல் ஆகிறேன். ஆனால் நமது நிலையில் ஸத்தும் அஸத்துமாக இருப்பவள். அவளது நிலையில் இரண்டும் ஸத்தே. (661)

(நா. 662 - 668)

अष्टमूर्तिरजाजेत्री लोकयात्राविधायिनी ।
एकाकिनी भूमरूपा निर्द्वैता द्वैतवर्जिता ॥ 131 ॥

**அஷ்டமூர்த்திரஜாஜேத்ரீ லோகயாத்ராவிதாயிநீ.**
**ஏகாகிநீ பூமரூபா நிர்த்வைதா த்வைதவர்ஜிதா. 131**

**65. அஷ்ட - மூர்த்திः. எட்டு வடிவம் கொண்டவள்.**

65-1. பவன், சர்வன், ஈசாநன், பசுபதி, ருத்திரன், உக்கிரன், பீமன், மஹான் என்று சிவனுக்கு எட்டு வடிவங்கள். சிவனது சக்தியாக அந்த எட்டு வடிவங்களில் உறைபவளானதால் இவளுக்கும் எட்டு வடிவங்கள். சிவனது இந்த எட்டு வடிவங்களும் முறையே பூமி, ஜலம், அக்கினி, வாயு, ஆகாசம்,

---

1 ஜைத்ரீ பாடம்.

ஸூர்யன், சந்திரன், யஜமானன் (புருஷன்) என்ற எட்டைக் குறிப்பிடுபவை. அவைகளின் சக்தியாக இருப்பவள். (9.2.1)

65-2. பிரகிருதி இரு வகைப்படும். ஒன்று பரா - உயர்ந்த பிரகிருதி, மூலப்பிரகிருதி எனப்படுவது. மற்றொன்று அபரா - உயாந்ததல்லாத பிரகிருதி. அது எட்டு வகை. பூமி, ஜலம், அக்கினி, வாயு, ஆகாசம், மனம், புத்தி, அஹங்காரம் (கீதை 7-4) என. அந்த எட்டு பிரகிருதியுமாயிருப்பவள் தேவி.

65-3. லக்ஷ்மீ (செல்வம்), மேதை, தரா (பூமியாக உலகைத் தாங்குவது), புஷ்டி (உடல் நிறைவு), கௌரீ (தூய்மை), துஷ்டி (மனநிறைவு), பிரபா (மேனி ஒளி), திருதி (தைரியம்) என்று தேவி எட்டு வடிவம் கொண்டவள். வசிநீ முதலிய எட்டு வாக்தேவிகள் (9.10.27) பிராம்மீ முதலிய எட்டு மாதாக்கள் (9.10.21) இவர்களும் தேவியின் வடிவங்களே. (662)

### 66. அஜா - ஜேத்ரீ. அவித்தியையை வெல்பவள்.

66-1. அவித்தியை எனும் அஜ்ஞானம் ஒவ்வெரு பிறவியிலும் தொடர்கிறது. ஒருவனது முதல் பிறவி எப்போது தொடங்கியது என்பது அறியவெண்ணாதது. உலகத்தைப் படைக்க முற்பட்ட போது முதலில் தோன்றியது எனக் கொள்ளவும் முடியாது. உலகம் அதற்கு முன் நிகழ்ந்த பிரளயத்தில் பிரும்மத்தின் உள்ளடங்கியது. பின்னர் வெளி வந்தது. அப்படி வெளி வருவதே படைப்பு. அழிவும் படைப்பும் தொடர்ந்து நடைபெறுவவதால் அதற்கு ஆதி எது எனக் கண்டுபிடிக்க முடியாது. அதற்கு மூலமான அவித்தியையும் என்று தொடங்கியது என்று அறிய முடியாதாகையால் அதனை அஜா (பிறப்பற்றவள் - அனாதி) என்கிறோம். அனாதியான அவித்தியைக்கு முடிவு மட்டும் உண்டு. தனது பிரும்ம நிலையை உணர்வதே அதன் முடிவு. அதனால் அது முடிவுடன் கூடியது - அநந்தா அல்ல. ஞானரூபிணியான தேவி ஞானத்தைத் தந்து அஜாவான அவித்யையை வெல்கிறாள். அஜாஜாத்ரீ என்ற பாடம் உண்டு. அஜாவை வெல்வதைப் பழக்கமாகக் கொண்டவள் எனப் பொருள். (663)

### 67. லோக - யாத்ரா - விதாயிநீ. உலகத்தின் தொடர்ந்தப் பிரயாணத்தை நடத்துபவள்.

67-1. ஒவ்வொரு நொடியிலும் தோன்றி இருந்து மறையும் தன்மை படைத்த உலகம் முடிவில்லாத வழிப்பயணம் கொண்டது.அதனைச் சீராக

நடக்கச் செய்பவள். ஒவ்வொரு நிலையை அடையும்போதும் அதுவே பயணத்தின் எல்லையாகத் தோன்றும். ஆனால் அதனையும் கடந்து தொடர்ந்து செல்ல நேர்வதால் இந்த வழிப்பயணம் முடிவற்றது. அதை விதி வடிவில் நடத்தி வைப்பவள். (664)

### 68. ஏகாகிநீ. தனித்து இருப்பவள்.

68-1. தன்னையல்லாது வேறின்றித் தனித்து இருப்பவள். பதினான்கு உலகங்களின் யாத்திரையையும் தனித்து எங்கும் எல்லாமாக எப்போதுமிருந்து நடத்தித் தருபவள் அவளே. அவளுக்குத் துணை தேவையில்லை. (665)

### 69. பூம - ரூபா. அனைத்துமாக இருப்பவள்.

69-1. தனித்து இருப்பவள் எனும்போது இடத்திலோ காலத்திலோ குறுகி நிற்பவள் என எண்ணத் தேவையில்லை. அவளைத் தவிர வேறொன்றுமில்லை எனக் கூறுமளவிற்கு எல்லாமாக இருப்பதனால் பல வடிவங்கள் கொண்டவள். (666)

### 70. நிர் - த்வைதா. துவைதமற்றவள்

70-1. துவைதம் – தன்னைத் தவிர வேறொன்றிருப்பதை உணர்தல். தன்னையன்றி வேறில்லாமல் தனித்து ஏகாகிநி யாக இருக்கும் தேவி எங்கும் நிரம்பியவளாக எல்லாமானவளாக பூமாவாகவும் இருப்பதால் தன்னைத் தவிர வேறொன்றிருப்பதன் உணர்வில்லாதவள் ஆகிறாள். துவைதம் எனும் பேத உணர்ச்சி உலகமாகத் தோன்றும் நிலைக்கு முன்னும் பின்னுமிருக்க முடியாது. தோன்றும் நிலையிலும் பூமா வாக அவளே இருப்பதால் துவைதம் இருக்க முடியாது. அவளது கருணையால் அவள் அருள்பெற்றவர்களுக்கும் துவைத உணாச்சி நீங்கி ஸர்வாத்ம பாவனை – எல்லாவற்றிலும் பரம்பொருளை உணரும் பாவனை ஏற்படும். (667)

### 71. த்வைத - வர்ஜிதா. துவைதத்திலிருந்தும் நீங்கி நிற்பவள்.

71-1. துவைதம் முன்னிருந்து இப்போது நீங்கிவிட்டதென நினைப்பது தவறு. என்றுமே துவைதம் அவளிடம் இருக்க முடியாது. துவைதம் அவளிடத்தில் பொருந்தாது. அவளைத் தவிர வேறு பொருள் என்றும்

எவ்விடத்திலும் எவ்விதமாகவும் இல்லை. அதனை அழித்தாள். இதனைக் காப்பாற்றினாள். அவருக்கு அருளினாள் என்பதெல்லாம் பாரமாத்திக நிலையில் பொருந்தாதவையே. வியவஹாரதசை எனும் உலகத்தோற்ற நிலையில் அவள் வேறு, அவள் செயல்கள் வேறு என உணரப்படலாம். தோற்ற அளவில் காணப்படும் உண்மை முற்றிலும் உண்மையாக இருக்காது. காணப்படும் வேற்றுமை தத்துவாதியில் மெய்யல்ல. தத்துவாதியில் அவள் வேற்றுமையற்றவளே. (668)

(நா . 669 - 677)

अन्नदा वसुदा वृद्धा ब्रह्मात्मैक्यस्वरूपिणी ।
बृहती ब्राह्मणी ब्राह्मी ब्रह्मानन्दा बलिप्रिया ॥ 132 ॥

**அந்நதா வஸுதா வ்ருத்த்தா ப்ரும்த்மைக்யஸ்வரூபிணீ.**
**ப்ருஹதீ ப்ராம்ஹணீ ப்ராம்ஹீ ப்ரம்ஹாநந்தா பலிப்ரியா.**
**132**

**72. அந்ந-தா. உணவளிப்பவள்.**

72-1. வாழவைப்பது உணவு - அன்னம். தேவி அன்ன பூர்ணா. ஒருகையில் உணவு நிரம்பிய பாத்திரமும் மற்றொருகையில் அதனை வாரிவழங்கும் கரண்டியும் கொண்டவள். அவள் அளிக்கும் உணவு ஊட்டமளிப்பதுடன் ஞானமும் வைராக்கியமும் தரவல்லது. அன்னமளிப்பவரின் மனப்பான்மையும் அளிக்கப்படுகின்ற அன்னத்துடன் அதனைப் பெறுபவரைச் சேரும். தேவி பேரறிவு வடிவினள். அவள் தரும் உணவு ஞானமூட்டவல்லது. அந்நபூர்ணே ஸதாபூர்ணே சங்கரப்ராண வல்லபே ஜ்ஞான வைராக்ய ஸித்த்யர்த்தம் பிக்ஷாம் தேஹி ச பார்வதி. சங்கரரது உயிரைப் போன்ற பிரிய நாயகியே, அன்னம் நிரம்பியவளே, எப்போதும் எல்லாம் நிரம்பியவளே! ஞானமும், வைராக்கியமும் நிலைத்திருக்க எனக்கு உணவிடுவாயாக! (சங்கரரது அன்னபூர்ணா ஷ்டகம்). சாப்பிடும் முன் இந்த நாமத்தையும், சுலோகத்தையும் கூறித் தேவியே அன்னமளிப்பதாகப் பாவித்து உண்பதால் அன்ன தோஷம் சேராது. அறிவும் வைராக்கியமும் நிலைக்கும். (669)

**73. வஸு - தா. செல்வமளிப்பவள்.**

73-1. வஸு - செல்வம். வாழ்விற்குப் பயன்படுவதனைத்தும் வஸு. (வஸ்யதே அநேந) அதனை வழங்குபவள். வாழ்க்கைக்கு உதவும்

பொருள்களைப் பெறும்போது தேவி தந்தருளியதாக உணர்ந்து அதனைப் பயன்படுத்திக் கொள்வதால் அது நிலைத்து இருக்கும். நாம் பெறும் வாழ்க்கை வசதிகள் அனைத்தும் அவளருளால்தான் கிடைக்கின்றன. அதனை உணர்வதொன்றே முக்கியம். (670)

### 74. வ்ருத்தா. முதிர்ந்தவள்.

74-1. முழு வளர்ச்சி பெற்றவள். முழு வளர்ச்சி பெற்று அது குறைவதற்கான முதுமை வரும்போதே விருத்தர் என்பர். தற்போதுள்ள குறைவால் முன்னிருந்த நிறைவு ஊகிக்கப் பெறுவமே அதற்குக் காரணம். விருத்தி - வளர்ச்சி. அதனைப் பெற்றவள் வ்ருத்தா. ஆனால் கிழத்தனம் வராத விருத்தி இது. வயதில் மூத்தவள் வ்ருத்தா. எல்லோருக்கும் முன்னிருப்பவளானதால் அவளைவிட வயதால் மூத்தவரில்லை. மூத்தவளானதால் தன்னிடமிருந்து தோன்றியவர்களிடமுள்ள பரிவால் அன்னதாதாவாகவும் வஸுதாவாகவும் இருக்கிறாள். (நா. 802) (671)

### 75. ப்ரஹ்ம - ஆத்ம - ஐக்ய - ஸ்வரூபிணீ. பிரும்மமும் ஜீவனும் ஒன்றேயான நிலையை வடிவமாகக் கொண்டவள்.

75-1. ஸோ அஹம், அஹம் ஸ: அந்தப் பிரும்மம் நான், நான் அந்தப் பிரும்மம் என்று ஹம்ஸ (அஜபா) மந்திர பாவனையால் தன் நிலையை ஒவ்வொரு மூச்சிலும் உணரும்போது வேற்றுமையற்ற எங்கு நிரம்பியுள்ள (ப்ரம்ஹ) எல்லாம்வல்ல (ஆத்ம) தனித்திருக்கும் (ஏகம்) பரம்பொருளாக ஆகிறான். அந்த அனுபூதி வடிவில் உள்ளவள். அவளது அருளால் பெற்ற அன்னமும் செல்வமும் அதனை உணர்ந்து அனுபவிக்கப் பெறும் போது அன்னத்தைத் தருபவளும் அவளே, அன்னமாயிருப்பவளும் அவளே, அதனை ஏற்கும் ஜீவனாக இருப்பவளும் அவளே என்று உள்ளறிவைத் தெளிவு பெறச் செய்கின்றன. நிலைத்த அந்த பாவனை ஆத்ம தர்சனத்திற்கு உதவியாக நின்று அறியாமையை அழிக்கிறது. தடை நீங்கியதும் பூர்ணப் பேரொளியாக நிற்கும் ஆத்மாவாக ஆகிவிடுகிறான். அந்த வேற்றுமையற்ற, கலப்பற்ற, தூயப் பேரொளியான ஆத்மாவாக ஆக்குவதைத் தன் தனித் தன்மையாகக் (ஸ்வரூபமாக) கொண்டவள்.

75-2. ஹம்ஸ மந்திரம், (அஜபா மந்திரம்) ஸோஹம் ஹம்ஸ: என்பது. அது நான், நான் அது எனப் பொருள்படும். இந்த மந்திரத்தை வாயால் ஜபிப்பதில்லை. நாம் ஜபிக்கத் தேவையில்லாதபடி இயற்கை நாம்

மூச்சு விடுவதை இந்த ஜபமாக அமைத்துள்ளது. மூச்சை உள்ளிழுத்து வெளியே விடும்போது ஸோஹம் என்ற சொல்லமைப்பு உணரப்படும். ஜபிக்காமல் மந்திர ஜபம் நிறைவேறுவதால் அஜபாஜபம் என்பர். மூச்சின் முழு வடிவத்தை ஹம்ஸ மந்திரமாக உணர்வதே இங்கே ஜபமாகிறது. ஸோஹம் என்பதை அமைப்பு மாற்றி கூறும்போது (அ) ஹம் ஸ: என ஆகிறது. அதனால் ஹம்ஸ மந்திரம்.

75-3. திருவாரூரில் தியாகராஜப் பெருமானின் நடனம் அஜபா நடனமாகும். திருமாலின் மூச்சுக்காற்றுக்கேற்ப திருமாலுடைய மார்பு ஏறி இறங்கும். தியாகராஜப் பெருமான் திருமாலின் மாபில் நடனம் புகிறார். அஜபா கூறுவது பிரும்ம – ஆத்ம – ஐக்கியம். அதன் வடிவில் உள்ளவள் தேவி. (672)

### 76. ப்ருஹதீ. பேருருவம் கொண்டவள்.

76-1. பெரிதுக்கெல்லாம் பெரியவள். பிருஹதீ என்பது 36 அக்ஷரங்கள் கொண்ட செய்யுளமைப்பு. ஸாமங்களில் பிருஹத் எனும் ஸாமமும் ஒன்று. இவைகளாக இருப்பவள். (673)

### 77. ப்ராம்ஹணீ. அந்தணப் பெண்.

77-1. மும்மூர்த்திகளில் சிவன் அந்தணர். (விஷ்ணு க்ஷத்தியர்) அந்தணருக்கு அவர் தெய்வம். அவரது சக்தியாக அந்தணப் பெண்ணாக இருப்பவள். (அந்தணரின் சக்தியாகிய காயத்ரி வடிவினள்). பிரும்மத்தின் சக்தி பேரறிவு. பேரறிவாக இருப்பவள் அவளே. (674)

### 78. ப்ராம்ஹீ. பிரும்மாவின் சக்தி வடிவினள்.

78-1. எட்டு மாதாக்களுள் ஒருவள். (9.10.21) அன்னப்பட்சி வானத்தில் அமர்ந்தவள். ஜபமாலை, கமண்டலு ஏந்தி இருப்பவள். தர்ப்பைகளை முடிந்து, கமண்டலுவிலுள்ள ஜலத்தில் நனைத்துத் தெளித்து எதிரிகளை மாய்ப்பவள். அறிவைத் தருபவள். ஸரஸ்வதி எனும் பிரும்மாவின் சக்தி- வாக்கின் சக்தி. (675)

### 79. ப்ரம்ஹ - ஆனந்தா. பிரம்மானந்த வடிவினள்.

79-1. பிரும்மாத்ம ஐக்கிய பாவனையால் பெறும் ஆத்மானந்தத்தையே தன் வடிவமாகக் கொண்டவள். (27.75.1) ஆநந்தம் என்பது இனம் பித்தறிய முடியாத மகிழ்ச்சி. பொதுவாக மகிழ்ச்சி இதனால்

இப்போது பெற்றது. இந்த உருவில் உள்ளது என இனம் பிரித்துக் காண முடியக் கூடியதே. தூக்கத்தின் முழுமையில் பெறும் ஆனந்தம் பிரும்மானந்தத்திற்கு மாதிரியாக அமையும். தூக்கத்தில் கிட்டும் ஆனந்தம் மனம் பொறி முதலியவற்றால் வெளி வியங்களை நாடிப் பெற்றதல்ல. அதனால் அதற்கு வடிவம் கிடையாது. அஜ்ஞான நிலையான தூக்கத்தில் கிட்டும் அந்த ஆனந்தமே அத்வைத பாவனை தரவல்லதெனில்- விழித்திருக்கும் போது விஷயநாட்டமின்றி மனத்தின் விகல்பமின்றி ஸமாதி நிலையில் பெறும் ஆனந்தம் வடிவற்றது. முழுமையானது. துண்டாட முடியாதது. தன்னை விட்டுப் பிரிக்க முடியாத தன்னிலையாக இருப்பது. அந்த ஆனந்தமே தேவியின் வடிவம். (676)

**80. பலி - ப்ரியா. பலசாலிகளிடத்தில் பிரியமுள்ளவள்.**

80-1. அஜ்ஞானத்தைத் தானே போக்கிக்கொள்ள முனைவுள்ளவன் பலசாலி. காமம், குரோதம், லோபம் முதலிய உள்ளெதிரிகளை வென்றவன் பலசாலி. அவனே சரியான வழியில் முயல்பவன். இச்சா, ஞான, கிரியா சக்திகளை முறைப்படி பயன்படுத்துபவன். தேவி அவனிடத்தில் பிரியமுள்ளவள். அவனுக்குப் பிரியமானவளும்கூட. பலி என்ற அசுரனிடம் பிரியத்தைக் காட்டுபவள். தேவதைகளின் திருப்திக்கெனப் படைக்கப் படுபவை பலி - அர்ப்பணம் செய்யப்பெற்ற வழிபாட்டுக்குரிய பொருள். பக்தியுடன் அளிக்கப்பெறும் பலிப் பொருளை மனமுவந்து ஏற்பவள். (677)

(நா. 678 - 683)

भाषारूपा बृहत्सेना भावाभावविवर्जिता ।
सुखाराध्या शुभकरी शोभना सुलभा गतिः ॥ 133 ॥

**பாஷாரூபா ப்ருஹத்ஸேநா பாவாபாவவிவர்ஜிதா.**
**ஸுகாராத்த்யா சுபகரீ சோபநா ஸுலபா கதி. 133**

**81. பாஷா - ரூபா. மொழி வடிவினள்.**

81-1. உலகில் உள்ள ஸம்ஸ்க்ருதம் முதலான மொழிகள் அனைத்தும் அவளது வடிவங்களே. எதற்கும் எட்டாத அவளை மொழிகள் மனத்தில் பதியவைக்கின்றன. (பாஷாபி: ரூப்யதே) மனம் உணர்ந்ததை வாய் பேசுகிறது. திரும்பத் திரும்ப நினைத்துப் பேசப் புரியாத பொருளும் ஓரளவு புலப்படும். அர்ப்பணம் பண்ணப்பெறும் பொருள்களைத் தேவி மனம் உவந்து ஏற்பவள். அர்ப்பணத்திற்கான பொருள்களில் மிகவும்

சிறந்தது மொழி. மொழி ஒரு சாதனம். அதில் எது உயர்ந்தது? பேசும் மொழியா, எழுதும் மொழியா என்ற சிந்தனைக்கிடமில்லை. சிசுவின் எண்ணத்தை அறிந்துகொள்ளத் தாய்க்கு இலக்கண சுத்தமாக மொழி தேவையில்லை. அது எந்த மொழியில் எப்படிப் பேசினாலும் வடிவமே இல்லாத மழலை பேசினாலும் தாய் புரிந்து கொள்வாள். பேச்சால் அறியப்படுபவள் தாய். (678)

## 82. ப்ருஹத் - ஸேநா. பெருஞ்சேனையுள்ளவள்.

82-1. தானே ஆகிக் காத்து அழிக்கவல்லவளாயினும் பலருக்கு அவ்வகைப் பணிகளை நிறைவேற்றுவதற்கு வாய்ப்பளித்துப் பெருமை தருவதற்காகவே பெருத்த சேனையைத் தன்னிடம் வைத்திருக்கிறாள் தேவி. பிறர் உதவி சிறிதும் தேவைப்படாத போதிலும் உலகில் உள்ளதனைத்தை யும் தனக்குச் சாதனமாக்கிக் கொண்டு பணிகளை நிறைவேற்றுகிறாள். (679)

## 83. பாவ - அபாவ - விவர்ஜிதா. பாவமும் அபாவமும் இல்லாதவள்.

83-1. பாவம் – ஒரு பொருள் தோன்றி இருக்கும் நிலை. அபாவம் – புலன்களுக்கு அகப்படாதிருப்பதால் இல்லாதிருக்கும் நிலை. இல்லாத நிலை என்ற இரண்டுமற்றவள். இருக்கும் நிலை அற்றவள் என்றால் இருக்கும் நிலையுள்ளவள் எனவும் பொருள் படுமே? இரண்டும் அற்ற நிலை எப்படிப் பொருந்தும் என்ற ஐயம் எழலாம். அரிசியானது உணவாயிற்று. அரிசி அழிந்தது. உணவு உள்ளது. உணவு எனும் நிலையில் உணவின் இருக்கையும் அரிசியின் இன்மையும் கூடி உள்ளன. உணவு சாப்பிடப்பட்டது. உணவு அழிந்தது. உண்பவன் ரத்தமாயிற்று. மண் குடம் உடைந்தது. மண்ணாயிற்று. ஒன்றின் அபாவமே மற்றொரு பாவமாக உள்ளது. அதனால் உலகில் உள்ள பொருளனைத்திலும் பாவமும் அபாவமும் சேர்ந்தே நிற்கும். தேவியிடத்திலோ? புதிதாக ஒன்றும் தோன்றுவதில்லை. அதனால் முன்நிலை அழிவதில்லை. அழிவும் தோற்றமுமற்ற என்றுமுள்ள நித்தியப் பொருள் பாவப் பொருளா, அபாவப் பொருளா, பாவ-அபாவப் பொருளா என்ற சர்ச்சை எழவே இடமில்லை. தோற்றநிலையில் ஏற்படும் மாறுதல்களே உற்பத்தியும் அழிவும். தோற்றத்திற்கு ஆதாரமாயுள்ள பரம்பொருளில் தோற்றத்தால் ஏற்படும் மாறுதல்கள் மாற்றத்தை உண்டாக்காது. ஆதாரம் ஸத்யம். ஸத்யமானது

புதிதாகத் தோன்றாது, அதனால் அழியாது. அதனால் தேவியிடத்தில் பாவமும் (உற்பத்தியும்) அபாவமும் (அழிவும்) இல்லை. (680)

### 84. ஸுக - ஆ - ராத்தியா. சுகமாக வழிபடத்தக்கவள்.

84-1. எளிதில் உடலை வருத்தாமல் செய்யக்கூடியது சுகமாயிருக்கும். தேவியின் வழிபாட்டிற்கு உடலை வருத்த வேண்டாம். மனத்தை அடக்க வேண்டாம். தேவிக்கு இன்ன வடிவம்தான் உண்டு. அதனையே தியானிக்க வேண்டும் என்ற வரையறை கிடையாது. எல்லாமாயிருப்பவளானதால் எந்த வடிவிலும் அவளைத் தியானம் செய்யலாம். ஒரே வடிவில் நிலைத்திருக்க வேண்டிய நிர்பந்தமும் கிடையாது. தியானிக்கும் வடிவத்தை வடிவமாக உணர்வதொன்றே நமது செயல். அதனால் எளிதில் வழிபடத்தக்கவள். நித்தியமான அவளை பொருளைக் கொண்டுதான் வழிபடவேண்டும் என்று கவலைப்பட வேண்டியதில்லை. வழிபாட்டு முறைகளில் காணப்படும் கட்டுப்பாடுகள், தமோ குணமும் ரஜோ குணமும் மாறவும், ஸத்வ குணம் மேலோங்கவும் அவசியமானவை. மனம் ஓரிடத்தில் பதிய இவை உதவுகின்றன. ஆனால் இந்தக்கட்டுப்பாட்டில்தான் தேவி திருப்திப்படுவாள் என்பது கிடையாது. காயக்கிலேசமின்றி மனத்தை அவளிடம் பதிக்க முடியுமானால் அதனால் திருப்திப்படுபவள் தேவி. மனம் பதியப் பக்தி தேவை. அதற்கு வெளிச்சாதனம் தேவையில்லை. அதனால் அவளது ஆராதனம் எளிதானது. (681)

### 85. சுப - கரீ. மங்களத்தைச் செய்பவள்.

85-1. எளிதான முறை நல்ல பலன் தருவதாக அமையுமா என ஐயம் எழக்கூடும். எந்த வகையில் வழிபட்டாலும் அதற்குப் பலன் ஒன்றே. அதுதான் மங்களம். மங்களத்தைச் செய்வதையே தம் செயலாகக் கொண்டவள் தேவி. (நா. 53, 117, 126, 192, 200, 403) அசுபத்தைச் சுபமாக்குபவள். அசுபம் ஜீவத்தன்மை, சுபம் சிவத்தன்மை, சுபத்தன்மையை அருள்பவள். (682)

### 86. சோபநா - ஸுலபா கதி:. உயர்ந்ததும் எளிதில் அடையக்கூடியதுமான இலக்காக இருப்பவள்.

86-1. கதி: - இலக்கு, அடைய வேண்டிய இடம், செயல், போக்கு, வினையின் பின் விளைவு, ஞானம். (16.3.1) புண்ணியத்தையும் நித்யானந்தத்தையும், மங்களத்தையும் தரவல்லவளானதால் சோபநா - அதே சமயத்தில் எளிதில் அடையக்கூடியவளானதால் ஸுலபா.

சோபனமாயும், ஸுலபமாயும் உள்ள கதி அவள். தேவியை வழிபடுவது கஷ்டம் என நினைப்பவனுக்கு அஸுலபா - எளிதில் கிட்டாதவள்.

86-2. சோபநா, ஸுலபா, கதி: என மூன்று நாமங்கள் போலத் தோன்றினாலும் இது ஒரே நாமம். சோபநா (நா.462). ஆசோபநா (நா.972) எனத் தனி நாமங்கள். (683)

* * *

அதிகாரம் - 26

# தேவியின் பேராளுமை

(நா. 684 - 688)

राजराजेश्वरी राज्यदायिनी राज्यवल्लभा ।
राजत्कृपा राजपीठनिवेशितनिजाश्रिता ॥ 134 ॥

**ராஜாராஜேச்வரீ ராஜ்யதாயிநீ ராஜ்யவல்லபா.**
**ராஜத்க்ருபா ராஜபீடநிவேசிதநிஜாச்ரிதா. 134**

**1. ராஜ - ராஜ - ஈச்வரீ. ராஜராஜர்களுக்கும் ஈசுவரி.**

1-1. எட்டு திக்குகளையும் காப்பவர்களான இந்திரன், அக்னி, யமன், நிர்ருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன் என்ற எட்டு திக்பாலர்களும் ராஜாக்கள். அவர்களுக்குத் தலைவர்களான பிரும்மா, விஷ்ணு, ருத்திரன் என்ற மும்மூர்த்திகளும், திக்பாலர்களுக்குத் தலைவனான இந்திரனும், ராஜாவான சந்திரனை அணியாகக்கொண்ட ராஜராஜன் பரமேசுவரனது நண்பனானதால் செல்வாக்கு மிக்க திக்பாலர் குபேரனும், திக்பாலர் களுடைய சக்தி பெற்றுச் சிறந்த பேரரசர்களும் ராஜராஜர்கள். பிரும்மாதிகளுக்கும் ஈசுவரர், தேவர்களுக்குள்ளே பெருமை மிக்கவர், மஹாதேவரான காமேச்வரன். இவர்களனைருக்கும் ஈசுவரி. (684)

**2. ராஜ்ய - தாயிநீ. அரசுரிமை அளிப்பவள்.**

2-1. அரசனது ஆளுகைக்குட்பட்டது ராஜ்ஜியம். ராஜ ராஜர்களான பேரரசர்கள், திக்பாலர்கள், பிரும்மா, விஷ்ணு, ருத்திரன், மஹாதேவன் முதலானோரது ஆளுகைக்குட்பட்ட ராஜ்ஜியங்கள் அனைத்தையும் தேவி அளிப்பாள். அவள் அருளால்தான் பேரரசர் முதலானோருக்கு இந்த அரசுரிமைகள் கிடைத்துள்ளன.

2-2. ஸ்தூலப் பொருள் ஸமஷ்டியின் ஆட்சி வைராஜ்யம் - (விராட்டைச் சேர்ந்தது). இந்திரியம் மனம் அடங்கிய ஸுக்ஷ்ம சரீர ஸமஷ்டியின் ஆட்சி ஸ்வாராஜ்யம், (ஸுக்ஷ்ம சரீர ஸமஷ்டி அபிமானி - ஸ்வராட்). இரண்டிற்கும் மூலகாரணமான அவ்யக்தமெனும் பிருகிருதியின் ஆட்சி ஸாம்ராஜ்யம். (அவ்யக்தம் ஸம்ராட்). இந்த மூன்று ஆட்சிகளையும் அருளுபவள். ஸ்தூல-ஸுக்ஷ்ம காரண சரீரங்களை அடக்கி ஆளும் திறமையே அரசாட்சியைக் காட்டிலும் சிறப்புமிக்கது. அதனைத் தருபவள். (17.8.1.11.) எல்லாவற்றிற்கும் மேம்பட்ட பேரரசு தேவியின் அருளாட்சி அதனையும் தருபவள். (685)

### 3. ராஜ்ய - வல்லபா. ஆட்சியில் ஈடுபட்டுள்ளவள்.

3-1. முன் நாமங்களில் குறிப்பிட்டுள்ள ராஜ்யங்கள் அனைத்திலும் தேவிக்கு மிகுந்தப் பிரியமுண்டு. அவைகளின் மேம்பாட்டில் மிகுந்த ஈடுபாடு கொண்ட பேரரசி அவள். உடலுக்கும் மனத்துக்கும் 'ஆத்மா' பிரியமாயிருப்பதுபோல், (16.28.1) அந்தப் பல வகைப்பட்ட ராஜ்யங்களுக்கும் தேவி தான் மிக மிகப் பிரியமானவள். ராஜ்யம் என்பதால் அவைகளை ஆளும் பேரரசர்களையும் குறிப்பிடலாம். ஸ்ரீ நகரத்தில் தேவி வழிபாட்டிற்காக இந்திரன் முதலான திக்பாலர்களும், பிரும்மா முதலானோரும் கூடி நிற்கிறார்கள். (9.10.10) சில பேரரசர்கள் தங்கள் மனைவியருடன் 13, 14 மதில்களுக்கிடையே உள்ள பிரகாரத்தில் தங்கித் தேவியை வழிபடுகின்றனர் என துர்வாசரின் ஆர்யாதுவிசதீ கூறும். அவர்களிடத்தில் மிகுந்தப் பிரியமுள்ளவள். (686)

### 4. ராஜத் - க்ருபா. பெருமையுடன் விளங்கும் கிருபையுள்ளவள்.

4-1. அன்னையின் கருணை மிகவும் புகழ்பெற்றது. அது எங்கும் பிரகாசிக்கிறது. வேறு காரணகாரியத் தொடர்பைக் கொண்டு ஊகித்தறிய வேண்டியிராமல் கருணை தானே தன்னை வெளியிட்டுக்கொண்டுள்ளது. தந்தையின் கருணை வெளித்தோற்றமடையாமல் அடங்கியிருக்கும். அன்னையின் கருணை பரிவும் அன்புமாக வடிவெடுத்து மறைக்க முடியாதபடி வெளியே துலங்கும். அன்னை வடிவான தேவியிடம் கருணை மிகவும் பிரகாசத்துடன் துலங்குகிறது. அதனால் அவள் எல்லா அரசுரிமைகளையும் வழங்குகிறாள். (687)

### 5. ராஜ - பீட - நிவேசித - நிஜ - ஆச்ரிதா. தன்னை அண்டியவர்களை அரச பீடத்தில் அமர்த்துபவள்.

5-1. தன்னை அண்டியவர்களைத் தேவி அரச பீடத்தில் அமர்த்துகிறாள். உலகில் உள்ள ராஜ பதவிகளனைத்தையும் அளித்தாலும் வேண்டேனெனப் புறக்கணித்துத் தேவியை மட்டும் பற்றி அடைந்தவர்கள் நிஜ - ஆச்ரிதர்கள். தன்னலமற்ற அந்த அடியார்களே தனது தெய்விக அரசாட்சியைத் திறம்பட நடத்தவல்லவர்கள் எனக் கண்டு, தேவி அவர்களை அரசர்களாக்குகிறாள். அனுமானுக்கு அடுத்தப் பிரும்மாவின் ஸ்தானத்தையும், மஹாபலிக்கு அடுத்த இந்திரப் பதவியையும் இறைவன் அளித்துள்ளதாகப் புராணங்கள் கூறும். அவர்கள் அப்பதவிகளைத் தமக்கென வேண்டாதவர்கள். இறைவனின் அருளாட்சிக்கு அத்தகைய தன்னலமற்ற மஹான்களின் சேவை தேவைப்படுகிறது. அதனால் இறைவனே வலிய வந்து அந்த ஸ்தானங்களை அவர்களுக்குத் தருகிறார். தன்னை அண்டியவர்கள் வினைக்கட்டிலிருந்தும் விடுபட்டவர்கள். தேவி அவர்களிடம் அரசுப் பொறுப்பைத் தந்தாலும் அதன் சுக துக்கங்களில் சிக்கிக்கொள்ளாமல் தாமரையில் நீர்போல் பற்றற்று வினைத் தொடர்பின்றி அவர்கள் கர்மயோகிகளாக அரசாள்வார்கள். (688)

(நா. 689 - 694)

राज्यलक्ष्मीः कोशनाथा चतुरङ्गबलेश्वरी ।
साम्राज्यदायिनी सत्यसन्धा सागरमेखला ॥ 135 ॥

**ராஜ்யலக்ஷ்மீ : கோசநாதா சதுரங்கபலேச்வரீ.**
**ஸாம்ராஜ்யதாயிநீ ஸத்யஸந்த்தா ஸாகரமேகலா.135**

**6. ராஜ்ய லக்ஷ்மீ . ராஜ்யலக்ஷ்மியாயிருப்பவள்.**

6-1. அரசாங்கத்திற்குப் பெருமை தரக்கூடிய செல்வம், தானியக் குவியல், படை, அறிவாளிகளின் சேர்க்கை முதலிய அனைத்துமாக இருப்பவள். (689)

**7. கோசநாதா. பொக்கிஷத்தின் தலைவி.**

7-1. அரசனது பொக்கிஷத்தின் தலைவியாக இருப்பவள். நமது ஸ்தூல - ஸூக்ஷ்ம - காரணதேகங்களே, அன்னமய கோசம், பிராணமய கோசம், மனோமய கோசம், விஜ்ஞானமய கோசம், ஆனந்தமய கோசம் என்ற ஐவகைக் கோசங்களாகி ஆத்மாவை மறைத்துத் தம்மையே ஆத்மாவாகக் காட்டிக்கொண்டிருக்கின்றன. அன்னமய கோசம் - ஸ்தூல உடல், பிராணமய கோசம் - பிராணனும் கர்மேந்திரியங்களுமாகும். மனோமய கோசம் - ஞானேந்த்ரியங்களும் மனமுமாகும். விஜ்ஞானமய கோசம்- 'எனது'-'நான்' என்ற எண்ணத்தால் கட்டுப்படுத்தும் புத்தி

தத்துவமாகும். ஆனந்தமய கோசம் – ஆத்மாவின் பரமானந்த வடிவத்தை மறைக்கும் அஜ்ஞான மறைப்பாகும். இந்த ஐந்து கோசங்களின் நாயகியாயிருந்து, முறையே தோற்றம், உயிர்ப்பு, எண்ணம், அஹங்காரம், ஆனந்தம் இவற்றைத் தருபவள். (690)

### 8. சதுர் - அங்க - பல - ஈச்வரீ. நான்கு வகைப்பட்ட படைகளின் தலைவி.

8-1. காலாள், குதிரை, யானை, தேர் என்று அரசைக் காக்கும் நான்கு வகைப் படைகள். மனம், புத்தி, சித்தம், அஹங்காரம் என்று ஜீவனுக்கு உலகியலில் உதவும் நான்கு படைகள். (14.25.1) படைப்பு, காத்தல், ஒடுக்குதல் என்ற முத்தொழில் புரிபவர்கள், அவர்களை மேம்பார்வையிடுபவர் ஆகிய பரம்பொருளின் வ்யூகங்கள் (படையமைப்பு) எனப்படும் நால்வர்: நாராயணனைப் பரம்பொருளாகக் கொள்பவர் குறிப்பிடும் பிரத்யும்நர், அநிருத்தர், ஸங்கல்ஷணர், வாஸுதேவர் என்ற நால்வர்; தேவியைப் பரம்பொருளாகக் கொள்பவர் குறிப்பிடும் வாமா, ஜ்யெஷ்டா, ரௌத்திரீ, அம்பிகா என்ற நால்வர். (நா.295) பிரும்மா, விஷ்ணு, ரௌத்திரீ, அம்பிகா என்ற நால்வர். (நா. 264 – 271) இப்படி நான்கு அங்கங்களுள்ள சேனைகளுக்குத் தலைவியாயிருப்பவள். (691)

### 9. ஸாம்ராஜ்ய - தாயிநீ. ஸாம்ராஜ்யத்தை அளிப்பவள்.

9-1. அரசர்களுக்கும் அரசன், பேரரசன், சக்கிரவர்த்தி 'ஸம்ராட்' எனப்படுபவன். பல அரசர்களை வென்று பேரரசர்களால் மட்டும் நிறைவேற்றத்தக்க ராஜஸூயம் முதலிய வேள்விகளைப் புரிந்தவன் ஸம்ராட். அவனது ஆளுகை ஸாம்ராஜ்யம். அதனையும் அதனை ஆளும் சக்தியையும் அருள்பவள்.

9-2. ஸ்தூல பூதங்களாலான ஸ்தூல சரீர ஸமஷ்டியிலும், ஸூக்ஷ்ம பூதங்களாலான ஸூக்ஷ்ம சரீர ஸமஷ்டியிலும், அவைகளின் அவ்யக்த நிலையில் நின்று ஆளும் ஈச்வரனை ஸம்ராட் எனக் குறிப்பிடுவர். அவரது ஆளுகை – உலகிலுள்ள ஸ்தூல – ஸூக்ஷ்ம சரீரங்கள் அனைத்தையும் ஆளுவது – ஸாம்ராஜ்யம். அதனைத் தருபவள். (26.2.2) (692)

### 10. ஸத்ய - ஸந்த்தா. மீற முடியாத எல்லையுள்ளவள்.

10-1. ஸந்த்தா - எல்லை, சூளுரை. தேவி வகுக்கும் எல்லையை எவரலலும் மீற முடியாது. தேவி தான் உரைத்த சூளுரையைத் தானே மீறுவதில்லை. அதனால் அது எக்காலும் ஸத்தியமாக இருக்கும். அவளது சூளுரையைப் பொய்யாகக் எவராலும் முடியாது. அவள் அருள் பெற்றவனது சூளுரையும் ஸத்தியமாகும். (693)

**11. ஸாகரமேகலா. கடலை இடுப்பணியாகக் கொண்டவள்.**

11-1. இடுப்பில் அணியக்கூடிய ஒட்டியாணம் முதலிய ஆபரணங்கள் மேகலா. தேவி பதினான்கு உலகங்களையும் தன் உருவமாகக்கொள்ளும் போது பூமி அவள் இடுப்பாகும். பூமியைச் சுற்றியுள்ள கடல் இடுப்பைச் சுற்றி அமையும் மேகலையாக விளங்கும். கடலை மேகலையாகக்கொண்ட பூமி வடிவினள். சூழ்நிலையில் கடலைப்போல் கொந்தளிப்பிருந்தாலும் அதன் நடுவே பூமிபோல் பொறுமையுடனும், திடத்துடனும் உள்ளவள். அப்படி அவளை நினைப்பவருக்குப் பொறுமையையும் திடத்தையும் அவளே அருள்வாள். (694)

(நா. 695- 700)

दीक्षिता दैत्यशमनी सर्वलोकवशंकरी ।
सर्वार्थदात्री सावित्री सच्चिदानन्दरूपिणी ॥ 136 ॥

**தீக்ஷிதா தைத்யசமநீ ஸர்வலோகவசங்கரீ.**
**ஸர்வார்த்ததாத்ரீ ஸாவித்ரீ ஸச்சிதாநந்தரூபிணீ. 136**

**12. தீக்ஷிதா. அறிவூட்டுபவள்.**

12-1. தீக்ஷா - அறிவூட்டுதல்; சீடனுக்கு மந்திரத்தை உபதேசித்து அவனது பாபத்தைப் (அஜ்ஞானத்தை) போக்குதல். (13.11.4) அதில் ஈடுபாடு கொண்டவளானதால் தீக்ஷிதா. (தீயதே க்ருபயா சிஷ்யே க்ஷீயதே பாபஸஞ்சய: தேந தீக்ஷேதி கதிதா). தீக்ஷா - பலன் தரும் வகையில் செயலாற்றுவதில் முனைவும் உறுதியும்; அதனைக் கொண்டவள். அடியார்களைக் காப்பாற்றுவதும், கொடியவர்களை அடக்குவதும் அவளுக்கு விருப்பமான செயல்கள், அதில் ஈடுபட்டவள். மந்திர உபதேசம், சிறந்த விரதம், வேள்வி முதலானவைகளில் கடைப்பிடிக்கப் பெறும் உணவிலும், நடத்தையிலும், மற்றவற்றிலும் உள்ள கடுமையான கட்டுப்பாடுகளை நியமங்களைக் கொண்டவர் வடிவில் உள்ளவள். (695)

### 13. தைத்ய - சமநீ. அசுரர்களை அடக்குபவள்.

13-1. கசியபரின் மனைவி திதி. அவளுக்குப் பிறந்தவர்கள் தைத்யர்கள் எனப்படும் அசுரர்கள். (அதிதி மற்றொரு மனைவி அவளுக்குப் பிறந்தவர்கள் ஆதித்யர்கள் எனும் தேவர்கள்). அசுரர்களை அடக்குபவள் தேவி. அசுர எண்ணம் பரவாமல் தடுப்பவள். (நா.599). (696)

### 14. ஸர்வலோக - வசம் - கரீ. உலகமனைத்தையும் வசப்படுத்துபவள்

14-1. இச்சா சக்தியாக எல்லாவற்றையும் தன் விருப்பப்படி நடத்தும் சக்தி படைத்த தேவியிடம் அவள் படைத்த உலகம் அடங்கி நிற்கிறது. அவளது அடியார்களுக்கும் உலகம் வசமாகிறது. (697)

### 15. ஸர்வ - அர்த்த - தாத்ரீ. எல்லா விருப்பங்களையும் தருபவள்.

15-1. அடியார் வேண்டியதை அளிப்பவள். (698)

### 16. ஸாவித்ரீ. உலகைப் படைக்கும் சக்தி வடிவினள்.

16-1. உலகைப் படைப்பவர் ஸவிதா எனும் பரமசிவன். (பவன்) (13.1.1) அவரது சக்தி ஸாவித்ரீ. உலகம் தோன்றவும், புலப்படவும் காரணமாயிருப்பதால் ஸுரியனும் ஸவிதா, அவரது சக்தியாகவும் அவருக்கு ஒளி தருபவளாகவுமிருந்து புத்தியைத் தெளிவுடையதாக்கி நற்பணிகளில் மனிதனை ஈடுபடுத்துபவள் ஸாவித்ரீ. காயத்ரீ மந்திரத்தின் உட்பொருளான பரம்பொருளின் சக்தியும் அவளே. புஷ்கரம் எனுமிடத்தில் திருக்கோயில் கொண்டுள்ள தேவி ஸாவித்ரீ எனப்படுவாள். (699)

### 17. ஸத் - சித் - ஆநந்த - ரூபிணீ. ஸத் - சித் - ஆனந்த வடிவினள்.

17-1. எக்காலும், எங்கும், எல்லாமாயும் நிறைந்திருப்பது ஸத் ஆகும். வேறு பொருளின் உதவியின்றியும் கலப்பின்றியும் உள்ள பேரறிவு (நிராகாரஜ்ஞானம்) சித் ஆகும். பிற பொருளின் உதவியின்றி (ஆநந்தத்தோடு கூடியவள் என்றில்லாமல்) ஆநந்தமாகவே இருப்பது ஆநந்தம். இம்மூன்றையும் ரூபமாக - தன்னை அடையாளம் காட்டக் கூடியவையாகக் கொண்டவள். (700)

## (9. விச்வாகலை 701 - 800 நாமங்கள்)

(நா. 701 - 707)

देशकालापरिच्छिन्ना सर्वगा सर्वमोहिनी ।
सरस्वती शास्त्रमयी गुहाम्बा गुह्यरूपिणी ॥ 137 ॥

**தேசகாலாபரிச்சிந்நா ஸர்வகா ஸர்வமோஹிநீ.**
**ஸரஸ்வதீ சாஸ்த்ரமயீ குஹாம்பா குஹ்யரூபிணீ. 137**

### 18. தேச - கால - அபரிச்சிந்நா. பரப்பிற்கும், நேரத்திற்கும் உட்படாதவள்.

18-1. எங்கும் இருப்பவளானதால் தேசப்பரப்பால் பகுக்கப்படாதவள். எல்லாமாயும், எல்லாமல்லாமல் தனித்தும், எங்கும் இருப்பவள். அவள் எங்கும் இருப்பவள். அவள் எங்கும் இருக்கிறாள். தேச - அபரிச்சிந்நா. உலகம் தோன்றுவதற்கு முன்னும் பின்னும் அதனைப் படைத்துக் காத்து அழிப்பவர்கள் தோன்றுவதற்கு முன்னும் பின்னும் இருப்பவளானதால் கால அளவிற்குட்படாதவள். காலத்தால் பகுக்கப்படாதவள். கால - அபரிச்சிந்நா. (35.45.1) (701)

### 19. ஸர்வகா. எல்லாவற்றிலும் உள்ளவள்.

19-1. இது அதுவாக இருக்க முடியாது. அது இதுவாக இருக்க முடியாது. இப்படி ஒரு பரிச்சேதம் (கூறுபாடு) உண்டு. தேவி எல்லாவற்றிலும் அந்தர்யாமியாக நிறைந்து எல்லாமாயிருப்பவள். ஆனதால் தேவி அதுவாகவோ, இதுவாகவோ இல்லை என்று கூற முடியாது. (25.45.1) எல்லா திவ்விய க்ஷேத்திரங்களிலும் அந்தந்த தேவதையாக விளங்குபவள். (702)

### 20. ஸர்வ - மோஹிநீ. எல்லோரையும் மயக்குபவள்.

20-1. எங்கும், எல்லாமாய், எப்போதும் உள்ளவளை ஏன் அறிய முடியவில்லை? பரம்பொருளிடமிருந்து வேறுபட்டதாகப் பார்க்கச் செய்யும் மாயை அங்கு குறுக்கிடுகிறது. அந்த மயக்கம் தரும் மாயை அவள். உலகனைத்தையும் தன்பால் மோஹன சக்தியால் ஈர்ப்பவள். திரைலோக்யமோஹனம் எனும் சக்கிரத்தின் நாயகியாயிருந்து மூவுலகை வசப்படுத்துபவள்.(9.10.20). (703)

### 21. ஸரஸ்வதீ. ஸரஸ்வதியாயிருப்பவள்.

21-1. ஸரஸ்வதீ - அறிவைத் தரும் தேவதை. அறிவு தூயது. அதனைத் தரும் தேவியும் தூயவள், வெண்ணிறமுள்ளவள். வெண் தாமரையில் அமர்ந்திருப்பவள். ஸ்படிகத்தாலதன 'அ' முதல் 'க்ஷ' வரையிலான எழுத்துக்களை மணிகளாகக் கொண்ட அக்ஷமாலையை ஏந்தியிருப்பவள். (நா. 455 .577) அறிவு வீணையின் ஒலிபோல் ஆனந்தத்தைத் தரும். அதனைக் காட்ட வீணையைக் கையில் ஏந்தியவள். அறிவிற்குத் தொடக்கமும் முடிவும் கிடையாது. அதன் பெருக்கில் ஆரவாரமும் கிடையாது. துவங்குமிடம் தெரியாதவாறு தோன்றிச் சலசலவென நிதானத்துடன் ஒரே சீராக ஓடி நின்று ஆரவாரமற்றுத் தேங்கித் தெளிந்த நீருள்ள ஓடையை 'ஸரஸ்' என்பர். (மானஸஸரஸ் எனும் ஓடை மிகவும் புகழ் பெற்றது) அறிவும் அப்படித் தாரையாக இடைவிடாமல் ஓடை போல் அவள் அருளால் பெருகிக்கொண்டிருக்கும். அத்தகைய ஞானமாகிற ஓடையைக் கொண்டவள் ஸரஸ்வதீ. எல்லோரையும் மயக்குபவளே. (நா.703) அறிவூட்டி மயக்கம் தீர்ப்பவளாகவும் மயக்கம் தெளிந்த நிலையில் பரம்பொருளின் அனுபவத்தை கூட்டுவிப்பவளாகவுமாகிறாள்.

21-2. ஸரஸ்வதி எனும் நதி வடிவினள். இரண்டு வயதுள்ள கன்னி வடிவினள். (13.11.2) (704)

## 22. சாஸ்த்ர - மயீ. அறிவு நூல்களாயிருப்பவள்.

22-1. மயக்கம் தெளிய உள்ளே அறிவுப் பெருக்கை அருள்வதற்காக அறிவால் அறியப்பட வேண்டியவைகளை வகைப்படுத்தி அறியவேண்டிய முறைப்படி போதிக்கும் அறிவு நூல்களான சாஸ்திரங்களாயுமானாள், யுக்திகளிலும் அனுபவங்களிலும் உள்ள தடுமாற்றங்களை அகற்றி, வேறு புறச்சாதனங்களால் அறிய முடியாதவற்றையும் புலப்படுத்தி, நமது நோக்கைக் கட்டுப்படுத்தி நல்வழியில் அழைத்துச் செல்பவை வேதம், ஸ்ம்ருதி, ஆகமம், நியாயம், தர்க்கம் முதலிய வித்யாஸ்தானங்கள் - சாஸ்திரங்கள் எனப்படுபவை. (1,8) அவைகளை வடிவமாகக் கொண்டவள். (705)

## 23. குஹா - அம்பா. குகையில் விளங்குபவள்.

23-1. ஞானத்தை அருளும் தேவியும் இருக்கிறாள். அறிவைச் சீராக்கச் சாஸ்திரங்களும் உள்ளன. அப்படியும் அறியமுடியவில்லையே! தேவி குகையில் விளங்குகிறாள். வெளி வெளிச்சத்தில் பழகிய கண்களுக்குக் குகையினிருட்டில் உள்ள பொருள் துலங்காது. குகையினுட் சென்று அவ்விருட்டிற்குப் பழகிய பின்னரே அங்குள்ள பொருள் துலங்கும். பொருளைக் காணும் உள்நோக்குள்ளவர்களால் மட்டும்

அறியக்கூடியவாறு குகையில் பிரகாசிப்பவள். உள் நோக்குள்ளவர்கள் மட்டும் அறியக்கூடிய குகப்பெருமானின் தாயும் அவளே. (குஹ - அம்பா) (நா. 606, 442, 624) (706)

**24. குஹ்ய - ரூபிணீ. ரகசிய வடிவம் கொண்டவள்.**

24-1. குஹ்யம் – மறைக்கத்தக்கது. பிறர் எளிதில் அறியா வண்ணம் காப்பாற்றத்தக்க ரகசியம். குருவின் அருளின்றிப் பெற முடியாதபடி அவளது வடிவம் ரகசியமாக மறைத்து வைக்கப்பட்டுள்ளது. அவ்விதம் மறைப்பது அசிரத்தையுடன் அணுகித் தவறாகப் புரிந்துகொள்ளாமல் இருப்பதற்கே. சாஸ்திரங்கள் தேவியைப்பற்றி விரிவாக விளக்கம் தந்திருந்தாலும் சூட்சுமமான தேவீ தத்துவம் நூலறிவால் மட்டும் பெற முடியாததாகையால் அதனைச் சுட்டிக்காட்டி நேர்முகமாகப் போதிக்கும் குருவின் உதவி தேவைப்படும். அதனால் குஹ்யமான ரகசியமான குரு உபதேசத்தால் அறியத்தக்க வடிவிலுள்ளவள். அவளது தத்துவமறிந்த அந்தப் பெரியோர்களும் தம்மைத் தாமே அறிமுகப்படுத்திக் கொள்ள விரும்புவதில்லை. அதனால் அவர்களும் குஹ்யர்கள். அவர்களால் அடையாளம் காட்டப் பெறுபவள். (707)

(நா. 708- 713)

सर्वोपाधिविनिर्मुक्ता सदाशिवपतिव्रता ।

संप्रदायेश्वरी साध्वी गुरुमण्डलरूपिणी ॥ 138 ॥

**ஸர்வோபாதிவிநிர்முக்தா ஸதாசிவபதிவ்ரதா.**

**ஸம்ப்ரதாயேச்வரீ ஸாத்வீ குருமண்டலரூபிணீ. 138**

**25. ஸர்வ - உபாதி - விநிர்முக்தா. எல்லா உபாதிகளிலிருந்தும் விடுபட்டவள்.**

25-1. சேர்க்கையால் மாறுபாடு தோன்றும். அந்த மாறுபாடு சேர்க்கை விலகியதும் மறையுமானால் மாறுபாடு ஏற்படுத்தும் அந்தப் பொருள் உபாதி. (14.23.1) ஸ்படிகலிங்கத்தின் மேலிட்ட சிகப்பு மந்தாரைப்பூ நிறமற்ற லிங்கத்தைச் சிவப்பாக்குகிறது. பூவை அகற்றியதும் லிங்கம் தன் நிறமற்ற தன்மையை அடைந்தது. சிகப்புபூ இங்கு உபாதி. அதுபோல் தாற்காலிகமாக வேறுபட்ட பொருளாகக் காட்டும் உபாதிகளால் தேவி மாறுபடுவதில்லை. அதனால் உபாதிகளின் பாதிப்பிலிருந்தும் விடுபட்டவள். தேவியை நாம் காண முடியாமல் மறைக்கும் உபாதிகள் நீங்கியதும் குஹ்ய நிலையிலிருந்து அவள் வெளிப்படுகிறாள். மறைத்த அஜ்ஞானம்

அகன்றதும் 'நான்', 'எனது' என்ற உபாதிகளகன்றதும் ஜீவன் சிவனாகிவிடுகிறான். அப்படி எல்லா உபாதிகளிலிருந்தும் விடுவிக்கப்பட்ட சிவனான ஆத்மாவாயிருப்பவள். (708)

### 26. ஸதா - சிவ - பதி - வ்ரதா. ஸதாசிவனாகிய பதியை முக்கியமானவராகக் கொண்டவள்.

26-1. கணவரே முக்கியமானவரெனக்கொண்டு எப்போதும் எங்கும் அவரைப் பேணுவதிலேயே கருத்துக்கொண்டால் அது பதிவிரதமாகிறது. அதனை கொண்டவள், பதியின் விரதத்தையே தன் விரதமாகக் கொண்டவள் பதிவ்ரதா. எப்போதும் மங்களமாயிருப்பவர் ஸதாசிவன். (நா. 272, 91) சிவனுக்குப் பதிவிரதையாக மனைவியாக தேவி இருப்பதும் ஸதா - எக்காலத்திலும் நிலைத்தது. உபாதிகளிலிருந்தும் விடுவிக்கப்பட்டுச் சிவனாகி - ஜீவப்ரம்ஹ ஐக்கிய அனுபவம் பெற்றவனிடத்தில் நீங்காதிருப்பவள். (709)

### 27. ஸம்ப்ரதாய - ஈச்வரீ. ஸம்பிரதாயத்தின் தலைவி.

27-1. வாரிசுக்கு அளிக்கப்பெறும் சொத்துரிமை தாயமாகும். ஸம் - ப்ரதாயம் - நன்கு சீடர்களுக்கு அளித்த சொத்துரிமை. முறைப்படி மந்திரங்களையும், வழிபாட்டு முறைகளையும் போதித்தும், உடனிருந்து முறை தவறாது பாதுகாத்தும் சீடனிடத்தில் தெய்வானுக்கிரகம் பூர்ணமாய் ஏற்படும்படி செய்வித்தல் ஸம்பிரதாயமாகும். குருவினிடத்தில் மந்திரம் முதலியவைகளைப் பெற்றுச் சீடன் குரு நிலையை அடைகிறாள். அவன் மீண்டும் சீடனாக ஒருவனை ஏற்று அவனுக்குப் போதிக்கிறான். இது ஸம்பிரதாயம். இந்த குரு சிஷ்யக் கிரமத்திற்கும் தேவி தலைவி. ஸ்ரீ சக்கிரத்தின் நான்காவது ஆவரணத்தில் வசிக்கும் ஸம்ப்ரதாய யோகினிகளும் அவளே. (9.10.15.4.9.10.24.)

27-2. ஸதாசிவ பதிவ்ரதா (நா. 709) என்ற நாமப்படி சிவனும் தேவியும் கணவனும் மனைவியுமாவர். இருவரும் பிரும்ம ஸ்வரூபமே. அங்கு சிவன் கணவனாதும் தேவி மனைவியாவதும் உபாதியால் ஏற்பட்டது. ஸர்வ உபாதிவிநிர்முக்தா என்ற 708 வது நாமத்தில் விளக்கியபடி உபாதிகள் நீங்கியவளாகத் தேவியைப் பாவனை செய்வதும் அவசியம். பிரும்மஸ்வரூபமான சிவனது சக்தியே தேவி. சக்தி சக்திமானை விட்டு விலகியிருக்காது. அதை விளக்கவே இந்தக் கணவன் - மனைவி என்ற கல்பனை. சிவன் தர்மீ. சக்தி தர்மம். (தர்மம் தன்மை, தர்ம - அதர்ம

விவர்ஜிதா. (நா. 255) பரம்பொருளான பிரும்மத்திடம் தர்மீ, தர்மம் என்ற இரு நிலைகளும் கிடையாது. கல்பனையால் பாவனை செய்யப்படும் தேவியின் பல்வேறு வடிவங்களுக்கும் முக்காலும் உண்மையான பரம்பொளாகிய தேவீ தத்துவத்திற்கும் உள்ள பொருத்தத்தை அறிய உதவுவது சாக்தஸம்பிரதாயம். சிவனும் சக்தியும் ஒன்றே. அதில் விசனைத் தர்மியாகவும், சக்தியைத் தர்மமாகவும் கல்பனையால் பிரித்துக் கூறுகிறோம் நெருப்பை விட்டுச் சூட்டைப் பிரிக்க முடியாது. சூடில்லாதது நெருப்பாயிருக்காது. அதனால் தனித்த இரு பொருள் போல் தர்மத்தையும், தர்மியையும் பிரித்துக் கூறினாலும் இவ்விரண்டிற்கும் தனியிருக்கை கிடையாது. ஆனால் இரு தனிப் பொருள்கள் போல் பிரித்துப் பேசப்படுகிறது விளக்கம் பெறுவதற்காக. இதனை விளக்கும் சாக்தஸம்பிரதாயத்தின் தலைவி தேவி. (710)

## 28. ஸாது. எவ்வகையிலும் பொருந்துபவள்.

28-1. ஒரு செயலைச் சீராக செய்து முடிப்பது ஸாதனை. ஸாதனை புரியவல்லது ஸாது. எதனையும் செய்து முடிக்கவல்லது. தர்மியான சிவனுக்குத் தர்மமாகப் பிரிந்திருப்பது போல் காட்டவும், தர்மமாக மாத்திரமோ தர்மியாக மாத்திரமோ தனித்திருப்பது போல் காட்டவும் அவளால் முடியும். அந்தச் சக்தி பெற்ற அவள் பரப்பிரும்மமே. அதனால் இந்த நாமம் அஃறிணை, பிரும்ஹ என்ற சொல்லிற்கு அடைமொழியாக உள்ளது. தேவியால் பற்பல வடிவங்களில் தோன்றியவாறே ஒன்றாகவும் இருக்க முடியும். அதனால் ஸாது. ஸாது என்ற சொல் வழக்கில் கையாலாகாதவன், பிறர் துன்புறத்தும்போது அதனைத் தவிர்க்க முடியாமலும், அவர்களை எதிர்க்க முடியாமலும், துன்பத்தைப் பொறுத்துக்கொள்பவன் எனப் பொருள்படும். பிறர் துன்புறுத்தும்போது அதனைப் பொறுத்துக்கொண்டு, அதனால் பாதிப்புறாமல் தன் உடலையும் மனத்தையும் பலப்படுத்திக்கொண்ட பெரியோர்கள், ஸாதுக்கள். அவர்களுக்கு இழைத்த துன்பம், அவர்களைப் பாதிப்பதில்லை, கல்லில் கையால் அடித்த அடிபோல் துன்பம் விளைவித்தவனைப் பாதிக்கும். அந்தப் பெரியோர்கள் வடிவில் உள்ளவள் தேவி. (711)

## 29. ஈ, ஈ என்ற காம கலாக்ஷர வடிவினள்.

29-1. வாக்பவ கூடத்தின் மூன்றாம் அக்ஷரம் 'ஈ'. சக்தியம்சம் பெற்றது. (11.4.3-5, 18.41.2, 18.48.1) காமகலா என்று அதற்குத் தனிச்

சிறப்புப் பெயர். காமனான காமேசுவரனது சக்தி வடிவம் அது. மன்மதனைக் குறிப்பிடும் எழுத்தும் அதுவே. ஸங்கேத கோசப்படி 'அ' என்ற எழுத்து விஷ்ணுவைக் குறிப்பிடும். அவரது சக்தியும், சகோதரியும், மனைவியும் 'ஈ'.(நா. 280, 298, 339, 892, 893)

29-2. ஸாத்த்வீ என்ற சொற்றொடர் இங்கு 'ஸாது' 'ஈ' என்று பிரிகிறது. சாங்கரீ ஸ்ரீகரீ ஸாத்த்வீ என்ற சுலோகத்தில் ஸாத்த்வீ என்று ஒரே நாமம். (நா. 128). (712)

**30. குரு- மண்டல - ரூபிணீ. குரு மண்டல வடிவில் உள்ளவள்.**

30-1. குரு மண்டலம் நீண்டது. ஸதாவசின் தொடங்கி நமது குரு வரை அது இடையறாமல் தொடர்கிறது. எங்கு தொடங்கிற்று? எங்கு முடிவுறும்? என்றறிய முடியாதபடி ஆதியும் அந்தமும் பிரித்தறிய முடியாதவாறு வட்ட வடிவில் அமைந்துள்ளமையால் குரு மண்டலம். நமக்கு உபதேசிக்கும் குருவும் ஸதா சிவனே. தேவியே குருவுருவுல் வருகிறாள். 'தேசிகரூபேண தர்சிதாப்ப்யுதயாம்'. 'தேவியே மங்களமான குரு வடிவில் வழிகாட்டி, மங்களத்தை அனுபவிக்கச் செய்கிறாள்'. (சியாமளா நவரத்னமாலிகா ஸ்தோத்திரம்). ஸதாசிவனாக ஆதிகுருவாக ஸம்பிரதாயத்தைத் தோற்றுவித்து, அந்த ஸம்பிரதாயத்தில் நம்மைப் பொருந்தவைக்கும் நமது குருவாகவுமாகி அந்த முடிவற்ற குரு மண்டலமாக இருப்பவள் தேவி. அவளால் ஸம்பிரதாயமாகவும் மந்திரமாகவும், குருவாகவும், சீடனாகவும் அறிவாகவுமிருக்க முடியும். ஸம்ப்ரதாயேச்வரீ, ஸாது, ஈ, குரு மண்டல ரூபிணீ என்ற தொடர் மிக அழகாக ஒன்றோடொன்று பொருந்தி நிற்கிறது. (நா. 471 - 603).

30-2. ஒரு குருவிடமிருந்து உபதேசம் பெற்றவன் அதனைச் சீடனுக்கு உபதேசிக்கக் கடமைப்பட்டுள்ளான். அறுபடாதவாறு குரு சிஷ்ய பரம்பரை தொடர்வது அந்தப் பரம்பரையில் சேர்ந்தவரது பொறுப்பில் உள்ளது. நல்ல குரு கிடைக்காமல் ஏங்கித் தேவியிடம் கோரி நிற்கும் சீடனுக்கு நல்ல குருவாகவும், நல்ல சீடன் கிடைக்காமல் ஏங்கும் குருவிற்குச் சீடனாகவும் தேவியே வருவாள். ஏனெனில் குரு மண்டல வடிவில் இருப்பவள் அவளே. (713)

(நா. 714 - 722)

कुलोत्तीर्णा भगाराध्या माया मधुमती मही ।
गणांबा गुह्यकाराध्या कोमलाङ्गी गुरुप्रिया ॥ 139 ॥

**குலோத்தீர்ணா பகாராத்த்யா மாயா மதுமதீ மஹீ.**
**கணாம்பா குஹ்யகாராத்த்யா கோமளாங்கீ குருப்ரியா.**
**139**

**31. குல - உத்தீர்ணா. திரிபுடிக்கு அப்பாற்பட்டவள்.**

31-1. குலம் - புலன்கள். புலன்களுக்கெட்டாதவள். புலன்களால் ஏற்படும் அறிவானது அறிபவன், அறியப்படும் பொருள், அறிவு என்ற திரிபுடியைச் சார்ந்திருக்கும். (12.1.7) அதனால் அது குறுகிய அறிவு. தேவி பேரறிவு. (நா.96) குல அறிவைக் கடந்தவள். குல அறிவு ஏற்படக் காரணமாயிருப்பவள். குலமெனும் குண்டலினியிலுள்ள சக்கிரங்களுக்கு மேல் இருப்பலள். (நா.108). ஸ்ரீசக்கிரத்தின் ஐந்தாவது ஆவரணத்தில் உள்ள (9.10.15.5) குரு பரம்பலையாக விரிந்து வருகிற குலோத்தீர்ணா யோகினி வடிவில் உள்ளவள். (714)

**32. பக - ஆராத்த்யா. சூரியனால் வழிபடத்தக்கவள்.**

32-1. பகம் எனும் ஈசுவர சக்தியனைத்தையும் கொண்டவர். பகன்-ஸூர்யன். (18.5.1-2) பன்னிரு உபாஸகர்களில் ஒருவர். (16.4.2) ஸூர்யன் தேவியைப் பூர்ண திருப்தியடையும்படி வழிபடுகிறார். ஸூர்ய மண்டலத்தில் தேவி வழிபடப் பெறுகிறாள். (நா.275) அப்படி வழிபடும்போது சந்திரமண்டலத்தில் தியானிப்பதுபோல் சூர்ய மண்டலத்தை உற்று நோக்கி அதில் தேவி இருப்பதாகத் தியானிப்பது இயலாது. அங்கு சூர்ய மண்டலத்தை மனதில் பாவனை செய்து அதன் நடுவே தேவி வீற்றிருப்பதாகப் பாவனை செய்து பாவனையால் வழிபாடு செய்ய வேண்டும். இந்த வழிபாடு குலோத்தீர்ணாவான தேவியைத் திருப்தி செய்விக்கும். அப்படி ஸூர்ய மண்டலத்தில் வழிபடப் பெறுபவள் தேவி.

32-2. பகம் - யோநி. முக்கோண வடிவில் அமைந்த யந்திரத்தில் வழிபடப் பெறுபவள். தேவியை வழிபடுவதற்கான ஹோம முறையில் முக்கோண வடிவில் குண்டம் அமைப்பர். யோநி குண்டம் என இதற்குப் பெயர். அதில் வழிபடப் பெறுபவள். பகம் எனும் ஈசுவரத் தன்மையைப் பெறுவதற்காக வழிபடப் பெறுபவள். பகம் என 'ஏ' என்ற எழுத்தைக் குறிப்பர். (18.6.2) சக்தியம்சம் பெற்ற அந்த ஸ்ரீவித்யையின் இரண்டாவது மந்திராக்ஷரத்தால் வழிபடப் பெறுபவள். (715)

**33. மாயா. மாயை.**

33-1. விசித்திரமாகச் செயல் புரிபவள். எதிர்பாராத முடிவை ஏற்படுத்துபவள். பொருந்தாததைப் பொருந்த வைப்பவள். எது எப்படி இருக்கிறதோ அப்படி இல்லாததாகவும் தோன்றச் செய்பவள். மிகவும் பிரஸித்தமாக இருப்பதைக்கூடப் புலப்படாதவாறு செய்பவள். அளவிட முடியாத சக்தி படைத்தவள். பரம்பொருளின் சக்தி தான் மாயை. உலகைத் தோற்றுவிப்பதும், ஒடுக்குவதும், மறைப்பதும், அதற்கு நிமித்த காரணமாயும் உபாதான காரணமாயும் உள்ள பரம்பொருளை மறைத்து உலகாகக் காட்டி மறைப்பதும் அவளது விசித்திரப்பணி. (16.17.1-5, 17.8., 1-10, 18, 65, 1-3). மாயை மயக்குகிறது என்பர். உண்மையில் நமது அறியாமையால் மயங்குகிறோம். சூரியனுக்கு உதயமும் அஸ்தமனமும் கிடையாது. எப்போதும் ஒரேவிதமான பேரொளியுடன் சூரியன் விளங்குகிறார். இதனை நாம் நன்கு அறிவோம். அறியும் போதே உதிக்கும் ஸுர்யனாக அவரைக் காண்கிறோம். அது மாயை. கிளிஞ்சல்தான் வழியில் இருக்கும், வெள்ளி இதுக்காது என்றறிவோம். ஒருபுறம் பேராசை, மற்றொருபுறம் வெளிச்சக்குறைவு. கிளிஞ்சலை வெள்ளி என நினைத்தோம். ஏமாற்றியது கிளிஞ்சலா? அறிவையும் கொடுத்து, அதனைச் சோதிப்பதற்காக ஏமாற்றம் தரும் சூழ்நிலையையும் அமைத்து அதில் நிதானம் தவறாமல் இருக்கிறோமா என்பதைத் தேவி சோதிக்கிறாள். சொந்த விருப்புகளால் தடுமாறாமல் இருந்தால் கரையேற்றுகிறாள். அறிந்தும் அறியாதவனாக இருப்பவனுக்கு மாயையாயிருந்துப் பின் விளைவை அனுபவிக்க விடுகிறாள். ஹ்ரீம் எனும் மாயா பீஜவடிவிலும் புவனேச்வரி வித்யையாகவும் இருப்பவள். (18.27.1.) மாயா பீடத்தின் தேவதை. (716)

**34. மது - மதீ. தேனை முக்கிய வழிபாட்டுப் பொருளாகக் கொண்டவள்.**

34-1. மது - தேன், போதை தரும் மதுவினம். இரண்டையும் தனக்குப் பிரியமான நிவேதனப் பொருளாகக் கொண்டவள். உபநிடதங்களில் கூறப்படும் மதுமதீ வித்யையாகவும், யோக சாஸ்திரத்தில் யோகப்படிகளில் கூறப்படும் மதுமதீ பூமிகையாகவும் மதுமதீ எனும் நதியாகவும் இருப்பவள். (717)

**35. மஹீ. பூமி வடிவினள்.**

35-1. விரிந்த அளவற்ற பரப்புள்ளமையால் பூமியை மஹீ என்பர். பூமியாயிருப்பவள். பூமியைப் போல் பிருதுவீ தத்துவம் போல் மிகவும்

வெளிப்படையாகத் (ஸ்தூல தரம்) தெரிபவள். மஹீ எனும் நதி வடிவினள். மஹத் எனும் தத்துவ வடிவினள். (17.8.12). (718)

**36. கண - அம்பா. கணங்களுக்கும் கணபதிக்கும் தாய்.**

36-1. தேவர்கள், சித்தர்கள், ஸாத்தியர்கள், கிந்நரர்கள், கந்தர்வர்கள் என்றவாறு பல இனங்களாகத் தேவர்கள் பிரிந்து நிற்பவர்கள். அவர்களைக் கணங்கள் என அழைப்பர். (10.1.3) சிவனது பரிவாரங்கள் கணங்கள், பிரமத கணங்கள் எனப்படுவர். இவர்களுக்குத் தாய், இவர்களை விளங்க வைப்பவள். எல்லா கணங்களுக்கும் தலைவரான கணபதியைக் கணர் என அழைப்பர். அவருக்குத் தாய். கூட்டமாகச் செயல்படும் புலன்களுக்கும் அவள் தாய். கூட்டமாக வழிபடுபவர்களும் கூட்டு வழிபாட்டால் ஆராதிக்கத்தக்க தாய். (719)

**37. குஹ்யக - ஆராத்த்யா. குபேரனால் வழிபடத்தக்கவள்.**

37-1. குஹ்யகர் - குபேரன், பன்னிரு உபாஸகர்களில் ஒருவர். (16.40.2) இவரது பரிவாரங்களை குஹ்யகர்கள் என்பர். குபேரனாலும் குஹ்யகர் என்ற குபேர பரிவாரங்களாலும் வழிபடப் பெறுபவள், பிறர் அறியாத வண்ணம் ரகசியத்தில் செய்யப்பெறும் வழிபாடு. (21.1.1.2) அந்தர்யாகம் முதலிய சில மானசிக பாவனையால் நடைபெறும் வழிபாட்டு முறைகள், இவைகளால் ஆராதிக்கத்தக்கவள். தாம் தேவியை வழிபடுபவராகப் பிறர் அறிந்துகொள்ளாதபடி, ஜடர்களாகவும், பித்தர்களாகவும் காணப்படும் யோகிகள் வழிபடும் தெய்வம். (720)

**38. கோமல - அங்கீ. மென்மையான அவயவங்களை உடையவள். (721)**

**39. குருப்பிரியா. குருவிடம் பிரியமுள்ளவள்.**

39-1. குரு- தேவர்களுக்குக் குருவான பிருஹஸ்பதி. அவரது மனைவியான தாரா தேவியாயிருப்பவள்; குருவிற்குப் பிரியமான ஸ்ரீவித்யையாயிருப்பவள். குருவின் ஆராதனையை ஏற்று அவரிடம் பிரியமாயிருப்பவள். உலகிற்கெல்லாம் ஆதி குருவாக, எல்லா வித்யைகளுக்கும் ஈசனாக உள்ள பரமசிவனிடம் பிரியமாக உள்ள மனைவி, பரமசிவனைப் பிரியனாகக் கொண்டவள். நமக்கு மந்திரத்தை உபதேசித்த ஆசாரியனுக்குப் பிரியமானவள். ஆசாரியனிடம் பிரியமுள்ளவள். ஆசாரியனது மனைவியாயிருப்பவள். குருவை மதிப்பதுபோல் குருவைச் சார்ந்தவர்களையும் வணங்கி மதிப்பது அவசியம். (722)

(நா. 723 - 727)

**स्वतन्त्रा सर्वतन्त्रेशी दक्षिणामूर्तिरूपिणी ॥**
**सनकादिसमाराध्या शिवज्ञानप्रदायिनी ॥ 140 ॥**

**ஸ்வதந்த்ரா ஸர்வதந்த்ரேசீ தக்ஷிணாமூர்த்திரூபிணீ.**
**ஸநகாதிஸமாராத்த்யா சிவஜ்ஞானப்ரதாயிநீ. 140**

### 40. ஸ்வ - தந்த்ரா. தன் விருப்பப்படி செயலாற்றுபவள்.

40-1. எதனையும் தன் விருப்பப்படி நிறைவேற்றுபவள். நமக்கு ஒரு செயல் நிறைவேற அதற்குரிய சாதனங்கள், தேசம், காலம் முதலிய பலவற்றின் உதவி தேவை. அவற்றின் உதவி இல்லாமல் தேவியின் ஸங்கல்பமே செயலாற்றும். அதனால் ஸ்வதந்த்ரா.

40-2. கணபதி முதலான மற்ற தேவதைகளை அததன் விக்கிரகம் அல்லது யந்திரத்தில் வழிபடத் தொடங்குகையில், அவற்றில் அந்தந்தப் பிராண சக்தியைப் பிரதிஷ்டை செய்த பின்னரே ஆவாஹனம் ஆஸனம் பாத்யம் முதலிய உபசார முறைகளைச் செய்ய வேண்டும். விக்கிரகம் அல்லது யந்திரத்தினுள் அந்த தேவதை தன் பிராண சக்தி நுழைந்த பின்னரே பூஜையை ஏற்கும் என்பது மரபு. தேவியே அந்தப் பிராண சக்தியாவாள். அதனால் தேவியின் உதவியின்றி மற்ற தேவதைகளின் வழிபாடு நிறைவுறாதபடியால் அவர்கள் பிற உதவியை நாடுபவர் - பரதந்திரர்கள். தேவியின் வழிபாட்டில் அவளே பிராண சக்தியாகவும் பின்னர் வழிபாட்டை ஏற்பவளாகவுமாவதால் ஸ்வதந்திரா. பிறர் உதவியை நாடாதவள், தன்னுடையவரைத் (ஸ்வ) சிவபெருமானது விருப்பப்படி நடப்பவள். தன்னுடையவரைத் தன்னிஷ்டப்படி ஆட்டிவைப்பளும் கூட.

40-3. தனக்கெனத் தனித்த வழிபாட்டு முறை கொண்டவள். அவ்வழிபாட்டு முறைகளைக் கூறும் தந்திரம் ஸ்வந்திரம் எனப்படும். 64 தந்திரங்களால் தெய்வ வழிபாட்டை வெளியிட்ட பரமசிவன் தேவியின் விருப்பத்தை ஒட்டி மோக்ஷம் ஈறான எல்லா புருஷார்த்தங்களையும் தந்தருளும் வழிபாடுகளைக் கொண்ட ஸ்வதந்திரத்தை இயற்றினார். (ஸௌந்தர்ய லஹரீ சு.31) (723)

### 41. ஸர்வ - தந்த்ர - ஈசி. எல்லா தந்திரங்களுக்கும் ஈசுவரீ.

41.1. உலகில் நடத்தும் எல்லாச் செயல்களையும் நடத்தி வைப்பவள் தேவி. அச்செயல்களுக்கான வழிமுறை (தந்த்ரம்) யாக இருப்பவளும்

அவளே. வழிபாட்டு முறைகளை விளக்க வந்த தந்திர நூல்களால் விளக்கப்படுபவளும் அவளே. (724)

### 42. தக்ஷிணா - மூர்த்தி - ரூபிணீ. தக்ஷிணாமூர்த்தி வடிவினள்.

42-1. தெற்கு நோக்கியிருக்கும் சிவனது உருவம் தக்ஷிணாமூர்த்தி. மிக எளிய முறையில் அரிய கருத்தை உபதேசிக்கத் திறமையுடைய (தக்ஷிணா – சாமர்த்தியமுள்ள) உருவம் அது. தெற்கு அழிவைக் குறிக்கும். வடக்கு அழியாத அமிருத வாழ்வைக் குறிக்கும். அடியார்களைத் தம்மை நோக்கச் செய்து அமரத் தன்மையை அடையச் செய்யும் வடிவம் அது. ஆசாரியர்களுக்கு எல்லாம் ஆசாரியர். போதிக்கவேண்டிய பொருளுக்கேற்ப போதனை முறை அமையும். மனத்திற்கும் வாக்கிற்கும் எட்டாத பரம்பொருளை மனத்திற்குக் கட்டுப்பட்ட வாக்கால் காட்ட முடியாது. அனுபூதி வடிவில் உள்ளதற்கு சொல்லால் விளக்கம் தர முடியாது. அதனால் எவ்விதச் செயலுமற்ற மௌனத்தைக் கடைபிடித்து ஆனந்தத்தை அனுபூதியாகத் தம் உணர்வால் வெளிப்படுத்திச் சலனமற்றுத் தம்மிடம் கரைந்துள்ள சீடர்களின் உள்ளத்தில் அந்த ஆனந்தத்தை முழுவதும் பரவச் செய்து பிரும்ம நிலையை உணர்த்தும் பரம்பொருளின் வடிவம் அது. அறியச் சக்தி பெற்றவர் மட்டும் அறியுமாறு போதித்த உருவமது. அதனைத் தன் வடிவமாகக் கொண்டவள்.

42-2. சிவனும் தேவியும் மூன்று விதமாக காட்சி அளிக்கிறார்கள். (1) சிவனும் தேவியும் தனித்தனி உருவில், (2) இருவரும் ஓருடலில் இரு பகுதிகளாக அர்த்தநாரீசுவரராக, (3) ஒருவரில் மற்றவர் அடங்கி யிருப்பவராக. தேவியிடத்தில் சிவன் அடங்கியிருக்கும் வடிவம் காமாக்ஷி. சிவனிடத்தில் தேவி அடங்கிய வடிவம் தக்ஷிணாமூர்த்தி. சக்தியை வெளிப்படுத்தாத வெளித்தோற்றத்தில் சலனமற்ற சிவ வடிவம். ஞானஸ்வரூபிணியான தேவி உள் நிரம்பியுள்ளதைக் காட்டும் ஸச்சிதானந்த வடிவம். பேரானந்தத்தை வெளிப்படுத்தாமல் உள்ளடக்கிக் கொள்ளத் திறமை மிகத் தேவை. அந்தத் திறமை மிக்க தக்ஷிணாமூர்த்தி குருவின் வடிவில்தான் உள் அடங்கிச் சிவனாகத் தோன்றுபவள். (725)

### 43. ஸநக - ஆதி - ஸமாராத்யா. ஸநகர் முதலானவர்களால் ஆராதிக்கத்தக்கவள்.

43-1. ஸநகர், ஸநந்தநர், ஸநாதநர், ஸநத்குமாரர் என்ற நால்வர், தக்ஷிணாமூர்த்தி வடிவிலிருந்த தேவியிடம் உபதேசம் பெற்றவர்கள்.

அவர்களால் குருவாக தக்ஷிணாமூர்த்தியாக வழிபடப் பெற்றவள். தேவி வழிபாட்டிற்கான ஸமய மார்க்கத்தை விளக்கும் சுபாகமங்கள் எனப்படும் ஐந்து ஆகமங்களை வெளியிட்டவர்கள் ஸநகர், ஸநந்தனர், ஸநத்குமாரர், சுகர், வஸிஷ்டர் என்ற ஐவர். அந்த ஸமய முறை வழிபாட்டினால் ஆராதிக்கத்தக்கவள். (726)

**44. சிவ - ஜ்ஞான - ப்ரதாயிநீ. மங்களமான பேரறிவைத் தருபவள்.**

44-1. சிவம் - மங்களமான பிரும்மம். "பிரும்ஹ தந் மங்களம் விது:" அதனைப் பற்றிய அறிவு பிரும்மமாகிய அறிவே. அந்நிலையில் அந்தப் பேரறிவிற்கும் பிரும்மத்திற்கும் வேற்றுமை கிடையாது. சிவத்தின் ஞானமே சித் - ஆனந்தவடிவான - சிவமான ஞானமாகியது. அதனைத் தருபவள் தேவி.

44-2. தேவியைப் பற்றிய தந்திரங்களை இயற்றியவர் சிவபெருமான். அதனால் சிவனை ஞானமளிப்பவனாகக் கொண்டவள். சிவனைப் பற்றிய ஞானத்தைத் தருபவள் குரு வடிவில் அமர்ந்துள்ள தேவி. இப்படி ஒருவர்க்கொருவர் தம்மைப் பற்றி விளக்காவிடில் அவர்களை அறிய முடியாது. (சிவ: ஜ்ஞானப்ரதாயிநீ, யஸ்யா மந்த்ராணாம், சிவஸ்ய ப்ரம்ஹண: ஜ்ஞானப்ரதாயிநீ) (727)

(நா. 728 - 734)

चित्कलाऽऽनन्दकलिका प्रेमरूपा प्रियङ्करी ।
नामपारायणप्रीता नन्दिविद्या नटेश्वरी ॥ 141 ॥

**சித்கலா(ஆ)நந்தகலிகா ப்ரேமரூபா ப்ரியங்கரீ.**
**நாமபாராயணப்ரீதா நந்திவித்யா நடேச்வரீ. 141**

**45. சித் - கலா. சித்தின் கலையாகத் தோன்றுபவள்.**

45-1. பிரும்மத்தை உருவகப்படுத்த முடியாது. அதன் நிலையை அடையாளம் காட்ட உதவுபவை மூன்று. ஸத் - (முக்காலும் நிலைத்திருப்பது) சித் - (பேரறிவாயிருப்பது) ஆனந்தம் - (பேரானந்தமாயிருப்பது) என. மூன்றும் தனித்ததல்ல. ஒன்றிலிருந்து மற்றொன்றைப் பிரிக்க முடியாது. பூர்ணமான பிரும்மத்தின் பூர்ணத் தன்மையை மூன்றுமே விளக்கும். அதனால் மூன்றும் பூர்ணமே. ஆனாலும் மூன்றும் தனித்தனி அம்சங்களாக அறியப்படும் நிலையில் மூன்றும் பிரும்மத்தின் அம்சங்களாகின்றன. அத்தகைய விளக்கத்திற்கு உட்பட்டு, சித் எனும்

பிரும்மத்தின் அம்சமாகக் கலையாக இருப்பவள் தேவி (நா. 362, 364, 416, 417, 574, 700)

45-2. சித் - சைதன்ய சக்தி. அந்த பிரும்மத்தின் சைதன்ய சக்தி நமது அந்தஃகரணத்தினுள் நமது சைதன்யமாகக் கலையாக விளங்குகிறது. குடத்தினுள் காணும் ஆகாயம் குடத்தின் ஆகாயம் எனப்படுவதுபோல் ஜீவனின் அந்தஃகரணத்தினுள் பிரதிபலிக்கும் பிரும்ம சைதன்யம் அந்த ஜீவனின் சைதன்யமாகிறது. அப்படி ஜீவனிடம் துலங்கும் சைதன்ய சக்தியாக விளங்குபவள். அஜ்ஞானமாகிற ஆவரணத்தால் மறைந்துள்ளதால் சைதன்ய சக்தி பூர்ணமாயிருந்தாலும் அதன் ஒரு அம்சம் - கலை மட்டும் அறியப்படுகிறது. நமது சிற்றறிவுகள் அனைத்தும் உணர மூலகாரணமாக இருக்கும் பேரறிவின் கலை அது. (728)

### 46. ஆநந்த - கலிகா. ஆனந்த கலையாக இருப்பவள்.

46-1. அழகிய மிகச் சிறிய கலை - கலிகா. விரிந்து மணத்தைத் தராமல் தன்னுள் மணம், அழகு முதலியவற்றை அடக்கிக் கொண்டிருக்கும் பூவின் மொட்டைக் கலிகா என்பர். மிகச் சிறிய அளவில் அதில் பூவின் தன்மை வெளிப்படுகிறது. ஆனந்தம் எனும் பரம்பொருளின் அம்சமாக - கலையாக இருப்பவள். ஜீவனிடத்தில் அறியப்பெறாமல் மொட்டுபோல் விரிவை - விரிவிற்குரிய தருணத்தை எதிர்பார்த்து நிற்கும் ஆனந்த கலிகையாய இருப்பவள். சித் எனும் கலையைவிட ஆனந்தத்தின் கலை மிகச் சூட்சமமாக வெளிப்படுவதை இந்தக் கலிகா என்ற சொல் விளக்குகிறது. அந்த பிரும்மானந்தத்தின் மிகச் சூட்சுமமான அம்சத்தையே நாம் உணர்கிறோம். அதுவும் தேவியின் வடிவமே. (729)

### 47. ப்ரேம - ரூபா. அன்பின் வடிவானவள்.

47-1. மொட்டான ஆனந்தம் விரிவடையும்போது எடுக்கும் பல தோற்றங்களில் ஒன்று அன்பு. ஒரு கைமாற்றை எதிர்பார்க்கும் அன்பு உண்மையான அன்பு அல்ல. நம் அன்பிற்கு இடமான பொருளின் நலனே, தன் நலன். அதன் துக்கமே தன் துக்கம். அதனை விட்டுத் தனக்குத் தனி இருப்பு இல்லை என்ற அளவிற்கு அன்புக்குரிய பொருளாகவே ஆகிவிடுவது பேரன்பு. அதன் வடிவில் காணப்படுபவள் தேவி. அன்பு, வைக்கப்படும் இடத்திற்கேற்பப் பெயர் மாறுபடும். பெரியோர்களிடத்தில் அன்பு பக்தியாகும். சம நிலையிலுள்ளவர்களிடத்தில் நட்பாகும். சிறியவர்களிடத்தில் வாத்ஸல்யமாகும். அன்பால் எனப்மு என்ன

லாபம் என்ற கேள்விக்கு இவைகளில் இடமில்லை. அந்த அன்புதான் தேவி. அன்பை வளர்த்துத் தேவி அதனுள் அகப்பட்டுவிடுவாள்.

47-2. ஸித்திகளில் மிகச் சிறந்தது அஹிம்ஸை - எதனையும் எவ்வகையிலும் எப்போதும் துன்புறுத்தாமலிருப்பது. இதற்கு மற்றொரு உருவம் பூதஸௌஹ்ருதம். உலகில் தோன்றியவை அனைத்திடமும் நல்லெண்ணத்துடன் இருப்பது. யாரிடத்தில் நல்லெண்ணம் என்ற பாகுபாட்டிற்கு இடம் இல்லாமல் பூத - உலகில் தோன்றியதனைத்திடமும் ஸௌஹ்ருதம் - நல்ல இதயத்துடனிருப்பது. அஹிம்ஸை ஸித்தியானால் நமக்கும் எதனிடமும் த்வேஷம் இருக்காது. நம்மையும் எதுவும் வெறுப்புடன் அணுகாது. நம்மிடமுள்ள அன்பின் அலை நமது சூழ்நிலையை அன்புமயமாக்கிவிடும். புலிக்கு ஆட்டைத் தின்னும் குரூர மனப்பான்மையும் ஆட்டிற்குப் புலியிடம் தன்னைத் தின்றுவிடுமே என்ற பயமுமின்றி இரண்டும் ஒரு ஆற்றுத் துறையில் நீர் பருகும் விந்தை இந்த அன்பின் விளைவே. அந்த அன்பாயிருப்பவள் தேவி. (730)

## 48. ப்ரியம் - கரீ. விருப்பத்தை நிறைவேற்றுபவள்.

48-1. அன்பின் வசப்பட்ட தேவி அடியார்களின் விருப்பத்தை நிறைவேற்றுகிறாள். இதுகாறும் வெறுக்கப்பட்டதைக் கூடப் பிரியமாக்கித் தருகிறாள். (அப்ரியம் ப்ரியம் கரோதி) நாம் ஏற்கும் வரை பிரியத்தைக் கையில் ஏந்தி நிற்கும் சிவனின் சக்தி அவள். (ப்ரியம் கரே யஸ்ய தஸ்ய இயம்) தேவி நம் மனத்தினுட் புகுந்து சிரத்தை வடிவில் நின்று நல்லவற்றைச் செய்ததால் புண்ணியத்தைச் சேமித்துப் புண்ணியத்தின் விளைவாகப் பிரியமான சுகத்தை ஏற்படுத்துகிறாள். ப்ரேயஸ், (பிரியம்) சிரேயஸ் என இரண்டு. நாம் வேண்டிப்பெறும் இம்மைச்சுகம், ப்ரேயஸ், அதில் நமக்குப் பிரியம். நமது 'சிரேயஸ்' ஆகிய விடுதலையில் அவளுக்குப் பிரியம். நமது பிரியத்தையும் அவளது பிரியத்தையும் நிறைவேற்றுபவள் தேவி. இம்மையிலும் சுகம் தந்துப் பிறவியையும் நீக்கிப் பேரானந்தம் தருகிறாள். (731)

## 49. நாம - பாராயண - ப்ரீதா. நாம பாராயணத்தால் மகிழ்பவள்.

49-1. தேவியே தனிப் பெருங் கருணையால் தனது கோடிக்கணக்கான நாமங்களிலிருந்தும் சக்தி மிக்க ஆயிரம் நாமங்களை வாக்தேவிகளைக்கொண்டு தொகுத்துத் தனக்கு முன் அரங்கேற்றச் செய்தாள். ஸ்ரீ சக்ர பூஜை, ஸ்ரீ வித்யா ஜபம் செய்யாதவரும்கூட ஸஹஸ்ரநாம பாராயணம் செய்வதாலேயே தனது திருப்தியைப் பெற

முடியும் என்ற கூறியபடி (2.13) தேவி இந்த ஆயிரம் நாமங்களைப் பாராயணம் செய்வதால் திருப்தி அடைகிறாள்.

49-2. தேவி வழிபாட்டில் ஆறு வகைப் பாராயணங்கள் முக்கியமாக இடம் பெறுபவை. நாத பாராயணம், கடிகா பாராயணம், தத்துவ பாராயணம், நித்தியா பாராயணம், நாம பாராயணம், மந்த்ர பாராயணம் என. இதில் கூறப்படும் நாம பாராயணம், ஸஹஸ்ரநாம பாராயணத்திலிருந்தும் வேறுபட்டது. இதன் முறையை 'ஆஈ பல்லவிதை:' என்று தொடங்கும் லகுஸ்துதியின் 19வது சுலோகம் சுருக்கமாகக் கூறுகிறது. இதனைப் பற்றிய விவரம் ஸ்ரீவித்யா நித்யாந்ஹிகம் முதலிய நூல்களில் கூறப்பட்டுள்ளது. அந்த நாம பாராயணத்தால் மிகவும் திருப்தி அடைபவள் தேவி. பாராயணம் என்பது (2.9.1) அதுவே சிறந்த வழி என்ற சிரத்தையுடன் நாமத்தைச் சொல்வது. அந்த நம்பிக்கையில் தேவி திருப்திப்படுகிறாள். (732)

**50. நந்தி - வித்யா. நந்தி தேவரால் உபாசிக்கப்பெற்ற மந்திர வடிவினள்.**

50-1. தேவி உபாஸகர்களில் முக்கியமானவர் நந்தீ. (16.40.2) அவரால் உபாஸிக்கப்பெற்ற மந்திரவடிவினள். (733)

**51. நட - ஈச்வரீ. நடேசனைச் சேர்ந்தவள்.**

51-1. சித்தெனும் பரவெளியில் நர்த்தனம் புரியும் ஈசுவரி. சிதம்பரத்தில் நடராஜப்பெருமானுடன் கூட ஆடும் சிவகாம ஸுந்தரி.(734)

(நா. 735 - 741)

मिथ्याजगदधिष्ठाना मुक्तिदा मुक्तिरूपिणी ।
लास्यप्रिया लयकरी लज्जा रंभादिवन्दिता ॥ 142 ॥

**மித்த்யாஜகததிஷ்ட்டான முக்திதா முக்திரூபிணீ.**
**லாஸ்யப்ரியா லயகரீ லஜ்ஜா ரம்பாதிவந்திதா. 142**

**52. மித்த்யா - ஜகத் - அதிஷ்ட்டாநா. தனித்த பொருளாகத் தோன்றுமளவில் மெய்யாகவும் பகுத்தறியும்போது தனித்த இருப்பில்லாததால் மெய்யல்லாததாகவும் உள்ள உலகிற்கு ஆதாரமாயிருப்பவள்.**

52-1. உலகிற்கு ஆதாரமாயிருப்பவள் தேவி. அவளையே உபாதான காரணமாகவும், நிமித்த காரணமாகவும் கொண்டு உலகம் தோன்றிற்று. (17.8) உலகமாகத் தோன்றுவது தேவியே. உலகமாக அவளைக் காணும்போது அதன் ஆதாரமாகவும் காரணமாகவுமுள்ள தேவியைக் காண்பதில்லை. அந்நிலையில் உலகம் மெய்ப்பொருளே. உலகம் எதிலிருந்து தோன்றியது என்று அதன் ஆதாரத்தைக் கண்டுகொள்ளும் போது, முன்பு தனித்துத் தெரிந்த உலகம் மறைந்து ஆதாரமான தேவியை மட்டும் காண்கிறோம். அந்நிலையில் உலகம் தனித்தில்லை. ஒரு நிலையில் மெய்யாக இருந்து மற்றோர் நிலையில் இல்லாதது மித்தியை. உலகம் எப்போதும் இல்லாத அஸத் பொருளும் அல்ல. எப்போதும் உள்ள 'ஸத்' பொருளுமல்ல. 'ஸத்' தா 'அஸத்' தா என நிர்ணயித்துக் கூற முடியாது. (அநிர்வசநீயம்) அதனால் 'மித்யா' வாகிறது.

52-2. பானை என்பது பெயராலும் வடிவாலும் தனித்த பொருளாக உணரப்பட்டது. பானையின் தோற்றத்திற்குக் காரணமான மண்ணாக அதனை அறிந்தபோது பெயரும் வடிவமும் பொய்யென ஆகிறது. மோதிரம் என்பது பெயராலும் வடிவாலும் தனித்துப் பொருளாகிறது. தங்கமெனக் கண்டபோது அதன் மோதிரத்தன்மை மறைகிறது. மண் என்பதும் தங்கமென்பதும் எக்காலத்திலும் உண்மை நிலை. பானை என்பதும் மோதிரம் என்பதும் ஒரு நிலையில் மெய்போலும் காரண நிலையைக் கண்டதும் பொய்போலும் காண்பதால் மித்தியை. சிப்பியை வெள்ளியெனக் கண்டான் ஒருவன். வெள்ளி எனும் தோற்றத்திற்கு அதிஷ்டானம் சிப்பி. சிப்பியின் மேல் வெள்ளி தோன்றிற்று. தோற்றத்தில் வெள்ளியைக் கண்டபோது வெள்ளி மெய்யே. ஆனால் அதன் ஆதாரமான சிப்பியைக் காணும் வரையில் தான் அது மெய். சிப்பியைக் கண்டதும் வெள்ளி மறைந்தது. முன்னர் கண்ட வெள்ளிதான் தற்போது சிப்பியாக உள்ளது. சிப்பி எப்போதும் உள்ளது. வெள்ளி என்ற தோற்றம் நடுவில் வந்தது. நடுவில் மறைந்தது. முக்காலும் ஸத்தியமாயுள்ள தேவியிடம் உலகம் நடுவில் தோன்றி நடுவில் மறைந்தது. உலகமாகத் தோன்றுமளவிலும் தேவி ஸத்தியம், தேவியாகக் கண்டபோதும் தேவி ஸத்தியம். மித்தியையான உலகின் ஸத்தியமான அதிஷ்டானமாயுள்ளவள் தேவி.

52-3. அதிஷ்டானமாகத் தேவியைக் கண்டபோதும் அவளிடம் தோன்றும் உலகமும் உண்மையானதெனக் கொள்வதிலும் தவறில்லை. உலகம் தேவியைக் காட்டிலும் வேறுபட்டது என்று இதுகாறும் ஏற்பட்டிருந்த பேத உணர்வுதான் மித்தியை. அதிஷ்டானமாகத் தேவியையும் அவளது பரிணாமமான உலகையும் காணும்போது அந்த பேத உணர்வு

நீங்கிவிடுகிறது. மோதிரத்தைத் தங்கமெனக் கண்டபோது தங்கம் வேறு மோதிரம் வேறு என்ற பேத உணர்வகன்று தங்கமாகிற மோதிரம் என்று அறிகிறோம். உலகத்திற்கு அதிஷ்டானம் எனும்போது உலகம் வேறு, அதற்கு ஆதாரமான தேவி வேறு என்ற 'மித்யா' ஜ்ஞானத்தால் உலகத்திற்கு ஆதாரமாகத் தனித்திருப்பதாக அறியப்பட்ட தேவியே உலகாகவுமுள்ளாள். (தந்திர சாஸ்திரம்) (735)

### 53. முக்தி - தா. விடுதலையை அளிப்பவள்.

53-1. அறியாமையால் மூன்று தேகங்களுடன் ஏற்பட்ட தொடர்பைத் தன் சுயநிலை என்று கொண்டிருந்த ஜீவன், உண்மையான தன் நிலையை அறிந்ததும் தேகத்தொடர்பு நீங்கி விடுதலை பெறுகிறான். இந்த விடுதலை முக்தி (மோக்ஷம்) யாகும். விடுதலை அடையுமுன்னும் அவன் முக்தனே. ஆனால் தன்னைப் பந்தத்திற்கு உட்பட்டவனாகக் கண்டான். தற்போது விடுபட்டவனாகக் காண்கிறான். புதிதாக எந்த நிலையையும் அவன் அடையவில்லை. அப்படி அறியாமையால் ஏற்பட்ட பந்தத்திலிருந்தும் ஞானத்தால் விடுதலை அளிப்பவள் தேவி. (நா.625, 839, 926) (736)

### 54. முக்திரூபிணீ. முக்தியாகவிருப்பவள்.

54-1. முக்தி என்பது தனிப்பட்ட புதிய நிலை அல்ல. தன் சுய உருவமே. அந்தச் சுய உருவமான ஆத்மாவாக இருப்பவளும் அவளே. (நா. 625, 839, 926) (737)

### 55. லாஸ்ய - ப்ரியா. லாஸ்ய நர்த்தனத்தில் விருப்பமுள்ளவள்.

55-1. பெண்கள் ஆடுவது லாஸ்யம். ஆண்கள் ஆடுவது தாண்டவம். முறைப்படி பல்வேறு மனோபாவங்களை அங்க அமைப்பால் ரஸிகர்களுக்கு உணர்த்தி ஆடுவது லாஸ்யம். அதில் ஈடுபாடும் விருப்பமும் கொண்டவள் தேவி. (நா. 232) (738)

### 56. லய - கரீ. லயத்தை ஏற்படுத்துபவள்.

56-1. வேறுபட்ட உணர்ச்சி உள்ளவனையும் நடனத்தால் தன்பால் ஈர்த்துத் தான் நர்த்தனத்தால் உணர்த்தும் மனோபாவங்களையே கொள்ளும்படி செய்வது லயம். ஆட்டத்திற்கும் பாட்டுக்கும் ஏற்றபடி தாளம் போடுவது லயம். ஒன்றில் மற்றொன்று மறைவது லயம். முக்தி எனும் நிலையில் இதுகாறும் மனத்தாலும் புத்தியாலும் தான் தனிப்பட்டவன் என்று கொண்ட உணர்வகன்று மனமும் புத்தியும் ஆத்மாவிடம் கரைவது லயம்.

இந்த லயங்களை ஏற்படுத்துபவள் தேவி. அபிநயமும் தாளமும் மனோலயத்திற்காக ஏற்பட்டவையே. ஈசுவரியின்பால் மனம் லயமடைய பரதர் எனும் முனிவர் கீதத்தையும் நர்த்தனத்தையும் தனிக் கலையாக ஸாதனமாகக் கண்டார். அதையே முக்தி ஸாதனமாகக் கொண்டார். அதனால் 'முக்திதா' வான தேவி 'லாஸ்யப்ரியா' - 'லயகரீ' ஆக ஆனாள். (739)

**57. லஜ்ஜா. லஜ்ஜை வடிவினாள்.**

57-1. கெட்ட செயலிலிருந்தும் தடுத்தாட்கொள்வது நாணம். குலப்பிறப்பு, கல்வி, சூழ்நிலை முதலியவற்றால் நாணம் ஏற்பட்டுக் கெட்ட செயலிலிருந்தும் விடுபடுகிறோம். அந்த நாணத்தின் வடிவில் இருப்பவள் தேவி. (18.28.1) ஹ்ரீம் என்ற பீஜாக்ஷரத்திற்கு ஹ்ருல்லேகா, மாயா, லஜ்ஜா என்று பல பெயர்கள் உண்டு. அந்த பீஜாக்ஷர வடிவினள். (740)

**58. ரம்பா - ஆதி- வந்திதா. ரம்பை முதலானோரால் வணங்கப்பட்டவள்.**

58-1. ரம்பை, ஊர்வசி முதலான தேவ மாதர்களால் தமது பணிகள் நிறைவேறுவதற்காக வணங்கப்பட்டவள். (741)

* * *

**அதிகாரம் - 27**

# தேவி அருளும் வகை

(நா. 742 - 745)

भवदावसुधावृष्टिः पापारण्यदवानला ।

दौर्भाग्यतूलवातूला जराध्वान्तरविप्रभा ॥ 143 ॥

**பவதாவஸுதாவ்ருஷ்டி: பாபாரண்யதவாநலா.**

**தௌர்ப்பக்யதூலவாதூலா ஜராத்த்வாந்தரவிப்ரபா.143**

**1. பவ - தாவ - ஸுதா - வ்ருஷ்டி :. ஸம்ஸாரம் எனும் காட்டுத் தீயை அணைக்கும் அமிருத மழையாக இருப்பவள்.**

1-1. பவம் - பிறப்பு. ஸம்ஸாரம், பிறப்பு, இறப்பு என்று தொடரும் சங்கிலி போன்ற ஸம்ஸாரத்தில் பிறப்பு தொடங்குமிடமாகிறது. இந்த

ஸம்ஸாரம் பிறப்பு மூலம் அறிமுகமானது. மரணம் இனி வரும். முன் வந்த மரணம் மறந்து விட்டது. ஸம்ஸாரத்தைப் பவம் – பிறவி என்பர். (மரணம் என்ற கூறுவதில்லை) (நா. 114, 174, 843) பவம் காட்டுத் தீ போல் சூழ்ந்துவிட்டது. அந்தத் தீ எப்படி ஏற்பட்டது? வாழ்விற்குக் காரணமானதே அழிவிற்குக் காரணமானது. இரு பசும் மூங்கில்கள் சிறு காற்றால் ஒன்றோடு ஒன்று உரசின. பசுமரத்தில் நெருப்புக் கிளம்பாது. ஆனால் உரசலில் நெருப்புத் தோன்றியது, பரவியது. அதனை அணைக்கத் தனி மனிதனின் முயற்சி பயன்படவில்லை. அத்தனை வேகத்துடன் எளிதில் காடு முழுவதும் பரவிவிட்டது. வானிலிருந்து கடும் மழை பெய்ததால் அதனை அணைக்கலாம். எரிவதை அணைத்தால் கரியோ சாம்பலோ கிடைக்கும். அதுவும் பயனற்றது. காட்டுத் தீயை வராமல் தடுக்க முடியாது. இரு மரங்களைக் காற்றில் ஆடாமல் தடுக்க முடியாது. தீயாகப் பரவிய பின்னரும் அடக்க முடியாது. பவம் எனும் காட்டுத் தீயும் அத்தகையதே. தடுக்கவும் அடக்கவும் முடியாத அந்தத் தீ சூழ்ந்தெரிக்கும்போது தேவி இதய வானில் மழைபோலத் தோன்றித் தீயை அணைத்தாள். அந்த மழை கருணை எனும் அமுத நீரைப் பெய்தது. கருகிவிடாமல், சாம்பலாகிப் பயனற்றுவிடாமல் அது காப்பாற்றியது. நெருப்பால் சூழப்பட்டவனைச் சிறிது கூட வாடாமல் அகற்றி மேலும் தழைத்து வளர்பனாக அமரனாக ஆக்கியது. தேவியின் கருணை மழை செய்த உதவி இது. தேவி இப்பிறவியைப் பயனுள்ளதாக மாற்றிவிடுகிறாள். அதனால் பின்வரும் பிறப்புத் தொடர்களுக்கு ஆட்படாமல் இருக்கச் செய்கிறாள். பிறந்தால் இறக்கவேண்டும். இப்பிறப்பு பயனுள்ளதாக இருந்தால் மரணத்திற்குப்பின் பிறவி கிடைப்பதானாலும் மேம்பட்டதாக, மேம்பட்ட ஆத்ம சாதனைக்கேற்றதாக அது அமையும் . ஆத்ம சாதனையால் அமர நிலை அடையலாம். (742)

### உ. பாப - அரண்ய - தவாநலா. பாபமென்னும் காட்டை அழிக்கும் காட்டுத் தீயாக இருப்பவள்.

2-1. ஏன் பிறந்தேன் என வருந்த நேரிடுகிறது. வாழ்வின் துன்பம் அப்படி வருந்தச் செய்கிறது. முன்வினை கெட்டதாக இருப்பதால் இந்த வாழ்வில் துன்பம் ஏற்பட்டது. முன்வினை எத்தனை உள்ளது? அதனைக் கடக்க முடியுமா? கடக்கும் வழி எது என்று அறிய முடியாதவாறு அது காடுபோல் அடர்ந்து பயங்கரமாக உள்ளது. முன்வினை கெட்டதென்பதை வினைப்பயனை அனுபவிக்கும்போதுதான் உணர்கிறோம். காட்டை நெருங்கும் போது மரங்கள் அடர்ந்த குளிர்ச்சியான இடம் என்ற எண்ணத்தில் வேகமாக காட்டினுள் புகுந்து நடுக் காட்டை அடைந்தவன் வழி

தடுமாறித் திரும்பிச் செல்லவோ, காட்டைக் கடக்கவோ அறியாதவாறு திக்குமுக்காடும்போதுதான் காட்டிற்குள் அறியாமையால் நுழைந்துவிட்டோம் எனப் புரிந்துகொள்வான். அதுபோல் கொடும் துன்பத்தில் மாட்டிக்கொண்ட பின்னரே முன் வினைப்பயன் என அறிய முடிகிறது. அந்நிலையில் மீட்சி நம் வசப்பட்டதல்ல. திடீரெனக் காட்டுத்தீ பரவியது. காட்டை அழித்தது. மரங்கள் வேருடன் பொசுக்கப்பட்டதால் காடு மறைந்தது. காட்டில் மறைந்து துன்புறுத்தக் காத்திருந்த விலங்குகள் அழிந்தன. வழி தெரிகிறது; வெளியேறுகிறோம். பாபமென்பது சிறு சிறு வினைகள். அது மரமாக வளர்ந்து காடாக மாறியது. ஒவ்வொரு வினையையும் தேவியின் கருணை எனும் காட்டுத்தீ அழித்தது. வினையை அழித்த தீ நம்மை மட்டும் காத்தது. துன்பத்திற்குக் காரணமாயிருந்த வினைக்காடு அழிந்தது. வினையிலிருந்து விடுபட்ட நம்முன் க்ஷேமப்பாதை தெரிகிறது. வினை அழிந்ததால் பிறப்பிருக்காது. தேவியின் கருணை புரியும் மற்றோர் உதவி இது. (743)

### 3. தௌர்ப்பாக்கிய - தூல - வாதூலா. துர்ப்பாக்கியமாகிய இலவம்பஞ்சைப் பறக்கச் செய்து சிதறச் செய்யும் சுழற் காற்றாக இருப்பவள்.

3-1. இந்தப் பிறவிக்குக் காரணமாயிருந்த வினைப்பொதியிலிருந்து ஒவ்வொரு வினையாக வெளியாகி ஒன்றைத் தொடர்ந்து மற்றொன்றாக வாட்டி வருகிறது. அனுபவிப்பது (பாக்யம்) அனைத்தும் துன்பம் தருவதால் செய்த வினை அனைத்தும் கெட்டதெனத் தெரிகிறது. அதன் விளைவே இந்த தௌர்பாக்கியப்பொதி. அது பஞ்சுப்பொதி போல் எதிரில் காண்கிறது. அதிலுள்ள ஒவ்வொரு பஞ்சுத் துளியும் துன்பம் தருவதே. அந்தப் பொதி முழுவதும் தீரும்வரை துன்பமனுபவித்தாக வேண்டும். அவரவர் செய்த வினையாதலால் பகிர்ந்தளித்துச் செலவழிக்க முடியாது. தேவியின் கருணை இங்கும் உதவுகிறது. கருணை காற்று வடிவம் எடுக்கிறது. அதன் வேகத்தில் மலை பறக்கும். துர்பாக்கியமாகிய பஞ்சுப் பொதி சிதறி உருத் தெரியாமல் மறைகிறது. தேவியின் கருணை புரியும் உதவி இது. (744)

### 4. ஜரா - த்த்வாந்த - ரவி - ப்ரபா. மூப்பாகிய இருட்டைப் போக்கும் கதிரவன் ஒளியாக இருப்பவள்.

4-1. ஜரா - மூப்பு. அது இருட்டுப்போல் கவ்வுகிறது. மூப்பைவிட 'மூப்பு வரக்கூடும்', 'மூப்பு வந்துவிட்டதே' என்ற திகில் அதிகமாகத் துன்புறுத்தும். அதன் வருகையை முன் உணர முடியாது. வந்த பின்னர் அதனை அனுபவிக்கும்போதுதான் அது வந்துவிட்டதை உணர முடியும்.

மாலை நெருங்க நெருங்க இருள் பரவிக் கொண்டிருக்கிறது. எனினும் இரவு தொடங்கிய பின்னரே இருள் வந்துவிட்டதை உணர்கிறோம். மரணத்தின் முன்னோடி அது என்ற உணர்வால் மூப்பிடம் பயம் ஏற்படுகிறது. மூப்பிடம் பயம் நீங்க ஒரே வழி 'மூப்பு உடலுக்குத்தான்' 'எனக்கல்ல' என்று அறிவதே. இருட்டு விலகும், பகலவன் தோன்றுவான் என்ற அறிவு இருட்டிடமுள்ள பயத்தைப் போக்கும். ஆனால் இருட்டு விலகக் காத்திருப்பதில் சிரமம் உண்டு. தேவியின் கருணை இங்கும் உதவுகிறது. இருட்டை உணர்ந்து பயம் தோன்றியதும் அவளைச் சரண் புக அவளது கருணை கதிரவனின் செவ்வொளியாகப் பரவுகிறது. இருள் தானே மறைந்தோடி விடுகிறது. தேவியின் கருணை ஒளியால் பேரறிவு பலம் பெருகிறது. ஆத்மா நித்தியன் என்ற உணர்வால் கிழிந்த சட்டை தானே விலகிப் புதிய சிறந்த சட்டை மூடும்போது சட்டை மாறுவதால் ஒரு துன்பமும் ஏற்படாதென்றறிகிறோம். மூப்பும் மூப்பிடமுள்ள பயமும் மறைகின்றன. தேவியின் கருணை இப்படியும் உதவுகிறது. (745)

(நா. 746 - 749)

भाग्याब्धिचन्द्रिका भक्तचित्तकेकिघनाघना ।
रोगपर्वतदंभोलिः मृत्युदारुकुठारिका ॥ 144 ॥

**பாக்க்யாப்த்திசந்த்கா பக்தசித்தகேகிகநாகநா.**

**ரோகபர்வததம்ப்போளி : ம்ருத்யுதாருகுடாரிகா.**

### 5. பாக்க்ய - அப்த்தி - சந்திரிகா. பாக்கியமெனும் கடலைப் பொங்கி எழச் செய்யும் நிலவாயிருப்பவள்.

5-1. சுகத்தைத் தரும் பாகியம் உள்ளது. ஆனால் அதனை அனுபவிப்பதை நாம் உணராவிட்டாலோ, பிறர் அறிய அதனை அனுபவிக்காவிட்டலோ, பாக்கியத்தை அனுபவித்த திருப்தி ஏற்படாது. அதனால் பாக்கியம் அமைதியாயிருப்பதைவிடக் கடலைப் போல் பொங்கி எழுவதைத்தான் விரும்புகிறோம். பொங்கி எழுவதால் அளவு கூடுவதில்லை. பொங்கி எழுந்ததும் அப்படியே பொங்கிய உச்ச நிலையிலேயே நிற்கவும் முடியாது. எனினும் பொங்கி எழுவதில் ஓர் ஆனந்தம் உண்டு. வானில் சந்திரனைக் கண்ட கடல் பொங்குகிறது. கடலில் அதனால் ஒரு துளி ஜலம் கூட அதிகமாகாது. ஆரவாரமும் கொந்தளிப்பும் மனத்திற்குப் பிடித்தமானவை. பாக்கியம் அப்படிப் பொங்கி எழுவதை விரும்பினால் தேவி அதற்கும் உதவுகிறாள். கருணையை நிலவாக்கி அதன் ஈர்ப்பினால் பாக்கியமாகிய கடலைப் பொங்கி எழச்

விரும்பியதை விரும்பியபடி வழங்கும் வள்ளலாகத் தேவி புரியும் உதவி இது. (746)

### 6. பக்த - சித்த - கேகி - கநாகநா. பக்தனின் மனமாகிய மயிலைக் கூத்தாடச் செய்யும் கார்மேகமாக விளங்குபவள்.

6-1. பக்தனும் பாக்கியத்தை அனுபவிப்பான். ஆனால் அமைதியாக, அதனால் இறுமாப்பு ஏற்படாதவாறு அடக்கத்துடன் அனுபவிப்பான். அவனும் குதூஹலத்துடன் கூத்தாடும் நேரம் ஒன்று உண்டு. தேவியின் கருணை ததும்பும் தோற்றத்தைக் கண்டதும் ஆனந்தத்தை அடக்க முடியாமல் நீருண்ட மேகத்தைக் கண்ட மயில்போல் அப்படிக் கூத்தாடுவான். தேவியைத் தான் கண்டதால் ஏற்பட்ட களிப்பு மட்டுமல்ல அது. "மேகம் தோன்றிவிட்டது. மழை பொழியும். மக்களின் வாழ்க்கை வளம் பெறும்" என்ற களிப்பால் மேகத்தைக் கண்டு மயில் ஆடுகிறது. தேவியின் அருள் எங்கும் பரவி எங்கும் ஆனந்தம் பரவவிருப்பதை உணர்ந்து பக்தனது உள்ளம் கூத்தாடுகிறது. கருணை புரியும் விசித்திர உதவி இது. கருணையால் தனக்குத் தாயானவளை எல்லோருக்கும் தாயாக உணர்ந்ததால் பக்தனுக்கு ஏற்படும் களிப்பு இது. (747)

### 7. ரோக - பர்வத - தம்த்போளி:. நோயாகிய மலையைப் பிளக்கும் வஜ்ஜிராயுதமாயிருப்பவள்.

7-1. துன்புறுத்துவதெல்லாம் நோய். பசி, தாகம், தரித்திரம், பொறாமை என்றவாறு நோய் பல வகைகளில் தோன்றும். (ருஜந்தி இதி ரோகா:) எல்லா நோய்களும் வேதனை தருபவையே. நோய் ஏதேனும் ஒரு சிறு பகுதியில் வந்தால்கூட மலைபோல் தோன்றுகிறது. பின் என்ன நேருமோ என்ற கவலையைத் தருகிறது. மலை தனக்கு அப்பாற்பட்டதை நம் கண்ணிலிருந்து மறைப்பதுபோல் நோயானது வருங்காலத்தை மறைக்கிறது. நோயைத் தவிர வேறொன்றிலும் நம் கருத்து செல்லாதபடி ஆக்கிரமித்துவிடுகிறது. மலையை அப்படியே அகற்ற முடியாது. அதனைப் பிளந்து தூளாக்கிச் சிதற அடித்தால் மாயமாய் மறையும். அதன் பின்னிருந்தது எதிரே பளிச்செனத் தெரியும். இந்திரனின் வஜ்ஜிராயுதம் மலைகளைச் சிதற அடிக்கும். நோய் மலைபோல் எதிரில் நிற்க, நாம் அதனைக் கண்டு மலைத்து நிற்கும்போது தேவியின் கருணை வஜ்ஜிராயுதம் போன்று நோயாகிய மலையைச் சிதறடித்து, சிறந்த வருங்காலத்தை நம் கண்களின் முன் நிறுத்துகிறது. (748)

**8. ம்ருத்யு - தாரு - குடாரிகா. மரணமெனும் மரத்தைப் பிளக்கும் கோடாரியாக விளங்குபவள்.**

8-1. பூமியைப் பிளந்துகொண்டுத் தன்னைத் தானே வெளிக்கொணர்வதால் மரம் தாரு (தாரயதி இதி) எனப்படுகிறது.அந்தப் பூமியையே தனக்கு உணவூட்டச் செய்து அதன் பலத்தில் நின்று வளர்கிறது. பிறக்கும்போதே மரணமும் தோளின் மேல் ஏறி நிற்கிறது. வாழ்வதற்காக நாம் செய்யும் செயல்களைத் தன்னிடம் நெருக்கிக்கொள்வதற்காக அது பயன்படுத்திக்கொள்கிறது. நாம் வாழும் ஒவ்வொரு க்ஷணத்தையும் அது தன்னைப் பலப்படுத்திக்கொள்ள உபயோகித்துக்கொள்கிறது. பூமியால் மரத்தை அழிக்க முடியாது. மரத்தின் உதவி கொண்டே கோடரியால் அதனை வீழ்த்த முடியும். தேவி தன் கருணையைக் கோடரியாக்கி மரணம் எனும் மரத்தைப் பிளந்து வீழ்த்துகிறாள். மரணத்திடமுள்ள பயம் மரணத்தைவிடக் கொடியது. முக்கிய விருந்தாளியை எதிர்பார்ப்பதுபோல் மரணத்தை எதிர்பார்ப்பவன், பயமின்றி மரணத்தை எதிர்நோக்குவதன் மூலம் மரணத்தை வெல்கிறான். விருந்தாளியால் நன்மை ஏற்படுமென அறிந்தால், அவனால் துன்பம் வராது என உணர்ந்தால், அவனை மகிழ்ச்சியுடன் வரவேற்கலாம். மரணத்தை அப்படி வரவேற்க முடியாதிருப்பதற்குக் காரணம், முன்வினையால் இப்போதுள்ளதை விடத் தாழ்ந்த பிறவி கிட்டினால் என் செய்வது என்ற பயமே. தேவியின் அருளால் இப்போதிருப்பதைவிட நல்ல பிறவியே ஏற்படும். பாபம் பொசுங்கிவிட்டது. பாக்கியம் பொங்கிக் கொண்டிருக்கிறது என்பதை உணர்ந்தவன் புதிய பிறவியைத் தரவிருக்கும் மரணத்தைப் பயம் இல்லாமல் பிரியத்துடன் வரவேற்பான். மரணத்திடமுள்ள பயத்தைப் பிளந்து நற்பிறவி அளிப்பவள்.

8-2. தாரு - கடபயாதி எண்ணிக்கை முறைப்படி 28. முன்பு விளக்கப்பட்ட மந்திர ஸித்தியைக் கெடுக்கவல்ல அசத்தி, ஸித்தி, துஷ்டி என்ற 28 வதங்களை ம்ருத்யு, தாரு என்ற பதத்தால் குறிப்பிடுகிறார்கள். (18.22.8) தேவி அவைகளைப் பிளந்து பயனற்றதாக்கி விடுவாள். (749)

* * *

## அதிகாரம் - 28

# தேவியின் திவ்விய லீலைகள்

(நா. 750 - 756)

महेश्वरी महाकाली महाग्रासा महाशना ।

अपर्णा चण्डिका चण्डमुण्डासुरनिषूदिनी ॥ 145 ॥

**மஹேச்வரீ மஹாகாளீ மஹாக்ராஸா மஹாசநா.**

**அபர்ணா சண்டிகா சண்டமுண்டாஸுரநிஷூதிநீ.**

**1. மஹா - ஈச்வரீ. பெருமை மிக்க ஈசுவரி.**

1-1. முன் அதிகாரத்தில் கூறியபடி எட்டு வகையிரும் பெருமை மிக்க ஈச்வரியாயிருந்து உதவுகிறாள். மாஹேச்வரீ என்று (நா. 208) முன் வந்துள்ளது. (750)

**2. மஹா - காளீ. மஹா காளி.**

2-1. காளீ - காலீ என்று இரண்டு விதமாயும் உச்சரிப்பது உண்டு. பொருள் ஒன்றே. காளீ - கரு நிறமுள்ளவள், பலரைப் பல திசைகளில் செல்வதிலிருந்தும் திருப்பி ஒரு முகமாக்கி நடத்திச் செல்பவள், (காலயதி இதி அழிப்பவள். பெருமை மிக்க காளீ மஹாகாளீ. நாராயணன் யோக நித்திரையில் ஆழ்ந்திருந்தபோது தொப்புள் கொடியில் விளைந்த தாமரையில் தோன்றிய பிரும்மா மது, கைடபன் என்ற இரு அசுரர்களால் துன்புறுத்தப்பட்டார். பிரும்மா தேவியைத் துதிக்கத் தேவி மஹாகாளியாகத் தோன்றினாள். பத்து கைகளில் வாள், சக்கிரம், கதை, பாணம், வில், இரும்புத்தடி, சூலம், குத்துவாள், தலை, சங்கம் இவற்றை ஏந்தி நீலக்கல் நிறமுள்ளவளாகப் பத்து முகங்களும் பத்து கால்களும் மூன்று கண்களும் உள்ளவளாகத் தோன்றி மது கைடபரை மாய்த்தாள். (தேவீ மகாத்ம்யம்)

2-2. மஹாகாலர் என்று 12 ஜோதிர்லிங்கங்களுள் ஒன்றான பரமசிவன் உஜ்ஜயிநியில் கோவில் கொண்டுள்ளார். அவரது சக்தியாக விளங்குபவள்.

2-3. மாட்டு மந்தையை மேய்க்கும் இடையன் எண்ணற்ற மாடுகளைத் தன் விருப்பப்படி ஓட்டுவதுபோல், பெரும் மேகக்கூட்டத்தைக் காற்று தன்னிஷ்டப்படி கலைத்து உருக்குலைப்பது போல் உலகத்தைத் தன்னிஷ்டப்படி விரட்டுவதாலும், அழிப்பதாலும் மஹாகாளீ. உலகை

விரட்டுபவன், அழிப்பவன் காலனான யமன். அவனையும் விரட்டுவதாலும், அழிப்பதாலும் மஹா காளீ. (751)

**3. மஹா - க்ராஸா. பெருங்கவளமாக உலகை உண்பவள்.**

3-1. தாவரம், ஜங்கமம் எனப் பிரியும் பெரும் உலகத்தை ஒரே கவளமாக உட்கொண்டு ஒடுக்குபவள்.(க்ராஸம்-கவளம், சோற்றின் பிடியளவு, வாயால் விழுங்குமளவு) மாயையால் தன்னிடம் ஒடுக்கப்பட்டவைகளை விழுங்கித் தான் மாத்திரம் மீதியாயிருப்பவள். உலகை ஒரே கவளத்தால் உண்பவளுக்கு யமன் ஊறுகாயாக உதவுகிறான். "யஸ்ய ப்ரும்ஹ ச க்ஷத்ரம் ச உபே பவத ஓதந:.ம்ருத்யுர் யஸ்ய உபஸேசநம்" (கட உபநிஷத்து) (752)

**4. மஹா - அசநா. பெருந்தீனி கொள்பவள்.**

4-1. உலகம் அனைத்தும் தோன்றும் முன் உள்ள மஹத் அவ்யக்தம் எனப்படும் மூல தத்துவங்களையும் உணவாகக் கொள்வதால், தன்னிடம் ஒடுக்கிக்கொள்வதால் மஹாசநா. (மஹாஸநா என்று முன் வந்துள்ளது.(நா. 229) (753)

**5. அபர்ணா. இலையையும் நீக்கியவள்.**

5-1. இமயத்தின் புதல்வியாகத் தோன்றிய தேவி சிவனை அடையத் தவமியற்றினாள். சமைத்த உணவு, கிழங்கு, பழம் முதலியவைகளை விரதத்திற்காக நீக்கி, இலை - காய்ந்த சருகு முதலியவைகளை உண்டாள். பின்னர் அவற்றையும் நீக்கினாள். அதனால் அவள் அ-பர்ணாவானாள். (பர்ணம் - இலை) பெருந்தீனி கொண்டவளே (நா. 752 - 753) இலையைக்கூட ஏற்காதிருக்கிறாள்.

5-2. ருணம் - கடன். அப- ருணா. கொடுக்கவேண்டியதைக் கொடுக்காதவன் கடன் படுகிறான். தேவி கொடுக்க வேண்டியதை விட அதிகமாகவே வழங்குபவள். அதனால் கடன்படுவதில்லை.

5-3. மந்திரங்களை ஏற்கும்போது ருணருணி பாவத்தைச் சோதிப்பது வழக்கம். தேவியின் மந்திரங்களுக்கு அந்த சோதனை கிடையாது. ஸித்தம், ஸுஸித்தம், ஸாத்யம், அரி என மந்திரங்களை அவரவரது நாமாக்ஷரங்கள் முதலானதைத்கொண்டு பிரித்து உள்ளார்கள். (21. 92. 1-3) ஸுஸித்தமான மந்திரம் ஜபிப்பவனுக்குக் கடன்பட்டிருக்கிறது. அதனால் ஜபம் உடன் பலிக்கும். இப்படி ஸித்தாரி கோஷ்டம் என்ற முறையில் கடன்பட்டுள்ளதைச் சோதனை செய்வதும் தேவி மந்திரத்திற்குக்

கிடையாது. ஜபிப்பவனது மந்திர ஜப எண்ணிக்கையைக் கருதாமல் தேவியும் பலனளிப்பதால் அவள் அபர்ணா.

5-4. பெருந்தீனி கொள்பவளாகி உலகை அப்படியே பெருங்கவளமாக உண்பவளானதால் (நா. 752-753) அவள் இலை போட்டுப் பரிமாறி உண்பவள் அல்ல. (அ-பர்ணா) இலை முதலிய உண்கலம் இல்லாதவள். (754)

### 6. சண்டிகா. கோபிக்கும் சுபாவமுள்ளவள்.

6-1. பக்தி எனும் அன்பு கொள்ளாதவரிடமும் பக்தர்களைத் துன்புறுத்துபவர்களிடமும் கோபம் கொள்பவள். மது, கைடபன், மஹிஷன், சும்பன், நிசும்பன் என்பவர்களைக் கொல்வதற்காக மஹாகாளீ, மஹாலக்ஷ்மீ, மஹாஸரஸ்வதீ ஆகத் தோன்றியவளும் ரக்ததந்தீ, சாகம்பரீ, பீமா, ப்ராமரீ முதலிய பல தோற்றங்களைக் கொண்டு அஸுரர்களை அழித்தவளுமான துர்க்காதேவி சண்டிகா எனப்படுவாள். ஏழு ஆண்டு நிரம்பிய கன்னிகை சண்டிகை.(13.11.2) (755)

### 7. சண்ட - முண்ட - அஸுர - நிஷூதிநீ. சண்டன் முண்டன் என்ற அசுரர்களைக் கொன்றவள்.

7-1. சண்டனும், முண்டனும் சும்பன், நிசும்பன் என்ற இரு அசுரர்களின் சேனைத் தலைவர்கள். துர்க்கா தேவியுடன் போரிட வரும்போது, அவர்களைக் கண்டதும் தேவியின் முகம் கோபத்தால் சிவந்து இறுகிக் கறுத்தது. அவளது நெற்றியிலிருந்து காளி தோன்றிச் சண்டனையும், முண்டனையும் அழித்தாள். அதனால் மகிழ்ச்சியுற்ற தேவி காளியைச் சாமுண்டா என்ற பெயர் சூட்டி அழைத்தாள். அந்தக் காளி வடிவில் தோன்றியவள்.

7-2. சண்டன் மூளை வலிவு கொண்டவன், முண்டன் தலையின்றி (மூளை வலிவின்றி) உடல் வலிவுமிக்கவன். மூளை வலிவால் மக்களைத் துன்புறுத்துபவர் சிலர். மூளை வலிவின்றி மூர்க்கத்தனம் கொண்டு உடல் வலிவால் பாதிப்பவர் சிலர். இவ்விரு வகை அசுரத் தன்மைப் படைத்தவர்களை அழிப்பவள். (756)

(நா. 757 - 763)

क्षराक्षरात्मिका सर्वलोकेशी विश्वधारिणी ।
त्रिवर्गदात्री सुभगा त्र्यम्बका त्रिगुणात्मिका ॥ 146 ॥

**க்ஷராக்ஷராத்மிகா ஸர்வலோகேசீ விச்வதாரிணீ.**
**த்ரிவர்க்கதாத்ரீ ஸுபகா த்ர்யம்பகா த்ரிகுணாத்மிகா.**
**146**

**8. க்ஷர - அக்ஷர - ஆத்மிகா. அழிவுறுவதும் அழிவற்றதுமாயிருப்பவள்.**

8-1. தோன்றி மாறுபட்டு அழிவது க்ஷரம். நித்யமாயிருப்பதும் க்ஷரத்திற்கு மாறுபட்டதும் அக்ஷரம். சொற்கள் க்ஷரம். எழுத்து அக்ஷரம். சொற்கள் மாறுபடும். சிதைவுறும். எழுத்து அழியாதது. உலகம் க்ஷரம், பரம்பொருள் அக்ஷரம். இவ்விரண்டு வடிவிலுமுள்ளவள் தேவி. (757)

**9. ஸர்வ - லோக - ஈசீ. உலகனைத்திற்கும் ஈச்வரி.**

9-1. பொறிகளுக்கும் மனத்திற்கும் புலப்படுவது லோகம் - உலகம். (லோக்யதே இதி). உலகனைத்தையும் தன்னிஷ்டப்படி ஆட்டி வைப்பவள். (758)

**10. விச்வ - தாரிணீ. உலகைத் தாங்குபவள்.**

10-1. ஒன்று பலவாக மாறியதும் நாளையில்லாத அநித்தியப் பொருளும் விச்வம் - உலகம். அதனைத் தாங்குபவளாக - அதற்கு அதிஷ்டானமாக - காரணமாக இருப்பவள். (26.52.1) விசுவமாக வடிவம் தாங்கியவள்.(17.8.2) (759)

**11. த்ரி - வர்க்க - தாத்ரீ. அறம், பொருள், இன்பம் ஆகிய மூன்றையுமளிப்பவள்.**

11-1. அறம், பொருள், இன்பம் இவை அர்த்தம் - வேண்டிப் பெறக்கூடியவை. மோக்ஷம் என்பது கேட்டுப் பெறக் கூடியதல்ல. நம்மிடமில்லாததையும் பிறரிடம் மட்டும் இருப்பதையும் நம்மைக் காட்டிலும் வேறுபட்டதையும் வேண்டிப் பெறலாம். தர்மம் முதலிய மூன்றும் அத்தகையவை. ஆத்மஸ்வரூபத்தை உணர்வதான மோக்ஷம் கேட்டுப் பெறுவதல்ல. அம்மூன்றும் வர்க்கம் - பலவாறாக உள்ளவையானதால் மூன்று இனங்களாகப் பிரித்து வைக்கப்பட்டவை. மோக்ஷம்

ஆத்மஸ்வரூபமானதால் ஒரே விதமானது. அதனால் அது அபவர்க்கம் - வர்க்கப்பிரிவு இல்லாதது. வர்க்கங்களான - அறம், பொருள், இன்பம் என்ற மூன்றை அளிப்பவள். (760)

**12. ஸு - பகா. அழகானவள்.**

12-1. செல்வம், பெருமை, வீர்யம், ஆண்மை, விடாமுயற்சி, புகழ், உடல் அழகு, பெருமனம் முதலியவை அழகு தருபவை - பகங்கள். அவை மங்களமாகத் தேவியிடம் அமைந்துள்ளன. பகம் - ஈசுவரத்தன்மை. (18.5.1.2) அதுவும் மங்களமாக அமைந்துள்ளது. உலகில் ஸௌபாக்கியப் பொருள்களாகக் கருதப்படும் கரும்பு, பசுவின் பால், மஞ்சள் முதலியவையும் ஸுமங்கலி முதலியவர்களும் ஸுபகர்கள். அவர்கள் வடிவில் இருப்பவள் தேவி. மங்களமான அழகுப் பொருளைப் பெற்றிருப்பதும் மங்களமான அழகுடன் கூடியிருப்பதும் ஸௌபாக்கியம் - ஸுபகத்தன்மை. அத்தகைய ஸுபகர்களாக இருப்பவள் தேவி. பகன் எனப்படும் சூர்யன் தேவியின் வழிபாட்டால் பெருமை பெற்றமையால் ஸுபகா. (சோபந : பக : யயத) (16.4.2) (761)

**13. த்ரி - அம்பகா. மூன்று கண்கள் உள்ளவள்.**

13-1. அம்பகம் - கண்கள். சூரியன் சந்திரன் அக்கினி என்ற மூன்று ஒளிமண்டலங்களைத் தேவி கண்களாகக் கொண்டவள். சூரியன் - வலது கண், சந்திரன் - இடது கண், அக்கினி - நெற்றிக்கண். வலது கண்ணால் சூரியனுக்கும் இடது கண்ணால் சந்திரனுக்கும் நெற்றிக் கண்ணால் அக்கினிக்கும் ஒளியூட்டும் சக்தியைத் தந்தவள். வலது கண்ணால் பகலையும் இடது கண்ணால் இரவையும் நெற்றிக் கண்ணால் இரு சந்தி வேளைகளையும் அமைத்தவள். (ஸௌந்தர்யலஹரீ சு.48) அன்போடு அணைப்பவள் அம்பா. (அம்பதே பத்த்நாதி) அம்பகா அழகிய பெருமைமிக்க தாய். பிரும்மா, விஷ்ணு, ருத்திரன் என்ற மும்மூர்த்திகளுக்கும் தாய். ஸுபகா த்ரியம்பகா, மூன்று கண்களிருந்தாலும் அழகான தாய். மாறுபட்ட ஒளிக்கதிர்களை வெளியிடுவதாயினும் அழகாயிருக்கும் கண்கள். கண்களின் அமைப்பில் வேறுபாடில்லை. பார்வைதான் வேறுபாடு. சூர்யக் கண்ணால் நன்கு பிரகாசிக்கச் செய்பவள். சந்திரக் கண்ணால் குளிர்ச்சி தருபவள். நெருப்புக் கண்ணால் அழிப்பவள். (762)

**14. த்ரிகுண - ஆத்மிகா. முக்குண வடிவினள்.**

14-1. ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற முக்குணங்களைத் தன்னை விளக்குவதற்காக ஏற்றுக்கொண்டவள். பிரும்மாவை ரஜோ குணத்தைக்கொண்டும், விஷ்ணுவை ஸத்வ குணத்தைக் கொண்டும், ருத்திரனைத் தமோகுணத்தைக் கொண்டும் தொழில் புரிபவர்களாக படைத்ததால் அந்த முக்குணங்களையே தன்னை விளக்குபவையாகக் கொண்டவள். ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற குணங்களை முறையே அதிகமாக வெளிக்காட்டும் பார்வதி, துர்க்கா, காளி என்ற மூன்று தோற்றங்களைக் கொண்டவள். (763)

(நா. 764 - 770)

स्वर्गापवर्गदा शुद्धा जपापुष्पनिभाकृतिः ।
ओजोवती द्युतिधरा यज्ञरूपा प्रियव्रता ॥ 147 ॥

**ஸ்வர்க்காபவர்க்கதா சுத்தா ஜபாபுஷ்பநிபாக்ருதி :**
**ஓஜோவதீ த்யுதிதரா யஜ்ஞரூபா ப்ரியவ்ரதா. 147**

**15. ஸ்வர்க்க - அபவர்க்க - தா. ஸ்வர்க்கத்தையும் மோக்ஷத்தையும் தருபவள்.**

15-1. ஸ்வர்க்கம் - ஸுவர்க்கம் - புண்யச் சேமிப்புக்கேற்ப சுகானுபவத்தை வகுத்துத் தருவதால் அது ஸுவர்க்கம் - நல்ல வர்க்கங்கள் - பாகுபாடுகள் உள்ளது. அந்த உலகில் இருக்கும் வரை துக்கக் கலப்பு இருக்காது. ஆசைப்பட்டது கிடைக்கும். ஆனால் புண்ணியம் இருக்கும் வரை புண்ணியத்தின் அளவில் சுகம் கிடைக்கும். புண்ணியம் தீர்ந்ததும் சுவர்க்கத்தில் இருக்க முடியாதாகையால் அது முடிவுள்ள அநித்யமான சுகம். அபவர்க்கம் - பாகுபாடற்ற அழிவற்ற சுகம். ஞானத்தால் தேக பந்தத்திலிருந்தும் விடுதலை. வினை செய்வதால் ஸ்வர்க்கம் ; வினையற்றிருப்பதால் வினைத் தொடர்பை நீக்கிக்கொள்வதால் அபவர்க்கம். இந்த இரண்டு சுகங்களையும் விருப்பத்திற்கேற்ப அளிப்பவள். (நா. 625, 760, 926) (764)

**16. சுத்தா. தூய்மையானவள்.**

16-1. இயற்கையாகவே தூய்மையானவள். அவளிடத்தில் இயற்கையான அழுக்கும் கிடையாது. செயற்கையாக அறியாமையால் ஏற்படும் அஞ்சனங்களும், மலங்களும், லேபங்களும், கலக்கமும், விகாரங்களும் கிடையாது. (நா.133,134,135,145,150,153,973) (765)

### 17. ஜபா - புஷ்ப - நிப - ஆக்ருதி :. செம்பரத்தம்பூ நிறமுள்ள தோற்றமுள்ளவள்.

17-1. செம்பரத்தம்பூ நல்ல செந்நிறமுள்ளது. சிகப்பில் பல சாயைகள் உண்டு. அத்தனை சாயைகளிலும் தேவியைக் காணலாம். (நா. 6, 12, 49, 248, 560, 891, 922, 964) (766)

### 18. ஓஜோ - வதீ. தாதுசாரம் உள்ளவள்.

18-1. சரீரத்தில் ரஸம், ரக்தம், மாம்ஸம், மேதஸ், மஜ்ஜா, அஸ்தி, சுக்கிலம் என்ற ஏழு தாதுக்களின் ஸாரம் ஒவ்வொரு கணத்திலும் சேர்கிறது. அதனால் திடீரென ஏற்படும் நெருக்கடிகளால் அழிவுறாமல் உடல் பாதுகாக்கப்பெறுகிறது. அந்த தாது ஸாரம் ஓஜஸ் எனப்படும். அந்த சேமிப்பு குறைந்தால் அன்றாடம் எத்தனை புஷ்டி அளித்தாலும் உடலில் ஒட்டாது. உடல் வெலவெலத்துப் போகும். ஓஜஸ் எனும் சாரம் நிரம்பப் பெற்றவள். (767)

### 19. த்யுதி - தரா. ஒளி பொருந்தியவள்.

19-1. உடலிலும் உள்ளத்திலும் உள்ள நிறைவு மேனிமேல் ஒளியாகப் படரும். பிறரை வசீகரிக்கும் ஒளி பொருந்தியவள். (768)

### 20. யஜ்ஞ - ரூபா. வேள்வி வடிவினள்.

20-1. யஜ்ஞம் - வேள்வி. அது தனக்குப் பிரியமான பொருளைத் தன்னுடையதென்று அதில் வைத்திருந்த அபிமானத்தை நீக்கி 'இன்னாருக்கு இது உரித்தானதாக ஆகட்டும்,' 'எனக்கு அதில் தொடர்பு இல்லை' என்று அன்பும் அடக்கமும் கலந்த தியாக புத்தியுடன் அர்ப்பணம் செய்வதாகும். இந்திரன் முதலான தேவதைகளுக்காகக் குறிப்பிட்ட பலனைக் கோரியும் இவை செய்யப்படுகின்றன. பொதுவாக அகந்தை, மமதை அழியவும் சித்த சுத்தி ஏற்படவும் எல்லாவற்றையும் ஈசுவரார்ப்பணமாக்கும் மனநிலை திடப்படவும் இந்த வேள்விகள் செய்யப்படுகின்றன. இவற்றில் ஈடுபாடுள்ளவள். (29.61.1, 30.45.1)

20-2. ஐந்து பொறிகளால் மணம், சுவை, ஒளி, தொடு உணர்ச்சி, ஒலி என்ற ஐந்தை அனுபவிக்கிறோம். அந்த அனுபவங்களையே தேவிக்கு அர்ப்பணம் செய்வது ஞானயஜ்ஞம். மூக்கால் உணரும் மணத்தை நாம் அனுபவிக்கிறோம் என்று அஹந்தை கொள்ளாமல், நமது

அந்தர்யாமியாக உள்ள தேவி உணர்கிறாள் என்ற பாவனை கொள்ளுதல் யஜ்ஞமாகும். அத்தகைய ஈசுவரார்ப்பண புத்தியுடன் உள்ள பாவனையில் திருப்தி அடைபவள். (769)

**21. ப்ரிய - வ்ரதா. நோன்புகளில் விருப்பமுள்ளவள்.**

21-1. உடலும், பொறிகளும், மனமும் அடங்கித் தேவியிடமோ, மற்ற தேவதைகளிடமோ மனம் ஈடுபடுவதற்காக உணவிலும் நடைமுறையிலும் ஏற்கப்படும் கட்டுப்பாடுகளும் சடங்குகளும் நோன்புகளாகும். மனமடங்கப் பயன்படும் நியமங்களில் மிகுந்த விருப்பம் கொண்டவள். (770)

(நா. 771 -776)

दुराराध्या दुराधर्षा पाटलीकुसुमप्रिया ।
महती मेरुनिलया मन्दारकुसुमप्रिया ॥ 148 ॥

**துராராத்த்யா துராதர்ஷா பாடலீகுஸுமப்ரியா.**

**மஹதீ மேருநிலயா மந்தாரகுஸுமப்ரியா. 148**

**22. துர் - ஆராத்த்யா. கடுமையான முறைகளால் ஆராதிக்கத்தக்கவள்.**

22-1. பொறிகளும் மனமும் அடங்காதவர்களால் அவள் எளிதில் அடையத்தக்கவள் அல்ல. ("தரல கரணாநாம் அஸுலபா" ஸௌந்தர்ய லஹரீ. சு. 95) அப்படிச் சபல மனமுள்ளவர்கள் அவளைத் திருப்திப்படுத்த முடியாது. அவள் நிறைவுள்ளவள். அவளுக்கு எதிலும் நாட்டம் கிடையாது. இதனால் நாம் அளிக்கும் பொருளால் அவளைத் திருப்திப்படுத்த இயலாது. மனத்தின் தூய்மையயும் அன்பின் வலிமையையும் கண்டு கருணையால் மனம் நெகிழ்ந்து நாம் அர்ப்பணம் செய்வதைத் திருப்தியுடன் ஏற்றுக் கொள்வாள். (771)

**23. துர் - ஆதர்ஷா. வசப்படுத்த முடியாதவள்.**

23-1. தேவியை வலிவால் அடக்கி வசப்படுத்த முடியாது. (ஆதர்ஷ:- வலிவால் அடக்கி வசப்படுத்துதல்) (772)

**24. பாடலீ - குஸும - ப்ரியா. பாதிரிப்பூவில் விருப்பம் உள்ளவள்.**

24-1. பிறரால் வசப்படுத்த முடியாத பெரு மனமும், பெரு வலிவும் கொண்ட தேவி தானே நெகிழ்ந்து வசமாகும் பொருள்களும் உண்டு. பாதிரிப்பூவில் அவளுக்கு நாட்டமதிகம். அதனை அன்புடன் அளிக்க அவள் திருப்திப்படுவாள். கண்ணனிடம் யாரும் நெருங்க முடியாது. குசேலன் அன்புடன் அளித்த ஒரு பிடி அவல் கண்ணனுக்கு மிகவும் உவப்பாயிற்று. அன்பால் ஏற்படும் நெருக்கம் அத்தகையது. (773)

### 25. மஹதீ. மிகப் பெரியவள்.

25-1. மிகப் பெரிது என்ற அளவிற்கும் அப்பாற்பட்ட பெரியவள். எந்த அளவுகோலாலும் அளவிட முடியாத பெருமை கொண்டவள். மஹத் என்ற உலகின் ஆதித்தோற்றமாயிருப்பவள். (17.8.1,2)

25-2. நாரதரது வீணை மஹதீ என்ற பெயருள்ளது. அந்த வீணையாயிருப்பவள். (8.16.1) (774)

### 26. மேரு - நிலயா. மேருவில் வசிப்பவள்.

26-1. மேரு மலை தேவி வசிக்குமிடம் (9.4.1., 9.10.6) மேரு மலையிலுள்ள ஸ்ரீநகரம், மேரு வடிவில் முக்கோணங்களும் தளங்களும் மண்டலங்களும் சதுரச்ரமும் கொண்ட யந்திரம், மேரு தண்டம் எனும் முதுகின் முள்ளந்தண்டில் தமது இருப்பிடமாகக் கொண்டவள்.

26-2. அக்ஷ மாலை முதலிய ஜப மாலைகளின் நடுவில் தொங்கும் மணிக்கு மேரு எனப் பெயர். மானஸ ஜபமாயினும் ஜப மாலை கொண்டு ஜபமாயினும் மேருவைத் தாண்டாமல் எண்ணி வந்த வரிசையிலேயே திரும்பவும் எண்ணுவது முறை. (21.75.1, 23, 43.3) கைவிரல்களில் உள்ள கணுக்களைத் தொட்டு எண்ணுவதும் உண்டு. பவித்திர விரலின் நடுக்கணு, கீழ்க்கணு, சுண்டு விரலின் கீழ்க்கணு, நடுக்கணு, மேற்கணு, பவித்திர விரலின் மேற்கணு, நடு விரலின் மேற்கணு, சுட்டு விரலின் மேற்கணு, நடுக்கணு, கீழ்க்கணு என்ற வரிசையில் எண்ண 10 எண்கள் ஆகும். மறுபடி சுட்டுவிரலில் கீழ்க்கணு, நடுக்கணு, மேற்கணு, நடுவிரலின் மேற்கணு, பவித்திர விரலின் மேற்கணு, சுண்டுவிரலின் மேற்கணு, நடுக்கணு, கீழ்க்கணு, பவித்திர விரலில் அடிக்கணு, நடுக்கணு, என எண்ண 20 எண்கள் ஆகும். மறுபடி பவித்திர விரலின் நடுக்கணுவில் தொடங்கி எண்ணுவது முறை. இந்த எண்ணும் முறையில் நடு விரலின் அடிக்கணுவாகிய மேருவைத் தாண்டுவதில்லை. மேரு தேவியின்

இருப்பிடம். அதனால் இந்த மூன்று விதமான எண்ணும் முறையிலும் மேருவைத் தாண்டுவதில்லை. (775)

**27. மந்தார - குஸுமப்ரியா. மந்தாரப் பூவில் நாட்டம் உள்ளவள்.**

27-1. மந்தாரம் என்று கல்பக விருக்ஷங்களில் ஒன்று தேவியின் சிந்தாமணி கிருஹத்தைச் சுற்றியுள்ள பிராகாரங்களில் மந்தார மரங்களின் தோட்டமும் உள்ளது. (9.10.10) மந்தாரப்பூவில் நாட்டமுள்ளவள். (776)

(நா. 777 - 784)

वीराराध्या विराड्रूपा विरजा विश्वतोमुखी ।

प्रत्यग्रूपा पराकाशा प्राणदा प्राणरूपिणी ॥ 149 ॥

**வீராராத்த்யா விராட்ரூபா விரஜா விச்வதோமுகீ.**

**ப்ரத்யக்ரூபா பராகாசா ப்ராணதா ப்ராணரூபிணீ. 149**

**28. வீர - ஆராத்த்யா. வீரர்களில் ஆராதிக்கத் தக்கவள்.**

28-1. தனது சிறந்த வலிவை நெருக்கடியில் காட்டக்கூடிய திறமைபெற்று அவ்வலிவைப் பயன்படுத்துபவர் வீரர். வீரர்கள் அனைவரும் வெற்றி பெறத் தேவியை ஆராதிக்கிறார்கள். உயர்ந்த பண்பாட்டைப் பின்பற்றுவர்கள், தன் பண்பாட்டைத் தொடர்ந்து வம்ச வழியில் வந்த ஸந்ததிகளைப் பின்பற்றச் செய்திருப்பின் வீரர்கள் எனப்படுவார்கள். தான் சரியெனக் கருதிய பண்பாட்டில் தன் சந்ததிகளையே பழக்கப்படுத்த முடியாவிடில் தான் சரியான முன் மாதிரியாக நடந்துகொள்ளவில்லை என்று பொருள். தந்திர நூல்களின்படி, மனத்தை வெளிப்பொருள்களில் நாட்டம் கொள்ளாமல் தடுத்து, "நான்" இல் கரையவிட்டு ஆத்மானந்தத்தை அனுபவிப்பவன் வீரன். "அஹமி ப்ரலயம் குர்வந் இதம : ப்ரதி யோகிந :. பராக்ரமம் பரோ புங்க்தே ஸ்தாத்மானம் அசிவாபஹம்". 'நான்' இல், 'அது', 'இது' என்பதைக் கரைத்துப் பிறகு "நான்" ஐ, 'பெரும் நான்" ஆக உள்ள தேவியிடம் கரைப்பவன் வீரன். 'என்னுடையது' என்பதை . 'நான்' இல் கரைத்துப் குறுகிய 'நான்' ஐ பெரும் 'நான்' இல் கரைக்கிறான். எதிரியை அடக்குபவன் வீரன். மனத்தின் நாட்டத்தைப் பறிக்கும் பொருள்கள் ஞானிக்கு எதிரி.

அவைகளை அடக்குவதென்பது அதன் இழுப்பிலிருந்து விடுபட்டுத் தன்னைக் காப்பாற்றிக்கொள்வதேயாகும். மனத்தையும் பொறிகளையும் அடக்கும் சக்தி படைத்த ஞானி அதனால் வீரனாகிறான். அந்த ஞானியான வீரனால் ஆராதிக்கத்தக்கவள்.( 777)

### 29. விராட் - ரூபா. விராட் வடிவினள்.

29-1. பஞ்சீகரணம் அடைந்த ஸ்தூல பூதங்களாலான உலகின் வடிவம் பிரும்மாண்டமாகிறது. அதில் அபிமானமுள்ள ஈசுவரன் விராட் எனப்படுவார். வைச்வாநரன் என்றும் பெயர் உண்டு. (17.8.1.1.21, 17.8.2) அந்த விராட்டின் வடிவில் உள்ளவள். (778)

### 30. வி - ரஜா. மாசற்றவள்.

30-1. அவித்தையால் ஏற்படக்கூடியதும் விக்ஷேபம் (திரிபு - வேறுபாடு) செய்யக்கூடியதுமான ரஜோகுணம் மாசுபடுத்தும். எதை எப்படி அறியவேண்டுமோ அப்படி அறியவிடாமல் ரஜோ குணம் தடுக்கும். அந்த ரஜோ குணமும், ரஜோ குணத்தால் ஏற்படும் மாசும் அற்றவள்.

30-2. விரஜா எனும் நதி வைகுண்ட மார்க்கத்தில் உள்ளது. ஒரிஸ்ஸாவில் விரஜா நதி இருக்கிறது. இந்த நதிகளின் வடிவில் உள்ளவள். (780)

### 31. விச்வத : முகீ. எங்கும் முகமுள்ளவள்.

31-1. உபாசிப்பவர்கள் தியானிக்குமிடமெல்லாம் தோன்றுபவளானதால் எங்கும் முகம் உள்ளவளாக இருக்கிறாள். உலகிலுள்ள எல்லாவற்றின் முகமாகவும், அவள் இருக்கிறாள். 'தேவி இவராக இருக்கிறாள்' என்ற பாவனையுடன் எவருக்கு உணவிட்டாலும் அது அவளிடம் போய்ச் சேர்கிறது. முகம் - செயலாற்றும் துறை. அவள் செயலாற்றும் துறை எங்கும் காணப்படுகிறது. (780)

### 32. ப்ரத்யக் - ரூபா. உள்நோக்குபவரால் காணப்படுபவள்.

32-1. மனமும் பொறிகளும் வெளிநோக்குடனிருக்கையில் பராக் எனவும், உள்நோக்குடனிருக்கையில் பிரத்யக் எனவும் கூறுவர். வெளிப்பொருளில் ஆனந்தமிருப்பதாகக் கண்ட பொறிகள் அதை நாடிச் செல்கின்றன. "ஆனந்தம் பொருளிலில்லை. "நான்" ஆக இருப்பதன் ஸ்வரூபம் அது " எனக் கண்டு கொண்ட மனமும் பொறிகளும் அந்த

"நான்" ஐ நோக்கித் திரும்புகின்றன. உள்நோக்குள்ள அந்நிலையில் உணரக்கூடிய ஸச்சிதானந்த ஆத்மாவாக இருப்பவள். (781)

**33. பர - ஆகாசா. பெருவெளியாயிருப்பவள்.**

33-1. (ஆகாசதே). எங்கும் விளங்கும் பொருள் ஆகாயம். அது விளங்காமலில்லை; விளங்குகிறது; இருப்பதாக உணர முடிகிறது; ஆனால் புலப்படுவதில்லை; புலப்படுவதற்குரிய பரப்பால் ஏற்படும் குறுகல் அதில் இல்லை. புலப்படாததால் ஸூக்ஷ்மமானது ஆகாசம். இந்த ஆகாசத்தையும் தோற்றுவித்த பரம்பொருள் பெருவெளி - பராகாசமாகும். பரம ஸூக்ஷ்மமானது. பஞ்சீகரணமடைந்த (17.8.1.7) ஆகாசமெனும் ஸ்தூலபூதத்திற்குக் காரணமான தந்மாத்திர நிலையிலுள்ள ஆகாசம் பராகாசமாகும். நம் உடலிலுள்ள ஸஹஸ்ராரம் பராகாசமாகும். இவற்றின் வடிவில் உள்ளவள.

33-2. எட்டாத இடத்தில் உள்ளது பரம். இதயத்தினுள் உள்ள மிகச் சிறு வெளி தஹர - ஆகாசம். அந்த வெளி நமக்கு எட்டாதாகையால் பராகாசம். தேவி அங்கு அந்த ஆகாச உருவில் இருக்கிறாள். (28.41.1) (782)

**34. ப்ராண - தா. பிராண சக்தியை அருள்பவள்.**

34-1. உடலிலுள்ள ஒவ்வொரு அணுவும் பிராண சக்தியால் இயங்குகிறது. அந்தப் பிராண சக்திக்கு ஆதாரம் பிராணவாயு. அது ஐந்து வடிவங்களில் செயலாற்றுகிறது. பிராணவாயுவாக வெளியிலுள்ளப் பிராண சக்தியை உள்ளே இழுத்துக்கொள்கிறது. அபானவாயுவாகப் பயன்படுத்தப்பட்டு மலமான சக்தியை வெளிப்படுத்துகிறது. வியானவாயுவாக உள்ளிழுக்கப்பட்டப் பிராண சக்தியை உடலின் ஒவ்வோர் அணுவிலும் ரத்தக்குழாய்கள் மூலம் பரப்புகிறது. ஸமானவாயுவாகப் பரவி நிற்கும் பிராண சக்தியை அந்தந்தப் பகுதிக்கேற்பப் பக்குவப்படுத்தித் தருகிறது. உதானனாக பிராணன் முழுவதும் வெளியேறும் வரை பிராண சக்தியைச் சேமித்துத் தருகிறது. இந்தப் பிராண சக்தியின் பலத்தால் பத்து இந்திரியங்களும் இயங்குகின்றன. அந்தப் பிராண சக்தியைத் தருபவளும் அவளே.

34-2. ஜடமான உடலில் உயிரை ஊட்டி அதனை இயங்கச் செய்பவள். அந - சலனம். அசைவு. ப்ர - அந :- சிறப்பாக அசைவது.

உயிருள்ளதே அசையும். அசைவதே உயிரிருப்பதன் அடையாளம். அசைவு சிறப்பாக அமையச் சிறந்த வாழ்வு அமையும். தேவி இந்தச் சிறந்த அசைவைத் தருகிறாள். அசைவைத் தருபவளே அசைவைத் துண்டிக்கிறாள். (ப்ராணான் த்யதி கண்டயதி). உயிர்ப்பின் அடையாளமான கண் முதலியவற்றின் அசைவைத் துண்டிப்பவள். உயிர்ப்பின் அடையாளமான மூச்சு மட்டும் இருந்தால் போதாது. கண், காது முதலியவை கூர்மை பெற்றுப் பிராணனை ஒளிமிக்கதாகச் செய்பவள். (ப்ராணான் தாயதி சோதயதி). உலகம் ஒடுங்கும்போது, இந்திரியங்களாக விளக்கம் பெற்ற அஹங்காரத் தத்துவத்தைச் செடியிலிருந்து பூவைப் பறிப்பதுபோல் பறித்துத் தொடர்பகற்றுபவள். (ப்ராணான் தாதி - லுநாதி). தன்னை அண்டியவர்களுக்குத் தன்னைக் கண்டனுபவிக்கிற பிராண சக்தியைத் தருபவள்.

34-3. காற்று வெளியில் பிராணனாக இருந்து உடலின் உட்புகுந்து உயிராகி உயிர்ப்பைத் தருபவள். காற்று வெளியில் பிராணவாயு நிரம்பியிருக்கும் அதனைக்கூட இருப்பவர் இழுத்து உயிர்ப்பை அனுபவிக்கும் போதும் மரிப்பவன் மட்டும் பெற முடியாமல் பிராண சக்தியைத் துண்டிப்பவள். உயிரைக் கொடுத்துப் பிறரைக் காக்கும் மகான்களின் வடிவிலுள்ளவள். (783)

**35. ப்ராண - ரூபிணீ. பிராண சக்தியாயிருப்பவள்.**

35-1. உடலில் ஜீவனாக ஆத்மா நுழைந்த பிறகே விராட்டாக இருந்த மற்றவை செயல்புரியத் தொடங்கின. அவளே ஆத்மா. அவளே உயிருக்கும் உயிர். உயிரும் உயிர்க்கு ஆதாரமான பிராண வாயுவும், உயிர்ப்பாகிய சலனமுமான பிராண சக்தி அவளே. (784)

(நா. 785 - 790)

मार्तण्डभैरवाराध्या मन्त्रिणीन्यस्तराज्यधूः ।
त्रिपुरेशी जयत्सेना निस्त्रैगुण्या परापरा ॥ 150 ॥

**மார்த்தண்டபைரவாராத்த்யா மந்த்ரிணீந்யஸ்தராஜ்யதூ:.**
**த்ரிபுரேசீ ஜயத்ஸேநா நிஸ்த்ரைகுண்யா பராபரா. 150**

**36. மார்த்தண்ட - பைரவ - ஆராத்த்யா. மார்த்தண்ட பைரவரால் பூஜிக்கத்தக்கவள்.**

36-1. ஸ்ரீபுரத்தில் 22-33 மதில்களின் நடுவில் உள்ள சூர்யப் பிராகாரத்தில் பன்னிரண்டு உபாஸகர்களில் (16.40.1) ஒருவரான சாயா தேவியுடன் கூடிய சூரியன் மார்த்தண்ட பைரவன் என்ற பெயருடன் தேவியை உபாசிக்கிறார். மணிமல்லன் என்ற அசுரனைக் கொன்றதால் மல்லாரி என்றும் அவரைக் குறிப்பிடுவார்கள். ஸுர்யனுக்கு மார்த்தண்டன் - செத்த முட்டையிலிருந்து தோன்றியவர் என்ற பெயர். அதிதியும், கசியபரும் ஸுர்ய மண்டலத்தின் நடுவிலுள்ள பரம்பொருளை வழிபட்டுப் பிள்ளை வரம் பெற்றார்கள். கருவுற்ற அதிதி கடும் விரதம் ஏற்றுக்கொண்டாள். உடலில் சக்தி குறைந்த நிலையில் பிள்ளைப்பேறு ஏற்பட்டு அது உயிரற்றப் பிண்டமாக வெளி வந்தது. அதிதியும், கசியபரும் பரம்பொருளை வேண்ட, அந்தப் பிண்டம் உயிர்பெற்றெழுந்தது. ஸுர்ய மண்டலத்தில் உள்ள பரம்பொருளாக வழிபட்டதால் ஸுர்ய சக்தி பெற்று ஸுர்யனாக விளங்கினார் எனப் புராணம் கூறும். தேவி உபாஸனையில் அதிதி கடும் விரதத்திலிருந்ததால் அவள் பெற்ற குழந்தை பயங்கரத் தோற்றம் பெற்றதன் காரணமாகப் பைரவர் ஆனார். அந்த மார்த்தண்ட பைரவரால் ஆராதிக்கப் பெற்றவள்.

36-2. வடுக பைரவர் முதலிய பல பைரவர்கள் உண்டு. பெண்களின் கூட்டத்திற்கும், பயந்தவர்களின் கூட்டத்திற்கும் பைரவம் எனப் பெயர். (பீரூணாம் ஸமூஹ:) ஸுர்யன், பைரவர்கள், பெண்கள், பயந்தவர்கள் இவர்களால் வணங்கப் பெற்றவள். விடாமுயற்சிக்குப் பைரவம் எனப் பெயர். சூரியனைப் போன்று அது மோகமெனும் இருட்டைப் போக்கவல்லது. விடா முயற்சியுடன் ஆராதிக்கத்தக்கவள். (785)

**37. மந்த்ரிணீ - ந்யஸ்த - ராஜ்ய - தூ ; மந்திரிணீ தேவியிடம் அரசின் பொறுப்பை ஒப்படைத்தவள்.**

37-1. மந்திரிணீ - அரசை நிர்வகிக்கும் ரகசிய ஆலோசனைகளைத் தரும் பெண் மந்திரியான ராஜச்யாமளா தேவி. (10.6.1.2.) அவளிடம் ஸ்ரீநகர ஸாம்ராஜ்யத்தை நிர்வகிக்கும் பொறுப்பைத் தேவி ஒப்படைத்துள்ளாள். (786)

**38. த்ரிபுர - ஈசீ. முப்புரங்களின் தலைவி.**

38-1. மேருவில் உள்ள ஸ்ரீநகரம் தன்னைச் சுற்றி மூன்று புரங்களைக் (பிரும்மா - விஷ்ணு - ருத்திரர்களின் நகரங்களை) கொண்டது. அதனால் அது த்ரிபுரம். அறிவும், அறிபவன், அறியப்படும்

பொருள், அறிவு என முப்புரங்களை கொண்டது. அவைகளுக்குத் தலைவி. ஸர்வாசா பரிபூரக சக்கிரத்தின் தலைவிக்குத் திரிபுரேசீ எனப் பெயர். (9.10.22) அவள் தேவியின் வடிவம். (787)

**39. ஜயத் - ஸேநா. வெல்லும் படைகளுள்ளவள்.**

39-1. எதிரிகளை எளிதில் வெல்லும் திறமையுள்ள தேர் - குதிரை - யானை - காலாப் படைகளுடன் கூடியவள். (26.8.1) (788)

**40. நிஸ் - த்ரைகுண்யா. முக்குணங்களைக் கடந்தவள்.**

40-1. அஹங்காரம் எனும் தத்துவம் மாயையிடமிருந்து தன்வரை வந்த குண சமநிலையை மூன்றாகப் பிரித்து உலகைப் படைக்கப் பயன்படுத்திற்று. முக்குணங்களாகப் பிரிந்த அஹங்கார நிலைக்கு முன்னுள்ளவள். உலகை ஒடுக்கும்போதும், முக்குணங்கள் அஹங்காரத் தில் அடங்கி, அஹங்காரம் மஹத்தில் அடங்கும். முக்குணங்களாக இருந்த நிலை அடங்கிய மஹத்து முதலிய தத்துவங்களாக உள்ளவள். (17.8.1.2) பிரும்ம - விஷ்ணு - ருத்திரர்கள் முக்குணங்களால் தொழில் புரிபவர்கள். முக்குண நிலையைக் கடந்த சுத்த ஸத்துவத்தால் தொழில் புரிபவர்கள் ஈச்வரனும் ஸதாசிவனும். (17.24.1-2) அந்தத் துரீய - துரீயாதீத வடிவில் உள்ளவள். (789)

**41. பர - அபரா. பரமாயும் அபரமாயும் இருப்பவள்.**

| 41-1. **பரம்** | **அபரம்** |
|---|---|
| பரம்பொருள் | உலகம் |
| பிரும்ம வித்யை | மற்ற வித்யைகள் |
| சக்தி | சிவன் |
| பர ஆகாயம் | ஸ்தூல ஆகாயம் |
| பரா எனும் ஒலிவடிவம் | பச்யந்தீ, மத்யமா, வைகரீ |
| துரீய நிலை | முக்குண நிலை |
| மந்திர வடிவம் | ஸ்தூல வடிவம் |
| பரா சக்தி | தனி மனிதனின் சக்தி |
| ரஹோயாகம் | வெளிப்படையான ஹோமம் |
| உயர்ந்தது | தாழ்ந்தது |
| தூரத்திலுள்ளது | நெருங்கியுள்ளது |
| சத்ரு | நண்பன் |
| வேறுபட்டது | தன்னைச் சார்ந்தது |

பரமாயும் அபரமாயும் பல நிலைகளில் உள்ளவள். (790)

(நா. 791 - 796)

सत्यज्ञानानन्दरूपा सामरस्यपरायणा ।
कपर्दिनी कलामाला कामधुक् कामरूपिणी ॥ 151 ॥

**ஸத்யஜ்ஞானாநந்தரூபா ஸாமரஸ்யபராயணா.**

**கபர்த்திநீ கலாமாலா காமதுக் காமரூபிணீ.**

**42. ஸத்ய - ஜ்ஞான - ஆநந்த - ரூபா. ஸத்திய - ஞான - ஆனந்த வடிவினள்.**

42-1. பரம்பொருள் வடிவமற்றது. அதனை அடையாளம் காட்டும் ஸத்யம், ஜ்ஞானம், ஆனந்தம் எனும் மூன்று பிரும்ம ஸ்வரூபங்களாக இருப்பவள்.(நா. 700) (791)

**43. ஸாமரஸ்ய - பர - அயநா. ஸமரஸத்தை மேலான நிலையாகக் கொண்டவள்.**

43-1. ஸாமரஸ்யம் - எவ்வகையிலும் ஏற்றத்தாழ்வற்ற நிலையில் ஈடுபாடு. அதனையே தன் சிறந்த இயற்கை நிலையாகக் கொண்டவள். சிவனுக்குச் சக்தி ஸமமானவள். சக்திக்குச் சிவன் ஸமமானவர். அதனை ஐந்து வகையில் இருவரும் காட்டுகிறார்கள். (நா. 97, 999) (792)

**44. கபர்திநீ. சடையனான சிவனின் மனைவி.**

44-1. சிவபெருமானின் சடை கபர்தம். அப்பெயத் கங்கை நீர்ப்பெருக்கைத் தடை செய்து தூயதாக்கியதால் வந்தது. (கஸ்ய கங்காஜலஸ்ய பூரம் ப்ரவாஹம் தாபயதி கண்டயதி சோதியதி) சிவபெருமான் கங்கையைச் சடையில் தேக்கியது. அதனைத் தூயதாக்கவே. கபர்தம் கொண்ட சிவனின் பத்தினி தேவி. சகலாண்டம் எனும் க்ஷேத்திரத்தில் கோவில் கொண்ட சிவன் கபர்த்தீ அவரது தேவி.

44-2. கபர்தி - சோழியாலான மாலை. அதனை அணியாகக் கொண்டவள். சிவன் மைராலராகத் தோன்றியபோது தேவி மதாலஸா என்ற பெயருடன் சோழிகளாலான அணிகளை அணிந்து தானும் உடனிருந்தாள். தேவி சடை முடியுடன் உள்ள நிலைகளும் உண்டு. லகுஸ்தவத்தில் 'ஆர்ப்பட்யா சசிகண்ட மண்டித ஜடா ஜூடாம்' என்று 11வது சுலோகத்தில் பிறையணிந்க சடையுள்ள தேவியின் வடிவம் தியானத்திற்காகக் கூறப்பட்டுள்ளது. 'சரத் ஜ்யோத்ஸ்நா சுத்தரம் சசியுதஜடாஜூட மகுடாம்' எனப் பிறையணிந்த சடையுள்ள வடிவத்தில்

வாக்தேவியாக தேவியைத் தியானம் செய்யும்படி ஸௌந்தரியலஹரீ (சு-15) கூறுகிறது. சடையுடன் கூடிய கேச பாசமுள்ளவள் தேவி. (793)

**45. கலா - மாலா. கலைகளின் வரிசையாக இருப்பவள்.**

45-1. அறுபத்தி நான்கு கலைகளின் வரிசையாக இருப்பவள். கலைகளுக்கு அழகு ஊட்டுபவள். (கலாநாம் மாம் லாவண்யம் லாதி). அழகையும், ஒளியையும், செழிப்பையும் தருபவள். (கலாம் சோபாம் மாம் ச லாதி). (794)

**46. காம - துக். விரும்பியதை வழங்குபவள்.**

46-1. காமதேனு போன்றோ, காமதேனுவாகவோ, கல்பகக் கொடியாகவோ இருந்து விரும்பியதை நிறைவேற்றி வைப்பவள். (795)

**47. காம ரூபிணீ. காமேசுவரர் வடிவில் இருப்பவள்.**

47-1. காமேசுவரரின் வடிவில் இருப்பவள் தேவி. காமன் மன்மதன். காமம் - விரும்பும் சக்தி, இச்சா சக்தி, உலகைப் படைக்கத் தேவி கொண்ட ஸங்கல்பம். இவைகளின் வடிவில் உள்ளவள். விரும்பியபடி வடிவெடுத்துத் தோன்றுபவள். (796)

(நா. 797 - 805)

कलानिधिः काव्यकला रसज्ञा रसशेवधिः ।

पुष्टा पुरातना पूज्या पुष्करा पुष्करेक्षणा ॥ 152 ॥

**கலாநிதி : காவ்யகலா ரஸஜ்ஞா ரஸசேவதி :**

**புஷ்டா புராதநா பூஜ்யா புஷ்கரா புஷ்கரேக்ஷணா. 152**

**48. கலாநிதி :. கலைகளின் நிதி.**

48-1. கலா - அறுபத்தி நான்கு கலைகள், சந்திரனின் 16 கலைகள், மற்றும் சூரியன், அக்கினி, பிரும்மா, விஷ்ணு முதலானோரின் கலைகள், விழிப்பு முதலிய நிலைகளின் கலைகள், பரம்பொருளின் கலை அம்சமாக உள்ள ஜீவர்கள். இவைகளின் சேமிப்புக் கூடமாயிருப்பவள் தேவி. கலாநிதி - சந்திரன். அவன் வடிவில் உள்ளவள். (நா. 236, 327, 611, 612)

48-2. கலைகள், சீரிய செயல் முறைகள். அவைகளின் முடிவிடம், செயலாற்றலால் அடையும் பயனுமாக இருப்பவள். (797)

**49. காவ்ய - கலா. அழகிய காவியங்களை இயற்றும் ஆற்றலாயிருப்பவள்.**

49-1. தேவியின் அருளால் அழகிய காவியங்களை இயற்றும் சக்தியை மூகர், காளிதாஸர், கூத்தர் பெருமான், காளமேகப் புலவர் முதலிய கவிகள் பெற்றனர். அந்தக் காவிய சக்தியாயிருப்பவள்.

49-2. காவியர் - சுக்கிரர். அவர் வழிபட்ட மிருதஸஞ்ஜீவநீ எனும் மாண்டவனைப் பிழைக்க வைக்கும் மந்திர வடிவினள். (798)

**50. ரஸ - ஜ்ஞா. காவியச்சுவையறிந்தவள்.**

50-1. காவியங்களில் கூறப்படும் சிருங்காரம், வீரம் முதலிய ஒன்பது காவியச் சுவைகளையும் அறிந்தவள். அந்தச் சுவைகளை அறியும் சக்தியாயிருப்பவள். இனிப்பு முதலிய சுவைகளை அறியும் நாக்கு எனும் பொறியாயிருப்பவள். (799)

**51. ரஸ - சேவதி:. பிரும்மானந்தத்தின் இருப்பிடம்.**

51-1. சுவைக்கப்பெறும் ஆனந்தங்களுக்குள் பெருமை பெற்றது பிரும்மமாக ஆகி ஆனந்தமாயிருப்பது. "ரஸோவை ஸ :- அதுவல்லவோ ரஸம்" என உபநிடதத்தால் புகழப் பெற்றது. அதன் காப்பகமாயிருப்பவள். (800)

**(10. போதிநீ கலை. 801 - 900)**

**52. புஷ்டா. நிறைவுற்றவள்.**

52-1. எல்லாம் நிரம்பியிருப்பதே புஷ்டியுள்ளது. எங்கும் எதிலும் ஏதேனும் குறையிருக்கும். 36 தத்துவங்கள் உண்டு. இவை அனைத்தும் ஏற்றத்தாழ்வில்லாமல் ஒன்றில் நிரம்பியிருக்காது. தேவியிடத்தில் அந்தக் குறை காண முடியாது. எல்லாத் தத்துவங்களுக்கும் தோற்றுவாயான அவள் புஷ்டியுள்ளவள். எல்லா ஆசைகளும் நிறைவேறியவள். எல்லா கல்யாண குணங்களும் பூர்ணமாக முதிர்ந்து நிறைந்து காணப்படுபவள். ஆனந்தமுள்ளவன் புஷ்டியுடன் காணப்படுவான். நிறைவைத் தருவது ஆனந்தம். பிரும்மானந்த வடிவினள் தேவி. அதனால் புஷ்டா. (நா. 444) (801)

### 53. புராதநா. பழம்பொருள்.

53-1. காலத்தைக் கடந்தவள். காவலரை தோன்ற முன்னரே இருப்பவள். எல்லோருக்கும் மூத்தது உலகப்படைப்பில் முதலில் தோன்றிய ஸூக்ஷ்மமான ஆகாயம். அதற்கும் மூத்த அஹங்காரம், மஹத், அவ்வியிக்தம், மூலப்ரகிருதி இவை அனைத்தும் தேவியிடமிருந்து தோன்றியவை. அதனால் முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொருள் தேவி. (நா. 671) (802)

### 54. பூஜ்யா. வழிபடத்தக்கவள்.

54-1. வயதிலும், கல்வியிலும், தவத்திலும் முதியோர்களைச் சிறியோர் வழிபடுவர். அப்படி வழிபடுபவரையும் சிலர் வழிபடுவர். இப்படி வழிபடப் பெறுபவர், வழிபடுபவர் என்ற இரு நிலைகள் எல்லோரிடத்திலும் இருக்கும். ஆனால் தேவியிடம் வழிபடப் பெறுபவள் என்ற நிலை மட்டும் தான் உண்டு. எல்லோருக்கும் முன்னவளானதால் எல்லோராலும் வழிபடத்தக்கவள். அவள் யாரையும் வழிபடத் தேவையில்லை. (803)

### 55. புஷ்கரா. புஷ்டியைத் தருபவள்.

55-1. புஷ்டியைத் தருபவள், புஷ்டிமிக்கவள், புஷ்கரம் என்னும் திவ்விய தீர்த்த வடிவிலுள்ளவள். ர - ல என்ற எழுத்துகள் பல இடங்களில் மாறி மாறி வரும். புஷ்கலா என்றும் சொல்லலாம். பூர்ணா, புஷ்கலா என்று சாஸ்தாவின் மனைவியரிருவரில் ஒருவள். இரண்டு பெயர்களும் நிறைவுள்ளவள் என்ற பொருள் தருபவை. (804)

### 56. புஷ்கர - ஈக்ஷணா. தாமரை போன்ற கண்கள் உள்ளவள்.

56-1. தாமரை போன்ற குளிர்ந்த இதமான பார்வை உள்ளவள். விசாகத்தில் சூரியனும், கிருத்திகையில் சந்திரனும் சேரும் நாள் புஷ்கரம் என்ற யோகம். அதே குறிப்பாகத் தோன்றுபவள். இந்த உலகம் முதலில் தோன்றும்போது தாமரை வடிவில் இருந்து பின் மலர்ந்தது. அதன் மலர்ச்சிக்காகக் காத்திருப்பவள். (க்ஷண :- வேறு செயலில் நாட்டமின்றி குறிப்பிட்ட செயலுக்காக நேரத்தை ஒதுக்கிக் காத்திருப்பது.)

56-2. புஷ்கரம் என்று ஒரு தீவு உண்டு. உலகம் ஏழு தீவு (துவீபம்) களாலானது. நாமிருப்பது ஜம்பூத்துவீபம். நாவல் மரத்தால் அடையாளமிடப்பட்டது. ப்லக்ஷத்துவீபம் (இச்சி), சால்மலீதுகூபம் (காரிலவு)

குசத்துவீபம் (குசப்புல்) க்ரௌஞ்சத்துவீபம் (க்ரௌஞ்சம் எனும் மலை) சாகத்துவீபம் (தேக்கு மரம்) புஷ்கரத்துவீபம் (தாமரை) என. அவைகளை அடையாளம் காட்டுபவைகளைக் கொண்டு பெயரும் அமைந்துள்ளது. தாமரையால் அடையாளம் காட்டப்பெற்றபடியால் புஷ்கரத்துவீபம் என அத்தீவிற்குப் பெயர். அதில் விளங்குபவள்.

56-3. புஷ்கரம் என நிறைவுமிக்க ஆலமரத்திற்குப் பெயர். அது பெற்றுள்ள நிறைவால் மரக்கூட்டத்திற்குத் தலைவனாக, வனஸ்பதியாக இருக்கும் பெருமை பெற்றது. ஆலிலையில் படுத்திருக்கும் பாலமுகுந்தனுக்குப் புஷ்கரன் எனப் பெயர். கல்பங்களின் முடிவில் உலகம் நீரில் மூழ்கி நிற்கும்போது அதில் மிதக்கும் ஓர் ஆலிகையில் படுத்துக் கையால் கால் கட்டை விரலைப் பிடித்து வாயினுட் செலுத்தி மகிழ்ந்திருப்பவரான பாலமுகுந்தனிடத்தில் கிருபை கூர்ந்து பிரும்ம தத்துவத்தைத் தேவி உபதேசித்தாள். (தேவீ பாகவதம்) அப்படிப் பாலமுகுந்தனுக்கு உபதேசிப்பதற்காக நேரத்தை ஒதுக்கியவள் தேவி. புஷ்கரம் - உலகை மூழ்க வைத்த ஜலம், உலகைத் தோற்றுவிப்பதற்காக அதனிடத்தில் (ஈக்ஷணா) கண் நாட்டம் உள்ளவள், குறிப்புள்ளவள் தேவி.

(805)

(நா. 806 - 812)

परं ज्योतिः परं धाम परमाणुः परात्परा ।
पाशहस्ता पाशहन्त्री परमन्त्रविभेदिनी ॥ 153 ॥

**பரம் ஜ்யோதி : பரம் தாம பரமாணு : பராத்பரா.**
**பாசஹஸ்தா பாசஹந்த்ரீ பரமந்த்ர விபேதிநீ. 153**

**57. பரம் ஜ்யோதி :. பேரொளி.**

57-1. லோகம் - உலகம் : ஒளியால் உணரப் பெறுவதால் லோகம். (லோக்யதே இதி). ஒளியற்ற நிலை இருட்டு. வெளியே ஒளியற்ற நிலை இருட்டாகிறது. உள்ளே ஒளியற்ற நிலை அறியாமை எனும் இருட்டாகிறது. இரு நிலைகளிலும் பரந்த உலகம் உணரப்படுவதில்லை. உணர்வை உண்டாக்குபவை சூர்யன், சந்திரன், நக்ஷத்திரங்கள், நெருப்பு முதலிய ஒளிமண்டலங்கள். வாக்கும் ஒளி வடிவமே. இருட்டில் பேச்சால் அறிந்துகொள்கிறோம் அல்லவா? 'வாசைவாயம் ஜ்யோதிஷா ஆஸ்தே' 'வாக்காகிற ஒளியால் இருப்பதை அறிகிறோம்' என உபநிடதம் கூறும்.

ஆத்மா எனும் ஒளி உள்ளும் புறமும் துலங்கும்போதுதான் உலகை இத்தனை ஒளிகளும் விளங்குகின்றன. அவ்வொளியில்லாவிடில் மற்றவை இருந்தாலும் பயனில்லை. 'நான்' இல்லாவிடில் பார்ப்பதேது? அந்த 'நான்' உம் பார்ப்பது, எல்லா 'நான்' உக்கும் மூலமான பராஹந்தா (பெரிய நான்) வடிவான தேவி எனும் பரம்பொருளாகிய ஒளியால்தான். அந்தப் பரம்பொருளாகிய ஒளி (ஜ்யோதிஸ்) யாக இருப்பவள் தேவி. (806)

### 58. பரம் தாம. பெரும் நிலை.

58-1. தாம - நிலை, அடைய வேண்டிய இடம், அடங்குமிடம். வேறொன்றின் எதிர்பார்வையுமற்ற சேரிடமாகிய பரம்பொருள். " ந தத் பாஸயதே ஸூர்யோ ந சசாங்கோ ந பாவக :. யத் கத்வா ந நிவர்த்தந்தே தத் தாம பரமம் மம" . "அவ்விடத்தை விளக்கச் சூரியனும், சந்திரனும், அக்கினியும் சக்தியற்றவர்கள். அங்கு சென்றவர் திரும்புவதில்லை. அதுதான் என் சிறப்பிடம்". (கீதை 8-21)

58-2. விழிப்பில் 'நான்' அடங்குமிடம் - தாம - காரணம், ஸூக்ஷ்மம், ஸ்தூலம் என்ற மூன்று தேகங்களாகும். ஸ்வப்னத்தில் ஸூக்ஷ்ம - காரண சரீரங்கள் 'நான்' உக்குத் தங்குமிடமாகின்றன. ஸுஷுப்தியில் காரண தேகமாகிய அஜ்ஞானத்திடம் 'நான்' ஒளிந்திருக்கும். இம்மூன்று நிலைகளிலும் ஸாக்ஷியாகத் தனித்திருந்து பார்க்கும் துரீயனான ஆத்மா அஞ்ஞானத்தில் மறையாத தாம. (17-15-1) அது பரம் தாம. அந்த வடிவில் இருப்பவள். (807)

### 59. பரம - அணு :. மிக நுண்ணிய அணுவாக இருப்பவள்.

59-1. மிக நுண்ணிய - உருவமுள்ளதெனக் கொள்ள முடியாத அணுவில் நுண்ணியதாக இருப்பவள். மிக ஸூக்ஷ்மமான மந்திர சக்தியாக இருப்பவள். (808)

### 60. பராத் - பரா. மேலானதற்கும் மேலானவள்.

60-1. பரன் - பிரும்மா, விஷ்ணு அல்லது ருத்திரன். அவர்களுக்கும் மேம்பட்டவள். பரம் - பிரமனின் ஆயுள். அந்தக் காலவரை உலகம் அறிந்த காலவரைகளுக்குள் பெரிது. (பரம்) அதனை விடப் பெரியவள் - காலவரையைக் கடந்தவள். (17-23-3, 17-26-3) (809)

### 61. பாசஹஸ்தா. பாசத்தைக் கையில் கொண்டவள்.

61-1. பாசத்தை இடது பின் கையில் கொண்டுள்ளவள். பாசத்தைக் கையாள்பவள். பாசம் இரு முனைகளும் கைகளில் அடங்கிய கயிறு. (நா.8) (810)

**62. பாசஹந்த்ரீ. பாசத்தை அழிப்பவள்.**

62-1. வினை எனும் பாசத்தால் கட்டுண்டவனது வினை தீர்த்து வினையால் ஏற்பட்ட தளைகளை அகற்றுபவள். (நா. 354) நாக பாசம் முதலிய அஸ்திரங்களால் கட்டப்பட்ட அநிருத்தன் முதலான வீரர்கள் தேவியின் அருளால் தளையிலிருந்து விடுபட்டார்கள். (811)

**63. பர - மந்த்ர - விபேதிநீ. எதிரியின் ஏவல் முதலான அபிசார காரியங்களை அழிப்பவள்.**

63-1. பரன் - எதிரி. அவன் தனக்கு எதிரியாக உள்ளவனைத் தனது அபிசார மந்திரங்களால் நோய், மனக்கலக்கம் முதலானவற்றிற்கு உட்படுத்தி அழிப்பது உண்டு. அல்லது எதிரி அறிய முடியாதபடி ரகசிய ஏற்பாடுகளைச் (மந்த்ரம்) செய்து தந்திரத்தால் ஏமாற்றி அழிப்பது உண்டு. இப்படிப்பட்ட எதிரியின் அழிக்கும் முயற்சிகள் தேவியைச் சரணடைந்தவர்களிடம் பலிக்காது. தேவி அந்த முயற்சிகளைப் பலன் தராமல் செய்துவிடுவாள்.

63-2. பர மந்திரங்கள் - உயர்ந்த மந்திரங்கள், ஸ்ரீவித்யை முதலானவை. அவைகளைத் தக்க மஹான்களின் மூலம் வெளிப்படுத்துபவள். மனு, சந்திரன் முதலான பன்னிருவர் மூலம் தனது மந்திரத்தைக் கருணையுடன் வகுத்துத் தந்தவள். (16-40-1) பர - மந்த்ரு -அவி - பேதிநீ. தனது உயர்ந்த ஸ்ரீவித்யை மந்திரங்களை ஜபிப்பவரது பாபத்தைப் போக்குபவள். (அவி - பாபம்) (812)

(நா. 813 - 820)

मूर्ताऽमूर्ताऽनित्यतृप्ता मुनिमानसहंसिका ।
सत्यव्रता सत्यरूपा सर्वान्तर्यामिणी सती ॥ 154 ॥

**மூர்த்தா(அ) மூர்த்தா (அ) நித்யத்ருப்தா முனிமாநஸஹம்ஸிகா.**

**ஸத்யவ்ரதா ஸத்யரூபா ஸர்வாந்தர்யாமிணீ ஸதீ. 154**

**64. மூர்த்தா. உருவுடைய பொருளாயிருப்பவள்.**

**65. அமூர்த்தா. உருவமற்ற பொருளாயிருப்பவள்.**

65-1. பரம்பொருள் இரண்டு வடிவங்கள் கொண்டது. ஒன்று ராமன், கிருஷ்ணன், துர்க்கை, லலிதா என உருவமுள்ளது; அறிவிற்கும்

எண்ணத்திற்கும் புலனுக்கும் அகப்படுவது. புத்தி, மனம், பொறிகள் இவைகளால் கண்டு உணரக் கூடியது. அதனால் உபாஸனைக்கு உரியது. பலவாறான தோற்றம் கொண்டது. இது 'மூர்த்தா'. மற்றொன்று உருவமற்றது. அறிவு முதலானவற்றிற்கு அப்பாற்பட்டது. புத்தி முதலியவற்றால் கண்டுகொள்ளமுடியாதது. அதனால் உபாஸனை முதலிய கிரியைகளுக்கு இடமளிக்காதது. சிரவணம், மனனம், நிதித்யாஸனம் என்ற ஸாதனத்தால் தியான வழிக்குக் கொணர்ந்துத் தியானிக்கத் தக்கது. ஒன்றேயானது. இது அமூர்த்தா. அந்த ஸகுணம் - நிர்க்குணம் என்ற இரு வகை பிரும்மமாகவும் இருப்பவள் தேவி.

65-2. நெருப்பு, ஜலம், பூமி என்ற உருவம் கொண்ட பூதங்களாகவும், ஆகாசம், வாயு என்ற உருவமற்ற பூதங்களாகவுமிருப்பவள். அஹங்காரத்திலிருந்து தோன்றிய தந்மாத்திர நிலையிலுள்ள உருவமற்ற பூதங்களாகவும் பஞ்சீகரணமடைந்த ஸ்தூல பூதங்களாகவும் இருப்பவள் தேவி. (17.8.1.7)

65-3. தோன்றும் உலகமாகவும் தோன்றாத பரம்பொருளாகவுமிருப்பவள். 'பாசஹஸ்தா' ஆகவும் 'பாசஹந்த்ரீ' ஆகவும் வரும் தேவி, சில சமயம் நாம் அறியும் வகையில் 'மூர்த்தா' ஆக வந்து உதவுவாள். சில சமயம் எந்த உருவில் வந்தாள் என்பதை அறிய முடியாதபடி 'அமூர்த்தா' ஆக வந்து உதவியிருப்பாள். உதவி கிடைத்த பின்னரே யாரோ உதவியிருக்க வேண்டும் என்ற ஊகம் ஏற்பட்டு, அப்படித் தேவி தான் உதவியிருக்கக்கூடும் என்று உணர்வதும் உண்டு. (813-814)

**66. அநித்ய - திருப்தா. நிலையற்ற பொருள்களாலான வழிபாட்டிலும் திருப்தி அடைபவள்.**

66-1. தேவியை 'நித்யத்ருப்தா'வாக அறிவோம். (நா. 566) அவள் இப்படித்தான் இருப்பாள், அப்படி அல்ல என்று நிர்ணயித்துக் கூற முடியாது! அதனால் அநித்யத்ருப்தாவாகவும், இந்த நாமம் அறிமுகப்படுத்துகிறது. (நித்யத்ருப்தா பக்தநிதி : என அங்கு சொற்றொடர்) அநித்தியமான வழிபாட்டாலும் திருப்தி அடைவாள். அவளை நித்யத்ருப்தா எனச் சொல்லவும் முடியாது. நித்ய த்ருப்தாவாக இல்லாதவளும் கூட.

66-2. 'ந த்ருப்தா - அத்ருப்தா. இதி அத்ருப்தா - இத்யத்ருப்தா. ந இத்யதிருப்தா அநித்யத்ருப்தா' என்றும் இதனை விளக்குவர். இந்த வகையில் வழிபட்டால்தான் திருப்தி அடைவாள் எனச்

சொல்லக்கூடுமானால் 'இதித்ருப்தா' எனலாம். இவ்வகையில் வழிபாட்டால் கட்டாயம் திருப்தி அடையமாட்டாள் எனச் சொல்லக்கூடுமானால் 'இத்யத்ருப்தா' எனலாம். அப்படியும் சொல்லமுடியாதே! அதனால் அவள் அநித்யத்ருப்தா. இவ்வகையில் வழிபாட்டால் திருப்தி அடையாதவள் என நிர்ணயித்துக் கூற முடியாதவள். அதாவது எதனாலும் திருப்தி அடையக்கூடியவள். நேரிடையாகச் சொல்ல முடியாததால் சுற்றி வளைத்துச் சொல்லப்படுகிறது. நித்தியமான அன்பும் ஞானமுமில்லா விட்டாலும், செம்பரத்தம் பூவையும், மந்தாரப் பூவையும் போன்ற (நா. 773 -776) அநித்தியப் பொருள்களாலும் அவளைத் திருப்தி செய்விக்கலாம்.

(815)

**67. முநி - மாநஸ - ஹம்ஸிகா. முனிவர்களின் மனமாகிற மானஸ ஓடையில் அன்னப்பேடாக ஸஞ்சரிப்பவள்.**

67-1. முநி - மனத்தையும் புலன்களையும் அடக்கியவர். வெளிநாட்டமில்லாதவர். பற்றற்றவர்; மானஸம் - மனம், கைலாஸ மலையின் பக்கத்திலுள்ள ஓடை, முனிவரின் மனம் கலப்பற்ற தெள்ளத் தெளிந்த நீருடன் மானஸ ஓடை போல் கலக்கமற்றுத் தெளிந்துள்ளது. தெளிந்த தூய நீரை மட்டுமே நாடும் அன்னப்பேடு மானஸ ஓடையைத் தன் இருப்பிடமாகக் கொண்டது. அதனை விட்டு வேறிடம் செல்லாது. தேவியும் அந்த அன்னப்பேடுபோல் முனிவரின் மனத்தை விட்டகலுவதில்லை. அந்தத் தெளிந்த மனங்களைவிடத் தூயதும் தெளிந்ததுமான இடம் அவளுக்குக் கிடையாது. அதனால் அங்கேயே தங்குபவள். தேவியைக் காண்பதற்காகவே அவர்கள் முனிவர்கள் ஆனார்கள். வெளி வெளிசத்தில் பழகிய கண்களுக்குக் குகையினுள் உள்ள பொருள் துலங்காது. வெளி வெளிச்சப் பழக்கமின்றி சிறிது அமர்ந்து உற்று நோக்கினால் குகையினுள் வெளிச்சம் தெரியும். நம்முன் தோன்றும் பேரொளியை உணரப் புறப்பொருள் நாட்டமும் புறவெளிச்சமும் குறையவேண்டும். அப்படிக் குறைத்துக்கொண்ட முனிவர்களின் மனத்தில் அன்னப்பேடு போல் சுற்றி வருபவள்.

(816)

**68. ஸத்ய - வ்ரதா. ஸத்யத்தை விரதமாகக் கொண்டவள்.**

68-1. வ்ரதம் - நல்லதெனக் கண்ட லக்ஷ்யத்தைஅடைவதற்குத் தேவையான உடலும் மனமும் உவந்து ஏற்றுக்கொண்டதுமான கட்டுப்பாடு; எண்ணம், சொல், செயல் என்ற மூன்றும் லக்ஷ்யத்தை அடைவதற்கு உதவும்படி அமைத்துக் கொண்ட கட்டுப்பாடு; நோன்பு. மனத் தளர்ச்சியால் இந்தக் கட்டுப்பாடுகள் சில சமயம் நழுவக்கூடும். அப்படி இன்றி நிலைத்த விரதம் கொண்டவர்கள். அப்படி நிலைத்த விரதங்கள் கொண்டவரின் வடிவிலுள்ளவள். ஸத்யம் - உண்மை பேசுதல். அதனையே விரதமாகக் கொண்டவள். ஸத்தியத்தை விரதமாகக் கொண்டவர்களின் வடிவில் தோன்றுபவள்.

68-2. அவளை வழிபட ஏற்றுக்கொண்ட விரதங்கள் அவளது அருளால் உண்மையாகப் பலிக்கும். கோபிச் சிறுமியர் கண்ணனைப் பதியாக வரித்து, அதற்கு உதவி அருளும்படி தேவியை வழிபடத் தேவியின் அருளால் விரதமிருந்தனர். அனைவரும் விரும்பியதை அடைந்தனர். ஸத்யவிரதன் என்பவன் ஒன்றுமறியாப் பேதை தனித்துக் காட்டிலிருந்தான். காட்டுப் பன்றி அவனை விரட்டியது. பயத்தில் ஐ ஐ எனக் கூவினான். பன்றி மறைந்தது. ஐ ஐ எனக் கூவினால் பயமில்லை என உணர்ந்தான். பிறகு அவ்விதம் சொல்வதால் நினைத்த காரியம் கைகூடுவதை உணர்ந்தான். ஐ என்ற தேவியின் பீஜாக்ஷரத்தை ஜபித்த புண்யத்தால் தேவியுடன் இரண்டறக்கலந்தான். அந்த ஸத்யவிரதனாக ஆனவளும் தேவியே.(817)

## 69. ஸத்ய - ரூபா. நிலைத்த தோற்றமுள்ளவள்.

69-1. தோற்றம் எனும் போதே தோன்றும் பொருள் அழியுமென்று நினைப்போம். அழிவுறக்கூடிய தோற்றம் எப்படி முக்காலும் நிலைத்திருக்கும் என ஐயம் எழும். தேவியின் தோற்றத்திலுள்ள தனிச் சிறப்பு - தேவி எப்போதும் இருப்பவள், அவள் தோன்றுவது என்பது நம் கண்களில் படுவதாகும். நம் கண்களில் படும்போது தான் அவள் இருக்கிறாள் என்பதில்லை. அதனால் அவள் ஸத்தியமான முக்காலும் நிலைத்த தோற்றம் உள்ளவள். லலிதாவாகவும், துர்க்காவாகவும், பண்டாஸுரன் அல்லது துர்க்கமனை அழிப்பதற்கெனத் தேவி தோன்றினாள். அந்தத் தோற்றம் அக்காலத்தில் மட்டும் இருந்ததுதானே. ராவணனை அழிக்க ராமன் தோன்றினார், பின்னர் மறைந்தார்; அதனால் அது தாற்காலிகம் தானே! ஸத்யம் என்பது எப்படி! என்று ஐயம் எழும். அங்ஙனம் மறைந்திருந்தால் திருவையாற்றிலிருந்த தியாகராஜருக்கும், பத்திராசலத்திலிருந்த ராமதாஸருக்கும், மதுராந்தகத்திலிருந்த ஆங்கிலேயருக்கும் ராமன் அதே வடிவில் காட்சி கொடுத்திருக்க முடியுமா? அதனால் அந்தத் தோற்றங்களும் தற்காலிகமல்ல. எக்காலத்திலும்

உள்ளவையே. நம் கண்களில் படுவதுதான் தாற்காலிகம். அதனால் ஸத்யமான வடிவங்களுள்ளவள் தேவி. (818)

**70. ஸர்வ - அந்தர்யாமிணீ. எல்லோருள்ளத்திலுமுள்ள அந்தர்யாமியாயுள்ளவள்.**

70-1. எல்லாவற்றிலும் (ஸர்வேஷாம் அந்தர்யாமிணீ) அந்தர்யாமியாயிருப்பவள். எல்லாமும் அந்தர்யாமியும் அவளே. (ஸர்வ அந்தர்யாமிணீ). நம்முள் இருந்துகொண்டு மூன்று தேகங்களையும் அததற்குத்தகுந்தபடி ஆட்டிவைத்துக்கொண்டு ( அந்த : யமயதி - அந்தர்யாமிணீ) அவைகளின் பாதிப்பால் பாதிப்புறாதவள். (819)

**71. ஸதீ . பதிவிரதை.**

71-1. சிவனது பதிவிரதையான பத்தினீ, ஸதீ எனத் தக்ஷனின் பெண்ணாக இருந்தபோது தேவியின் நாமம். ஸதீ - முக்காலத்திலும் இருப்பவள். ஸத் எனும் பிரும்ம ஸ்வரூபமாக இருப்பவள். (820)

* * *

**அதிகாரம் - 29**

# தேவியின் உலக ராஜ்ய நிர்வாஹம்

(நா. 821 -830)

ब्रह्माणी ब्रह्म जननी बहुरूपा बुधार्चिता ।

प्रसवित्री प्रचण्डाऽऽज्ञा प्रतिष्ठा प्रकटाकृतिः ॥ 155 ॥

**ப்ரம்ஹாணீ ப்ரம்ஹ ஜநநீ பஹுரூபா புதார்ச்சிதா.**

**ப்ரஸவித்ரீ ப்ரசண்டா (ஆ) ஜ்ஞா ப்ரதிஷ்ட்டா ப்ரகடாக்ருதிः 155.**

**1. ப்ரம்ஹாணீ. பிரும்ம சக்தி.**

1-1. அணீ, ஆணீ - கூரான ஆணி முனை. ஆனந்த மயகோசம் (24.48.1) என்பது காரண சரீரம், மாயா தத்துவம். அது ஆத்மாவை நன்கு அறிய முடியாதபடி வாளை மறைக்கும் உறைபோல் மறைப்பதால் கோசமாகிறது. ஆத்மாவின் இயற்கையான ஆனந்தம் இதில் பிரதிபலித்து ஆனந்தம் உணரப்படுவதால் இது ஆனந்த மயகோசம். இதனை ஆராயும்போது இதற்கு வால்போல் இதனைத் தொடரும் சுத்தப்

பிரும்மத்தைப் பற்றியும் சிறிது அறிய நேரிடுவதால் அதனை புச்சப்பிரும்மம் (வால்போல் பின் தொடரும் பிரும்மம்) என்பர். கூரான முனையைப்போல் ஸூக்ஷ்மமாயிருப்பது முதலில் தென்பட்டதால் பிரும்மத்தின் அணீ (ஆணி) என இதனைக் கூறுவர். அதன் வடிவில் இருப்பவள்.

1-2. பிரும்மத்தை அதன் இச்சா சக்தி வடிவிலிருந்து விளக்குவதாலும், மாயையால் வடிவெடுக்கத் தூண்டுவதாலும் ப்ரம்ஹாணீ (ப்ரம்ஹ ஆநயதி). பிரம்மாவை அவரது ஸிருஷ்டி சக்தியாக நின்று செயலாற்றுச் செய்வதால் ப்ரம்ஹாணீ - (ப்ரம்ஹாணம் ஆநயதி) ஸரஸ்வதி தேவி. (நா. 675) (821)

### 2. ப்ரம்ஹ. பிரும்மம்.

2-1. தேக பந்தமற்றவர்களால் தனது உண்மையான நிலை எனக் கண்டுகொள்ளப்பட்டதும், வேற்றுமையற்றதும் ஸத் சித் ஆனந்தம் என்ற மூன்றாகத் தியானத்தால் உருவகப்படுத்தக் கூடியதும், தன்னுணர்வாக மாத்திரம் அனுபவிக்கத் கூடியதுமான பரம்பொருள். பரம்பொருள் வேறு, அதன் சக்தி வேறு என்ற சிந்தனைக்கிடமில்லை. (822)

### 3. ஜநநீ. உலகைத் தோற்றுவித்தவள்.

3-1. தாய்க்கு 5 பெயர்கள் உண்டு. ஜநநீ - தகப்பனால் தன் சரீரத்தில் சேர்க்கப்பட்ட ஜீவ தத்துவத்திற்குக் கருவாக உருக்கொடுப்பவள். மாதா - கருவைத் தன்னுள் அடக்கி வைத்து அடைகாப்பவள். ப்ரஸவித்ரீ - ஸவித்ரீ - கருவாகத் தாங்கியதை வெளியில் வளர்க்கத் தக்க தருணம் வந்ததும் வெளியிடுபவள். தாத்ரீ - வெளியில் சிசுவைப் போஷித்து வளர்ப்பவள். அம்பா - ஆபத்து வேளையில் தானே வந்து காப்பவள். தேவி இந்த ஐந்து செயல்களையும் செய்வதால் ஐந்து பெயர்களையும் அடைகிறாள். (நா. 1, 337, 457, 826, 985, 1000) பிரும்மத்திடம் ஏற்பட்ட ஸங்கல்பமாக இச்சா சக்தியாக விளங்கிய தேவி மூலப் பிரகிருதியாக ஆகி உலகத்தின் கருவைத் தன்னுள் கொண்டு, அவ்யக்தம் மஹத் என்ற நிலையில் அடைகாத்து அஹங்கார நிலையில் அதனைப் பெற்று வெளியில் கொணர்ந்து பிரும்ம - விஷ்ணு - ருத்திரர்கள் வடிவில் அதன் வளர்ச்சியில் பங்கு பெறுகிறாள். (நா. 256) இந்த நிகழ்ச்சி நிரலில் ஜநநீ எனும் நிலைமுதலில் தோன்றுகிறது. உலகின் தோற்றத்திற்கான கருவை உருவாக்கியவள். (823)

**4. பஹு - ரூபா. பல உருவங்களுள்ளவள்.**

4-1. எல்லோரையும் படைப்பதற்காகப் பற்பல தாயுருவங்களைப் பெற்றவள். அவ்யக்தம், மஹத், அஹங்காரம், தன்மாத்திரம் முதலிய பல உருவங்களையுடையவள். (நா. 256) 'பஹுஸ்யாம், ப்ரஜாயேய', 'பலவாக ஆவேன், பெருகுவேன்' (தைத்திரீய உபநிஷத்) என்ற ஸங்கல்பப்படி தேவர், மனிதர், கால்நடை, புல், பூண்டு, மரம் முதலிய பலவாக ஆனவள். லலிதா, துர்க்கா முதலிய பல தோற்றங்கள் உள்ளவள். (824)

**5. புத - அர்ச்சிதா. அறிவாளிகளால் வழிபடப் பெற்றவள்.**

5-1. ஆத்ம ஞானம் பெற்றவர்களும், ஆத்ம ஞானம் பெற விரும்பி வேதாந்த நூல்களின் பரிசீலனையில் ஈடுபட்டவர்களும் அறிவாளிகள். அவர்கள் தேவியின் அருளால் உலகம் தோன்றும் அதிசயத்தையும், அவளது பல தோற்றங்களையும் கண்டு வியந்து மேலும் மேலும் அவளைப் பற்றி அறிய விழைக்கிறார்கள். (ஜிஜ்ஞாஸு) அவர்களாலும் புதனென்ற கிரகத்தாலும் வணங்கப்பட்டவள். (825)

**6. ப்ர - ஸவித்ரீ. சிறப்பு மிக்க தாய்.**

6-1. ஆகாசம், வாயு முதலியவற்றில் விரிந்த வடிவமுள்ள பிரபஞ்சமான இந்த உலகைப் பெற்று வெளிக் கொணர்ந்தவள். (நா. 29.3.2) (826)

**7. ப்ர - சண்டா. அதிகக் கோபம் உள்ளவள்.**

7-1. தன்னிடமிருந்து தோன்றிய பல வடிவங்களுள்ள – உலகம் ஒரே சீராக இயங்குவதற்காகக் கடுமையான நடவடிக்கைகளில் ஈடுபடுகிறாள் தேவி. தம்மிடம் யாவரும் பயப்படும்படி நடந்து கொள்கிறாள். "பீஷா அஸ்மாத் வாத: பவதே. பீஷா உதேதி ஸூர்ய :. பீஷா அஸ்மாத் அக்நிச்ச இந்த்ரச்ச. ம்ருத்யுர் தாவதி பஞ்சம:", "பரம்பொருளிடமுள்ள பயத்தால் வாயு ஓடுகிறான்; ஸூரியன் உதிக்கிறான. அக்கினியும் இந்திரனும் தம் தம் பணிகளில் ஈடுபடுகிறார்கள். யமனும் பயப்படுகிறான்," (தைத்திரீய உபநிஷத்) என்றவாறு அதிகாரச் சிறப்பு தேவர்களே பயந்து தத்தம் பணிகளில் ஈடுபடுகிறார்கள். அதிகாரத்தின் தலைமை பீடத்தில் இருப்பவர்கள் நடுங்குவதைக்கண்டு மற்றவர் தாமே அடங்கி நடப்பர். அப்படிப் பிறர் நடுங்கும்படி கடுமையைக் காட்டுபவள். (827)

### 8. ஆஜ்ஞா. அரச ஆணை வடிவினள்.

8-1. செய்யவேண்டியவைகளையும்தவிர்க்க வேண்டியவை களையும் பற்றிக் கடும் உத்தரவுகளாக வரும் வேத வாக்கியங்களாக இருப்பவள். கடுமையான நடவடிக்கைகளின் பலத்தில் நடைமுறைகளைச் சீராக வகுத்து அதற்கான நியமங்களைத் தனது ஆணையாகப் பிறப்பித்தவள். ஆஜ்ஞா எனும் சக்கிர வடிவில் உள்ளவள். (828)

### 9. ப்ரதி - ஷ்டா. நிலைத்த நிர்வாஹ சக்தியாயிருப்பவள்.

9-1. கடும் நடவடிக்கைகளைக் கொண்டும் நியமங்களைக் கொண்டும் நடக்கும் நிர்வாகத்தில் எதிர்ப்பு சக்திகளால் நிலைகுலையாதவாறு இருக்க அழுத்தமான அடிப்படை பலம் தேவை. அந்த ஆதார சக்தியாக நின்று தேவி நிர்வகிக்கிறாள்.

9-2. பஞ்சபூதங்களின் கலைகளான நிவ்ருத்தி, பிரதிஷ்டா, வித்யா, சாந்தி, சாந்த்யதீதா என்ற ஐந்தில் பிரதிஷ்டா எனும் ஜல தத்துவத்தின் கலையாயிருப்பவள். (புறப்பொருள் நாட்டத்திலிருந்தும் திரும்புதல் நிவ்ருத்தி - பிருதிவீ தத்துவத்தின் கலை. பரம்பொருளிடம் கொண்ட நாட்டத்தால் அதனிடம் நிலைத்திருப்பது பிரதிஷ்ட்டா - ஜல தத்துவத்தின் கலை. பர தத்துவத்தைப் பற்றிப் பகுத்தறிவில் வித்யா- அக்னி தத்துவத்தின் கலை. அறிவால் மனம் அமைதியுற்றுப் பரம்பொருளிடம் லயமடைதல் சாந்தி - வாயுவின் கலை. பிரும்மானந்த அனுபவம் சாந்த்யதீதா - ஆகாசத்தின் கலை என ஐந்து கலைகள்.) (829)

### 10. ப்ரகட - ஆக்ருதி :. வெளிப்படையாக எங்கும் தோன்றுபவள்.

10-1. அரசன் எங்கோ இருக்கிறான் என்ற எண்ணம் நிர்வாகத்தில் தளர்ச்சியை உண்டாக்கும். அதனால் எல்லோரும் எங்கும் காணும்படியாக (ப்ரகடா - ஸர்வை : அனுபூயமாநா) பல வடிவங்களை வெளிப்படையாகக் கொண்டு அங்கிங்கெனாதபடி நிரம்பி ஒன்றை மற்றொன்றாக நின்று கட்டுப்படுத்துபவள். பிரகடா எனும் யோகினிகளின் வடிவினள். (9.10.15.1)

(830)

(நா . 831 - 837)

प्राणेश्वरी प्राणदात्री पञ्चाशत्पीठरूपिणी ।
विशृङ्खला विविक्तस्था वीरमाता वियत्प्रसूः ॥ 156 ॥

**ப்ராணேச்வரீ ப்ராணதாத்ரீ பஞ்சாசத்பீடரூபிணீ.**
**விச்ருங்கலா விவிக்தஸ்த்தா வீரமாதா வியத்ப்ரஸூ: 156**

**11. ப்ராண - ஈச்வரீ. பிராணனுக்கு ஈச்வரீ.**

11-1. ப்ர - அந :- சிறப்புள்ள இயக்கம். உலகத்தின் சிறப்பான இயக்கத்தை முன் நின்று தன்னிஷ்டப்படி நடத்துபவள். ஸூக்ஷ்ம சரீர ஸமஷ்டியில் சேர்ந்த பிராணசக்தியைக் கட்டுப்படுத்துபவள். கர்ம ஸமஷ்டியில் சக்தி பிராணன். (நா. 783) அதனை நிர்வகிப்பவள். ப்ர - அந :. உயர்ந்த சொல் வடிவமான வேதம். அதன் தலைவி. (831)

**12. ப்ராண - தாத்ரீ. பிராண சக்தியை அளிப்பவள்.**

12-1. உலகிற்கு உயிரூட்டி வாழ்விப்பவள். (நா. 783) (832)

**13. பஞ்சாசத் - பீட - ரூபிணீ. ஐம்பது பீடங்களாக இருப்பவள்.**

13-1. பஞ்சாசத் - ஐம்பது என்பது ஏறக்குறைய ஐம்பது எனப் பொருள்படும். 51 பீடங்கள் கூறப்படுவதால் பஞ்சாசத் என்ற சொல்லிற்கு லக்ஷணையாக 51 என்று இங்கு பொருள். ஷோடா நியாஸங்களில் ஐந்து நியாஸங்கள் முன்பு (நா. 3.1, 21.12-11) விளக்கப்பட்டுள்ளன. அ முதல் க்ஷ அக்ஷரங்கள், மாத்ருகைகள் எனப்படுபவை. தேவியின் சக்திபீடங்கள் 51. அவைகள் பாரத தேசத்தின் பல்வேறு பகுதிகளில் உள்ளவை.சக்தி பீடங்கள் - சக்தி அமைந்த இடங்கள். சக்தி மிக்க அந்த இடங்களாக நமது உடல் ஆகவேண்டுமென அந்தச் சக்தி பீடங்களில் உறையும் தேவியைத் தியானித்து உடற்பகுதியைத் தொட்டுத் தேவதா சக்தி அங்கு உட்புகுந்துவிட்டதாகப் பாவனை செய்கிறோம். இது பீட நியாஸம்.

13-2. சக்தி பீடங்கள் - தக்ஷனின் பெண்ணாக ஸதீ என்ற திருநாமத்துடன் தேவி தோன்றினாள்; பரமசிவனை மணந்தாள். பரமசிவனிடம் முன்வினைப் பயனாகத் துவேக்ஷம் கொண்ட தக்ஷன் சிவனுக்கு வேள்விகளில் பங்கில்லாமல் செய்வதால், சிவத் துவேக்ஷியானவனுக்கு தான் மகளாக இருக்க விரும்பாமல் யோகாக்கினியால் தேவி தன் உடலை எரித்துக் கொண்டாள். தனது

கோபத்திலிருந்தும் வீரபத்திரனைத் தோற்றுவித்துத் தக்ஷயாகத்தைச் சிவன் அழித்தார். (நா. 598 -600) எரிந்து கொண்டிருக்கும் ஸதியின் உடலைத் தன் தோளில் சுமந்து பித்தனாகச் சென்று கொண்டிருந்தார். விஷ்ணு தனது அம்புகளால் ஸதியின் உடலைத் துண்டு துண்டுகளாக்கி வீழ்த்தினார். 'சித்கலா' ஆன தேவியின் உடற்பகுதிகள் வீழ்ந்த இடங்கள் சக்தி பீடங்களாயின. அவை 51. அந்தப் பீடங்களே தேவியின் வடிவங்களாகும். (நா. 375 - 379).

13-3. இந்தச் சக்தி பீடங்களையும், மாத்ருகாக்ஷரங்களையும் இணைத்து நியாஸம் செய்வது வழக்கம். பீடங்கள், நியாஸத்தில் தொடவேண்டிய உடற்பகுதிகள் என்ற வரிசையில் இங்கு தரப்பட்டுள்ளன.

1. காமரூபம் (தலை)
2. வாராணஸீ (முகம்)
3. நேபாளம் (வலது கண்)
4. பௌண்டிரவர்த்தனம் (இடது கண்)
5. புரஸ்திர காச்மீரம் (வலது காது)
6. கான்யகுப்ஜம் (இடது காது)
7. பூர்ணசைலம் (வலது மூக்குத்துளை)
8. அர்புதசைலம் (இடது மூக்குத்துளை)
9. ஆம்ராதகேச்வரம் (வலது மென்னி)
10. ஏகாம்பரம் (இடது மென்னி)
11. த்ரிஸ்ரோதஸ் (மேலுதடு)
12. காமகோடி (கீழ் உதடு)
13. கைலாஸம் (மேல் பல்வரிசை)
14. ப்ருத நகரம் (கீழ் பல்வரிசை)
15. கேதாரம் (நாக்கின் நுனி)
16. சந்திரபுஷ்கரணீ (முன் கழுத்து)
17. ஸ்ரீபுரம் (வலது புஜம்)
18. ஓங்காரம் (வலது முழங்கை)
19. ஜாலந்தரம் ( வலது மணிக்கட்டு)
20. மாலவம் (வலது கை விரல் அடிப்பகுதி)
21. குலாந்தகம் ( வலது கை விரல் நுனிப்பகுதி)
22. தேவீகோடம் (இடது புஜம்)
23. கோகர்ணம் (இடது முழங்கை)
24. மாருதேச்வரம் (இடது மணிக்கட்டு)
25. அட்டஹாஸம் (இடது விரல் அடிப்பகுதி)
26. விரஜா (இடது கை விரல் நுனிப்பகுதி)

27. ராஜகேஹம் (வலது தொடை)
28. மஹாபதம் (வலது முழங்கால்)
29. கோலாபுரம் (வலது கணுக்கால்)
30. ஏலாபுரம் (வலது கால் விரல் அடிப்பகுதி)
31. காலேச்வரம் (வலது கால் விரல் நுனி)
32. ஜயந்திகா (இடது தொடை)
33. உஜ்ஜயிநீ ( இடது முழங்கால்)
34. சித்ரா (இடது கணுக்கால்)
35. க்ஷீரிகா ( இடது கால் விரல் அடிப்பகுதி)
36. ஹஸ்திநாபுரம் ( இடது கால் விரல் நுனி)
37. உட்டீசம் (வலது விலா)
38. ப்ரயாகம் ( இடது விலா)
39. ஷஷ்டீசம் ( முதுகு)
40. மாயாபுரீ ( தொப்புள்)
41. ஜலேசம் ( வயிறு)
42. மலயம் (இதயம்)
43. ஸ்ரீசைலம் (வலது தோள்)
44. மேரு (கழுத்தின் பின்புறம்)
45. கிரிவரம் ( இடது தோள்)
46. மஹேந்த்ரம் ( இதயம் முதல் வலது கை விரல் நுனி வரை)
47. வாமநம் ( இதயம் முதல் இடது கை விரல் நுனி வரை)
48. ஹிரண்யபுரம் (இதயம் முதல் வலது கால் விரல் வரை)
49. மஹாலக்ஷ்மீபுரம் (இதயம் முதல் இடது கால் விரல் வரை)
50. ஒட்டியாணம் ( இதயம் முதல் குறி வரை)
51. சாயாச்சத்திரம் ( இதயம் முதல் தலை வரை)

இந்த 51 பீடங்களாக இருப்பவள் தேவி. (இவைகளின் விளக்கத்தை இணைப்பு 2ல் காண்க.) (833)

**14. விச்ருங்கலா. தளைகளற்றவள்.**

14-1. கட்டுவதற்கான உலோகத்தாலான சங்கிலி - ச்ருங்கலா, அதனால் ஏற்பட்ட தளைகள் அறுபடாது வலிவுடன் இறுகி இஷ்டப்படிச் செயலாற்றுவதைத் தடை செய்யும். வினைகள் தளையாக நின்று மனிதனைத் தடை செய்கின்றன. பாபமாயின் இரும்புச் சங்கிலி போல், புண்ணியமாயின் தங்கச் சங்கிலி போல்; ஆனால் பிணைப்பு இரண்டிலும் சமமே. வினையாலான தளைகள் தேவிக்கு இல்லை. தேவியின் அடியார்களிடமும் அத்தளைகள் பயனற்றவை.

14-2. பெண்கள் இடுப்பில் ஆடை தரித்து நிற்பதற்காகச் சங்கிலி வடிவில் மேகலையை அணிவர். திரஸ்கரிணி என்ற தேவி ஆடையற்றவள். ஆடையில்லாததால் அதற்கான சங்கிலி மேகலையும் அவள் அணியவில்லை. திரஸ்கரிணீ - மறைக்கும் சக்தி, அதற்கு ஒரு மறைப்பு எதற்கு? மறைப்பற்றவளாதலால் மறைப்பைப் பிடித்துக் கொள்ளும் சங்கிலியுமில்லை. (834)

**15. விவிக்த - ஸ்த்தா. தனிமையில் இருப்பவள்.**

15-1. விவிக்தம் - பகுத்தறிந்து தேர்ந்தெடுத்த இடம், தூய இடம், தனிமையுள்ள இடம். புறச் சூழ்நிலையும் தூயதாய், அமைதியும் தனிமையுமுள்ள இடம் விவிக்தம் - தெய்விகச் சிந்தனைக்கேற்றதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டது. தனிமையற்றிருந்தும் தூய மனமுள்ளவர் - ஒரே சிந்தனையுள்ளவர் நிரம்பிய இடம் விவிக்தமானதே. வேறு சிந்தனைகளால் மனக்கலக்கம் ஏற்படாதாகையால் அதுவும் ஒரு வகையில் தனிமையுள்ள இடமே. மனித ஸஞ்சாரமற்ற தனிமையுள்ள இடமாயினும் புறத்தூய்மைக்கும் மனித தூய்மைக்கும் இடமல்லவெனில் அது விவிக்தமாகாது. விவிக்தமான இடத்தில் - தனிமையும், தூய்மையும், தெய்வீகமும் நிரம்பிய இடத்தில் இருப்பவள்.

15-2. விவிக்தர்கள் - பகுத்தறிவுள்ளவர்கள். ஆத்மா, அனாத்மா என்ற இரண்டையும் பகுத்தறிவர்கள். ஆத்ம சிந்தனையுள்ளவர்கள். அவர்களிடம் தேவி வசிப்பாள். (835)

**16. வீர - மாதா. வீரர்களின் தாய்.**

16-1. வீரர்கள்; தான் தனது என்ற நினைவின்றிச் செயல்படுபவர்கள். (28.28.1) அவர்களைத் தன் வயிற்றில் கருவைக் காக்கும் தாய் போல் காப்பாற்றுபவள். (நா. 1, 457, 823) வீரபாஹு முதலான நவ வீரர்களை முருகனுக்குத் தம்பிகளாகத் தனது குமாரர்களாக ஏற்ற தாய். (836)

**17. வியத் - ப்ரஸூ:. ஆகாசத்தைப் பெற்றெடுத்தவள்.**

17-1. ப்ரஸூ:- ப்ரஸவித்ரீ - பெற்று வெளிக்கொணரும் தாய், (29.3.1) வியத் - ஆகாசம். நாம் நெருங்க நெருங்க நம்மை விட்டு விலகிச் சென்று கொண்டிருப்பதால் ஆகாசம் வியத் - (ஸ்யேதி) ஆகிறது. உலகப் படைப்பு தொடங்குகையில் முதலில் தோன்றியது ஆகாசதத்துவம். சிசுவைப் பெற்று வெளிக்கொணரும் தாய்போல் தன்னுள் உருவற்றிருந்த உலகிற்கு

உருவமும் அவயவப் பிரிவும் தந்து உரிய வளர்ச்சி பெற்றுத் தனித்திருக்கும் தகுதி பெற்றவுடன் ஆகாயமாகவும் (மற்ற ஏனைய பூத தத்துவங்களாகவும்) வெளிப்படுத்தியவள். (நா.550, 823) (837)

(நா . 838 - 843)

मुकुन्दा मुक्तिनिलया मूलविग्रहरूपिणी ।
भावज्ञा भवरोगघ्नी भवचक्रप्रवर्तिनी ॥ 157 ॥

**முகுந்தா முக்திநிலயா மூலவிக்ரஹரூபிணீ.**
**பாவஜ்ஞா பவரோகக்க்நீ பவசக்ரப்ரவர்த்திநீ. 157**

**18. முகுந்தா - முக்தி அளிப்பவள்.**

18-1. முகு - முக்தி. அதனைத் தருபவள் முகுந்தன் - கோவிந்தன். அவனது வடிவில் இருப்பவள். தானே முக்தியைத் தருபவள். தேவி ஒரு சமயம் ஆண் வடிவம் கொள்ள நினைத்தாள். அவள் எடுத்த வடிவம் கண்ணன். புல்லாங்குழலிலிருந்து வெளியான ஒலியால் உலகை வசப்படுத்தினாள். தன் சக்திகளைக் கோபிகளாக்கி அவர்கள் சூழ அழகாக விளங்கினாள் (குந்திரராஜம்). நல்வழிகாட்டிக் கட்டுப்படுத்திக் கண்காணித்துக் தேர்ந்தவர்களுக்கு முக்தி தருபவள். (838)

**19. முக்தி - நிலயா. மோக்ஷத்திற்கு இருப்பிடம்.**

19-1. மோக்ஷம் ஐந்து விதம்.ஸகுண உபாஸனையால் கிடைப்பது நான்கு விதம். ஸாலோக்யம், ஸாமீப்யம், ஸாரூப்யம், ஸாயுஜ்யம். நிர்குண ஞானத்தால் அடைவது நிர்வாணம். அந்த முக்திக்கு நிலயம் - அவளிடம் இருப்பதைப் பிறர் அறியாதபடி சேமித்து வைத்துள்ள இடம். (நா.390, 625 , 926)

19-2. ஸாலோக்கியம் ஸாமீப்பியம் ஸாரூப்யம் ஸாயுஜ்யம் எனும் முக்திகள் அபர முக்திகள் எனப்படும். இங்கு மூன்று தேகங்களிலிருந்தும் விடுதலை என்ற அளவில் முக்தி கிட்டுகிறது. இதில் ஸகுண மூர்த்தி என்ற உபாதியுடன் கூடிய பிரும்மத்துடன் ஐக்கியம் ஏற்பட்டுள்ளது. நிர்வாணம் எனும் ஐந்தாவது முக்தி பரமுக்தி. உபாதியற்ற குணமற்ற விசேஷங்களற்ற பிரும்மத்துடன் ஐக்கியம் என்பது அதில் விசேஷம். இவைகளைத் தகுதிக்கேற்ப வழங்குவதற்கெனத் தன்னிடம் வைத்திருப்பவள். (839)

### 20. மூல - விக்ரஹ - ரூபிணீ. மூலவிக்கிரக வடிவினள்.

20-1. தேவி பல தோற்றங்களில் காணப்பெறுகிறாள். துர்க்கா, ஸரஸ்வதீ, லக்ஷ்மீ, பாலா, அன்னபூர்ணா முதலிய தேவியின் பல தோற்றங்களுக்கும் மூலம் ராஜராஜேசுவரியான ஸ்ரீலலிதா தேவி. அந்தத் தோற்றத்திற்கும் மூலம் பரப்பிரும்மம். அந்த மூல வடிவையும், தன்னை எளிதாக அறியும்படி எடுத்துக்கொண்ட பல விக்ரகங்களையும் - தோற்றங்களையும் தன் வடிவங்களாகக் கொண்டவள். மூலமாயுள்ள பரம்பொருளாகிய தன்னை எளிதாக அறியும்படி எடுத்துக்கொண்ட நான்கு கைகள் கொண்ட திருவுருவமாக இருப்பவள்.(நா. 4-11) (840)

### 21. பாவ - ஜ்ஞா. கருத்தை அறிபவள்.

21-1. பாவம் - உள்ளுணர்வு, எண்ணம், இயற்கையாக அமைந்த ஸ்வபாவம், செயல், பிறப்பு (அதிலிருந்து தொடங்கும் தோற்றம், வளர்ச்சி, மாறுபாடு, தேய்வு, அழிவு என்ற நிலைகள்) பிறவியால் ஏற்படும் இன்ப துன்பங்கள். அத்தகைய பாவங்கள் அனைத்தையும் தேவி அறிவாள். (அதற்கேற்ப நடப்பாள்) பவன் - சிவன்; அவரது அடியார்கள் பாவர்கள். அவர்களைத் தன்னைச் சேர்ந்தவர்கள் என அவள் நன்கு அறிவாள்.(841)

### 22. பவ - ரோக - க்க்நீ. பிறவிப் பிணியை அழிப்பவள்.

22-1. ரோகம் - பிணி, வேதனை தருவது - அமைதியளிக்காது. பிறவி ஒரு பிணி. அது வளர்ச்சி தேய்வு அழிவு என்று மாறிமாறி விரும்புபவைகளுடன் விரும்பத்தகாத நிலைகளையும் வினைகளின் பயனாகச் சேர்த்துத் தருவதால் வேதனை தருகிறது. தேவி பிறரால் ஏற்படும் வேதனையை அழிப்பவள். அடுத்த பிறவி உயர்ந்ததாக அமையவோ, பிறப்பற்றுப் போகவோ இப்பிறவி காரணமாக அமைந்தால் வேதனை தராது. அப்படிப் பிறவியை அமைத்து முன்வினையால் விளைந்த வேதனையையும் அகற்றுபவள். (114, 175, 742) (842)

### 23. பவ - சக்ர - ப்ரவர்த்திநீ. ஸம்ஸாரமெனும் சக்கிரத்தைச் சுழற்றுபவள்.

23-1. உலகத்தில் தோன்றிய பொருளனைத்தும் ஒன்றுக்கொன்று பொருந்துபவையாக ஒரே சீருடன் இயங்குகின்றன. ஒருவரது வாழ்வின் கோணம் மற்றொருவரது வாழ்வின் கோணத்துடன் பொருந்திச் சக்கரம்போல் இயங்குகின்றது. பொதுவாக இது அதனை இயக்குவது

போலவும் அது இதனை இயக்குவது போலவும் தோன்றினாலும் இந்த இயக்கங்களுக்குக் காரணமாக இவைகளின் சக்திக்கு அப்பாற்பட்டதும் இவைகளை மீறிய சக்தியுமானதொன்று இவைகளை இணைத்து இயக்கிக்கொண்டிருப்பதை ஊகிக்க முடிகிறது. அப்படி ஊகிக்கப்படுபவள். சக்கிரச் சுழலைச் சீராக நடத்துபவள்.

23-2. ஆஜ்ஞா என்ற நெற்றியில் அமைந்த சக்கிரம் சிவனைச் சேர்ந்தது. பவன் - சிவன். அவரது சக்கிரமான ஆஜ்ஞையை இயக்குபவள். குண்டலினீ வடிவில் உள்ள தேவி. (12.18) ஸ்ரீ சக்கிரத்தில் கிழக்கு நோக்கி அமைந்த முக்கோணங்கள் நான்கும் சிவ சக்கிரங்கள். மேல் நோக்கிய முக்கோணங்கள் ஐந்தும் சக்தி சக்கிரங்கள். (9-10-18) பிந்து, எட்டு தளம், பதினான்கு கோணம் என்ற ஐந்தும் சக்தி சக்கிரங்கள். திரிகோணம், எட்டு கோணம், பத்து கோணங்கள் இரண்டு, பதினான்கு கோணம் என்ற ஐந்தும் சக்தி சக்கிரங்கள். சிவ சக்கிரங்களை இயக்கும் சக்தி சக்கிரங்களாக இருப்பவள் தேவி.

23-3. மனம் சக்கிரம் போன்று எப்போதும் சுழன்றுகொண்டு இருப்பதால் சக்கிரம். பவனது (சிவனது ) மனமாகிய சக்கிரத்தை இயக்குபவள் தேவி. "சலஸ்வரூபம் அத்யந்தம் ஜவேந அந்தரிதா நலம். சக்ரஸ்வரூபம் ச மநோ தத்தே விஷ்ணு : கரே ஸ்த்திரம்" "எப்போதும் சுழன்று கொண்டேயிருப்பதும், வேகத்தால் ஏற்பட்ட நெருப்பை இடைவெளிகளில் கொண்டதும் சக்கிர வடிவில் உள்ளதுமான மனத்தை விஷ்ணு கையில் ஏந்தியிருக்கிறார்" (விஷ்ணு புராணம்). (843)

(நா. 844-850)

छन्दःसारा शास्त्रसारा मन्त्रसारा तलोदरी ।
उदारकीर्तिरुद्दामवैभवा वर्णरूपिणी ॥ 158 ॥

**ச்சந்தஸ்ஸாரா சாந்த்ரஸாரா மந்த்ரஸாரா தலோதரீ.**
**உதாரகீர்த்திருத்தாமவைபவா வர்ண ரூபிணீ. 158**

**24. சந்தஸ் - ஸாரா. வேதத்தின் சாரமாக இருப்பவள்.**

24-1. மூன்று வேதங்களின் சாரமாக அமைந்தது காயத்திரீ. காயத்திரியின் பொருளாகச் சாரமாக அமைந்தது பஞ்சதசாக்ஷரீ என்ற மந்திரம். காயத்திரீ மந்திரமாகவும் பஞ்சதசாக்ஷரீ மந்திரமாகவும் இருப்பவள். வேதத்தின் ஸாரம் - முக்கியப்பகுதி உபநிடதமானவள்.

வேதத்தின் சாரமாக அதனூடே பரவி நிற்பவள். சந்தஸ் என்பது செய்யுள் இலக்கணம். விருத்த அமைப்பைப் பற்றி அறிவிக்கும் நூல். அதனால் அறியப்படும் விருத்தங்களில் சாரம் - முக்கியமானது, காயத்திரீ என்ற இருபத்தி நான்கு எழுத்துக்கள் கொண்ட விருத்தம். அந்த விருத்தமானவள்.

24-2. சந்தஸ் - விருப்பம். தேவி உபாஸனையில் ஈடுபட்டுத் தன் மனத்தைத் தேவியின் மனமாகவே ஆக்கிக்கொண்ட பெரியோர்கள் - துர்வாஸர் போன்றவர்கள் சிலர் உண்டு. அவர்களது நடவடிக்கைகளைக் காணும்போது உலகியல்புப்படி தர்மம் என்றும்- அதர்மம் என்றும் கொண்டவைகளை அவர்கள் மதிக்காமலிருப்பதாகத் தோன்றும். அவர்கள் மனம் எதில் ஈடுபடுகிறதோ அது தர்மம். எதில் ஈடுபடவில்லையோ அது அதர்மம். அவர்கள் மனம் போன போக்குபடி நடப்பவர்களெனத் தோன்றும். அவர்களது உள்ளத்தை இயக்கிவைக்கும் தேவியின் விருப்பப்படி நடப்பவர்களானதால் அவர்களது செயல்கள் தர்மத்திற்கு உட்பட்டவையே. அத்தகைய சித்தப்போக்கு சிவன் போக்கு என வாழும் சிறப்புள்ள பெரியோர்களின் விருப்பத்தை ஸாரமாக - நியாயத்திற்கு உட்பட்டதாக ஆக்குபவள் தேவி. சந்தஸ் - இச்சாசக்தி. ஆதனைத் தன் பலமாகக் கொண்டவள். (844)

### 25. சாஸ்தர - ஸாரா. சாஸ்திரங்களைப் பலமாகக் கொண்டவள்.

25-1. வேதமும் வேத வழியில் விளக்கம் தரும் தர்சனங்களும் சாஸ்திரங்கள் செய், செய்யாதே எனக் கூறி நடைமுறையைக் கட்டுப்படுத்துபவை. அவை தெய்வீகமான வாழ்வு அமைவதற்காகவே இந்தக் கட்டுப்பாடுகளைப் போதிக்கின்றன. சாஸ்திரங்களின் ஸாரமான தெய்வீக வாழ்விற்கான உபதேசங்களாயிருப்பவள். சாஸ்திரங்களின் ஸாரமாக அவைகளினுள். பல தத்துவங்களின் வடிவில் பரவி மறைந்திருப்பவள். (845)

### 26. மந்த்ர - ஸார. மந்திரங்களைப் பலமாகக் கொண்டவள்.

26-1. மந்திரங்களைப் போதிக்கும் நூல்கள் காட்டும் மந்திரங்களின் சக்தியாக இருப்பவள். அரசியல் திட்டங்களான மந்திரங்களைத் தன் சக்தி வடிவாகக் கொண்டவள். மந்திர நூல்களின் ஸாரமாக ஸ்ரீவித்யையாக இருப்பவள். ஆள்பவர்களின் ரகசியத் திட்டங்களைப் பலமாகக் கொண்ட அரசி. (846)

**27. தல - உதரீ. கைத்தலம்போல் மேடிடாத உள்ளடங்கிய வயிறு உள்ளவள். (847)**

**28. உதார - கீர்த்தி: பெரும் புகழுள்ளவள்.**

28-1. சிறுமை தரும் பொருளுடன் தொடர்பைக் கொள்ளாமல் பெரும் பொருளுடன் தொடர்புகொள்பவள் பெரியவன் - உதாரன். அழியும் செல்வத்தில் நாட்டமின்றி அதனை வாரி வழங்கும் வள்ளலும் உதாரன். அவர்களது புகழ் வடிவில் உள்ளவள். பெருமைமிக்க கீர்த்தி உள்ளவள். எளிதில் பரவும் சிறந்த புகழைத் தருபவள்.

28-2. நோய், எதிரிகள் முதலியவைகளால் துன்பமடைந்தவன், துன்பம் தீர ஆண்டவனை வேண்டுகிறான். அவ்விதமே பேரறிவு பெற விரும்புபவனும், பொருளை நாடுபவனும், ஞானியும் ஆண்டவனை வேண்டுகிறார்கள். தன் நலனை அடைய வேறு வழி இருந்தும் அதனை நாடாமல் ஆண்டவனே எதனையும் சாதித்துத் தருவான் என்ற நம்பிக்கையுடன் அவர்கள் ஆண்டவனை நம்பி இருப்பவர்கள் அதனால் அவர்கள் மஹான்களே. சதுர்விதா: பஜந்தே மாம் ஜநா: ஸுக்ருதிநோ அர்ஜுந. ஆர்த்தோ ஜிஜ்ஞாஸுர் அர்த்தார்த்தீ ஜ்ஞாநீ ச பரதர்ஷப. உதாரா: ஸர்வ ஏவ ஏதே (கீதை. 7, 16-18) அப்படித் தேவியைப் புகலிடமாக அடைந்து தன் விருப்பங்களை அவளது அருளால் பெற முயலும் மஹான்களின் புகழ் வடிவில் உள்ளவள். (848)

**29. உத்தாம - வைபவா. அடங்காப் பெருமை கொண்டவள்.**

29-1. உத்தாம - கட்டுக்கடங்காத. (தாம - பிணைக்கும் கயிறு - விபு - எங்கும் நீக்கமற நிறைந்திருந்தும் எளிதில் வெளிப்படாதிருப்பது. அதன் தன்மை, பெருமை, வைபவம், இவ்வளவென்று அளவிட முடியாத பெருமை உடையவள். (849)

**30. வாண - ரூபிணீ. எழுத்து வடிவினள்.**

30-1. வாணம் - எழுத்துக்கள். அ முதல் ள வரை, ஒலியைத் தாங்கும் வடிவம். வர்ணம் - நிறம், ரூபத்தை விளக்குவது. இவ்விரண்டுமாயிருப்பவள். (850)

(நா. 851 - 853)

जन्ममृत्युजरातप्तजनविश्रान्तिदायिनी ।
सर्वोपनिषदुद्घुष्टा शान्त्यतीतकलात्मिका ॥ 159 ॥

**ஜன்மம்ருத்யுஜராதப்தஜநவிச்ராந்திதாயிநீ.**
**ஸர்வோபநிஷதுத்க்குஷ்டா சாந்த்யதீதகலாத்மிகா.159**

**31. ஜந்ம - ம்ருத்யு - ஜரா - தப்த - ஜந - விச்ராந்தி - தாயிநீ. பிறப்பு, இறப்பு, மூப்பு இவற்றால் வாடிய மக்களுக்கு ஓய்வளிப்பவள்.**

31-1. பிறப்பும், இறப்பும், மூப்பும் நீங்காப் பிணிகள் விருப்பத்திற் கேற்ப அமையாதவை. வினையால் விளைந்தமையால் அனுபவித்துத் தீர்க்க வேண்டியவை. அனுபவித்துத்தான் தீர வேண்டுமென்ற நிலை ஏற்படின் சுகமே துக்கமாகிவிடும். துக்கமாயின் கொடும் துக்கமாகிவிடும். இம்மூன்றும் கட்டாயமாக அனுபவிக்க வேண்டியவை என்ற நிலையில் அனலைப் போல் வாட்டி வதைக்கின்றன. அவற்றால் வாட்டப்பட்டவர்கள் தன்னைச் சரணாகப் பற்றும் போது அவர்களின் தாபத்தை அவள் போக்கிப் பிறப்பெனும் பிணியிலிருந்தும் ஓய்வு தருகிறாள். இனிப் பிறப்பில்லை. அதனால் இறப்பும் அதன் முன்னோடியான மூப்பும் இல்லை. பிறப்பையும் இறப்பையும்விட மூப்பு தாபம் மிக்கது. பயம் தரும் மரணத்தை எதிர்பார்க்கும் நிலை. பிறப்பையும் இறப்பையும் விட நீண்ட நேரம் அனுபவிக்கத்தக்கது. இதனால் தாபம் அதிகம். இம் மூன்றிலிருந்தும் இரு வகையில் ஓய்வு உண்டு. ஒன்று தாற்காலிகம், மரணத்திற்குப் பின் பிறக்கும் வரை ஏற்படும் ஓய்வு. மற்றொன்று நிலைத்தது - மோக்ஷம் எனப்படுவது. அதுவே விச்ராந்தி - இடைவெளியற்ற சிறப்புள்ள ஓய்வு. அதனைத் தருபவள்.

**32. ஸர்வ - உபநிஷத் - உத்க்ருஷ்டா. எல்லா உபநிடதங்களிலும் சிறந்தவள் எனப் பறைசாற்றப்பட்டவள்.**

32-1. உபநிடதங்கள் பரம்பொருளைப் பற்றிய ரகசியத்தை விளக்குபவை. ஸகுணப்பிரம்ம வடிவில் பரம்பொருளை விளக்க வந்த நூல்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு ஸகுண வடிவைச் சிறந்ததெனக் கூறும். ஆனால் நிர்குணமான பேதமற்ற பிரும்ம ஸ்வரூபத்தைக் காட்ட வந்த உபநிடதங்கள் பிரும்ம ஸ்வரூபிணியான தேவியைப் பற்றிச் சிறப்பாகப் பறை சாற்றுகின்றன. (852)

**33. சாந்தி - அதீத - கலா - ஆத்மிகா. சாந்தியதீதகலை.**

33-1. பஞ்ச பூதங்களின் கலைகளில் (29.9.2) ஆகாச தத்துவத்தின் கலையாக இருப்பவள் தேவி. சாந்தி வரையிலுள்ள நான்கு கலைகளுக்கும் இது அப்பாற்பட்டும் விளக்க முடியாமலும் இருப்பதால் சாந்தி - அதீதா என இதனைக் குறிப்பிடுவர். இது ஸதாசிவ தத்துவத்தை விளக்க வந்தது. (ஈசுவரன் துரீயன், ஸதாசிவன் துரீயாதீதன் என்ற முன் விளக்கம் இங்கு காணத்தக்கது). (17.23.3) (853)

(நா. 854 - 861)

गंभीरा गगनान्तरस्था गर्विता गानलोलुपा ।
कल्पनारहिता काष्ठाऽकान्ता कान्तार्धविग्रहा ॥ 160 ॥

**கம்ப்பீரா ககநாந்தஸ்ஸ்த்தா கர்விதா காநலோலுபா. கல்பநாரஹிதா காஷ்ட்டா(அ)காந்தா காந்தாத்த்த விக்ரஹா. 160**

**34. கம்ப்பீரா - ஆழங்காண முடியாதவள்.**

34-1. எல்லையற்ற பெரு வடிவம் கொண்டவள் ஆனதால் இத்தன்மையவள் எனக் குறிப்பிட முடியாத பெருமை கொண்டவள். சிவ சக்தியை ஆழம் காண முடியாத நீர்த் தேக்கமாகக் (மஹாஹ்ரதம்) குறிப்பிடுவர். தெளிந்த ஆழமுள்ள நீர்த் தேக்கத்தில் அடித்தளம் அருகிலிருப்பதாகப் புலப்பட்டாலும் உள்ளே செல்லச் செல்ல ஆழம் அண்ட முடியாதிருப்பதுபோல் தேவியில் பெருமையும் ஆழம் காண முடியாதது. (854)

**35. சுகந - அந்தஸ் - ஸ்த்தா. ஆகாசத்தின் நடுவில் இருப்பவள்.**

35-1. நாம் காணும் ஆகாசம் பூத ஆகாசம். நம் இதயத்தின் உள் உள்ளது சிதம்பரம் எனும் தஹர ஆகாசம். (25.12.1) ஆகாசத்தையும் தோற்றுவித்த பரம்பொருள், பரவெளி - பராகாசம். இந்த மூன்றின் நடுவிலும் (அந்த:) எல்லை வரையிலும் (அந்த) உள்ளும் புறமும் இருப்பவள். பிரளயத்தில் ஆகாசம் அஹங்காரமாக மாறும் நிலை உண்டு. அந்த ஆகாசத்தின் முடிவு நிலையிலும் இருப்பவள் தேவி. (855)

**36. கர்விதா. கர்வமுற்றவள்.**

36-1. உலகைத் தோற்றுவித்து நடத்திப் பின் தன்னுள் அடக்கிக் கொள்ளும் பேராற்றலால் செருக்குற்றவள். தனித்தனி ஜீவனிடம் காணும் நான் என்ற உணர்வின் ஸமஷ்டி வடிவமும் இத்தனை நான் களுக்கும் மூலவடிவமுமானது பர அஹங்காரம் - பர அஹந்தா எனப்படும். அந்தப் பேரஹங்கார வடிவினள். (856)

**37. காந - லோலுபா. பாட்டில் ஈடுபாடுள்ளவள்.**

37-1. வாய்ப்பாட்டு, வாத்திய சங்கீதம், ஸாமவேதகானம் முதலியவற்றைக் கேட்பதில் தன் வயமிழந்து ஈடுபடுபவள். கர்வம் ஒரு புறமும் (நா.856) பேதைமை ஒரு புறமும் தேவியிடம் காணப்படுகின்றன. (857)

**38. கல்பநா - ரஹிதா. கற்பனையற்றவள்.**

38-1. மிகச் சிறிதளவில் அறிந்த ஒன்றை அடிப்படையாகக் கொண்டு, அறியாத பொருளை ஊகித்து மனக்கண்முன் காட்டப் பெறும் எண்ண அலைகள் கற்பனையாகும். தேவியைப் பற்றி அத்தகைய கற்பனை செல்லாது. கற்பனைக்கு அடிப்படைத் தேவையான தேவியைப் பற்றிய சிறிதளவில் உள்ள அறிவு கூட ஏற்பட முடியாது. அதனால் கல்பநா - ரஹிதா. தேவியாலும் எதனையும் கற்பனை செய்ய முடியாது. தேவி அறியாதது எதுவுமில்லை. நன்கு அறிந்த பொருளில் கற்பனை ஏற்பட இடமில்லை.

38-2. கல்ப - நார - ஹிதா. கல்பம் எனும் காலவரை முடிந்து பிரளயம் ஏற்பட்டதும் தன்னுள் அடங்கிய ஜீவர் (நாரர்)களின் ஹிதத்தைச் செய்பவள். அனுக்ரஹதா. (17.26.1) (858)

**39. காஷ்ட்டா. காஷ்ட்டா எனும் காலவரை.**

39-1. ஒரு நாளின் காலவரை பற்றிய அட்டவணை.

எட்டு யாமங்கள் - ஒரு நாள் (24மணி நேரம்)
6 முகூர்த்தங்கள் - 1 யாமம் (3 மணி நேரம்)
2 நாடிகள் - 1 முகூர்த்தம் (30 நிமிஷங்கள்)
15 லகுக்கள் - 1 நாடி (15 நிமிஷங்கள்)
5 க்ஷணங்கள் - 1 காஷ்டை (4 செகண்டுகள்)
3 நிமேஷங்கள் - 1 க்ஷணம் (4-5 செகண்டு)
3 லவங்கள் - 1 நிமேஷம்

3 வேதங்கள் - 1 லவம்
100 த்ருஷ்டி - 1 வேதம்

என்ற கணிதநூல்களில் குறிப்பிட்டுள்ள நுண்ணிய காலவரைகளில் காஷ்ட்டா எனும் காலவரையாக இருப்பவள் தேவி. (18 நிமேஷங்கள் கொண்டது காஷ்ட்டா எனக் கூறுகிறார் பாஸ்காரராயர்).

39-2. காஷ்ட்டா - மரமஞ்சள். தோல் உட்புறம் எல்லாவற்றிலும் மஞ்சள் நிறமுள்ள ஒரு சிறு மரம். தொப்புள்கொடி போன்று முறுக்குள்ள வடிவிலமைந்திருப்பதால் சிவசக்தியம்சமாகப் பாவித்து இதை வணங்குவர்.

39-3. வேதாந்த வாக்கியங்களின் முடிந்த முடிவான பொருள். (காஷ்ட்டா - முடிந்த முடிவு). பரமசிவனின் வடிவங்களில் ஆகாச தத்துவ வடிவான பீமதேவரின் பத்தினி. (9.2.1) திக்தேவதை வடிவில் இருப்பவள். (காஷ்ட்டா - திக்குகள்). திக்குகளின் எல்லை - காஷ்ட்டா. அந்த எல்லைவரை எல்லாவற்றிலும் வியாபித்து நிற்பவள். திக்குகளுக்கு ஓர் எல்லை கிடையாது. நெருங்க நெருங்க எட்டிப்போகும். எனினும் எல்லையிருப்பது போல் தோன்றும். அதுபோல் எட்ட முடியாத எல்லையாயிருப்பவள்.

39-4. காஷ்ட்டா - பட்டுப்போன மரம். சிவனை ஸ்தாணு என்பர். கிளைத்துப் பலவாறாக விரிவடையும் மரம்போல் அல்லாமல் பட்டுப்போன மரமாக இருப்பது ஸ்தாணுவும் காஷ்ட்டாவும். வளர்ச்சி முதலிய மாறுபாடுகள் அற்றவள். (859)

### 40. அகாந்தா. பாபத்தைப் போக்குபவள்.

40-1. அகம் - பாபம் பாபத்தின் விளைவாக ஏற்பட்ட துக்கம். இரண்டையும் அழிப்பவள். இங்கு காஷ்ட்டா அகாந்தா என இரு நாமங்களாகப் பிரிக்கிறோம். முன்பு காந்தா 329வது நாமம். (859)

### 41. காந்த - அர்த்த - விக்ரஹா. மணாளனைப் பாதி உடலாகக் கொண்டவள்.

41-1. பரமசிவனைத் தனது பாதி உடலாகக் கொண்டவள். பரமசிவனது பாதி உடலாக உள்ளவள்.

41-2. காந்தம் - க என்ற எழுத்தின் அடுத்த எழுத்து க$^2$ ஆகும். (14.10.2) அது ஆகாயத்தைக் குறிக்கும். ஆகாயத்தைத் தன் வடிவின் பகுதியாகக் கொண்டவள். (861)

(நா. 862 - 865)

कार्यकारणनिर्मुक्ता कामकेलितरङ्गिता ।
कनत्कनकताटङ्का लीलाविग्रहधारिणी ॥ 161 ॥

**கார்யகாரணநிர்முக்தா காமகேலிதரங்கிதா.**
**கநத்கநகதாடங்கா லீலாவிக்ரஹதாரிணீ. 161**

### 42. கார்ய - காரண - நிர்முக்தா. காரிய - காரணப் பொருள்களிலிருந்தும் விடுபட்டவள்.

42-1. பிகிருதி. பிரகிருதிவிகிருதி, விகிருதி என மூன்று விதமாகப் பரம்பொருளிலிருந்து தோன்றியவற்றைப் பிரிப்பர். (17-8-1) அவற்றில் மூலப் பிரகிருதி எனும் பிரகிருதி எப்போதும் காரணமாக இருப்பது. பிரகிருதிவிகிருதியும் விகிருதியும் காரணமாயும் காரியமாயும் உள்ளவை. மண்ணிலிருந்து குடம் உண்டாயிற்று. இதில் குடம் காரியம், மண் காரணம். அதுபோல் மஹத் எனும் தத்துவத்திலிருந்து, தோன்றிக் கொண்டிருக்கும் உலகம் வரை அனைத்தும் காரணமாயிருப்பதற்குத் தான் காரியமாயும் தன்னிடமிருந்து தோன்றியதற்குத் தான் காரணமாயுமிருக்கும். தேவி காரணமாகவோ காரியமாகவோ உள்ளவற்றிற்கப்பாற்பட்டவள். அவைகளிடமிருந்து விலகியிருப்பவள். எல்லாவற்றிற்கும் காரணமான மூலப்பிரகிருதிக்கும் முன்னிருப்பவள். காரண – காரியப் பிரபஞ்சத்தினுள் அவள் அகப்படவில்லை. தானே தனக்குக் காரணமாகவோ காரியமாகவோ இருக்க முடியாதாகையால் காரியகாரண நிலையினுள் தேவி கட்டுப்படுவதில்லை. (862)

### 43. காம - கேலி - தரங்கிதா. காமேசுவரனுக்கு அலைபோல் இடையறாது கேளிக்கைகளைத் தருபவள்.

43-1. தேவியைக் கண்டதும் காமேசுவரனின் மனம் குதூகலம் கொள்கிறது. அதனால் காமேசுவரன் தேவியுடன் புதிது புதிதாகப் பல கேளிக்கைகளில் தொடர்ந்து ஈடுபடுகிறார். கேலீ – கேளி, கேளீ தரங்கிதா என்றும் பாடமுண்டு, பொருள் அதே. (863)

### 44. கநத்-கநக-தாடங்கா. தங்கக் காதோலைகளுள்ளவள்.

44-1. தேவி காமேசனுடன் கேளிக்கைகளில் ஈடுபடுகையில் ஆட்டத்திலும் பாட்டிலும் தலை அசையும்போது காதுகளில் அணிந்தத் தங்கக் காதோலைகளும் மின்னல்போல் ஒளியுடன் விளங்குகின்றன. (864)

**45. லீலா - விக்ரஹ - தாரிணீ. விளையாட்டாகப் பல வடிவங்களை ஏற்பவள்.**

45-1. விளையாட்டாக, விளையாட்டிற்கெனவே தேவி பல தோற்றங்களில் வெளிப்படுவாள். அவை தேவியின் உண்மை நிலையை (விக்ரஹ) நன்கு விளக்கக்கூடியவை. (865)

(நா. 866 - 871)

अजा क्षयविनिर्मुक्ता मुग्धा क्षिप्रप्रसादिनी ।
अन्तर्मुखसमाराध्या बहिर्मुखसुदुर्लभा ॥ 162 ॥

**அஜா க்ஷயவிநிர்முக்தா முக்த்தா க்ஷிப்ரப்ரஸாதிநீ.**
**அந்தர்முகஸமாராத்த்யா பஹிர்முகஸுதுர்லபா. 162**

**46. அஜா. பிறக்காதவள்.**

46-1. பல தோற்றங்கள் கொள்ளும் தேவி தக்ஷன், ஹிமவான், கதர், மதங்கர் முதலிய பலருக்குப் பெண்ணாகத் தோன்றுகிறாள். எனினும் அவள் பிறப்பற்றவள். இதுவரை புலப்படாதிருந்தவள் அப்படித் தோன்றுகிறாள். முன் இல்லாதிருந்து இப்போது பிறப்பதில்லை. (866)

**47. க்ஷய - விநிர்முக்தா முடிவிலிருந்தும் விடுபட்டவள்.**

47-1. பிறந்ததற்கு முடிவுண்டு. பிறக்காதவளானதால் தேவி முடிவுமற்றவள். தேவியை அண்டியவர்களுக்கும் முடிவில்லை. க்ஷயம் - வீடு. தேவியை அண்டியவர்கள் முக்தி பெறக் காட்டிற்குச் செல்ல வேண்டியதில்லை. வீட்டில் சகல சுக அனுபவங்களுக்கிடையே அவர்கள் தேவியின் அருளால் முக்தியையும் பெறுவார்கள். (க்ஷயே க்ருஹே ஏவ விநிர்முக்தா: யயா.) வீட்டில் தங்கிச் சுகமனுபவிப்பதால் மனிதன் தேய்வு அடைகிறான். அதனால் தேய்விற்கு இடமளிக்கும் வீட்டை க்ஷயம் என்பா. தேவியின் அருள் பெற்ற வீடு தேய்விலிருந்தும் விடுபடும். (867)

**48. முக்த்தா. அழகி.**

48-1. கபடமற்றுத் தெளிந்து நிறைந்த மனத்தை வெளிக் காட்டுவதால் அழகாயிருப்பவள் முக்த்தா. கலப்பற்ற மகிழ்ச்சியையும் அறிவு மலராமல் மொட்டாகி இருப்பதையும் கள்ளமற்ற தெளிந்த மன நிலையையும் அழகிய முகத்தில் தெளிவாகக் காட்டிச் சிரிக்கும் குழந்தை முக்த்தா. அப்படி முக்த்தாவாகத் தேவி தோன்றுகிறாள். (868)

## 49. க்ஷிப்ர - ப்ரஸாதிநீ. விரைவில் அருள்பவள்

49-1. ப்ரஸாத – பக்தனின் விஷயத்தில் கோபம் முதலியவைகளால் கலங்காமல் தெளிந்திருப்பது. முன்னர் நடந்தவற்றால் பாதிப்புறாமலும் தவறுதலைப் பொருட்படுத்தாமலுமிருத்தல், உதவுவதில் திருப்தி காண்பது, பக்தன் அடையும் மகிழ்ச்சியால் தானும் மகிழ்ந்திருத்தல், அருள் புரிவது. ப்ரஸாதிநீ – பிரஸந்நா, ப்ரஸாதத்தைக் கொண்டவள். 'முக்த்தா' வானதால் எளிதில் மகிழ்ந்து தனது பிரஸாதத்தைக் காட்டுகிறாள். குறைகாணாத தாய் உள்ளம் பெற்றவளானதால் விரைவில் பிரஸன்னையாகிறாள்.

## 50. அந்தர் - முக - ஸமாராத்த்யா. உள் நோக்குள்ளவர்களால் நன்கு ஆராதிக்கத்தக்கவள்.

50-1. அந்தர் முகர்கள் - வெளியில் உள்ள பொருளில் நாட்டம் குறைந்து, உள்ளே உள்ள ஆத்ம அனுபவத்தைப் பெறும் பேராவலில் மனமும் பொறிகளும் குவிந்து உள்ளே நோக்கத் தொடங்கித் தன் சக்தி அனைத்தையும் உட்புறமாக செலுத்தியவர்கள், ஆத்ம அனுபவத்தைப் பெற்றவாகள். அவர்கள் ஆத்ம ஸ்வரூபிணியாக தேவியையே தன் ஆத்மாவாகக் கண்டதால் தேவியை எளிதாயும் நன்கும் வழிபடத் தகுதி பெறுகிறார்கள். எளிதில் அருள்பவள் என்பதால் அவளது பெருமைக்குக் குறைவில்லை. தெளிவும் ஆழமும் கொண்ட பெரும் நீத்தேக்கம்போல், எளிமையும் பெருமையும் ஒருங்கே அமைந்தவள் தேவி.

## 51. பஹிர் - முக - ஸுதுர்லபா. வெளி நாட்டமுள்ளவர் களால் எளிதில் அடையமுடியாதவள்.

51-1. வெளியிலுள்ள பொருளை மனம் பத்து பொறிகளாலும் அடைய முற்பட்டது. அதனைப் பெற்றதால்தான் சுகமெனக் கருதிற்று. சுகம் அந்தப் பொருளிடம் உள்ளதாக நினைத்தது. அப்படி அந்தப் பொருளையே பெரிதென மதிக்கும் மனமுள்ளவர் பஹிர்முகர். அந்தப் பொருளை அடைவதற்காகத் தேவியின் அருளை அவர்கள் நாடுவதும் உண்டு. தேவியின் அருளால் தேவியையே அடையக்கூடும் எனினும் அந்த அருளின் உதவிகொண்டு ஈனமான பொருளை அவர்கள் நாடுவதால் தேவியின் அருளை அவர்கள் எளிதில் பெற முடிவதில்லை.

51-2. ஸுதராம் துர்லபா - கட்டாயம் அடையமுடியாதவள் எனப் பொருளும் உண்டு. ஆனால் ஸ்ரீமாதா என ஆரம்பித்து அவ்யாஜ கருணா மூர்த்தி என முடிக்கவிருக்கும் நாமத்தொடரால் அடையமுடியாதவள்

என்பதற்கும் ஸு என்பதால் அழுத்தம் கொடுப்பது பொருந்தாது. தக்ஷிணாதக்ஷிணாராத்யா (பண்டிதனும் பாமரனும் அவளை ஆராதிக்கலாம்) என்றோ நாமமும் (923) விரவிருக்கிறது. பாமரன் (அதக்ஷிணன்) புலனை அடக்கத் தெரியாத மூடன்தானே! ஆராதிக்கலாம், ஆனால் பலனிராதென்றால் பொருந்துமா? அதனால் கட்டாயம் அடைய முடியாதவள் என்பது பொருந்தாது. தாயாக அவள் எளிதில் அடையத்தக்கவளாயினும் அடையவிருப்பவன் பஹிர்முகன் வெளிநாட்டமுள்ளவனாகையால் அவளது நெருக்கத்தை உணராமல் திண்டாடுவான் எனப் பொருள் கூறுவதுதான் அதிகம் பொருந்தும். அதனால் ஸு, ஸுகேந, சுகமாக துர்லபா - துக்கேந லப்தும் யோக்யா - கஷ்டமே. ஒருக்கால் தேவியின் அருளால் கிட்டவும் கூடும் எனப் பொருள் அதிகமாகப் பொருந்துகிறது. இந்த நாமத்தை விளக்க வந்தாற்போல் உள்ள **தரள கரணாநாம் அஸுலபா** என்ற ஸௌந்தர்ய லஹரீ சுலோகமும் (சு.95) சஞ்சலமான பொறிகள் உள்ளவர்களுக்கு எளிதில் கிடைக்கக் கூடயவள் அல்ல - அ - ஸு - லபா என்றே கூறுகிறது. அவள் எப்போதும் ஸுலபா. ஆனால் ஸாதகனது தரள கரண-த் தன்மை பஹிர் முகத் தன்மை அங்கு இடையூறாக இருந்து சுலபத்தைத் துர்லபமாக்குகிறது. இக்குறை தேவியுடையது அல்ல. பண்டிதனும் பாமரனும் செய்யும் ஆராதனையைச் சமமாகத் தேவி ஏற்று ஒரே விதமான பலனையும் தருகிறாள். ஆனால் பண்டிதன் அதனை அருளாகப் பெறுகிறான். பாமரன் தேவியின் அருளாகப் பெறாமல் அழியும் சுகப்பொருளாகப் பெறுகிறான். அதனிடமுள்ள நாட்டத்தால் நல்ல மதிப்புள்ள முத்தைப் பெற்ற பாமரன் அதனை மட்ட விலைக்கே விற்றுவிடுவான். வியாபாரி அதன் மதிப்பை உணாந்து விற்க மனமின்றித் தானே வைத்துக்கொள்வான். தேவியின் மதிப்பை அறிந்தவன் வெளிநாட்டம் கொள்ளமாட்டான். (871)

(நா. 872 - 879)

त्रयी त्रिवर्गनिलया त्रिस्था त्रिपुरमालिनी ।
निरामया निरालंबा स्वात्मारामा सुधासृतिः ॥ 163 ॥

**த்ரயீ த்வர்க்கநிலயா த்ரிஸ்த்தா த்புரமாலிநீ.**
**நிராமயா நிரலம்பா ஸ்வாத்மாராமா ஸுதாஸ்ருதி.**

**163**

## 52. த்ரயீ - மூன்று வேத வடிவனாவள்.

52-1. ருக் வேதம், யஜுர்வேதம், ஸாமவேதம் என்ற மூன்றும் தேவியின் வடிவம். (அதர்வண வேதத்தைச் சேர்த்து வேதங்கள் நான்கு. அதர்வ வேதத்தின் உபநிடதங்கள் - பிரச்நம் - முண்டகம் - மாண்டுக்யம் முதலியவை. ஆத்ம வித்யையைப் போதிப்பதில் மற்ற மூன்றின் உபநிடதங்களுக்கு ஒப்பானவையே. எனினும் அதில் இம்மைக்கு உதவும் பொருள்களை அடைவதற்கான காமிய கர்மங்களைப் பற்றிய பூர்வ காண்டத்தின் பகுதி மிக மிக அதிகமாயுள்ளது. அவை துர்விநியோகமாகக் கூடும் என்பதுபற்றி அதர்வ வேதத்தை அதிகம் கையாளமல் மற்ற மூன்றையுமே உபயோகிப்பது வழக்கமாகி த்ரயீ என்ற வழக்கேற்பட்டு விட்டது.) (நா.588) பாலா தேவியின் வாக்பவகூடம் ஐ என்ற அக்ஷரம் கொண்டது. ருக் வேதம் அக்னிமீடே என அ வில் தொடங்குகிறது. யஜுர்வேதம் இஷே த்வா என 'இ' யில் தொடங்குகிறது. ஸாம வேதம் அக்ன ஆயாஹி என 'அ'வில் தொடங்குகிறது. இந்த முதல் மூன்று அக்ஷரங்களையும் சேர்க்க (அ + இ = ஏ, அ + ஏ = ஐ) வாக்பவ பீஜமாகிறது. அந்த பீஜ வடிவினள். (872)

## 53. த்ரி வர்க்க - நிலயா. அறம், பொருள், இன்பம் இவற்றுள் மறைந்திருப்பவள்.

53-1. அறம், பொருள், இன்பம் என்ற மூன்றும் த்ரிவர்க்கம். இவை ஒவ்வொருவரது நிலைகளுக்கேற்ப மாறுபடுமாதலால் மாறுபட்ட பலவற்றின் தொகுப்பு - வர்க்கம் என்பர். இவைகளை முறைப்படி அடைவது. புருஷார்த்தம். முறைப்படி தர்மத்தையோ, பொருளையோ, இன்பத்தையோ அணுகும்போது, தேவி அவைகளின் வடிவில் அருள்புரிகிறாள். (28.11.1) (873)

## 54. த்ரி - ஸ்த்தா. மூன்றாகக் கணக்கிடப் பெற்றவைகளில் இருப்பவள்.

54-1. நேற்று, இன்று, நாளை என்ற காலவரை, ஸூர்யன், சந்திரன், அக்னி என்ற ஒளி மண்டலங்கள், ஸ்தூலம், ஸூக்ஷ்மம், காரணம் என்ற தேகங்கள், விழிப்பு, கனவு, துக்கம் என்ற உணர்வு நிலைகள், இரவு, பகல் சந்தி என்ற வேளைகள், வாக்பவம், காமராஜம், சக்தி என்ற கூடங்கள் என்றிவ்வாறு மூன்றாகக் கணக்கிடப் பெறுபவை அனைத்திலும் உறைந்திருப்பவள். (நா.588, 626) மூன்று என்ற எண்ணில் நாட்டம் உள்ளவள். திருதீயை திதி தேவிக்குகந்த திதியாகும். (25-13-3) (874)

### 55. த்புரமாலிநீ. திரிபுரமாலினி வடிவினள்.

55-1. ஸ்ரீ சக்கிரத்தில் ஆறாவது ஆவரணத்தில் நிகர்ப்ப யோகினிகளின் தலையாயிருப்பவள் திரிபுரமாலிநீ. (19-10-26) அவளும் தேவியின் தோற்றமே. (875)

### 56. நிர் - ஆமயா - நோயற்றவள்.

56-1. உடலையும் மனத்தையும் துன்புறுத்துபவை ஆமயங்கள். தவறான உணவு நடைமுறை முதலியவற்றால் ஏற்படுபவை. அவை ஏற்பட்டத்தக்க உடலும் மனமும் அற்றவளானதால் தேவி நோயற்றவள். அவளை அண்டியவர்களும் தேகப்பற்று அற்றவரானதால் நோயற்றவர்களே. (நா. 551- 748) (876)

### 57. நிர் - ஆலம்பா. பிடிப்பற்றவள்.

57-1. எல்லாவற்றிற்கும் ஆதாரமாயும் (14-1-1) ஆசிரயமாயும் (14-11-1) உள்ள தேவிக்கு வேறு பிடிப்பு தேவை என்பது பொருந்தாது. ஜீவனுக்கு வினை உடலுடன் பிணைக்கின்ற பிடிப்பாகிறது. அதனால் அவனுக்கு பலவற்றில் பிடிப்பு ஏற்படுகின்றது. வினை தேவியின் அருளால் அகன்றதும் தளைகள் நீங்கியவாக வேறொன்றையும் பிடிப்பாகக் கொள்ளாதவ னாகிறான். அப்படி தம்மைச் சாந்தவர்களையும் பிடிப்பற்றவர் களாக்குகிறாள். (877)

### 58. ஸ்வ - ஆத்ம - ஆராமா. தன்னோடு விளையாடுபவள்.

58-1. தேவி எல்லாமானவள். அவளைத் தவிர வேறொன்றில்லை. அந்நிலையில் விளையாட வேறு ஒருவரில்லாததால் தன்னுடனேயே தேவி விளையாடிக் கொண்டிருப்பாள். விளையாடுவது அலைபாயும் மனத்திற்கு ஓய்வும் அமைதியும் ஆனந்தமும் அளிப்பதற்கே. தன்னையே பரம்பொருள் ஆணும் பெண்ணுமாக்கி விளையாடிற்று என உபநிடதங்கள் கூறும். ஆணும் பெண்ணும் தானே ஆனதால் தான் தன்-னோடு விளையாடுவதாயிற்று. ஸ வை ந ரேமே . . . ஸ இமமேவாத்மாநம் த்வேதா பாதயத் தத: பதிச்ச பத்நீ ச அபவதாம் (பிருஹதாரண்யகம் 1-4-3) தன்னிடத்தில் உலகமாகிய பொழுதுபோக்கிடத்தைக் கொண்டவள். அவனவனுக்கு அவனவனது ஆத்மாவாகிய ஓய்வும் அமைதியும் ஆனந்தமும் தரும் கேளிப் பொருளாக இருப்பவள். (878)

**59. ஸுதா - ஸ்ருதி: அமுதப் பெருக்காக உள்ளவள்.**

59-1. ஒரே சீராகத் தாரையாக ஓடுவது ஸ்ருதி. ஸஹஸ்ராரத்திலிருந்து தேவியின் சரணங்களிலிருந்தும் பெருகும் அமுதப் பெருக்கு குண்டலினீ செல்லும் பாதையிலுள்ள சக்கிரங்களிலும், அங்குள்ள யோகினி சக்திகளிடத்திலும் ஒரே சீராகப் பரவி அவைகளை உயிர்ப்பிக்கின்றது. அந்த அமுத தாரையாக உள்ளவள். (12-1-9- 12-17-1). தேவியைத் தன் வடிவிலிருந்து ஒளிக்கிரணங்களாகிய அமுத தாரைகளைப் பெருக்குபவளாகத் தியானிப்பதால் கடும் ஜ்வரம் நீங்கும், விஷம் அகலும் என கிரந்தீம் அங்கேப்ப்ய: என்று தொடங்கும் ஸௌந்தர்யலஹரீ சுலோகம் (சு.30) கூறும்.

59-2. நமது உடலில் சந்திரமண்டலமாக ஸஹஸ்ராரம் அமைந்து அமுதத்தைப் பெருக்குவதுபோல், உலகிற்கு அமுதம் அளிக்க சந்திரமண்டலம் அமைந்திருக்கிறது. உலகை நடத்தி வரும் தேவதைகள் அந்த அமிருதத்தைப் பருகுகின்றனர். சுக்ல பக்ஷத்துப் பிரதமையிலிருந்து பௌர்ணமிவரை சந்திரமண்டலமாகிய அமுதக்கோப்பையில் தேவீ சரணங்களிலிருந்து பெருகும் அமுதம் தாரையாக நிரப்பப்படுகிறது. அதனைக் கிருஷ்ண பக்ஷத்துப் பிரதமை முதல் அமாவாசை வரை தினம் ஒருவராக (1) அக்கினி, (2) சூர்யன் (3) விச்வேதேவர்கள் (4) வருணன் (5) வஷட்காரம் (6) இந்திரன் (7) தேவர்ஷிகள் (8) அஜேகபாத் எனும் ருத்திரன் (9) யமன் (10) வாயு (11) மாத்ருகணம் (12) பித்ருகணம் (13) குபேரன் (14) பசுபதி (15) பிரஜாபதி (என்ற வரிசையில் தேவதைகள் பருகுகின்றனர். (ஸௌந்தாயலஹரீ - சு.94) அவர்கள் பருகும் அமுத தாரையாயிருப்பவள். (ஸக்ஷதாஸ்ருதி:) ஸுதாஸ்ருதி: என்றிரண்டு பாடமுண்டு. முதல் பாடத்தின்படி தாரை, பெருக்கு. இரண்டாம் பாடத்தின்படி கசிவு, சீராகப் பரவும் நீரோட்டம். (879)

(நா. 880 - 883)

संसारपङ्कनिर्मग्नसमुद्धरणपण्डिता ।
यज्ञप्रिया यज्ञकर्त्री जयमानस्वरूपिणी ॥ 164 ॥

**ஸம்ஸாரபங்க நிர்மக்நஸமுத்தரணபண்டிதா.**
**யஜ்ஞப்ரியா யஜ்ஞகர்த்ரீ யஜமாநஸ்வரூபிணீ. 164**

**60. ஸம்ஸார - பங்க - நிர்மக்ந - ஸமுத்த்தரண - பண்டிதா. ஸம்ஸாரமாகிய சேற்றில் அழுத்தி மூழ்கிய வனைத் தூக்கி வெளியே விடுவதில் திறமையுள்ளவள்.**

60-1. ஸம்ஸாரமாகிய சேறு எல்லையற்றதாகப் பரவியுள்ளது. அதன் நடுவே மாட்டிக் கொண்டவன் தன் முயற்சியால் விடுபட முடியாது. சேற்றிலிருந்து கால்களை விடுவிக்க ஒரு காலைச் சேறில்லாத இடத்தில் பதியவைத்துப் பின் மற்றொரு காலையும் விடுவிக்க வேண்டும். சேறில்லாத இடமே இல்லாததால் மறுபடி சேற்றிலேயே காலைப் பதிக்க நேரிடுகிறது. இதனை நன்கு பதித்து மற்றொரு காலை விடுவிக்க முனையும் போது, ஏற்கனவே அழுந்தியுள்ள ஒருகாலும் தற்போது பதித்த மற்றொரு காலும் சேற்றில் ஆழப்பதிந்து இனி மீளமுடியாது என்ற நிலை தோன்றுகிறது. தேவி அவனை அப்படியே மேலே வலிவுடன் தூக்கிச் சேறற்ற இடத்தில் கொண்டு சேர்க்கிறாள். அதை அவள் மிகத் திறமையுடன் எளிதாகச் செய்கிறாள். சேற்றில் பதியாத ஒருவனால்தான் சேற்றில் பதிந்தவனை மீட்கமுடியும். தேவிக்கு ஸம்ஸாரபந்தம் கிடையாது அவளைத் தவிர வேறு யாரும் ஸம்ஸாரச் சேற்றிலிருந்து நம்மை மீட்க முடியாது.(880)

**61. யஜ்ஞ - ப்ரியா. வேள்விகளில் விருப்பமுள்ளவள்.**

61-1. வேள்விகள் அனைத்திலும் தேவிக்குத் தனிப்பட்ட விருப்பம் உண்டு. யஜ்ஞன் என விஷ்ணுவிற்குப் பெயர். அவரிடத்தில் பிரியமுள்ள ஸகோதரியாக இருப்பவள். தன்னுடையதென்கிற அபிமானத்தை விடுவதற்கு வேள்விகள். உதவுவதால் தேவியை அடையத்தக்க சித்த சுத்தியைத் தருகின்றன. நாம் அறிந்த தெய்வ வடிவங்கள் அக்கினியும் ஜலமும். அக்கினி வடிவமுள்ள தெய்வத்திடம் நம் பொருளிலுள்ள நமது என்ற எண்ணத்தை விட்டு நாம் அளிப்பதைப் பெறுபவர் தெய்வத்தன்மை பெற்றவர் என மதித்து அவருக்கு அர்ப்பணம் செய்வது யஜ்ஞம். அதில் நாட்டம் கொண்டவள் தேவி. (30. 45. 1) (881)

**62. யஜ்ஞ - கர்த்ரீ. யாகத்தைச் செய்பவள்.**

62-1. யாகத்தை நிறைவேற்றுவதற்கு யாக முறை அறிந்த வேதியர்களது உதவி தேவை. யாகம் நிறைவேறுவதற்கு உதவும் வேதியரது வடிவினுள்ளவன் யாகத்தைச் செய்வனது மனைவிக்கும் அதில் பங்கு உண்டு. அவள் வடிவில் உள்ளவள். (882)

**63. யஜமாந - ஸ்வரூபிணீ. வேள்வியைச் செய்து கொண்டிருப்பவனின் வடிவிலுள்ளவள்.**

63-1. யஜ - வேள்வி புரிதல், யஜமானன் - வேள்வி புரிந்து கொண்டிருப்பவன், யாகத்தை நடத்த எண்ணம் கொண்டு தன் பொருள் முதலியவற்றை அதற்காகச் செலவிட்டுத் தக்கவர்கள் மூலம் வேள்வியை நடத்திக்கொள்பவன் யஜமானன். அவன் வடிவில் உள்ளவள் தேவி.

63-2. நாம் யாகங்கள் புரிவதால் தேவதைகள் திருப்தி அடைந்து மழை முதலியவற்றால் நம் வாழ்க்கையை வளப்படுத்துகிறார்கள். தேவர்களுக்கென நாம் யாகம் புரிவதும், நமக்கென தேவர்கள் மழை முதலியவற்றை அளிப்பதும் கூட்டுறவாகத் தெய்வக் கட்டளைப்படி அமைபவை. குலக்கொடுமையால் வேள்விகளில் சிரத்தை குறைந்தபோது மழை முதலியவை இல்லாமல் மக்கள் வாட்டமடையக்கூடும். அதனைத் தடுக்க சிவபெருமான் யஜமானன் என்ற தனது எட்டாவது வடிவத்தால் எப்போதும் வேள்விகளை நடத்தி வருகிறார். (9.2.2) யஜமானன் என்ற அவரது வடிவிற்கு உக்கிரன், ஈசானன் என்ற பெயர்களும் உண்டு. உக்கிரன் என்ற சிவனது பத்தினியாகவும் தீ என்ற திருநாமத்துடன்தேவி விளங்குகிறாள்.

63-3. சூரியன் உதிக்கும்போதும், மறையும்போதும், நடுப்பகலிலும் அவருக்கு அர்க்கியம் கொடுப்பர். சூரியனது ஒளியை நம்மிடம் பரவாமல் செய்வதற்காக மந்தேஹர்கள் (ஆற்றலை மந்தப் படுத்துபவர்கள்) எனும் அசுரர்கள் சூரியனின் பாதையில் குறுக்கிடுகின்றனர். காயத்திரி எனும் பிரும்ம சக்தி கொண்ட மந்திரத்தை ஜபித்துக் கொடுக்கப்படும் அர்க்க்யம் வஜ்ராயுதத்தின் வலிவு பெற்று அவ்வசுரர்களை மாய்க்கின்றது. அதனால் அர்க்க்யம் கொடுப்பது மூவர்ணத்தினான் கடமை, முக்கியமாக அந்தணனின் கடமை. இவர்கள் தெய்விகச் செயல் முறையில் உதவுவதற்காகவே இந்த மந்திரரோபதேசம் பெறுகின்றனர். தெய்வீக விதிப்படி இவர்கள் நடந்துகொள்ளத் தவறினாலும், சூரினின் பணி நின்றுவிடாது இருக்கச் சூர்யனோடு அவன் முன் செல்பவர்களாக வாலகில்யர் என்ற ருஷிக்கூட்டம் இப்பணியைச் செய்து தெய்விகச் செயல் திட்டத்தில் குறை ஏற்படாது செய்கின்றனர். அந்த முறையில் தெய்விகச் செயல் முறையில் உதவுகின்ற ருஷிகள் வடிவில் உள்ளவள். (883)

(நா. 884 - 889)

**धर्माधारा धनाध्यक्षा धनधान्यविवर्द्धिनी ।**
**विप्रप्रिया विप्ररूपा विश्वभ्रमणकारिणी ॥ 165 ॥**

**தர்மாதாரா தநாத்த்யக்ஷா தநாதாந்யவிவாத்த்திநீ.**
**விப்ரப்ரியா விப்ரரூபா விச்வப்ப்ரமணகாரிணீ. 165**

### 64. தர்ம - ஆதாரா. தர்மத்திற்கு ஆதாரமாயிருப்பவள்.

64-1. அந்தந்த தேசத்திற்கேற்றவாறு, சுயநோக்கின்றி நெறி வழுவாது நடப்பவர்கள் பல தலைமுறைகளாக நன்மை பயப்பதாகக் கண்டு, வேதத்தில் கூறியுள்ள விதி - நிஷேதங்களைக் (செய்ய வேண்டியவை, விலக்க வேண்டியவை) கவனித்து அமைத்துக் கொண்ட அரசின் நிர்வாகத்திற்கு ஆதாரமாகக் கொண்டவள். (தர்ம: ஆதாரோ யஸ்யா:) அந்த தர்மத்திற்கு ஆதாரமாய் இருப்பவள். (தர்மஸ்ய ஆதாரபூதா) தொடர்ந்து சீராக எங்கும் தடையின்றிப் பெருகும் தர்மத்தை பரந்த தாரையாக உள்ளவள். (தர்மஸ்ய ஆ தாரா), தர்மத்தை அனைத்திற்கும் ஆதாரமாக்கியவள். (தர்ம: ஆதார: யயா) (884)

### 65.தந - அத்த்யக்ஷா. செல்வத்தைக் கண்காணிப்பவள்.

65-1. செல்வம் சேரவேண்டிய இடத்தில் சேர்ந்து பயன்படத்தக்க முறையில் பயன்படுவதைக் கண்காணிப்பவள். தநாத் யக்ஷன் - குபேரன், பன்னிரு உபாஸகர்களில் ஒருவர். ஊபாஸனை பலத்தால் தேவியாகவே ஆகிவிட்டபடியால் அவர் வடிவில் இருப்பவள். (16-40-2) (885)

### 66. தந - தாந்ய - விவாத்திநீ. செல்வத்தையும் தான்யத்தையும் பெருக்குபவள்.

66-1. செல்வம் மிகுந்திருந்தும் சிலர் நிறைவற்றிருப்பர். தானியம் மிகுந்திருந்தும் உணவின்றி சிலர் தவிப்பர். தெய்வ அருளின்மையே அதற்குக் காரணம். அவை அவர்களுக்குப் பயன்படவில்லை. தெய்வ அருள்பெற்றவனுக்குப் பயன்படும்படி செல்வத்தையும் தானியங்களையும் கொழிக்கச் செய்பவள். (886)

### 67. விப்ரப்ரியா. வேதியாடத்தில் பியமுள்ளவள்.

67-1. பிறப்பினால் பிராம்மணன். அவனுக்குறிய சுத்தி முறைகளை ஏற்றுத் தூயவாழ்க்கை வாழ்பவன் துவிஜன். வேதம் ஓதி அதன்படி நடப்பவன் **விப்ரன்**. மூன்றிலும் நிறைவு பெற்றுப் பற்றற்றிருப்பவன் (அகாமஹதன்) **சுரோத்தியன்**. அத்தகைய விப்ரனாக வாழும் வேதியனிடத்தில் பியமுள்ளவள் தேவி. தன் ஆத்மாவான தேவியின் திருவடிகளில் மட்டுமே நாட்டம் கொண்டிருப்பான். (விப்ராணாம் ப்ரியா ஆத்மத்வாத்) (887)

### 68. விப்ர - ரூபா. வேதியர் வடிவினள்.

68-1. வேதமோதித் தெய்விக வாழ்க்கை முறையைக் கடைப்பிடித்து வாழும் வேதியர் வடிவில் தோன்றுபவள். பிறப்பால் மட்டும் பிராம்மணனா யிருப்பவனை, உபநயம் முதலிய சுத்தி முறைகளால் தூயவனாக்கி, வேதமோதச் செய்து, அதன்படி நடக்கச் சிரத்தை வடிவில் நின்று உதவி, மனத்தைத் தெளிய வைத்துப் பற்றற்ற வாழ்க்கை நடத்தும் திடத்தை அளிப்பவள். அந்தத் தெய்வீக அருள் பெற்ற வேதியனைப் பிறர் யாரேனும் அவமதித்தால் அவன் தவம் வளரும். மேலும் பற்றற்று உலகியலை விட்டு ஒதுங்கித் தெய்விக வாழ்வில் அதிகம் ஈடுபடுவான். அவனது பெருமை கண்டு பிறர் வணங்கி மதிக்கத் தொடங்கினால் அகங்காரம் ஏற்பட்டு அவன் தவம் குன்றும். அதனை உணர்ந்த வேதியன் பாராட்டுதல், வணக்கம் முதலியவற்றை எதிர்பார்க்காமல் ஒதுங்கித் தன் தவத்தை வளர்க்க முற்படுவது தேவியின் அருளால் மட்டும் எளிதாகும். வேதியர்களைத் தவச்சீலர்களாக்கி உருக்கொடுப்பவள். (விபரான் ரூபயதி ஆப்யாயயதி)
(888)

### 69. விச்வ - ப்ப்ரமண - காரிணீ. உலகை இயங்கச் செய்பவள்.

69-1. உலகம் ஒரு நிலையில் இல்லாமல் எப்போதும் சுழன்று கொண்டே இருக்கிறது. அந்தச் சுழலுக்குத் தேவிதான் காரணம். உலகத்திலுள்ள சூரியன், சந்திரன் முதலானதும் ஒரே சீராக இயங்குவது தேவியின் சக்தியால். உலகம் தோன்றுவதும் இருப்பதும் மறைவதும் மறுபடித் தோன்றுவதுமெனச் சக்கிரம்போல் நியதிக்குட்பட்டு சுழல்வது அவளது ஸங்கல்பத்தால். ஒவ்வொருவரது உள்ளத்திலும் அந்தர்யாமியாயிருந்து ஆட்டுவிப்பவளும் அவளே.

69-2. விசுவர் - விஷ்ணு. அவர் ஆகாயப் பாதையில் காமக்யா என்ற அஸம தேசத்திலுள்ள (அஸம - மேடு பள்ளம் நிறைந்த - சமமற்ற தேசம். அஸ்ஸாம்) சக்தி பீடத்தின் மேல் சென்றதால் நிலை தவறிச் செய்வதறியாமல் திகைத்து நின்றர். அப்படி விஷ்ணுவைப் பிரமிக்கச் செய்தவள். பின்னர் லக்ஷ்மியானவள் தேவியை வழிபட்டதால் விஷ்ணு அக்கலக்கம் நீக்கப் பெற்றார். (காளிகா புராணம்) (889)

(நா. 890 - 897)

विश्वग्रासा विद्रुमाभा वैष्णवी विष्णुरूपिणी ।
अयोनिर्योनिनिलया टस्था कुलरूपिणी ॥ 166 ॥

**விச்வக்க்ராஸா வித்ருமாபா வைஷ்ணவீ விஷ்ணுரூபிணீ.**
**அயோநிர் யோநிநிலயா கூடஸ்த்தா குலரூபிணீ. 166**

**70. விச்வ - க்க்ராஸா. உலகை விழுங்குபவள்.**

70-1. விச்வம் - காணப்படும் ஸ்தூல உலகம். (17.8.2) அதனை விழுங்குபவள். இயக்கமுள்ளதும் (சரம்) இயக்கமில்லாததும் (அசரம்) ஆன உலகமனைத்தையும் பெருந்தீனியாக விழுங்கித் தன்னுள் ஒடுக்கிக் கொள்கிறாள். (நா. 752-753) (890)

**71. வித்ரும - ஆபா. பவழம் போன்றவள்.**

71-1. பவழம் போன்ற மேனியின் நிறமும் காந்தியும் உள்ளவள். வித்-த்ரும - ஆபா - அறிவாகிய மரம் கிளைத்துத் தழைத்து விளங்கச் செய்பவள். (891)

**72. வைஷ்ணவீ. விஷ்ணு சக்தியாயிருப்பவள்.**

72-1. விஷ்ணு - எங்கும் நீக்கமற நிரம்பியுள்ள பரம்பொருள். அதன் சக்தியாக உள்ளவள். விஷ்ணு - நாராயணன். அவரது சக்தியான லக்ஷ்மி, அல்லது அவரது சகோதரியான நாராயணி. (நா.298) வைஷ்ணவீ என்ற திருநாமம் கொண்ட துர்க்கை. சங்கு- சக்கிரம் தாங்கியவள். விஷ்ணுவைப் படைத்த தாய். (892)

**73. விஷ்ணு - ரூபிணீ. விஷ்ணு வடிவினள்.**

73-1. காத்தல் தொழில் புரியும் விஷ்ணுவாகத் தோன்றியவள். எங்கும் பரவிய வடிவம் உள்ளவள். பரம்பொருள் எங்கும் நீக்கமற நிறைந்துள்ளதை நிரூபிப்பவள் (விஷ்ணும் ரூபயதி.) பெண் வடிவில் லலிதாவாகவும்- ஆண் வடிவில் நாராயணனாகவும் தேவி தோன்றுகிறாள். (நா.266-267) (893)

**74. அயோநி: - காரணமற்றவள்.**

74-1. தேவியின் ஸங்கல்பத்தால் மூலபிரகிருதி முதலான உலகம் தோன்றிற்று. உலகின் காரணம் - யோநி, தேவி. அவளுக்கும் காரணம்

பிறப்பிடம் என ஒன்றில்லை (18.6.2) தேவி பிறப்பற்றவள். அதனால் அயோநி. யோநி:- இடம், இருப்பிடம், தேவி, எங்குமுள்ளவளானதாலும் அவளே அனைத்திற்கும் ஆதாரமானதாலும் அவளை ஒரு இடத்தில் இருப்பதாகக் குறுக்க முடியாது. அ - விஷ்ணு. அவரது தாய். (894)

### 75. யோநி - நிலயா. உலகனைத்திற்கும் தோற்றுவாயாகவும் ஆதாரமாயுமிருப்பவள்.

75-1. யோநி - பிறப்பிடம், நிலயம் - ஓய்வு பெறுமிடம். இரண்டாயு மிருப்பவள் தேவி. மூலப் பிரகிருதியாக ஆகி உலகைத் தோற்றுவித்தவள். பின் ஆதார சக்தியாக இருந்து உலகனைத்தையும் தாங்கிப் பின் தான் மட்டும் மீதமாகி மற்றதைத் தன்னுள் அடக்கி அமைதியுறச் செய்தவள். யோநி - மாயை அதனிடம் பிரதிபலித்து அதனைத் தன் இருப்பிடமாகக் கொண்டவள். பிரும்மா முதலிய ஐந்து தொழில் புரியும் ஐவரும் உலகத்திற்கு யோநி - காரணமாக இருப்பவர்கள். அவர்கள் ஒடுங்குமிடம் (9.7.2. 17.1.1)

75-2. யோநி - திரிகோணம். ஒன்பதாவது ஆவரணமாகிய திரிகோணத்தில் பிந்துவில் தங்கியிருப்பவள். (9.10.28.29) யோநி - ஏ எனும் எழுத்து (18.6.2) அது சக்தி அக்ஷரம். அதில் வசிப்பவள். (895)

### 76. கூட - ஸ்த்தா. பட்டரைக்கல் போல் அசையாதிருப்பவள்.

76-1. கூடம் - ஏமாற்று சக்தி உள்ளது. நான் என்பதன் தன்னிலையான ஆனந்தத்தை மறைத்து ஆனந்தம் வெளியிலிருப்பதாகக் காட்டும் அஜ்ஞானம் - அவித்யை. அதனைக் கண்காணிப்பவளாக அதன்மேல் இருப்பவள். கூடம் எனும் அஜ்ஞானம் இருப்பதையே தேவியை அறிந்த பிறகுதான் உணர்கிறோம். அப்போது அந்த அஜ்ஞானத்தின் இருப்பிடமாகவும் ஆகிறாள் தேவி. கூடம் - மலைச்சிகரம். மலைச்சிகரம் காற்று, மழை முதலியவற்றால் பாதிப்புறாதிருப்பதுபோல், எதனாலும் பாதிக்கப்படாதவள். கூடம் - பட்டரைக்கல். கொல்லர் பட்டரையின் மேல் உலோகப் பொருளை வைத்துச் சம்மட்டியால் அடிப்பர். அதனால் அடிபடும் அந்த உலோகப் பொருள் நீண்டு சிதைந்து உருமாறும். ஆனால் அடியைப் பெறும் உலோகத்தைத் தாங்கி நிற்கும் பட்டரைக் கல் சிறிதும் உருமாறாது. உலோகம் பல்வேறு மாறுதல்களுக்கு உட்படுகையில் அதற்கு ஆதாரமாயுள்ள தேவி பட்டரைக் கல் போல் மாறுதலற்றிருப்பாள். (கூடவத்

திஷ்டதி). கூடம் - கூட்டம். கூடியுள்ள அனேக பிரும்மாண்டங்கள் நிலைத்திருக்க அவைகளின் ஆதாரமாயிருப்பவள். (கூடாநாம் ஸ்த்தா ஸ்த்திதி: யஸ்யாம்) வாக்பவம் காமராஜம் சக்தி எனப்பெறும் கூடங்களில் இருப்பவள். (11.1.2) ஸ்ரீசக்திரத்தின் வாயில்களாக அமைந்த சக்தி முக்கோணங்களில் உள்ளவள். (9.10.18) ஜீவனிடமுள்ள சைதன்யத்திற்கு ஆதாரமாயுள்ள மூல சைதன்யமாயிருப்பவள். (896)

**77. குல - ரூபிணீ. குல வடிவினள்.**

77-1. கௌல மார்க்கம் - வெளிப்படையான வழிபாட்டு முறை. அதனை வடிவமாகக் கொண்டவள். தாய், தந்தை, தனயன் என்ற மூன்று ஆசாரியன், சீடன், கல்வி என்ற மூன்று என்று இவ்வாறு முக்கோண வடிவில் ஒன்றோடொன்று தொடர்பு கொண்ட குலம், வம்ச வழியில் வந்த ஆசாரம், நெருக்கம் மிக்க தொடர்பு இடையறாத போதனை முறை இவை அனைத்தும் குலமாகும். இவைகளின் வடிவில் இருப்பவள். (897)

(நா. 898 - 905)

वीरगोष्ठी वीरा नैष्कर्म्या नादरूपिणी ।
विज्ञानकलना कल्या विदग्धा बैन्दवासना ॥ 167 ॥

**வீரகோஷ்டீப்ரியா வீரா நைஷ்கர்ம்யா நாதரூபிணீ.**
**விஜ்ஞாநகலநா கல்யா விதக்த்தா பைந்தவாஸநா. 167**

**78. வீர - கோஷ்டீ - ப்ரியா. வீரர்களின் கோஷ்டியில் பிரியமுள்ளவள்.**

78-1. வீரர்கள் - பெரிய லக்ஷயத்திற்காக உடல், பொருள், ஆவி எனும் அஹங்கார - மமகாரங்களில் பற்றற்றவர்களாக முழு மனத்துடன் ஈடுபடுபவர்கள் - பக்தர்கள், ஸாதகர்கள், ஞானிகள், யோகிகள், அவர்களது கோஷ்டீ - பலவிதக் கருத்துக்களும், பேச்சுக்களும் கலந்துகொள்ளுமிடம் - ஸபை (காவ: - பஹுவிதா வாச: யத்ர திஷ்டந்தி) அதில் தேவியைப் பற்றிய பலவகைக் கருத்துக்கள் விரிவாகப் பேசப்படும். அதில் விருப்பமுள்ளவள். (28.28.1) (898)

**79. வீரா. வீரியமுள்ளவள்.**

79-1. வீரியமுள்ளவள்; வீர கோஷ்டியில் ஈடுபடும் வீராவாக அல்லது வீரர் வடிவில் இருப்பவள்; (28.28.1) நல்ல துணையாக நிற்கும் கணவரும் புத்திரர் முதலானோரும் கொண்டவள் வீரா எனப்படுவாள். (899)

### 80. நைஷ்கர்ம்யா. கர்மத் தொடர்பற்றவள்.

80-1. காமம் - வினை, புண்யம் - பாபம் எனப்படுபவை. அவைகள் தேவியிடம் ஓட்டா. (14.3.1) வினைத் தொடர்பற்றவள். ஈச்வர அப்பண புத்தியுடன் செய்யப்படும் வினை புண்ய பாபத் தொடர்பற்றது. அப்போது அது பின் விளைவைத் தருகிற வினைத் தன்மையையே இழந்துவிடுவதால் நைஷ்கம்யாமாகிறது. அதனால் அடையப் பெறுபவள். அந்த ஈசுவராப்பண புத்தியுடன் வினை புரியும் மனப்பான்மையாயிருப்பவள். அவளருளின்றி அம்மனப்பான்மை சித்திக்காது. (900)

(11. தாணீ கலை. 901 - 1000 நாமங்கள்)

### 81. நாத - ரூபிணீ. நாத வடிவினள்.

81-1. நாதம் - ஓங்காரம் முதலியவற்றின் முடிவில் ம் -ன் ஒலி நீட்சியாக - கார்வை ஒலியாக ஒலிக்கும் நாத ஒலி. (18.25.2) அநாஹதஸ்தானமான இதயத்தில் மோதாமல் ஏற்படும் ஒலி அனாஹதமெனும் நாதம் (19.5.1) யோகிகள் உணரக்கூடிய ஒலி வடிவம். உள்நோக்கிய மனத்தால் அதனை உணர்பவர்கள் கண்கள் கசிய மயிர் கூச்செரிய ஆனந்த அனுபவத்தில் மூழ்கியிருப்பார்கள். அந்த நாதத்தால் உணரப்படும் ஆனந்த வடிவில் உள்ளவள். (901)

❋ ❋ ❋

அதிகாரம் - 30

# தேவியின் அருளைப் பெற வழிகள்

### 1. விஜ்ஞான - கலநா. விஜ்ஞானத்தைப் பெருக்குபவள்.

1-1. பதினான்கு அல்லது பதினெட்டு விதமான வித்யா ஸ்தானங்களில் (1-8- 18-82.1) சிறந்த பயிற்சியை உண்டாக்கி, அதனால் ஏற்பட்ட விஜ்ஞானத்தை - விஷய வாரியான அறிவைப் பலவகைகளில் பெருக்கி அழகுபடப் பயன்பெறச் செய்பவள் தேவி. (கலனம்- பெருக்குதல் - அழகுபடப் பயன்படுத்துவது). விஜ்ஞானம் - பரம்பொருளின் அனுபவம் - பிரும்ம ஸாக்ஷாத்காரம் எனப்படுவது; அதனை அமைத்துக் கொடுப்பவள். (902)

**2. கல்யா. கலைகளில் திறமை பெற்றவள்.**

2-1. விஜ்ஞானம் விஷய வாரியான அறிவைத் தந்து வாழ்க்கைக்கு அழகாகப் பயன்படும் போது அதன் முறைகள் கலைகளாக அமைகின்றன. (நா.236) அத்தகைய அழகிய விஜ்ஞான நடைமுறைகளில் - கலைகளில் - கைதேர்ந்தவள் தேவி. கலநம் - கற்பனைக் கண்கொண்டு உருவகப் படுத்துவது. அப்படிக் கற்பனையால் உருவகப்படுத்தக்கூடியவள் கல்யா. கல்யம்- விடியற்காலை. மனத்திற்குத் தெளிவும், உற்சாகமும் தரும் நேரம்; அந்த வேளையாக இருப்பவள். கல்யா - நோயற்றவள். செயலில் திறமையுடன் ஈடுபடுபவள்- மங்களமான பேச்சாக இருப்பவள். (18-50-1) (903)

**3. விதக்த்தா. சாதுர்யமுள்ளவள்.**

3-1. செயல் நோத்தி துலங்கும்படிச் செய்பவள். (904)

**4. பைந்தவ - ஆஸநா. பிந்துவைத் தன்னிருப்பிடமாகக் கொண்டவள்.**

4-1. ஸ்ரீ சக்கிரத்தில் நடுவிலுள்ள முக்கோணத்தில் உள்ள சிறு வட்டம், பிந்து. ஆஜ்ஞாசக்கிரத்தின் இடையே புருவங்களுக்கு மேல் உள்ள சுழி பிந்து. மூன்று மூன்றாகச் சேருபவை அனைத்தும் பிந்து (9-10-29, 20-9-1, 25-29-3, 29-54-11). இந்த பிந்துக்களாலான ஆஸனத்தை கொண்டவள் தேவி. (905)

(நா. 906 - 911)

तत्त्वाधिका तत्त्वमयी तत्त्वमर्थस्वरूपिणी ।
सामगानप्रिया सोम्या सदाशिवकुटुम्बिनी ॥ 168 ॥

**தத்த்வாதிகா தத்த்வமயீ தத்த்வமர்த்தஸ்வரூபிணீ.**
**ஸாமகாநப்ரியா ஸோம்யா ஸதாசிவகுடும்பிநீ. 168**

**5. தத்த்வ - அதிகா. தத்துவங்களுக்கு அப்பாற்பட்டவள்.**

5-1. முப்பத்தாறு தத்துவங்கள் (16-5-1-4, 21-44-1) உலகமாகத் தோன்றுகின்றன. தோன்றும் உலகம் அநித்தியம். உலகத் தோற்றத்திற்கு ஆதாரமான அந்தத் தத்துவங்கள் பிரளய காலம் வரை நித்தியமானவை பிரளயகாலத்தில் மாயையில் அவை அறைந்துவிடுகின்றன. மூலப்

பொருளாக, ஸ்ருஷ்டி தொடங்கி பிரளயகாலம் வரை இருந்து, வெவ்வேறு தோற்றங்களைப் பெறுபவை தத்துவங்கள். தத்துவங்களாலான சாரங்கள் முதலியவை மாறுதலடைபவை. அதனால் அநித்யம். சாரம் முதலியவை அழிவதென்பது இயற்கை நிலையான தத்துவங்களாகப் பிரிந்து நிற்பதே. மறுபடித் தத்துவங்கள் கூடி உருப்பெறுகின்றன. அத்தகைய தத்துவங்களுக் கப்பாற்பட்டவள். அவை மாயையில் மறையும் போதும் இருப்பவள், அவைகளின் தோற்றத்திற்குக் காரணமான மூலப் பிரகிருதிக்கும் முற்பட்டவள். தத்துவங்களில் மிகப்பெரிது பரசிவ தத்துவம். அதனையும் விளக்க வல்ல சித்சக்தி. (906)

### 6. தத்த்வமயீ. தத்துவமயமாக இருப்பவள்.

6-1. ஸத் எனும் ஆத்மதத்துவம், சித்தெனும் வித்யாதத்துவம், ஆனந்தம் எனும் சிவ தத்துவம் இம் மூன்று தத்துவங்களின் ஸமஷ்டியாயும், வியஷ்டியாயும் இருப்பவள். பூமி முதல் மாயைவரையுள்ள தத்துவங்கள் ஆத்மதத்துவம், ஸதாசிவன் வரை வித்யாதத்துவம், சக்தியும் சிவனும் சிவதத்துவம். (21-44-1) இவை எல்லாவற்றின் ஸமஷ்டி துரீயம். பிரும்மத்தின் ஸத் சித் ஆனந்தம் என்ற மூன்றில் சிவதத்துவமாகிய சிவசக்திகளிடத்தில் ஆனந்த அம்சமும், ஸதாசிவன், ஈச்வரன், சுத்தவித்யை என்ற வித்தியா தத்துவத்தில் சித் அம்சமும் மாயை முதல் பூமிவரை உள்ள ஆத்ம தத்துவத்தில் ஸத் அம்சமும் அதிகமாக வெளிப்படையாகக் காண்கின்றன. சிவதத்துவத்தில் மற்ற இரு அம்சங்களும் மறைவதில்லை. ஆனால் ஆனந்தத்தின் அளவில் மற்ற இரண்டும் வெளிப்படுவதில்லை. வித்யாதத்துவத்தில் சித் அம்சம் நன்கு வெளிப்படும். அதைவிடக் குறைந்த அளவில் ஸத் அம்சம் வெளிப்படும். ஆனந்த அம்சம் மறைந்திருக்கும். மாயா தத்துவங்களில் ஸத் அம்சம் மட்டுமே வெளிப்பட்டிருக்கும். மற்ற இரண்டும் மறைந்திருக்கும். தேவி பரப்பிரும்மமே. (29-2-2) அவள் மூன்று தத்துவங்களின் தோற்றுவாய். ஸத் சித் ஆனந்தம் என்ற மூன்று அம்சங்களும் பூர்ணமானவள். (நா.700) தத்துவங்கள் பிரளயம் வரை அழியாதிருப்பதற்குக் காரணம், அவை தத் எனும் பரம்பொருளின் அம்சமாக இருப்பதால்தான் அத்தகைய தத்துவமாக இருப்பவள். (தத்த்வமயீ என இங்கு ஒரே நாமம்) முன்பு தத், த்வம், அயீ எனப் பிரிந்துள்ளது. (நா.425-427) (907)

**7. தத் - த்வம் - அர்த்த - ஸ்வரூபிணீ. பரமாத்ம - ஜீவாத்ம ஐக்கியத்தைக் கூறும் தத்த்வமஸீ என்ற மஹாவாக்கியத்தின் பொருளாயிருப்பவள்.**

7-1. தர்மங்களை விட்டு லக்ஷணையால் தர்மியை மட்டும் தத், த்வம் என்ற சொற்களுக்குப் பொருளாக்கி, அந்த நிர்விசேஷமான சுத்தமான பிரும்மமே நிர்விசேஷமான சுத்தமான நீயாக இருக்கிறாய் எனத் தத்வமஸி என்ற மஹாவாக்கியத்தின் பொருளாக அனுபவத்தால் உணரப்படுபவள். (நா. 363- 425- 426) (908)

**8. ஸாம - கான - ப்ரியா - ஸாமவேத கானத்தில் விருப்பமுள்ளவள்.**

8-1. வேள்விகளில் அவிப்பங்கு (ஹவிர்ப்பாகம்) பெற வரும் தேவைதைகளின் பெருமைகளைக் கானமாகப் பாடும்படி மந்திர - ஸ்வர அமைப்பு கொண்டது ஸாமவேதம். தேவதைகளின் திருப்திக்கென நடைபெறும் வேள்வி வடிவில் இருப்பவளும் (நா.769) வேள்விகளில் ஈடுபாடு கொண்டவளும் (நா.881- 882) ஆன தேவி வேள்விகளில் பாடப்பெறும் ஸாமகானத்தை மிகவும் விரும்புகிறாள். பிரும்மநிலை எய்தியவன் மனக்களிப்பு மேலீட்டால் பாடும் பாட்டு ஸாமகானம். அதில் திருப்தி அடைபவள். (ஏதத் ஸாம காயந் ஆஸ்தே, தைத்திரீய உபநிடதம்). ஸாமவேதத்திலும் கானத்திலும் விருப்பம் கொண்டவள். (909)

**9. ஸோம்யா. சந்திரனைப் போல் மனத்திற்கு இதமாயிருப்பவள்.**

9-1. ஸோமன் - சந்திரன், பச்சைக் கற்பூரம், உமையுடன் கூடிய பரமசிவன், ஸோமயாகம், சந்திரனைப்போல் மனத்திற்கு இதமாக ஆனந்தம் தருபவளாக இருப்பவள். பச்சைக் கற்பூரம்போல் குளிர்ச்சி தருபவள். உமையுடன் கூடிய பரமசிவனைத் தன்னுடையவராகக் கொண்டவள். சிவனைச் சார்ந்தவள். ஸோமயாகத்தில் பங்குகொள்பவள். ஸௌம்யா என்றும் பாடமுண்டு. பொருள் இதே. மிக்க அன்புடன் தனக்குப் பிரியமானவரை அழைக்கும்போது ஸௌம்ய என்று கூப்பிடுவது உண்டு. அத்தகைய அன்பிற்கு உகந்தவள். (910)

**10. ஸதாசிவ - குடும்பிநீ. ஸதாசிவனது மனைவி.**

10-1. எப்போதும் மங்களமான சொல்லும் செயலும் எண்ணமும் கொண்டவர் ஸதாசிவன். அவரது குடும்பத்தைத் தன் குடும்பமாகவும்

அவரது செயலையும் சொல்லையும் எண்ணத்தையும் தன் செயலாகவும்-சொல்லாகவும், எண்ணமாகவும் கொண்ட மனம் ஒருமித்த இல்லாள். (911)

(நா. 912 - 917)

सव्यापसव्यमार्गस्था सर्वापद्विनिवारिणी ।
स्वस्था स्वभावमधुरा धीरा धीरसमर्चिता ॥ 169 ॥

**ஸவ்யாபஸவ்யமார்க்கஸ்த்தா ஸர்வாபத்விநிவாரிணீ.**
**ஸ்வஸ்த்தா ஸ்வபாவமதுரா தீராதீரஸமர்ச்சிதா. 169**

**11. ஸவ்ய - அபஸவ்ய - மார்க்க - ஸ்த்தா. வலத்திலும் இடத்திலும் வழியிலும் உள்ளவள்.**

11-1. தேவி வலத்திலும், இடத்திலும், வழியிலும் துணையக நின்று உதவுகிறாள். ஸவ்யம் - படைத்தல், அபஸவ்யம் - ஒடுக்குதல், மார்க்கம் - இவைகளுக்கு இடையேயுள்ள காத்தல் இம் மூன்று தொழில்களின் வழியில் உள்ளவள். ஸவ்யம் - வேதமுறையில் வழிபாடு, ஸமயாசாரம், அபஸவ்யம் - தந்திர முறையில் வழிபாடு, கௌலம். இவ்விரண்டு வழிகளாலும் வழிபடத் தக்கவள்.

11-2. சூரியன் செல்லும் பாதை மூன்று, 27 நக்ஷத்திரங்கள் 9 வீதிகளாக அமைகின்றன-

1. நாக வீதி - அச்விநி, பரணி, காத்திகை.
2. கஜ வீதி - ரோகிணி, மிருகசீர்ஷம், திருவாதிரை.
3. ஐராவத வீதி, புனர்பூசம், பூசம், ஆயில்யம். இம் மூன்று வீதிகள் உத்தர மார்க்கமாகும்.
4. ஆர்ஷப வீதி - மகம், பூரம், உத்தரம்
5. கோ வீதி - ஹஸ்தம், சித்திரை, ஸ்வாதி.
6. ஜாரத்கவவீதி - விசாகம், அனுஷம், கேட்டை. இவை மூன்றும் மத்தியம மாக்கமாகும்.
7. அஜவீதி - மூலம், பூராடம், உத்தராடம்.
8. மிருக வீதி - திருவோணம், அவிட்டம், சதயம்.
9. வைச்வாநர வீதி - பூரட்டாதி, உத்திரட்டாதி, ரேவதி. இவை மூன்றும் தக்ஷிண மாக்கமாகும்.

இம்மூன்று மாக்கங்களிலும் இருந்து சூரியன் முதலியவர்களின் ஸஞ்சாரத்தைக் கட்டுப்படுத்துபவள்.

11-3. ஸவ்யம் – தேவயானம், அபஸவ்யம் – பித்ருயானம். இவ்விரு வழிகளில் நடுவில் இருந்து அவ்வவ்வழி செல்பவர்களைக் காப்பவள். வேதத்தின் ஞான காண்டத்தில் கூறப்பட்டுள்ள ஆத்ம ஸாதனத்தால் சரீரத்தின் முடிவில் சரீரத் தொடர்பைவிட்டு பஞ்ச பூதங்களின் தொடர்புள்ள உலகங்களைத் தாண்டிச் செல்லுதல் நிர்வாணம் எனும் மோக்ஷமாகும். அதைத் தேவயானம் – ஒளிமிக்க வழி என்பர். அது ஸவ்ய மாக்கம். மற்றொன்று வேதத்தின் கர்ம காண்டத்தில் கூறப்பட்டுள்ள கர்மாக்களைச் செய்து உடலைப் பெற்றதற்கான கடமைகளை நிறைவேற்றி மேலுலகங்களுக்குச் செல்வது. இது பித்ருயாணம். திரும்பப் பிறவி தரும் வழியானதால் புகை அடைந்த ஒளி மங்கிய வழி. இது அபஸவ்ய மார்க்கம். இவ்விரு வழிகளாலும் அடையத் தக்கவளாக இவ்வழிகளில் உள்ளவள்.

11-4. வழிபாடுகளில் முக்கியமாக வழிபடப்பெறும் தேவதையை ஓட்டிய பல அங்க தேவதைகளை வழிபட வேண்டிவரும். வேதத்திலும் ஸ்ம்ருதிகளிலும் கூறப்பட்ட கர்மங்களில் பல தேவதைகளை வழிபட நேரும். அவைகளை வேதம் முதலியவை கூறியபடி வழிபடுவது தக்ஷிண மார்க்கம் ஆகும். இதன்படி தேவர்கள், ருஷிகள், பித்ருக்கள் என்ற மூவருக்கும் திருப்தி ஏற்படும். இம்மூவரும் நமது வாழ்க்கைக்கு உதவியவர்கள். மழை முதலியவற்றால் உணவு முதலியவை நல்ல முறையில் கிடைக்க உதவியதால் தேவர்களுக்கும், அறிவூட்டும் நூல்களை வெளியிட்டு, அறிவெளி தந்ததால் ருஷிகளுக்கும், வாழையடி வாழையாக வம்சம் துலங்க உதவியதால் பித்ருக்களுக்கும், நாம் ஒவ்வொருவரும் கடன்பட்டுள்ளோம். தக்ஷிண மார்க்கத்தால் கருமங்களைச் செய்ய இக்கடனிலிருந்தும் விடுபடுகிறோம். வாம மார்க்கம் இந்த தக்ஷிணத்திலிருந்தும் வேறுபடுகிறது. வேதம் முதலியவற்றில் கூறிய கருமங்களைச் செய்யும் போது, மற்ற அங்க தேவதைகளை வழிபடாமல் முக்கியமாகத் தனது உபாஸனா மூர்த்தியான தேவதையே உலகத்தைக் காக்கிறது. என்ற நம்பிக்கையுடன் அதனை எல்லாவற்றிலும் வழிபடுவது வாமம். சூரியனுக்கோ, வாயுவிற்கோ, ருஷிகளுக்கோ, பித்ரு தேவதைகளுக்கோ ஹோமம் செய்யவேண்டிய இடத்திலும் தன் தேவதையையே பாவித்து வழிபடுவது வாமமாகும். இதில் முன்கூறிய கடன்களிலிருந்து விடுதலை பெறாத பாபம் நேரிடும்.

11-5. ஜனாதிபதி பல அதிகாரிகளை நியமித்துத் தன் பணிகளை அவர்களிடம் பங்கிட்டுக் கொடுத்துத் தேசத்தை ஆள்கிறார். நம்மோடு

தொடர்பு கொள்பவர்கள் இவ்விதிகாரிகளே. ஜனாதிபதிதான் ஆள்கிறார்; இவர்களுக்குத் தனித்து ஆளும் அதிகாரமில்லை என்பது உண்மையே. எனினும் இவ்வதிகாரிகளை மதிக்காமல் எதற்கும் நேரிடையாக ஜனாதிபதியுடன் தொடர்புகொள்வதால் சித்தி எளிதில் கிடைக்காது; தாமதமாகலாம். இவ்வதிகாரிகளை மதிக்காதிருப்பது தன்னை மதிக்காததாகும் என ஜனாதிபதி கருதுவதற்கும் இடமுண்டு. வாம மாக்கம் இத்தகைய சிக்கல்கள் கொண்டது. பெற்ற தாயை மதிக்கிறோம். அவளையே தேவதையாகவும் வழிபடலாம். வழிபாட்டு முறையில் இது அன்பைப் பெற்றமைக்காகச் செய்ய வேண்டிய கடமைகளைச் செய்ய வேண்டியது அவசியம். தேவதையாக வழிபடும்போது இந்த அன்புக் கடமையிலிருந்தும் தவறுகிறோம். அதுபோல் தேவர்கள் முதலியவர்களுக்கு நாம் ஆற்றவேண்டிய கடமைகளாகிற கடன்கள் விலகாததால் முக்தி பெறுவதில் இடையூறுகள் நேரும். வாமம் குறுக்கு வழி. உபாஸனை ஒரே தேவதையைப் பற்றியதனால் செயலளவில் எளிதானது. ஆனால் பலன் கிடைப்பதில் தாமதம் ஏற்படலாம். தக்ஷிணம் நேர்வழி. சிக்கலின்றி முறைப்படிச் செல்வதால் செயலளவில் சற்று நீண்டதாயினும் பலன் சீக்கிரமாகக் கட்டாயம் கிடைக்கும் இவ்விரு வழிகளாலும் தேவியை வழிபடலாம். ருசிக்கேற்ப அவரவர் ஒரு முறையைப் பின்பற்றுவர்.

11-6. திரிபுரபைரவீ முதலிய சில தேவதைகளின் உபாஸனை வாம மாக்கத்திலேயே அமைந்துள்ளது. சாரதா முதலிய சில தேவதைகளின் உபாஸனை தக்ஷிண மாக்கத்திலேயே அமைந்து உள்ளது. அந்தந்த தேவதைகளை அததன் வழியிலேயே உபாசிப்பதுதான் முறை. அவ்வவ்வழிகளால் உபாசிக்கத்தக்க பல வடிவங்கள் கொண்டவள் தேவி.

11-7. குண்டலினீ சக்தி முதுகின் முள்ளந்தண்டில் உள்ள மூன்று நாடிகள் மூலம் இயங்குகிறது. இடை - பக்கத்து நாடி சந்திர தத்துவத்தால் ஆனது. பிங்களை - வலது பக்கத்து நாடி, சூரிய தத்துவத்தால் ஆனது. நடுவில் உள்ள ஸுஷும்நா நாடி - குண்டலினி மேலும் கீழும் செல்லும் பாதை. வலது மூக்கால் சுவாசத்தை உள்ளிழுத்து இடது மூக்கால் வெளியே விட சூர்ய சக்தி கூடும். இடது பக்கத்தால் சுவாசத்தை உள்ளிழுத்து வலது மூக்கால் வெளியே விட சந்திர சக்தி கூடும். மூன்று நாடிகளிலும் ஸஞ்சரிக்கும் பல்வேறு சக்திகளாக இருப்பவள். (912)

**12. ஸர்வ - ஆபத் - விநிவாரிணீ. எல்லா ஆபத்துகளையும் தடுப்பவள்.**

12-1. வாம - தக்ஷிண மார்க்கங்களில் முறைப்படி உபாஸனை செய்யும் வாய்ப்பு பெறாதவர்களும் அவளது பெயரைக் கூறுவது. அவளை நினைப்பது முதலிய சிறிய ஸேவைகளால் அவளது அருளைப் பெறலாம். எதிர்பாராமல் அவர்களுக்கு நேரும் துன்பங்களை தேவி விலக்குகிறாள். (913)

**13. ஸ்வ - ஸ்த்தா. தன் நிலையில் உள்ளவள்.**

13-1. துன்பமோ பயமோ உணரப்படுவதால் தன் நிலை கெடுகிறது. தன் நிலை கெடுவதே நோய். தன் நிலையில் இருப்பது ஆரோக்கியம். ஸத். சித். ஆனந்தம் என்ற தன் நிலையில் நிலைத்திருக்கும் தேவி துன்பத்திற்கும் பயத்திற்கும் நோய்க்கும் உட்பட மாட்டாள்.

13-2. ஸ்வ:- மேலுலகம். அதிலுள்ளவள். ஸ்வம் - தனது இடம், பெருமை அதில் நிலைத்திருப்பவள். மற்றவர்கள் இருப்பதற்கு ஆதாரமான இடம் தேவை. தேவி தன்னிடமே நிலை பெற்றிருக்கிறாள். அவளைத் தவிர வேறிடமில்லை. (914)

**14. ஸ்வ - பாவ - மதுரா. இயற்கையாக இனிமையாக இருப்பவள்.**

14-1. மற்றொன்றின் சேர்க்கையால் இனியதாயிருப்பவை பல. தேவி இயற்கையாகவே இனியவள். ஸ்வ - பாவ:- அவளது தன் நிலை. அது எப்போதும் இனியதே. அதனால் அவளுக்கு மற்றொரு இனியதின் தேவை இல்லை.

14-2. ஸ்வ - பாவ: - தனது இருப்பிடம். மதுரையைத் தனது இருப்பிடமாகக் கொண்டவள் (மீனாக்ஷி). (915)

**15. தீரா. புத்தியைச் செலுத்துவதில் வல்லவள்.**

15-1. புத்தியைச் தன் விருப்பப்படி குறிப்பிட்ட பணியில் ஒரே முனைவுடன் செலுத்துவதில் வல்லவள். (தியம் ஈரயதி) தன் விருப்பப்படி செல்லும் புத்தியைக் கோருபவர்களுக்கு அதனைத் தருபவள். (தியம் ராதி - ததாதி) தைர்யமுள்ளவள், வல்லவள், புத்தியைத் தரும் தசமி எனும் திதியாயுள்ளவள். (916)

**16. தீர - ஸமர்ச்சிதா. தீரர்களால் வழிபடப்பெற்றவள்.**

16-1. தீரர்கள் ஒரு முனைப்புடன் தேவியை வழிபடுவார்கள். அவள் நரகத்தில் தள்ளினாலும், உலக ஸாம்ராஜ்யத்தை ஆளும்படிச் செய்தாலும் பாதிப்புறாதபடித் தன்னை மீட்கும் பொறுப்பு தேவியினுடையது என நம்பி அவளது திருவடிகளைப் பற்றி நிற்பார்கள். தன் புத்தி கலங்காமல் நல்வழியில் நின்று தேவியிடம் அளவு கடந்த பக்தி கொள்வதற்காகவும் தேவியையே வழிபடுவார்கள். (தீய: ஈராய - ஈரணாய ஸமாச்சிதா.) (917)

(நா. 918 - 922)

चैतन्यार्घ्यसमाराध्या चैतन्यकुसुमप्रिया ।
सदोदिता सदातुष्टा तरुणादित्यपाटला ॥ 170 ॥

**சைதந்யார்க்க்யஸமாராத்த்யா சைதந்யகுஸுமப்ரியா.**
**ஸதோதிதா ஸதாதுஷ்டா தருணாதித்ய பாடலா. 170**

**17. சைதன்ய - அக்க்ய - ஸமாராத்த்யா. சுய உணர்வையே அர்க்கியமாகக் கொடுத்து வழியடப் பெறுபவள்.**

17-1. சைதன்ய (சேகநா - சித்). நிராகராஜ்ஞானம், அறிபவன், அறியப்படும்பொருள், அறிவு என்ற த்புடியை எதிர்பாராததும் திரிபுடியால் ஏற்படும் அறிவிற்குக் காரணமாயிருப்பதுமான உள்ளறிவு, பேரறிவு, சுய உணர்வு, ஸ்வானுபூதி எனப்படுவது. (17.3.2) அர்க்க்யம் - வழிபடப்பெறும் தேவதையை வரவேற்று (ஆவாஹனம்) த் திருவடிகளை அலம்பிப் (பாத்யம்) பின் கைகளை அலம்புவதற்காக நீர் வார்ப்பது அர்க்கியமாகும். அர்க்கியம் - மதிப்புள்ளது. விலை உயர்ந்தது, சிறந்தது. மிகச் சிறந்த நீரில், அருகம்புல், தாமரை, சந்தனம், அக்ஷதை சேர்த்துக் கையலம்புவதற்காக அளிப்பது அர்க்கியம் எனும் உபசாரம். தேவி வழிபாட்டில் ஸாமான்யாக்க்யம் விசேஷார்க்க்யம் என்ற இரு வகைப்பட்ட துய நீரை வைத்திருப்பர். இவையும் அர்க்கியமே. வழிபாடெல்லாம் முடிந்த பிறகு தேவதை பூர்ண திருப்தி அடைந்துவிட்டதாகப் பாவித்துக் கடைசியில் பால் முதலியவற்றால் திருப்தி ஊட்டுவதும் அர்க்க்யமாகும். நுண்ணிய உள்ளுணர்வாகிய சைதன்யத்தையே அர்க்க்யகமாக அளிப்பாதால் தேவி திருப்தி அடைகிறாள். அவளருளால் பெற்ற அந்தப் பேரறிவை அவளுக்கே அளிப்பதால் அவளைத் திருப்தி செய்துவிடலாம். வெளிப்படையான உபசாரங்களை விட மானஸமான உபசாரங்களால் வழிபடுவது மிகச் சிறந்தது. அதைவிடச் சிறந்தது நமது உள்ளுணர்வுகளையே பொருளாகக் கொண்டு வழிபடுவது - பாவனா மார்க்கம். இதைப் பரா பூஜா என்பர். பாவனோபனிஷத்தில் இதன் விளக்கத்தைக் காணலாம்.

17-2. புவனேச்வரீ மந்திரத்திற்குச் சைதன்யமென்ற பெயர் உண்டு. அதுவே அர்க்க்யம் - விலை மதிப்பற்ற மந்திரம். அதனால் வழிபடத்தக்கவள் தேவி. (918)

**18. சைதன்ய - குஸும - ப்ரியா. சைதன்யமென்ற பூவை நாடுபவள்.**

18-1. பூ காயாகிப் பழமாகும். அதுபோல் உள்ளுணர்வு மலர்ந்து புத்தி மனம் வழியே வெளிப்பட்டுப் பொறிகள் மூலம் பிரிந்து பரவி, பல உணர்வுகளை நமக்குத் தருகிறது. அவ்வுணர்வுகளைக் கட்டுப்படுத்தி நல்லுணர்வுகளாக மாற்றித் தருகிறாள் தேவி. அவை எட்டு. அஹிம்சை, புலனடக்கம், பொறுமை, தயை, அறிவு, தவம், ஸத்தியம் இவைகளுக்கு அடிப்படையான நல்லெண்ணம். இவ்வெட்டும் சைதன்ய மலர்ச்சியால் விளைந்த பூக்கள். நம் வாழ்க்கையில் அவைகளைக் கடைபிடித்து அந்த வாஸனைமிகுந்த பூக்களாகிய உள்ளுணர்வுளைத் தேவியிடம் சேர்க்கும்போது, அந்தப் பூக்களால் தேவி மிகவும் சந்தோஷப்படுகிறாள். (919)

**19. ஸதா - உதிதா. எப்போதும் உதித்த நிலையில் இருப்பவள்.**

19-1. உத்யத்பானுஸஹஸ்ராபா - எனத் தேவியின் உருவ விளக்கம் தொடங்கியது. (நா.6) உதிக்கும் சூரியன் பகலில் கொடும் வெப்பமுள்ளவனாகி மாலையில் மங்கி மறைவதைப் பாக்கிறோம். தேவி உதிக்கும் சூரியனுக்கொப்பானவள். ஆனால் நடுப்பகலில் உள்ள கடும் ஒளி, மாலையில் மங்கல், மறைவு என்ற வளர்ச்சியும் தேய்வுமற்றவளாகையால் எப்போதும் உதித்த நிலையிலேயே இருப்பவள். ஸத் - ஆ - உதிதா - ஸாதுக்கள் விஷயத்தில் எப்போதும் எங்கும் ஒளிமயமாக இருப்பவள். (18.70.1) (920)

**20. ஸதா - துஷ்டா. எப்போதும் மகிழ்ச்சியுள்ளவள்.**

20-1. சந்தோஷம் வெளிப்பொருளால் ஏற்படுவதில்ல. ஒன்றைச் சந்தோஷம் தரவல்லது என மனம் கருதினால் அது சந்தோஷத்தைத் தருகிறது. ஸந்தோஷம் ஆத்மாவின் சுய உருவம். தேவி ஆத்ம ஸ்வரூபிணியானதால் எப்போதும் ஸந்தோஷத்துடனிருக்கிறாள். ஸத் - ஆ - துஷ்டா- நல்லவர்களிடம் எப்போதும் ஸந்தோஷமாக இருப்பவள்.(921)

**21. தருண - ஆதித்ய - பாடலா. முதிர்ந்த சூரியனைப் போன்ற ஒளி உள்ளவள்.**

21-1. காலைக் கதிரவன் நடுப்பகலை அடையும்போது செம்மை குறைந்து வெண்மை கூடிப் பாதிரிப் பூ போல் காணப்படுவான். தேவியும் சில தோற்றங்களில் நடுப்பகலை அடையவிருக்கும் சூரியனைப் போல் வெண்ணிறம் கலந்த மஞ்சள் நிறத்தில் பாதிரிப்பூ போல் இருப்பாள். மோக்ஷத்தை நாடுபவர் வெண்ணிறத்தவளாகவும், பணம் பெருக மஞ்சள் நிறத்தவளாகவும், சிருங்கார ரஸம் பெருகவும் வசியம் செய்யவும் பாதிரிப்பூ நிறந்தவளாகவும் தேவியின் மேனி நிறத்தைப் பாவிப்பது முறை. அப்படிப் பாதிரிப்பூ நிறத்தில் பாவிக்கப்பெறுபவள். (922)

(நா. 923 - 926)

दक्षिणादक्षिणाराध्या दरस्मेरमुखांबुजा ।
कौलिनीकेवलाऽनर्घ्यकैवल्यपददायिनी ॥ 171 ॥

**தக்ஷிணாதக்ஷிணாராத்த்யா தரஸ்மேரமுகாம்புஜா.**
**கௌலிநீகேவலா(அ)நர்க்க்ய கைவல்யபததாயிநீ.171**

**22. தக்ஷிண - அதக்ஷிண - ஆராத்த்யா. படித்தவர்களாலும், பாமரர்களாலும் ஆராதிக்கத்தக்கவள்.**

22-1. தக்ஷிணர் - செயலாற்றும் திறமையுள்ளவர்கள். அறிவாற்றல் மிக்கவர். அதக்ஷிணர் - அறியாதவர்கள், பாமரர். இவ்விருவர்களாலும் ஆராதிக்கப்படுவள். தக்ஷிணம் - வாமம் என்ற இரு மாக்கங்களால் வழிபடப் பெறுபவள். தக்ஷிணம் - வாமம் என்ற இரு மார்க்கங்களால் வழிபடப் பெறுபவள். (30-11) கர்ம மார்க்கத்தில் செல்பவர் தக்ஷிணர், பிரும்மஜ்ஞானி அதக்ஷிணர். இருவராலும் வழிபடப் பெறுபவள். (923)

**23. தர - ஸ்மேர - முக - அம்புஜா. புன்சிரிப்பால் சிறிது மலர்ந்த முகத்தாமரையுள்ளவள்.**

23-1. தாமரைப் பூ மலரும்போது தளங்கள் சிறிது விரிந்த நிலையில் உள்ளே உள்ள அதன் நிறம் மனத்தைக் கவரும். புன் சிரிப்பால் தேவியின் முகம் மலர்ந்து சற்று விரிந்த தாமரைபோல் அழகாயுள்ளது. தரம் - சங்கு. சங்கு போலுள்ள கழுத்தின் மேல் மலர்ந்த தாமரைபோல் புன்சிரிப்புள்ள முகமுள்ளவள். (நா.602) தரம் - பயம். மற்றவர்கள் பயந்து நடுங்கும் வேளைகளில் இவள் புன்சிரிப்புடன் இருப்பாள். பிரளயத்தில் உலகம்

அழியும் போதுள்ள பயங்கர நிலையில் தான் அதனால் பாதிப்புறாமல் சாக்ஷியாக நின்று அதனைப் புன்சிரிப்புடன் பார்த்து ரசிப்பவள். (நா.232. 571) தரம் - ஆதரவு பக்தர்களை ஆதரிக்கும் போது புன்சிரிப்புள்ள முகமுள்ளவள். (924)

**24. கௌலிநீ - கேவலா. கௌலமும் கேவல ஞானமும் இசையப் பெற்றவள்.**

24-1. கௌலிநீ - குலதாமம் உள்ளவள். அறிபவன், அறியப்படும் பொருள், அறிவு என்ற மூன்றும் பிரதிபலிக்கும் அறிவு குலஜ்ஞானம். தர்மத்தோடு தர்மியை அறியும் ஞானமாகும். கேவலா - தாம ஸம்பந்தமற்ற நிராகார ஞான வடிவிலுள்ள பரம்பொருள். கேவலம் - தனித்தது, முக்கியமானது, உயர்ந்தது, பரப்பிரும்மம். (17.7.5- 18.89.1- 21.45.1- 25.26.1) தேவி இரண்டாகவுமிருப்பவள். குலஜ்ஞானத்தை கேவலஜ் ஞானமாக மாற்றுபவள். சிற்றறிவைப் பேரறிவாக்குபவள். கௌலிநீ (நா.94) கேவலா (நா.623) என்ற இரு நாமங்கள் முன்னர் வந்துள்ளன. இங்கு கௌலிநீகேவலா என்ற ஒரே சொல்லாக அமைந்த நாமம். (925)

**25. அநார்க்க்ய - கைவல்ய - பத - தாயிநீ. விலைமதிக்க வொண்ணாத மோக்ஷத்தைத் தருபவள்.**

25-1. கைவல்யம் - கேவலமாக- பரப்பிரும்மமாக இருக்கும் தன்மை. அதுவே நிர்வாணம் எனும் மோக்ஷம். (நா.390. 625- 736- 839) அது அநர்க்க்யம் - விலைமதிக்கவொண்ணாதது. எதனையும் விலையாக கொடுத்து வாங்க முடியாதது. அதனை அடையவும் முடியாது. அடைவதற்கு அடைபவனும் அடையப்படும் பொருளும் தனித்துத் தேவை. இங்கு மோக்ஷத்தில் அடைபவனே அடையப்படும் பொருளாகிறாள். மிகச் சிறந்த ஞானி மட்டுமே இதனை உணர்ந்து அதுவாகி அனுபவிக்க முடியும். தேவி தன் கருணையால் அதனையும் வைகுண்டம் ஸ்வர்க்கம் போல் அடையக்கூடிய இடமாக்கி (பதம்) எளிதாக்கி வழங்குகிறாள். (926)

(நா. 927 - 933)

स्तोत्रप्रिया स्तुतिमती श्रुतिसंस्तुतवैभवा ।
मनस्विनी मानवती महेशी मङ्गलाकृतिः ॥ 172 ॥

**ஸ்தோத்ரப்ரியா ஸ்துதிமதீ ச்ருதிஸம்ஸ்துதவைபவா.**
**மநஸ்விநீ மாநவதீ மஹேசீ மங்களாக்ருதிః 172**

### 26. ஸ்தோத்ர - ப்ரியா. ஸ்தோத்திரத்தில் பிரியம் உள்ளவள்.

26-1. தேவியின் எல்லா கல்யாண குணங்களையும் மனம் உருவகப்படுத்த முடியாது. மனத்தால் உருவகப்படுத்த முடிந்த சில குணங்களை மட்டும் கூறுவது தேவியின் ஸ்தோத்திரம். இது இல்லாததைச் சொல்வது அல்ல. ஸ்தோத்திரம் ஆறு விதம் (1) தேவியின் பெருமையைப் பாடி வணக்கம் தெரிவிப்பதாக அமைவது (2) வாழ்த்துவது (3) தேவியின் தத்துவங்களை விளக்குவது (4) தேவி எதிரிகளை வென்ற வீரத்தைப் புகழ்வது (5) தேவி லீலையாக எடுத்த பல தோற்றங்களைப் புகழ்வது (6) நமது கோரிக்கைகளைத் தெரிவிப்பது. உதாரணமாக இந்த ஆறு வகை ஸ்தோத்திரங்களையும் இந்த ஆறு நாமங்களில் முறையாகக் காணலாம். (1) த்ரிஜகத் வந்த்யா. (நா.627) (2) ஸ்வஸ்திமதீ (நா. 448) (3) மித்யாஜகத் அதிஷ்டானா. (நா.735) (4) பண்டாஸுரேந்த்ர நிர்முக்த சஸ்த்ரப்ரத்யஸ்த்ர வர்ஷிணீ. (நா.79) (5) இச்சா சக்தி - ஞான சக்தி - கிரியா சக்தி ஸ்வரூபிணீ (நா.658) (6) ஸாம்ராஜ்யதாயிநீ (நா.692) இந்த ஆயிரம் நாமங்களும் இவ்வகையில் ஆறு வகை ஸ்தோத்திரங்களில் அடங்கும். இந்த நாம பாராயணத்தால் தேவிக்குப் பிரியமான ஸ்தோத்திரத்தைச் செய்தவர்களா கிறார்கள். வேதத்திலுள்ள தேவீபரமான ராத்திரி ஸூக்தம் முதலியவை ஸ்தோத்திரங்கள். அவைகளைப் பாடுவதை விரும்புபவள். (927)

### 27. ஸ்துதி - மதீ. தோத்திரங்கள் உள்ளவள்.

27-1. தேவியின் புகழ்பாடும் வைதிகமாயும் லௌகிகமாயும் உள்ள துதிகள் பல உள்ளன. அவளது துதியால் புத்தியும் செல்வமும் கிடைக்கின்றன. (ஸ்துத்யா மதிச்ச ஈ ச யஸ்யா) (928)

### 28. ச்ருதி - ஸம்ஸ்துத - வைபவா. வேதம் போற்றும் வைபவம் உள்ளவள்.

28-1. வைபவம் - பெருமை, முழுவதும் அறியமுடியாதபடி தங்கும் பரந்து நிற்கும் தேவியின் மகத்துவம். அவைகளை அறிய உதவும் ஒரே நூல் வேதம். அதனாலும் முழுவதும் அறிய முடியாதிருப்பதால் ஸ்தோத்திரம் என்ற வகையில் அவளது பெருமைகளில் சில பகுதிகள் மட்டும் குறிப்பிடப்படுகின்றன. அப்படி வேதத்தால் புகழப்பட்ட வைபவம் உள்ளவள்.

28-2. சுருதி - வேதம்; அது நான்கு ஆனதால் நான்கு என்ற எண்ணைக் குறிக்கும். நிவ்ருத்தி, பிரதிஷ்டா, வித்யா, சாந்தி என்ற நான்கு புகழ் பெற்ற கலைகளை மூர்த்திகளாகக் கொண்டவள். (நா. 447- 829)

(929)

**29. மநஸ்விநீ. தனக்கு அடங்கிய மனம் கொண்டவள்.**

29-1. நம்மை நம் மனம் அடிமைப்படுத்தித் தன்னுடையதாகக் கொண்டுவிட்டது. அதனால் நாம் மனஸ்விகளாக இருக்க முடியவில்லை. உள் மனம் சொல்வதை வெளி மனம் கேட்பதில்லை. தேவியின் மனம் தேவியின் வசத்தில் உள்ளது. மனத்தைத் தன் வசப்படுத்திக் கொண்டவள்.

(930)

**30. மாநவதீ. உயர்ந்த மனம் கொண்டவள்.**

30-1. மனத்தைத் தன் வசப்படுத்தியது மட்டுமல்ல பெருமனமாகவும் அதை வைத்திருப்பவள். மாநம் - தற்பெருமை- நியாயமான தற்பெருமை கொண்டவள். தனித்து இயங்கச் சுதந்திரமில்லாத நாம் தற்பெருமை கொள்வதில் பொருளில்லை. தேவி தனித்து இயங்குபவள். எல்லா இயக்கங்களும் அவளது அருளால் நடக்கின்றன. அதனால் அவளது தற்பெருமை பொருத்தமானதே. மாநம் - ஆதரவு. தன்னை அண்டியவர்களிடம் ஆதரவு கொண்டவள். மாநம் - தனக்கு மிக வேண்டியவனும் அன்புக்குரியவனும் தவறிழைக்கும்போது அதனைப் பொறுக்காதிருப்பது. தேவி அப்படித் தனது சிறந்த பக்தர்களிடம் ஏதேனும் தவற்றைக் காட்டி அதனை மன்னிக்க இயலாதிருப்பதையும் காட்டும் தன்மையுள்ளவள். (931)

**31. மஹா - ஈசீ. மஹேசுவரி.**

31-1. பிரும்மா முதலானோர் - ஈசுவரர். அவாகளுக்குள் பெருமை மிக்கவர் மஹேசர் பரமசிவன், அவரது மனைவி. (932)

**32. மங்களா - ஆக்ருதி மங்கள வடிவினள்.**

32-1. தியானிக்கத்தக்க அவளது வடிவம் ஆக்ருதி. அது மங்களமானது. நினைத்தாலே மங்களம் தரக்கூடியது. (933)

(நா. 934 - 941)

विश्वमाता जगद्धात्री विशालाक्षी विरागिणी ।
प्रगल्भा परमोदारा परामोदा मनोमयी ॥ 173 ॥

**விச்வமாதா ஜகத்த்தாத்ரீ விசாலாக்ஷீ விராகிணீ.**
**ப்ரகல்ப்பா பரமோதாரா பராமோதா மநோமயீ. 173**

**33. விச்வ மாதா. உலகை ஈன்ற அன்னை.**

33-1. உலகை மூலப்பிரகிருதியாக இருந்து பெற்ற அன்னை. உலகைத் தன் கருவறையில் ஊட்டம் அளித்துத் தானே புஷ்டி பெறும் தகுதி வரும் வரை அடக்கி வைத்திருப்பவள். (934)

**34. ஜகத் - தாத்ரீ. உலகைத் தாங்குபவள்.**

34-1. தாத்ரீ – தானே பெற்றெடுத்த சிசுவை வளர்க்கும் தாய். தாயைப் போல் அன்புடன் பேணி வளர்க்கும் செவிலித் தாயும் தாத்ரீ. உலகைத் தாங்குவதில் தாயைப் போல் கருணையுடனும் அன்புடனும் ஈடுபடுபவள். தத்ரீ – தாங்குபவள். உலகிற்கு ஆதார சக்தியாக நின்று தாங்குபவள்; ஜகத் – எப்போதும் இயங்கிக் கொண்டிருக்கும் பல்வகை உயினங்கள். தாத்ரீ - பூமி பூமியாக இருந்து உயிரினங்களைத் தாங்குபவள். அனைவற்றிற்கும் வாழ வகை அளித்துக் காப்பாற்றுபவள். (நா. 337) (935)

**35. விசால - அக்ஷீ. அகன்ற கண்கள் உள்ளவள்.**

35-1. விசால (விகதா சாலா யஸ்மாத்) தடையற்றவை. பாதையின் இருமருங்கிலும் ஒதுங்குவது நல்லதல்ல என்று காட்டக் கற்களாலான தடைகளை வைத்துச் செல்ல வேண்டிய பாதையை வரையறுத்திருப்பர். அது சாலா – சாலை, நான்கு புறங்களிலும் சுவர் முதலிய தடை அமைத்துக் குறிப்பிட்ட பணிக்காக அமைக்கப்பட்ட கூடம் சாலா. (பாகசாலா- ஹோமசாலா- யாகசாலா). இத்தகைய தடையற்றது விசாலம். கண்களின் பார்வை தடையுள்ளது. கழுத்தைத் திருப்பிப் பாத்தாலன்றி சுற்றுப்புறத்தில் உள்ளவை முழுவதும் புலப்படமாட்டா. தேவியின் கண்களின் பார்வைக்கு எத்தகையத் தடைகளும் இல்லை. அது எங்கும் எதனையும் எவ்வகையிலும் பார்க்கவல்லது. அத்தகையக் கருணையால் விரிந்த கண்களுள்ளவள். விசாலாக்ஷி என்ற பெயருள்ள காசி விசுவனாதரின் சக்தி. வாராணஸி சக்தி பீடத்தில் உள்ள தேவி, (29.13.3)

35-2. விசாலம் - பதரிகாச்சரமம் முதல் நேபாள் வரை விரிந்த ஹிமாலயத்தின் பகுதி. நேபாளத்தில் உள்ள விசாலபீடத்தைக் கண்களாகக் கொண்ட குஹ்யேச்வரி. அந்த பீடத்திற்கான நியாஸம் வலது கண்களில் செய்யப்படுகின்றது. (29.13.3) (936)

**36. வி - ராகிணீ. பற்றற்றவள்.**

36-1. வெறுப்பால் ஒதுக்காமல். நாட்டமின்மையால் போகங்களை ஒதுக்குவது வைராக்கியம். அப்படிப் பற்றற்றிருப்பவள். உலகைக் காப்பதும் விசாலாக்ஷீயாக இருப்பதும் கருணையால்தான். பற்றால் அல்ல.

36-2. வி - ராகிணீ - மிகச் சிவந்தவள். சிவப்பு பற்றையும் பற்றின்மையும் காட்டுகிறது. துறவி உடுத்தும் காஷாயமும் சிவந்ததே. அது அவரது பற்றின்மையைக் காட்டுகிறது. பற்றின்மையைக் காட்டவல்ல - தனிப்பட்ட சிவப்பு நிறமுள்ள ஆடையுள்ள துறவிகள் வடிவில் வருபவள். (விராகி – பைராகி.) (937)

**37. ப்ரகல்ப்பா. துணிவும் திறமையும் கொண்டவள்.**

37-1. மிகச் சிரமம் தரக்கூடிய உலகப் படைப்பு முதலிய பணிகளில், துணிவும் திறமையும் காட்டுபவள். (938)

**38. பரம - உதாரா. சிறந்த வள்ளல்.**

38-1. உதாரா - பெரியவள், வள்ளல், (நா.848), உதாரர்களுக் குள்ளே பெரியவள், சிறப்பு எக்காலும் எவ்விடத்திலும் தேவியைவிடச் சிறந்த உதார எண்ணம் கொண்டவரைப் பாக்க இயலாது.

**39. பர - ஆமோதா. பெரும் ஆனந்தம் கொண்டவள்.**

39-1. ஆமோதம் - மனக்களிப்பு, நறுமணம், புகழ், இவைகளைப் பெருமளவில் கொண்டவள். (940)

**40. மனோ - மயீ. மனோமயகோசமாயிருப்பவள்.**

401-1. ஞானேந்திரியங்களையும் மனத்தையும் கொண்டு இயங்கும் ஸூக்ஷ்ம சரீரம் மனோமயகோசம். ஆதன் வடிவில் இருப்பவள். பரம்பொருளின் மனமாயிருந்து உலகை ஆள்பவள். அறிவைப் பெறுவதில் முக்கிய ஸாதனமான மனமாக இருப்பவள். (941)

(நா. 942 - 947)

व्योमकेशी विमानस्था वज्रिणी वामकेश्वरी ।
पञ्चयज्ञप्रिया पञ्चप्रेतमञ्चाधिशायिनी ॥ 174 ॥

**வ்யோமகேசீ விமாநஸ்த்தா வஜ்ரிணீ வாமகேச்வரீ.**
**பஞ்சயஜ்ஞப்ரியா பஞ்சப்ரேதமஞ்சாதிசாயிநீ. 174**

### 41. வ்யோம - கேசீ. ஆகாசத்தையே கேசமாகக் கொண்ட விராட் வடிவினள்.

41-1. ஆயிரம் கால்கள், கண்கள், கைகள் கொண்ட விராட் வடிவில் (ஸ்தூல தேக ஸமஷ்டி வடிவம் பா. 17.8.18-8- 18.9.18.10) ஆகாயத்தையே கேசமாகக் கொண்டவள். விராட்டின் வடிவை மனித உருவில் கற்பனை செய்து, உலகாக மாறவிருக்கும் பல்வேறு கூறுகளை மனித உருவிற்கான அவயங்களாகக் கற்பனையால் அமைத்த வடிவில், திக்குகள் - காது, சூரிய சந்திரர்கள் - கண், விண்வெளி - தலை, அக்கினி - முகம் என்ற வரிசையில் ஆகாசம் - கேசம் எனப் புராணங்கள் கூறும். விரித்த செஞ்சடையாளராக ஆகாயமளாவி நிற்கும் சடையுள்ள பரமசிவன் வ்யோமகேசர். அவரது பத்தினி. ஆகாசமளாவிய கேசமுள்ளவள். (28.44.1) (942)

### 42. வி - மான - ஸ்த்தா அளவு கடந்த நிலையில் இருப்பவள்.

42-1. ஆகாயத்தில் செல்ல உதவும் ஊர்தி விமானம். தரையில் செல்லும் ஊர்திகள் தாம் செல்ல வேண்டிய பாதைக்குள் மற்றவற்றின் போக்குவரத்திற்கு இடமளித்துச் செல்ல வேண்டி இருப்பதால் குறிப்பிட்ட அளவிற்குள் அடங்க வேண்டியிருக்கும். ஆகாயத்தில் செல்லும் ஊர்திக்கு அந்த அளவுக் குறிக்கீடு தேவை இல்லை. அதனால் மானம் - அளவால் வரையறுப்பு அற்றது விமானம். (விகதம் மானம் யஸ்மாத்) எத்தனை பேர்கள் ஏறுகிறார்களோ, அந்த அளவிற்கு விரிவடையக்கூடியது தேவர்கள் செல்லும் ஊர்தி விமானம். அதில் இருப்பவள். விமானத்தின் மூலம் செல்பவள்.

42-2. வி - மா - அந - ஸ்த்தா. சிறந்த ஒளியுள்ள சக்கிர ராஜ ரதம், கிரி சக்கிர ரதம், கேய சக்கிர ரதம் முதலியவற்றில் வீற்றிருருப்பவள். வி - மான - ஸ்த்தா - பெருமாதரவு பெறுமிடங்களில் தங்குபவள். அளவற்ற பரம்

பொருளிடம் சக்தியாக விளங்குபவள். சிறப்பு மிக்கப் பிரமாண நூல்களாகிய வேதம் முதலியவற்றில் தர்ம வடிவிலும் பிரும்ம வடிவிலும் விளக்கப் பெற்றிருப்பவள். (943)

### 43. வஜ்ரிணீ. இந்திரனின் சக்தி.

43-1. இந்திரனின் சக்தியான மாஹேந்திரீ. இவள் பிராம்மீ முதலிய மாதாக்களில் ஒருவள் (9.10, 211). இந்திரனின் மனைவியான சசீதேவியாருப்பவள். வஜ்ரம் எனும் ஆயுதத்தைத் தாங்கியவள். வஜ்ரமெனும் வைரத்தாலான அணிகளைப் பூண்டவள். வஜ்ரேசுவரீ தேவியாயிருப்பவள் (21.88.1) வஜ்ரம் - சூரியன் முதலானவர்களைப் பயமுறுத்தி உலகை ஆட்டுவிக்கும் பிரும்மத்திடமுள்ள பயம் தரும் சக்தி. அதன் வடிவினள். (944)

### 44. வாமக - ஈச்வரீ. வாம மார்க்கத்தினரின் தலைவி.

44-1. வாமகர் வாம மார்க்கத்தில் ஈடுபட்டவாகள், வாம கேசுவர தந்திரம் எழுதிய பரமசிவன். உலகைப் பரப்பும் பிரஜாபதி (மக்கள் தலைவர்)களான தக்ஷன் முதலானவர். அவர்களின் தலைவி. வாமகேசுவரம் எனும் தந்திர நூலில் முக்கிய தேவதையாக விளக்கப்படுபவள். (945)

### 45. பஞ்ச - யஜ்ஞ - ப்ரியா. ஐந்து வகை வேள்விகளில் பிரியமுள்ளவள்.

45-1. யஜ்ஞங்கள் - வேள்விகள். அகந்தை மமதை நீக்கவும் சித்த சுத்தி பெறவும் எல்லாவற்றையும் ஈசுவரார்ப்பணம் செய்யும் மனநிலை பெறவும் அன்றாடப் பயிற்சிகளாக ஐந்து வேள்விகள் செய்யவேண்டும். இந்த எனது பொருளை இன்னாருக்கு உரித்தான தாக்கி விட்டேன்; இது இனி எனதல்ல என்ற பாவனையே இதில் உள்ள பாவனைச் சிறப்பு 1. தேவ யஜ்ஞம் - தேவதைகளைக் குறித்துச் செய்வது. 2. பித்ரு யஜ்ஞம் - தன் முன்னோர்களைக் குறித்துச் செய்வது. 3. பிரும்ம யஜ்ஞம் - வேதம் முதலான அறிவு நூல்களைத் தந்த ருஷிகளைக் குறித்துச் செய்வது. 4. மனுஜ்ய யஷ்ஞம் - இறைவனால் நம்முடன் படைக்கப் பெற்று தர்ம சக்கிரத்தை நம்முடன்கூடச் சுற்றச் செய்யும் மனித இனத்தைக் குறித்துச் செய்வது. உணவிடுதல், கோவில், குளம், சத்திரம் கட்டுதல் முதலியவை. 5. பூத யஜ்ஞம் - நம் சுழ்நிலையில் இருக்கும் சராசரங்கள் அனைத்தையும் குறித்துச் செய்வது. மழை வெயில் காற்றெனு வாழ்வின் தேவைகளை நிரப்பும் தேவதா சக்திகளை தேவ யஜ்ஞத்தால் வணங்குகிறோம். வேதம்

முதலிய வித்யா ஸ்தானங்களைப் பரப்பி மனித இனத்திற்கு அறிவூட்டியதற்காக நன்றியுணர்வுடன் பிரும்ம யஜ்ஞம் செய்கிறோம். பண்பட்ட சமுதாயத்தின் சிறந்த அங்கமாக நம்மை உருவாக்குவதற்காக நற்சந்ததியைப் பெறும் நோக்கத்துடன் கடுமையான நியமங்களுக்கு உட்பட்டு வாழ்ந்த அவரவரது முன்னோர்களை பித்ரு யஜ்ஞத்தால் வணங்குகிறோம். மனிதன் தனித்து வாழ முடியாது. உற்றாரும் உறவினரும் நண்பர்களும் ஊராரும் மற்றவருமாகப் பலர் ஒவ்வொருவர் வாழ்விலும் பங்கு ஏற்பர். இவர்களுக்கு நன்றி கூறும் வகையில் மனுஷ்ய யஜ்ஞம் அமைகிறது. அதிதிக்கு உணவளிப்பதும் இதில் அடங்குகிறது. யாரோ முகம் தெரியாத ஒருவனுக்குப் பசியாற உணவளிக்கிறோம் என்ற அகந்தை இன்றி, நம்மிடமுள்ள இந்த அல்பமான உணவை ஏற்க ஈசனே கருணையால் அதிதி வடிவில் வந்து உள்ளார் என்ற பாவனையுடன் அப்பணமாகும்போது இது யஜ்ஞமாகிறது. நமக்கு முன்னும் பின்னும் நம்முடனும் இருந்து கொண்டு எதிர்பாரதபடி பல வகைகளில் உதவுகின்ற நம்மோடு உள்ள அனைத்து ஜீவர்களுக்கும் திருப்தி அளிப்பதே பூத யஜ்ஞம். நம் கண்களுக்குப் புலப்படாத தெய்வ சக்தியை அகந்தை மமதை இன்றி வணங்குவதே இந்த ஐவகை வேள்விகளின் நோக்கம். இவற்றில் விருப்பமுள்ளவள். (28.20.1- 29.61.1) அக்னி ஹோத்ரம், தர்சபூர்ணமாஸம், சாதுர்மாஸ்யம், பசுபந்தம் ஸோமம் என்ற வேதம் கூறும் வேள்விகள், பரார்த்த யஜனமெனும் பிறருக்காகத் தெய்வத்தை வழிபடுதற்கான துறைகளில் (திருக்கோவில்களில் நடைபெறுவது) அபிகமனம், உபாதானம், இஜ்யா, ஸ்வாத்யாயம், யோகம் என்ற பாஞ்சராத்திராகமகத்தில் கூறப்பட்டுள்ள வழிபாட்டு முறைகள், உடலை விட்டு வெளியேறிய ஜீவன், வானவெளி, மேகம், பூமி, ஆண் மகன், பெண்ணின் கருவறை என்ற ஐந்திடங்களில் ஹோமம் செய்யப்பட்டு மறுபிறவி எடுக்கிறான் என்று உபநிடதங்கள் ஜீவகதியைப் பற்றிய விளக்கம் தருகையில் கூறும் ஐந்து வேள்விகள். இவைகளில் விருப்பம் உள்ளவள். (946)

### 46. பஞ்ச - ப்ரேத - மஞ்ச - அதிசாயிநீ. ஐந்து பிரேதர்களாலான உயர்ந்த ஆஸனத்தில் வீற்றிருப்பவள்.

46-1. பிரும்மா, விஷ்ணு, ருத்திரன், ஈச்வரன் என்ற நால்வர் தத்தம் தொழிலை விட்டு தன் தனித்தன்மையும் இழந்து, தேவியின் அருகாமையைப் பெறுவதையே பாக்கிமாகக் கருதி தேவியிடம் ஓடுங்கியவர்களாகத் தேவி வீற்றிருக்கும் உயர் ஆசனத்தின் கால்களாக விளங்குகின்றனர். ஸதாசிவனும் அப்படியே மஞ்சத்தின் விரிப்புப் பலகையான இருக்கிறார். இவர்களையே ஆஸனமாகக்கொண்டு

ஒய்யாரமாகச் சாய்ந்து உட்காந்திருக்கிறாள் தேவி. (நா.58-249-250) உலகைப் படைப்பதற்கான ஸங்கல்பத்தால் விரிந்து பல தோற்றங்களைப் பெற்ற தனது சக்திகளைத் தன்னுள் அடக்கிக் கொண்டு பரம்பொருளாகத் தான் மாத்திரம் தனித்திருப்பவள். (947)

(நா. 948 - 954)

पञ्चमी पञ्चभूतेशी पञ्चसंख्योपचारिणी ।
शाश्वती शाश्वतैश्वर्या शर्मदा शम्भुमोहिनी ॥ 175 ॥

**பஞ்சமீ பஞ்சபூதேசீ பஞ்சஸங்க்யோபசாரிணீ.**
**சாச்வதீ சாச்வதைச்வர்யா சர்மதா சம்புமோஹினீ 175**

**47. பஞ்சமீ. வாராஹியாயிருப்பவள்.**

47-1. தேவியின் சேனைத் தலைவி வாராஹீ. (10.7.1.) அவளுக்குப் பஞ்சமீ என்று தனிப்பெயர். பிராம்மீ முதலிய எட்டு மாதாக்களில் வாராஹீ என்று ஐந்தாவதாக வருபவள். பூமியைத் தாங்கும் ஆதிவராஹரின் சக்தி. (9.10.21) ஐந்து ரத்னாம்பிகைகளில் இவள் ஐந்தாமவள். (9.10.29) ஐந்தொழில் புரிபவர்களில் ஐந்தாமவர் (பஞ்சமர்) ஸதாசிவர். அவரது பத்தினி பஞ்சமீ. ஐந்தாவதாகிய துரியாதீதம் என்ற நிலையாயிருப்பவள். ஐந்து மகாரங்களைத் தன் வழிபாட்டிற்குரிய பொருள்களாகக் கொண்டவள் பஞ்ச - மீ. (ம வை முதல் எழுத்தாகக் கொண்டவை மது, (தேன்) மாம்ஸம், மத்யம், மத்ஸ்யம், மைதுனம் என) நிர்வாணம், கைவல்யம் எனப்படும் ஐந்தாவது முக்தியாக இருப்பவள். (29.19.1) (948)

**48. பஞ்ச - பூத - ஈசீ. ஐந்து பூதங்களுக்கும் ஈச்வரி.**

48-1. நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் என்ற சூட்சும பூதங்களுக்கும் ஸ்தூல பூதங்களுக்கும் ஈசுவரி, ஐந்தாகத் தொகுக்கப்பட்டுள்ளவை, ஐந்தாக ஆனவை, ஐந்தாக இருப்பவை, அனைத்திற்கும் ஈசுவரி. (949)

**49. பஞ்ச - ஸங்க்ய - உபசாரிணீ. ஐந்து வகை உபசாரங்களுள்ளவள்.**

49-1. சந்தனம், பூ, தூபம், தீபம், நைவேத்யம் என்ற ஐந்து உபசாரங்களால் வழிபடப் பெறுபவள் தேவி. இவை லம் இத்யாதி பஞ்ச பூஜை எனப்படும். (4.11) (950)

**50. சாச்வதீ. நிலைத்திருப்பவள்.**

50-1. சச்வத் - அடிக்கடி: அடிக்கடி தோன்றியும் மறைந்தும் காணப்படுவதால் நிலைத்திருப்பவளாக அனுமானிக்கப்படுபவள். நித்யையான அவளை இடையறாது காண்பவர் இல்லாததாலும் அடிக்கடிப் பல தோற்றங்களில் காண்பதாலும் அவள் நடு நடுவே புலப்படாதிருந்தாலும் தொடர்ந்திருப்பவள். (951)

**51. சாச்வத - ஐச்வர்யா. நிலைத்த ஐசுவரியமுள்ளவள்.**

51-1. தேவி உலகையும் அதற்கப்பாற்பட்டவைகளையும் எப்போதும் ஆள்பவள். அந்த ஆளும் சக்தி அவளைப்போல் நடுநடுவே புலப்படாதிருந்தாலும் நித்யமானதே. (952)

**52. சர்ம - தா. சுகமளிப்பவள்.**

52-1. சர்ம - நிலைத்த சுகம். வேதனையைப் பின் விளைவாகக் கொள்ளாதது. அதனை அளிப்பவள் தேவி. (953)

**53. சம்பு - மோஹிநீ. சிவனை மயங்கச் செய்பவள்.**

53-1. சம் - மங்களம். அதன் உற்பத்தி இடம் சம்பு: - சிவன் அவரை மோஹினீ வேடத்தில் மயக்கியவள். (23.28.1) (954)

(நா. 954 - 963)

धरा धरसुता धन्या धर्मिणी धर्मवर्धिनी ।
लोकातीता गुणातीता सर्वातीता शमात्मिका ॥ 176 ॥

**தரா தரஸுதா தந்யா தர்மிணீ தர்மவர்த்திநீ.**
**லோகாதீதா குணாதீதா ஸர்வாதீதா சமாத்மிகா. 176**

**54. தரா. தாங்குபவள்.**

54-1. உலகம் அனைத்தையும் தாங்குவதால் தரா. பூமி வடிவினளானதால் தரா. லம் எனும் பூமி பீஜத்தின் வடிவினள். தாங்குவதற்கு இன்றியமையாத பொறுமை எனும் பூமியின் குணமாயிருப்பவள். (955)

**55. தர - ஸுதா. மலைமகள்.**

55-1. தர: - பூமியைத் தாங்கும் மலை - ஆணிவேராகப் பிடிப்புக்குத் தேவையான திடம் கொண்ட மலையின் பிடிப்பால் பூமி நிலைத்து நிற்கிறது.

மலையின் பெண்ணாகத் தோன்றித் தேவியின் தகப்பன் என்ற பெருமையை மலைக்குத் தந்தவள் தேவி.(நா. 246, 634) (956)

**56. தந்யா. செய்ய வேண்டியதனைத்தையும் செய்து நிறைவு பெற்றவள்.**

56-1. கடமைகளைச் செவ்வனே செய்து நிறைவேற்றி பின் ஏற்படும் நினைவு, 'நான் தன்யனானேன்' என்பது. தேவி அந்த நினைவு வடிவில் இருப்பவள். செவ்வனே கடமைகளை நிறைவேற்றியவள்.

56-2. பரம்பொருளை நாடுவதில் உதவும் விரதங்கள் கதைகள் தத்துவங்கள் பற்றிய நினைவு, பந்தமின்றி மோக்ஷமடைவதில் உள்ள நாட்டம், ஐம்புலன்கள் அடங்கியிருத்தல், உயிரினடத்தில் தயை முதலிய நல்லெண்ணங்கள் உயிர் பிரியும்போது ஏற்பட்டால் இத்தகைய கடைசி நினைவுகளை தன்யா ஸ்ம்ருதி :- அதிருஷ்ட வசத்தால் ஏற்பட்ட நினைவாகக் கூறுவர். இந்த நினைவு "கொடுத்து வைத்திருந்தால் கிடைக்கும்". வாழ்நாள் முழுவதும் இந்தச் சிந்தனை வலுத்திருந்தால்தான் உயிர் நீங்குமுன் அந்தச் சிந்தனை ஏற்படும். தேவ கதியை அளிக்கவல்ல அந்த 'தன்யா' எனும் நினைவாக இருப்பவள்.

56-3. செல்வம் சேர உதவுபவள். (தநாய ஹிதா). தந்யம் எனச் சோதிடத்தில் கூறப்படும் சிறந்த யோகமாய் இருப்பவள். (957)

**57. தர்மணீ. தர்மத்துடன் கூடியவள்.**

57-1. ஆனந்த அனுபவம், நித்யத்தன்மை முதலிய தனிச் சிறப்புள்ள நிலைகளோடு கூடியவள். (958)

**58. தர்ம - வர்த்திநீ. தருமத்தை வளர்ப்பவள்.**

58-1. புலனடக்கம், தூய்மை, இறைவனிடத்தில் பக்தி, மங்களமான சொல்லிலும் செயலிலும் எண்ணத்திலும் நாட்டம் முதலிய சிறந்த தருமங்களை மனிதனிடம் வளர்த்து அவனை மேம்படச் செய்பவள். திருவையாற்றில் கோயில் கொண்டுள்ள தேவி. (959)

**59. லோக- அதீதா. உலகைக் கடந்தவள்.**

59-1. தேவி தானே படைத்த உலகங்களுக்கு அப்பாற்பட்டவள். (18.20.1) லோகர்கள் - புலன்கள் மூலம் சிற்றறிவு பெறும் ஜீவர்கள். அவர்களைக் கடந்தவள் - பேரறிவு வடிவினள் . (18.60.1) (960)

**60. குண-அதீதா. முக்குணங்களுக்கும் அப்பாற்பட்டவள்.**

60-1. முக்குணங்கள் அஹங்காரத்தின் தொடர்புகொண்டு பஞ்ச பூதங்கள், பொறிகள், மனம், பிராணன் முதலியவற்றைப் படைத்து இவ்வுலகிற்கும் லோகர்களாகிய ஜீவர்களுக்கும் காரணமாயின. (17.8.1) தேவி முக்குணங்கள் தோன்றுவதற்கு முன்னுள்ள மூலப்பிரகிருதிக்கும் காரணமானவள். அதனால் குண-அதீதா. குணங்கள், ஒன்றோடொன்று வேறுபடும் விதத்தைப் பிரித்துக் காட்டுபவை. தேவி பிரிவுக்குட்படாதவள். பிரிவேற்படும் நிலைக்கு முற்பட்டவள். (961)

**61. ஸர்வ - அதீதா. எல்லாவற்றையும் கடந்தவள்.**

61-1. பெயரும் வடிவமும் (நாம ரூபங்கள்) பெற்றமையால் தனித்தவையாகக் காணப்படுபவையும் கூறப்படுபவையுமான எல்லாவற்றிற்கும் அப்பாற்பட்டவள். பெயராலும் வடிவாலும் ஏற்படும் வேற்றுமைக்கு அவளிடம் இடமில்லை. (962)

**62. சம-ஆத்மிகா. எல்லாமடங்கிய நிலையாயிருப்பவள்.**

62-1. சமம் - பிரபஞ்ச உபசமம் என உபநிடதங்கள் கூறும் பிரும்மநிலை. பிரபஞ்சம் - பெயராலும் வடிவாலும் விரிந்துகொண்டே போகும் உலகம். அது அடங்கிப் பெயருருத் தெரியாத வண்ணம் மறையுமிடம் பிரும்மம். "ப்ரபஞ்ச உபசமம் சிவம் அத்வைதம் சதுர்த்தம் மன்யந்தே". (மாண்டூக்யம்) அந்தச் சிவமாக மங்களமாக ('சம் ஆத்மிகா') இருப்பவள் தேவி. (963)

(நா. 964 - 970)

बन्धूककुसुमप्रख्या बाला लीलाविनोदिनी ।
सुमङ्गली सुखकरी सुवेषाढ्या सुवासिनी ॥ 177 ॥

**பந்த்தூககுஸுமப்ப்ரக்க்யா பாலா லீலாவிநோதிநீ.**
**ஸுமங்கலீ ஸுககரீ ஸுவேஷாட்யா ஸுவாஸிநீ.177**

**63. பந்த்தூக - குஸும - ப்ரக்க்யா. மஞ்சள் வேங்கைப்பூ போன்ற மேனி ஒளி உள்ளவள்.**

63-1. வேங்கை மரத்தில் மஞ்சள் நிறமுள்ள வகை பீதஸாரம் எனப்படுவது. வங்க தேசத்தில் அதிகமாகக் காணப்படுவது. அதன் பூ நல்ல மஞ்சள் கலந்த சிவப்பு நிறமுள்ளது. அதனைப் போன்ற மேனி நிறமுள்ளவள். (964)

**64. பாலா. பாலா திரிபுரசுந்தரி.**

64-1. தேவியின் குமாரியாக வந்தவள். தேவியே சிறு பெண்(பாலா) வடிவில் எடுத்தத்தோற்றம். பண்டனின் புத்திரர்களை மாய்த்தவள். எப்போதும் ஒன்பது வயதினளாகத் தோன்றுபவள். மலர்ந்த கழுநீர்ப் பூவின் மேல் அமர்ந்திருப்பவள். அருணனது போன்ற செவ்வொளி படரும் மேனியுடையவள். அபய- வரத முத்திரை, ஜபமாலை, புத்தகம் தாங்கிய நான்கு கைகளுள்ளவள். (நா. 74) (965)

**65. லீலா - விநோதிநீ. பிரபஞ்ச லீலையில் மன உவகை கொள்பவள்.**

65-1. உலகின் தோற்றத்திலிருந்து மறைவு வரை எங்கும் எப்போதும் நடக்கும் இயக்கங்களைத் தனது லீலையாக்கி அதனால் மனக்களிப்பை அடைபவள். (966)

**66. ஸுமங்கலீ. சுமங்கலி.**

66-1. கணவனோடு முறைப்படி சுகமாக வாழும் மனைவியர் ஸுமங்கலிகள். மங்களப்பொருள்கள் இவர்களை அடைந்து அழகைப் பெறும். ஸுமங்கலிகளின் வடிவில் தேவி விளங்குகிறாள். ஸு - மங்களமான, மங்களத்திற்கு மங்களத்தன்மை தரும் பரம்பொருளானவள். சிறந்தவைகளை நடைமுறையில் அமைத்து, சிறப்பற்றவைகளைத் தவிர்த்து வாழ்வது மங்களமான வாழ்க்கை. அவ்வாழ்க்கை வடிவில் உள்ளவள். (967)

**67. ஸுக-கரீ. சுகத்தை வழங்குபவள்.**

67-1. சுகத்தைத் தரும் அவள் பிறருக்குத் தருவதற்காகவே சுகத்தை கையில் கொண்ட (ஸுகம் கரே யஸ்ய) சங்கரனது பத்தினி. சுகமால்லாததைச் சுகமாக்கித் தருபவளும் கூட. (அஸுகம் ஸுகம் தரோதி). (13.14.1, 30. 67.1) (968)

**68. ஸுவேஷ - ஆட்யா. அழகான அணிகள் நிரம்பியவள்.**

68-1. மங்கள வடிவினளான தேவி மங்களத்தன்மையை பிரகாசிக்கச் செய்யும் நல்லாடை, ஆபரணங்கள் முதலியவற்றை மன நிறைவு ஏற்படுமளவிற்கு அணிந்துள்ளவள். (969)

**69. ஸ° - வாஸிநீ. பதியுடன் கூடி வாழ்பவள்.**

69-1. பெண்ணிற்குப் பதியுடன் கூடி வாழ்வதே நல்வாழ்வு. ஸுவாஸம். தேவி சிவனை விட்டு என்றும் அகலாதவள். அதனால் ஸுவாஸம் பெற்றவள் - ஸுவாஸிநீ. கணவனுடன் கூடி நல்வாழ்வு வாழும் பெண்கள்தான் நல்லாடை உடுத்த முடியும். (ஸுஷ்டு வாஸாம்ஸி யஸ்யா :) அத்தகைய சிறந்த ஆடை ஆபரணங்கள் அணிந்த ஸுமங்கலியாயிருப்பவள். (970)

(நா. 971 - 976)

सुवासिन्यर्चनप्रीताऽऽशोभना शुद्धमानसा ।
बिन्दुतर्पणसन्तुष्टा पूर्वजा त्रिपुरांबिका ॥ 178 ॥

**ஸுவாஸிந்யர்ச்சநப்ரீதா(ஆ)சோபநா சுத்தமாநஸா.**
**பிந்துதர்ப்பணஸந்துஷ்டா பூர்வஜா த்ரிபுராம்பிகா.178**

**70. ஸுவாஸிநீ - அர்ச்சன - ப்ரீதா. ஸுவாஸினிகளின் அர்ச்சனையால் மகிழ்பவள்.**

70-1. ஸுவாஸினிகளான பெண்கள் செய்யும் அர்ச்சனையில் மிகவும் மகிழ்ச்சியடைபவள். ஸுவாஸினிகளைத் தேவியாக வழிபட்டு அவர்களுக்குச் செய்த அர்ச்சனைகளாலும் திருப்தி அடைபவள். (971)

**71. ஆ - சோபநா. எங்கும் அழகானவள்.**

71-1. அவளது அழகு எங்கும் பரவியுள்ளது. அவளைச் சுற்றியும் அழகு நிரம்பியுள்ளது. சோபநா (நா.462), சோபநா ஸுலபா கதி : (நா.683) என இரு நாமங்கள் வந்துள்ளன. இங்கு ஆசோபநா. (972)

**72. சுத்த - மாநஸா. தூய மனமுள்ளவள்.**

72-1. மனத்தின் தூய்மை மன வாஸனைகளால் கெடுகிறது. பல பிறவிகளில் மனம் நாடியவற்றில் ஏற்பட்ட இன்ப துன்பத் தொடர்பு மனத்தைக கெடுக்கின்ற வாஸனையாகி இப்பிறவியில் தொடர்கிறது. தேவியின் மனத்தில் இது இடம் பெறுவதில்லை. இன்ப துன்ப உணர்விற்கு அப்பாற்பட்டவளானதால் தூயமனம் உள்ளவள். (973)

**73. பிந்து - தர்ப்பணா - ஸந்துஷ்டா. பிந்து தர்ப்பணத்தால் மகிழ்பவள்.**

73-1. ஸ்ரீசக்கிரம் மேரு இவைகளில் நடு முக்கோணத்தினுள் அமைந்த ஸர்வாநந்தமய சக்கிரமாகிய பிந்துவில் பால், நெய், தேன், மது இவற்றால் முறைப்படி செய்யப்படும் தர்ப்பணம் பிந்து தர்ப்பணம். தர்ப்பணத்திற்கான பால் முதலியவை பிந்துவாக - சொட்டாக பிந்துவில் விழுவதாலும் பிந்து தர்ப்பணம். அது பிந்து அளவில் இருந்தாலும் தர்ப்பணம் - மன நிறைவைத் தருவது. அந்த பிந்து தர்ப்பணத்தால் ஸந்தோஷமடைபவள். (974)

**74. பூர்வ - ஜா. எல்லாவற்றிற்கும் முன்னதாக உண்டானவள்.**

74-1. அவ்யக்தம் எனும் பிரகிருதி வடிவில் எல்லோருக்கும் முன் உண்டானவள். முன் இல்லாமலிருந்து உண்டானவள் அல்ல; தனித்திருந்த பிரும்மத்திடம் முன் புலப்படாமலிருந்து இப்போது சக்தியாகவும் ஸங்கல்பமாகவும் பிரிந்து தோன்றியவள்.(17.8.1) (975)

**75. த்ரிபுர - அம்பிகா. திரிபுராம்பிகை.**

75-1. ஸ்ரீசக்கிரத்தின் எட்டாவது ஆவரணத்திலுள்ள யோகினிகளின் தலைவி திரிபுராம்பிகை எனப்படுபவள். அவளது வடிவில் தேவி விளங்குகிறாள். (9.10.28) விழிப்பு, கனவு, தூக்கம் என்ற மூன்று நிலைகள்; பாலியம், யௌவனம், மூப்பு என்ற மூன்று நிலைகள்; ஸ்தூலம், ஸூக்ஷ்மம், காரணம் என்ற தேகங்கள். இவை முப்புரங்கள் எனப்படும். இவைகளை உண்டாக்கும் தாய். வாமா, ஜ்யேஷ்ட்டா, ரௌத்திரி என்ற மூன்று சக்திகளுக்கும் தாயான அம்பிகாவாக இருப்பவள். (976)

(நா. 977 - 981)

दशमुद्रासमाराध्या त्रिपुराश्रीवशङ्करी ।
ज्ञानमुद्रा ज्ञानगम्या ज्ञानज्ञेयस्वरूपिणी ॥ 179 ॥

**தசமுத்ராஸமாராத்த்யா த்ரிபுராஸ்ரீவசங்கரீ.**
**ஜ்ஞானமுத்ரா ஜ்ஞானகம்யா ஜ்ஞானஜ்ஞேயஸ்வரூபிணீ.**

**179**

**76. தச - முத்ரா - ஸமாராத்த்யா. பத்து முத்திரைகளால் வழிபடத்தக்கவள்.**

76-1. தேவியின் வழிபாட்டில் பல சந்தர்ப்பங்களில் ஐம்பதுக்கும் மேற்பட்ட முத்திரைகள் செய்யப்படுகின்றன. நவாவரண பூஜை செய்யும்போது காட்டப்பெறும் முத்திரைகள் பத்து. அவை ஸர்வஸம்க்ஷோபிணீ, ஸர்வவித்ராவிணீ, ஸர்வாகர்ஷிணீ, ஸர்வ வசங்கரீ, ஸர்வோந்மாதிநீ, ஸர்வமஹாங்குசா, ஸர்வகேசரீ, ஸர்வ பீஜம், ஸர்வயோநி, ஸர்வத்ரிகண்டா, என, இவை சக்தி வடிவில் ஸ்ரீசக்ரத்தின் பூபரத்தின் உட்கோட்டில் இருக்கின்றன. (9-10-21) இவர்களில் முதல் ஒன்பது முத்திரா சக்திகளும் முறையே ஒவ்வொரு ஆவரணத்தின் மேற்கு துவாரத்திலும் வரிசையாக துவாரமுத்ரா சக்திகளாக (வழியைப் பூட்டித் திறப்பவர்களாக) முதல் ஆவரணத் துவாரத்தில் ஸர்வஸம்க்ஷோபிணீ இரண்டாவது ஆவரணத் துவாரத்தில் ஸர்வ வித்ராவிணீ என்றவாறு அமர்ந்திருக்கிறார்கள். ஸர்வத்ரிகண்டா என்பவள் தேவியின் ஆஸனத்தின் எதிரே மற்ற 9 முத்திரா சக்திகளின் ஸமஷ்டி வடிவில் இருக்கிறாள். ஆவரண பூஜை செய்யும்போதும் அதனதன் துவாரத்தில் அந்தந்த முத்திரா தேவிகளை வணங்கி அவரவர்கள் முத்திரைகளைக் காட்டிக் கடைசியில் யோநி முத்திரையால் வணங்குவர். (33-27) முத்ரா சக்திகள் தேவியின் தத்துவத்தை மூடி மறைத்து வைத்துத் தேவையுள்ளபோது திறந்து தருபவர்கள். (வாயில் காப்போன் இருப்பது வாயில் வழியே பிறர் செல்வதைத் தடை செய்வதற்கும், அவ்வழியில் போவோர் வருவோரைக் கண்காணிக்கவும் வழிகாட்டவும்.)

**76-2. பத்து முத்திரைகளின் அமைப்பு பின்வருமாறு.**

1. ஸர்வஸம்க்ஷோபிணீ முத்திரை- கைகளை உயர்த்தி இரு கைகளையும் ஒன்றையொன்று பார்ப்பதாக வைத்துக்கொண்டு இரு கைகளின் ஆட்காட்டி விரல்களை நிமிர்த்தி மற்ற விரல்கள் குவிந்து ஒன்றையொன்று தொட்டுக் கொண்டிருக்கும் நிலை.





2. ஸர்வவித்ராவிணீ முத்திரை - ஸர்வஸம்க்ஷோபிணியில் உள்ள மாதிரி ஆட்காட்டி விரல்களுடன் நடுவிரல்களையும் நிமிர்த்தி மற்ற விரல்கள் குவிந்து ஒன்றையொன்று தொட்டுக் கொண்டிருக்கும் நிலை.



3. ஸர்வாகர்ஷிணீ முத்திரை - ஸர்வ வித்ராவிணியில் உள்ள மாதிரி விரல்களை அமைத்து ஆட்காட்டி விரல்களையும், நடு விரல்களையும் சிறிது நுனியில் வளைத்துக் காட்டுவது.



4. ஸர்வவசங்கரீ முத்திரை - இரு கைகளையும் நேராக நிமிர்த்திக்கொண்டு கட்டை விரல்களைத் தவிர மற்ற விரல்களைப் பின்னலாகக் கோத்துக் கைகளை மூடிக்கொண்டு கட்டைவிரல் நுனிகள் மற்ற விரல்களை அமுக்கும்படி கட்டை விரலால் அமுக்கி முஷ்டியாக்கிக் கொள்வது.



5. ஸர்வோந்மாதினீ முத்திரை - இரு உள்ளங்கைகளையும் வானத்தை நோக்கும்படி விரித்துப் பக்கவாட்டில் இணைத்து இடது சுண்டி விரலின் நுனி வலது ஆட்காட்டி விரலின் அடியையும் வலது சுண்டு விரல் நுனி இடது ஆட்காட்டி விரலின் அடியையும் தொடும்படி வைத்து, வலது நடுவிரலால் வலது நடுவிரலால் இடது சுண்டு விரலையும் இடது நடுவிரலால் வலது சுண்டு விரலையும் அழுத்தி, வளைந்த அந்த நடுவிரல்களைக் கட்டை விரல்களால் அழுத்திப்பிடித்து மோதிர விரல்களும், ஆட்காட்டி விரல்களும் பக்கவாட்டில் ஒட்டி நிமிர்த்திருக்கும் நிலை.



6. ஸர்வ மஹாங்குசா முத்திரை- ஸர்வோந்மாதினி மாதிரி விரல்களை அமைத்து இரு ஆட்காட்டி விரல்களையும் உட்புறம் சிறிது வளைத்த நிலை.



7. ஸர்வகேசரீ முத்திரை - வலது முழங்கை உட்புறத்தில் இடது முழங்கையை வைத்து வானத்தை நோக்கி உயர்த்தி மணிக்கட்டு வரை வலது கையால் சுற்றி யோனி முத்திரை அமைத்துத் தேவியை நோக்கிக் காண்பித்தல். (யோனி முத்திரை 9வது)



8. ஸர்வ பீஜ முத்திரை - இரு உள்ளங் கைகளையும் ஆகாயத்தை நோக்கி நிமிர்த்தி ஒன்றையொன்று பக்கவாட்டில் சேரும்படி (இரண்டு சுண்டு விரல்களும் ஒட்டும்படி) விரித்து வலது சுண்டி விரலை இடது சுண்டு விரலின் அடியில்படும்படி குறுக்காக வைத்து இடது நடுவிரலால் அழுத்தி, இடது சுண்டி விரலை வலது சுண்டு விரலின் அடியில்படும்படி குறுக்காக வைத்து வலது நடு விரலால் அழுத்திக் கைகளைக் குவித்து இரு மோதிர விரல்களும் ஒன்றையொன்று தொடும்படி நிமிர்த்தி அமைத்து, ஆட்காட்டி விரல்களும் கட்டை விரல்களும் பாதி சந்திர வடிவில் வளைந்து ஒன்றையொன்று தொடும்படி வைத்து உள்ளங் கைகளும் மூடிய விரல்களும் ஒன்றுக்கொன்று ஒட்டியிருக்கவைப்பது. (நடு விரல்களுக்குப் பதிலாக மோதிர விரல்களால் சுண்டு விரல்களை அழுத்திப் பிடித்து நடு விரல்களை நிமிர்த்தி ஒன்றையொன்று தொடும்படி செய்யும் ஸம்பிரதாயமுண்டு.)

9. ஸர்வ யோநி முத்திரை - யோநி முத்திரை. இரண்டு கைகளையும் நிமிர்த்தி விரித்துப் பக்கவாட்டில் சேரும்படி வைத்து இரண்டு சுண்டு விரல்களின் மேல் இரு கட்டை விரல்களையும் உட்புறமாக குறுக்கில் வளைத்துப் பதிக்கவும். இரு மோதிர விரல்களையும் நடு விரல்களுக்குப் பின்னால் குறுக்கே கொணர்ந்து இடது மோதிர விரலை வலது ஆட்காட்டி விரலாலும் அழுத்திப் பக்கவாட்டில் சேரும்படி சாய்த்து நுனியில் ஒட்டச் செய்யவும். முன் சேர்த்த சுண்டு விரல் கட்டை விரல் இணைப்பை நடு விரல் கோர்வையின் மேல் அழுத்திப் பிடிக்கவும்.



10. ஸர்வத் திரிகண்டா முத்திரை - திரிகண்டா முத்திரை. இரண்டு கைகளையும் விரித்துப் பக்கவாட்டில் சேர்க்கவும். இரண்டு சுண்டு விரல்களையும் மற்ற விரல்களுக்கு பின்புறமாக இணைக்கவும். இரண்டு கட்டை விரல்களையும் எல்லா விரல்களுக்கு முன்புறமாக இணைக்கவும். இரண்டு நடு விரல் நுனிகளையும் பக்கவாட்டில் சேர்க்கவும். இரண்டு மோதிர விரல்களையும் நடு விரல்களுக்குப் பின்னால் குறுக்காகக் கொணர்ந்து ஆட்காட்டி விரல்களால் (யோனி முத்திரையில் போல்) அழுத்திப் பிடிக்கவும்.



இதில் சுண்டு விரல்களும் கட்டை விரல்களும் முன்னும் பின்னும் இரு கண்டங்களாகப் பிரிந்திருக்க, மோதிர - நடு - ஆட்காட்டி விரல்களின் பின்னல் நடுக்கண்டமாகத் தெரியும். சுண்டு விரல்கள் பூமியையும் கட்டை விரல்கள் ஆகாயத்தையும் நடு விரல் பின்னல் தேவியையும் நோக்கி அமையும்.

இந்த முத்திரைகளை முதலில் தேவீ மந்திர கிரமத்தை உபதேசித்த குருவிடமிருந்து நன்கு விளக்கம் பெற்றுச் செய்வதே நன்கு அமையும். ஸம்பிரதாயத்தில் சிறிது வேற்றுமையும் காணலாம். குரு உபதேசித்த வழியிலேயே செய்வது உசிதம்.

76-3. முத்திரா - மூடி மறைப்பது - அரக்குப் பதித்து அடையாளமிடுவது, (சீல்) சந்தோஷத்தைக் கொடுப்பது. (முதம்ராதி). இரண்டு கைகளையும் அதன் பத்து விரல்களையும் கோர்த்துத் தனிப்பட்ட முறையில் அதில் ஒரு வடிவத்தைக காட்டி அதன் பொருளை உணர்ந்து அந்த பாவனையுடன் வழிபடுவது முத்திரையின் பொருள். யோநி முத்திரை காட்டும்போது ஒன்றின் உள்ளே மற்றொன்றாகப் பல யோநி வடிவங்களை - முக்கோணங்களை அமைக்கிறோம். ஆணவத்தைக் காட்டும் ஆட்காட்டி விரலும் உயர்வைக் காட்டும் நடுவிரலும் அடக்கப்படுகின்றன. உலகிற்குக் காரணமான யோநியான தேவி, இதன் காரணம் அது, அதன் காரணம் மற்றொன்று எனக் காரண வடிவில் குவிந்து மூல காரணமாகி நிற்கிறாள். அவள் எதிரில் ஜீவனின் தனித்தன்மை உணர்வோ ஆணவமோ பொருளற்றது என்ற பாவனைகள் அலை அலையாக எழுவதால், இதுகாறும் புரியாதிருந்த ரகசியமான தத்துவங்கள் விளங்கி ஆனந்தம் ஏற்படுகிறது. இந்தப் பாவனைகள் வெளிப்படையானால் வேஷமாகிவிடும். அதனால் ரகசியமாக முத்திரைகளை இடுவதும் பாவனை செய்வதும் அவசியம். மனம் வாக்கு காயம் என்ற மூன்று கரணங்களும் ஒருங்கே நிலைத்துப் பாவனை வடிவில் வழிபாடு அமைய இம்முத்திரைகள் உதவுகின்றன.

76-4. உடலின் பகுதிகளில் கைகளுக்கு ஒரு தனிச் சிறப்புண்டு. "அயம் மே ஹஸ்தோ பகவன் அயம் மே பகவத்தர :" (ஸ்ரீ ருத்திரம்) பரமசிவனுக்கு ஸ்ரீ ருத்ர அனுவாகத்தால் அபிஷேகம் செய்விக்கும்போது அந்தக் கை அடைந்துள்ள பெருமை இணையற்றது. 'இந்த எனது கை பகவானே' என்கிறது வேதம். பகவானை பூஜை செய்யும் கைகளும் பகவானே, அதில்கூடத் திருப்தி இல்லை. "இந்த எனது கை பகவானைவிட மேம்பட்டது" என்கிறது வேதம். சிவனும் பகவான், கையும் பகவான். இருவரில் எவர் உயர்ந்தவர் எனில் என் கையே உயர்ந்தது. பகவத்தர :.

இறைவனை இறைவன் வழிபட முடியாது. இறைவனது வடிவைத் தன் பணிவிடையால் குளிர்விப்பதால் கையானது இறைவனைத் தனக்கு அடங்கியவராகச் செய்கிறது. அப்போது இறைவனைவிட இதுவே மேம்பட்டதென்கிறது வேதம். அந்தக் கைகள் பல ரகசியங்களை அவிழ்த்து உணர்த்தி தேவியைப் பிரகாச வடிவினளாக நம் கண்முன் முத்திரைகள் மூலம் நிறுத்துகின்றன. அத்தகைய முத்திரைகளால் வழிபடத் தக்கவள் தேவி. (971)

### 77. த்ரிபுராஶ்ரீ - வசங்கரீ. த்ரிபுராஶ்ரீயைத் தன் வரத்தில் வைத்திருப்பவள்.

77-1. ஶ்ரீ சக்கிரத்தின் ஐந்தாவது ஆவரணத்திலுள்ள யோகினிகளின் தலைவி த்ரிபுராஶ்ரீ (9-10-25). அந்த யோகினி, தேவியின் வசத்திலிருந்து தேவியின் ஆணைகளை நிறைவேற்றுகிறாள். (த்ரிபுராஶ்ரீ : வசங்கரீ யஸ்யா:) திரிபுரம் எனும் முப்புரங்களால் சிற்றறிவால் பெறக்கூடிய இன்பமனைத்தையும் ஸாதகனின் வசப்படுத்துபவள் தேவி. (த்ரிபுராச்ரியம் வசே கரோதி). (978)

### 78. ஜ்ஞான - முத்ரா. சின் முத்திரை வடிவினள்.

78-1. வலது கைப் பெருவிரலுடன் வலது கைச் சுட்டுவிரலை இணைப்பது ஞானமுத்திரை, சின் முத்திரை. ஶ்ரீதக்ஷிணாமூர்த்தியின் வலது கையில் காணப்படும் முத்திரை. தனி மனிதனின் அஹந்தையானது பராஹந்தையுடன் இணைந்து அதனுள் அடங்கிவிட்டதைக் காட்டும் அடையாளம். ஈசுவர தத்துவத்துடன் ஜீவ தத்துவம் இணைவதையும், நடுவிலிருந்த பேதங்கள் அனைத்தும் அகன்றுவிட்டதையும் இது குறிக்கும். அந்த முத்திரையைத் தன் வடிவமாகக் கொண்டவள். அறிவால் ஆனந்தம் தருபவள். (ஜ்ஞானேன முதம் ராதி) ஞானத்தில் ஆனந்தத்தை மறைத்துள்ள தக்ஷிணாமூர்த்தி வடிவம். (ஜ்ஞானே சிதம்சே முதம் ஆனந்தாம்சம் த்ராவயதி ஆவ்ருணோதி). ஆனந்தத்தில் ஞானத்தை மறைத்துவிட்ட வடிவம் நடராஜப் பெருமாள். (979)

### 79. ஜ்ஞான - கம்யா. ஞானத்தால் அடையத்தக்கவள்.

79-1. ஞானத்தால் அறியக்கூடிய பொருள்களனைத்தும் தேவியே. தேவியின் தத்துவம் மற்ற உபாயங்களால் அறிய முடியாதது. ஞானத்தால் மட்டுமே அடைய முடியும். பேதமற்றிருக்கக் கூடிய 'நான்' ஆக உள்ள, உள்ளபொருளை வேறொன்று அறிவுறுத்த முடியாது. நான் 'நான்' தான் என்றறிவதன் மூலமாக 'நான்'ஐ அடைய முடியும். தேசத்தாலோ,

காலத்தாலோ, வஸ்துவாலோ வேற்றுமைக்கு இடமிருந்தால் வேறொன்றால் அதனை அடைய முடியும். 'நான்'ஆக இருக்கும் பொருளை அடைய ஞானம் மட்டுமே பயன் தரும். (980)

**80. ஜ்ஞான - ஜ்ஞேய - ஸ்வரூபிணீ. அறிவும், அறியப்படுவதுமாயிருப்பவள்.**

80-1. அறிபவன் 'நான்' அறியப்படும் பொருள் 'நான்'அதன் அறிவும் 'நான்'ஏ. அறிபவன், அறியப்படும் பொருள், அறிவு இவற்றின் ஐக்கியத்தால் ஏற்படும் நிராகாரமான சித்ஸ்வரூபம் இதே. (981)

(நா. 982 - 989)

योनिमुद्रा त्रिखण्डेशी त्रिगुणांबा त्रिकोणगा ।
अनघाऽद्भुतचारित्रा वाञ्छितार्थप्रदायिनी ॥ 180 ॥

**யோநிமுத்ரா த்ரிகண்டேசீ த்ரிகுணாம்பா த்ரிகோணகா.**
**அநகா(அ)த்புதசாரித்ரா வாஞ்ச்சிதார்த்தப்ரதாயிநீ.180**

**81. யோநி - முத்ரா. யோநி முத்திரை வடிவினள்.**

81-1. பத்து முத்திரைகளில் ஒன்பதாவதான ஸர்வயோநி முத்திரையாகத் தத்துவத்தை மறைத்தும் வெளிக்காட்டியும் உதவி ஆனந்தத்தைத் தருபவள். பிந்து ஸ்தானத்தில் தேவியை வழிபட அதனை மூடும் முத்திரையாக உதவுபவள். ஆவரண தேவதைகளை அந்தந்த ஆவரணத்தின் முத்திரையால் ஆவரண பூஜையின்போது வழிபட்டு, பிந்து மண்டலத்தில் ஆவரண தேவதைகளின் ஸமஷ்டி தேவதையான தேவியை யோநி முத்திரையால் வணங்குவது வழக்கம். (30.76.2.9) மந்திரஜபம் எளிதில் ஸித்திக்க, யோக முறையில் ஆஸனத்திற்கும் குறிக்குமிடையே அழுத்தம் ஏற்படுத்திப் பிராணனைக் கட்டுப்படுத்தும் முறையே யோநி முத்திரை. அதன் வடிவில் தேவி இருப்பாள். (982)

**82. த்ரிகண்டா - ஈசீ. திரிகண்டா முத்திரையின் தலைவி.**

82-1. ஸர்வத்திரிகண்டா முத்திரை முத்திரைகளில் பத்தாவது. (30.76.2.10) ஒன்பதாவது ஆவரண பூஜைக்குப்பின் யோநி முத்திரையால் பிந்துவில் உள்ள ஸ்ரீ லலிதா மஹாசக்கிரேசுவரியை வணங்கியபின்

ஷோடசீ மந்திரத்தால் வழிபடுபவராயின் ஸர்வத்திரிகண்டா முத்திரையையும் காட்டி வணங்குவர். அந்த ஸர்வத்திரிகண்டா முத்திரையால் வணங்கப் பெறுபவள்.

82-2. சந்திரகண்டம், ஸுர்ய கண்டம், அக்னி கண்டம் என ஆக்ஞை முதலிய ஆறு சக்கிரங்களை மூன்று கண்டங்களாகப் பிரிப்பர். அந்தக் கண்டங்களுக்குத் தலைவி (த்ரிகண்டாசீ) தேவி. (12-11-2) (983)

**83. த்ரிகுணா. முக்குணங்கள் உள்ளவள்.**

83-1. ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற முக்குணங்களுக்கும் தோற்றுவாயான மூலப்பிரகிருதியும், திரிகுணங்களை வெளிப்படுத்தும் அஹங்காரத் தத்துவமுமாக விளங்குபவள். (17-8) (984)

**84. அம்பா. முக்குணங்களுக்கும் தாய்.**

84-1. ஸத்வம் முதலிய முக்குணங்களின் தாய், மந்திரங்களின் ஜீவசக்தியாயிருப்பவள். எல்லா உலகிற்கும் பொதுவானவளாய் ஆபத்து வேளையில் காப்பாற்றுவதற்காக, வேறு எதிர்பார்வையின்றியும், ஆபத்திற்குட்பட்டவனின் கோரிக்கையை எதிர்பாராமலும் தானே வலியவந்து அக்கரையுடன் உதவும் தாய். கஷ்டம் நேரும்போதும் களைத்திருக்கும்போதும் உயிரினம் அனைத்தும் அறியாமல், தானே வாய் வசமின்றிக் கூறும் சொல் அம்பா- அம்மா. அந்தத் தாய் வடிவினள். தாயின் மற்ற நிலைகளுக்கேற்றத் தனிச் சிறப்புப் பெயர்களுடன் இதனையும் சேர்த்துக்கொள்ளலாம். (29-3-1) (985)

**85. த்ரிகோணகா. முக்கோணத்தில் இருப்பவள்.**

85-1. ஸ்ரீ சக்கிரத்தில் நான்காவது ஆவரணம் 14 திரிகோணங்கள் கொண்டது. 5வதும் 6வதும் 10-10 திரிகோணங்கள் கொண்டவை. ஏழாவது 8 திரிகோணங்கள் கொண்டது. எட்டாவது ஒரு திரிகோணம் கொண்டது. 43 திரிகோணங்களிலும் முக்கியமாக எட்டாவதிலுள்ள திரிகோணத்திலும் 43 கோணங்களுக்கும் மூலமான சக்திகோணங்கள் ஐந்திலும், சிவத்திரி கோணங்கள் நான்கிலும் உள்ளவள். நம் சிற்றறிவும் முக்கோணம் உள்ளது. அறிவின் நடுவே இருப்பவள். (9-10-24-28) (986)

**86. அநகா. பாபமற்றவள்.**

86-1. அகம் - பாபம், பாபத்தால் விளைந்த துக்கம், குறை இவை

அனைத்தும் தேவியிடம் இல்லை. வினைத்தொடர்பற்ற ஆத்மஸ்வரூபத்தில் வினையால் விளையும் பாபம் முதலியவை யாதொரு பாதிப்பையும் விளைவிக்க முடியாது. (987)

**87. அத்புத - சாரித்ரா. அற்புதமான செயல்முறையுள்ளவள்.**

87-1. 'அநகா' ஆக இருப்பதை வேறுவகையில் விளக்குகிறார்கள். எல்லாச் செயல்களுக்கும் பின் விளைவு உண்டு. நல்லதானால் நல்ல பின் விளைவு. கெட்டதானால் கெட்ட பின் விளைவு. ஏதேனும் ஒரு பின் விளைவின்றி ஒரு செயலை நம்மால் செய்ய முடியாது. தேவியின் செயல்முறையில் உள்ள விசேஷம் இந்தப் பின் விளைவில்லாதிருப்பது. இது விந்தையல்லவா? நான் எனது என்ற பற்று இல்லாதவனை வினை பின்தொடராது எனலாம். எல்லா 'நான்' களுக்கும் நான்தான் 'நான்' எனக் கூறும் தேவி பராஹந்தா வடிவினள். அத்தனை அஹந்தை உள்ளவளையும் வினை பற்றாது எனில் விந்தையல்லவா? அத்தனைத் தனிச் சிறப்புற்ற விந்தையான செயல்முறை உள்ளவள் தேவி.

87-2. கெட்டவர்களை அழிக்கவும் நல்லோர்களைக் காக்கவும் தேவி புரியும் விசித்திர லீலைகள் (சாரித்ரம்) மிகவும் விந்தையாகத் தோன்றுபவை. திடீரெனத் தொடங்கிக் கெட்ட பலன்களைத் தரும் உற்பாதங்களிலிருந்தும் காப்பாற்றுபவள். (அத்புத - சாரி - த்ரா) (988)

**88. வாஞ்ச்சித - அர்த்த - ப்ரதாயிநீ. விரும்பிய பொருளைத் தருபவள்.**

88-1. தர்மம், அர்த்தம், காமம் (அறம், பொருள், இன்பம்) எனும் புருஷார்த்தங்களில் எதனைக் கோரி வழிபட்டாலும் அதனை நன்கு வழங்குவது தேவியின் இயல்பு. (989)

(நா. 990 - 993)

अभ्यासातिशयज्ञाता षडध्वातीतरूपिणी ।

अव्याजकरुणामूर्तिः अज्ञानध्वान्तदीपिका ॥ 181 ॥

**அப்யாஸாதிசயஜ்ஞாதா ஷடத்த்வாதீதரூபிணீ.**

**அவ்யாஜகருணாமூர்த்தி: அஜ்ஞாநத்த்வாந்ததீபிகா.181**

**89. அப்யாஸ - அதிசய - ஜ்ஞாதா. அப்பியாசத்தின் மிகுதியால் அறியப்பட்டவள்.**

89-1. திரும்பத் திரும்ப மாறுதலின்றி ஒருமுனைப்போடு செய்யப்படும் செயலும் சொல்லப்படும் சொல்லும் அப்பியாஸமாகும். தூங்கித் தன் வசமிழக்கும்வரை, இறக்கும்போது அறிவும் பொறிகளும் கைவிடும்வரை திரும்பத் திரும்பத் தேவியைச் சிந்திப்பதும் அவளை வழிபடுவதும் அவளைப் புகழ்ந்து பாடுவதுமான அப்பியாஸம் தேவை. அந்த அப்பியாஸத்தையும் செயல் நேர்த்தியுடன் அளவுகடந்த ஈடுபாட்டுடன் செய்வது அப்பியாஸாதிசயம் ஆகும். வாழ்நாளில் உணவு முதலிய பலவற்றின் அப்பியாஸங்கள் ஏற்பட்டுள்ளன. அவைகளின் அப்பியாஸத்தைவிட இது சிறந்ததாக அதிசயமான அப்பியாஸமாக அமையவேண்டும். அப்படி ஏற்பட்டால் அது அதிசயமே. அப்படி விந்தையான எளிதில் கை கூடாத அப்பியாஸத்தால் தேவியை அறியலாம். (990)

## 90. ஷட்-அத்த்வா-அதீத-ரூபிணீ. ஆறு வழிகளைக் கடந்த வடிவினள்.

90-1. தேவியை உபாஸனை செய்யும் வழிகள் - அத்த்வாக்கள் ஆறு. அவை வர்ணாத்த்வா, பதாத்த்வா, மந்த்ராத்த்வா, கலாத்த்வா, தத்த்வாத்த்வா, புவனாத்த்வா என்பன. வர்ணம் பதம் மந்த்ரம் எனும் மூன்றும் சொல் வடிவானவை. விமர்சரூபமானவை. கலா தத்துவம் புவனம் எனும் மூன்றும் பொருள் வடிவானவை, பிரகாசரூபமானவை.

90-2. 'அ' முதல் 'க்ஷ' வரையுள்ள அக்ஷரங்களின் சக்தியைப் பற்றி விளக்குவது வர்ண - அத்த்வா. அக்ஷரங்களைச் சேர்த்துப் பொருளுள்ளதாக அமைத்தது பதம். அதன் சக்தியை விளக்குவது பதாத்த்வா. அந்தப் பதங்களையோ அக்ஷரங்களையோ கொண்டு, தனித்து அக்ஷரத்திற்கும் அதன் கூட்டாக பதத்திற்கும் சக்தி கொண்டதாக அமைத்தது மந்திரம். அதன் சக்தியை விளக்குவது மந்திராத்த்வா. நிவிருத்தி, பிரதிஷ்டா, வித்யா, சாந்தி, சாந்தியதீதா என்ற (21-67) பஞ்சபூத 'பஞ்சபிரும்ம' கலைகளைப் பற்றி விளக்குவது கலாத்த்வா. சிவன் முதல் பூமி ஈறான 36 தத்துவங்களுக்கான விளக்கம் தத்த்வாத்த்வா. சைவசாக்த ஆகமங்களின்படி 36, (மற்ற சாஸ்திரங்களின்படி தத்துவங்களின் எண்ணிக்கை மாறுபடும்). புவனங்கள் ஐந்து. ஆகாச புவனம், வாயு புவனம், அக்னி புவனம், ஜல புவனம், பூமி புவனம் என. இந்த புவனங்களைப் பற்றியது புவனார்த்தவா. இந்த ஆறு வழிகளால் உணரப் பெறுபவையே உலகம். அண்டமாகிய பிரும்மாண்டத்திலும் பிண்டமாகிய தனி மனிதனின் சரீரத்திலும் இவைகள் உள்ளன. சிஷ்யனுக்கு மந்திரம் உபதேசிக்குமுன் மந்திரத்தால் தேவியுடன் ஐக்கிய பாவனை பெறத் தகுதி

இந்த ஆறு வழிகளும் சுத்தமாக இருந்தால் தான் அமையும் என்பதற்காக ஷடத்வசோதநம் என்ற ஒரு சடங்கு உண்டு. ஆறு வழிகளையும் அதனால் சுத்தி செய்த பின்னரே சுத்த சைதன்யமான மந்திர தேவதை உடலினுள் தங்கும். (சாரதா திலகம் - 5, 77 - 96) இந்த ஆறு அத்த்வாக்களால் விளக்கப்பெறுவதும் அவைகளுக்குள் அடங்காததுமான வடிவமுள்ளவள் தேவி.

**90-3. அவ்யாஜ-கருணா-மூர்த்தி :. எதிர்பார்வையற்ற கருணை வடிவினள்.**

91-1. பிறருக்காகவோ தனக்காவோ செய்யப்படும் செயலால் என்ன லாபம் விளையக்கூடும் எனச் சிந்தித்து லாபத்தை எதிர்பார்த்துச் செயல்படுவது இயற்கை. செய்யும் செயலைவிட அதனால் கிடைக்கும் லாபம், கொடுத்த பணத்தைத் திருப்பி வாங்கும்போது வட்டி பெறுவதுபோல், சற்று அதிக மதிப்புள்ளதாக இருக்கவேண்டும் என்று எதிர்பார்ப்பது உண்டு. வட்டி போன்ற அதிக லாபம் வ்யாஜம் எனப்படும். எதிர்பார்க்கின்ற பலன் அல்லது லாபம் வ்யாஜம். நமது கருணைக்கும் அப்படி வியாஜ எதிர்பார்வை இருக்கும். ஆனால் தேவி காட்டும் கருணை எதிர்பார்வையற்றது. மகன் என்ன செய்வான் என்பதை எதிர்பாராமல் கருத்தரித்துப் பெற்று வளர்த்து ஆளாக்கும் தாயின் கருணை தேவிகாட்டும் கருணையின் ஓர் அம்சமே. வியாஜம் – காரணம். காரணமின்றித் தானே பெருகும் கருணை. தேவியின் கருணை எனச் சொல்வதும்கூடச் சரியில்லை. தேவியே கருணை. கருணையே உருவானவள் கருணாமூர்த்தி :. "ஜயதி கருணா காசித் அருணா", "செந்நிறமுள்ள கருணை ஒருவள் விளங்குகிறாள்" (ஸௌந்தர்யலஹரீ - சு. 93) (992)

**92. அஜ்ஞாந - த்த்வாந்த - தீபிகா. அறியாமை எனும் இருளைப் போக்கும் அழகான சிறு தீபம்.**

92-1. இருட்டும் வெளிச்சமும்போல் அறியாமையும் ஞானமும். இருட்டிலிருந்தவன் திடீரெனப் பேரொளி கண்டால் கண்கள் இருண்டு பார்க்கும் திறனை இழந்துவிடும்.அதற்காக இரவின் இருட்டைப் போக்கச் செவ்வொளி பரப்பும் கதிரவன் ஒளி குறைந்தவனாகத் தோன்றுகிறான்.

தேவி கதிரவனைவிடக் கருணைமிக்கவள். அழகிய சிறு தீபம்போல் அறியாதவனை நெருங்குகிறாள். அவனுக்கு ஏற்பட்டுள்ள அறியாமை எனும் இருள் அல்லது மறைப்பு, சாதாரண இருளைப்போல் உலகத்தைக் காணமுடியாததால் வேதனை தருவதல்ல. உலகைக் கண்டு தன்னைக் காணாமல் தடுக்கும் மறைப்பு அது. அவனுக்கு 'அவனை'ச் சுற்றி மட்டும் காட்டி 'அவனை' உணர்த்தி உதவுவதற்காகச் சிறு தீபமாக, அவனுடைய

அறிவுக்கேற்பப் பார்க்கவேண்டியதில் மட்டும் ஒளி பாய்ச்சும் அழகிய தீபமாகத் தேவி வருகிறாள். அஜ்ஞானம் எனும் இருள் தீபத்தைக் கண்டதும் தானே மறைகிறது. அஜ்ஞானத்தைப் போக்கத் தேவிக்குத் தனிமுயற்சி தேவைப்படவில்லை. (993)

(நா. 994 - 1000)

**आवालगोपविदिना सर्वानुल्लङ्घयशासना ।**
**श्रीचक्रराजनिलया श्रीमत्त्रिपुरसुन्दरी ॥ 182 ॥**
**श्रीशिवा शिवशक्त्यैक्यरूपिणी ललितांबिका ॥ 183 ॥ ओं ॥**

**ஆபாலகோபவிதிதா ஸர்வாநுல்லங்க்ய சாஸநா.**
**ஸ்ரீசக்ரராஜநிலயா ஸ்ரீமத்த்ரிபுரஸுந்தரீ. 182**
**ஸ்ரீசிவா சிவசக்த்யைக்யரூபிணீ லலிதாம்பிகா.183 ஓம்.**

**93. ஆ - பால - கோப - விதிதா. சிறுவர் இடையர் உட்பட அனைவராலும் அறியப்பட்டவள்.**

93-1. சிறுவர்கள் அறிவு முதிர்ச்சியின்மையால் தெய்வ உணர்வின் இயல்பை அறியாதவர்கள். ஆடு மாடுகளைப் பேணி வளர்ப்பதையே தொழிலாகக் கொண்டு தெய்விகநெறி பற்றிச் சிந்திக்க நேரமும் வாய்ப்புமற்ற இடையர்கள். இவர்கள் கூடத் தேவியைத் தெய்வமாக அறிவார்கள்.

93-2. ஸதாசிவனுக்கு அடங்கியவர்கள் பிரும்மா முதலான மும்மூர்த்திகள். அதனால் ஸதாசிவனுக்குப் பாலர்கள். உலகைக் காப்பவர்களானதால் கோபர்கள். (கோ - பூமி, உலகம்) அவர்களால் அறியப் பெற்றவள்.

93-3. பாலனாகக் கோபனாக வேடம் போட்டவன் கண்ணன். பாலன் - கண்ணன். கோபர் - பசுபதியான சிவன், கோபாலனாகக் கண்ணனும், பசுபதியும், இவர்களிலிருந்து சிறுவர்களும் இடையர்களும் வரை எல்லோராலும் தெய்வமென உணரப்பட்டவள். ருத்திரம் எனும் வேதப்பகுதி தெய்வம் எது என்ற கேள்விக்குச் சூரியனைக் காட்டித் தெய்வம் அது எனப் பதில் கூறுகிறது. ,“உதைநம் கோபா அத்ருசந் அத்ருசந் உதஹார்ய:- உதைநம் விச்வா பூதாநி” இடையர்கள் இவரை அறிவார்களே! கூலி பெற்று

வெகுதூரத்திலிருந்து நீர் கொணரும் பெண்கள் கூட இவரை அறிவார்களே! ஏன்! உலகிலுள்ள உயிரினங்களனைத்தும் இவரை அறிவார்களே என. அந்த வடிவம்தான் தாயான தெய்வம் ஸ்ரீமாதா. (நா. 1)
(994)

**94. ஸர்வ - அநுல்லங்க்க்ய - சாஸநா. எவராலும் மீறமுடியாத கட்டளைகளுள்ளவள்.**

94-1. பிரும்மா விஷ்ணு முதலானோர் கூட அவள் இட்ட பணிகளை அப்படியே நிறைவேற்றுகிறார்கள். யாரும் அவளது கட்டளைகளை மீறமுடியாது. புருவநெரிப்பாலேயே கட்டளையிடுவாள் தேவி. அதனைப் பிரும்மா முதலானோர் கூட மீறமுடியாது. ஆனால் அதே சமயத்தில் பாமரனிடமுள்ள கருணையால் அவனிடம் தன் கட்டளைகளை வற்புறுத்திவதில்லை. கருணையால் சிறுவன் செய்யும் தவற்றைத் தாய் பொருட்படுத்துவதில்லை. அவள் கருணாமூர்த்தி அல்லவா! அதற்குக் கட்டளையை மீறலாம். கண்டிப்பு கிடையாது என்ற பொருளல்ல. அவளது கட்டளையை யாரும் மீறமுடியாது. ஏனெனில் அவள் ஸ்ரீ மஹாராஜ்ஞ. (நா. 2)
(995)

**95. ஸ்ரீ - சக்ர - ராஜ - நிலயா. ஸ்ரீ சக்கிரத்தை இருப்பிடமாகக் கொண்டவள்.**

95-1. ஒன்பது ஆவரணங்கள் கொண்ட ஸ்ரீசக்கிரம் சக்கிரங்களுக்குள் சிறப்புற்று விளங்குவது. ஸ்ரீசக்கிரராஜம். அதனைத் தன் இருப்பிடமாகக் கொண்டவள். சிவனும் சக்தியும் இணைந்து உறையும் உடலாக ஸ்ரீ சக்கிரத்தைப் பாவனை செய்வர். உடலில் ஜீவன் தங்குவதுபோல் தேவியும் சிவனும் இதனுள் உறைகிறார்கள். ஸ்ரீசக்கிராராஜமெனும் ரதத்தில் இருப்பவள்.(10-5-2) (996)

**96. ஸ்ரீமத் - த்ரிபுர - ஸுந்தரீ. சிறப்புமிக்கத் திரிபுராின் அழகிய மனைவி.**

96-1. திரிபுரர் - பரமசிவன். பிரும்மா, விஷ்ணு, ருத்திரன் என்ற மூன்று உடல்கள் கொண்டவர். "பரமசிவனது இச்சை காரணமாக அவருள் மூன்று உடல்கள் தோன்றின. மேற்பகுதியில் பிரும்மா, நடுப்பகுதியில் விஷ்ணு, கீழ்ப்பகுதியில் சிவன் என. ஐந்து முகங்களும் நான்கு கைகளும் தாமரை கேஸரம் போன்ற மஞ்சள் கலந்த வெண்மை நிறமும் உள்ள மேனி

பிரும்மா. ஒரே முகமும் சங்கு சக்கிரம் கதை தாமரை ஏந்திய நான்கு கைகளும் கருத்த நிறமுமுள்ள மேனி விஷ்ணு. ஐந்து முகங்களும் நான்கு கைகளும் ஸ்படிக்கல் அப்பிரகத்தகடு போன்ற வெண்ணிறமும் பிறை சூடிய தலையும் கொண்ட மேனி சிவன். இந்த முப்புரங்களும் - மூன்று மேனிகளும் கொண்டதால் பர சிவன் திரிபுரன் ஆனார். (காலிகாபுராணம்) ஸ்ரீமத் - த்ரிபுர - ஸுந்தரி - பெருமைமிக்கத் திரிபுரரின் அழகிய மனைவி.

96-2. ஸ்தூலம் ஸுக்ஷ்மம் காரணம் என்ற மூன்று தேக(புர)ங்களுக்குள்ளும் விளங்கும் சிறப்புமிக்க அந்தர்யாமியாக விளங்கும் சுந்தரி, தன் அழகால் முப்புரங்களையும் சிறப்புமிக்கதாகவும் அழகு மிக்கதாகவும் செய்பவள். புரம் - நிலை. விழிப்பு, கனவு, தூக்கம் என்ற மூன்று நிலைகளிலும் ஸாக்ஷியாக இருந்து அவைகளைச் சிறப்பும் அழகும் உள்ளவையாகச் செய்பவள். மூவுலகங்களிலும் சிறப்புமிக்க அழகி. (997)

### 97. ஸ்ரீ சிவா.

97-1. பரசிவனது ஸுந்தரி என்பதால் இருவருக்கிடையே வேற்றுமை இருப்பதாகக் கொள்ளக்கூடாது. சிவனும் சிவையும் 'ஒருவரே'. ஒருடல் பெற்ற ஒருவரே. (9.2.1) சிறப்புமிக்க சிவா. மங்கள வடிவினள். (998)

### 98. சிவ - சக்தி - ஐக்ய - ரூபிணீ. சிவனும் சக்தியும் ஒன்றாயிருப்பதை நிரூபிப்பவள்.

98-1. விளக்கும் ஒளியும், சொல்லும் பொருளும் போல் ஒன்றால் மற்றொன்று விளக்கம் பெறுவதும், ஒன்றிருப்பதாலேயே மற்றொன்றிருப்பதை உணர முடிவதும் ஐக்கியத்தை நிரூபிப்பவை. எள்ளினுள் எண்ணெய் போன்று சில சமயம் சக்தி வெளிப்படாதிருக்கலாம். வேகமாகச் சுழலும் சக்கிரத்தில் சுழல்வதை மட்டும் உணர்வதுபோல் சிவன் வெளிப்படாமல் சக்தி மட்டும் வெளிப்படலாம். பழுக்கக் காய்ச்சிய இரும்பு நெருப்பாக உணரப்படுவது போல் சக்தி மட்டும் இருப்பதாக உணரப்படலாம்.சக்தியும் சக்திமானான சிவனும் ஸமரஸம் பெற்றவர்கள். (பா.12.8.2-9) பிரும்மமும் அவரது சக்தியும் ஒன்றே என்பதை நிரூபிக்க, 'சிவகாமேச்வராங்கஸ்த்தா' (நா.52) வாக, 'தக்ஷிணாமூர்த்திரூபிணீ'யாக, (நா. 725) 'ஏகாகிநீ' (நா.665) யாக 'கேவலா'(நா.623) 'காந்தார்த்த விக்ரஹா'(நா.861) வாக ஸ்ரீ சிவாவாக (நா.998) தேவி விளங்குகிறாள்.

98-2. சிவ - சக்தி - ஐக்கியம். உண்மைப் பொருளாகிய சிவம் ஆகிய பரப்பிரும்மம் குணமும் குறியுமற்றது. எக்காலத்தும் தன்னுடைய தனிப்பெருமையில் நிலைத்திருப்பது. எவ்வித அளவைகளாலும் பகுத்தறிய வொண்ணாதது. எப்பொருளையும் அறிகின்ற அறிவு அதனிடம் செயலற்றுவிடும். மனம் விருத்தி வடிவில் பொருளின் மீது படர்ந்து உணரும் சக்தி கொண்டது. உருவற்றதானபடியால் விருத்திக்ககப்படாத பரம்பொருளை அந்த மனமும் கண்டுகொள்ளாது. மனமும் புத்தியும் ஒடுங்கிய சமாதி நிலையில் பிரும்மானுபவம் பெற்ற யோகிகள் அதனை அபரோக்ஷமாக - நேரிடையாகப் பொறிகள் மனம் புத்தி இவற்றின் உதவியின்றியே அனுபவிப்பர். அந்த நிர்குணப் பிரும்மம் தன் மாயா பலத்தால் ஸகுண வடிவைத் தாங்கும். ஸகுண நிர்க்குண நிலைகளிடையே பேதமில்லை. ஸகுண மூர்த்தியாக வெளியே நான்கு கைகள் முதலிய அடையாளங்களுடன் கருணை முதலிய குணச்சிறப்புக்களுடன் தோன்றும் தேவியும் பிரும்மமே. அந்த பிரும்மமே தர்மி தர்மம் என்று பிரிக்கமுடியாதிருந்த நிலையிலிருந்து பிரிந்து சிவமே காமேசுவரனாகி அமர்ந்திருக்க அவரை அதிஷ்டானமாகக்கொண்டு அவரது தர்மமான சக்தியாக அவரது மடியில் தேவி விளங்குகிறாள். பிரும்மமாக நிர்குணமாக இருந்த நிலையில் சக்தியாக உள்ளடங்கியிருந்த தேவி, ஸகுண நிலையில் 'காமேச்வராங்கமத்த்யஸ்த்தா', வாக இணைந்து விளங்குகிறாள்.

98-3. ரத்னத்ரய பரீக்ஷை எனும் நூலில் அப்பய தீக்ஷிதர் என்ற மகான் இதனை அழகாக விளக்குகிறார். " நித்யம் நிர்த்தோஷ கந்த்தம் நிரதிசய ஸுகம் ப்ரும்ஹ சைதந்யமேகம் தர்மோ தர்மீ இதி ரூபத்வயம் அயதி ப்ருதக்பூய மாயாவசேந. தர்மஸ் தத்ர அநுபூதி: ஸகல விஷயிணீ, ஸர்வகார்யானுகூலா சக்திச்ச இச்சாதி ரூபா பவதி குணகணச் ச ஆச்ரயஸ்து ஏகஏவ. கர்த்ருத்வம் தஸ்ய கர்மீ கலயதி ஜகதாம் பஞ்சகே ஸ்ருஸ்டி பூர்வே தர்ம: பும்ரூபமாப்த்வா ஸகல ஜக துபாதான பாவம் பிபர்த்தி. ஸ்த்ரீரூபம் ப்ராப்ய திவ்யா பவதி ச மஹிஷீ ஸ்வாச்ரயஸ்யாதிகர்து: ப்ரோக்தௌ தர்மப்ப்ரபேதாவபி நிகமவதாம் தர்மிவத் ப்ரும்ஹ கோடீ".

98-4. தேவியின் பல தோற்றங்களில் ஸ்ரீசக்கிரமும் குண்டலிநியும் ஸ்ரீவித்யையும் தேவியின் வடிவங்கள். ஸ்ரீசக்கிரத்தில் ஐந்து சக்தி சக்கிரங்களும் நான்கு சிவசக்கிரங்களும் இணைந்து 43

முக்கோணங்களாக வடிவம் பெறுகின்றன. ஸ்ரீசக்கிரமாகப் பார்க்கும்போது சக்தி சக்கிரம், சிவசக்கிரம் எனும் பேதம் மறைந்து விடுகிறது. அப்படிப் பேதமற்று இணைந்த சிவசக்தி ஐக்யத்தை ஸ்ரீசக்கிரமான தன் உருவில் விளக்குகிறாள்.(9-10-18)

98-5. நடுவிலுள்ள திரிகோணம் சக்தி; அதன் நடுவிலுள்ள பிந்து சிவவடிவம். இரண்டும் இணைந்து காணப்படுகின்றன. திரிகோணம், எட்டுகோணம், இருபத்து கோணங்கள், 14 கோணம் இவை சக்தி சக்கிரங்கள். பிந்து, எட்டுதளத்தாமரை, 16 தளத்தாமரை, சதுரச்ரம் என்ற நான்கும் சிவசக்கிரங்கள். நடு திரிகோணமும் பிந்துவும்; அஷ்டகோணமும் அஷ்டதளமும்; இரு பத்து கோணங்களும் பதினாறு தளமும்; பதினான்கு கோணமும் பூபுரமும் ஒன்றோடொன்று இணைப்புள்ளவை. இப்படியும் சிவ சக்திகளின் ஐக்கியம் விளக்கப் பெறுகின்றது.

98-6. மூலாதாரத்திலிருந்து ஆஜ்ஞை வரை பரவும் குண்டலினிக்கு ஆதாரமாகவும் மூடியாகவும் இருப்பவை, சிவ சக்கிரங்கள். இரண்டு அகுல சக்கிரங்கள். சக்தி சக்கிரங்கள் - மூலாதாரம் முதலிய ஆறு. இவை ஒன்றோடொன்று இணைந்தவை. ஒவ்வொரு சக்கிரத்திலும் சிவனும் சக்தியும் ஐந்துவித ஸாம்யங்களைக் காட்டுகின்றனர். (12-1-4, 12-5-2, 12-7-1, 12-8-1) தேவியின் பஞ்சதசாக்ஷரியில் க ஹ என்ற இரு எழுத்துக்கள் சிவாம்சமுள்ளவை. ஏ, ஈ, ர, ஸ என்ற நான்கெழுத்துகள் சக்தியம்சம் பெற்றவை. ஹ்ரீம் என்பது சிவசக்தியம்சம் பெற்றது. (11.4.3) இவை இணைந்து தேவியின் மந்திர வடிவை விளக்குகின்றன.

98-7. ஐந்து பூதங்கள் வடிவில் உள்ள சிவனுக்கு ஐந்து சக்திகள் உண்டு. ஆகாயத்தில் 'விப்வீ'(எங்கும் பரந்திருப்பது) வாயுவில் 'ஸ்பந்தா'(அசைவது) அக்கினியில் 'பாஸ்வதீ' (ஒளி) ஜலத்தில் 'ஹ்லாதா'(திருப்தி-புஷ்டி அளிப்பது) பூமியில் 'தூமாவதீ'(புகைபோல் மறைப்பது) என. அந்தச் சிவசக்திகள் ஐந்தும் ஒருங்கிணைந்த வடிவம் தேவி.

98-8. சிவனது சக்திகள் ஐந்து. ஸ்ருஷ்டிகர்த்ரீ (நா.264) கோப்த்ரீ (நா.266) ஸம்ஹாரிணீ (நா.268) திரோதானகரீ (நா.270) அனுக்ரஹதா (நா.273) என. அவைகளின் ஒருங்கிணைந்த வடிவமானவள் தேவி.(999)

### 99. லலிதா-அம்பிகா. அழகிய தாய்.

99-1. ஆயிரம் நாமங்களில் கடைசி நாமம். ஸ்ரீ மாதா - சிறப்பு மிக்க அழகிய தாய் எனத் தொடங்கிய நாமங்களின் வரிசை ஸ்ரீலலிதா அம்பிகா

- அழகிய தாய் என்று நிறைவு பெறுகிறது. வாக்தேவிகள் தனது தோற்றத்திற்குக் காரணமானவளும் வாக்கு சக்தியை அருளும் சக்தி பெற்ற வாக்தேவிகளாக இருக்க அருள் புரிந்தவளும் மாட்சிமை மிக்கவளுமான தேவியை அறிமுகப்படுத்துவதற்கு முதல் நாமமாக 'ஸ்ரீமாதா'வையும் நாமங்களின் வரிசையை நிறைவுபெறச் செய்யக் கடைசி நாமமாக அதே பொருளுள்ள 'லலிதா அம்பிகா'என்ற நாமத்தையும் தந்தனர்.

99-2. உலகைத் தோற்றுவித்துக் காத்து ஒடுக்கும் பரநிலையில் உலகைத் தம் கருவில் தாங்கிய 'மாதா'வாக ஸ்ரீமகாராஜ்ஞுயாக ஸ்ரீமத்ஸிம்ஹாஸனேச்வரியாகத் தேவியின் அளவிலடங்காப் பெருமை கொண்ட தாயின் வடிவத்தில் தொடங்கி துயர்நீங்கக் கருணையுடன் தானே வலியவந்து ஆட்கொள்ளும் அம்பிகாவாக அழகிய தாயின் வடிவில் நாமங்கள் நிறைவு பெறுகின்றன. துயருறும் நிலையில் அன்புடன் அணைக்கும் தாய் அழகற்றவளாயினும் அழகியாகக் காணப்பெறுவாள். குழந்தைக்குத் தன் தாய் அழகியே.

99-3. லலிதா - அழகானவள். அவளது அழகு ஈர்க்கும் தன்மை உள்ளது. அதன் விளையாட்டுகள் சிறிது சிறிதாக மலர்ந்து கொண்டிருக்கும். மனத்தைக கடைந்து புதுப்புது கற்பனைகளுக்கு இடம் கொடுக்கும். உணவைக் கண்டதும் நாவில் நீர் ஊறுவது போல் கல் மனத்தில் இளக்கம் காணச் செய்யும். மறுபடி மறுபடி காணத் தூண்டும். நெருங்கி நின்று பார்த்தால் நல்லது என்ற ஆவலைத் தூண்டும். அழகே நம்முடன் பேசுவதாக உணர்வோம். அந்த அழகு மென்மையானதும் மழமழப்புள்ளதுமான மேனியின் மேல்படர்ந்து பலதரப்பட்ட பாவங்களை வெளியிட்டுக் கொண்டிருக்கும். உடல் அசைவிலும் மிடுக்கிலும் மின்னும் அந்த அழகு லலிதம் எனப்படும். "லோகாந் அதீத்ய லலதே லலிதா தேந ஸா உச்யதே"(பத்மபுராணம்) உலகில் உள்ள அழகிகள் அனைவரிலும் அவள் அழகி. லோகா:- புலப்படும் பொருள்கள். ஸ்தூல-ஸூக்ஷ்ம தேகங்களைத் தாண்டி உள்ளே அந்தர்யாமியாக, ஸ்தூல ஸூக்ஷ்ம தேகங்களுக்கே அழகூட்டுபவளாக விளங்குபவள். லோக :- புலப்படும் கிரணங்கள். தேவியின் மேனியிலிருந்து வெளியாகும் செவ்வொளிக் கதிர்கள். அவை ஆவரண தேவதைகளாக விளங்குபவை. "அணிமாதிபி: ஆவ்ருதாம் மயூகை:" (4.4) கிரணங்கள் வடிவிலுள்ள அணிமாதி தேவதைகளை உள்ளடக்கிக் கொண்டு பிந்துவில் விளங்குபவள். தேவியிடம் உள்ளதனைத்தும் லலிதம்-மென்மையும் மழமழப்பும் மிக்கவை, ஆவரண தேவதைகள், கரும்பும் பூவும் ஆசையும் அறிவுமான ஆயுதங்கள் முதலானவை.

99-4. பிரயாகையில் பீடமாக உள்ளவள், லலிதாவெனும் நதி வடிவினள். மங்கள சண்டிகா என்ற தேவியின் வடிவில் இருப்பவள். வரத அபய முத்திரைகள் கொண்ட இரு கைகள், வெண்மையான மேனி நிறம், சிகப்புப் பட்டாடை, புன்சிரிப்புடனுள்ள முகம், அழகிய முகம், புதுகை அழியாத யௌவனம் மிளிரும் களை, அழகிய உடல் அமைப்பு இத்துடன் தியானிக்கத்தக்கவள் மங்கள சண்டிகா. லலிதா எனும் ராக வடிவினள்.

(1000)

ஓங்காரத்துடன் தொடங்கிய நாமங்கள் ஓங்காரத்துடன் நிறைவு பெறுகின்றன.

एवं श्रीललितादेव्याः नाम्नां साहस्रकं जगुः ॥

ஏவம் ஸ்ரீலலிதாதேவ்யா: நாம்நாம் ஸாஹஸ்ரகம் ஜகு:

இப்படித் தேவி ஸ்ரீ லலிதையின் ஆயிரம் நாமங்களை வசிநீ முதலான வாக்தேவிகள் பாடினர்.

ஒவ்வொரு நூறு நாமங்களின் முதல் நாமங்கள். (1) ஸ்ரீமாதா, (101) மணிபூராந்தருதிகா, (201) ஸத்கதிப்ரதா, (301) ஹ்ரீங்காரீ, (401) விவிதாகாரா, (501) குடாந்நப்ரீதமாநஸா, (601) தராந்தோலித தீர்க்காக்ஷீ, (701) தேசகாலா பரிச்சிந்நா, (801) புஷ்டா, (901) நாதரூபிணீ என.

மஹாலாவண்ய சேவதி : (நா.48), குணநிதி : (நா.604) ஆத்மா (நா.617) ரோகபர்வத தம்போளி: (நா.748) என்ற நான்கும் புல்லிங்கச் சொற்கள். தத் (நா.425) ஸாது (நா.711) பரம்ஜ்யோதி ; (நா.806) பரம்தாம(நா.807) ப்ரம்ஹ (நா.822) என்ற ஐந்து நாமங்கள் நபும்ஸகலிங்கச் சொற்கள். ஸ்வாஹா(நா.535), ஸ்வதா (நா. 536) என்ற இரு நாமங்கள் விகுதியுடன் கூடாத அவ்யயச் சொற்கள். மற்றவை ஸ்திரீலிங்கச் சொற்கள். ஸ்வாஹா ஸ்வதா என்பதை ஸ்திரீலிங்கச் சொற்களாகக் கொள்வதும் உண்டு. பரம்ஜ்யோதி : பரம்தாம, என்ற இரு நாமங்களும் இரண்டு பதம் கொண்டவை. பரம் என்பதை அவ்யயமாகக் கொண்டு ஒரே பதமாகச் சொல்வதும் உண்டு.

ஆயிரம் நாமங்களின் விளக்கம் நிறைவு பெற்றது.

❋ ❋ ❋

அதிகாரம் - 31

# उत्तरन्यासः

## ஜபவிதானம் – முடிவில் நியாஸங்கள்

करन्यासः - ओं ऐं अंगुष्ठाभ्यों नमः + करपृष्ठाभ्यां नमः

अङ्गन्यासः - ओं ऐं हृदयाय नमः + अस्त्राय फट् ।

ओं भूर्भुवस्सुवरोम् (दिग्विमोकः)

ध्यानं - सिन्दूरारुणविग्रहां + परामम्बिकाम् ॥

अरुणां करुणा + विभावये भवानीम् ॥

वन्दे बद्मासन + सर्वसंपत्प्रदात्रीम् ॥।

सकुंकुमविलेपनां + स्मराम्यम्बिकाम् ॥

तमित्यादि पञ्चपूजा - लं पृथिव्यात्मिकायै + सर्वोपचारपूजाः

गुह्यातिगुह्यगोप्त्री त्वं गृहाणास्मत्कृतं जपम् ।

सिद्धिर्भवतु देवेशि त्वत्प्रसादान्मयि स्थिरा ॥

ओं तत्सत् श्रीललितापरमेश्वर्यर्पणमस्तु ।

கரந்யாஸம் - ஓம் ஐம் அங்குஷ்ட்டாப்ப்யாம் +
கரப்ருஷ்ட்டாப்யாம் நாமః (3-9)

அங்கந்யாஸம் - ஓம் ஐம் ஹ்ருதயாய + அஸ்த்ராய பட்
(3-10) ஓம் பூர்புவஸ்ஸுவரோம் (திக் விமோகः)

தியானம் - ஸிந்தூராருண + பராமம்பிகாம் (4-1)

அருணாம்+விபாவயே பவாநீம் (4-2)

வந்தே பத்மா + ஸம்பத்ப்ரதாத்ரீம். (4-3)

ஸகுங்கும விலேபநாம் + அம்பிகாம் (4-4)

ஸமித்யாதி பஞ்சபூதா - லம்
ப்ருதிவ்யாத்மிகாயை+ஸர்வோபசார

பூஜாஸ் ஸமர்ப்பயாமி (4-11)

குஹ்யாதிகுஹ்யகோப்த்ரீ த்வம் க்ருஹாணஸ்மத்
க்ருதம் ஜபம்.

**ஸித்திர்ப்பவது தேவேசி த்வத் ப்ரஸாதாந் மயி ஸ்த்திரா**
**ஓம் தத்ஸத் ஸ்ரீ லலிதாபரமேச்வர்யர்ப்பணமஸ்து.**

1. கரநியாஸம், அங்க நியாஸம், தியானம், லமித்யாதி பஞ்சபூஜை பற்றிய விபரங்கள் 30-39 பக்கங்களின் தரப்பட்டுள்ளன. ஜபம் முடிந்த பின்னர் மறுபடி இவைகளைச் செய்கிறோம். கர நியாஸத்தைச் சிலர் செய்வதில்லை. நியாஸம் செய்வகற்கான தகுதி கைகளுக்குக் கிடைக்க இது செய்யப்படுவதால் பின்னரும் அவசியம் செய்யப்பட வேண்டும் எனச் சிவர் கூறுவர்.

2. ஜபம் ஆரம்பிக்கும்முன் நாம் ஜபம் செய்யும் வரை மந்திர தேவதா சக்தி நம்மை விட்டகலாதிருக்கும்படி திக்பந்கம் செய்துகொண்டோம். நமது உடலைச் சுற்றி வலமாக வலக்கையால் சுற்றிப் பாதுகாப்பிற்காக ஓம் பூர்ப்புவஸ்ஸுவரோம் என்ற (4.11) மந்திரத்தால் நம்மைக் கட்டிக் கொண்டோம். ஜபம் முடிந்ததும் அந்தக் கட்டை விலக்கிக் கொள்வதற்காக பூர்ப்புவஸ்ஸுவரோம் என வலது கையால் இடமாக சுற்றி (கட்டிய முறைக்கு எதிராக திக்விமோகம் - திக்குகளிலிருந்தும் ஏற்பட்ட கட்டை விலக்கிக்கொள்கிறோம்.

3. பஞ்ச பூஜை (4.11) முடிந்ததும் இதுவரை செய்த நாம பாராயணத்தைத் தேவியிடம் அர்ப்பணம் செய்து அந்த ஜபம் நற்பயனைத் தர தேவியின் அருள் வேண்டுகிறோம். "குஸ்யாதி+ஸ்திரா" என தேவீ! ரஹஸ்யத்திலும் அதிரஹஸ்யமாக மறைத்து வைத்துள்ள உனது தத்துவங்களை நல்மனம் படைக்காதவர்கள் அறியாவண்ணம் மறைத்து நீ பாதுகாக்கிறாய். அதனால் தத்துவமறியாமல் நான் நாம பாராயணம் செய்துள்ளேன். இதனை நீ ஏற்றுக்கொள்வாய். எனக்கப் பராரயணம் செய்ததன் பலன் உன் அருளால் நிறைத்திருப்பதாகக் கிட்டட்டும்" எனக்கோரிப் பாராயணம் செய்த நாமம் 'அவளே'. 'ஓம் தத் ஸத்'. 'அதுதான் நித்யமானது. அதனை ஸ்ரீ லலிதா பரமேசுவரியிடம் அர்ப்பணம் செய்கிறேன் ' எனத் தேவியின் இடது கையில் ஜலத்தை ஸமர்ப்பணம் செய்வதாகப் பாவனை செய்து இந்த நற்பணியைப் பூர்த்தி செய்து கொள்கிறோம்.

* * *

அதிகாரம் - 32

# फलश्रुतिः
# பலச்ருதி

### 12. க்ஷமாகலை

इत्येवं नामसाहस्त्रं कथितं ते घटोद्भव ।
रहस्यानां रहस्यं च ललिताप्रीतिदायकम् ॥
अनेन सदृशं स्तोत्रं न भूतं न भऽविष्यति ॥ 1 ॥

सर्वरोगप्रशमनं सर्वसम्पत्प्रवर्धनम् ।
सर्वापमृत्युशमनं कालमृत्युनिवारणम् ॥ 2 ॥

सर्वज्वरार्तिशमनं दीर्घायुष्यप्रदायकम् ।
पुत्रप्रदमपुत्राणां पुरुषार्थप्रदायकम् ॥ 3 ॥

इदं विशेषात् श्री देव्याः स्तोत्रं प्रीतिविधायम् ।
जपेन्नित्यं प्रयत्नेन ललितोपास्तितत्परः ॥ 4 ॥

**இத்யேவம் நாமஸாஹஸ்ரம் கதிதம் தே கடோத்ப்பவ.**
**ரஹஸ்யாநாம் ரதஹதஸ்யம் ச லலிதாப்ரீதிதாயகம்.**
**அநேந ஸந்ருசம் ஸ்தோத்ரம் ந பூதம் ந பவிஷ்யதி. 1**

**ஸர்வரோகப்ரசமநம் ஸர்வஸம்பத்ப்ரவர்த்தநம்.**
**ஸர்வாபம்ருத்யுசமநம் காலம்ருத்யுநிவாரணம். 2**

**ஸர்வஜ்வரார்த்திசமநம் தீர்க்காதயுஷ்யப்ரதாயகம்**
**புத்ரப்ரதமபுத்ராணாம் புருஷார்த்தப்ரதாயகம். 3**

**இதம் விசேஷாத் ஸ்ரீ தேவ்யா: ஸ்தோத்ரம் ப்ரீதிவிதாயகம்.**
**ஜபேந்நித்யம் ப்ரயத்நேந லலிதோபாஸ்திதத்பர:. 4**

1. ஸ்ரீஹயக்ரீவர் கூறினார்:- தேதவியின் ஆயிரம் நாமங்களை உமக்குக் கூறினேன். இவை ரகசியங்களுக்குள் ரகசியமானவை. தேவிக்கு மிகப்பிரியமானது இதைப் போன்றத் துதி வேறொன்றில்லை. நோய்களைப்

போக்கும்; செல்வத்தை அளிக்கும். அபமிருத்யுவை நீக்கும். நீண்ட ஆயுள் தரும். பிள்ளைப்பேறில்லாதவர்களுக்குப் பிள்ளைச் செல்வம் தரும். இதனைச் சிரத்தையுடன் படிக்க வேண்டும். (1-4)

प्रातः स्नात्वा विधानेन सन्ध्याकर्म समाप्य च ।
पूजागृहं ततो गत्वा चक्रराजं समर्चयेत् ॥ 5 ॥

विद्यां जपेत् सहस्रं वा त्रिशतं शतमेव वा ।
रहस्यनामसाहस्रमिदं पश्चात्पटेन्नरः ॥ 6 ॥

जन्समध्ये सकृच्चापि य एतत्पठते सुधीः ।
तस्य पुण्यफलं वक्ष्ये शृणु त्वं कुम्भसम्भव ॥ 7 ॥

गङ्गादिसर्वतीर्थेषु यः स्नायात्कोटिजन्मसु ।
कोटिलिङ्गप्रतिष्ठां च यः कुर्यादविमुक्तके ॥ 8 ॥

कुरुक्षेत्रे तु यो दद्यात्कोटिवारं रविग्रहे ।
कोटिं सौवर्णभाराणां श्रोत्रियेषु द्विजन्मसु ॥ 9 ॥

यः कोटिं हयमेधानामाहरेद् गाङ्गरोधसि ।
आचरेत्कूपकोटीर्यो निर्जले मरुभूतले ॥ 10 ॥

दुर्भिक्षे यः प्रतिदिनं कोटिब्राह्मणभोजनम् ।
तत्पुण्यं कोटिगुणितं लभेत्पुण्यमनुत्तमम् ।
रसयनामसाहस्रे नाम्नोऽप्येकस्य कीर्तनात् ॥ 12 ॥

रहस्यनामसाहस्रे आमैकमपि यः पठेत् ।
तस्य पापानि नश्यन्ति महान्त्यपि न सम्शयः ॥ 13 ॥

नित्यकर्माननुष्ठानात् निषिद्धकरणादपि ।
यत्पापं जायते पुम्सां तत्सर्वं नश्यति ध्रुवम् ॥ 14 ॥

बहुनात्र किमुक्तेन शृणु त्वं कुम्भसम्भव ।
अत्रैकनाम्नो या शक्तिः पातकानां निवर्तने ।
तन्निवर्त्यमघं कर्तुं नालं लोकाश्चतुर्दश ॥ 15 ॥

यस्त्यक्त्वा नामसाहस्रं पापहानिमभीप्सति ।
स हि शीतनिवृत्त्यर्थं हिमशैलं निषेवते ॥ 16 ॥

भक्तो यः कीर्तयेन्नित्यमिदं नामसहस्रकम् ।
तस्मै श्रीललिता देवी प्रीताऽभीष्टं प्रयच्छति ॥ 17 ॥

अकीर्तयन्निदं स्तोत्रं कथं भक्तो भविष्यति ॥ 18 ॥

ப்ராதஃ ஸ்நாத்வா விதாநேந ஸந்த்த்யாகர்ம ஸமாப்ய ச.
பூஜாக்ருஹம் ததோ கத்வா சக்ரராஜம் ஸமர்ச்சயேத். 5

வித்யாம் ஜபேத் ஸஹஸ்ரம் வா த்ரிசதம் சதமேவ வா.
ரஹஸ்யநாமதஸாஹஸ்ரம் இதம் பச்சாத் படேந் நரஃ 6

ஜந்மமத்த்யே ஸக்ருச்சாபி ய ஏதத் படதே ஸுதீஃ
தஸ்ய புண்யபலம் வக்ஷ்யே ச்ருணு த்வம் கும்பஸம்பவ. 7

கங்காதிஸர்வ தீர்த்தேஷு யஃ ஸ்நாயாத் கோடி ஜந்மஸு
கோடிலிங்க ப்ரதிஷ்ட்டாஞ்ச யஃ குர்யாதவிமுக்தகே. 8

குருக்ஷேத்ர து யோ தத்யாத்கோடிவாரம் ரவிக்ரஹே.
கோடிம் ஸௌவர்ணபாராணாம் ச்ரோத்ரியேஷு த்விஜந்மஸு 9

யஃ கோடிம் ஹயமேதாநாம் ஆஹரேத் காங்கரோதஸி.
ஆசரேத் கூபகோடீர் யோ நிர்ஜலே மருபூதலே. 10

துர்ப்பிக்ஷே யஃ ப்ரதிதிநம் கோடிப்ராமஹணபோஜநம்.
ச்ரத்த்தயா பரயா குர்யாத் ஸஹஸ்ரம் பரிவத்ஸராந். 11

தத்புண்யம் கோடிகுணிதம் லபேத் புண்யமநுத்தமம்.
ரஹஸ்யநாம ஸாஹஸ்ரே நாம்நோம்யேகஸ்ய கீர்த்தநாத். 12

ரஹஸ்யநாமஸாஹஸ்ரே நாமைகமபி யஃ படேத்.
தஸ்ய பாபாநி நச்யந்தி மஹாந்த்யபி ந ஸம்சயஃ 13

நித்யகர்மாநநுஷ்டடாநாத் நிக்ஷித்த கரணாதபி.
யத்பாபம் ஜாயேத பும்ஸாம் தத்ஸர்வம் நச்யதி த்ருவம் 14

பஹுநாத்ர கிமுக்தேந ச்ருணு த்வம் கும்ப்பஸம்பவ.
அத்ரைகநாம்நோ யா சக்திஃ பாதகாநாம் நிவர்த்தநே.
தந்நிவர்த்யமகம் கர்த்தும் நாலம் லோகாச்சதுர்தச. 15

**யஸ் த்யக்த்வா நாமஸாஹஸ்ரம் பாபஹாநிமபீப்ஸதி.**
**ஸ ஹி சீதநிவ்ருத்யர்த்தம் ஹிமசைலம் நிஷேவதே. 16**

**பக்தோ ய: கீர்த்தயேந் நித்யம் இதம் நாமஸஹஸ்ரகம்.**
**தஸ்மை ஸ்ரீ லலிதாதேவீ ப்ரீதா (அ)பீஷ்டம் ப்ரயச்ச்சதி. 17**

**அகீர்த்தயந்நிதம் ஸ்தோத்ரம் கதம் பக்தோ பவிஷ்யதி. 18**

2. காலையில் ஸ்னானம், ஸந்தியாவனம், ஸ்ரீசக்ர பூஜை, ஸ்ரீ வித்யாஜபம் இவைகளை முடித்துக் கொண்டு ஸஹஸ்ரநாம பாராயணம் செய்யலாம். கங்கை முதலிய நதிகளில் பல தடவை முறைப்படி நீராடுதல். காசியில் அவிமுக்த க்ஷேத்திரத்தில் கோடிலிங்கப் பிரதிஷ்டை, குருக்ஷேத்திரத்தில் கிரஹண காலத்தில் தானம், தங்க தானம், கங்கைக் கரையில் அசுவமேதம் செய்தல், நீர் வசதியற்ற இடங்களில் கிணறுகள் வெட்டுதல், பஞ்சம் தோன்றியபோது பல்லாண்டுகள் தொடர்ந்து அன்னதானம், இவற்றைவிடச் சிறந்த புண்ணியமளிக்கவல்லது. ஏதேனும் ஒரு நாமத்தை சிரத்தையுடன் சொல்வதால் பாபம் நீங்கும். பாபத்தை நீக்குவதில் நாமத்திற்குள்ள சக்தி இணையற்றது. பாபத்தை நீக்க இதனைவிட்டு வேறு உபாயம் தேடுபவன் முட்டாள். இதனைப் பாராயணம் செய்பவனுக்குத் தேவி விரும்பியதையளிப்பாள். இதனைப் பாராயணம் செய்யக்கூட இயலாதவன் தேவியிடம் எங்ஙனம் பக்தி வைப்பான்?(5-18)

नित्यं सङ्कीर्तनाशक्तः कीर्तयेत्पुण्यवासरे ।
संक्रान्तौ विषुवे चैव स्वजन्मत्रितयेऽयने ॥ 19 ॥
नवम्यां वा चतुर्दश्यां सितायां शुक्रवासरे ।
कीर्तयेन्नामसाहस्रं पौर्णमास्यां विशेषतः ॥ 20 ॥

**நித்யம் ஸங்கீர்த்தநாசக்த: கீர்த்தயேத் புண்யவாஸரே.**
**ஸங்க்ராந்தௌ விஷுவே சைவ ஸ்வஜந்மத்ரிதயே(அ)யநே.19**

**நவம்யாம் வா சதுர்தச்யாம் ஸிதாயாம் சுக்ரவாஸரே.**
**கீர்த்தயேந் நாமஹஸ்ரம் பௌர்ணமாஸ்யாம் விசேஷத: 20**

3. தினமும் பாராயணம் செய்யமுடியாவிடினும், புண்ய நாட்கள், மாதப்பிறப்பு, ஜன்ம-அனுஜன்ம-திரிஜன்ம நக்ஷத்திரங்கள், அயன புண்யகாலம், நவமி, சதுர்தசி, பௌர்ணமி, வெள்ளிக்கிழமை இவைகளிலாவது பாராயணம் செய்யலாம். (தான் பிறந்த நக்ஷத்திரம் ஜன்ம நக்ஷத்திரம் அதிலிருந்து 10வது அனுஜன்ம நக்ஷத்திரம், அதிலிருந்து

10வது திரிஜன்ம நக்ஷத்திரம், அசுவதிக்கு மகமும் மூலமும், பரணிக்குப் பூரமும் பூராடமும், பூராடத்திற்குப் பரணியும் பூரமும், பூரத்திற்குப் பூராடமும் பரணியும் என்றவாறு.) (19-20)

पौर्णमास्यां चन्द्रबिम्बे ध्यात्वा श्रीललिताम्बिकाम् ।
पञ्चोपचारैः सम्पूज्य पटेन्नामसहस्रकम् ॥ 21 ॥

सर्वे रोगाः प्रणश्यन्ति दीर्घमायुश्च विन्दति ।
अयमायुष्करो नाम प्रयोगः कल्पनोदितः ॥ 22 ॥

ज्वरार्तं शिरसि स्पृष्ट्वा पठेन्नामसहस्रकम् ।
तत्क्षणात्प्रशमं याति शिरस्तोदो ज्वरोऽपि च ॥ 23 ॥

सर्वव्याधिनिवृत्त्यर्थं स्पृष्ट्वा भस्म जपेदिदम् ।
तद्भस्मधारणादेव नश्यन्ति व्याधयः क्षणात् ॥ 24 ॥

जलं संमन्त्र्य कुम्भस्थं नामसाहस्रतो मुने ।
अभिषिञ्चेद्ग्रहग्रस्तान्ग्रहा नश्यन्ति तत्क्षणात् ॥ 25 ॥

सुधासागरमध्यस्थां ध्यात्वा श्रीललिताम्बिकाम् ।
यः पठेन्नामसाहस्रं बिषं तस्य विनश्यति ॥ 26 ॥

वन्ध्यानां पुत्रलाभाय नामसाहस्रमन्त्रितम् ।
नवनीतं प्रद्यात्तु पुत्रलाभो भवेद्ध्रुवम् ॥ 27 ॥

பௌர்ணமாஸ்யாம் சந்த்ரபிம்பே த்யாத்வா ஸ்ரீ லலிதாம்பிகாம்.
பஞ்சோபசாரைஸ்ஸம்பூஜ்ய படேந் நாமஸஹஸ்ரகம். 21

ஸர்வே ரோகா: ப்ரணச்யந்தி தீர்க்கமாயுச்ச விந்ததி.
அயமாயுஷ்கரோ நாம ப்ரயோக: கல்பநோதித: 22

ஜ்வரார்த்தம் சிரஸி ஸ்ப்ருஷ்ட்வா படேந் நாமஸஹஸ்ரகம்.
தத்க்ஷணாத் ப்ரசமம் யாதி சிரஸ்தோதோ ஜ்வரோபி ச. 23

ஸர்வவ்யாதி நிவ்ருத்த்யர்த்தம் ஸ்ப்ருஷ்ட்வா பஸ்ம ஜபேதிதம்.
தத்பஸ்மதாரணாதேவ நச்யந்தி வ்யாதய: க்ஷணாத். 24

ஜலம் ஸம்மந்த்ர்ய கும்பஸ்த்தம் நாமஸாஹஸ்ரதோ முநே.
அபிஷிஞ்சேத் க்ரஹக்ரஸ்தாந் க்ரஹா நச்யந்தி தத்க்ஷணாத் 25

ஸுதாஸாகரமத்யஸ்த்தாம் த்த்யாத்வா ஸ்ரீலலிதாம்பிகாம்.
ய: படேந் நாமஸாஹஸ்ரம் விஷம் தஸ்ய விநச்யதி. 26

**வந்த்யாநாம் புத்ரலாபாய நாமஸாஹஸ்ரமந்த்ரிதம்.**
**நவநீதம் ப்ரதத்யாத்து புத்ரலாபோ பவேத் த்ருவம். 27**

4. பௌர்ணமியன்று சந்திரபிம்பத்தில் தேவியைத் தியானம் செய்து வழிபட்டு இதைப் படிக்க நோய்கள் நீங்கும். நீண்ட ஆயுள் பெறலாம். இதனை **ஆயுஷ்கப்ரயோகம்** என்பர். ஜ்வர நோயுள்ளவனின் தலையைத் தொட்டுக் கொண்டு இதனைப் படிக்க ஜ்வரம் நீங்கும். திருநீற்றைத் தொட்டுக்கொண்டு இதனைப் பாராயணம் செய்தபின் அந்தத் திருநீற்றை இட்டுக்கொள்ள எல்லா நோய்களும் நீங்கும். குடத்தில் ஜலம் நிரப்பி அதனைத் தொட்டுக் கொண்டு இதனைப் பாராயணம் செய்து அந்த நீரால் ஸ்னானம் செய்துவைக்க பூத-பிரேத-பிசாச உபாதைகள் விலகும். அமுதக் கடலின் நடுவில் உள்ளவளாகத் (நா.61) தேவியைத் தியனாம் செய்து இதனைப் படிக்க விஷம் நீங்கும். வெண்ணெயை இதனால் மந்திரித்துக் கொடுக்கப் பிள்ளைப் பேறு கிட்டுகும். (21-27)

देव्याः पाशेन सम्बद्धामाकृष्टामङ्कुशेन च ।
ध्यात्वाभीष्टां स्त्रियं रात्रौ जपेन्नामसहस्रकम् ॥ 28 ॥

आयाति स्वसमीपं सा यद्यप्यन्तःपुरं गता ।
राजकर्षणकामश्चेद्राजावसथदिङ्मुखः ॥ 29 ॥

त्रिरात्रं यः पठेदेतत् श्रीदेवीध्यानतत्परः ।
स राजा पारवश्येन तुरङ्गं वा मतङ्गजम् ॥ 30 ॥

आरुह्यायाति निकटं दासवत्प्रणिपत्य ॥
तस्मै राज्यं च कोशं च ददात्येव वशं गतः ॥ 31 ॥

रहस्यनामसाहस्रं यः कीर्तयति नित्यशः ।
तन्मुखालोकमात्रेण मुह्येल्लीकत्रयं मुने ॥ 32 ॥

यस्त्विदं नामसाहस्रं सकृत्पटति भक्तिमान् ।
तस्य ये शत्रवस्तेषां निहन्ता भारभेश्वरः ॥ 33 ॥

यो वाभिचारं कुरुते आमसाहस्रपाठके ।
निवर्त्य तत्क्रियां हन्यात्तं वै प्रत्यङ्गिरा स्वयम् ॥ 34 ॥

ये क्रूरदृष्ट्या वीक्षन्ते नामसाहस्रपाटकम् ।
तानान्धन्कुरुते क्षिप्रं स्वयं मार्तण्डभारवः ॥ 35 ॥

धनं यो हरते चौरैर्नामसाहस्रजापिनः ।
यत्र कुत्र स्थितं वापि क्षेत्रपालो निहन्ति तम् ॥ 36 ॥

विद्यासु कुरुते वादं या विद्वान्नामजापिनः ।
तस्य वाक्स्तंभनं सद्यः करोति नकुलेश्वरी ॥ 37 ॥
यो राजा कुरुते वैरं नामसाहस्रजापिनः ।
चतुरङ्गवलं तस्य दण्डिनी संहरेत्स्वयम् ॥ 38 ॥

தேவ்யாः பாசேந ஸம்பத்தாமாக்ருஷ்டாமங்குசேந ச.
த்யாத்வாபீஷ்டாம் ஸ்த்ரியம் ராத்ரௌ ஜபேந்நாமஸஹஸ்ரகம்.28

ஆயாதி ஸ்வஸமீபம் ஸா யத்யப்யந்தःபுரம் கதா.
ராஜாகர்ஷணகாமச்சேத் ராஜாவஸத திங்முகः. 29

த்ரிராத்ரம் யः படேதேத் ஸ்ரீதேவீத்யாநதத்பரः.
ஸ ராஜா பாரவச்யேந துரங்கம் வா மதங்கஜம். 30

ஆருஹ்யாயாதி நிகடம் தாஸவத் ப்ரணிபத்ய ச.
தஸ்மை ராஜ்யம் ச கோசம் ச ததாத்யேவ வசம் கதः. 31

ரஹஸ்யநாமஸாஹஸ்ரம் யः கீர்த்தயதி நித்யசः
தந்முகாலோகமாத்ரேண முஹ்யேல் லோகத்ரயம் முநே. 32

யஸ்த்விதம் நாமஸாஹஸ்ரம் ஸக்ருத் படதி பக்திமாந்.
தஸ்ய யே சத்ரவஸ்தேஷாம் நிஹந்தா சரபேச்வரः. 33

யோ வாபிசாரம் குருதே நாம ஸாஹஸ்ரபாடகே.
நிவர்த்ய தத்க்ரியாம் ஹந்யாத் தம் வை ப்ரத்யங்கிராः ஸ்வயம் 34

யே க்ரூரத்ருஷ்ட்யா வீக்ஷந்தே நாமஸாஹஸ்ர பாடகம்.
தாநந்தாந் குருதே க்ஷிபரம் ஸ்வயம் மார்த்தண்ட வைரவः. 35

தநம் யோ ஹரதே சோரைः நாமஸாஹஸ்ரஜாபிநः
யத்ர குத்ர ஸ்திதம் வாபி க்ஷேத்ரபாலோ நிஹந்தி தம். 36

வித்யாஸு குருதே வாதம் யோ வித்வாந் நாமஜாபிநः.
தஸ்ய வாக்ஸ்தம்பநம் ஸத்யः கரோதி நகுலேச்வரீ. 37

யோ ராஜா குருதே வைரம் நாமஸாஹஸ்ரஜாபிநः
சதுரங்கபலம் தஸ்ய தண்டிநீ ஸம்ஹரேத் ஸ்வயம். 38

5. ஸ்திரீவசியம், ராஜவசியம், லோகவசியம், சத்ருவசியம் செய்யவும், ஆபிசாரம், பார்வை தோஷம் திருட்டால் பொருள் நாசம் முதலியவைகளுக்குப் பரிஹாரமாகவும் இதனைப் பாராயணம் செய்யலாம். தேவீ பக்தனிடம் வாதிடுபவரை நாகுலிதேவீ வாக்ஸ்தம்பம் (பேசமுடியாமல்) செய்து அடக்கி விடுவாள். அரசனே ஸேனைகளுடன் எதிர்த்தாலும் தோல்வியுறுவான். ஸஹஸ்ரநாமத்தின் சக்தி அத்தகையது. (28-38)

यः पठेन्नामसाहस्रं षण्मासं भक्तिसंयुतः ।
लक्ष्मीश्चाञ्चलयरहिता सदा तिष्ठति तद्गृहे ॥ 39 ॥

मासमेकं प्रतिदिनं त्रिवारं यः पठेन्नरः ।
भारती तस्य जिह्वाग्रे रङ्गे नृत्यति नित्यशः ॥ 40 ॥

यस्त्वेकवारं पठति पक्षमेकमतन्द्रितः ।
मुह्यति कामवशगा मृगाक्ष्यस्तस्य वीक्षणात् ॥ 41 ॥

यः पठेन्नामसाहस्रं जन्ममध्ये सकृन्नरः ।
तद्दृष्टिगोचरास्सर्वे मुच्यन्ते सर्वकिल्बिषैः ॥ 42 ॥

**யஃ படேந் நாமஸாஹஸ்ரம் ஷண்மாஸம் பக்திஸம்யுதஃ**
**லக்ஷ்மீச் சாஞ்சல்யரஹிதா ஸதா திஷ்டதி தத்க்ருஹே. 39**

**மாஸமேகம் ப்ரதிதிநம் த்ரிவாரம் யஃ படேந் நரஃ.**
**பாரதீ தஸ்ய ஜிஹ்வாக்ரே ரங்கே ந்ருத்யதி நித்யசஃ 40**

**யஸ் த்வேகவாரம் படதி பக்ஷமேகமதந்த்ரிதஃ.**
**முஹ்யந்தி காமவசகா ம்ருகாக்ஷ்யஸ் தஸ்ய வீக்ஷணாத்.41**

**யஃ படேந்நாமஸாஹஸ்ரம் ஜந்ம மத்யே ஸக்ருந்நரஃ.**
**தத் த்ருஷ்டிகோசராஃ ஸர்வே முச்யந்தே ஸர்வகில்பிஷைஃ.42**

6. ஆறு மாதங்கள் தொடர்ந்து படிக்க லக்ஷ்மீ அவன் வீட்டில் நிலைத்துத் தங்குவாள். ஒருமாதம் தினம் 3 தடவை படிக்க வாக்தேவி அவன் நாக்கின் நுனியில் தாண்டவமாடுவாள். பாராயணம் செய்பவன் திருஷ்டிபட்டால் பாபம் நீங்கும். (39-42)

यो वेत्ति नामसहस्रं तस्मै देयं द्विजन्मने ।
अन्नं वस्त्रं धनं धान्यं नान्येभ्यस्तु कदाचन ॥43 ॥
श्रीमन्त्रराजं यो वेत्ति श्रीचक्रं यः समर्चति ।
यः कीर्तयति नामानि तं सत्पात्रं विदुर्बुधाः ॥44 ॥
तस्मै देयं प्रयत्नेन श्रीदेवीप्रीतिमिच्छता ॥ 45 ॥
न कीर्तयति नामानि मन्त्रराजं न वेत्ति यः ।
पशुतुल्यः स विज्ञेयस्तस्मै दत्तं निरर्थकम् ।
परीक्ष्य विद्याविदुषस्तेभ्यो दद्याद्विचक्षणः ॥46 ॥
श्रीमन्त्रराजसदृशो यथा मन्त्रो न विद्यते ।
देवता ललितातुल्या यथा नास्ति घटोद्भव ॥47 ॥
रहस्यनामसाहस्रतुल्या नास्ति तथा स्तुतिः ।
लिखित्वा पुस्तके यस्तु नामसाहस्रमुत्तमम् ॥48 ॥
समर्चयेत्सदा भक्त्या तस्य तुष्यति सुन्दरी ।
बहुनात्र किमुक्तेन शृणु त्वं कुम्भसम्भव ॥49 ॥
नानेन सदृशं स्तोत्रं सर्वतन्त्रेषु विद्यते ।
तस्मादुपासको नित्यं कीर्तयेदिदमादरात् ॥50 ॥
एभिर्नामसहस्रैस्तु श्रीचक्रं योऽर्चयेत्सकृत् ।
पद्मैर्वा तुलसीपुष्पैः कल्हारैर्वा कदम्बकैः ॥51 ॥
चम्पकैर्जातिकुसुमैः मल्लिकाकरवीरकैः ।
उत्पलैर्बिल्वपत्रैर्वा कुन्दकेसरपाटलैः ॥52 ॥
अन्यैः सुगन्धिकुसुमैः केतकीमाधवीमुखैः ।
तस्य पुण्यफलं वक्तुं न शक्नोति महेश्वरः ॥53 ॥
सा वेत्ति ललितादेवी स्वचक्रार्चनजं फलम् ।
अन्ये कथं विजानीयुर्ब्रह्माद्याः स्वल्पमेधसः ॥54 ॥
प्रतिमासं पौर्णमास्यामेभिर्नामसहस्रकैः ।
रात्रौ यश्चक्रराजस्थामर्चयेत्परदेवताम् ॥55 ॥

स एव ललितारूपस्तद्रूपा ललिता स्वयम् ।
न तयोर्विद्यते भेदो भेदकृत्पापकृद्भवेत् ॥ 56 ॥

महानवम्यां यो भक्तः श्रीदेवीं चक्रमध्यगाम् ।
अर्चयेन्नामसाहस्रैस्तस्य मुक्तिः करे स्थिता ॥ 57 ॥

यस्तु नामसहस्रेण शुक्रवारे समर्चयेत् ।
चक्रराजे महादेवीं तस्य पुण्यफलं शृणु ॥ 58 ॥

सर्वान्कामानवाप्येह सर्वसौभाग्यसंयुतः ।
पुत्रपौत्रादिसंयुक्तो भुक्त्वा योगान्यतेप्सितान् ॥ 59 ॥

अन्ते श्रीललितादेव्याः सायुज्यमतिदुर्लभम् ।
प्रार्थनीयं शिवाद्यैश्च प्राप्नोत्येव न संशयः ॥ 60 ॥

यः सहस्रं ब्राह्मणानामेभिर्नामसहस्रकैः ।
समर्च्य भोजयेद्भक्त्या पायसापूपषड्रसैः ॥ 61 ॥

तस्मै प्रीणाति ललति स्वसाम्राज्यं प्रयच्छति ।
न तस्य दर्लभं वस्तु त्रिषु लोकेषु विद्यते ॥ 62 ॥

யோ வேத்தி நாமஸாஹஸ்ரம் தஸ்மை தேயம் த்விஜந்மநே.
அந்நம் வஸ்த்ரம் தநம் தாந்யம் நாந்யேப்ப்யஸ்து கதாசந.43

ஶ்ரீமந்த்ரராஜம் யோ வேத்த ஶ்ரீசக்ரம் யஃ ஸமர்ச்சதி.
யஃ கீர்த்தயதி நாமாநி தம் ஸத்பாத்ரம் விதுர்புதாஃ. 44

தஸ்மை தேயம் ப்ரயத்நேந ஶ்ரீதேவீப்ரீதிமிச்சதா. 45

ந கீர்த்தயதி நாமாநி மந்த்ரராஜம் ந வேத்தி யஃ.
பசுதுல்யஃ ஸ விஜ்ஞேயஃ தஸ்மை தத்தம் நிரர்த்தகம்.
பரீக்ஷ்ய வித்யவிதுஷஃ தேப்யோ தத்யாத் விசக்ஷணஃ. 46

ஶ்ரீமந்த்ரராஜ ஸத்ருசோ யதா மந்த்ரோ ந வித்யதே.
தேவதா லலிதாதுல்யா யதா நாஸ்தி கடோத்பவ. 47

ரஹஸ்யநாமஸாஹஸ்ரதுல்யா நாஸ்தி ததா ஸ்துதிஃ.
லிகித்வா புஸ்தகே யஸ்து நாமஸஹஸ்ர முத்தமம். 48

ஸமர்ச்சயேத் ஸதா பக்த்யா தஸ்ய துஷ்யதி ஸுந்தரி.
பஹுநாத்ர கிமுக்தேந ச்ருணு த்வம் கும்பஸம்பவ. 49

நாநேந ஸத்ருசம் ஸ்தோத்ரம் ஸர்வதந்த்ரேஷு வித்யதே.
தஸ்மாதுபாஸகோ நித்யம் கீர்த்தயேதித மாதராத். 50

ஏபிர் நாமஸஹஸ்ரைஸ்து ஶ்ரீசக்ரம் யோ(அ)ர்ச்சயேத் ஸக்ருத்.
பத்மைர்வா துளஸீ புஷ்பை: கல்ஹாரைர் வா கதம்பகை:. 51

சம்பகைர் ஜாதிகுஸுமை: மல்லிகாகரவீரகை:
உத்பலைர் பில்வபத்ரைர்வா குந்தகேஸர பாடலை:. 52

அந்யை: ஸுகந்திகுஸுமை: கேதகீமாதவீமுகை:.
தஸ்ய புண்யபலம் வக்தும் ந சக்நோதி மஹேச்வர:. 53

ஸா வேத்தி லலிதாதேவீ ஸ்வசக்ரார்ச்சநஜம் பலம்.
அந்யே கதம் விஜாநீயு: ப்ரஹ்மாத்யா: ஸ்வல்பமேதஸ:. 54

ப்ரதிமாஸம் பௌர்ணமாஸ்யாம் ஏபிர் நாம ஸஹஸ்ரகை:.
ராத்ரௌ ய: சக்ரராஜஸ்த்தாமர்ச்சயேத் பரதேவதாம். 55

ஸ ஏவ லலிதாரூபஸ் தத்ரூபா லலிதா ஸ்வயம்.
ந தயோர் வித்யதே பேதோ பேதக்ருத் பாபக்ருத்பவேத் 56

மஹாநவம்யாம் யோ பக்த: ஶ்ரீ தேவீம் சக்ரமத்த்யகாம்.
அர்ச்சயேந் நாமஸாஹஸ்ரை: தஸ்ய முக்தி: கரே ஸ்திதா. 57

யஸ்து நாமஸஹஸ்ரேண சுக்ரவாரே ஸமர்ச்சயேத்.
சக்ரராஜே மஹாதேவீம் தஸ்ய புண்யபலம் ச்ருணு. 58

ஸர்வாந் காமாநவாப்யேஹ ஸர்வ ஸௌபாக்ய ஸம்யுத:.
புத்ர பௌத்ராதி ஸம்யுக்தோ புக்த்வா போகாந் யதேப்ஸிதாந்.
59

அந்தே ஶ்ரீ லலிதாதேவ்யா: ஸாயுஜ்ய மதிதுர்லபம்.
ப்ரார்த்தநீயம் சிவாத்யைச்ச ப்ராப்நோத்யேவ ந ஸம்சய:. 60

ய: ஸஹஸ்ரம் ப்ராஹ்மணாநாம் ஏபிர் நாம ஸஹஸ்ரகை:
ஸமர்ச்ய போஜயேத் பக்த்யா பாயஸாபூப ஷட்ரஸை:. 61

**தஸ்மை ப்ரீணாதி லலிதா ஸ்வஸாம்ராஜ்யம் ப்ரயச்சதி.**
**ந தஸ்ய துர்லபம் வஸ்து த்ரிஷு லோகேஷு வித்யதே. 62**

7. பாராயணம் செய்துவருபவனுக்கு அன்னம் வஸ்திரம் முதலியவைகளைக் கொடுத்தால தேவி திருப்தியடைவாள். ஸ்ரீவித்யையைப் போல் மந்திரமோ. ஸ்ரீலலிதா தேவியைப்போல் தேவதையோ, இதனைப்போல் ஸ்துதியோ உலகில் இல்லை. இந்த நாமங்களால் ஸ்ரீ சக்கிரத்தில் தாமரை, துளசி, கழுநீர்ப்பூ, கடம்பப்பூ, சம்பகப்பூ, ஜாதிப்பூ, மல்லிகைப்பூ, அரளிப்பூ, அல்லிப்பூ, பில்வதளம், முல்லைப்பூ, பாதிரிப்பூ, தாழம்பூ முதலிய மணமுள்ள பூக்களால் அர்ச்சனை செய்யத் தேவியின் அருள் எளிதில் கிட்டும். பௌர்ணமி இரவு, மஹாநவமி (ஸரஸ்வதி பூஜைநாள்) வெள்ளிக்கிழமை இந்நாட்களில் ஸ்ரீ சக்கிரத்தில் தேவியை இந்த நாமங்களால் அர்ச்சனை செய்யத் தேவி அவனது எல்லா விருப்பங்களையும் நிறைவேற்றுவாள். ஆயிரம் நாமங்களால் ஆயிரம் அந்தணர்களைத் தேவியாக வரித்து வழிபட்டு இனிய உணவளிக்கத் தேவியின் அருளால் விரும்பியதெல்லாம் கிட்டும். (43-62)

निष्कामः कीर्तयेद्यस्तु नामसाहस्रमुत्तमम् ।
ब्रह्मज्ञानमवाप्नोति येन मुच्येत बन्धनात् ॥ 63 ॥

धनार्थी धनमाप्नोति यशोऽर्थी प्राप्नुयाद्यशः ।
विद्यार्थी चाप्नुयाद्विद्यां नामसाहस्रकीर्तनात् ॥ 64 ॥

नानेन सदृशं स्तोत्रं भोगमोक्षप्रदं मुने ।
कीर्तनीयमिदं तस्माद्भोगमोक्षार्थिभिर्नरैः ॥ 65 ॥

चतुराश्रमनिष्ठैश्च कीर्तनीयमिदं सदा ।
स्वधर्मसमनुष्ठानवैकल्यपरिपूर्तये ॥ 66 ॥

कलौ पापैकबहुले धर्मानुष्ठानवर्जिते ।
नामानुकीर्तनं मुक्त्वा नृणां नान्यत्परायणम् ॥ 67 ॥

**நிஷ்காம: கீர்த்தயேத் யஸ்து நாமஸாஹஸ்ர முத்தமம்.**
**ப்ரஹ்மஜ்ஞாந மவாப்நோதி யேந முச்யேத பந்தநாத் 63**

**தநார்த்தீ தநமாப்நோதி யசோர்த்தீ ப்ராப்நுயாத் யச:**
**வித்யார்த்தீ சாப்நுயாத் வித்யாம் நாமஸாஹஸ்ர**
**கீர்த்தநாத். 64**

**நாநேந ஸத்ருசம் ஸ்தோத்ரம் போகமோக்ஷ ப்ரதம் முநே.**
**கீர்த்தநீயமிதம் தஸ்மாத் போக மோக்ஷார்த்திபிர் நரை:.65**

**சதுராச்ரம நிஷ்டைச்ச கீர்த்தநீயமிதம் ஸதா.**
**ஸ்வதர்ம ஸமநுஷ்ட்டான வைகல்ய பரிபூர்த்தயே. 66**

**கலௌ பாபைக பஹுலே தர்மாநுஷ்ட்டாந வர்ஜிதே.**
**நாமாநுகீர்த்தநம் முக்த்வா ந்ருணாம் நாந்யத் பராயணம். 67**

8. யாதொரு விருப்பமுமின்றி தேவிப்பிரீதிக்கெனவே பாராயணம் செய்ய பிரும்ம ஜ்ஞானத்தை அருளிப் பந்தத்திலிருந்தும் விடுவிப்பாள். செல்வத்தை விரும்புபவன் செல்வத்தையும், புகழை விரும்புபவன் புகழையும், கல்வியை நாடுபவன் கல்வியையும் பெறுவான். இம்மையில் சுகத்தையும் மோக்ஷத்தையும் ஒருங்கே அளிக்க வல்ல சிறந்த ஸாதனம் இது. தத்தம் தருமங்களை ஒழுங்காகக் கடைபிடிக்க இயலாதவர், தர்மத்திலிருந்து வழுவியதால் ஏற்படும் பாபம் நீங்கி தர்மானுஷ்டானம் நிறைவுற இதனைப் பாராயணம் செய்வது நல்லது. கலியில் இதனைவிடச் சிறந்த பற்றுக்கோல் வேறில்லை. (63-67)

लौकिकाद्वचनान्मुख्यं विष्णुनामानुकीर्तनम् ।
विष्णुनामसहस्राच्च देव्या नामैकमुत्तमम् ॥ 68 ॥

शिवनामसहस्राच्च देव्या नामैकमुत्तमम् ।
देवीनामसहस्राणि कोटिशः सन्ति कुम्भज ॥ 69 ॥

तेषु मुख्यं दशविधं नाम साहस्रमुच्यते ।
रहस्यनामसाहस्रमिदं शस्तं दशस्वपि ॥ 70 ॥

तस्मात्सङ्कीर्तयेन्नित्यं कलिदोषनिवृत्तये ।
मुख्यं श्रीमातृनामेति न जानन्ति विमोहिताः ॥ 71 ॥

विष्णुनामपराः केचिच्छिवनामपराः परे ।
न कश्चिदपि लोकेषु ललितानामतत्परः ॥ 72 ॥

येनान्यदेवतानाम कीर्तितं जन्मकोटिषु ।
तस्यैव भवति श्रद्धा श्रीदेवीनामकीर्तने ॥ 73 ॥

चरमे जन्मनि यथा श्रीविद्योपासको भवत् ।
नामसाहस्रपाठश्च तथा चरमजन्मनि ॥ 74 ॥

यथैव विरला लोके श्रीविद्याचारवेदिनः ।
तथैव विरलो गुह्यनामसाहस्रपाठकः ॥ 75 ॥
मन्त्रराजजपश्चैव चक्रराजार्चनं तथा ।
रहस्यनामपाटश्च नाल्पस्य तपसः फलम् ॥ 76 ॥
अपठन्नामसाहस्रं प्रीणयेद्यो महेश्वरीम् ।
स चक्षुषा विना रूपं पश्येदेव विमूढधीः ॥ 77 ॥
रहस्यनामसाहस्रं त्यक्त्वा यः सिद्धिकामुकः ।
स भोजनं विना नूनं क्षुन्निवृत्तिमभीप्सति ॥ 78 ॥
यो भक्तो ललितादेव्याः स नित्यं कीर्तयेदिदम् ।
नान्यथा प्रीयते देवी कल्पकोटिशतैरपि ॥ 79 ॥
तस्माद्रहस्यनामानि श्रीमातुः प्रयतः पठेत् ।
इति ते कथितं स्तोत्रं रहस्यं कुम्भसम्भव ॥ 80 ॥

லௌகிகாத் வசநாத் முக்க்யம் விஷ்ணுநாமாநுகீர்த்தநம்.
விஷ்ணுநாம ஹஸ்ராச்ச தேவ்யா நாமைக முத்தமம். 68

சிவநாம ஸஹஸ்ராச்ச தேவ்யா நாமைகமுத்தமம்.
தேவீ நாம ஸஹஸ்ராணி கோடிச: ஸந்தி கும்ப்பஜ. 69

தேஷு முக்க்யம் தசவிதம் நாமஸாஹஸ்ர முச்யதே.
ரஹஸ்யநாமஸாஹ்ஸ்ரம் இதம் சஸ்தம் தசஸ்வபி. 70

தஸ்மாத் ஸங்கீர்தயேந் நித்யம் கலிதோஷ நிவ்ருத்தயே.
முக்யம் ஸ்ரீ மாத்ருநாமேதி ந ஜாநந்தி விமோஹிதா:. 71

விஷ்ணு நாமபரா: கேசித் சிவநாமபரா: பரே.
ந கச்சிதபி லோகேஷு லலிதாநாம தத்பர:. 72

யேநாந்ய தேவதா நாம கீர்த்திதம் ஜந்மகோடிஷு.
தஸ்யைவ பவதி ச்ரத்தா ஸ்ரீதேவீ நாமகீர்த்தநே. 73

சரமே ஜந்மநி யதா ஸ்ரீவித்யோபாஸகோ பவேத்.
நாமஸாஹஸ்ரபாடச்ச ததா சரமஜந்மநி. 74

யதைவ விரளா லோகே ஸ்ரீவித்யாசாரவேதிந:
ததைவ விரளோ குஹ்ய நாமஸாஹஸ்ர பாடக:. 75

மந்த்ரராஜ ஜபச்சைவ சக்ரராஜார்ச்சநம் ததா.
ரஹஸ்யநாமபாடச்ச நால்பஸ்ய தபஸ: பலம். 76

**அபடந் நாமஸாஹஸ்ரம் ப்ரீணயேத் யோ மஹேச்வரீம்.**
**ஸ சக்ஷுஷா விநா ரூபம் பச்யேதேவ விமூடதீ:. 77**

**ரஹஸ்யநாம ஸாஹஸ்ரம் த்யக்த்வா ய: ஸித்திகாமுக:.**
**ஸ போஜநம் விநா நூநம் க்ஷுந்நிவ்ருத்தமபீப்ஸதி. 78**

**யோ பக்தோ லலிதாதேவ்யா: ஸ நித்யம் கீர்த்தயேதிதம்.**
**நாந்யதா ப்ரீயதே தேவீ கல்பகோடிசதைரபி. 79**

**தஸ்மாத் ரஹஸ்ய நாமாநி ஸ்ரீ மாது: ப்ரயத: படேத்**
**இதி தே கதிதம்ஸ்தோத்ரம்ரஹஸ்யம் கும்பஸம்பவ. 80**

9. மற்ற தேவதைகளின் ஸஹஸ்ரநாமங்களைக் காட்டிலும் தேவியின் பத்து ஸஹஸ்ர நாமங்களைக் காட்டிலும்[1] இது சிறந்தது. ஆயிரம் நாமங்களிலும் ஸ்ரீமாதா என்ற நாமம் மிகச் சிறந்தது. புண்யபலத்தால்தான் இதனைப் பாராயணம் செய்யும் வாய்ப்பு கிட்டும். கடைசிப் பிறவியாக இருந்தால் மட்டுமே ஸ்ரீவித்யா ஜபமும் ஸஹஸ்ரநாம பாராயணமும் செய்ய வாய்ப்பு கிட்டும். பெருந்தவத்தின் விளைவாக அந்தக் கடைசிப் பிறவி கிட்டியிருக்கும். வேறு வழிபாட்டு முறைகளால் தேவியைத் திருப்தியடுத்த முடியாது. அதனால் இதனைத் தினமும் பக்தியுடனும் சிரத்தையுடனும் பாராயணம் செய்ய வேண்டும். (68-80)

नाविद्यावेदिने ब्रूयान्नाभक्ताय कदाचन ।
यथैव गोप्या श्रीविद्या तथा गोप्यमिदं मुने ॥ 81 ॥

पशुतुल्येषु न ब्रूयाज्जनेषु स्तोत्रमुत्तमम् ।
यो ददाति विमूढात्मा श्रीविद्यारहिताय तु ॥ 82 ॥

तस्मै कुप्यन्ति योगिन्यः सोऽनर्थः सुमहान्स्मृतः ।
रहस्यनामसाहस्रं तस्मात्सङ्गोपयेदिदम् ॥ 83 ॥

**நாவித்யாவேதிநே ப்ரூயாந் நாபக்தாய கதாசந.**
**யதைவ கோப்யா ஸ்ரீவித்யா ததா கோப்யமிதம் முநே. 81**

---

1. கங்கா, காயத்ரீ, சியாமளா, லக்ஷ்மீ, காளீ, பாலா, லலிதா, ராஜராஜேச்வரி, சரஸ்வதி, பவானி என்ற 10 அவை. இவற்றில் குறிப்பிடப்பெற்றுள்ள லலிதாஸஹஸ்ரநாமம் வேறு. வாக்தேவிகள் கூறிய இந்த ஸஹஸ்ரநாமம் ஸ்ரீ லலிதா ரஹஸ்ய ஸஹஸ்ரநாமம் என்று சிறப்புப் பெயர் பெற்றது.

**பசுதுல்யேஷு ந ப்ரூயாத் ஜநேஷு ஸ்தோத்ரமுத்தமம்.**
**யோ ததாதி விமூடாத்மா ஸ்ரீவித்யாரஹிதாய து. 82**

**தஸ்மை குப்யந்தி யோகிந்ய: ஸோ(அ) நர்த்த: ஸுமஹாந் ஸ்ம்ருத:.**
**ரஹஸ்யநாமஸாஹஸ்ரம் தஸ்மாத் ஸங்கோபயேதிதம். 83**

10. ஸ்ரீ தேவியிடம் பக்தியற்றவன், ஸ்ரீ வித்யை அறியாதவன், மிருகத் தன்மை கொண்டவன் இவர்களுக்கு இதனை உபதேசிக்கக்கூடாது. இதனை ரகசியமாகக் காப்பாற்ற வேண்டும்.

स्वतन्त्रेण मया नोक्तं तवापि कलशोद्भव ।
ललिताप्रेरणेनैव मयोक्तं स्तोत्रमुत्तमम् ॥ 84 ॥

कीर्तनीयमिदं भक्त्या कुम्भयोने निरन्तरम् ।
तेन तुष्टा महादेवी तावभीष्टं प्रदास्यति ॥ 85 ॥

श्रीसूत उवाच -
इत्युक्त्वा श्रीहयग्रीवो ध्यात्वा श्रीललितांभिकाम् ।
आनन्दमग्नहृदयः सद्यः पुलकितोऽभवत् ॥ 86 ॥

इति श्रीब्रह्माण्डपुराणे ललितोपख्याने श्रीहयग्रीवागस्त्यसंवादे
श्रीललितारहस्यसहस्रनामस्तोत्रं संपूर्णम्

**ஸ்வதந்த்ரேண மயா நோக்தம் தவாபி கலசோத்பவ.**
**லலிதாப்ரேரணேநைவ மயோக்தம் ஸ்தோத்ரமுத்தமம். 84**

**கீர்த்தநீயமிதம் பக்த்யா கும்ப்பயோநே நிரந்தரம்.**
**தேந துஷ்டா மஹாதேவீ தவாபீஷ்டம் ப்ரதாஸ்யதி. 85**

**ஸ்ரீஸூத உவாச-**
**இத்யுக்த்வா ஸ்ரீஹயக்ரீவோ த்த்யாத்வா ஸ்ரீலலிதாம்பிகாம்.**
**ஆநந்தமக்நஹ்ருதய: ஸத்ய: புலகிதோ(அ) பவத். 86**

11. தேவியின் அருளின்றி இதனைப் பெற முடியாது. நான் எனது சுய விருப்பத்தால் இதனை உமக்கு உபதேசித்தவனல்ல. தேவியின் ஆணை கிட்டியதாலேயே உபதேசித்தேன். இதனைப் பக்தியுடன் இடைவிடாமல் பாடி வாரும். தேவி மகிழ்ந்து நீர் கோரியதனைத்தையும் அருள்வாள்.

12. **ஸ்ரீஸூதர் கூறினார்:** இவ்வாறு கூறி வந்த ஹயக்கிரீவர் தேவியை உள்ளத்தில் கண்டவராக ஆனந்தப் பெருக்கில் அமிழ்ந்த உள்ளத்தினராக உடல் முழுவதும் மயிர் கூச்செரிந்தவராக ஆனார்.

**பிரும்மாண்ட புராணத்தில் லலிதோபாக்கியானத்தில்**
**ஹயக்கிரீவர்- அகஸ்தியர் ஸம்வாதமாக அமைந்ததில்**
**ஸ்ரீ லலிதாரஹஸ்ய ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரம் முற்றிற்று.**

* * *

**அதிகாரம் - 33**

**இணைப்பு - 1**

# ஸ்ரீ ஸஹஸ்ராக்ஷர வித்யா ஸ்தோத்திரம்

1. **முன்னுரை:** ஸ்ரீ சக்கிரராஜத்தில் அமர்ந்துள்ள ஸ்ரீலலிதாம்பிகையை ஆவரண தேவதைகளுடன் சேர்த்து ஐக்கிய பாவனையுடன் துதிப்பதற்கு இது ஏற்ற ஸ்தோத்தரமாகும். லலிதா பரிசிஷ்டம். வாமகேசுவரம் முதலிய தந்திரங்களில் தேவீ கட்கமாலா என்றதொரு ஸ்தோத்திரம் உண்டு. ஸஹஸ்ராக்ஷர வித்யையைப்போல் அதுவும் சற்றேறக்குறைய ஆயிரம் அக்ஷரங்கள் (1031 அக்ஷரங்கள்) கொண்டதே. ஸௌபாக்ய ஹ்ருதயம், சுத்த மாலா, சுத்த சக்தி ஸம்புத்த்யந்த மாலா என்று வேறு பெயர்களும் அதற்கு உண்டு. பெரும்பாலும் அமைப்பில் ஒற்றுமை காணப்பட்டாலும் சில அக்ஷரங்களில் மாறுபாட்டைக் கொண்டே இரண்டும் வேறுபட்டதென அறிந்தவர் கூறுவர். மந்திரத்தில் ஒரு எழுத்து வேறுபட்டாலும் வேறுபட்ட மந்திரம் எனக்கொள்வது மரபு. விரிந்த பிரயோக முறைகள் கொண்ட அது தந்திர வழிபாட்டிற்கு மிகவும் ஏற்றது. மந்திர உபதேச முறையில் பெறத்தக்கதும் கூட. இங்கு கொடுக்கப்படும் ஸஹஸ்ராக்ஷர வித்யா ஸ்தோத்திரம் லலிதா ஸஹஸ்ரநாமத்தை வெளியிட்ட பிரும்மாண்ட புராணத்தின் லலிதோபாக்கியானத்தில் உள்ளது.

2. ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமத்தின் பூர்வபாகத்தில் குறிப்பிட்ட (2.3.3) புரச்சரணப் பகுதியில் சிஷ்யனுக்குத் தீக்ஷை செய்து மந்திரத்தை உபதேசிக்குமுன் தேவியை பதினாறு உபசாரங்களால்[1] வழிபட்டுப் பின் பிரார்த்தனையுடன் அவளது அருள்கோரிப் புஷ்பாஞ்சலி செய்யப்பயன்படுத்தும்படி இதனை அகத்தியருக்கு உபதேசிக்கிறார்

---

1. ஆவாஹனம், ஆஸனம், பாத்தியம், அர்க்க்யம், ஆசமனம், ஸ்நானம், வஸ்திரதாரணம், ஆபரணதாரணம், சந்தனதாரணம், புஷ்பதாரணம், தூபம், தீபம், நைவேத்யம், தாம்பூலம், பிரதக்ஷிணம், நமஸ்காரம் என 16 உபசாரங்கள்.

ஹயக்கிரீவர். அத புஷ்பாஞ்சலிம் தத்யாத் ஸஹஸ்ராக்ஷர வித்யயா ஸ்ரீவித்யாஜபம், ஸ்ரீசக்கிரத்தில் நவாவரண பூஜை முதலியவை முடிந்ததும் பிரார்த்தனா-புஷ்பாஞ்சாலிக்காக இதனைக் கூறுவது வழக்கம்.

3. ஸ்ரீ சக்கிரத்தில் அல்லது மேருவில் ஒன்பது ஆவரணங்களிம் உள்ள சக்திகளுடன் தேவியை வழிபடுவது நவாவரண பூஜையாகும். அநதப் பூஜையின் கிரமத்தை ஒட்டியே இந்த ஸ்தோத்திரம் அமைந்துள்ளதால் ஐக்கிய பாவனயுடன் ஆவரண தேவதைகள் சூழக் கொலுவிருக்கும் தேவியின் பூர்ண வடிவத்தை நினைவிற் கொள்ளச் சிறந்த ஸ்தோத்திரமாகும். தேவியின் அருளால் எல்லா விருப்பங்களையும் நிறைவு பெறச் செய்யக்கூடியது.

4. தேவியின் ஆவரண பூஜை செய்பவர்கள் அந்தந்த தளங்களிலும் வாயில்களிலும் சக்கிரங்களிலும் உள்ள யோகினிகளைப் பற்றி நன்கு அறிவர். அந்தப் பூஜை முறை அறியாதவரும் ஸ்ரீசக்கிர படத்தில் தேவியை வழிபடுவது உண்டு. அவர்களும் எளிதில் அறியும் வகையில் ஆவரணங் களின் வரைபடங்களைத் தனித்துக்காட்டி யோகினி முதலானவர்களின் இருப்பிடங்கள் எண்களால் குறிப்பிடப்பட்டிருக்கின்றன.




5. இதனைத் தொடங்குமுன் (9-10-11-29) உள்ள ஸ்ரீசக்கர விளக்கத்தைப் படித்து மனத்திற் கொள்ளுதல் உதவும். இந்த சக்கிரங்களில் திசையைப் பற்றிக் குறிப்பிடும்போது புத்தகப் பக்கத்தின் கீழ்புறம் மேற்கு, இடதுபுறம் வடக்கு, மேல்புறம் கிழக்கு, வலது புறம் தெற்கு, ஸ்ரீ சக்கிரம் முதலானவற்றில் மேற்கு நோக்கி தேவி அமர்ந்திருப்பாள். கிழக்கு அவளது முதுகுப்புறத்தில் உள்ளது. வழிபடுபவர் தேவி எதிரில் கிழக்கு நோக்கி அமர்ந்திருக்கிறார். இந்த திசையமைப்பை நன்கு மனத்திற் கொள்ளவேண்டும்.

***

# श्रीसहस्राक्षरविद्यास्तोत्रम्

# ஸ்ரீ ஸஹஸ்ராக்ஷர வித்யா ஸ்தோத்திரம்

6. ओं ऐं ह्रीं श्रीं ऐं क्लीं सौः ओं नमस्त्रिपुरसुन्दरि हृदयदेवि शिरोदेवि शिखादेवि कवचदेवि नेत्रदेवि अस्त्रदेवि ।

**6. ஓம் ஐம் ஹ்ரீம் ஶ்ரீம் ஐம் க்லீம் ஸௌ: ஓம் நமஸ் த்ரிபுஸுந்தரி ஹ்ருதயதேவி சிரோதேவி சிகாதேவி கவசதேவி நேத்ரதேவி அஸ்த்ரதேவி.**

6-1. மந்திரமானபடியால் பூர்ணமான பரம்பொருளைக் குறிப்பிடும் ஓங்காரத்துடன் தொடங்குகிறது. ஐம் எனும் வாக் பீஜம், ஹ்ரீம் எனும் சக்தி பீஜம், ஶ்ரீம் எனும் லக்ஷ்மீபீஜம் இம்மூன்றும் சக்திப்பிரணவம், தேவீப்பிரணவம், த்ரிதாரீ எனப்படும். (தாரம்-பிரணவம்-ஓங்காரம், மூன்று பிரணவங்கள் த்ரிதாரீ). பாலாவின் வாக்பவகூடம் ஐம், காமராஜகூடம் க்லீம், சக்திகூடம் ஸௌ:. இந்தச் சக்திமிக்க ஏழு பீஜாக்ஷரங்களுடன் ஸ்தோத்திரம் தொடங்குகிறது. இங்கு தேவதைகளின் பெயர்கள் விளிவேற்றுமையில் (ஸம்போதன ப்ரதமா விபக்தியில்) அமைந்துள்ளன. தேவீ! உனக்கு நமஸ்காரம் எனத் தெரிவிக்கத் தேவியின் பல வடிவங்களை விளித்து வணங்குகிறோம். வணங்கப்பெறும் தேவதைகள் அனைவரும் தேவியின் கிரணங்களே என ஸஹஸ்ரநாமத்தின் தியான சுலோகம் (4-2, 4-10) கூறும். தேவியையும் அவளது மேனி ஒளிக்கதிர்களையும் பிரித்துத் தனித்துப் பார்க்க இயலாது. இவர்களனைவரும் தேவியே. அதனால் யோகிநிகள் பலராயினும் ப்ரகடயோகினி! குப்தயோகினி! என ஒருமையில் விளிக்கப்படுகிறார்கள். எல்லாப் பெயர்களாலும் குறிப்பிடப் பெறுபவள் தேவியே. இங்கு திரிபுரஸுந்தரியாக ஹ்ருதய தேவியாக சிரோ தேவியாக..... இருக்கும் தேவியே உனக்கு வணக்கம் எனப்பொருள் காண வேண்டும்.

6-2. ஶ்ரீ சக்கிரத்தின் நடு முக்கோணத்தில் உள்ள பிந்துவின் நடுவில் திரிபுரஸுந்தரியான வீற்றிருக்கும் தேவியை (5) முதலில் வணங்குகிறோம். நம: என வணக்கத்தை முதலில் தெரிவித்துப் பின் திருநாமத்தைக் குறிப்பிடுகிறோம். மந்திர ஜபம் செய்பவனை அவனது இதயம், தலை, சிகை, தோள்கள், கண்கள், உடலைச் சுற்றி இப்படி ஆறு இடங்களில் தேவி மந்திரக்ஷர வடிவில் நின்று காக்கிறாள். (ஹ்ருதயாதி நியாஸம் -3-10) அந்த ஆறு வடிவங்களையும் அடுத்து வணங்குகிறோம்.




பிந்துவில் அமர்ந்திருக்கும் தேவியைச் சுற்றித் தென்கிழக்கில் ஹிருதய தேவி (1), வடகிழக்கில் சிரோதேவி (2), தென் மேற்கில் சிகாதேவி (3), வடமேற்கில் கவச தேவி (4), பிந்துவின் நடுவில் நேத்திர தேவி (5), நான்கு திசைகளிலும் அஸ்திரதேவி (6) அமர்ந்திருப்பதாகத் தியானித்து வணங்குகிறோம்.

7. कामेश्वरि भगमालिनि नित्यक्लिन्ने भेरुण्डे वह्निवासिनि महावज्रेश्वरि शिवदूति त्वरिते कुलसुन्दरि नित्ये नीलपताके विजये सर्वमङ्गले ज्वालामालिनि चित्रे महानित्ये परमेश्वरपरमेश्वरि ।

**7. காமேச்வரி பகமாலிநி நித்யக்லிந்நே பேருண்டே வஹ்நிவாஸிநி மஹாவஜ்ரேச்வரி சிவதூதி த்வரிதே குலஸுந்தரி நித்யே நீலபதாகே விஜயே ஸர்வமங்களே ஜ்வாலாமாலிநி சித்ரே மஹாநித்யே பரமேச்வர பரமேச்வரி.**

7-1. நடுவில் உள்ள முக்கோணம் ஸர்வ ஸித்திப்பிரத சக்கிரம், அதன் மூன்று கோடுகளில் 15 திதி நித்யைகளும் நடுவில் உள்ள பிந்துவில் 16-வது நித்யையான தேவியுமிருப்பதாக தியானம். காமேசுவரி (1) பகமாலிநீ (2) நித்யக்லிந்நா (3) பேருண்டா (4) வஹ்நிவாஸிநீ (5) இந்த ஐவரும் முக்கோணத்தின் வலது கோட்டில் (மேற்கிலிருந்து தென்கிழக்கு வரை அமைந்துள்ளதில்) வரிசையாக அமர்ந்துள்ளனர். மஹாவஜ்ரேச்வரீ (6), சிவதூதீ (7) த்வரிதா (8) குலஸுந்தரீ (9) நித்யா (10) , இந்த ஐவரும் கிழக்குப் பக்கத்தில் அமைந்த கோட்டில் (தென்கிழக்கிலிருந்து வடகிழக்கு வரை அமைந்துள்ளதில்) வரிசையாக அமர்ந்துள்ளனர். நீலபதாகா (11), விஜயா (12) ஸர்வமங்களா (13) ஜ்வாலாமாலினீ (14) சித்ரா (15) இந்த ஐவரும் வடகிழக்கிலிருந்து மேற்கு வரை உள்ள இடது கோட்டில் வரிசையாக அமர்ந்துள்ளனர். நடுவில் பிந்துவில் மஹாநித்யா, மஹாஷோடசீ, நித்யா ஷோடசீ எனப்படும் தேவி. அவள் பரமேசுவரனுக்கும் பரமேசுவரி, பரமேசுவரனும் பரமேசுவரியாயும் இருப்பவள்.



8. मित्रेचमयि षष्टीशमयि औड्याणमयि चर्यानाथमयि लोपामुद्रामयि अगस्त्यमयि कालतापनमयि धर्माचार्यमयि मुक्तिकेसीश्वरमयि दीपकलानाथमयि विष्णुदेवमयि प्रभाकरदेवमयि तेजोदेवमयि मनोजदेवमयि

**8. மித்ரேசமயி ஷஷ்டீசமயி ஒட்டீயாணமயி சர்யாநாதமயி லோபாமுத்ராமயி அகஸ்த்யமயி காலதாபநமயி தர்மாசார்யமயி முக்திகேசீச்வரமயி தீபகலாநாதமயி விஷ்ணுதேவமயி ப்ரபாகரதேவமயி தேஜோதேவமயி மனோஜதேவமயி.**




8-1. நடுமுக்கோணத்துடன் இணைந்து எட்டு முக்கோணங்கள் கொண்ட ஸர்வரோக ஹரசக்கிரம் அமைகின்றது. நடுமுக்கோணத் தின் கிழக்குக் கோட்டிற்கு வெளியே, உள்சக்தி கோணத்தின் கிழக்குக் கோட்டின் மேற்புறத்தில் (சற்றேறக் குறைய நான்கு கோண வடிவிலுள்ளது) தேவியை நமக்குக் காட்டித்தருகிற குருவைத் தியானம் செய்யுமிடம். அங்கு மூன்று கோடுகளிட்டு மேற்குக் கோட்டில் திவ்வியர்களையும் (1) நடுக்கோட்டில் ஸித்தர்களையும் (2) கிழக்குக் கோட்டில் மானவர்களையும் (3) வணங்குவது வழக்கம். அவர்களில் சிறப்புற்ற பதினான்கு குருக்களின் வடிவில் உள்ளவளாகத் தேவியை இங்கு வணங்குகிறோம். **மித்ரேசர், ஷஷ்டீசர், ஒட்டியாணர் (உட்டீசர்), சர்யாநாதர், லோபாமுத்ரா, அகஸ்தியர், காலதாபனர், தர்மாசார்யர், முக்திகேசீசுவரர், தீபகலாநாதர், விஷ்ணுதேவர், பிரபாகரதேவர், தேஜோதேவர், மனோஜதேவர்** என அவர்கள் பதினான்கு. தேவியையும் நித்யைகளையும் குருவையும் வணங்கிப்பின் ஆவரண தேவதைகளை முதல் ஆவரணத்திலிருந்து தொடங்கி வணங்குகிறோம்.

9. अणिमासिद्धे लघिमासिद्धे महिमासिद्धे वशित्वसिद्धे प्राकाम्यसिद्धे भुक्तिसिद्धे इच्छासिद्धे प्राप्तिसिद्धे सर्वकामसिद्धे ।

**9. அணிமாஸித்த்தே லகிமாஸித்த்தே மஹிமாஸித்த்தே ஈசித்வஸித்த்தே வசித்வஸித்த்தே ப்ராகாம்யஸித்த்தே புக்திஸித்த்தே இச்சாஸித்த்தே ப்ராப்திஸித்த்தே ஸர்வகாம ஸித்த்தே.**




9-1. முதல் ஆவரணமாகிய **த்ரைலோக்யமோஹன சக்கிரத்தின்** வெளிக்கோடு பூபரத்தின் வெளிக் கோட்டையாகும். அதன் நான்கு திசைகளிலும் நான்கு வாயில்கள் உள்ளன. நுழைபவனின் வலதுபுறமாக மேற்கு வாயிலில் **அணிமா** (1), வடக்கு வாயிலில் **லகிமா** (2), கிழக்கு வாயிலில் **மஹிமா** (3), தெற்கு வாயிலில் **ஈசித்துவம்** (4), வடமேற்கு மூலையில் **ப்ராகாம்யம்** (5), தென்கிழக்கு மூலையில் **புக்தி** (7), தென்மேற்கு மூலையில் **இச்சா** (8), மேற்கிற்கும் தென்மேற்கிற்கும் இடையில் **ப்ராப்தி** (9), கிழக்கிற்கும், வடகிழக்கிற்கும் இடையே **ஸர்வகாமா** (10) என்ற 10 ஸித்தி தேவதைகளைத் தியானித்து வணங்குகிறோம்.

10. ब्राह्मि माहेश्वरि कौमारि वैष्णवि वाराहि माहेन्द्रि चामुण्डे महालक्ष्मि ।

**10. ப்ராஹ்மி மாஹேச்வரி கௌமாரி வைஷ்ணவி வாராஹி மாஹேந்த்ரி சாமுண்டே மஹாலக்ஷ்மி.**




10-1. திரைலோக்ய மோஹன சக்கிரத்தின் நடுக்கோடு பூபுரத்தின் நடுக்கோட்டையாகும். அதன் நான்கு திசைகளிலும் நான்கு வாயில்களுள்ளன. வாயிலில் நுழைபவனுக்கு இடதுபுறமாக, மேற்கு வாயிலில் **பிராஹ்மீ** (1),வடக்கு வாயிலில் **மாஹேச்வரீ** (2), கிழக்கு வாயிலில் **கௌமாரீ** (3), தெற்கு வாயிலில் **வைஷ்ணவீ** (4), வடமேற்கு முலையில் **மாஹேந்த்ரீ** (6), தென்கிழக்கு மூலையில் **சாமுண்டா** (7), தென்மேற்கு முலையில் **மஹாலக்ஷ்மீ** (8) என்ற எட்டு மாதாக்களைத் தேவியாகத் தியானித்து வணங்குகிறோம்.

11 सर्वसंक्षोभिणि सर्वविद्राविणि सर्वकर्षिणि स्र्ववशङ्करि सर्वोन्मादिनि सर्वमहांकुशे सर्वखेचरि सर्ववीजे सर्वयोने सर्वत्रिखण्डे ।

**11. ஸர்வஸங்க்ஷோபிணி ஸர்வவித்ராவிணி ஸர்வாகர்ஷிணி ஸர்வவசங்கரி ஸர்வோந்மாதிநி ஸர்வமஹாங்குசே ஸர்வகேசரி ஸர்வபீஜே ஸர்வயோநே ஸர்வத்ரிகண்டே.**




11-1. திரைலோக்ய மோஹன சக்கிரத்தின் உட்கோடு பூபுரத்தின் உள்கோட்டையாகும். அதன் நான்கு திசைகளிலும் நான்கு வாயில்கள உள்ளன. நுழைபவனுக்கு வலது புறமாக, மேற்கு வாயிலில் **ஸர்வஸங்க்ஷோபிணீ** (1), வடக்கு வாயிலில் **ஸர்வவித்ராவிணீ** (2), கிழக்கு வாயிலில் **ஸர்வாகர்ஷணீ** (3), தெற்கு வாயிலில் **ஸர்வசங்கரீ** (4), வடமேற்கு முலையில் **ஸர்வோந்மாதினீ** (5), வடகிழக்கு மூலையில் **ஸர்வமஹாங்குசா** (7), தென்மேற்கு மூலையில் **ஸர்வபீஜா** (8), மேற்கிற்கும் தென்மேற்கிற்கும் இடையே **ஸர்வயோநி** (9), கிழக்கிற்கும் வடகிழக்கிற்கும் இடையே **ஸர்வத்திரிகண்டா** (10) என்ற 10 **முத்திராசக்தி**களைத் தேவியாகத் தியானித்து வணங்குகிறோம்.

12. प्रकटयोगिनि बौद्धदर्शनाङ्गि त्रैलोक्यमोहनचक्रस्वामिनि ।

**12. ப்ரகடயோகிநி பௌத்த்ததர்சநாங்கி த்ரைலோக்யமோஹந சக்ரஸ்வாமிநி.**

12-1. திரைலோக்யமோஹன சக்கிரத்திலுள்ளவர் **பிரகடயோகினிகள்.** தெய்வத்தத்துவத்தைப் போதிப்பவை தர்சனங்கள், தாராதேவியை உயர்ந்த தேவதையாகக் காட்டுவது பௌத்த தர்சனம். அதன் தத்துவமாக தாராதேவியாக உணர்த்தப் பெறுபவள் தேவி. திரைலோக்யமோஹன சக்கிரத்தின் தலைவியும் அவளே. தேவியை வணங்கி அடுத்த ஆவரணத்தினுள் நுழைவோம்.

13. कामाकर्षिणि बुद्ध्याकर्षिणि अहङ्काराकर्षिणि शब्दाकर्षिणि स्पर्शाकर्षिणि रूपाकर्षिणि रसाकर्षण गन्धा कर्षिणि चित्ताकर्षिणि धैर्याकर्षिणि स्मृत्याकर्षिणि नामाकर्षिणि बीजाकर्षिणि आत्माकर्षिणि अमृताकर्षिणि शरीराकर्षिणि ।

**13. காமாகர்ஷிணி புத்த்யாகர்ஷிணி அஹங்காரா கர்ஷிணி சப்தாகர்ஷிணி ஸ்பர்சாகர்ஷிணி ரூபாகர்ஷிணி ரஸாகர்ஷிணி கந்த்தாகர்ஷிணி சித்தாகர்ஷிணி தைர்யாகர்ஷிணி ஸ்ம்ருத்யாகர்ஷிணி நாமாகர்ஷிணி பீஜாகர்ஷிணி ஆத்மாகர்ஷிணி அம்ருதாகர்ஷிணி சரீராகர்ஷிணி.**



13-1. இரண்டாவது ஆவரணமாகிய **ஸர்வாசாபரிபூரக சக்கிரம்** 16 தளங்களுள்ளது. தேவியின் முன் தளத்திலிருந்து ஆரம்பித்து இடச்சுற்றாக **காமாகர்ஷிணி (1), புத்த்யாகர்ஷிணி (2), அஹங்காரா கர்ஷிணீ (3), சப்தாகர்ஷிணீ (4), ஸ்பர்சாகர்ஷிணீ (5), ரூபாகர்ஷிணீ (6), ரஸாகர்ஷிணீ (7), கந்த்தா கர்ஷிணீ (8), சித்தாகர்ஷிணீ (9), தைர்யாகர்ஷிணீ (10), ஸ்ம்ருத்யாகர்ஷிணீ (11), நாமாகர்ஷிணீ (12), பீஜாகர்ஷிணீ (13), ஆத்மாகர்ஷிணீ (14) அம்ருதாகர்ஷிணீ (15), சரீராகர்ஷிணீ (16)** என்ற 16 நித்யகலா தேவிகளைத் தேவியாகத் தியானித்து வணங்குகிறோம்.

14. कुप्तयोगिनि सर्वाशापरिपूरकचक्रस्वामिनि ।

**14. குப்தயோகிநி ஸர்வாசாபரிபூரகசக்ரஸ்வாமிநி.**

14-1. இந்த ஆவரணத்திலுள்ள யோகினிகள் **குப்தயோகிகள்** ஆவர். தேவி இந்த ஸர்வ ஆசாபரிபூரக சக்கிரத்தின் தலைவி. அவளை வணங்கி ஸர்வஸங்க்ஷோபண சக்கிரத்தினுள் நுழைகிறோம்.

15. अनङ्गकुसुमे अनङ्गमेखले अनङ्गमदने अनङ्गमदनातुरे अनङ्गरेखे अनङ्गवेगिनि अनङ्गाङ्कुशे अनङ्गमालिनि ।

**15. அநங்ககுஸுமே அநங்கமேகலே அநங்கமதநே அநங்க மதனாதுரே அநங்கரேகே அநங்கவேகிநி அநங்காங்குசே அநங்கமாலிநி.**

15-1. மூன்றாவது ஆவரணமாகிய **ஸர்வஸங்க்ஷோபண** சக்கிரம் 8 தளமுள்ளது. தேவியின் பின்புறத்தில் உள்ள தளத்திலிருந்து வலமாக-கிழக்கில் **அநங்ககுஸுமா** (1), தெற்கில் **அநங்க மேகலா** (2), மேற்கில் **அநங்கமதநா** (3), வடக்கில் **அநங்கமதநாதுரா** (4), தென்கிழக்கில் **அநங்கரேகா** (5), தென்மேற்கில் **அநங்கவேகினீ** (6), வடமேற்கில் **அநங்காங்குசா** (7), வடகிழக்கில் **அநங்கமாலினீ** (8) என எட்டு மன்மதசக்திகளைத் தேவியாக வணங்குகிறோம்.



16. गुप्ततरयोगिनि वैदिकदर्शनाङ्गि सर्वसंक्षोभणचक्रस्वामिनि पूर्वाम्नायधिदेवते सृष्टिरूपे ।

**16. குப்ததரயோகிநி வைதிகதர்சநாங்கி ஸர்வஸங் க்ஷோபண சக்ரஸ்வாமிநி பூர்வாம்நாயாதிதேவதே ஸ்ருஷ்டிரூபே.**

16-1. ஸர்வஸங்க்ஷோபண சக்கிரத்திலுள்ளவர் அனைவரும் **குப்ததரயோகினிகள்.** பரம்பொருளை உத்தம தத்துவமெனக் காட்டுவது வைதிக தர்சனம். அதனால் உணர்த்துப் பெறும் பரம்பொருளாயிருப்பவள். அவளே இந்தச் சக்கிரத்தின் தலைவி. பூர்வாம்நாயங்கள் எனப்படும் மந்திரங்கள் இந்தச் சக்கிரத்தைத் தன்னிருப்பிடமாகக் கொண்டவை. அந்த மந்திரதேவதையாக இருப்பவள் தேவீ. திரைலோக்கிய மோஹனம், ஸர்வாசாபரிபூரகம், ஸர்வஸங்க்ஷோபணம் என்ற மூன்றும் ஸ்ருஷ்டி சக்கிரங்கள் எனப்படுபவை. அவற்றின் வடிவில் உள்ளவள் தேவி.

17. सर्वसंक्षोभिणि सर्वविद्राविणि सर्वाकर्षिणि सवाह्लादिनि सर्वसंमोहिनि सर्वस्तंभिनि सर्वजृम्भिणि सर्ववशङ्करि सर्वरञ्जिनि सर्वोन्मादिनि सर्वार्थसाधिनि सर्वसंपत्तिपूरणि सर्वमन्त्रमयि सर्वद्वन्द्वक्षयङ्करि ।

**17. ஸர்வஸங்க்ஷோபிணி ஸர்வவித்ராவிணி ஸர்வாகர்ஷிணி ஸர்வாஹ்லாதிநி ஸர்வஸம்மோஹிநி ஸர்வஸ்தம்ப்பிநி ஸர்வஜ்ரும்ப்பிணி ஸர்வவசங்கரி ஸர்வரஞ்ஜிநி ஸர்வோந்மாதிநி ஸர்வார்த்தஸாதிநி ஸர்வஸம்பத்திபூரணி ஸர்வமந்த்ரமயி ஸர்வத்வந்த்வக்ஷயங்கரி.**

17-1. நான்காவது ஆவரணமாகிய **ஸர்வஸௌபாக்ய தாயக சக்கிரம்** 14 முக்கோணங்களுள்ளது. அதில் தேவியின் முன் உள்ள முக்கோணத்திலிருந்து தொடங்கி இடமாக,

1. ஸர்வஸங்க்ஷோபிணீ
2. ஸர்வவித்ராவிணீ
3. ஸர்வாகர்ஷிணீ
4. ஸர்வாஹ்லாதிநீ
5. ஸர்வஸம்மோஹினீ
6. ஸர்வஸ்தம்பினீ
7. ஸர்வஜ்ரும்பிணீ
8. ஸர்வவசங்கரீ
9. ஸர்வரஞ்ஜிநீ
10. ஸர்வோந்மாதிநீ
11. ஸர்வார்த்தஸாதிநீ
12. ஸர்வஸம்பத்திபூரணீ
13. ஸர்வமந்த்ரமயீ
14. ஸர்வத்வந்த்வக்ஷயங்கரீ




எனும் சக்திகளைத் தேவியாகப் பாவித்து வணங்குகிறோம்.

18. संप्रदाययोगिनि सौरदर्शनाङ्गि सर्वसौभाग्यदायकचक्रस्वामिनि ।

**18. ஸம்ப்ரதாயயோகிநி ஸௌரதர்சநாங்கி ஸர்வஸௌபாக்ய தாயக சக்ரஸ்வாமிநி.**

18-1. இவர்கள் **ஸம்ப்ரதாய யோகினிகள்,** ஸௌரமெனும் தர்சனம் கூறும் பரம்பொருளான ஸூர்யனாக இருப்பவள். ஸர்வ ஸௌபாக்ய தாயகம் எனும் இந்தச் சக்கிரத்தின் தலைவி தேவி.

19. सर्वसिद्धिप्रदे सर्वसम्पत्प्रदे सर्वप्रियङ्करि सर्वमङ्गलकारिणि सर्वकामप्रदे सर्वदुःखविमोचनि सर्वमृत्युप्रशमनि सर्वविघ्ननिवारिणि सर्वांगसुन्दरि सर्वसौभाग्यदायिनि ।

**19. ஸர்வஸித்திப்ரதே ஸர்வஸம்பத்ப்ரதே ஸர்வப்ரியங்கரி ஸர்வமங்களகாரிணி ஸர்வகாமப்ரதே ஸர்வதுக்கவிமோசநி ஸர்வ ம்ருத்யுப்ரசமநி ஸர்வவிக்க்நநிவாரிணி ஸர்வாங்கஸுந்தரி ஸர்வ ஸௌபாக்யதாயிநி.**

19-1. ஐந்தாவது ஆவரணம். **ஸர்வார்த்தஸாதக சக்கிரம்,** 10 முக்கோணங்களுள்ளது. தேவியின் முன்னுள்ள முக்கோணத்திலிருந்து தொடங்கி இடமாக,

1. ஸர்வஸித்திப்ரதா
2 ஸர்வஸம்பத்ப்ரதா
3. ஸர்வப்ரியங்கரீ
4. ஸர்வமங்களகாரிணீ
5. ஸர்காமப்ரதா
6. ஸர்வதுக்கவிமோசநீ
7. ஸர்வம்ருத்யுப்ரசமநீ
8. ஸர்வவிக்க்நநிவாரிணீ
9. ஸர்வாங்கஸுந்தரீ
10. ஸர்வஸௌபாக்யதாயிநீ




எனும் யோகினிகளைத் தேவியாகப் பாவித்து வணங்குகிறோம்.

**20. कुलोत्तीर्णयोगिनि सर्वार्थसाधकचक्रस्वामिनि ।**

**20. குலோத்தீர்ணயோகிநி ஸர்வார்த்த ஸாதக சக்ரஸ்வாமிநி.**

20-1. இவர்கள் **குலோத்தீர்ண யோகிநிகள்.** இவர்கள் வடிவில் இருப்பவளும் இந்த ஸர்வார்த்தஸாதக சக்கிரத்தின் தலைவியும் தேவியே.

**21. सर्वज्ञे सर्वशक्ते सर्वैश्वर्यप्रदे सर्वज्ञानमयि सर्वव्याधिनिवारिणि सर्वाधारस्वरूपे सर्वपापहरे सर्वानन्दमयि सर्वरक्षास्वरूपिणि सर्वेप्सितफलप्रदे ।**

**21. ஸர்வஜ்ஞே ஸர்வசக்தே ஸர்வைச்வர்யப்ரதே ஸர்வஜ்ஞானமயி ஸர்வவ்யாதிநிவாரிணி ஸர்வாதாரஸ்வரூபே ஸர்வபாபஹரே ஸர்வாநந்தமயி ஸர்வரக்ஷாஸ்வரூபிணி ஸர்வேப்ஸிதபலப்ரதே.**

21-1. ஆறாவது ஆவரணம் **ஸர்வரக்ஷாகரம்** எனும் சக்கிரம். பத்து முக்கோணங்கள் உள்ளது. அதில் தேவியின் முன்னுள்ள முக்கோணத்திலிருந்து தொடங்கி இடமாக,




1. ஸர்வஜ்ஞா
2. ஸர்வசக்தி
3. ஸர்வைச்வர்யப்ரதா
4. ஸர்வஜ்ஞானமயீ
5. ஸர்வவ்யாதிநிவாரிணீ
6. ஸர்வாதாரஸ்வருபா
7. ஸர்வபாபாஹரா
8. ஸர்வாநந்தமயீ
9. ஸர்வரக்ஷாஸ்வரூபிணீ
10. ஸர்வேப்ஸிதபலப்ரதா

எனும் யோகினி வடிவில் தேவியைப் பாவித்து வணங்குகிறோம்.

22. निगर्भयोगिनि वैष्णवदर्शनाङ्गि सर्वरक्षाकरचक्रस्वामिनि दक्षिणाम्नायेशि स्थितिरूपे ।

**22. நிகர்ப்பயோகிநி வைஷ்ணவதர்சநாங்கி ஸர்வரக்ஷாகர சக்ரஸ்வாமிநி தக்ஷிணாம்நாயேசி ஸ்த்திதிரூபே.**

22-1. இவர்கள் **நிகர்ப்பயோகினிகள்.** வைஷ்ணவதர்சனம் தனது உயர்ந்த தத்துவமாகக் காட்டுகின்ற மஹா விஷ்ணுவின் வடிவில் உள்ளவள். அவளே இந்த ஸர்வரக்ஷாகர சக்கிரத்தின் தலைவி. தக்ஷிணாம்நாயங்கள் எனும் மந்திரத்தொகுப்பின் தலைவியும் அவளே. ஸர்வஸௌபாக்யதாயகம், ஸர்வார்த்தஸாதகம், ஸர்வரக்ஷாகரம் எனும் மூன்று சக்கிரங்களும் ஸ்திதி சக்கிரங்கள். அவைகளின் வடிவில் இருப்பவளும் தேவியே.

23. वशिनि कामेशि मोदिनि विमले अरुणे जयिनि सर्वेश्वरि कौलिनि ।

**23. வசிநி காமேசி மோதிநி விமலே அருணே ஜயிநி ஸர்வேச்வரி கௌலிநி.**




23-1. ஏழாவது ஆவரணம், **ஸர்வரோகஹர சக்கிரம்** 8 முக்கோணங்கள் உள்ளது தேவியின் முன்னுள்ள முக்கோணத்திலிருந்து இடமாக **(1) வசிநீ (2) காமேச்வரீ (3) மோதிநீ (4) விமலா (5) அருணா (6) ஜயிநீ (7) ஸர்வேச்வரீ (8) கௌலிநீ** என்ற வாக்தேவிகளைத் தேவியாகப் பாவித்து வழிபடுகிறோம். குரு மண்டலத்துடன் வாக்தேவிகளும் இந்தச் சக்கிரத்தினுள் வசிக்கிறார்கள்.

24. रहस्ययोगिनि साक्तदर्शाङ्गि सर्वरोगहरचक्रस्वामिनि पश्चिमाम्नायेशि ।

**24. ரஹஸ்யயோகிநி சாக்ததர்சநாங்கி ஸர்வரோகஹரசக்ர ஸ்வாமிநி பச்சிமாம்நாயேசி.**

24-1. இவர்கள் **ரஹஸ்யயோகினிகள்.** சாக்ததர்சனம் தனது உயர்ந்த தத்துவமாகக் கூறும் பராசக்தி வடிவினள். ஸர்வரோகஹரமெனும் சக்கிரத்தின் தலைவி, பச்சிமாம்நாயங்கள் எனும் மந்திரத் தொகுப்பின் தலைவி தேவி.

25. धनुर्बाणपाशाङ्कुशदेवते कामेशि वज्रेशि भगमालिनि ।

**25. தநுர்பாணபாசாங்குசதேவதே காமேசி வஜ்ரேசி பகமாலிநி.**

25-1. நடுமுக்கோணம், எட்டாவது ஆவரணம், **ஸர்வஸித்திப்ரதம்** எனும் சக்கிரம். இதில் திரிகோணத்தின் வெளியே தேவியின் முன்னிருந்து வரிசையாக தேவியின் **பாணம் (1) வில் (2) பாசம் (3) அங்குசம் (4)** எனும் ஆயுதங்கள். தேவியின் முன்னுள்ள கோணத்தில் வாக்கூடத்தின் தலைவியும் இச்சா சக்தியும் ஸ்ருஷ்டி சக்தியும் பிரும்ம சக்தியுமான **காமேசீ (5)**, தேவியின் பின் தேவியின் வலது புறத்திலுள்ள கோணத்தில் காமராஜ கூடத்தின் தலைவியும் ஞானசக்தியும் ஸ்திதி சக்தியும் விஷ்ணு சக்தியுமான **வஜ்ரேச்வரீ (6)**, தேவியின் பின் தேவியின் இடதுபுறத்திலுள்ள கோணத்தில்



கிரியாசக்தியும் ஸம்ஹார சக்தியும் ருத்ர சக்தியுமான **பசுமாலினி (7),** இவர்களது வடிவிலுள்ள தேவியைப் பாவித்து வணங்குகிறோம். (காமேசுவரீ (காமேசீ) வஜ்ரேசுவரீ (வஜ்ரேசீ) பசுமாலிநீ என்ற மூவரும் நித்யைகளாக முன் வந்திருக்கிறார்கள். அவர்களிலிருந்து இந்த மூவரை வேறுபடுத்துவதற்காக **மஹாகாமேச்வரீ, மஹாவஜ்ரேச்வரீ, மஹாபசுமாலினீ** எனச் சிறப்பாகச் சொல்வதுண்டு. அவர்களுக்கு அங்கு உள்ள இடமும் இங்கு தரப்படும் இடமும் மாறுபடுகிறது.)

26. अतिरहस्ययोगिनि शैवदर्शनाङ्गि सर्वसिद्धिप्रदचक्रस्वामिनि उत्तराम्नायेशि संहाररूपे ।

**26. அதிரஹஸ்யயோகிநி சைவதர்சநாங்கி ஸர்வஸித்தி ப்ரதசக்ரஸ்வாமிநி உத்தராம்நாயேசி ஸம்ஹாரரூபே.**

26-1 **அதிரஹஸ்யயோகினி** களாக உள்ள இவர்களது வடிவில் உள்ளவள், சைவதரிசனம் பரம் பொருளாகக் கூறும் சிவவடிவினள். ஸர்வஸித்திப்பிரதம் எனும் இந்த சக்ரத்தின் தேவதை, உத்தராம்நாயம் எனும் மந்திரத் தொகுப்பின் தலைவி. ஸர்வரோகஹரமும் ஸர்வஸித்தப்பிரதமும் இணைந்த ஸம்ஹார சக்கிரத்தின் வடிவில் உள்ளவள் தேவி.

27. शुद्धपरे बिन्दुपीठगते महात्रिपुरसुन्दरि परापरातिरहस्ययोगिनि शांभवदर्शनांगि सर्वानन्दमयचक्रस्वामिनि ।

**27. சுத்தபரே பிந்துபீடகதே மஹாத்ரிபுரஸுந்தரி பராபராதிரஹஸ்யயோகிநி சாம்ப்பவதர்சநாங்கி ஸர்வாநந்தமயசக்ரஸ்வாமிநி.**

27-1. பரப்பிரும்ம வடிவான பிந்துவில் சுத்தமாயும் பரமாயும் உள்ளவள். ஸ்ருஷ்டிதிதிஸம்ஹாரசக்கதிகள், இச்சா ஞானக்கிரியசக்திகள், மும்மூர்த்திகளின் சக்திகள் இவைகளுக்கப்பாற்பட்டதும் இவைகளுக்குக் காரணமானதுமான பராசக்தியின் வடிவிலுமிருப்பவள். பிந்து பீடத்தில் உள்ளவள். பராபராதிரஹஸ்யயோகினிகள் வடிவில் உள்ளவள். சாம்பவதரிசனம் காட்டும் பரசிவவடிவினள். ஸர்வாநந்தமயமெனும் சக்கிரத்தின் தலைவி தேவி. ஸ்ரீஸ்ரீமஹாபட்டாரிகா-மாபெரும் எஜமானி.

28. त्रिपुरे त्रिपुरेशि त्रिपुरसुन्दरि त्रिपुरवासिनि त्रिपुराश्रीः
त्रिपुरमालिनि त्रिपुरासिद्धे त्रिपुरांब महात्रिपुरसुन्दरि ।

**28. த்ரிபுரே த்ரிபிரேசி த்ரிபுரஸுந்தரி த்ரிபுரவாஸிநி த்ரிபுராஸ்ரீ:**
**த்ரிபுரமாலினி த்ரிபுராஸித்தே த்ரிபுராம்ப மஹாத்ரிபுரஸுந்தரி.**

28-1. பிரகட யோகினிகளின் தலைவி **திரிபுரா** (1), குப்த யோகினிகளின் தலைவி **திரிபுரேசீ** (2), குப்ததர யோகினிகளின் தலைவி **திரிபூரஸுந்தரி** (3), ஸம்பிரதாய யோகினிகளின் தலைவி **திரிபுரவாஸிநீ** (4), குலோத்தீர்ண யோகினிகளின் **திரிபுராஸ்ரீ** (5), நிகர்ப்பயோகினிகளின் தலைவி **திரிபுரமாலினி** (6), ரஹஸ்ய யோகினிகளின் தலைவி **திரிபுராஸித்தா** (7), அதிரஹஸ்ய யோகினிகளின் தலைவி **திரிபுராம்பா** (8), பராபராதி ரஹஸ்ய யோகினிகளின் தலைவி **மஹாத்ரிபுஸுந்தரி** (9), இவர்களில் முதல் எட்டு யோகினிகளும் பிந்துவில் அமர்ந்துள்ள ஒன்பதாவது யோகினியான மஹா திரிபுரஸுந்தரியை அல்லது இதழில் கைகூப்பி நிற்பவர்கள். இவர்களின் வடிவில் இருப்பவளாகத் தேவியைப் பாவித்து வணங்குகிறோம்.

29. सर्वचक्रस्थे अनुत्तराम्नायाख्यस्वरूपे महात्रिपुरभैरवि चतुर्विधगुणरूपे कुले अकुले कुलाकुले महाकौलिनि सर्वोत्तरे सर्वदर्शनांगि नवासनस्थिते नवाक्षरि नवमिथुनाकृते महेश - माधव - विधातृ - मन्मथ - स्कन्द - नन्दि - इन्द्र - मनु - चन्द्र - कुबेर - अगस्त्य - क्रोधभट्टारक - विद्यात्मिके कल्याणतत्त्वत्रय स्वरूपे शिवाशिवात्मिके पूर्णब्रह्मशक्ते महात्रिपुरसुन्दरि तव श्रीपादुकां पूजयामि नमः सौः क्लीं ऐं श्रीं ह्रीं ऐं ओम् ।

**29. ஸர்வசக்ரஸ்த்தே அநுத்தராம்நாயக்க்யஸ்வரூபே மஹாத்ரிபுரபைரவி சதுர்விதகுணரூபே குலே அகுலே குலாகுலே மஹாகௌலிநி ஸர்வோத்தரே ஸர்வதர்சநாங்கி நவாஸநஸ்த்திதே நவாக்ஷரி நவமிதுநாக்ருதே மஹேச- மாதவ-விதாத்ரு-மந்மத-ஸ்கந்த-நந்தி- இந்த்ர-மனு-சந்த்ர-குபேர- அகஸ்த்ய-க்ரோத-பட்டாரக வித்யாத்மிகே கல்யாண தத்வத்ரய ஸ்வரூபே சிவசிவாத்மிகே பூர்ண ப்ரம்ஹசக்தே மஹாத்ரிபுரஸுந்தரி தவ ஸ்ரீபாதுகாம் பூஜயாமி நம: ஸௌ: க்லீம் ஐம் ஸ்ரீம் ஹ்ரீம் ஐம் ஓம்.**

29-1. எல்லாச் சக்கிரங்களிலுமிருப்பவள். அநுத்தராம்நாயம் எனப்படும் மந்திரத்தொகுப்பின் வடிவினள். மஹாத்ரிபுரத்தில் பைரவியாக இருப்பவள். இச்சா, ஞானா, கிரியா, சாந்தா என்ற நான்கு சக்தி வடிவினள். குல அறிவு, (ஸாகார ஞானம்) குலசக்கிரம், குலம் இவைகளின் வடிவிலுள்ளவள். அகுல ஞானம் (நிராகார ஞானம்) அகுல சக்கிரம் இவைகளின் வடிவிலுள்ளவள், குலமாயும் அகுலமாயுமுள்ளவள். சிவசக்திகள் இணைந்த கௌலினீ வடிவினள். (12ம் அதிகாரத்தில் இவைகளுக்கு விளக்கம் காணலாம்.) இது இன்னதெனக் குறிப்பிடத்தக்கது எல்லாவற்றிற்கும் அப்பாற்பட்டவள். எல்லா தரிசனங்களும் தம் வழிபாட்டின் ஒரு பகுதியைக் காட்ட அவைகளால் அறியப்படுபவள். காலம், குலம், நாமம், ஞானம், சித்தம், நாதம், பிந்து, கலா, ஜீவன் எனும் ஒன்பதைத் தன் ஆஸனமாக்கி அதன்மீதமர்ந்தவள். (25-7-2) ஒன்து அக்ஷரங்களுள்ள பாலாமந்திர வடிவினள். ஒன்பது சக்கிரங்களிலும் ஒன்பது சிவசக்தி தம்பதிகளாக வீற்றிருப்பவள். பரமசிவன், நாராயணன், பிரும்மா, மன்மதன், குமரன், நந்தி, இந்திரன், மனு, சந்திரன், குபேரன், அகத்தியர், துர்வாஸர் இவர்கள் வழிபட்ட மந்திரங்கள் வடிவினள், மங்களம் தரும் சிவதத்துவம், மாயா தத்துவம், ஆத்ம தத்துவம் எனும் மூன்று தத்துவ வடிவினள். சிவனும் சிவையுமாக இருப்பவள். எங்கும் நிறைந்த பிரும்மத்தின் சக்தியாயிருப்பவள். இத்தகைய மகாத் திரிபுரஸுந்தரி தேவியே! உன் திருவடிகளை வழிபடுகிறேன்.

**ஸஹஸ்ராக்ஷர வித்யா ஸ்தோத்திரம்**
**முற்றிற்று.**

* * *

அதிகாரம் - 33

# இணைப்பு 2

# தேவியின் பீடங்கள்

**பஞ்சாசத்பீடரூபிணீ** என்ற 833வது நாம விளக்கத்தில் காமரூபம் முதல் சாயாச்சத்திரம் ஈறான 51 பீடங்கள் நியாஸ முறையில் விளக்கப்பட்டுள்ளன. தேவியின் பீடங்களைப் பற்றிப்பல நூல்கள் பலப்பல விவரங்களைத்தருகின்றன. அவற்றைப் பற்றித் தெரிந்து கொண்டு பிறகு 51 பீடங்களின் விவரங்களுக்குச் செல்வோம்.

**திரிபுரா ரஹஸ்யம்** எனும் நூல் (மாஹாத்மய கண்டம்-48,69-70) தேவியின் பீடங்கள் 3 எனக் கூறுகிறது. அவையாவன: (1) கிழக்குக் கடற்கரையில் **காமகிரிபீடம்** (2) மேருமலையில் **ஜாலந்தரபீடம்** (3) மேற்குக் கடற்கரையில் **பூர்ணகிரிபீடம்.**

**காமாக்ஷீ விலாஸம்** என்ற நூல் (1இ 5-10) தேவியின் பீடங்கள் பலவற்றுள் 3 சிறந்தவை. 64 ஆயிரம் காமகோடி மஹா பீடங்களில் 64 பீடங்களும், அவற்றுள் 51 மாத்ருகா பீடங்களும், அவற்றுள் 36 தத்துவ பீடங்களும் அவற்றுள் 18 பீடங்களும் சிறந்தனவாம். அவற்றுள் மூன்று சிறந்தவை. அவையாவன: (1) **காமராஜபீடம்** (ஹயக்கீரிவர் இதில் வாக்பவ கூடத்தை வழிபட்டார்) (2) **ஜாலந்தரம்** ஜ்வாலாமுகீ எனப் பெயர் கொண்டது. (பிருகு மஹரிஷி காம கூடத்தை இதில் வழிபட்டார்) (3) **ஓட்டியாணம்** - காமரூபத்தில் உள்ளது (வியாஸர் இதில் சக்தி கூடத்தை வழிபட்டார்) காமராஜபீடம் காஞ்சியில் உள்ளது என்று கூறுகிறது.

**திரிபுரா ரஹஸ்யம்** (மாஹாத்ம்ய கண்டம் 48, 71-75) தேவியின் பீடங்கள் 12 என்றும் கூறும். அவையாவன: (1) காஞ்சியில் காமாக்ஷீ (2) மலயத்தில் பிராமரீ (3) கேரளத்தில் குமாரீ (4) ஆனர்த்தத்தில் (குஜராத்) அம்பா, (5) கரவீரத்தில் மஹாலக்ஷ்மீ, (6) மாலவத்தில் (உஜ்ஜயினியில்) காளீ, (7) பிரயாகையில் லலிதா, (8) விந்தியமலையில் விந்தியவாஸினீ, (9) காசியில் விசாலாக்ஷி (10) கயையில் மங்களாவதீ (11), வங்கத்தில் ஸுந்தரீ (12) நேபாளத்தில் குஹ்யகேச்வரீ.

**ஓ - ஜா - பூ - காதிகம் பீடம்** - ஓ, ஜா, பூ, கா என்ற நான்கெழுத்துக் களை முதல் எழுத்துக்களாகக் கொண்ட நான்கு தேவீபீடங்கள் எனப்பொதுவாக தந்திர நூல்கள் கூறும். **ஓட்டியாணம், ஜாலந்தரம்,**

**பூர்ணகிரி, காமபீடம்** என்று நான்கு திக்குகளில் நான்கு பீடங்களாக அவை விளங்குகின்றன. (ஸஹஸ்ரநாமத்தில் 375, 378, 379 ஆம் நாமங்களின் விளக்கங்களைக் காண்க)

**தேவியின் பீடங்கள் 51.** வாமகேசுவர தந்திரத்தின் நித்யா ஷோடசிகார்ணவப் பகுதியில் (8, 39-46) பீடநியாஸ முறையில் குறிப்பிடட 51 பீடங்கள் முன்பு (29, 13-3) தரப்பட்டுள்ளன. அ முதல் க்ஷ வரை உள்ள 51 மாத்ருகாக்ஷரங்களின் சக்தியை அவை வெளிப்படுத்துகின்றன. (காமரூபம் அ, வாராணஸீ ஆ என்றவாறு) அவற்றை ஒட்டியே உமானந்தரும் நித்யோத்ஸவத்தில் குறிப்பிடுகிறார்.

தக்ஷயாகம் நடைபெறும்போது ஸதீதேவி யோகாக்னியில் தன் உடலை எரித்துக்கொண்டாள். சிவன் எரியும் உடலைத் தோளில் சுமந்து பித்தனைப்போல் திரியலானார். மஹாவிஷ்ணு அவ்வுடலைத் துண்டம்துண்டமாக வெட்டி வீழ்த்தனார். அவை விழுந்த இடங்கள் பீடங்களாயின எனத் தேவீ பாகவதம் முதலியவைக் கூறும். இவற்றைத் தந்திரசூடாமணி என்ற நூல் தேவியின் பீடங்கள் எனக்கூறி, பீடத்தின் பெயர், அங்கு விழுந்த தேவியின் உடற்பகுதி, பீடசக்தியின் திருநாமம், க்ஷேத்திரத்தைக் காக்கும் பைரவர் இவற்றைப் பற்றிய விளக்கங்களை வரிசையாக அளிக்கின்றது. அவையாவன:-

1. ஹிங்குலா - தலையின் உச்சிக்குழி, கோடரீ, பீமலோசனர்.
2. சுர்க்கராரம் - முக்கண்கள், மஹிஷமர்த்தினீ, க்ரோதீசர்.
3. ஸுகந்தா - மூக்கு, ஸுநந்நதா, திரியம்பகர்.
4. காச்மீரம் - கழுத்தின் மேற்பகுதி, மஹாமாயா, திரிஸந்த்யேச்வரர்.
5. ஜ்வாலாமுகீ - நாக்கு, ஸித்திதா, உன்மத்தர்.
6. ஜாலந்தரம் - இடது ஸ்தனம், திரிபுராமாலினீ, பீஷணர்.
7. வைத்யநாதம் - இதயம், ஜயதுர்க்கா, வைத்யநாதர்.
8. நேபாளம் - முழங்கால்கள், மஹாமாயா, கபாலீ
9. மானஸம் - வலது முன்கை, தாக்ஷாயணீ, அமரர்.
10. உத்கலம் (விரஜா ஜகன்னாதம்) - தொப்புள், விமலா ஜகந்நாதர்.
11. கண்டகீ - வலது கன்னம், கண்டகீசண்டீ, சக்ரபாணி
12. பஹுலா - இடது கை, பஹுலா, பீருகர்
13. உஜ்ஜயினீ - இடது முழங்கை, மங்கள சண்டிகா, கபிலாம்பரர்.
14. சட்டலம் (சந்திரசேகரம்) - வலது கை, பவானி, சந்திரசேகரர்.

15. த்ரிபுரா - வலது கால், திரிபுரா, திரிபுரேசர்
16. த்ரிஸ்ரோதா - இடது கால், ப்ராமரீ, அம்பரர்,
17. காமகிரி-யோனி, காமா, மாதவர் (உமாநந்தர்)
18. கரதோயா (யுகாத்யா) வலதுகால் பெருவிரல், பூததாத்ரீ, க்ஷீரகண்டகர்.
19. காளீபீடம் - வலது கால் விரல்கள், காலிகா, நகுலீசர்.
20. பிரயாகம் - கைவிரல்கள், லலிதா, பவர்.
21. ஜயந்தீ - இடது கணைக்கால், ஜயந்தீ, க்ரமதீச்வரர்.
22. கிரீடம் - கிரீடம், புவநேசீஸித்தி (விமலா) ஸம்வர்த்தர்.
23. வாராணஸீ (மணிகர்ணீகா) குண்டலம், விசாலாக்ஷீ, காலபைரவர்.
24. கந்யாசிரமம் - முதுகு, சர்வாணீ, நிமிஷர்,
25. குருக்ஷேத்திரம் - வலது கணுக்கால், ஸாவித்ரீ, ஸ்தாணு,
26. மணிவேதகம். மணிக்கட்டு, காயத்திரீ, சர்வானந்தர்.
27. ஸ்ரீசைலம் - கழுத்துக்குக் கீழ்பகுதி/ மஹாலக்ஷ்மீ, சம்பராநந்தர்.
28. காஞ்சீ - எலும்பு, தேவகர்ப்பா, கங்காலர் (ருரு)
29. காலமாதவம் - இடுப்பின் வலதுபுறம் (நிதம்பம்) காலீ, அஸிதாங்கர்,
30. நர்மதா- இடுப்பின் இடதுபுறம், சோணா, பத்ரஸேநர்,
31. ராமகிரி - வலது ஸ்தனம், சிவானீ, சண்டர்.
32. பிருந்தாவனம் - கேசங்கள், உமா, பூநேசர்,
33. சுசி - மேல் பல்வரிசை, நாராயணீ, ஸம்ஹாரர்,
34. பஞ்சஸாகரம் - கீழ் பல்வரிசை, வாராஹீ, மஹாருத்ரர்.
35. கரதோயாநதியின் கரை - இடது புட்டச்சதை, அபர்ணா, வாமனர், ஸ்ரீபர்வதம் - வலது புட்டச்சதை, ஸ்ரீ ஸுந்தரி, ஸுந்தராநந்தர்,
36. விபாஷகம் - இடது கணுக்கால், காபலினீ, பீமர்.
37. பிரபாசம் - வயிறு, சந்திபாகா, வக்ரதுண்டர்.
38. பைரவகிரி - மேலுதடு, அவந்தீ, ஸம்பர்ணர்.
39. ஜலஸ்தலம் - (ஜனஸ்தானம்) - முகவாய்க்கட்டை, ப்ராமரீ, விக்ருதாக்ஷர்,
40. கோதாவரிக்கரை - வலது கன்னம், விச்வேசீ, தண்டபாணி,

ஸர்வசைலம் – இடது கன்னம், ராகணீ, அமாயீ.

41. ரத்நாவளி – வலதுதோள், குமாரீ, சிவர்,

42. மிதிலா – இடதுதோள், உமா, மஹோதரர்.

43. நலாஹாடீ – (நலிகா) குடல், காலிகா, யோகேசர்,

44. கர்ணாடகம் – காது, ஜயதுர்க்கா, அபீரு.

45. வக்ரேச்வரம் – மனம், மஹிஷமர்த்தினீ, வக்ரநாதர்,

46. யசோஹரம் = இடது முன்கை, யசோஹரா, சண்டர்.

47. அட்டஹாசம் – கீழ் உதடு, புல்லரா, விச்வேசர்.

48. நந்திபுரம் – ஹாரம், நந்தினீ, நந்திகேசுவரர்.

49. லங்கா – கால்சதங்கை, இந்திராக்ஷீ, ராக்ஷஸேச்வரர்.

50. மாகதம் – வலது கணைக்கால், ஸர்வாநந்தகரீ, வ்யோமகேசர்.

பைரவரை வழிபடாமல் பீடசக்தியை வழிபடுவதில் பயன் இல்லை. (35,40 என்ற இரு எண்களுக்கும் 2,2 பீடங்கள் உள்ளன. அதனால் மொத்தம் 53.)

கோரக்பூரிலுள்ள கீதா பிரஸ் வெளியிட்டுள்ள கல்யாண் என்ற இதழின் தீர்த்தாங்கம் என்ற ஆண்டு மலரில் வெளி வந்துள்ள ஸ்ரீ ஸ்வாமி கரபாத்திரி மஹாராஜ் அவர்களின் சக்தி பீட ரஹஸ்ய என்ற அருளுரை தேவியின் பீடங்கள் 51 என்று கூறி நித்யாஷோடசிகார்ணவத்தைப் பெரும்பாலும் அனுசரித்துள்ளது. அதிலுள்ள சில மாறுதல்கள் – பௌண்டிர வர்த்தனம், சந்திரபுஷ்கரணீ, ஸ்ரீபுரம், ஓங்காரம், ஜாலந்தரம், தேவீகோடம், கோலாபுரம், சித்ரா என்ற பெயர்களுக்குப் பதிலாக ரௌத்திர பர்வதம், சந்திரபுரம், ஸ்ரீபீடம், நர்மதாபீடம், கோட்டகம், கௌலகிரி, யோகனீ என்ற பெயர்கள் தரப்பட்டுள்ளன. ஜலேசம் எனும் பீடம் குறிப்பிடப்படவில்லை. சாயாச்சத்திரம் எனும் பீடப்பெயரைப் பிரித்து சாயா க்ஷத்திரம் என இரு பீடப்பெயர்களாக்கித் தரப்பட்டுள்ளது.

### தேவீ பீடங்களைப் பற்றி வழங்கும் மற்ற விவரங்கள்

**தேவீ பீடங்கள் 64 :** (சாரதாதிலகம்– ராகவபட்டர் உரை (1–85) 1. மாயா, 2. மங்களம் 3. நாகம் 4. வாமனம் 5. மஹாலக்ஷ்மீ 6. சரித்ரா 7. ப்ருகு 8. சாயாச்சத்திரம் 9. ஹிரண்யம் 10. ஹஸ்தினம் 11. மஹேந்திரம் 12. உட்டீசம் 13. சம்பாபுரம் 14. ஷஷ்டம் 15. க்ஷீரகம் 16. அஞ்சனம் 17. ஈச்வரபுரம் 18. ஏலா 19. சந்திரபுரம் 20. ஸ்ரீகிரி (ஸ்ரீசைலம்) 21. கோலா 22. குல்லகம் 23. பூர்ணகிரி 24. குருக்ஷேத்ரம் 25. ஏகலிங்கம் 26. அர்புதம்

27. காச்மீரம் 28. ஏகாம்ரம் 29. காஞ்சீ 30. மலயம் 31. கிரிவரம் 32.ஏகாகரம் 33. தூதம் 34. தேவீ கோட்டம் (தூததேவி-கோட்டம் எனச் சிலர்) 35. ஆம்ராதேசம் 36. ஜாலந்தரம் 37. ஸூரபி 38. மந்ஷாத்ரி 39. காசி 40. பிரயாகம் 41. த்ரிஸ்ரோதஸ் 42. காமகோட்டம் (ஸம்ஸ்கிருதப்பெயரே காமகோட்டம் என உள்ளது) 43. உஜ்ஜயினி 44. மதுரா 45. கோசலம் 46 கான்யகுப்ஜம் 47. உட்டியானம் 48. ஓங்காரம் 49. அட்டஹாஸா 50. விரஜா 51. குண்டினம் 52. ராஜகேஹம் 53. நேபாளம் 54. புண்ட்ரவர்த்தனம் 55. மாலவம் 56. பாஸீரம் 57. காமரூபம் 58. கேதாரம் 59. விந்த்யம் 60. மஹாமடம் 61. கோச்ருதி (கோகர்ணம்) 62. காம்பில்யம் 63. ஶ்ரீபீடம் 64. மருதீசம் என.

**தேவீ பீடங்கள் 108.** (தேவீ பாகவதம் 7-30, 53-89) பீடங்களும் பீடசக்திகளின் பெயர்களும் தரப்பட்டுள்ளன.

1. வாராணஸீ - கௌருமுகத்திலுள்ள விசாலாக்ஷீ, 2. நைமிஷாரண்யம் - லிங்கதாரிணீ 3. பிரயாகம்-லலிதா, 4. கந்தமாதனம்-காமுகீ 5. மானஸம் (தக்ஷிணம்) - குமதம். 6. மானஸம் (உத்தரம்) - விச்வகாமா. 7. கோமந்தம்-கோமதீ 8. மந்த்ரம்-காமசாரிணீ 9. சைத்ரரதம் - மதோத்கடா 10. ஹஸ்திநாபுரம்-ஜயந்தீ 11. கான்யகுப்ஜம்-கௌரீ 12. மலயாசலம்-ரம்பா 13. ஏகாம்ரம்-கீர்த்திமதீ 14. விச்வம்-விச்வேச்வரீ 15. புஷ்கரம்-புருஹூதா 16. கேதாரம்-ஸந்மார்க்கதாயினீ 17. ஹிமவான்-மந்தா, 18. கோகர்ணம்-பத்ரகர்ணிகா 19. ஸ்தாநேச்வரம்-பவனா 20. பில்வகம்-பில்வபத்ரிகா 21. ஶ்ரீசைலம்-மாதவீ 22. பத்ரேச்வரம்-பத்ரா 23. வராஹசைலம்-ஜயா, 24. கமலாலயம்- கமலா 25. ருத்ரகோடீ-ருத்ராணீ 26. காலஞ்ஜரம் - காளீ 27. சாலக்கிராமம் - மஹாதேவீ 28. சிவலிங்கம் - ஜலப்பிரியா 29. மஹாலிங்கம்-கபிலா 30. மா(மர்)கோடம் - முகுடேச்வரி 31. மாயாபுரீ - குமாரீட 32. ஸ்நதானம் - லலிதா 33. கயா - மங்களா 34. புருஷோத்தமம் - விமலா 35. ஸஹஸ்ராக்ஷம் - உத்பலாக்ஷீ 36. ஹிரண்யாக்ஷம் - மஹோத்பலா 37. விபாசா - அமோகாக்ஷீ 38. புண்ட்வர்த்தனம் 39. ஸுபார்சுவம் - நாராயணீ 40. த்ரிகூடம்-ருத்ரஸுந்தரி 41. விபுலம் - விபுலா 42. மலயாசலம் - கல்யாணீ 43. ஸஹ்யாத்ரி - ஏகவீரா 44. ஹரிச்சந்திரம் - சந்திரிகா 45. ராமதீர்த்தம்-ரமணா 46. யமுநா-மிருகாவதீ 47. கோடதீர்த்தம்-கோடவீ 48. மாதவவனம் - ஸுகந்தமா 49. கோதாவரீ - திரிஸந்த்யா 50. கங்காத்தவாரம்-ரதிப்பிரியா 51. சிவகுண்டம்-சுபாநந்தா

52. தேவிகாதடம்-நந்திநீ, 53. ருக்மிணீ-துவாரவதீ 54. பிருந்தாவனம்-ராதா 55,. மதுரா-தேவகீ 56. பாதாளம்-பரமேச்வரீ 57. சித்ரகூடம்-ஸீதா 58 விந்தியம் - விந்தியவாஸினீ 59. கரவீரம்-மஹாலக்ஷ்மீ 60 விநாயகம்-உமாதேவீ. 61. வைத்யநாதம்-ஆரோக்யா 62. மஹாகாலம்- மஹேச்வரீ 63. உஷ்ணதீர்த்தங்கள் - அபயா 64. விந்த்யபர்வதம்-நிதம்பா 65. மாண்டவ்யம்-மாண்டவீ 66. மாஹேசுவரீ - ஸ்வாஹா 67. சகலண்டம் - பிரசண்டா 68. அமரகண்டகம்-சண்டிகா 69. ஸோமேச்வரம் - வராரோஹா 70 பிரபாஸம்-புஷ்கராவதீ 71. ஸரஸ்வதீ (ஸமுத்ரகரையில்) -தேவமாதா 72. மஹாலயம் - மஹாபாகா 73. பயோஷ்ணீ-பிங்கலேசுவரி 74. கிருதசௌசம் - ஸிம்ஹகா 75. கார்த்திகம் - அதிசாங்கரீ 76. உத்பலாவர்த்தகம்-லோலா 77. சோணஸங்கமம்-ஸுபத்ரா 78. ஸித்தவனம்-மாதா (லக்ஷ்மீ) 79. பரதாசிரமம்-அநங்கா (லக்ஷ்மீ) 80. ஜாலந்தரம்-விச்வமுகீ 81. கிஷ்கிந்தா-தாரா 82. தேவதாருவனம்-புஷ்டி 83. காச்மீரம்-மேதா 84. ஹிமாத்ரி-பீமா 85. விச்வேச்வரம்-துஷ்டி 86. கபாலமோசனம்-சுத்தி 87. காயாவரோஹணம் - மாதா 88. சங்கோத்தரம்- தரா 89. பிண்டாரகம்-த்ருதி 90. சந்திரபாகா-கலா 91. அச்சோதம்-சிவதாரிணீ 92. வேணா-அம்ருதா 93. பதரீ-ஊர்வசீ 94. உத்தரகுரு-ஔஷதி 95. குசத்துவீபம்-குசோதகா 96. ஹேமகூடம்-மன்மதா 97. குமுதம்-ஸ்தயவாதினீ 98. அச்வத்தம்-வந்தநீயா 99. குபேரன் மாளிகை-நிதி 100. வேதங்கள்-காயத்திரீ 101. சிவனது பக்கம்-பார்வதீ 102. தேவலோகம்-இந்திராணீ 103. பிரும்மனின் வாய் - சரஸ்வதி 104. ஸூர்யபிம்பம் - பிரபா 105. பிராம்மீ முதலிய எட்டு மாதாக்கள் 106. பதிவிரதைகள் - அருந்ததீ 107. அழகிகள்-திலோத்தமா 108. சித்தம்-பிரும்மகலாசக்தி.

இந்தப் பீட வரிசையில் பாரதவர்ஷ-பூலோக அமைப்பிற்கு வெளிப்பட்ட பாதாளம், உத்தரகுரு, ஹேமகூடம், குமுதம், குபேரவனம், பிரும்மலோகம், தேவலோகம் முதலியவை இடம் பெறுகின்றன. அரசமரத்திலுள்ள புல்லுருவி (98) தேவீ பீடமாகிறது. பதிவிரதைகளும் அழகிகளும் மனமும் கூட பீடமாகின்றன.

**தேவீ பீடங்கள் 108.** (மத்ஸ்ய பிராணம் 13. 25-54) பெரும்பாலும் தேவீ பாகவத்தையே ஒட்டிப் பெயர்கள் அமைந்துள்ளன. மாறுபட்டுள்ள இடங்கள் மட்டும் கீழே தரப்பட்டுள்ளன.

4. கந்தமாதனம்-காமாக்ஷீ 6. அம்பரம் - விச்வகாயா 13. ஏகாம்பகம் - கீர்த்திமயீ 17. ஹிமவான்-நந்தா 33 கங்கா-மங்களா 36 கமலாக்ஷம்-மஹோத்பலா 40. விகூடம்-பத்ரஸுந்தரீ 44. ஹர்மசந்திரம்-சந்திரிகா 47. கோடிதீர்த்தம்-கோடவீ 49. குப்ஜாம்ரகம் - திரிஸந்த்யா 51. சிவகுண்டம்-ஸுநந்தா 64. விந்த்யகுகை-அம்ருதா 65. மகரந்தகம்-சண்டிகா 75. கார்த்திகேயம்-யசஸ்கரீ 78. ஸித்தபுரம்-மாதா 79 பரதாசிரமம்-அங்கனா 85 விச்வேசுவரம்-புஷ்டி 91. அச்சோதம்-சிவதாரிணீ 97. மகுடம்-ஸத்யவாதினீ மற்றவை தேவீ பாகவத்தில் உள்ளபடியே.

இந்த தேவீ பீடங்கள் எங்கு உள்ளன? இன்று அவைகளுக்கு என்ன பெயர் ஆங்காங்கு பீடசக்தியாக விளங்கும் தேவியின் திருநாமம் என்ன? இவைகளைப் பற்றி முழுவதும் அறிந்து கொள்ள இன்று இயலவில்லை. காரணங்கள் (1) புராணங்களிலும் தந்திர நூல்களிலும் குறிப்பிட்டுள்ள பெயர்களைக்கொண்டு அந்த இடத்தை இன்று அறிமுகப்படுத்த இயலாமை (2) விதேசிகளும் வேறு மதத்தவர்களும் பல தேசப்பகுதிகளை, அதிலும் முக்கியமாக நமது புனித க்ஷேத்திரங்களான காசி, அயோத்தி, ஸோமநாத் முதலியவைகளைக் கூட உருத்தெரியாமல் அழித்து விட்டனர். அந்த க்ஷேத்திரங்களில் சிலவற்றில் பின்னர் குடியேறிய மக்கள் க்ஷேத்திரங்களைப் புதுப்பித்துப் பாதுகாத்துள்ளனர். சில இடங்களில் அங்கு குடியேறிய மக்களும் வேறு மதத்தவர்களாகப் பலாத்காரத்துடன் மாற்றப்பட்டதால் அந்த வழிபட்ட இடங்களில் க்ஷேத்திரங்கள் புதுப்பிக்கப்பெறாமல் வழக்கொழிந்துவிட்டன. இன்று அவைகளை அடையாளம் காட்டுபவரில்லை (3) அடர்ந்த காடுகளிடையே உள்ள சில க்ஷேத்திரங்கள் ஸஞ்சாரக் குறைவால் அடையாளம் காட்ட முடியாமல் வழக்கொழிந்து விட்டன. (4) கங்கை, நர்மதை, யமுனை போன்ற ஆறுகளின் கரைகளில் உள்ளதாகக் குறிப்பிடப்பெறும் சில பீடங்கள் எங்குள்ளன என்று புரியவில்லை. (5) ஒரே பெயருள்ள பல க்ஷேத்திரங்கள் உள்ளன. எந்த க்ஷேத்திரத்தைப் பீடமாக நூல்கள் குறிப்பிட்டுள்ளன என நிர்ணயிக்க முடியவில்லை (6) சில கிழக்குப் பாகிஸ்தானம் போன்ற வேறு தேசமாக இன்று கருதப்படுமிடங்களில் உள்ளன.

கல்யாண் பத்திரிக்கையின் தீர்த்த அங்கம் பாரத தேசத்திலுள்ள சிறு, பெரும் க்ஷேத்திரங்கள் அனைத்தையும் ஒருவாறு தொகுத்துத் தந்துள்ளது. அதன் உதவிகொண்டு சக்தி பீடங்கள் பற்றிய விளக்கங்கள் அகராதி வரிசையில் இங்கு இடம் பெறுகின்றன. ஸதீதேவியின் உடற்பகுதி விழுந்த இடங்களாகக் கருதப்படுபவை, அவ்வாறு வழக்கிலுள்ளவை, இவைகளில் சில.

1. **அட்டஹாஸம்** – அஹ்மத்பூர் – காட்வா பாதையில் லாப்பூருக்கு அருகில் உள்ளது. தேவியின் கீழ் உதடு விழுந்த இடம்.

2. **அத்ரி ஆசிரமம்** – கேதாரத்திலிருந்து பதரி செல்லும் பாதையில் வாலகில்யா நதிக்கரையில் மண்டல் சட்டியின் அருகில் உள்ளது.

3. **அமரகண்டகம்** – (நர்மதாபீடம், சோணம்) – கட்னி – பிலாஸ்பூர் பாதையில் பேடராரோடு ரயில் நிலையத்திலிருந்து கபீர் சௌதரா சென்று அமர்கண்டக் செல்லலாம். அங்கு மேகலபர்வதத்தில் நர்மதை உற்பத்தியாகும் குண்டம் உள்ளது. அதுவே தேவீபீடம். அங்கிருந்து (3 கி.மீ) சோணபத்திரா நதி உற்பத்தியாகும் இடத்தில் சோணபத்ரேச்வரர் ஆலயம். அங்கு சோணா எனும் சக்தி உள்ளாள். பத்ரசோணர் (சோணபத்திரர்) அங்கு பைரவர். இடுப்பின் இடதுபுறம் விழுந்த இடம். சோணம் என்ற பீடம் டேஹரி ஆன் ஸோன் என்ற காசி – பாட்னா பாதையிலுள்ள க்ஷேத்திரம் எனச் சிலர்.

4. **அம்பரம்** – ஜெய்ப்பூரிலிருந்து (8 கி.மீ) ஆமோ–அம்பர், அங்குள்ள காளிகோயில், பம்பாய்–பூனா பாதையில் அம்பர்நாத்திலுள்ள அம்பரநாதர் கோவிலுக்குத் தெற்கில் உள்ள காளி கோயில் எனச்சிலர்.

5. **அர்புதம்** – அஹ்மதாபாத் – டெல்லி வழியில் ஆபூரோடு அங்கிருந்து (25 கி.மீ) ஆபூ மலை. அங்குள்ள குகைக் கோயில் அர்புதாதேவீ மந்திரம். அதனை அடுத்துள்ள ஆராஸுர் இல் உள்ள அம்பாஜீ மந்திரம் எனச் சிலர்.

6. **இந்திர பிரஸ்தம்** – இன்றைய தில்லி. குதுப்மினாருக்கு அருகில் யோனி பீடமாக அமைந்த யோகமாயா கோயில், ஓக்லா கிராமத்தில் உள்ள காளிகோயில். பல போர்களின் அழிபட்ட நகரமானதால் பீட இடம் தெரியவில்லை.

7. **ஈச்வரம்** – கிழக்கு பாகிஸ்தானில் குல்னா ஜில்லாவில் ஈச்வரிபூர் கிராமம் (ஜெஸ்ஸுர், ஜைஸோர்) யசோரம்–யசோஹரம் என்றும் சில நூல்கள் கூறும். தேவியின் இடது முன்கை விழுந்த இடம். தேவியின் பெயர் யசோரா (ஈச்வரீ).

8. **உட்டியான பீடம்** – (ஒட்டியாணபீடம்) உத்கலபீடம் உட்டீசம், ஹவுரா–வால்டேர் வழியில் குர்தாரோடு வழியே புரி செல்லலாம். இந்த க்ஷேத்திரம் சங்கு வடிவில் அமைந்ததால் சங்கக்ஷேத்திரம். தேவியின் தொப்புள் விழுந்த இடம். ஜகன்னாத மந்திரத்தில் விமலாதேவி மந்திரம் உள்ளது. அது சக்தி பீடம். ஜகன்னாதரே பைரவர். விமலா எனும் வீட சக்தியை கொண்ட பீடம் ஒன்றை சங்கர பகவத்பாதர் அமைத்த இடம்.

9. **உஜ்ஜயினீ - மாலவம்** - உஜ்ஜைஜன் நகரில் சிப்ரா நதிக்கரையில் ருத்திர ஸாகரத்திற்கு அருகேயுள்ள ஹரஸித்தி தேவி மந்திரத்தில் ஸ்ரீயந்திரத்தின் அருகே முழுங்கை விழுந்த இடம். இந்தச் சக்தி பகலில் இங்கும் இரவில் குஜராத்-போர்பந்தருக்கு அருகில் மூலத்துவாரகா-அதன் அருகே மியாகாம்வ் அங்குள்ள ஹர்ஷத மாதா கோவிலிலும் உறைகிறாள் என்று வரலாறு.

10. **உஷ்ணதீர்த்தங்கள்** - ருத்திரப் பிராயக்கிலிருந்து கேதாரம் செல்லும் பாதையில் கௌரிகுண்டம். இதைப்போல் இமயமலைப் பகுதிகளில் உள்ள வென்னீர் ஊற்றுக் குண்டங்களில் உறையும் உஷ்ண சக்தியாகத் தேவி வழிபடப் பெறுகிறாள்.

11. **ஏகலிங்கம்** - உதயப்பூர் நாதத்துவாரகா பாதையில் (18 கி.மீ) வனவாஸினீ தேவி கோயில்

12. **ஏகாம்ரம்** - ஓரிஸ்ஸாவின் தலைநகரான புவனேச்வரை ஏகாம்பரம் எனப் புராணம் கூறும். லிங்கராஜ் மந்திருக்கு அருகே புவனேசுவரி (கோபாலினீ) பார்வதி ஆலயம். காஞ்சியில் ஏகாம்ரேசர் ஆலயம்.

13. **ஏலாபுரம்** - (எல்லோரா) நாசிக்கூடா - மன்மாடு பாதையில் ஔரங்காபாத் அல்லது தௌலதாபாத் அல்லது எல்லோரா ரோடு சென்று வேரூல் கிராமம். அங்கு குச்மா என்பவளால் ஆராதிக்கப் பெற்ற குஸுமேச்வரர் (குஸ்ருணேச்வரர், க்ருஷ்ணேச்வரர்) ஆலயத்தில் உள்ளது.

14. **ஓங்காரம்** - அஜ்மேர்-காண்ட்வா லைனில் ஓங்காரேசுவரர் ரோடு, அங்கிருந்து (10 கி.மீ) நர்மதையைக் கடந்து மாந்தாதா மலை. அங்கு நர்மதையும் அதன் கிளையான காவேரியும் சூழ நடுவே ஓங்காரேச்வரர் மந்திரம், காவேரியும் நர்மதையும் கூடுமிடத்திலுள்ள ஸப்தமாத்ரா என்ற ஸப்தமாத்ரு மந்திரம் என்பர் சிலர்.

15. **கண்டகீ** - சாலக்கிராமம். நேபாளத்தில் கண்டகீ நதியின் உற்பத்தியிடமான தாமோதர குண்டத்திலுள்ள முக்தி நாத க்ஷேத்திரம். தேவியின் வலது கன்னம் விழுந்த இடம். (ஸாலக்கிராமங்கள் தோன்றுமிடம்)

16. **கந்தமாதனம்** – ராமேசுவரத்திலுள்ள இப்பெயருள்ள சிறு குன்று. அதன் அருகே பிரும்மதீர்த்தக்கரையில் பத்ரகாளி கோயில் என்பர்.

17. **கபாலமோசனம்** – ஸஹாரான்பூர் – அம்பாலா பாதையில் ஜகாதாரீ. அங்கிருந்து ஆதிபதரீ சென்று மலையில் தேவீமந்திரமும் தீர்த்தமும். பதரீநாத்திலுள்ள பிரும்மகபால தீர்த்தம் என்பர் சிலர்.

18. **கமலாலயம்** – திருவாரூரிலுள்ள தியாகேசர் ஆலயத்தில் கமலாம்பாதேவியின் ஆலயம். அக்ஷரபீடம்.

19. **கயா** – கயையில் பிரும்மஸரஸின் அருகில் மலை மேலுள்ள மங்களாதேவி மந்திர். பீம கயாவின் தென்மேற்கிலும் பஸ்மகூடம் பக்கத்தில் மங்களாதேவி ஆலயம் என்பர் சிலர்.

20. **கரதோயா**– கிழக்குப் பாகிஸ்தானில் பொகரா ஸ்டேஷனிலிருந்து தென்மேற்கில் (32 கி.மீ) பவானிபூர் கிராமத்தில் கரதோயா எனும் நதிக்கரையில் பூததாத்ரீ ஆலயம். தேவியின் கால்பெருவிரல் விழுந்த இடம். இடது புட்டச்சதை விழுந்த இடம் என தந்திர சூடாமணி.

21. **கரவீரம்** – கோலாபுரம் – சர்க்கராரம், ஸாங்கிலீ-மீரஜ்-கோல்ஹாபூர் பாதையில் கோல்ஹாப்பூர். அங்குள்ள மஹாலக்ஷ்மீ கோயில். தேவியின் முக்கண்கள் விழுந்த இடம் (நா. 210)

22. **கன்யகாசிரமம்** – குமாரி (கேரளம்) கன்யாகுமாரியிலுள்ள கன்யாகுமாரி ஆலயம். அதன் அருகிலுள்ள பத்திரகாளிகோயில் எனச் சிலர். தேவியின் முதுகு விழுந்த இடம்.

23. **காச்மீரம்** – அமர்நாத் குகையிலுள்ள சிவலிங்கத்தின் அருகே பனியாலான சக்திபீடம். தேவியின் கழுத்தின் மேல்பகுதி விழுந்த இடம்.

24. **காஞ்சி** – காஞ்சீபுரத்தில் காமாக்ஷீ ஆலயத்திற்கும் கந்தகோட்டத்திற்கும் இடையேயுள்ள மஹாகாளி கோயில். தேவியின் எலும்புகள் விழுந்த இடம்.

25. **காமகோஷ்டம் – காமகோட்டம் – காமபீடம் – காமராஜபீடம்.** காமாக்ஷியம்மன் கோவிலில் அமைந்துள்ள பிலாகாசம். தேவியின் ஒட்டியாணம் விழுந்த இடம். காமாக்ஷீ-காமகோடி எனும் பீட சக்தியைக் கொண்ட பீடத்தை ஸ்ரீ சங்கர பகவத் பாதர் அமைத்த இடம்.

26. **காமரூபம் – காமகிரி-காமாக்யா** – கௌஹாதிக்கருகே பிரும்மபுத்திரா நதிக்கரையில் காமகிரியில் அமைந்த யோனி வடிவில்

அமைந்த மூர்த்தி கொண்ட காமாக் கயா கோயில். காமேச்வரி, காமரூபிணீ, காமா என்ற பெயர் கொண்ட தேவி., தேவியின் யோனி விழுந்த இடம். பிரும்மாபுத்திரா நதியின் நடுவே உள்ள உமானந்த என்ற திட்டில் உமாநந்த பைரவர் இந்த பீடத்தின் காப்பாளரான பைரவர். அதனையே ஒட்டியான பீடம் என காமாக்ஷீவிலாஸம் கூறும்.

27. **காலஞ்ஜரம்** – மானிக்பூர் – ஜான்ஸி பாதையில் பிதௌஸா. அங்கிருந்து 28 கி.மீ. காலஞ்ஜர் என்ற கிராமம். அருகே காலஞ்ஜரகிரி, வனகண்டேசுவர சிவ மந்திரம்.

28. **காலமாதவம்** – புரியில் உள்ள ஜகன்னாத மந்திரின் அருகே நீலமாதவரின் மந்திரமென்பர் சிலர். அதன் அருகேயுள்ள புவனேசுவரீ என்பர் சிலர். தேவியின் இடுப்பின் வலது புறம் விழுந்த இடம்.

29. **காலேச்வரம்** – காசி காலபைரவர் ஆலயத்தின் அருகே காலேசுவரர் கோயிலிலுள்ள காளீ.

30. **காளீ பீடம்** – கல்கத்தாவின் காளிகோயில். டாலிகஞ்சுக்கு வெளியே உள்ள ஆதிகாளீ மந்திர் என்பர் சிலர். தேவியின் கால் கட்டைவிரலைத் தவிர மற்ற வலது கால்விரல்கள் விழுந்த இடம்.

31. **கான்யகுப்ஜம்** – கனௌஜ்-கான்பூரிலிருந்து 80 கி.மீ க்ஷேமகரீ தேவி ஆயலம்.

32. **கிரிபுரம்** – புராணங்களில் ஆனர்த்தம் – ரைவதககிரி. குஜராத்தில் ஜுனாகத்திற்கருகே கிர்நார்மலை. அதில் அம்பிகா சிகரத்திலுள்ள அம்பாஜீ மந்திர். மஹாகாலீ சிகரத்திலுள்ள மஹா காளீ மந்திர் என்பர் சிலர். இதனையே ப்ரபாஸம் என்றும் சொல்வதுண்டு.

33. **கிரீடம்** – ஹவுரா-பர்ஹர்வா பாதையில் அஜீம்கஞ்ஜ், 2 கி.மீ தூரத்தில் பட்நகர். அங்கு கங்கைக்கரையில் உள்ள தேவி ஆலயம். தேவியின் கிரீடம் விழுந்த இடம்.

34. **கிஷ்கிந்தா** – ஹம்பியில் துங்கபத்ரா நதிக்கரையில் உள்ள ஆனகுத்தி கிராமம். அங்குள்ள சிந்தாமணி குகைக் கோயில் என்பர்.

35. **குருக்ஷேத்திரம்** – குருக்ஷேத்திரத்தில் ஸ்தாணுசிவ மந்திரத்தின் பக்கத்திலுள்ள பத்திரகாளீ மந்திரம். தேவியின் வலது கணுக்கால் விழுந்த இடம்.

36. **குலாந்தகம்** – குந்தாபூர் – சிகமகளூர் பாதையில் குல்லூர் மூகாம்பிகா கோயில்.

37. **குல்லகபுரம்** – குசீ நகருக்குத் தென்கிழக்கில் குல்குலா, குல்யா எனும் நதிக்கரையில் குருகுல்லா தேவி மந்திரம்.

38. **கேதாரம்** – இமயமலையிலுள்ள கேதாரநாத க்ஷேத்திரம்.

39. **கைலாஸம்** – திபேத்தில் மானஸரோவர் அருகே உள்ள திருக்கைலாயமலை.

40. **கோகர்ணம்** – கர்னாடக தேசத்திலுள்ளது. குந்தாப்பூர், உடுப்பி, ஹுப்ளி முதலய இடங்களிலிருந்து செல்லலாம். க்ஷேத்ர தேவதையான பத்ரகாளீ, சாந்தகாமாக்ஷீ என்பர் சிலர்.

41. **கோதாவரி தடம்** – ராஜமஹேந்திரிக்கருகில் கோதாவரிக்கரையில் குவ்வூரில் கோடி தீர்த்தம் என்பர் சிலர். தேவியின் வலது கன்னம் விழுந்த இடம்.

42. **கௌலகிரி – நாசிக் – திரியம்பக்.** திரியம்பகத்தைச் சுற்றியுள்ள ஒரு மலை கௌலகிரி. கங்காத்துவாரம் என்றும் கூறுவர். அங்குள்ள கௌலாம்பிகை கோயில்.

43. **சங்கோத்தாரம்** – கச்சத்தீவில் பேட்துவாரகா அருகில் உள்ள சங்கஸரோவர் எனும் தீர்த்தம்.

44. **சட்டலம்** – கிழக்குப் பாகிஸ்தானில் ஸீதாகுண்டம் அருகில் சட்காம்வ். அங்கு சந்திரநாத் மலையில் சந்திரசேகர சிவன் கோயிலில் உள்ள பவானி கோயில். தேவியின் வலது கை விழுந்த இடம்.

45. **சண்டீ தலம்** – கல்கத்தா–தத்புகூர் பன்காம்வ் பாதையில் ஸியால்தஹ். அங்கிருந்து (55 கி.மீ) கோவர்டாங்கா, அதன் அருகில் காண்டுரா சண்டீதலா கிராமம், ஆலமரத்தின் அடியில் மங்கள சண்டீ கோயில், தேவியின் கை வளைகள் விழுந்த இடம்.

46. **சாயாசத்திரம்** – பம்பாய் – ரயிச்சூர் வழியில் குல்பர்கா. அங்கிருந்து நாராயணபுர் கிராமம். சாயாபகவதி கோயில்.

47. **சித்ரகூடம்** – மாணிக்பூர் – ஜான்ஸீ பாதையில் சித்ரகூடம். அந்த மலைச்சிகரமே பீடம். ஸாதனாவிலிருந்து (35 கி.மீ) மைஹர் மலை மேலுள்ள சாரதாதேவி ஆலயம் என்பர் சிலர்.

48. **சிவலிங்கம்** – விசாகபத்தனம் – வாலாஜாபேட் வழியில் ஷோலிங்கம், சிவன் கோவிலிலுள்ள அம்ருதவல்லி தேவி கோயில்.

49. **சுசி** – கன்யாகுமாரிக்கடுத்த சுசீந்தரம் எனச் சிலர். ஸடதாணு சிவன் கோயில். தேவியின் மேல் பல்வரிசை விழுந்த இடம். சுசி–அக்னி தத்துவம். அதன் விளக்க இடமாகிய திருவண்ணாமலையில் அருணாசலேசுவரர் கோயிலின் பின்புறத்தில் ஜோதிவடிவமான மலை என்பர் சிலர்.

50. **துவாரகா** – துவாரகையில் துவாராகாதீசர் கோயிலிலுள்ள அம்பாஜீ. காளிகா எனும்பீட சக்தி. சங்கர பகவத்பாதர் இந்த பீடசக்தியைக் கொண்டு பீடம் அமைத்த இடம். சாரதா பீடசக்தி எனச் சிலர்.

51. **தூதம்** – பம்பாய் பரோடா வழியில் பரூச். நர்மதை நதிக்கரையில் தூதபாபா தேவி ஆலயம். ஸௌபாக்ய ஸுந்தரி எனும் தீர்த்தம்.

52. **த்ரிகூடம்** – ஹவுரா–பாட்னா வழியில் ஜஸீடிஹ் ரயில் நிலையத்திலிருந்து (6 கி.மீ) வைத்யநாத் தாம்–தேவகர். அங்கிருந்து (16 கி.மீ) திரிகூடமலை. திரிகூடேசுவரர் கோயில்.

53. **த்ரிபுரா** – திரிபுரா அருகில் ராதாகிசோர்பூர் கிராமத்திலிருந்து (2 கி.மீ) தென்கிழக்கில் மலையிலுள்ள திரிபுரசுந்தரீ கோயில். தேவியின் வலது கால் விழுந்த இடம்.

54. **த்ரிஸ்ரோதா** – வங்கத்தில் ஜல்பாகுரி ஜில்லாவில் போதா இலாகாவில் சால்வாடீ கிராமத்தில் திரிஸ்ரோதா (டீஷ்டா) நதியின் கரையில் உள்ளது. தேவியின் இடதுகால் விழுந்த இடம்.

55. **நந்தீபுரம்** – ஹவுரா – க்யூல் வழியில் ஸைந்தியா ரயில் நிலையத்தனருகில் தென்கிழக்கில் நந்திபூர் கிராமத்தில் ஆலமரத்தடியில் அமைந்த கோயில். தேவியின் கழுத்தாரம் விழுந்த இடம்.

56. **நலஹாடீ** – ஹவுரா–க்யூல் வழியில் நல்ஹாடீ ரயில் நிலையத்திலிருந்து தென்மேற்கில் (3 கி.மீ தூரத்தில்) உள்ளது. தேவியின் குடல் (தலைநெளியணி என்பர் சிலர்) விழுந்த இடம்.

57. **நேபாளம்** – நேபாளத்தில் பசுபதிநாத்தில் பாக்மதீ நதிக்கரையில் உள்ள குஹ்ரயேச்வரி கோயில், தேவியின் முழங்கால் விழுந்த இடம்.

58. **நைமிஷம்** – உத்தர ரயில்வே – பாலாமாஊரிலிருந்து 25 கி.மீல் நைமிஷாரண்யம் (நைமிஸார்) உள்ளது. அங்கு பஞ்சபிரயாக தீர்த்தக் கரையிலுள்ள லலிதாதேவீ மந்திரம். க்ஷேமகாயா மந்திரம் என்பர் சிலர்.

59. **பதரீ** – நரநாராயணர்கள் தவமிருக்கும் பதரீ க்ஷேத்திரம். புத்தர்கள் காலத்தில் அகற்றப்பெற்ற பதரீநாதர் ஸாலக்கிராமத்தை ஸ்ரீ சங்கரர் அலகநந்தையிலிருந்து எடுத்துப் பிரதிஷ்டை செய்த இடம்.

60. **பரதாசிரமம்** – அயோத்திலிருந்து 25 கி.மீ. தூரத்திலுள்ளது.

61. **பஹுலா** – வங்கத்தில் அஹ்மத்பூர் – கட்வா வழியில் கேதுப்பிரும்மம் எனும் கிராமத்தில் உள்ளது. தேவியின் இடது கை விழுந்த இடம்.

62. **பிண்டாரகம்** – துவாரகையிலிருந்து 30 கி.மீ. உள்ளது பிண்டஸரோவரம் எனும் தீர்த்தம். இதில் பிண்டம் போட்டால் மிதக்கும். அமிழ்ந்து விடாது. அந்த தீர்த்தத்தில் திருதி எனும் சக்தி (நா. 446)

63. **பிரயாகம்** – பிரயாகில் அலோபீதேவீ மந்திரம். அக்ஷய வடத்தின்அருகேயுள்ள லலிதாதேவீ மந்திரம் என்பர். நகரின் நடுவே மீர்பூரிலுள்ள லலிதா தேவீ மந்திரம் என்பர் சிலர். தேவியின் கைவிரல் விழுந்த இடம்.

64. **பிருகு** – பம்பாய் –– பரோடா வழியில் பரூச் (பிருகுகச்சம்) நர்மதைக் கரையில் உள்ள மஹாருத்திர எனும் ஊரில் சங்கரீதேவி ஆலயத்தின் எதிரில் சாக்தகூபம் எனும் தீர்த்தம். உத்தர ரயில்வேயில் குர்ஜா – மேரட் ஸிடி வழியில் புலந்தசஹருக்கடுத்த கர்ணவாஸ், இதனை பிருகு க்ஷேத்திரம் என்பர். அங்குள்ள கல்யாணீதேவீ மந்திரம் என்பர் சிலர்.

65. **பிருந்தாவனம்** – மதுரா– பிருந்தாவனம் ரோட்டில் பிருந்தாவனத்திலிருந்து (3 கி.மீ) பூதேச்வர மஹாதேவ மந்திரம். தேவியின் கேசங்கள் விழுந்த இடம்.

66. **பில்வகம்** – ஹரித்துவாரத்தில் ஹரிகீபைடீ போகும் வழியில் கௌரீ குண்டத்தினருகே பில்வகேசுவர மஹாதேவர் ஆலயம். காமராஜ கௌல ஸம்பிரதாயத்தில் நடந்து வரும் காளீ மந்திரம் என்பர் சிலர்.

67. **புருஷோத்தமம்** – (உட்டியானபீடம் காண்க) புரியிலுள்ள விமலாதேவீ மந்திரம். பர்ஹாம்பூரினருகே புருஷோத்தம் எனும் ஊரில் மலைமேல் தாராதரிணீ கோயில் என்பர் சிலர்.

68. **புஷ்கரம்** – அஹமதாபாத் – டெல்லி வழியில் அஜ்மேர். (மனுவின் பேரர் அஜமீடர் எனும் பேரரசர். அவரது பெயரைத் தாங்கும் நகரம் அஜமீடம்) 10 கி.மீ. புஷ்கரம் என்ற தீர்த்தம் ஸாவித்ரீ – காயத்ரீ மந்திரம், தேவியின் மணிக்கட்டு விழுந்த இடம்.

69. **பூர்ணகிரி** – (நா.376) பிலிபித்–டனக்பூர் சென்று சாரதா நதிக்கரையில் நேபாள எல்லையில் பூர்ணகிரி – மலையே பீடம். இங்கு மரங்களை வெட்டுவதில்லை. வீட்டிற்கு விலக்கானவர், அசுத்தமானவர் செல்வதில்லை. இதனையே பிரதான சக்தியாகக் கொண்ட பீடத்தை ஸ்ரீசங்கரபகவத்பாதர் அமைத்த இடம் மலையில் உச்சியிலுள்ள மஹாகாளி கோயில்.

70. **பைரவபர்வதம்** – உஜ்ஜயினிக்கருகே சிப்ரா நதிக்கரையில் உள்ளது. தேவியின் உதடு விழுந்த இடம்.

71. **மகதம்** – பாட்னாவில் மஹாராஜகஞ்ஜிலுள்ள படீபடனேச்வரீ மந்திரம். தேவியின் வலது கணைக்கால் விழுந்த இடம்.

72. **மங்களம்** – மங்களாபுரம் (மங்களூர்) மங்களா ஆலயம்.

73. **மணிவேதிகம்** – புஷ்கரத்தினருகே காயத்ரீ மலையின் மேல் உள்ளது. தேவியின் மணிக்கட்டு விழுந்த இடம்.

74. **மதுரா** – மதுராவில் ஸரஸ்வதீ மந்திருக்கருகில் உள்ள சாமுண்டா மந்திரம், ஸதியின் கேசங்கள் விழுந்த இடம்.

75. **மருதீசம்** – மாருதேச்வரம் – காளஹஸ்தியில் வாயு தத்துவலிங்கமான சிவன் கோவிலில் ஞாநப்பிரஸூநாம்பிகா ஆலயம். ஸதியின் வலது தோள் விழுந்த இடம்.

76. **மலயம்** – ஸ்ரீசைலம் – சுபர்வதம் – ஸ்ரீ சைலத்தில் உள்ள பிரமராம்பிகா ஆலயம். மன்மாட்–காசிக்கூடா வழியில் கர்நூல் வழியே செல்லலாம். தேவியின் கழுத்தின் கீழ்ப்பகுதி விழுந்த இடம் (நா. 458) மலயாசலம் மலையாளம் என்பர் சிலர். அங்கு பகவதி வடிவினள்.

77. **மஹேந்திரம் - மாஹேந்திரீ** - ஒரிஸ்ஸா - கஞ்சம் ஜில்லாவில் மண்டாஸா ரோடுக்கருகில் உள்ள மலை. மலையே தேவியின் வடிவம்.

78. **மாதவவனம்** - மதுராவிலிருந்து 8 கி;மீ. தூரத்திலுள்ள மதுவனம்.

79. **மாயா - ஹரித்துவாரம்** - ஹரித்துவாரில் விஷ்ணுகாட்-பைரவ அகாடா பக்கத்திலுள்ள மாயாதேவி கோயில் - மூன்று தலையுள்ளவள் - த்ரிமஸ்தகீ.

80. **மானஸம்** - திப்பத்தில் கைலயங்கிரிக்கருகே உள்ள மானஸ ஸரோவரம் (மானஸரோவர்) எனும் ஏரி. தேவியின் வலது முன் கை விழுந்த இடம்.

81. **மாஹேச்வரம் - மாஹிஷ்மதீ** - அஜ்மேர்-காண்ட்வா லைனில் பட்வாஹா ரயில் நிலையத்திலிருந்து (55 கி.மீ) நர்மதையின் வடகரையில் மஹேச்வரம். ஸுரேச்வரர் எனப்புகழ் பெற்ற சங்கரபகவத்பாதரின் சீடர் மண்டனர் வாழ்ந்த ஊர். பவானி அல்லது ஸ்வாஹாதேவியின் கோயில். மஹேசுவரலிங்கம் நர்மதையில் மூழ்கி இருக்கும். கோடையில் மட்டும் வெளியாகும்.

82. **மிதிலா** - நேபாள இந்திய எல்லையிலுள்ள ஜனக்பூரிலிருந்து 50கி.மீ. உச்சைட் என்ற ஊரில் உள்ள துர்க்காமந்திரம். உச்சைட்டிலிருந்து 14 கி.மீ தூரத்தில் வனதுர்க்கா மந்திரம். தேவியின் இடதுதோள் விழுந்த இடம். ஸஹர்ஸா ரயில் நிலையத்தின் அருகில் வனகாம் ஹிம்ஸீ கிராமத்தில் உள்ள உக்ரதாரா மந்திரம். தேவியின் கண்கள் விழுந்த இடம் என்பர் சிலர்.

83. **முத்ராக்ராமம்** - வங்கத்தில் நவத்வீபதாம் அருகே மோக்ராம். (10 கி.மீ) அங்குலீயக சண்டீகோயில். தேவியின் மோதிரம் விழுந்த இடம்.

84. **யுகாத்யா** - பர்த்வான் ஸ்டேஷனிலிருந்து (32 கி.மீ) வடக்கே க்ஷீரக்கிராமம். தேவியின் வலதுகால் பெருவிரல் விழுந்த இடம் என்பர் சிலர்.

85. **ரத்நாவளீ** - குளித்தலைக்கருகில் ரத்னாசலம்-ரத்னகிரி அராளகேசி அம்மன் கோயில். இதனைச் சுற்றி குருகுல்லா (நௌகாம்பிகா - தோணியம்மன்) கோவில். திம்மாச்சிபுரத்தில் மார்த்தண்ட பைரவரின் (மல்லாரி மல்லாரப்பன்) கோவில். கருப்பத்தூரிலுள்ள வாராஹீ (ஸப்தமாதா) கோவில், இந்தச் சூழலிலுள்ள ரத்னாசலம் பீடம் என்பர் சிலர். தேவியின் வலதுதோள் விழுந்த இடம்.

86. **ராமகிரி** – சித்திரகூடம் என்பர சிலர். அதன் அருகில் மைஹறில் உள்ள சாரதா மந்திரம் என்பர் சிலர்.

87. **வக்ரேச்வரம் – வக்த்ரேச்வரம் – அஷ்டாவக்ரேச்வரம்– வஸ்த்ரேச்வரம்** – ஒண்டால் – ஸைந்தியா வழியில் துப்ராஜ்பூரிலிருந்து (10 கி.மீ) வடக்கே பாபஹரா–வெந்நீர் ஊற்றுக்களுக்கருகில் மயானத்தில் உள்ளது. தேவியின் மனம் விழுந்த இடம். வங்கத்தில் ஸுந்தரி எனத் திரிபுராரஹஸ்யம் குறிப்பிடுமிடம் இதே என்பர் சிலர்.

88. **வராஹசைலம்** – நேபாளத்தில் கோசீ (கௌசிகீ) நதிக்கரையில் தவளாகிரியில் கோகாமுகம் எனும் வராஹக்ஷேத்திரத்தில் உள்ளது.

89. **வஜ்ரேசுவரீ** – பதான்கோட்–காங்க்டா அருகே மஹா மாய கோயில் வஜ்ரேச்வரீ (வித்யேச்வரீ) எனும் நித்யாதேவியாக வழிபடப்படுபவள். தேவியின் முண்டம் விழுந்த இடம் என்பர். வெள்ளி பீடத்தில் வாக்தேவி யந்திரம் உள்ளது. ஜாலந்தர பீடத்தின் துணை பீடம் என்பர்.

90. **வாராணஸீ** – காசியில் மணிகர்ணிகா கட்டத்தின் அருகில் விசாலாக்ஷி மந்திரம். தேவியின் குண்டலங்கள் விழுந்த இடம். காலபைரவர் இந்தப் பீடத்தில் காவல் தெய்வமான பைரவர்.

91. **விந்தியம்** – வடக்கு ரயில்வே மிர்ஜாப்பூர் விந்தியாசல் ரயில் நிலையம். கங்கைக்கரையில் விந்தியவாஸினீ, (கௌசிகீ தேவி) இத்தேவியை மஹாலக்ஷ்மீ என்றும், காளீகோயிலில் உள்ளவளை மஹாகாளீ என்றும், அஷ்டபுஜா கோவிலில் உள்ளவளை மஹா ஸரஸ்வதீ என்றும் துர்க்காவின் மூன்று மூர்த்திகள் என்பர்.

92. **விபாசம்** – விபாஷம் – தாம்ரலிப்தம் – வங்கத்தில் மிடனாபூர் மாவட்டத்தில் பஞ்சகுரா ரயில் நிலையத்தினருகே ரூபநாராயண (விபாசா) நதிக்கரையில், தாம்பரலிப்தி (தமலுக்)யிலுள்ள காளி கோயில். தேவியின் இடது கணுக்கால் விழுந்த இடம்.

93. **விரஜா** – யாஜ் (ஜாஜ்)பூரில் பிரும்மகுண்டத்தின் அருகில் விரஜா தேவீ மந்திரம். விரஜாநதியே தேவி எனச் சிலர். புரிஜகன்னாத மந்திரத்தில் உள்ள விமலாதேவீ மந்திரம் என்பர் சிலர்.

94. **விராடம்** – ஜெய்ப்பூரிலிருந்து (64 கி.மீ) வடக்கே வைராட் கிராமம், தேவியின் இடதுகால் விரல்கள் விழுந்த இடம்.

95. **வைத்யநாதம்** – ஹவுரா – பாட்னா வழியில் ஜஸீடீஹ் வழியே வைத்யநாத் தாம் (தேவகர்) ஜயதுர்க்காதேவி மந்திரம், தேவியின் இதயம் விழுந்த இடம்.

96. **ஜலஸ்தலம்** – திருச்சிக்கருகே திருவானைக்காவில் ஜலதத்துவேசுவரராக விளங்கும் ஜம்புநாதர் கோயிலில் அகிலாண்டேசுவரி கோயில் என்பர் சிலர். ஸ்ரீசைலத்திலுள்ள பிராமரீ என்பர். தேவியின் முகவாய்கட்டை விழுந்த இடம்.

97. **ஜயந்தீ** – அஸாமில் ஷில்லாங்கிலிருந்து 52 கி.மீட்டரிலுள்ள ஜயந்தியா மலையில் பர்உர்பாக் கிராமத்தில் உள்ளது. தேவியின் இடது கணைக்கால் விழுந்த இடம்.

98. **ஜாலந்தரம்**– பஞ்சாப்பின் முக்கிய நகரமான ஜலந்தர். விச்வமுகீதேவீ மந்திரம். ஸ்தன வடிவில் உள்ளவள். தேவியின் இடது ஸ்தனம் விழுந்த இடம்.

99. **ஜ்வாலாமுகீ** – பஞ்சாப்பிலுள்ள ஜ்வாலாமுகீ ரோட்டில் இருந்து (21 கி.மீ) ஜ்வாலை வடிவில் உள்ளது. தேவியின் நாக்கு விழுந்த இடம்.

100. **ஸ்ரீபர்வதம்** – காச்மீர் லடாக்கில் உள்ளதெனச் சிலர். அஸாம் – ஸில்ஹட் வழியில் ஸில்ஹட்டின் அருகே உள்ள ஜைன்பூரில் உள்ளதென்பர் சிலர். தேவியின் வலதுபுட்டச் சதை விழுந்த இடம்.

101. **ஸந்நதி** – ரய்ச்சூர் – யதுகிரி வழியில் ஷாஹ்புர் (ஸகரபுரம்) ஸகரர் ஆண்ட இடம். அதில் (15 கி.மீட்டரில்) ஸந்நதி கிராமம். சந்திரேசுவரர் ஆலயத்திலுள்ள தேவி.

102. **ஸாரநாதம்** – காசிக்கருகே புத்த க்ஷேத்திரம். தேவிபீடம் அறியப்பெறவில்லை.

103. **ஸித்தபுரம்** – தர்மாரண்யம் எனப் புராணத்தில் கூறப்படுவது. கபிலர் பிறந்த இடம். அஹமதாபாத் – டெல்லி வழியில் ஸித்தபூர். ஸரஸ்வதி நதிக்கரையில் ஸஹஸ்ரகலா மாதா கோவில்.

104. **ஸுக (ந) ந்தா** – கிழக்குப் பாகிஸ்தானில் குல்நா ரயில் நிலையத்திலிருந்து பரீஸால் சென்று – சிகார்பூர். அங்கு கிராமத்தில் ஸுகந்தா (ஸுநந்தா) நதியின் கரையில் உக்ரதாரா தேவீ கோவில். தேவியின் மூக்கு விழுந்த இடம்.

